உ

செந்திலாண்டவன் துணை

பரஞ்சோதிமுனிவர்

அருளிச்செய்த

# திருவிளையாடற் புராணம்

[அரும்பதவுரையுடன்]

*

கர ஆண்டு ஆவணி மூல நன்னாள்

9—9—1951

*

ஸ்ரீ காசி மடம் :: திருப்பனந்தாள்

1951

திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து வெளியீடு:

உ

செந்திலாண்டவன் துணை

பரஞ்சோதி முனிவர்

அருளிச் செய்த

# திருவிளையாடற் புராணம்

[ அரும்பதவுரையுடன் ]

திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்துத் தலைவர்

ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள்

அவர்களுடைய திருவுள்ளப்படி வெளியிடப்பெற்றது

சென்னை - பன்மொழிப் புலவர்

வித்துவான் T. P. மீனாட்சிசுந்தரம் பிள்ளை M. A., B. L., M. O. L.

அவர்கள் எழுதிய முன்னுரையுடன்

கூடியது

பதிப்பாசிரியர் :

வித்துவான் தி. பட்டுச்சாமி ஓதுவார்

தலைமைத் தமிழாசிரியர்

பொன்னையா உயர்நிலைப்பள்ளி, திருச்சிராப்பள்ளி

[ கர ஆண்டு ஆவணி மூல நன்னாள் ]

உரிமைப் பதிவு ] ★ [ செப்டம்பர் - 1951

உ

# அருள் பெறும் வழி

—o—

"அண்ணல் ஆலவாய்
நண்ணி னான்றனை
எண்ணி யேதொழத்
திண்ணம் இன்பமே"

—திருஞானசம்பந்தர்.

உ

செந்திலாண்டவன் துணை

# பதிப்புரை

---

மண்ணில்நல் லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணில்நல் லகதிக்கு யாதுமோர் குறைவிலைக்
கண்ணில்நல் லஃதுறுங் கழுமல வளநகர்ப்
பெண்ணில்நல் லாளொடும் பெருந்தகை இருந்ததே.

—**தேவாரம் – திருஞானசம்பந்தர்.**

"சைவத்தின் மேற்சமயம் வேறிலை" என்றபடி இவ்வுலகின்கண் நிலவுஞ் சமயங்கள் பலவற்றுள்ளும் சைவசமயமே சிறந்த சமயமாகும். இதன் உயரிய பண்பினை உலகிற்கு எடுத்துக்காட்டுவன சைவத் திருமுறைகள், சைவ புராணங்கள் முதலியனவாம். இவற்றுள், சிவபெருமானின் முக்கட்சுடர் போன்று திகழ்வன பெரிய புராணம், திருவிளையாடற்புராணம், கந்த புராணம் என்ற மூன்றுமேயாம். இம்மூன்றுள் 'பாண்டிய நாடே பழம்பதி' எனப் புகழ்பெற்ற சிவ ராசதானியாகிய மதுரையம்பதியில் ஸ்ரீ சோமசுந்தரக்கடவுள் ஆன்மாக்கள் உய்யும் பொருட்டுச் செய்தருளிய அறுபத்துநான்கு திருவிளையாடல்களைச் சிறப்பித்தும், மூர்த்தி தலம் தீர்த்தம் என்னும் மூன்றன் விசேடங்களை விரித்தும், விராட்புருடனுக்குத் துவாதசாந்தத் தானமாக விளங்குவது மதுரைப்பதியே என்பதை முருகக் கடவுளால் அகத்தியரும், அகத்தியரால் வசிட்டர் முதலிய முனிவர்களும் அறிந்துவந்து ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமானை பூசித்து வழிபட்டமையை விளக்கியும் கூறும் நூல் பரஞ்சோதி முனிவர் இயற்றிய இத் திருவிளையாடற்புராணமே ஆகும்.

இந்நூல், சைவத்திருமுறைகள், சைவ சித்தாந்த சாத்திரங்கள், சங்க இலக்கியங்கள் முதலியவற்றின் அரிய கருத்துக்களைத் தன்னகத்தே பெற்று, பக்திச் சுவை நனிசொட்டச் சொல் நயம், பொருள்நயம், கவிநயங்களோடு விளங்குவது ; சைவப் பெருமக்களால் புத்தி, சித்தி, முத்திகளின்பொருட்டு நாடோறும் பூசிக்கப்பெற்றும், முறையாகப் பாராயணம் செய்யப்பெற்றும், மிகப் பாராட்டிப் படித்துப் பொருள் சொல்லப்பெற்றும் வருவது ; பெரிய புராணத்தைப்போன்று கயிறுசாத்தி உண்மை காணும் பெருவழக்கினைக் கொண்டுள்ளது; பிற்கால இலங்கியங்களில் மிகச் சிறப்புற்றுத் திகழ்வது. இத்தகைய சிறப்பியல்கள் வாய்ந்த சிவபுராணமாகிய **இத் திருவிளையாடற் புராணம்** திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து வெளியீடாக ஆவணி மூல நன்னாளாகிய இன்று வெளிவருகின்றது.

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தில் அருளாட்சியுடன் எழுந்தருளியிருக்கும் **ஸ்ரீ-ல-ஸ்ரீ** காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் சைவ சமயத்திற்கும், தமிழ் மொழிக்கும் மற்றைப் பொதுநலங்களுக்கும் அருள்புரிந்து வருகின்ற பேரறங்கள் எண்ணிறந்தனவாகும். சைவத் திருமுறைகள் பன்னிரண்டையும் சைவ மக்கட்குப் பயன்பெறச் செய்தமை போன்று, சிவபுராணமாகிய இத்திருவிளையாடற் புராணத்தையும் வெளியிட்டு வழங்கிய ஸ்ரீ - ல - ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களின் பேரருளைச் சைவ உலகம் என்றும் நன்றி பாராட்டும் கடமைப் பாட்டைக் கொண்டுள்ளது.

இப்பதிப்பு, யாழ்ப்பாணம் [1]**சைவத் திருவாளர் சுவாமிநாத பண்டிதர்** அவர்களின் பதிப்பு, சிதம்பரம் ஈசானிய மடம்

---

1. சைவத் திருவாளர் சுவாமிநாத பண்டிதர் அவர்கள் கி. பி. 1917 ல் சீர்திருத்தி அச்சிட்ட பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணம் வெளிவருவதற்குப் பலவகையிலும் பேருதவி வழங்கியவர்கள் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடம் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சொக்கலிங்க சுவாமிகள் அவர்கள் ஆவார்கள்.

**ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகள்** அவர்களின் பதிப்பு முதலான வற்றை அடிப்படையாகக்கொண்டு பதிப்பிக்கப்பெற்றதாகும்; இதனுள் இன்றியமையாப் பாட பேதங்கள் ஆங்காங்கே காட்டப்பெற்றுள்ளன. இது, கற்றோர்க்கும் மற்றோர்க்கும் பெரிதும் பயன்படக்கூடிய வகையில் அ ரு ம் ப த வு ரை முதலான விளக்கங்களைக்கொண்டுள்ளது. இந்நூலாசிரியர் வரலாறும், ஆராய்ச்சி முகவுரையும், இந்நூலுக்குப் பல பட்டடைச் சொக்கநாதப் புலவர் அளித்த சிறப்புப் பாயிரச்செய்யுட்கள் இரண்டும் முன்னர் சேர்க்கப்பெற்றுள்ளன. இந்நூலின் இறுதியில் பாராயணஞ் செய்வோர்க்கு மிக உபயோகமாகும்படி மதுரை அறுபத்துநான்கு திருவிளையாடற் போற்றிக் கலிவெண்பாவும், திருவாலவாய்த் தேவாரமும், எளிதில் பாட்டுக்களை எடுப்பதற்குப் பாட்டு முதற்குறிப்பு அகராதி ஒன்றும் சேர்க்கப் பெற்றுள்ளன.

இப்பதிப்பு, சிறந்த முறையில் அமைவதற்கு வேண்டிய அரிய பாட பேதங்கள், அரும்பெருங் குறிப்புகள், உயரிய கருத்துகள் முதலானவற்றை அன்புடன் அளித்துதவிய திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரித் தலைமையாசிரியர் (Principal) உயர்திரு **வித்துவான் கே. எம். வேங்கடராமையா எம். ஏ., பி. ஓ. எல்.,** அவர்கட்கும், இப்பதிப்பு அச்சாகி வருங்கால் உடனிருந்து ஒப்பு நோக்கியதோடல்லாமல் பாட்டு முதற் குறிப்பகராதிகளைச் செவ்விய முறையில் அமைத்துக்கொடுத்து உதவிபுரிந்த என் நண்பர் திருச்சிராப்பள்ளி பொன்னையா உயர் நிலைப்பள்ளித் த மி ழா சி ரி ய ர் திருவாளர் **வித்துவான் கோ. இரத்தினம் பிள்ளை** அவர்கட்கும், திருவிளையாடற்புராணத்தின் சாரம் என்று கூறத்தகும் வகையில் சிறந்ததோர் ஆராய்ச்சி முன்னுரையினைத் தமது பற்பல அலுவல்கட்கும் இடையே சைவசமயத்தின் மீது கொண்டுள்ள பெரும்பற்றினால் எழுதியுதவிய சென்னை - **ப ன் மொ ழி ப் பு ல வ ர் வித்துவான்**

தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை எம்.ஏ., பி.எல்., எம்.ஓ.எல்., அவர்கட்கும் என் நன்றி என்றும் உரியதாகும்.

தமிழ்நாடு, சைவ நெறி தழைத்தோங்க நாளும் தகுவன செய்துவரும் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள், அடியவன்மீது கொண்டுள்ள திருவருள் நோக்கத்தால் சைவத் திருமுறைகளைப் பதிப்பிக்க அருளியதுபோன்று, இத்திருவிளையாடற் புராணத்தையும் வெளியிடத் திருவுளம்பற்றியமை அடியவன் பெற்ற பெரும்பேறேயாகும். இச்சிவத்தொண்டில் அடியவனையும் ஈடுபடுத்தியருளிய ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களின் பொன்னார் திருவடிகளை மனமொழி மெய்களால் சிந்தித்து வணங்குகின்றேன்.

**கோயிற்புராணம் — வாழ்த்து**

மழைவ ழங்குக; மன்னவ னோங்குக;
பிழையில் பல்வள மெங்கும் பெருகுக;
தழைக வஞ்செழுத்தோசை தரையெலாம்;
பழைய வைதிக சைவம் பரக்கவே.

'செந்தமிழ் நிலயம்'
வரகநகர்,
திருச்சிராப்பள்ளி
9—9—1951.

இங்ஙனம்,
தி. பட்டுச்சாமி ஓதுவார்.

உ

செந்திலாண்டவன் துணை

# பரஞ்சோதி முனிவர் வரலாறு

'சோழ வளநாடு சோறுடைத்து' எனப் புகழ்ப் பெற்ற சோழ வள நாட்டின்கண் திகழும் வேதாரணியம் என வழங்கும் திருமறைக் காட்டில், பரம்பரைச் சுத்த சைவ வேளாளர் மரபில் சைவாசாரியராய் விளங்கி வந்த மீனாட்சிசுந்தர தேசிகர் செய்த அருந் தவத்தால் பரஞ்சோதி முனிவர் தோன்றியவராவர். இவர், இளமையில் நல்லாசிரியரை அடுத்து வட மொழி தென் மொழி என்னும் இரு மொழிகளையும் இனிது கற்றவர்; இலக்கணம், தருக்கம், நிகண்டு முதலிய கருவி நூல்களையும், சங்க இலக்கியங்களையும், நீதி நூல்களையும், சோதிடம், பரதநாட்டியம், இரத்தினப் பரீட்சை, அசுவப் பரீட்சை முதலிய பற்பல கலைகளையும் நன்கு ஆராய்ந்து அறிந்தவர்; நற்குணம், நற்செயல், நுண்ணறிவு, வாக்குவன்மை, சிவபக்தி முதலியவைகளைப் பெற்றுத் திகழ்ந்தவர்; சொல் நோக்கம் பொருள் நோக்கம் பெறக் கவி பாடும் அருட்புலமையும் மிக வாய்ந்தவர்.

இவர், உரிய காலத்தே தம் தந்தையாரிடம் சைவ சமயத்திற்கு இன்றியமையாச் சிறப்பினதாகிய சமய,விசேட, நிருவாண முதலிய தீட்சைகளைப் பெற்றுச் சிவாகமங்களையும் சைவ சித்தாந்த சாத்திரங்களையும் தேவார திருவாசக முதலிய அருட்பாக்களையும் ஐயந்திரிபற ஓதியுணர்ந்தார். கற்றலும், கற்றவை கேட்டலும், கேட்டதன்கண் நிற்றலும், கைகூடப் பெற்றவராகிய இவர் நித்திய கருமானுட்டானம், பஞ்சாட்சர செபம், சிவ பூசை, சிவாலய தரிசனம் முதலிய சைவ சமயவொழுக்கங்களில் மிக ஈடுபட்டு விளங்கினார்.

"மூர்த்திதலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர், வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே" என்றபடி இவர், பிறவிப் பெருங்கடலைக் கடத்தற்குச் சற்குருவைத் தேடி,

அதன்பொருட்டுச் சிவ ஸ்தல யாத்திரை செய்ய விரும்பி, அங்கு நின்றும் புறப்பட்டுப் பல அரிய சிவ ஸ்தலங்களைத் தரிசித்துக் கொண்டு, சிவ ராசதானியாக விளங்கும் திருவாலவாய் என்னும் மதுரைப் பதியை அடைந்தார். ஆங்கே, அங்கயற்கண்ணம்மையாருடன் எழுந்தருளிய ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானை முக்காலமும் வழிபட்டுக்கொண்டு வருங்காலத்தில் ஒருநாள் சற்குரு எதிர்ப்பட அவரை வணங்கி ஞானோபதேசம் பெற்றுச் சைவ சந்நியாசம் பூண்டு விளங்கினார்.

பரஞ்சோதி முனிவரின் இருமொழிப் புலமையையும் வாக்கு வன்மையையும் கண்டுணர்ந்த மதுரைமா நகரப் பெருமக்கள் பலர் ஒன்றுகூடி வந்து, முனிவரை அடிபணிந்து, "அண்ணலே! வட மொழியில் வழங்கிவரும் ஆலாசிய மான்மியத்தைத் தமிழில் பாடித் தந்தருள்க" என வேண்டினர். இவர், அன்பர்களது கருத்தை நிறைவேற்றும் எண்ணமுடையவராய் ஒருநாள் நித்திரை செய்யும்பொழுது ஸ்ரீ மீனாட்சியம்மையார் இவரது கனவில் தோன்றி, "அன்பனே! நம் பெருமான் திருவிளையாடலைப் பாடுவாயாக" என்று பணித்து மறைந்தருளினார். உடனே, பரஞ்சோதி முனிவர் விழித்தெழுந்து அம்மையாரின் பேரருளைச் சிந்தித்து வியந்து, அவர் கட்டளைப்படியே, "**சத்தியாய்**" என்ற மங்கல மொழியில் தொடங்கிச் சோம சுந்தரக் கடவுளின் அறுபத்துநான்கு திருவிளையாடல்களையும் மதுரைக் காண்டம், கூடற் காண்டம், திருவாலவாய்க் காண்டம் என மூன்றாய்ப் பகுத்துக்கொண்டு, தெய்வ மணம் கமழப் பொருட் சுவை சொற்சுவை தோன்ற மூவாயிரத்து முந்நூற்றறுபத்து மூன்று பாடல்களால் பாடி முடித்துத் "**திருவிளையாடற் புராணம்**" எனப் பெயரிட்டனர். இவர், மதுரைப் பெருமக்கள் வேண்ட வடநூல் ஆலாசிய மான்மியத்தைத் தமிழில் பாடினர் என்பது, "ஆலவாய்ப் புகழ்மை யந்தச், சிறந்திடும் வடநூ றன்னைத் தென் சொலாற் செய்தியென்றிங், குறைந்திடும் பெரியோர் கூற..." "...விருத்தச்செய்யுள் வகைமையால் விளம்பலுற்றேன்" என்ற பாயிரத்தாலும் அறியலாம்.

பிறகு, இந்நூலை ஸ்ரீ சொக்கநாதர் சந்நிதியில் மடாதிபதிகளும், பெரும்புலவர்களும், சிவனடியார்களும் குழுமியிருந்த பேரவைக்கண் அறுகாற்பீடத்திருந்து யாவரும் மகிழ அரங்கேற்றியருளினார். இதனைக் "கூடல் மான்மியத்தை யருந் தமிழாற் பாடி,.... சொக்கேசர் சந்நிதியில்...., அறுகாற்பீடத் திருந்து பரஞ்சோதி முனிவன் அரங்கேற்றினனே" என்ற இவரது சிறப்புப்பாயிரத்தால் உணரலாம்.

இன்னும், இச்சைவப்பெரியார் திருவிளையாடற்புராணத்தின் சாரமான "**மதுரை அறுபத்துநான்கு திருவிளையாடற்போற்றிக் கலிவெண்பா**" என்ற ஒரு சிறு நூலையும், மதுரை ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமானைப்பற்றிப் புகழ்ந்து கூறும் '**மதுரைப் பதிற்றுப் பத்தந்தாதி**' என்ற ஒரு சிறு பிரபந்தத்தையும், திருமறைக்காடு என்னும் சிவஸ்தலத்தைப்பற்றிக்கூறும் '**வேதாரணிய புராணம்**' என்ற நூலையும் இயற்றியவராவர்.

பரஞ்சோதி முனிவர் மதுரைப் பகுதியில் நிலையாகத் தங்கி, ஆசிரியத் தலைமையுடையராய் நன்மாணாக்கர்களுக்கு இலக்கண இலக்கியங்களைக் கற்பித்துக்கொண்டும், பக்குவ ஆன்மாக்களுக்கு ஞானோபதேசம் செய்துகொண்டும், சிவானுபவச் செல்வராய் விளங்கிவரும் ஒருநன்னாளில் ஆலவாய்ப் பெருமான் திருவடிப் பேற்றை அடைந்தனர்.

இவரது பரம்பரையினர் தஞ்சை ஜில்லாவில் திருத்துறைப் பூண்டிக்கணித்தாயுள்ள 'குறுக்கை' முதலிய சிற்றூர்ப் பகுதிகளில் இன்னும் வாழ்ந்துவருகின்றனர், மேலும். வேதாரணியத்திற்கு மேற்றிசையில் உள்ள மகாராஜபுரத்தை யடுத்துப் **பரஞ்சோதிபுரம்** என்ற ஒரு சிற்றூர் உளது; அங்கேயுள்ள சிவாலயத்தில் பரஞ்சோதி முனிவரின் உருவச்சிலை ஒன்று காணப்படுகிறது; அன்றியும், அங்குள்ள சிவலிங்கம் பரஞ்சோதி லிங்கம் என்றும் வழங்கப்படுகிறது. இவற்றை நோக்கப் பரஞ்சோதி முனிவரின் பிறப்பிடம் இச்சிற்றூரே எனக் கருத இடந்

தருகிறது. பரஞ்சோதி முனிவர் மதுரைக்கு வருமுன் திருப்பூவணத்திலே சிலகாலம் தங்கியிருந்தார் என்றுங் கூறுவர்.

பரஞ்சோதி முனிவர், சேது புராணம் பாடிய நிரம்ப வழகிய தேசிகர் என்பாருடன் கல்வி பயின்றவராக ஒரு வரலாறு கூறுகின்றது. அதன்படி இவரது காலம் கி. பி. 16-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியாகும். மற்றும் சில ஆராய்ச்சியாளர் அதிவீரராம பாண்டியன் வேண்டுகோளின்படி திருவிளையாடற் புராணத்தை இவர் பாடியதாகக் கூறுகின்றனர். அவ்வாறு கொள்ளின் இவரது காலம் கி. பி. 16-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியாகும். திருமலைநாயக்கரின் அவையிலிருந்த சரசுவதி பண்டாரம் என்பவரின் தலைமையில் ஸ்ரீசொக்கேசர் முன் திருவிளையாடற் புராணத்தை இவர் அரங்கேற்றியதாகக் கன்ன பரம்பரைச் செய்தி ஒன்று கூறுகிறது. அதனை நோக்கின் இவரது காலம் கி. பி. 17-ஆம் நூற்றாண்டின் முற்பகுதி ஆகும். தேவையுலா (இராமேசுவர உலா) பாடிய பல பட்டடைச் சொக்கநாதப் புலவர் திருவிளையாடற் புராணத்திற்குச் சாற்றுக் கவி அளித்ததாக இருசெய்யுட்கள் வழங்கி வருகின்றன. அவற்றைக் கொண்டு நோக்கின் பரஞ்சோதி முனிவர் கி. பி. 18-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர் என்பதாகும். ஆகவே, பரஞ்சோதி முனிவர் காலம் சுமார் 240 ஆண்டுகளுக்கு முற்பட்டதாகும் என்பது தெளிவு.

உ

திருச்சிற்றம்பலம்

# திருவிளையாடற் புராண முன்னுரை

[ திரு தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்கள் ]

---

கடவுளை அழகின் நிறைவு எனக் கொண்டு வழிபட்டு உயர்வது தமிழ்நாட்டுப் பழஞ்சிறப்பு. இந்தக் கருத்தில் பழகிப் பழகி இதனை நாம் மறந்துவிட்டோம். தலைநோய் எடுத்தால் மட்டுமே தலை இருப்பது தெரிகின்றது. இந்த நாளைய நாகரிக அலங்கோலம் காணும்போதே அழகின் பெருமை நினைவிற்கு வருகின்றது. வௌவால் குடி புகுந்து, வாழக் குப்பையும் கூளமும் குமட்டல் எடுக்கும்போதே கோயிலின் அழகெல்லாம் எங்கோ ஓடிற்று என எண்ணமிடுகின்றோம். நகைகள் கொண்டு ஆண்டவன் திருமேனியை நம் செல்வச் செருக்கால் மறைக்கும் போதே திருமேனியின் அழகினைக் காணாது அலமருகின்றோம். அழகே கடவுள் என்ற கருத்து எவ்வளவு பழகிவிட்டது நம் தமிழ்நாட்டில் ; அதனை மறந்தே விட்டோம் அன்றோ ? சொக்கன் என்றால் அழகன் என்று பொருள். இதனைச் சுந்தரன் என மொழி பெயர்த்து வழங்குகிறோம். சொக்கன் என்ற செந்தமிழ்ச்சொல் வாய்க்கினிக்காத நிலைமையும் வந்தது. வேறொரு சொல்லிலும் இந்தச் சொல்லின் பகுதி இன்று இலக்கியத்தில் வழங்குவது காணோம். சொக்குப் பொடி, சொக்குதல் என்று பொது மக்கள் மட்டும் பேசிக்கொண்டே வாழ்கின்றனர். 'சொகுசு' என்பது தெலுங்கிலும் வழங்குகிறது. இஃது ஒன்றே இதன் பழமைக்குச் சிறந்த சான்றன்றோ ? தமிழிலிருந்து தெலுங்கு தனி மொழியாய்ப் பிரிந்து வளர்வதற்கு முன்னரே மிக மிகப் பழைய காலத்தில் இந்தச் சொல் தமிழில் வேரூன்றி வளர்ந்துள்ளது என்று தெரியவில்லையா ?

ஆலவாய் அழகனது திருப்பெயரே சொக்கன் என்பது. சொக்கி என்ற பெண்பாற் பெயரும் வழங்குகிறது. சொக்கம் மாள் என்பதும் தாய்க்கடவுளின் தனித் திருப்பெயரேயாம்.

தமிழ் வளர்த்த பாண்டி நாடு கண்ட உண்மை என்றுகூட இதனைக் கூறிவிடலாம். கூடலைச்சுற்றி இந்தத்திருப்பெயர் குலவி வருகிறது. கூடலழகர், கள்ளழகர் எனத் திருமாலும் அங்கே அழகாகவே விளங்குகிறார். சுந்தரர், சௌந்தரராசர், சௌந்தர வல்லி, அபிராமவல்லி என்ற பெயர்கள் அழகு என்ற அடிப் படையில் வைத்துக் கடவுட் கொள்கையின் பெருமையை விளக்கி அன்றாட வாழ்வில் புகுந்தவை ஆகும். இராமன் என்ற சொல்லை யும் கல்வியிற் பெரிய கம்பன், அழகன் என்றே பலமுறையும் மொழிபெயர்த்து அதற்கு ஏற்ப இராமன் வடிவத்தினையும் கடவு ளோவியமாகத் தீட்டுகின்றான். முருகு என்பதும் இந்த அழ கோடு இன்பத்தினை விளக்கும் கடவுட் சொல்லேயாம். அழகின் நிறைவே கடவுள். அன்பு நெறியை வளர்க்கும் பாகவதம் கண்ணனைப் புவனசுந்தரம் எனப் பாடி ஆடுகிறது. உலகொளிர் அழகே கடவுள். பதினோராம் திருமுறையும் திரைலோக்ய சுந்தரமே எனக் கடவுளை வாயாரப் பாடி மகிழ்கிறது. மூவுல கின் மூவா அழகே முதல்வன். எங்கும் நிறைந்துள்ளான் இறைவன். எங்கும் இவ்வழகு தோன்றுதல் வேண்டும். நம் கண்ணுக்கு இவ்வழகு தோன்றாதபடி கண் கெட்டுப்போயிருக் கிறது. கடவுள் அருள் நம்முள்ளே பாயப் பாய, நாம் தூயோம் ஆக ஆக, அழகின் அற்புதக் கூத்து எங்கும் நிகழக் காண்போம்.

அதுவரை நம்மை அழிய விடுவானோ அருள் வடிவான ஆண்டவன்? அனைவருக்கும் கட்புலனாகும் அழகு வடிவங்களில் குடி புகுகின்றான்; அழகில் அவதாரம் செய்கின்றான் என்பர் வைணவப் பெரியார். திருக்கோயிலிலுள்ள திருமேனிகள் அத் தகைய அழகு அவதாரங்கள். செம்பிலும், கல்லிலும் உயிர் பெற்று, உணர்வு பெற்றுச் சிவம் கூத்தாடுகின்றது. சிற்பியின் கைவழியே அழகு உருப் பெற்று ஓங்குகிறது. கல்லும் செம்பும் சடப் பொருளே. ஆனால், அங்குத் தோன்றும் அழகு சடப் பொருளன்று; சிற்பியின் கைத்திறமும் அன்று; சிற்பி கண்ட கடவுட் காட்சி. சிற்பியின் சீவனுக்குள்ளே பூத்த சிவமணம் பெற்ற அழகு வடிவம் அது. சடத்தினைச் சிவமாக்கும் கலையே கோயிற் கலை. அழகு வழியாலன்றி இந்தச் சிவப்பேருண்மையை உணரமுடியாது. இந்த வடிவழகில் ஈடுபடுகின்றாள் பொன்னி என்ற பெண். பொது மகள் - உலகம் இழித்துப் பேசும் பெண்-

இத்தகையோர் வாழ்வதற்கு வேறு வழியமையாத உலகத்தில் தன் உடலை விற்றே வாழ்கின்றாள். உலகம் இவள் இழிவைக் கணக்கெடுத்துக் குவித்து இழிவு மலைமேல் ஏறி வீற்றிருக்கிறது என்கிறார் இராமகிருஷ்ண அடிகள். இவளோ அழகு வடிவினை அன்பாகப் படைத்து வருகின்றாள். இவள் உள்ளத்தில் ஓங்கி வளர்கின்றான் இன்ப அழகன். கிடைத்ததையெல்லாம் கொண்டு பொன்னால் அவ்வழகினை உருக்கி வார்க்கவேண்டுமென்று பதைக்கிறது இவளுடைய அன்புள்ளம். இறைவனே தீர்க்கவேண்டும் இந்தக் குறையை. எல்லாம் வல்ல சித்தனுக்கு எல்லாம் எளிது. கல்லும் கட்டியும் இவன் கைப்பட்டதும் பொன்னாகின்றன. பொன்னில் பொலிந்தெழுகிறது புது அழகு. சொக்கனின் அழகினைக் கண்டு சொக்கிவிடுகின்றாள் இந்தச் சொக்கம்மை. கடித்துத் தின்றுவிடலாமா என்று தோன்றுகிறது. அழகு வெறி அது. கன்னத்திற் கிள்ளி முத்தாடுகின்றாள். இன்றும் திருப்பூவணத்துத் திருமேனியில் இதனைக் காணலாம்.

அழகே இன்பம். துன்பத்தால் இயங்குவது வருத்தம்; தொழில். இன்பத்தால் இயங்குவது விளையாட்டு. எங்கும் உள்ளவன் இறைவன். எல்லாம் அவன் செயல். அழகின் செயல் எல்லாம் அழகிய திருவிளையாடல்களே. "அலகிலாத் திருவிளையாட்டுடையான்" என்பர் கம்பர். இந்த உலகில்தான் அவன் திருவிளையாட்டுக்கு இடம் உண்டு. இதுவே திருவிளையாட்டுலகம். பாவத்தில் திளைப்போரன்றோ நல்லவராதல் வேண்டும்? அருளின் விளக்கத்திற்கு இங்கன்றோ இடமுண்டு? பொன்னிக்குச் செய்த திருவிளையாடல் பொன்னுலகில் நடவாது. மண்ணுலகில்தான் நிகழும்; நிகழ்கிறது. அதனைக் கண்டு பாடுகின்றவனே பாவலன். அத்தகைய பாவலர்களில் பரஞ்சோதியார் ஒருவர். சொக்கனது திருவிளையாடல்களைக் கூறும் நூல்கள் பல. தியாகராச லீலை என்று திருவாரூர்த் திருவிளையாடலும் பேசப்பெறும். ஆண்டவனது முத்தொழிலும் ஐந்தொழிலும் விளையாட்டே என்பதும் உண்மையே. ஆனால், இந்தப் பெரிய கருத்து எழுந்தது கூத்தரசு ஆடவல்லானைத் திருவிளையாடல் புரியும் தமிழ்நாட்டில்தான்; அதுவும் தமிழ் வளர்ந்த மதுரையில்தான். திருவிளையாடல் என்றதும் மதுரையின் நினைவன்றோ வருகிறது? அழகு என்ற தத்துவக் கருத்தோடு திருவிளையாடல்

என்ற தத்துவக் கருத்தினையும் வளர்த்துக் கொடுத்த பெருமை தமிழுக்கும் தமிழ் வளர்த்த மதுரைக்கும் உண்டு.

திருவிளையாடலைப் பாடினார் பலர். செல்விநகர்ப் பெரும் பற்றப் புலியூர் நம்பி பாடிய திருவால வாயுடையார் திருவிளையாடற் புராணம் சொக்கன் சொக்கன் என வாயாரப் பாடிப் போற்றுகிறது. வீமநாத பண்டிதர் இயற்றிய கடம்பவன புராணத்தின் இலீலா சங்கிரக அத்தியாயம் திருவிளையாடலையே சுருக்கிப் பாடுகிறது. அனதாரியப்பர் பாடிய சுந்தரபாண்டியம் என்ற செந்தமிழ் நூலும் திருவிளையாடலையே பாடுகின்றது. திருவிளையாடற் பயகர மாலை என்பது வீரபத்திரக் கம்பர் எழுதிய நூல். திருவிளையாடலில் தமிழ் மக்கள் உள்ளம் ஈடுபட்டமைக்கு இத்தனை நூலும் தோன்றியமையே போதிய சான்றாகும். பரஞ்சோதியாரும் திருவிளையாடற்புராணம் பாடுகின்றார். இன்று திருவிளையாடல் என்றால் இவர் புராணமே நினைவிற்கு வருகின்றது. திருவிளையாடலோடு ஒன்றுபட்டுத் தமிழாகிப் பாடுகின்றார் பரஞ்சோதியார். பாட்டின் தமிழோசையும், பாவலரின் அழகன்பும் தமிழர் மனத்தைக் கொள்ளை கொண்டுள்ளன. மேலும் என்ன கூறமுடியும்?

இதனை ஒரு வடநூலின் மொழிபெயர்ப்பு என்று சிலர் கூறுகின்றனர். உண்மையோ அறியோம். கம்பனும் மொழிபெயர்த்தே பாடினன். கல்லெடுத்துத்தான் சிற்பி; அங்கயற்கண்ணியின் வடிவமைக்கின்றான். கல் என இகழப் போமா? புது வடிவம் கடவுள் வடிவம் என வாழ்த்தி வணங்கி உருகுகிறோம். பரஞ்சோதியார் தமிழ்க்காப்பியம் ஒன்று புத்தம் புதிதாகத் தந்துள்ளார். அதில் சொக்கி நிற்கிறது தமிழ்நாடு. அவ்வளவே.

மற்றொன்றும் உண்டு. புராணம் என்றால் பழைய வரலாறு. நாடோடிப் பாடல் என்று சில பாடல் பாடி வருகிறோம். அவை மக்களுக்குப் பொதுப்பாடல்கள். அதனைப் பாடி மகிழ்பவனும் கேட்டு மகிழ்பவனும் தான் தானே எழுதியது போல எண்ணி மகிழ்கின்றனர். புராணம் என்பவை உலகோடிக் கதைகள். உலகம் முழுவதும் வெவ்வேறு வடிவில் இவை வழங்கி வரு

இன்றன. அறிவாராய்ச்சியின் போது "இது என்ன" என்று வெறுத்து நின்றாலும் ஒவ்வொருவனுடைய அடிமனத்திலும் ஆழ்ந்து ஒவ்வொருவரையும் நீர்ப்பிண்டமாக இந்தப் புராணக் கதைகள் உருக்கிவிடுகின்றன. யுங் (Jung) என்ற மன நூலாசிரியர் அடிப்படைக் கதைக்கோலங்கள் (arche types) என்று இத்தகைய புராணக் கதைகளை விளக்கி வைக்கின்றார். இக்கதைகள் வெறுங் கதைகள் அல்ல. இவற்றின் பொருளாழம் நம் ஆராய்ச்சிக்கு எட்டுவதில்லை. ஆனால், நம் அடிமனம் அதனை அறிந்து ஓர் ஆறுதல் அடைகிறது. இவற்றினை நாடோடிக் கதைகள் எனப் புறக்கணிப்பதற்கில்லை. இவற்றுக்குத் தத்துவார்த்தம் கூறும் முயற்சியைத் தொன்றுதொட்டே எந்த நாட்டிலும் காண்கிறோம்.

புராணங்கள் வரலாற்றினையும் கூறுகின்றன. பாண்டி நாட்டு வரலாறு ஒருவாறு திருவிளையாடலில் வெளியாகிறது. இதில், வரும் அரசர் குடிவழியைக் காலஞ்சென்ற திரு. சேஷகிரி சாத்திரியாரும், தமிழ் வரலாறு எழுதிய திரு-சீனிவாசம் பிள்ளையும் ஆராய்ந்துள்ளார்கள். இடித்த மாவை இடிப்பது போல நாமும் அதனை இங்கு வளர்த்திக்கூற வேண்டா. ஆனால், நாம் இன்று கற்று வரும் வரலாறு வேறு. புராணம் கூறும் வரலாறு வேறு. வரலாற்றினையும் அடிமனம் அறிந்து இன்பமுறும் வகையில் கூறுவனவே புராணங்களாம். அடிமனம் என்றால் ஒரு சிலர் காமக்குப்பை என்று கூறுவர், அஃது உண்மையன்று. நாம் பேசும் மொழி மனிதன் படைத்துக்கொண்ட செயற்கை மொழி. அனைவரும் அறிந்துகொள்ளும் இயற்கை மொழியொன்றுள்ளது. அஃது உணர்ச்சி வடிவானது; செயலுருவானது; ஓவியம் போன்றது; காவியம் போன்றது; இசையே போன்றது; கூத்தே போன்றது. அஃது அறத்தின் அடிப்படையில் உயர்ந்தோங்கும். கடவுளை வெள்ளை விடைமேல் செவ்வொளியாகக் காட்டும். சுருங்கி விரியும் உலகினைப் படம் விரித்தாடும் பாம்பாகக் காணும்; தோகை விரித்தாடும் மயிலாகக் காணும். இதனை இருளென்றும் காணும். கருப்பையின் அடையாளமாகக் கொண்டு மூலப் பகுதியினைப் பெண் என்றும் பேசும். இதனை அடக்கி ஆளும் அறிவொளியைக் கடலில் எழும் கதிரவனைக் காணும்; பாம்பின் மேலாடும் கண்ணனைக் காணும்;

மயிலேறும் முருகனுகக் காணும். இவையெல்லாம் மனமொழி களுக்கு எட்டாதவற்றையும் எட்டிப்பிடிக்கும் அடிமனத்தின் இயற்கை மொழிப் பேச்சேயாம். இவ்வாறு விளங்காமல் இருந்தாலும் திருவிளையாடற் புராணத்திலிருந்து ஒரு சிறிதளவு பாண்டி நாட்டு வரலாற்றினை வகைசெய்தமைக்கலாம். ஒரு திருவிளையாடல் கூறுவதுபோல் மற்றொரு திருவிளையாடல் கூறுமையால் இங்கும் இடர்ப்பாடு உண்டு. இந்த இடர்ப்பாடு அந்நூலின் இடர்ப்பாடு அன்று. காப்பியப் பாடம் படிக்கும் போது வரலாற்றுப் பாடம் படிக்கும் நம் மனக் கோளாற்றின் இடர்ப்பாடேயாகும்.

நாட்டு அரசர்கள் வரலாறு மட்டுமா திருவிளையாடல் கூறு கின்றது? தமிழ் மொழியின் வரலாற்றுக் காப்பியமே திரு விளையாடல். பிறரும் தத்தம் தாய்மொழியைப் போற்றுகின் றனர். அதனைக் கடவுளே ஆக்கிய பெருமை தமிழனுடையதே கடவுளும் தமிழுக்கு அடிமையாகி வீறு கொள்வதே தமிழனின் வீருப்பு. அந்த வீருப்பில் வீறு கொண்டவர் பரஞ்சோதியார். நாட்டுப்படலம் 55, 56, 57, 58 முதலிய பாடல்களைக் காண்க. திருவாலவாய்க் காண்டம் திருவிளையாடற் புராணத்தின் முடிந்த முடிபு: இது முழுவதும் தமிழின் பெருமையே பேசு கின்றது. சங்கப் பலகை தருவதிலிருந்து தொடங்கி இடைக் காடர், நக்கீரர் முதலிய சங்கப் புலவர்களைப்பற்றித் தமிழ் நயம் எல்லாம் தோன்றப்பாடிச் செல்கின்றது. தனிப் புலமையின் வறுமைப் புலம்பல், புலமைக் களிப்பில் கடவுளையும் புறக்கணிக் கும் செருக்கு, உண்மைப் புலம்பலில் பாட்டுப் பிறத்தல்—இவை யெல்லாம் இங்குத் தோன்றுகின்றன. பொய்யடிமை யில்லாத புலவர் எனச் சுந்தரர் பாடுவது இந்தச் சங்கப் புலவர்களையே எனச் சிலர் கொள்கின்றனர். இதற்கேற்ப என்புருக்கும் பாடல் பாடிய திருவாதவூரடிகளின் மனமுருக்கும் வரலாற்றைப் பரஞ்சோதியார் வாயுருகச் செவியுருக உயிருருகச் சங்கப் புலவர் வரலாற்றை யொட்டியே பாடுகின்றார். அறிவு, அன்பு, மணம் வீசிய தமிழ் சிவ மணமும் வீசுவதனை நுகர்கின்றோம். திருவாதவூரடிகள் புலம்பும் நிலை கல் மனத்தினையும் கரைந் துருகச்செய்கிறது.

அடுத்து வருகின்றது நாளும் நற்றமிழால் தமிழ் வளர்த்த ஞானசம்பந்தர் பெருமை. தமிழ்நாட்டில் வாள் கொண்டு சமயப்போர் நடந்தது இல்லை. வாய் கொண்டே போரிட்டனர். அதிலும் பாட்டில் பாடித் தீர்த்துக்கொள்வதே வழக்கம். ஆதலினால், சமணரைக் கழுவேற்றிய படலம் கண்டு மன நடுக்கம் கொள்ளவேண்டியதில்லை. சமணர் என்பது உண்மைச் சமணரை இங்குக் குறிக்கவில்லை. சமணர் என்ற பெயரில் தீமை புரிந்த கூட்டத்தினையே குறிக்கின்றது. தீமைக் கூட்டம் எங்குந்தான் உண்டு. ஆதலின், சமணரைக் கழுவேற்றிய படலத்தினைக் கொலைஞரைக் கரையேற்றிய படலம் எனக்கொண்டு படித்து இன்புறுவதே தக்கதாம். "நல்லோர் அறங் கூற அல்லார் புறங் கூற" எனத் திருஞானசம்பந்தப் பெருமானே சமணர்களில் இரண்டு வேறு கூட்டத்தினைச் சுட்டிக் காட்டுகிறார். தமிழின் பெருமை கற்பு; காதலின் கற்பு; கடவுட் காமத்தின் கற்பு. காதலொழுக்கம் தமிழ் மரபு. அதனைக் காப்பது ஆண்டவன் கடமை. தமிழ் பாடும் திருவாலவாய்க் காண்டத்தில் தமிழ் வளர்த்த சம்பந்தர் வரலாற்றில் வன்னியும் கிணறும் இலிங்கமும் அழைத்த திருவிளையாடலும் இந்த உண்மையை நூலின் முடிந்த முடிபாக நிலைநாட்டி வருகிறது.

திருவாதவூரருக்குச் சம்பந்தர் பின்னவர் என்ற கொள்கையை இந்தப் புராணப்போக்கு வலியுறுத்துகின்றது எனப் போகின்ற போக்கில் சொல்லத்தான் வேண்டும்.

உலகப் போராட்டத்தில் குழைந்து உருப்பெற்ற அனுபவம் - அறிவின் பெருக்கம் - ஆண்டவன் அருள் - இவற்றின் வடிவாய் எழுந்த பாடல்; சிவனடிக்கே உடலும் பொருளும் ஆவியும் தந்த தன்னழிவு; அவ்வன்பால் உலகம் வாழத் தீமை அழிதல்; இத்தனைக்கும் அடிப்படையான கற்பு நெறி பிறழாக் காதல்—இவையே தமிழின் வடிவம் எனத் திருவாலவாய்க் காண்டத்தில் கதை கதையாகப் பேசித் தமிழின் பெருமையையும் தமிழே வடிவாம் சொக்கனார் திருவிளையாடலையும் துய்த்து அவை அவையே ஆன பரஞ்சோதியார் பாடுகின்றார்.

ஆண்டவன் அருள் வடிவினன். அருளாக அங்கிருந்தால் போதாது. அருளாக இங்கு நம்மீது பாய வேண்டும்; பாய்

கிறது. வாயார வாழ்த்துகிறோம். ஆனால், பல பல நிலையில் கலங்கி நின்று நெஞ்சம் குமுறுகின்றோம். ஆறுதல் அளிக்க அருளைப் பாடுகின்றது கூடற்காண்டம். திருவிளையாடலில் நடுக்காண்டம் அது; ஆம் அதுதான் உயிர்நிலை. நாம் செய்த தீமைகளை எண்ணி நடுங்குகிறோம். "குணம் பொல்லேன் குலம் பொல்லேன் குற்றமே பெரிதுடையேன்" என்று கதறிப் பதறிக் கருத்தழிகிறோம். நம்மை நாமே வெறுக்கிறோம். உலகம் இருக்கிறது. இந்த நிலையில்—உண்மையில் மனம் மாறிய நிலையில் ஒருவன் தன் உயிரை—ஆன்மாவை. இழத்தலாகாது. ஓர் ஒளி, ஒரு நம்பிக்கை ஏற்பட வழியிருந்தால் கடைத் தேற லாம். அந்த நம்பிக்கையைத் தரும் கதைகளையே கூடற்காண் டம் கூறுகிறது. ஆண்டவன், உயிர்கள் உய்யவே வழிசெய்கிறான். இந்த உலகக் கடையை அதற்கு என்றே விரித்திருக்கின்றான். தீமை ஒரு பள்ளம்; ஆண்டவன் அருள் வெள்ளம்; பெருங்கடல்; சிறிது தீமையிலிருந்து மேலேறியதும் இந்தப் புறம் இருக்கிறது இந்த ஆனந்தக் கடல். சிறிது இடறியதும் அதில் விழுகிறோம். பெரும் பாவம் என்று சொல்லிப் பயனில்லை. விண்ணுற அடுக் கிய விறகின் வெந்தழல்— உண்ணிய புகில் அவை ஒன்றும் இல்லையாம். மனம் மாற்றமே வேண்டுவது. கன்றைப் பிரிந்த பசுப் போலக் கலங்குகிறான் கடவுள். கன்று தன்னை நோக்கி யதும் கடவுள் இன்பமாய்மழைக்கின்றான். இதனை விளக்குகின்றது கூடற்காண்டம். மாபாதகம் தீர்த்த திருவிளையாடல் இதுவே யாம். "வேறு களைகணு மின்றிவீயக் கடவனைக் காப்ப தன்றோ காப்பென்றான் கருணைமூர்த்தி." மனமாற்றம் வந்த பின் பாவி யாவது ஏது? கிறித்தவர்கள் தங்களுக்கேயுரியது எனக் கொள் ளும் இக்கொள்கை மிகமிகப் பழைய தமிழ்க் கொள்கை என்ப தனை இங்குக் காண்கிறோம். அலந்தாருக்கும் அற்றாருக்கும் அருள் செய்யவும் ஆண்டவன் உள்ளான் என்ற உறுதியை வளர்க்கும் படலங்களும் வருகின்றன. விருத்த குமாரபாலரான படலம், இசை வாது வென்ற படலம், பலகையிட்ட படலம், அங்கம் வெட்டின படலம், மாமனாக வந்து வழக்குரைத்த படலம் முதலியன இந்த வகையில் உலகினை உய்விக்க வந்தவை. அந்த உண்மைக் கருத்து மனத்தே தோன்ற மனமுருகிப்பாடுகின்றார் பரஞ்சோதியார்.

அழகாம் கடவுள் அருளாம் கடவுள் உலகத்தின் நியதி; ஒருவருக்கும் விளங்காத சட்டம். அதனை விளக்குகின்றது பழியஞ்சின படலம். அவனாற்றலுக்கு அளவில்லை. மாபாதகம் மட்டுமா தீர்ப்பான். அலந்தவரை மட்டுமா அறிந்துக் காப்பான். எல்லாம் வல்ல சித்தன் அவன், திருவிளையாடல்களெல்லாம். சித்தே யன்றோ? கலை ஒரு பெருஞ்சித்து. கலையின் வடிவமே அழகு. சொக்கன் அக்கலை வளர்ப்பதனைக் கூறவேண்டுமா? இசைவாது வெல்வதற்குதவுவது — பலகையிடுவது — இம் மட்டுமா? திருமுகம் கொடுத்தும் விறகு விற்றும் உயர்த்துவான். உலகத்தின் தனி இன்பம் இவன். இவனை நோக்க உயிர்கள் எல்லாம் இன்பப் பெண்களேயாம். இந்த இசைவினைப்படாத நாடே யில்லை; மொழியே யில்லை. இந்த நுட்பத்தினை-உயிரும் கட வுளுமாம் காதற்கதையினை விளக்குவதே வளையல்விற்ற படலம்.

பாவி, அலந்தோர், அனைத்துயிர்கள்-இவ்வாறு அனைவரும் இயைந்த குடியரசே உலகம். ஆண்டவன் நம்முள்ளத்தில் காதலனாக வீற்றிருப்பதால் இக்குடியரசு நடைபெற்று வரு கிறது. அரசன் பேருக்கே அரசன். உண்மையில் அரசர்க்கரசன் ஆண்டவனே. பாண்டி நாட்டு அரசும் ஒரு புதுப்புதுமை. இந்த அரசு ஒரு அறிவுப்பேரரசு; கலைப் பேரரசு; பொருளி லக்கணம் இல்லையே எனப் புலம்பும் அரசு; இறையனாரகப் பொருளுக்கு உரைகாண வேண்டுமே என உளங் கலங்கும் அரசு; இசை வளர்க்கும் அரசு; கோயிற் கலை வளர்க்கும் அரசு. தன் நலமெலாம் இழந்து ஆண்டவன் கால் நோகுமே என நைந்து உருகும் அரசனுக்கு ஆண்டவன் அருளுவான்; சோழனை மடுவில் வீட்டுவான்; மாயப் பசுவை வதைப்பான்; யானை எய்வான்; நாகம் எய்வான். ஆம், அனைத் தும் அவன் செயல்; அவன் அருள். அவனன்றி ஓரணுவும் அசையாது. முதற்காண்டத்தில் ஆண்டவனே அரசனாக வரு கின்றான். அரசன்தான் கடவுள் என எண்ணிவிடுகின்றோம். மேருவினையும் செண்டாலடித்து இந்திரனையும் அடிமைகொண்ட பெருமை நம் கண்ணையும் கருத்தையும் மயக்குகிறது. உண்மை இந்த உயிர்க்காண்டத்தில் விளங்குகிறது. அரசன் ஓர் ஆள்; தனியாள்; அவன் உயிர்க்குயிராய் விளையாடுபவன் ஆண்டவன். ஆதலின், அரசன் கொற்றமெல்லாம் ஆண்டவன் கொற்றமே.

இந்தக் குடியரசில் சித்தரும் அரசரும் மக்களும் மட்டும் இல்லை. எல்லா உயிர்களும் வீற்றிருக்கின்றன. அறிவு இவர்களுக்கு மட்டும் உரியது அன்று. வீடு அனைவர்க்கும் எனக் காத்திருக்கும் பெருவிருந்து. உலகப் படைப்பின் நோக்கம் அது. மனிதனே வீடு பேற்றுக்குரியன் என்பது ஒருசிலர் கொள்கை. இதனை மறுக்கின்றது; உறுதியாக மறுக்கின்றது கூடற்காண்டம். திருவிளையாடல் கடவுட் காப்பியம். இங்குக் கூறுவது கடவுட் படைப்பின் நோக்கம் - அந்த நோக்கம் விளையாடும் விளையாடல்கள். இவை பாவுலக உண்மைகள்; மெய்ஞ்ஞானிகள் காணும் இன்ப அனுபவங்கள். புறநிலை இருப்பு பொருளற்ற குழப்பம். அகநிலை மெய்யுணர்வு தெள்ளத்தெளிந்த உண்மை இன்ப அறிவு விளக்கம். இந்த வகையில் நோக்கும்போது இந்த உயிர்நிலைக் காண்டத்தின் முடிந்த முடிபுகளாக வரும் பன்றிக் குட்டிக்கு முலை கொடுத்த படலம், பன்றிக் குட்டிகளை மந்திரிகளாக்கிய படலம், கரிக்குருவிக் குபதேசித்த படலம், நாரைக்கு முத்தி கொடுத்த படலம் என்பவை உலகத்தில் வேறெங்கும் நாம் காணாத கடவுட் புதுமைகள் எனலாம். வரகுணனுக்குச் சிவலோகம் காட்டுகிறான் கடவுள்; நாரைக்கு முத்தியே கொடுத்துவிடுகிறான்.

இந்த நூலின் முதற்காண்டம் மதுரைக் காண்டம். கடவுள் மணம் கமழுகின்ற பகுதி இது. ஆண்டவனே நேரே வந்து ஆளுகின்ற காட்சியைக் காண்கிறோம். அம்மட்டுமா ? இப்பகுதி ஒரு சிறந்த காதற் காப்பியம். அங்கயற்கண்ணி அனைவரையும் வென்று அழகன் எதிரே நாணிக் குழைந்து நிற்கின்ற கடவுட் காமக் காட்சி இங்குத்தான் தோன்றுகிறது. ஆண்டவனே மணமகனாக வந்து அரசாண்டால் என்னவாகும்? இது நினைக்கவும் முடியாத நிகழ்ச்சி - இதனையும் நினைத்துப் பார்த்தனர் நம் முன்னோர். அரச வீறு, அரசச் செருக்கு இயற்கையாக எழுவது ஒன்று. ஆண்டவன் எதிர் இதுவும் நெக்குவிடுகின்றது. ஒரு குறட்பூதம்—குண்டோதரன் கற்பிக்கும் பாடங்கள் என்னே என்னே ! இங்கே தமிழ்நாட்டின் சிறப்பு வானுலகமெல்லாம் பரவுகிறது.

இத்தனையும் பெண்ணின் பெருமை என்பதனை இங்கே நாம் மறக்கவேமுடியாது. இந்த அரசு அனைத்தும் ஆண்டவ

னுக்கு எங்கள் தமிழன்னை கொடுத்த தனிப்பிச்சை. பெண்ணரசி ஆண்ட நாட்டில் பெண்ணிழிவுக்காலமும் வந்தது. அதனை மாற்றுவதற்கென்றே பரஞ்சோதியார் இந்தப் புராணத்தினை எழுதினார்போலும். சத்திக்கு ஏற்றம்கூறுவதே முனிவர் முடிவு. நூலைச் "சத்தியாய்" என்றே தொடங்கியுள்ளார். சிவசக்தி வணக்கம், சிற்சத்தி வணக்கம், அங்கயற் கண்ணம்மை வணக்கம், தடாதகைப் பிராட்டி வணக்கம் எனப் பெண் பெருமையையே பரக்கப் பேசுகின்றார். கதையைத் தொடங்கியதும், அம்மையின் திருவிளையாடலை என்ன உயர்ந்த நிலையில் வைத்துத் தம்மை மறந்து பாடுகின்றார் நம் புலவர் பெருமான்.

இத்திருவிளையாடல்கள் ஆண்டவன் திருவிளையாடலாக மட்டும் தோன்றவில்லை; தமிழ் நாட்டின் திருவிளையாடல்களாகக் காட்சி யளிக்கின்றன. தமிழ் நாட்டின் கல்வி முறையில் ஒன்று மாணிக்கம் விற்ற படலத்தின் வழியே வெளியாகின்றது. தில்லைக் கோயிலின் கோபுரவாயிலில் நமது நாட்டுப் பரத சாத்திரம் முழுதும் காட்சிப் படங்களாகக் கல்லில் செதுக்கப் பெற்று விளங்குகிறது. காட்சி முறைக் கல்வி என்று புகழ்வது பழந் தமிழ்க் கல்வியே எனலாம். மாணிக்கத்தைப் பற்றிய மணி நூலின் நுட்பமெலாம் இந்தப் படலத்தின் கதைப் போக்காகவே விளக்கப் பெற்றிருத்தல் மற்றொரு கல்வி முறையாம். கடவுளையே கதையாகப் பாடி விளக்கும் நம்மனோர் மணிகளின் இயல்புகளைக் கதையோடு கதையாகப் பாடி விளக்குவதனைக் கூறவேண்டுமா? நவ மணிகள் என்ற செல்வத்தின் சீர்தான் என்ன? தன்னல மற்ற நிலையின் வீறுப்பேயாம். வலனது எலும்பும் தோலும் இரத்தமும் வழுவுமே இந்த மணிகளின் குப்பை. இஃது ஒரு பெரிய கருத்து.

மற்றொரு வகையாலும் இந்தப் புராணம் தமிழ் நாட்டின் பெருமையைக் கூறுகின்றது. புராணங்கள் எனத் தமிழில் எழுந்தவை நாட்டுப் படலமும், நகரப் படலமும் கூறாமல் இருப்பதில்லை. சங்க காலத்திலிருந்து "திருநாடு யாது? திருநகரம் யாது?" என எண்ணி வருகின்றனர் தமிழர். மேல் நாட்டில் ப்ளேடோ என்பார் எழுதிய 'ரிபப்ளிக்' என்ற திருநாட்டின் புனைந்துரை போலப் பலர் தத்தம் கருத்தை எழுதியுள்ளனர்.

எராஸ் மஸ், பேகன் போன்ருர் எழுதியது போக இன்னும் வெல்ஸ் எழுதியுள்ளார். கனவு ஒரு நாள் நனவாகும். ஆதலின், இத்தகைய கனவு காண்பதில் நன்மையே உண்டு. நம் தமிழ்ப் புலவர் கண்ட திருநாடுகளைப்பற்றி இந்த முறையில் வரலாற்று வழியே ஆராய்வது பெரும் பயன் தருவதாகும். இப்புலவர்கள் இயற்கையில் ஈடுபட்டுத் தம்மை மறப்பவர்கள். மழை பொழிந்து நாடு நாடாய் மக்களுழைப்பால் ஏமாற்ற மின்றி நாடு சிறந்து அறனை வளர்த்துக் கடவுளையும் வளர்ப்பதனையே அனைவரும் கூறுகின்றனர். ஆனல், இந்த அனுபவங்களே ஒவ்வொருவர்க்கு ஒவ்வொரு வகையாகக் காட்சி யளிக்கின்றன. அனைத்தும் பெண் வடிவங் கொண்டு தோன்றுகின்றன, பெண்ணைப் பாடவந்த பரஞ்சோதியார் கண்களுக்கு. பொருனையாறு ஒவ்வொரு திணையிலும் ஒவ்வொரு பெண்கோலம் கொள்கிறது. அதன் செயல் சிவனடியார் செயலாக இச்சிவனடியார்க்குத் தோன்றுதல் இயல்பே. வீடுணர்ந்தோர் போலத் தெளிகிறது பொருனை; அன்பர் நிறைவழியாத உள்ளத் தன்பு போல் நிரம்புகிறது. பல பல நீர்நிலைகளால் வயலெல்லாம் விளைவது ஒருத்தியே ஐந்தொழில் இயற்ற வேறு வேறு பேர் பெற்று உலகினை வளர்ப்பது போலும். கற்புடை மகளிர் போலக் கதிர்கள் ஓசிகின்றன. அனைவர்க்கும் ஊட்டுகின்றனர் மக்கள். இவர் எண்ணியவற்றையே அங்குக் காண்கின்ருர். தமிழின் பெருமையே பேசி முடிக்கின்ருர் பரஞ்சோதியார்.

திருநகரமும் பாடுகின்ருர். புற நகர், இடை நகர், அக நகர், மதில், மதிற் பொறி-இவற்றிற்குள்ளே இடையூறின்றி அறமும் செல்வமும் அறிவும் இன்பமும் வளர்கின்றன. சாதிகள் வேரூன்றிய நாளில் வாழும் பரஞ்சோதியார் சாதிகளை வீதி வீதியாகப் பகுத்து வாழ்வித்துப் பாராட்டுகின்ருர். இடையிலே எழுந்து ஓங்குகிறது இறைவனது திருக்கோயில்,

" தன்னிகர் உயர்ச்சி யில்லான் காப்பியத் தலைவ னாக
முன்னவர் மொழிந்த தேனோர் தமக்கெல்லாம் முகம னன்றே
அன்னது தனதே யாகு மண்ணலே பாண்டி வேந்தாய்
இந்நகர்க் கரசனாவா னிக்கவிக் கிறைவ னாவான்."

மேல் என்ன கூறுவது?

பிற திருவிளையாடற் புராணங்களும் இவ்வாறு கூற வில்லையா என்ற ஐயம் எழலாம். நாம் இங்குத் திருவிளையாடல் களின் முறைவைப்பினை ஒட்டி விளக்கம் கூறி வருகின்றோம். அந்த முறைவைப்புப் பரஞ்சோதியார் உள்ளத்தினை கவர்ந்த முறைவைப்பு. பிற நூல்களில் அவ்வாறு இல்லை. பெருகப் பேச இடமில்லை. ஒன்று சுட்டலாம். பன்றி, கரிக்குருவி, நாரை என்ற மூன்றினை அடுத்தடுத்து வைத்துப் பாடுகின்றார் பரஞ்சோதியார். அங்கு ஒரு நயம் - உண்மை - தோன்றுகிறது. பிற திருவிளையாடற் புராணங்கள் இவற்றை எங்கெங்கோ வைத்துப் பாடுகின்றன. ஆதலின் அவற்றின் சுவை வேறு; நுட்பம் வேறு. இங்கு நாம் சுவைப்பது பரஞ்சோதியார் விருந்து.

"மூர்த்திதலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர் வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே" எனத் தம் அனுபவத்தினைப் பாடுகின்றார் தாயுமானவர். நீர் வேட்கை கொண்டு அலைவோரின் நீர் வேட்கை தீரும். தட்டினால் கதவு திறக்கப் பெறும். அழுத குழந்தை பால் குடிக்கும். திருத்தல யாத்திரை என்பது நம் அறிவினை வளர்ப்பது; அன்பினை வளர்ப் பது. உலக அனுபவத்தினை உயர்த்துவது. குண்டு சட்டியில் குதிரை யோட்டுங் குறுகிய மனப்பான்மையைக் கொத்தி எறி வது. உயர்ந்த கல்வி முறை இது. இமய முதல் குமரி வரை ஒன்றாய்க் கிடக்கும் இந்த ஒருமை மனப்பான்மை வளர்ந்தது இந்தப் புலம் பிரிந்துறையும் நலம்புரிச் செலவாலேயாம். உலக ஒருமை; உலகமேயான ஆண்டவன் ஒருமை. அங்கெலாம் திரியும் நம்முள்ளத்தொருமை- இதன் பயனாக ஆன்மநேய ஒருமைப்பாடு- இவை வளரும். பூத வொடுக்கம் சீவ வொடுக்கம் தோன்ற உதிக்கும் சிவஞானம்.

ஒவ்வோர் ஊரும் திருவூரே. எங்கும் இருக்கும் ஆண்டவன் அங்கு இல்லாமற் போவானா? பசுவின் உடலம் முழுதும் நிறைந்த பால் மடியில் வெளிப்பட்டுத் தோன்றுவது போலக் குறித்த ஓர் கோயிலின் குறித்த ஒருவனது உள்ளப்பாங்கிற் கேற்ப இறைவன் அருள் வெளிப்பட்டுத் தோன்றும். ஆனால், நமக்கு ஒவ்வொரு கோயிலும் ஒவ்வோர் கலைஞரும் ஒவ்வோர்

அடியாரும் வாழ்ந்துயர்ந்த திருநிலையமாகக் காட்சியளிக்கின்றது. தமிழும் சைவமும் குழைந்து தோன்றும் காட்சியை எங்கும் காண்கிறோம். மதுரையிலிருந்தே இந்தக் காட்சி தொடங்குகிறது என்று உறுதி கூறலாம். இந்தத் திருவிளையாடற் புராணமே இவ்வாறு கூறத்தூண்டுகிறது.

இத்தகைய தலபுராணங்கள் பெரும்பாலும் சோழப் பேரரசு மறைந்த பின்னரே தோன்றியுள்ளன. அலாவுதீன் என்ற வடநாட்டரசரது ஆளாய் வந்த மாலிக் காபரால் தமிழ் நாடு நிலைதளர்ந்தது, வடநாட்டுப் பிறமத அரசினை எதிர்க்கத் தென்னாட்டினர் ஒருங்கு சேர்ந்த தன் பயனே விஜயநகரப் பேரரசு. இந்தப் பேரரசின் தென்கோடி நிலையமாக மதுரை விளங்கத் தொடங்கியது. திருமலை நாயக்கர் மதுரையின் சிறப்பினை வளர்த்தவர். அவர் அரசில் அங்கயற் கண்ணியின் அருள் வளரத்தொடங்கியது. மீனாட்சியம்மைப் பிள்ளைத் தமிழ் அவரது அரசவையில் அரங்கேறியதே ஆம். இந்த அவையில் இருந்தவரே சரசுவதி பண்டாரம் என்பவரும். சரசுவதி பண்டாரம் என்பாரின் தலைமையில் பரஞ்சோதியார் தம் திருவிளையாடலை அரங்கேற்றினார் என்பது கன்னபரம்பரை. திருமலை நாயக்கர் ஆட்சிக்குத் தமிழ் மெருகும் சிவமெருகும் கொடுக்கும் முறைகள் இவை. 17-ம் நூற்றாண்டில் எழுந்த இந்நூல் தமிழரின் புத்துயிர் வளர்ச்சியோடு எழுந்தது எனக் கூறலாம்.

உரிமை யிழந்த தமிழர், செல்வமின்றிப் பட்டினியில் புழுப் போல் துடிதுடித்த தமிழர், பஞ்சத்தில் வாடிய தமிழர், கல்வி கற்க இடமோ காலமோ பெறாது கருத்தழிந்த தமிழர், அமைதியிலாத கொள்ளையிடையேயும் கொடுங் கோலிடையேயும் குன்றிக் குமைந்த தமிழர், நோயில் நொந்த தமிழர்—இத்தகையர் வாழும் நாடாகச் சோழப் பேரரசு வீழ்ந்த பின் தமிழ் நாடு மாறிவிட்டது. இவர்களுக்கு புத்துயிர் தந்து மக்களாக்க வேண்டும்; உறுதி தரவேண்டும். இந்தப் பெருந் தொண்டினைச் செய்தவையே புராணங்கள்—தலபுராணங்கள். "நீங்கள் வாழ்வது வெறுந் தரையன்று; புண்ணியம் பூத்தது. உங்கள் குளம் புழுத்த வற்றுந்தரையன்று; தேவர்கள் ஆடியது. முயன்றால் முழு இன்பம் விளையும்; ஆற்றல் சுரக்கும்; வழிபட்டால்

ஆண்டவன் அருள் பொங்கும்" என்று புராணங்கள் ஊக்கின. புராணங்கள் பொய் கூறுகின்றன என்று கூறுவர் சிலர். சூரியன் காயாத ஊருண்டோ? மழை பொழியாத கோயிலுண்டோ? காற்று வீசாத மன்ற வெளியுண்டோ? விலங்கு புகாத காடு உண்டோ? மரம் இல்லாத பொழில் உண்டோ? சூரியன் வழிபட்ட இடம்; வருணனும் இந்திரனும் வந்து வழிபட்ட கோயில்; வாயுவந்து சுற்றிச் சுற்றி வணங்கிய கோயில் என்று கூறுவதில் என்ன கேடு? இயற்கை அன்னை இந்த நிலத்தின் ஒவ்வோர் அணுவையும் இன்பங்கொழிக்கவே அருள் சுரக்கவே முயல்கின்ருள். இவற்றை இவ்வாறு பாடுவதில் என்ன தடை? இவ்வாறு பாடக் கேட்ட மக்கள் தங்கள் கோயிலைப் பெரிதாகக் கட்டினர்; அதுவும் சமுதாய வாழ்வின் உயிர் நிலையாக ஓங்கிற்று. மக்கள் துன்பத்தை மறந்தனர்; புராணத்தில் இன்பங்கொண்டனர். நோய்ஓடியது; முயற்சி ஓங்கியது. புத்துயிர் பெற்று மக்கள் வாழத் தொடங்கினர். இல்லையேல் தூக்குப்போட்டுச் சாவ நின்ருர் உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு இக்கதைகளைக் கேட்டுக்கொண்டே இந்நாள் வரை வாழ்ந்து வந்து இருப்பரோ? இந்தப் புராணங்கள் செய்த தொண்டு பெருந் தொண்டன்ருே? இஃது உண்மையில்லையாளுல் இத்தகைய புராணங்கள் வளர்ந்த பெரும் புராணத்தை எவ்வாறு விளக்குவது?

பரஞ்சோதி முனிவர் என்பவர் முனிவர் என்பதற்கேற்பத் துறவியார் போலும். வேதாரணியத்திற் பிறந்து வேதாரணிய புராணமும் பாடியுள்ளார். திருவிளையாடற் போற்றிக் கலி வெண்பாவும் மதுரைப் பதிற்றுப் பத்தந்தாதியும் இவர் பாடியனவே. ஆயினும், திருவிளையாடற்புராணம் என்ற நூலாலேயே இவர் வாழ்கின்ருர். இவர் காலம் திருமலை நாயக்கர் காலம் எனக் குறித்தோம். இவரது உண்மைச் சைவத் தமிழ் வடிவம் திருவிளையாடற்புராணத்தின் ஒவ்வொரு பாடலிலும் விளங்கக் காணலாம். இவருடைய சைவம் ஒட்டிப் பாடும் சைவம் அன்று. பின்னுளைய நிலைக்கு ஏற்ப வெட்டிப் பாடும் சைவமேயாம்.

கழுவேற்றிய படலத்தில் இந்தப் பின்னுளைய நிலையினை நன்கு காணலாம். மண் மாசு படப்பூசும் வடிவுடையார் என்று பாடுவதில் ஒரு இன்பம் கொள்கிறார் இவர். இவ்வாறு எழுதுவதனைக் குற்றம் எனக்கொள்ளாது நற்றம் எனக் கொண்ட காலத்தே பாடியவரிடத்தே இந்த நாளில் இதனையன்றிக் குற்றம் எனக் காட்டுவதற்கு வேறொன்றும் இல்லை. காப்பியத்தில் ஈடுபட்டுப் படிப்பார்க்கு இதுவும் கதையொடு கதையாகக் கரைந்துருகி வெளிக்குத் தோன்றாது களிப்பூட்டக் காண்போம். இவ்வாறு பாடவேண்டும் என விரும்புவோர் இன்றும் இல்லையா? உலகம் பலவகை. எல்லோரையும் எல்லாக் காலமும் இன்பமூட்டுவது வள்ளுவருக்கன்றி மற்றையோருக்கு அரிது. சைவரல்லாதாரும் இதனை ஒரு தமிழ்க் கதை எனப் படித்து மகிழலாம். இந்தக் கதையின்பத்தினைத் தந்த பரஞ்சோதியாரை அவர்களும் வாயார மனமார வாழ்த்தும் வகையில் தமிழ்ச்சுவை சொட்டச் சொட்டப் பாடியுள்ளார். தமிழ்ச் செய்யுளின் ஓசையின்பம் இந்த நூலிற் போல வேறெங்கும் கொடிமுந்திரிப் பழத்தின் எளிய இனிமை போல ஒழுகக் காணோம்.

300-ஆண்டுகளுக்கு முன்னர்த் தமிழரின் புத்துணர்ச்சிப் பெருக்கத்தின் வழியே தோன்றியது இந்நூல். இன்றும் ஒரு புத்துணர்ச்சி தமிழ்நாட்டில் பெருகி வருகிறது. திருப்பனந்தாள் இந்தத் தமிழ் வளர்ச்சியில் முனைந்து உழைப்பது வெளிப்படை. குமரகுருபரர் இட்ட வித்து அன்று பூத்துக் காய்த்துப் பழுத்துப் பயனளித்தது போல இன்றும் பூத்துக் காய்த்துப் பழுத்துப் பயனளிக்கின்றது. மீனாட்சியம்மைப் பிள்ளைத் தமிழ் பாடிய குமரகுருபரரது மடம் அந்த மீனாட்சியம்மையின் புராணமாம் திருவிளையாடற் புராணத்தினை அச்சிட்டு இன்று தருகிறது. பன்னிரு திருமுறைகளையும் அச்சிட்டு அனைவருக்கும் உதவிய திருப்பனந்தாள் **ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்** இந்தப் புராணத்தில் ஈடுபட்டு இதனையும் அச்சிட்டு அனைவரும் இந்தச் செந்தமிழ்ப் புராணச் சிவக்கடலில் செம்

மாந்து திளைக்குமாறு செய்ய முயல்கின்றார்கள். இதனை வாயார வாழ்த்தி இவர்களை வணங்கி இவர்கள் செயலையும் இவர்கள் முதற்றலைவராம் குமரகுருபர அடிகளையும், இந்த நூல் செய்த பரஞ்சோதியாரையும் எண்ணி எண்ணி நைந்து நைந்து நன்றியறிவோடு உண்மை கூறி இன்புறுவ தல்லால் என் போன்றார் செய்யக்கூடிய தென்ன? வாழ்த்த வைத்த வாய்கொண்டு வாழ்த்துகிறோம்!

பனசை வாழ்க! அருள்நந்தி வாழ்க!

பரஞ்சோதி வாழ்க! திருவிளையாடல் வாழ்க.

—o—

# தமிழின் பெருமை

—o—

கண்ணு தற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து
பண்ணு றத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமி ழேனை
மண்ணி டைச்சில விலக்கண வரம்பிலா மொழிபோல்
எண்ணி டைப்படக் கிடந்ததா வெண்ணவும் படுமோ.

தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்தது முதலை
உண்ட பாலனை யழைத்தது மெலும்புபெண் ணுருவாக்
கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித்
தண்ட மிழ்ச்சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்.

—திருவிளையாடற்புராணம்.

உ

செந்திலாண்டவன் துணை

## உள்ளுறை

# 1. மதுரைக் காண்டம்

—o—

## 2. கூடற் காண்டம்

—o—

# 3. திருவாலவாய்க் காண்டம்

—o—

உ

செந்திலாண்டவன் துணை

பரஞ்சோதி முனிவர்

# திருவிளையாடற் புராணத்திற்கு

## [1]பலபட்டடைச் சொக்கநாதப்புலவர்

இயற்றிய

## [2]சிறப்புப்பாயிரம்

---

### ஆசிரியர் விருத்தம்

வரஞ்சோதி நான்மறையால் வருமுத்த
நகைபங்கன் வழங்கப் பெற்றோன்
பரஞ்சோதி மாமுனிவன் பகர்ந்ததிரு
விளையாடற் பாடல் கூடற்
புரஞ்சோதி யரசின்ற புனிதரைப்போற்
றடையின்றிப் புகுஞ்சோ மாதித்
தரஞ்சோதி தாழமுனி தமிழ்முனிதென்
முனியெனச்சொல் தகைமைத் தாமே. 1

அருட்கடவுள் வணக்கம்பா யிரத்தொடவை யடக்கம்
ஆனதிரு நாடுநக ரங்கயிலைச் சிறப்புத்
தெருட்பெருகு புராணவழி தலந்தீர்த்த மூர்த்தி
திருவிளையாடற்றொகையவ் விளையாட்டின் வகையோ(டு)
இருட்கெடருச் சனையிரு யாப்பின்விரி மூவாயி
ரத்துமுந்நூற் றறுபஃதே ழின்மதுரைப்புராணம்
பொருட்சுவைசொற் சுவைபெருகப் பரஞ்சோதி முனிவன்
புவிதழைந்து கதியேறப் பொற்புறச்செய்தனனே. 2

---

1. இவர் மரபினர் பலபட்டடைக் கணக்கு என்னும் ஒரு வகை உத்தியோகம் பார்த்து வந்தவர்கள்; அதனால், பலபட்டடைச் சொக்கநாதப்புலவர் எனப் பெயர் பெற்றார் என்பர். இப்புலவர் இராமநாதபுரம் விஜய ரகுநாத சேதுபதி (கி. பி. 1711-1725) என்பவரால் ஆதரிக்கப்பெற்றவர். இவர் பாடிய இச் சிறப்புப்பாயிரத்தைக் கொண்டு, பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணம் 3367-பாடல்கள் எனத் தெரிகின்றது; ஆனால் தற்போது 3363-பாடல்களே உள்ளன.

2. இச்சிறப்புப்பாயிரப் பாடல்கள் இரண்டும் பழைய ஏட்டுப் பிரதியினின்று கிடைக்கப்பெற்றவை.

உ

செந்திலாண்டவன் துணை

திருச்சிற்றம்பலம்

# திருவிளையாடற் புராணம்

## 1. மதுரைக்காண்டம்

### காப்பு

சத்தி யாய்ச்சிவ மாகித் தனிப்பர
முத்தி யான முதலைத் துதிசெயச்
சுத்தி யாகிய சொற்பொரு ணல்குவ
சித்தி யானைதன் செய்யபொற் பாதமே. 1

### வாழ்த்து

மல்குக வேத வேள்வி வழங்குக சுரந்து வானம்
பல்குக வளங்க ளெங்கும் பரவுக வறங்க ளின்பம்
நல்குக வுயிர்கட் கெல்லா நான்மறைச் சைவ மோங்கிப்
புல்குக வுலக மெல்லாம் புரவலன் செங்கோல் வாழ்க. 2

### நூற்பயன்

திங்களணி திருவால வாயெம் மண்ணல் திருவிளையாட் டிவை யன்பு செய்து கேட்போர், சங்கநிதி பதுமநிதிச் செல்வ மோங்கித் தகைமைதரு மகப்பெறுவர் பகையை வெல்வர், மங்கலநன் மணம்பெறுவர் பிணிவந் தெய்தார் வாழ்நாளு நனிபெறுவர் வானு டெய்திப், புங்கவரா யங்குள்ள போக மூழ்கிப் புண்ணிய ராய்ச் சிவனடிக்கீழ் நண்ணி வாழ்வார். 3

---

1. சொற்பொருள் - சொல்லையும் பொருளையும்.
2. மல்குக - நிரம்புக. புல்குக - நிலைபெறுக,
3. தகைமை - பண்பு. நண்ணி - இரண்டறக் கலந்து.

# கடவுள் வாழ்த்து

### சிவம்

*வென்றுளே புலன்கள் ளைந்தார் மெய்யுண ருள்ளந் தோறுஞ்*
*சென்றுளே யமுத மூற்றுந் திருவருள் போற்றி யேற்றுக்*
*குன்றுளே யிருந்து காட்சி கொடுத்தருள் கோலம் போற்றி*
*மன்றுளே மாறி யாடு மறைச்சிலம் படிகள் போற்றி.* 4

### சத்தி

*சுரும்புமுரல் கடிமலர்ப்பூங் குழல்போற்றி யுத்தரியத் தொடித்தோள் போற்றி, கரும்புருவச் சிலைபோற்றி கவுணியர்க் குப் பால்சுரந்த கலசம் போற்றி, இரும்புமனங் குழைத்தென்னை யெடுத்தாண்ட வங்கயற்க ணம்பி ராட்டி, அரும்புமிள நகை போற்றி யாரணநூ புரஞ்சிலம்பு மடிகள் போற்றி.* 5

### பரசிவம்

*பூவண்ணம் பூவின் மணம்போல [1]மெய்ப்போத வின்பம்*
*ஆவண்ண மெய்கொண் டவன்றன்வலி யாணை தாங்கி*
*மூவண்ண றன்சந் நிதிமுத்தொழில் செய்ய வாளா*
*மேவண்ண லன்னுன் விளையாட்டின் வினையை வெல்வாம்.* 6

### பராசத்தி

*அண்டங்க ளெல்லா மணுவாக வணுக்க ளெல்லாம்*
*அண்டங்க ளாகப் பெரிதாய்ச்சிறி தாயி னானும்*
*அண்டங்க ளுள்ளும் புறம்புங்கரி யாயி னானும்*
*அண்டங்க ளீன்ற துணையென்ப ரறிந்த நல்லோர்.* 7

---

4. போற்றி - பாதுகாத்தருள்க; வணக்கம். ஏற்றுக் குன்று— வெள்ளிமலை போன்ற இடபம்.

5, கவுணியர் - திருஞானசம்பந்தர். அங்கயற்கண் - மீனாட்சி. நூபுரம் - சிலம்புகள்.

6. போதம் - அறிவு. மூவண்ணல் - அயன், அரி, அரன் என்னும் மூவர். வாளா - அசைவின்றி.

7. புறம்பும் - புறத்தும். கரி - சான்று.

பா-ம்—1. மெய்போத வின்பம்.

### சொக்கநாதர்

பூவி னாயகன் பூமக னாயகன்
காவி னாயக னாதிக் கடவுளர்க்
காவி நாயக னங்கயற் கண்ணிமா
தேவி நாயகன் சேவடி யேத்துவாம். 8

### அங்கயற்கணம்மை

பங்கயற்க ணரியபரம் பரனுருவே தனக்குரிய [1] படிவமாகி, இங்கயற்க ணக[2]னுலக மெண்ணிறந்த சராசரங்க ளீன்றுந் தாழாக், கொங்கயற்கண் மலர்க்கூந்தற் குமரிபாண் டியன்மகள் போற் கோலங் கொண்ட, அங்கயற்க ணம்மையிரு பாதப்போ தெப்போது மகத்துள் வைப்பாம். 9

### சபாபதி

உண்மையறி வானந்த வுருவாகி யெவ்வுயிர்க்கு முயிராய் நீரின், தண்மையனல் வெம்மையெனத் தனையகலா திருந்துசரா சரங்க ளீன்ற, பெண்மையுரு வாகியதன் னானந்தக்கொடிமகிழ்ச்சி பெருக யார்க்கும், அண்மையதா யம்பலத்து ளாடியருள் பேரொளியை யகத்துள் வைப்பாம். 10

### சோமசுந்தரக் கடவுள்

சடைமறைத்துக் கதிர்மகுடந் தரித்துநறுங் கொன்றை யந்தார் தணந்து வேப்பந், தொடைமுடித்து விடநாகக் கலன் கற்றி மாணிக்கச் சுடர்ப்பூ ணணிந்தி, விடைநிறுத்திக் கயலெடுத்து வழுதிமரு மகனாகி மீன நோக்கின், மடவரலை மணந்துலக முழு தாண்ட சுந்தரனை வணக்கஞ் செய்வாம். 11

### தடாதகைப் பிராட்டியார்

செழியர்பிரான் திருமகளாய்க் கலைபயின்று முடிபுனைந்து செங்கோலோச்சி, முழுதுலகுஞ் சயங்கொண்டு திறைகொண்டு

---

8. காவின் நாயகன் - இந்திரன். மாதேவி - உமை.
9. அண் - அணுகுதற்கு. அல் கள் - இருள்போலுந் தேன் நிறைந்த.
10. தன்னானந்தக்கொடி - சிவகாமசுந்தரி.
11. தணந்து - நீக்கி. மடவரல் - தடாதகைப்பிராட்டியார்.
பா-ம்—1. படிவமாக்கி. 2. உலகத் தெண்ணிறந்த.

நந்திகண முனைப்போர் சாய்த்துத், தொழுகணவற் கணிமணமா லிகைசூட்டித் தன்மகுடம் சூட்டிச் செல்வந், தழைவுறுதன் னரசளித்த பெண்ணரசி யடிக்கமலந் தலைமேல் வைப்பாம். 12

### வெள்ளியம்பலவாணர்

பொருமாறிற் கிளர்தடந்தோ ளொருமாறன் மனங்கிடந்த புழுக்க மாற, வருமாறிற் கண்ணருவி மாறுது களிப்படைய மண்ணும் விண்ணும், உருமாறிப் பவக்கடல்வீழ்ந் தூசலெனத் தடுமாறி யுழலு மாக்கள், கருமாறிக் கதியடையக் கான்மாறி நடித்தவரைக் கருத்துள் வைப்பாம். 13

### தட்சிணாமூர்த்தி

கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா றங்கமுதற் கற்ற கேள்வி, வல்லார்க ணால்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய் மறைக் கப் பாலாய், எல்லாமா யல்லதுமா யிருந்ததனை யிருந்தபடி யிருந்து காட்டிச், சொல்லாமற் சொன்னவரை நினையாமல் நினைந்துபவத் தொடக்கை வெல்வாம். 14

### சித்தி விநாயகர்

உள்ளமெனுங் கூடத்தி லூக்கமெனுந் தறிநிறுவி யுறுதி யாகத், தள்ளரிய வன்பென்னுந் தொடர்பூட்டி யிடைப்படுத்தித் தறுகட் பாசக், கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக் களித்துண்டு கருணை யென்னும், வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை நினைந் துவரு வினைக டீர்ப்பாம். 15

### முருகக்கடவுள்

கூறங்குதிரைக் கருங்கடலுங் காரவுணப் பெருங்கடலுங் கலங்கக் கார்வந், துறங்குசிகைப் பொருப்புஞ்சூ ரரப்பொருப்பும்

---

12. செழியர் பிரான்-மலையத்துவச பாண்டியன். மாலிகை-மாலை.
13. புழுக்கம் - துன்பம். பவக்கடல் - பிறவிக்கடல்

14. ஆறங்கம் - சிட்சை, வியாகரணம், நிருத்தம், கற்பம், சந்தம், சோதிடம் என்ற ஆறு. நால்வர் - சனகர், சனந்தரர், சனாதரர், சனக்குமாரர் என்ற நால்வர். சொல்லாமற் சொன்னவர் - குறிப்பாலுணர்த்தியவர்; தட்சிணாமூர்த்தி. நினையாமல் நினைந்து - உலகை நோக்காமல் சிவத்தையே நினைந்து

15. கூடம் - யானை கட்டுமிடம். தொடர் - சங்கிலி. வருவினை - ஆகாமியம்.

பிளப்பமறை யுணர்ந்தோ ராற்றும், அறங்குலவு மகத்தழலு மவுணமட வார்வயிற்றி னழலு மூள, மறங்குலவு வேலெடுத்த குமரவேள் சேவடிகள் வணக்கஞ் செய்வாம். **16**

### நாமகள்

பழுதகன்ற நால்வகைச்சொன் மலரெடுத்துப் பத்திபடப் பரப்பித் திக்கு, முழுதகன்று மணந்துசுவை யொழுகியணி பெற முக்கண் மூர்த்தி தாளில், தொழுதகன்ற வன்பெனுநார் தொடுத் தலங்கல் சூட்டவரிச் சுரும்புந் தேனுங், கொழுதகன்ற வெண் டோட்டு முண்டகத்தா ளடிமுடிமேற் கொண்டு வாழ்வாம். **17**

### திருநந்திதேவர்

வந்திறை யடியிற் றாழும் வானவர் மகுட கோடி
பந்தியின் மணிகள் சிந்த வேத்திரப் படையாற் றாக்கி
அந்தியும் பகலுந் தொண்ட ரலகிடுங் குப்பை யாக்கும்
நந்தியெம் பெருமான் பாத நகைமலர் முடிமேல் வைப்பாம். **18**

### திருஞானசம்பந்தர்

கடியவிழ் கடுக்கை வேணித் தாதைபோற் கனற்கண் மீனக்
கொடியனை வேவ நோக்கிக் குலைறயிரந் தனையான் கற்பிற்
பிடியன நடையாள் வேண்டப் பின்னுயி ரளித்துக் காத்த
முடியணி மாடக் காழி முனிவனை வணக்கஞ் செய்வாம். **19**

### திருநாவுக்கரசர்

அறப்பெருஞ் செல்வி பாகத் தண்ணலஞ் செழுத்தா [1]லஞ்சா
மறப்பெருஞ் செய்கை மாறா வஞ்சக ரிட்ட நீல
நிறப்பெருங் கடலும் யார்க்கு நீந்துதற் கரிய வேழு
பிறப்பெனுங் கடலு நீத்த பிரானடி வணக்கஞ் செய்வாம். **20**

---

16. கறங்கு - ஒலிக்கின்ற. பொருப்பு - கிரவுஞ்சமலை. சூர் - சூரபன்மா. மகம் - வேள்வி.

17. நால்வகைச் சொல் - பெயர், வினை, இடை, உரி என்பன. தேன் - பெண் வண்டு. முண்டகம் - தாமரை.

18. பந்தி - வரிசை. வேத்திரப் படை - பிரம்பாகிய படை.

19. கடுக்கை - கொன்றை. மீனக்கொடியன் - கூன்பாண்டியன்.

20 அஞ்சா - அஞ்சாத. வஞ்சகர் - சமணர்.

பா-ம்—1. அஞ்ச.

### சுந்தரர்

அரவக லல்கு லார்பா லாசைநீத் தவர்க்கே வீடு
தருவமென் றளவில் வேதஞ் சாற்றிய தலைவன் றன்னைப்
பரவைதன் புலவி தீர்ப்பான் கழுதுகண் படுக்கும் பானாள்
இரவினிற் றூது கொண்டோ னிணையடி முடிமேல் வைப்பாம். 21

### மாணிக்கவாசகர்

எழுதரு மறைக டேறா விறைவனை யெல்விற் கங்குற்
பொழுதறு காலத் தென்றும் பூசனை விடாது செய்து
தொழுதகை [1]தலைமீ தேறத் துளும்புகண் ணீருண் மூழ்கி
அழுதடி யடைந்த வன்ப னடியவர்க் கடிமை செய்வாம். 22

### சண்டேசுரரும் - மற்றை அடியார்களும்

தந்தைதா ளொடும்பிறவித் தாளெறிந்து நிருத்தரிரு தாளைச் சேர்ந்த, மைந்தர்தாள் வேதநெறி சைவநெறி பத்திநெறி [2]வழாது வாய்மெய், சிந்தைதான ரனடிக்கே செலுத்தினராய்ச் சிவாநுபவச் செல்வ ராகிப், பந்தமாந் தொடக்கறுத்த திருத் தொண்டர் தாள்பரவிப் பணிதல் செய்வாம். 23

---

## பாயிரம்

### முதனூல்

அண்ணல்பாற் றெளிந்த நந்தி யடிகள்பாற் சனற்கு மாரன்
உண்ணிறை யன்பி னுய்ந்து வியாதனுக் குணர்த்த வந்தப்
புண்ணிய முனிவன் சூதற் கோதிய புராண மூவா
றெண்ணிய விவற்றுட் காந்தத் தீசசங் கிதையின் மாதோ. 24

---

21. புலவி - ஊடல். கழுது - பேய். பானாள் இரவு - நள்ளிரவு.
22. எல்வில் - பகற் பொழுதில் ; இல் : சாரியை. அறுகாலம் - விடியல், உச்சி, எற்பாடு, மாலை, யாமம், வைகறை என்ற அறுவகைப் பொழுது. எல்விற் கங்குற்பொழுதறு காலம் - சகல கேவலங்கள் அற்ற நின்மல துரியாதீதம் எனினுமாம். பூசனை - ஞானபூசை.
23. பிறவித்தாள் - பிறவி வேர். மைந்தர் - சண்டேசுரர்.
24. காந்தம் - காந்த புராணம்.
பா-ம்—1. தலைமே லேறத். 2. வளர்ந்து.

### நூல் செய்தற்குக் காரணம்

அறைந்திடப் பட்ட தாகு மாலவாய்ப் புகழ்மை யந்தச்
சிறந்திடும் வடநூ றன்னைத் தென்சொலாற் செய்தி யென்றிங்
குறைந்திடும் பெரியோர் கூறக் கடைப்பிடித் துறுதி யிந்தப்
பிறந்திடும் பிறப்பி லெய்தப் பெறுதுமென் றுள்ளந் தேறு. 25

### நூல் செய்த முறை

திருநகர் தீர்த்த மூர்த்திச் சிறப்புமூன் றந்த மூர்த்தி, அருள் விளை யாட லெட்டெட் டருச்சனை வினையொன் றாக, வரன்முறை யறுபத் தெட்டா மற்றவை படலமாக, விரிமுறை விருத்தச் செய்யுள் வகைமையால் விளம்ப லுற்றேன். 26

---

## அவையடக்கம்



நாயகன் கவிக்குங் குற்ற நாட்டிய கழக மாந்தர்
மேயவத் தலத்தி னோர்க்கென் [1]வெள்ளறி வுரையிற் குற்றம்
ஆயுமா றரிதன் றேனு நீர்பிரித் தன்ன முண்ணுந்
தூயதீம் பால்போற் கொள்க சுந்தரன் சரிதந் தன்னை. 27

கவைக்[2]கொ ழுந்தழ லுச்சுவை கண்டவூ னிமையோர்
சுவைக்க வின்னமிழ் தாயின துளக்கமில் சான்றோர்
அவைக்க ளம்புகுந் தினியவா யாலவா யுடையார்
செவிக்க ளம்புகுந் தேறுவ சிறியனேன் பனுவல். 28

பாய வாரியுண் டுவர்கெடுத் துலகெலாம் பருகத்
தூய வாக்கிய காரெனச் சொற்பொரு டெளிந்தோர்

---

25. புகழ்மை - பெருமை. உறுதி - பிறவிப்பயன்

26 எட்டெட்டு - அறுபத்துநான்கு. வரன்முறை - முறைப்படி.

27. கழக மாந்தர் - கடைச்சங்கப் புலவர். வெள்ளறிவு - மந்த அறிவு.

28. கவை - பிளவுபட்ட. துளக்கம் இல் - ஐயம், திரிபு முதலி யன இல்லாத.

29. வாரி - கடல் நீர். துவர் - குற்றம்,

பா-ம்-1. வெள்ளறிவுரை சொற்குற்றம். 2. கொழுந் தெழுநாச்.

ஆய கேள்வியர் துகளறுத் தாலவா யுடைய
நாய னார்க்கினி தாக்குப நலமிலேன் புன்சொல். **29**

அல்லை யீதல்லை யீதென மறைகளு மன்மைச்
சொல்லி னாற்றுதித் திளைக்குமிச் சுந்தர னாடற்
கெல்லை யாகுமோ வென்னுரை யென்செய்கோ விதனைச்
சொல்லு வேனெனு மாசையென் சொல்வழி கேளா. **30**

### அரங்கேற்றிடமும் ஆக்கியோன் பெயரும்

அறுகாற்பீ டத்துயர்மா லாழிகடைந் தமுதையரங் கேற்று மாபோல், அறுகாற்பே டிசைபாடுங் கூடன்மான் மியத்தையருந் தமிழாற் பாடி, அறுகாற்பீ டுயர்முடியார் சொக்கேசர் சந்நிதியி [1] லமரர் சூழும், அறுகாற்பீ டத்திருந்து பரஞ்சோதி முனிவனரங் கேற்றினனே. **31**

ஆகச் செய்யுள்—31

---

30. அன்மைச் சொல் - எதிர்மறைச்சொல்.

31. அறுகால் பீடம் - ஆதிசேடனாகிய பீடம்; மதுரை ஆலயத்துள்ள ஓர் இடம். அறுகால் பீடு, (அறுகு+ஆல்) ஆல்: அசை அறுகு - அறுகம்புல். அமரர் - புலவர்.

பா-ம்—1. அமரர் சூழ.

# திருநாட்டுச் சிறப்பு

கறைநி றுத்திய கந்தர சுந்தரக் கடவுள்
உறைநி றுத்திய வாளினாற் பகையிரு ளொதுக்கி
மறைநி றுத்திய வழியினால் வழுதியாய்ச் செங்கோன்
முறைநி றுத்திய பாண்டிநாட் டணியது மொழிவாம். 1

தெய்வ நாயக னீறணி மேனிபோற் சென்று
பௌவ மேய்ந்துமை மேனிபோற் பசந்து பல்லுயிர்க்கும்
எவ்வ மாற்றுவான் சுரந்திடு மின்னரு ளென்னக்
கௌவை நீர்சுரந் தெழுந்தன கனைகுரல் மேகம். 2

இடித்து வாய்திறந் தொல்லென வெல்லொளி மழுங்கத்
தடித்து வாள்புடை விதிர்த்துநின் றிந்திர சாபம்
பிடித்து நீளம்பு கோடைமேற் பெய்துவெம் பெரும்போர்
முடித்து நாமென வருதல்போல் மொய்த்தன கொண்மூ. 3

முனித னீள்வரை யுச்சிமேன் முழங்கிவா னிவந்து
தனித நீர்மழை பொழிவன தடஞ்சிலை யிராமன்
கனித னீர்மையா லாலவாய்க் கண்ணுதன் முடிமேற்
புனித நீர்த்திரு மஞ்சன மாட்டுவான் போலும். 4

சுந்த ரன்றிரு முடிமிசைத் தூயநீ ராட்டும்
இந்தி ரன்றனை யொத்தகா ரெழிலிதென் மலைமேல்
வந்து பெய்வவத் தனிமுதன் மௌலிமேல் வலாரி
சிந்து கின்றகைப் போதெனப் பன்மணி தெறிப்ப. 5

உடுத்த தெண்கடன் மேகலை யுடையபார் மகடன்
இடத்து தித்தபல் லுயிர்க்கெலா மிரங்கித்தன் கொங்கைத்

---

1. கறை - விடம். கந்தரம் - கழுத்து

2. பௌவம் - கடல். எவ்வம் - துன்பம். கௌவை - ஒலி.

3. எல் - சூரியன். தடித்து - மின்னி. அம்பு - நீர்; பாணம். கொண்மூ - மேகம்.

4. முனி - அகத்தியர். தனிதம் — முழக்கம்; மேகம்

5 எழிலி — மேகம். வலாரி - இந்திரன்.

தடத்து நின்றிழி பாலெனத் தடவரை முகடு
தொடுத்து வீழ்வன விழுமெனத் தூங்குவெள் ளருவி. 6

கருநிற மேக மென்னுங் கச்சணி சிகரக் கொங்கை
அருவியாந் தீம்பால் சோர வகன்சுனை யென்னுங் கொப்பூழ்ப்
பொருவில்வே யென்னு மென்றோட் பொதியமாஞ் சைலப் பாவை
பெருகுதண் பொருநை யென்னும் பெண்மகப் பெற்ற ளன்றே. 7

கல்லெனக் கரைந்து வீழுங் கடும்புனற் குழவி கானத், தொல்லெனத் தவழ்ந்து தீம்பா லுண்டொரீஇத் திண்டோண் மள்ளர், செல்லெனத் தெழிக்கும் பம்பைத் தீங்குரல் செவிவாய்த் தேக்கி, மெல்லெனக் காவிற் போகிப் பணைதொறும் விளையாட் டெய்தி. 8

அரம்பைமென் குறங்கா மாவி னவிர்தளிர் நிறமாத் தெங்கின்
குரும்பை[1]வெம் முலையா வஞ்சிக் கொடியிறு நுசுப்பாக் கூந்தல்
சுரும்பவிழ் குழலாக் கஞ்சஞ் சுடர்மதி முகமாக் கொண்டு
நிரம்பிநீள் கைதை வேலி நெய்தல்சூழ் காவில் வைகி. 9

பன்மலர் மாலை வேய்ந்து பானுரைப் போர்வை போர்த்துத்
தென்மலைத் தேய்ந்த சாந்த மான்மதச் சேறு பூசிப்
பொன்மணி யாரந் தாங்கிப் பொருநையாங் கன்னி முந்நீர்த்
தன்மகிழ் கிழவ னாகந் தழீஇக்கொடு கலந்த தன்றே. 10

வல்லைதா யிருபால் வைகுஞ் சிவாலய மருங்கு மீண்டி
முல்லையா னைந்துந் தேனுந் திரைக்கையான் முகந்து வீசி
நல்லமான் மதஞ்சாந் தப்பி நறுவிரை மலர்தூய் நீத்தஞ்
செல்லலாற் பூசைத் தொண்டின் செயல்வினை மாக்கள் போலும்.

---

6 மேகலை – ஆடை. தூங்கு – ஒழுகுகின்ற

7 சைலம் – மலை. பொருநை – தாமிரபரணி.

8. செல் – மேகம். கால் – கால்வாய். பணை – வயல்; மகளிர் விளையாட்டிடம்.

9. அரம்பை – வாழை. குறங்கு – தொடை. கைதை – தாழை நெய்தல் – கடலும் கடல் சார்ந்த இடமும்.

10 மான் மதம் – கத்தூரி. முந்நீர் கடல். ஆகம் - மார்பு.

11. முல்லை - காடும் காடு சார்ந்த இடமும். ஆனைந்து - பால், தயிர், நெய், கோமயம், கோசலம் என்ற ஐந்து : பஞ்சகவ்வியம்.

பா–ம்—1. மென்முலையா.

அரும்பவி ழனங்க வாளி யலைதர வாகம் பொன்போர்த்
திரங்கிவா லன்ன மேந்தி யிருகையுஞ் சங்கஞ் சிந்தி
மருங்குசூழ் காஞ்சி தள்ளி வரம்பிற வொழுகும் வாரி
பரம்பரற் கையம் பெய்யும் பார்ப்பன மகளிர் போலும். 12

வரைபடு மணியும் பொன்னும் வைரமுங் குழையும் பூட்டி
அரைபடு மகிலுஞ் சாந்து மப்பியின் னமுத மூட்டிக்
கரைபடு மருதமென்னுங் கன்னியைப் பருவ நோக்கித்
திரைபடு பொருநை நீத்தஞ் செவிலிபோல் வளர்க்கு மாதோ. 13

மறைமுதற் கலைக ளெல்லா மணிமிடற் றவனே யெங்கும்
நிறைபர மென்றும் பூதி சாதன நெறிவீ டென்றும்
அறைகுவ தறிந்துந் தேறு ரறிவெனக் கலங்கி யந்த
முறையின்வி டுணர்ந்தோர் போலத் தெளிந்தது மூரி வெள்ளம். 14

மறைவழி கிளைத்த வெண்ணெண் கலைகள்போல் வருநீர் வெள்ளந்
துறைவழி யொழுகும் பல்கால் சோலைதண் பழனஞ் செய்தேன்
உறைவழி யோடையெங்கு மோடிமன் றுடையார்க் கன்பர்
நிறைவழி யாத வுள்ளத் தன்புபோ னிரம்பிற் றன்றே. 15

இழிந்த மாந்தர்கைப் பொருள்களு மிகபரத் தாசை
கழிந்த யோகியர் கைப்படிற் றூயவாய்க் களங்கம்
ஒழிந்த வாறுபோ லுவரியுண் டுவர்கெடுத் தெழிலி
பொழிந்த நீரமு தாயின [1] புவிக்கும்வா னவர்க்கும். 16

ஈறி லாதவ ளொருத்தியே யைந்தொழி லியற்ற
வேறு வேறுபேர் பெற்றென வேலைநீ ரொன்றே

---

12 காஞ்சி - காஞ்சி மரம்; எழுகோவை மணி. பார்ப்பன மகளிர் - தாருகாவனத்து முனி பத்தினிகள்.

13. குழை - குண்டலம்; தளிர். மருதம் வயலும் வயல் சார்ந்த இடமும். அமுதம் - நீர்; பால். செவிலி - வளர்க்கும் தாய்

14. பூதிசாதன நெறி - சைவ சமயம். பூதி - விபூதி. சாதனம் - உருத்திராக்கம், பஞ்சாக்கரம் என்பன. மூரி - பெரிய

15. பழனம் - வயல். உறை - துளி.

16. இகம் - இவ்வுலக இன்பம். பரம் - சொர்க்க இன்பம். உவரி - கடல்.

பா-ம்—1. வானகர்க்கும்.

ஆறு கால்குளங் கூவல்குண் டகழ்கிடங் கெனப்பேர்
மாறி யீறில்வான் பயிரெலாம் வளர்ப்பது மாதோ. 17

களமர்கள் பொன்னேர் பூட்டித் தாயர்வாய்க் கனிந்த பாடற்
குளமகிழ் சிறுரி னேறு மொருத்தலு முவகை தூங்க
வளமலி மருதம் பாடி மனவலி கடந்தோர் வென்ற
அளமரு பொறிபோ லேவ லாற்றவாள் வினையின் மூண்டார். 18

பலநிற மணிகோத் தென்னப் பன்னிற வேறு பூட்டி
அலமுக விரும்பு தேய வாள்வினைக் கருங்கான் மள்ளர்
நிலமக ளுடலங் கீண்ட சால்வழி நிமிர்ந்த சோரிச்
சலமென நிவந்த செங்கேழ்த் தழன்மணி யிமைக்கு மன்னோ. 19

ஊறுசெய் படைவாய் தேய வுழுநரு நீர்கால் யாத்துச்
சேருசெய் குநருந் தெய்வந் தொழுதுதீஞ் செந்நெல் வீசி
நாறுசெய் குநரும் பேர்த்து நடவுசெய் குநருந் தெவ்வின்
மாறுசெய் களைகட் டோம்பி வளம்படுக் குநரு மானார். 20

பழிபடு [1]நறவந் தன்னைக் கடைசியர் பருகிச் செவ்வாய்
மொழிதடு மாற வேர்வை முகத்தெழ முறுவ ரோன்ற
விழிசிவந் துழலக் கூந்தன் மென்றுகில் சோர வுள்ளக்
கழிபெருங் களிப்பு நல்கிக் [2]கலந்தவ ரொத்த தன்றே. 21

பட்பகை யாகுந் தீஞ்சொற் கடைசியர் பவளச் செவ்வாய்க்
குட்பகை யாம்ப லென்று மொண்ணறுங் குவளை நீலங்
கட்பகை யாகு மென்றுங் கமல[3]நன் முகத்துக் கென்றுந்
திட்பகை யாகுமென்றுஞ் செறுதல்போற் களைதல் செய்வார். 22

---

17. வேறு வேறு பேர் - பஞ்ச சத்தி; பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி. கூவல் - கிணறு.

18. களமர்கள் - உழவர்கள். பொன்னேர் - தலை ஏர். ஒருத்தல் - எருமைக்கடா. அளமரு - அலமரு - சுழலுகின்ற.

19. அலம் - கலப்பை. சால் - உழுபடைச்சால். சோரி-இரத்தம். தழல் மணி - மாணிக்கம்.

20. நாறு - நாற்று. தெவ் - பகைவர். மாறு - பகை.

21. நறவம் - கள், தேன்.

22. பட்பகை - பண்ணுக்குப் பகை. செறுத்தல் - அழித்தல்.

பா-ம்—1. நறவந்தானே. 2. கலந்தவ ரொத்தார். 3. மென் முகத்துக்.

கடைசியர் முகமுங் காலுங் கைகளுங் கமல மென்னார்
படைவிழி குவளையென்னார் பவளவாய் குமுத மென்னார்
அடையவுங் களைந்தார் மள்ளர் பகைஞரா யடுத்த வெல்லை
உடையவ னாணை யாற்றா லொறுப்பவர்க் குறவுண் டாமோ. 23

புரையற வுணர்ந்தோர் நூலின் பொருளினுள் ளடங்கி யந்நூல்
வரையறை கருத்து மான வளர்கருப் புறம்பு தோன்றிக்
கரையமை கல்வி சாலாக் கவிஞர்போ லிறுமாந் தந்நூல்
உரையென விரிந்து கற்பின் மகளிர்போ லொசிந்த தன்றே. 24

அன்புறு பத்தி வித்தி யார்வநீர் பாய்ச்சுந் தொண்டர்க்
கின்புரு வான வீச னின்னருள் விளையு மாபோல்
வன்புறு கருங்கான் மள்ளர் வைகலுஞ் செவ்வி நோக்கி
நன்புல முயன்று காக்க விளைந்தன நறுந்தண் சாலி. 25

அகனில வேறு பாட்டி னியல்செவ்வி யறிந்து மள்ளர்
தகவினை முயற்சி செய்யக் காமநூல் சாற்று நான்கு
வகைநலார் பண்பு செவ்வி யறிந்துசேர் மைந்தர்க் கின்பம்
மிகவிளை போகம் போன்று விளைந்தன பைங்கூ ழெல்லாம். 26

கொடும்பிறை வடிவிற் செய்த கூனிரும் பங்கை வாங்கி
முடங்குகால் வரிவண் டார்ப்ப முள்ளரைக் கமல நீலம்
அடங்கவெண் சாலி செந்நெல் வேறுவே றரிந்தீ டாக்கி
நெடுங்களத் தம்பொற் குன்ற நிரையெனப் பெரும்போர் செய்தார். 27

கற்றவை களைந்து தூற்றிக் கூப்பியூர்க் காணித் தெய்வம்
அற்றவர்க் கற்ற வாறீந் [1]தளவைகண் டாறி லொன்று
கொற்றவர் கடமைகொள்ளப் பண்டியிற் கொடுபோய்த் தென்னா
டுற்றவர் சுற்றந் தெய்வம் விருந்தினர்க் கூட்டி யுண்பார். 28

---

23 படை - வேற்படை. அடையவும் - முழுமையும்.
24. புரை - குற்றம். மான : உவமவுருபு. சாலா - நிறையாத.
25 வித்தி - விதைத்து. செவ்வி - பருவம். சாலி - நெற்பயிர்.
26. நில வேறுபாடு - செவ்வல், கரிசல் முதலிய நில வேறுபாடுகள். நான்கு வகை நலார் - பதுமினி, சித்தினி, சங்கினி, அத்தினி என்னும் நால்வகைப் பெண்கள். பைங்கூழ் - பயிர்
27. அங்கை - அகங்கை. அரை - நாளம். ஈடு - கற்றை.
28. ஊர்க்காணித் தெய்வம் - கிராம தேவதைகள். பண்டி - வண்டி. தென்னாடுற்றவர் - பிதிரர். விருந்தினர் - புதுமையாக வந்தவர்.
பா-ம்—1. அளவைகொண்டு.

சாறடு கட்டி யெள்ளுச் சாமைகொள் ளிறுங்கு தோரை
ஆறிடு மதமால் யானைப் பழுக்குலை யவரை ஏனல்
வேறுபல் பயறோ டின்ன புன்னில விளைவு மற்றும்
ஏறொடு பண்டி யேற்றி யிருநிலங் கிழிய வுய்ப்பார். 29

துறவின ரீச னேசத் தொண்டினர் பசிக்கு நல்லூண்
டிறவினைப் பிணிக்குத் தீர்க்கு மருந்துடற் பனிப்புக் காடை
உறைவிடம் பிறிது நல்கி யவரவ ரொழுகிச் செய்யும்
அறவினை யிடுக்க ணீக்கி யருங்கதி யுய்க்க வல்லார். 30

நிச்சலு மீச னன்பர் நெறிப்படிற் சிரூர்மேல் வைத்த
பொச்சமி லன்பு மன்னர் புதல்வரைக் கண்டா லன்ன
அச்சமுங் கொண்டு கூசி யடிபணிந் தினிய கூறி
இச்சையா றொழுகி யுள்ளக் குறிப்பறிந் தேவல் செய்வார். 31

நறைபடு கனிதேன் பெய்த பாலொடு நறுநெய் வெள்ளம்
நிறைபடு செம்பொன் வண்ணப் புழுக்கலா னிமிர்ந்த சோறு
குறைவற வுண்டு வேண்டும் பொருள்களுங் கொண்மி னென்ன
மறைமுத லடியார் தம்மை வழிமறித் தருத்து வார்கள். 32

பின்னெவ னுரைப்ப தந்தப் பெருந்தமிழ் நாடாங் கன்னி
தன்னிடை யூர்க ளென்னு மவயவந் தாங்கச் செய்த
பொன்னியற் கலனே கோயின் மடமறப் புறநீர்ச் சாலை
இன்னமு தருத்து சாலை யெனவுருத் திரிந்த தம்மா. 33

திணைமயக்கம்

இன்ற டம்புனல் வேலிசூ ழிந்நில வரைப்பிற்
குன்ற முல்லைதண் பணைநெய்தல் குலத்திணை நான்கும்

---

29. இருங்கு - சோளம். தோரை - மலை நெல். யானைப் பழுக்குலை - யானையின் விலாவெலும்புபோலும் குலைகளையுடைய. ஏனல் - தினை.

30. பனிப்பு - உடல் நடுக்கம்

31. நிச்சலும் - நித்தலும்; நாடோறும். பொச்சம் - பொய்.

32. செம்பொன் வண்ணப் புழுக்கல் - பருப்புச் சோறு. வழி மறித்து - வற்புறுத்தி.

33. பின் எவன் - வேறு யாது. அறப்புறம் - அறத்திற்கு விட்ட இறையிலி நிலம்.

மன்ற வுள்ளமற் றவைசிறக மயங்கிய மரபின்
ஒன்றொ டொன்றுபோய் மயங்கிய திணைவகை யுரைப்பாம். 34

கொல்லை யானிரை மேய்ப்பவர் கோழிணர்க் குருந்தின்
ஒல்லை தா[4]யதிற் படர்கறிக் கருந்துண ருகுப்ப
முல்லை சோறெனத் தேன்விராய் முத்திழை சிற்றில்
எல்லை யாயமோ டாடுப வெயின்சிறு மகளிர். 35

கன்றொ டுங்களி வண்டுவாய் நக்கவீர்ங் கரும்பு
மென்று பொன்சொரி வேங்கைவா யுறங்குவ மேதி
குன்றி ளந்தினை மேய்ந்துபூங் கொழுநிழன் மருதஞ்
சென்று றங்குவ சேவக மெனமுறச் செவிமா. 36

எற்று தெண்டிரை யெறிவளை யெயிற்றிய ரிழைத்த
சிற்றில் வாய்நுழைந் தழிப்பவச் சிறுமியர் வெகுண்டு
பற்றி லாரெனச் சிதறிய மனவணி பரதர்
முற்றி லாமுலைச் சிறுமியர் முத்தொடுங் கோப்ப. 37

முல்லை வண்டுபோய் முல்லையாழ் முளரிவாய் மருதம்
வல்ல வண்டினைப் பயிற்றிப்பின் பயில்வன மருதங்
கொல்லை யான்மடி யெறிந்திளங் குளவியென் றிரங்கி
ஒல்லை யூற்றுபால் வெள்ளத்து ளுகள்வன வாளை. 38

கரும்பொற் கோட்டிளம் புன்னைவாய்க் கள்ளுண்டு காளைச்
சுரும்பு செவ்வழிப் பாண்செயக் கொன்றை பொன்சொரிவ
அருந்த டங்கடல் வளையெடுத் தாழியான் கையில்
இருந்த சங்கென விறைகொளப் பூவைமே லெறிவ. 39

---

34. குன்றம் - குறிஞ்சி; மலையும் மலை சார்ந்த இடமும். குலத் திணை - சிறந்த திணைகள். மயங்கிய - ஒன்றோடொன்று கலந்த. வகை - பேதம்

35. கொல்லை - முல்லை நிலம். கறி - மிளகு எயின் - வேடர்

36 மேதி - எருமைகள். சேவகம் - யானை துயிலிடம். முறச் செவிமா - யானை.

37. மனவு - அக்குமணி.

38. முளரி - தாமரை. மருதம் மருதப்பண். குழவி - ஆண் கன்று.

39. கரும் பொன் - இரும்பு. ஆழியான் - திருமால். பூவை - காயாஞ் செடி

பா ம் — 1 அகிற் படர்.

கழிந்த தெங்கிளெண் பழம்பரீஇ முட்பலாக் கனிகீண்
டழிந்த தேனுவர்க் கேணிபாய்ந் தகற்றுவ வுவரை
வழிந்த தேன்மடற் கேதகை மலர்நிழல் குருகென்
றெழிந்த தாமரைப் போதுபுக் கொளிப்பன கெண்டை. 40

ஆறு சூழ்கழிப் புலால்பொரு தசைந்துகூன் கைதை
சோறு கால்வன வாம்பல்வாய் திறப்பன துணிந்து
கூறு வாரெனக் குவளைகண் காட்டிடக் கூடித்
தூறு வாரெனச் சிரித்தலர் தூற்றுவ முல்லை. 41

துள்ளு சேல்விழி நுளைச்சியர் சுறவொடு மருந்தக்
கள்ளு மாறவுங் கூனலங் காய்தினை யவரை
கொள்ளு மாறவுங் கிழங்குதேன் கொழுஞ்சுவைக் கன்னல்
எள்ளு மாறவு மளப்பன விடைக்கிடை முத்தம். 42

அவமி கும்புலப் பகைகடந் துயிர்க்கெலா மன்பாம்
நலமி குங்குடை நிழற்றிமெய்ச் செய்யகோ னடாத்திச்
சிவமி கும்பர ஞானமெய்த் திருவொடும் பொலிந்து
தவமி ருந்தர சாள்வது தண்டமிழ்ப் பொதியம். 43

வான யாறுதோய்ந் துயரிய மலயமே முக்கண்
ஞான நாயக னம்மலை போர்த்தகார் நால்வாய்
யானை யீருரி யம்மழை யசும்பதன் புண்ணீர்
கூனல் வான்சிலை குருதிதோய் கோடுபோன் றன்றே. 44

சுனைய கன்கரைச் சூழல்வாய்ச் சுரும்புசூழ் கிடப்ப
நனைய விழ்ந்தசெங் காந்தண்மே னாகிள வேங்கைச்

---

40. பரீஇ - பரித்தலால். கேதகை - தாழை. குருகு - கொக்கு.

41. சோறு - மகரந்தம். தூறுவார் - நகைத்துத் தூற்றுவார். அலர் - புட்பம் ; பழி.

42. கூனலங்காய் - புளியங்காய். கன்னல் - கரும்பு.

43. அவம் - கேடு. புலம் - சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐம்புலன். நவம் - புதுமை. சிவமிகும் பர ஞானம் - சிவ ஞானம். மெய்த்திரு - அழியாச் செல்வம். தவம் - தவன் அகத்தியர்.

44. நால்வாய் - தொங்குகின்ற வாய். உரி - தோல். அசும்பு - நீர்த்துளி. கூனல் வான் சிலை - இந்திர வில்.

45. சூழல் - இடம். நனை - அரும்பு. நாகு இளம் - மிக இளமை. வீ - பூக்கள்.

சினைய விழ்ந்தவீ கிடப்பபொன் றேய்கலத் தெண்ணீர்
அனைய பொன்சுடு நெருப்பொடு கரியிருந் தனைய. 45

குண்டு நீர்ப்படு குவளைவாய்க் கொழுஞ்சினை மரவம்
வண்டு கூப்பிடச் செம்மறாய்ப் புதுமது வார்ப்ப
அண்டர் வாய்ப்பட மறைவழி பொரிசொரிந் தாநெய்
மொண்டு வாக்கிமுத் தீவினை முடிப்பவ ரனைய. 46

அகிலு மாரமுந் தழன்மடுத் தகழ்ந்தெறிந் தழல்கால்
துகிரு மாரமுந் தொட்டெறிந் தைவனந் தூவிப்
புகரின் மால்கரி மருப்பினால் வேலிகள் போக்கி
இகலில் வான்பயி ரோம்புவ வெயினர்தஞ் சீறூர். 47

அண்ட வாணருக் கின்னமு தருத்துவோர் வேள்விக்
குண்ட வாரழற் கொழும்புகை கோலுமக் குன்றிற்
புண்ட வாதவே லிறவுளர் புனத்தெரி மடுப்ப
உண்ட காரகிற் றூமமு மொக்கவே மயங்கும். 48

கருவி வான்சொரி மணிகளுங் கழைசொரி மணியும்
அருவி கான்றபன் மணிகளு மகன்றலை நாகத்
திரவி கான்றசெம் மணிகளும் புனங்கவ ரினமான்
குருவி வீழ்ந்திடக் கொடிச்சியர் கோத்தெறி கவண்கல். 49

மாய வன்வடி வாயது வையமா லுந்திச்
சேய பங்கய மாயது தென்னனா டலர்மேற்
போய மென்பொகுட் டாயது பொதியமப் பொகுட்டின்
மேய நான்முகன் அகத்தியன் முத்தமிழ் வேதம். 50

ஏக மாகிய மேருவும் பொதியமே யிரும்பொன்
ஆகு மேருவைச் சூழ்ந்தசாம் பூநத யாறும்

---

46. மரவம் - குங்கும மரம். செம்மல் - பழம்பூ. முத்தீ - ஆகவநீயம், தக்கிணாக்கினி, காருக பத்தியம்.

47. துகிர் - பவளம். ஆரம் - முத்து. ஐவனம் - மலை நெல். புகர் - குற்றம் சீறூர் - குறிஞ்சி நிலத்தூர்.

48. கோலும் - சூழும். இறவுளர் - குறவர்.

49. கருவிவான் - இடி, மின்னல் முதலிய தொகுதிகளுடன் கூடிய மேகம் கழை - மூங்கில் கான்ற - ஒதுக்கிய : உமிழப்பட்ட.

50. சேய - சிவந்த. பொகுட்டு - மொட்டு. முத்தமிழ் - இயல் இசை, நாடகம்.

நாக ராடுதண் பொருநையே நாவலா றுடுத்த
போக பூமியும் பொருநைசூழ் பூமியே போலும். 51

சிறந்த தண்டமி ழாலவாய் சிவனுல காஞற்
புறந்த யங்கிய நகரெலாம் புரந்தரன் பிரமன்
மறந்த யங்கிய நேமியோ ஞதிய வானோர்
அறந்த யங்கிய வுலகுரு வானதே யாகும். 52

வளர்ந்த நுண்ணிடை மடந்தையர் வனமுலை மெழுகிக்
களைந்த குங்குமக் கலவையுங் காசறைச் சாந்தும்
அளைந்த தெண்டிரைப் பொருநையோ வந்நதி ஞாங்கர்
விளைந்த செந்நெலும் கன்னலும் வீசுமவ் வாசம். 53

பொதியி லேவிளை கின்றன சந்தனம் பொதியின்
நதியி லேவிளை கின்றன முத்தமந் நதிசூழ்
பதியி லேவிளை கின்றன தருமமப் பதியோர்
மதியி லேவிளை கின்றன மறைமுதற் பத்தி. 54

கடுக்க வின்பெறு கண்டனுந் தென்றிசை நோக்கி
அடுக்க வந்துவந் தாடுவா னுடலி னிளைப்பு
விடுக்க வாரமென் காறிரு முகத்திடை வீசி
மடுக்க வுந்தமிழ் திருச்செவி மாந்தவு மன்றோ. 55

விடையு கைத்தவன் பாணினிக் கிலக்கண மேனாள்
வடமொ ழிக்குரைத் தாங்கியன் மலயமா முனிக்குத்
திடமு றுத்தியம் மொழிக்கெதி ராக்கிய தென்சொன்
மடம கட்கரங் கென்பது வழுதிநா டன்றோ. 56

---

51. சாம்பூநதம் - வெண்ணாவல். நாகர் - தேவர். போக பூமி - நல்வினைப் பேறு அனுபவிக்கும் பூமி; உத்தர குரு.

52. ஆலவாய் - மதுரை. புரந்தரன் - இந்திரன். நேமியோன் - சக்கரப்படையையுடைய திருமால்.

53. வனம் - அழகு. காசறை - கத்தூரி. ஞாங்கர் - பக்கம்.

54. பொதியின் நதி - தாமிரபரணி.

55. கவின் - அழகு. ஆரம் - சந்தனச் சோலை. மென்கால் - தென்றல்.

56. பாணினி - ஒரு முனிவன். மலைய மாமுனி - அகத்தியன். அரங்கு - நடன சாலை.

கண்ணு தற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து
பண்ணு றத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமி ழேனை
மண்ணி டைச்சில விலக்கண வரம்பிலா மொழிபோல்
[1] எண்ணி டைப்படக் கிடந்ததா வெண்ணவும் படுமோ. 57

தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்தது முதலை
உண்ட பாலனை யழைத்தது மெலும்புபெண் ணுருவாக்
கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித்
தண்ட மிழ்ச்சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர். 58

வெம்மை யால்விளை வஃகினும் வேந்தர்கோல் கோடிச்
செம்மை மாறினும் வறுமைநோய் சிதைப்பினுஞ் சிவன்பாற்
பொய்ம்மை மாறிய பத்தியும் [2]பொலிவுங்குன் றுவாய்த்
தம்மை மாறியும் புரிவது தருமமந் நாடு. 59

உலகம் யாவையு மீன்றவ ளும்பரு ளுயர்ந்த
திலக நாயகி பரஞ்சுடர் சேயென மூன்று
தலைவ ரான்முறை செய்தநா டிஃதன்றிச் சலதி
சுலவு பாரினுண் டாகுமோ துறக்கத்து மஃதே. 60

ஆகச் செய்யுள்—91

---

57. பசுமை - இங்குக் குளிர்ச்சி; இனிமை.

58. கன்னி - அழியாத. மறு புலம் - ஏனைய நாடு.

59. அஃகினும் - குன்றினும். பொலிவு - சிவவேடப் பொலிவு.

60. உம்பர் - இங்குப் பெண் பன்மை. திலகநாயகி - உமா தேவியார். சலதி சுலவு - கடலாற் சூழப்பட்ட.

பா-ம்—1. எண்ணிடப்பட, 2. பொலிவு.

# திருநகரச் சிறப்பு

மங்க லம்புனை பாண்டிநா டாகிய மகட்குச்
சங்க லம்புகை தோளிணை தடமுலை யாதி
அங்க மாம்புறந் தழுவிய நகரெலா மனைய
நங்கை மாமுக மாகிய நகர்வளம் பகர்வாம். **1**

கொங்கை யேபரங் குன்றமுங் கொடுங்குன்றுங் கொப்பூழ்
அங்க மேதிருச் சுழியலவ் வயிறுகுற் றாலஞ்
செங்கை யேடக மேனியே பூவணந் திரடோள்
பொங்கர் வேய்வனந் திருமுக மதுரையாம் புரமே. **2**

வடுவின் மாநில மடந்தைமார் பிடைக்கிடந் திமைக்கப்
படுவி லாரமே பாண்டிநா டாரமேற் பக்கத்
திடுவின் மாமணி யதன்புற நகரெலா மிவற்றுள்
நடுவி னாயக மாமணி மதுரைமா நகரம். **3**

திரும கட்கொரு தாமரைக் கூடமே திருமான்
மரும கட்குவெண் டாமரை மாடமே ஞானந்
தரும கட்கியோ கத்தனிப் பீடமே தரையாம்
பெரும கட்கணி திலகமே யானதிப் பேரூர். **4**

திக்கும் வானமும் புதையிரு டின்றுவெண் சோதி
கக்கு மாளிகை நிவப்புறு காட்சியந் நகருள்
மிக்க வாலிதழ்த் தாமரை வெண்மக ளிருக்கை
ஒக்கு மல்லது புகழ்மக ளிருக்கையு மொக்கும். **5**

---

1. மங்கலம் சகல நலன்கள். அலம்பு - ஒலிக்கின்ற.

2 கொடுங் குன்று - பிரான்மலை. ஏடகம் - ஒரு தலம். பொங்கர் - சோலை. வேய் வனம் திருநெல்வேலி

3 வில் ஆரம் - ஒளி பொருந்திய பதக்கம்.

4 கூடம் - கோயில். ஞானந் தருமகள் - ஞானமயமாகத் தன்னால் தரப்பட்ட மகள் ; உமாதேவி.

5 புகழ் மகள் - புகழ் மாது ; புகழை வெண்ணிறமாகக் கூறுதல் மரபு

### புடைநகர்

நெற்க ரும்பெனக் கரும்பெலா நெடுங்கமு கென்ன
வர்க்க வான்கமு கொலிகலித் தெங்கென வளர்ந்த
பொற்க வின்குலைத் தெங்குகார்ப் பந்தரைப் பொறுத்து
நிற்க நாட்டிய காலென நிவந்ததண் பனையே. 6

சிவந்த வாய்க்கருங் கயற்கணாள் வலாரியைச் சிறிக்
கவர்ந்த வான்றருக் குலங்களே கடிமணம் வீசி
உவந்து வேறுபல் பலங்களும் வேண்டினர்க் குதவி
நிவந்த காட்சியே போன்றது நிழன்மலர்ச் சோலை. 7

ஒல்லொ லிக்கதிர்ச் சாலிகள் புறந்தழீஇ யோங்க
மெல்லி லைப்பசுங் கொடியினால் விக்குறு பூகம்
அல்லெ னுங்களத் தண்ணற னணிவிழாத் தருப்பைப்
புல்லொ டும்பிணிப் புண்டபொற் கொடிமரம் போலும். 8

சீத வேரியுண் டளிமுரல் கமலமேற் செருந்தி
போத வேரியு மலர்களுஞ் சொரிவன புத்தேள்
வேத வேதியர் செங்கரம் விரித்துவாய் மனுக்கள்
ஓத வேமமு முதகமு முதவுவா ரனைய. 9

விரைசெய் பங்கயச் சேக்கைமேற் [1]பெடையொடு மேவி
அரச வன்னநன் மணஞ்செய வம்புயப் பொய்கை
திரைவ ளைக்கையா னுண்டுளி செறிந்தபா சடையாம்
மரக தக்கலத் தரளநீ ராஞ்சனம் வளைப்ப. 10

இரும்பி னன்னதோள் வினைஞரார்த் தெறிந்துவாய் மடுக்குங்
கரும்பு தின்றிடி யேற்றொலி கரட்டியின் சாறு

---

6 வர்க்கம் - வரிசை. ஒலி - தழைத்த. கலி - ஒலியையுடைய.

7. வான் தருக் குலங்கள் - சந்தனம், அரிச் சந்தனம், மந்தாரம், பாரிஜாதம், கற்பகம் என்னும் பஞ்ச தருக்கள்.

8. மெல்லிலை - வெற்றிலை. பூகம் - பாக்கு மரம். களம் - கழுத்து.

9. வேரி - தேன். செருந்தி - ஒரு மரம். புத்தேள் - தெய்வத் தன்மையையுடைய. மனுக்கள் - மந்திரங்கள். ஏமம் - பொன், உதகம் - நீர்.

10 சேக்கை - படுக்கை. பாசடை - பசிய இலை தரள நீராஞ்சனம் - முத்தாலாத்தி.

பாடம் — 1. பெடையொடும் விரவி.

கரும்பு சூழ்கிடந் தரற்றிடச் சொரிந்துவெஞ் சினத்தீ
அரும்பு கட்களி றொத்தன வாலையெந் திரங்கள். 11

பள்ள [1]நீர்குடைந் தஞ்சிறைப் பாசிபோர்த் தெழுந்த
வெள்ளை யன்னத்தைக் [2]காரன மெனப்பெடை விழ்ந்த
உள்ள மீட்டல மரச்சிற குதறியுள் ளன்பு
கொள்ள வாசையிற் றழீஇக்கொடு குடம்பைசென் றணையும். 12

இரவி யாழியொன் றுடையதே ரீர்த்தெழு மிமையாப்
புரவி நாசியிர்த் தயில்வன பொங்கர்வாய்த் தளிர்கள்
[3]கரவி லார்மகத் தெழுபுகை கற்பக நாட்டிற்
பரவி வாட்டுவ பனியெனப் பங்கயப் பொய்கை. 13

இடைநகர்

பிறங்கு மாலவா யகத்துளெம் பிரானரு ளால்வந்
தறங்கொ ளூர்த்தமா யெழுகட லமர்ந்தவா நோக்கிக்
கறங்கு தெண்டிரைப் பெரும்புறக் கடலும்வந் திவ்வூர்ப்
புறங்கி டந்ததே போன்றது புரிசைசூழ் கிடங்கு. 14

எறியும் வாளையு மடிக்கடி யெழுந்துடல் பரப்பிப்
பறியு மாமையும் வாளொடு கேடகம் பற்றிச்
செறியு நாண்மல ரகழியுஞ் சேண்டொடு புரிசைப்
பொறியு மே[4]யொன்றி யுடன்றுபோர் [5]புரிவன போலும். 15

கண்ணி லாதவெங் கூற்றெனக் கராங்கிடந் தலைப்ப
மண்ணி னூரெவ ரேனுமிம் மடுவிடை விழ்ந்தோர்
தெண்ணி லாமதி மிலைந்தவர்க் கொப்பெனச் சிலரை
எண்ணி னாரிரு ணரகநீத் தேறினு மேருர். 16

---

11. இரும்பின் அன்ன தோள் வினைஞர் - யானைப் பாகர்; ஏவல் செய்வோர். வாய் - யானையின் வாய்; ஆலையின் வாய்.

12. காரனம் - காகம். குடம்பை - கூடு.

13. ஆழி - உருளை. மகம் - வேள்வி.

14. எழு கடல் - உப்பு, பால், தயிர், நெய், கருப்பஞ் சாறு, கள், தன்னீர் என்ற எழு கடல். புரிசை - மதில்.

15. பறியும் - தவழும். சேண் - ஆகாயம்

16. கண் - தாட்சணியம். கராம் - முதலை.

பாடம்—1 நீர்க்குடைந். 2. காரண்டம். 3 கரவிலா. 4. யன்றி. 5. புரிவது.

குமிழ லர்ந்தசெந் தாமரைக் கொடிமுகிழ் கோங்கின்
உமிழ்த ரும்பர ஞானமுண் டுமிழ்ந்தவாய் வேதத்
தமிழ றிந்துவை திகமுடன் சைவமு நிறுத்தும்
அமிழ்த வெண்டிரை வைகையு மொருபுறத் தகழாம். 17

பிள்ளை யும்பெடை யன்னமுஞ் சேவலும் பிரியாக்
கள்ள முண்டகச் செவ்வியாற் கண்டவர் கண்ணும்
உள்ள முந்திரும் பாவகை சிறைப்படுத் தோங்கும்
புள்ள லம்புதண் கிடங்கிது புரிசையைப் புகல்வாம். 18

மாக முந்திய கடிமதின் மதுரைநா யகர்கைந்
நாக மென்பதே தேற்றமந் நகர்மதில் விழுங்கி
மேக மின்றசை கின்றதவ் வெஞ்சினப் பணிதன்
ஆக மொன்றுதோ லுரிபட நெளிவதே யாகும். 19

புரங்க டந்தபொற் குன்றுகோ புரமெனச் சுருதிச்
சிரங்க டந்தவர் தென்னரா யிருந்தனர் திருந்தார்
உரங்க டந்திட வேண்டினு முதவிசெய் தவரால்
வரங்க டந்திடப் பெறவெதிர் நிற்பது மானும். 20

சண்ட பானுவுந் திங்களுந் தடைபடத் திசையும்
அண்ட கோளமும் பரந்துநீண் டகன்றகோ புரங்கள்
விண்ட வாயிலால் வழங்குவ விடவரா வங்காந்
துண்ட போல்பவு முமிழ்வன போல்பவு முழலா. 21

மகர வேலையென் றியானைபோன் மழையருந் [1]தகழிச்
சிகர மாலைசூ ழும்மதி றிரைக்கரந் துழாவி
அகழ வோங்குநீர் வைகையா லல்லது வேற்றுப்
பகைவர் சேனையாற் பொரப்படும் பாலதோ வன்றே. 22

---

17. குமிழ் - குமிழம்பூ.
18. கள்ள - தேனையுடைய. முண்டகம் - தாமரை. தண் கிடங்கு - நீரரண்.
19. உந்திய - ஊடுருவிச் சென்ற. பணி - பாம்பு.
20. புரம் - திரிபுரம். திருந்தார் - பகைவர்.
21. சண்ட பானு - விரைந்து செல்லும் சூரியன். விண்ட - திறந்த.
22. சிகரமாலை - ஞாயிலாகிய அலை வரிசை.
பா-ம்-1 அகழி சிகர மாலை.

எல்லை தேர்வழித் தடைசெயு மிம்மதிற் புறஞ்சூழ்ந்
தொல்லை மேவலர் வளைந்துழி யுடன்றுபோ ராற்றி
வெல்ல மள்ளரும் வேண்டுமோ பொறிகளே வெல்ல
வல்ல வம்மதிற் பொறிசெயு மறஞ்சிறி துரைப்பாம். 23

### மதிற் பொறிகள்

மழுக்கள் வீசுவன நஞ்சு பூசுமுனை வாள்கள் வீசுவன முத்தலைக், கழுக்கள் வீசுவன குந்த நேமிபொரி கால வீசுவன காலனேர், எழுக்கள் வீசுவன கப்ப ணங்கள்விட மென்ன வீசுவன வன்னெடுங், கொழுக்கள் வீசுவன கற்க வண்கயிறு கோத்து வீசுவன வார்த்தரோ. 24

நஞ்சு பில்குதுளை வாளெ யிற்றரவு நாசியிர்த் தெறியு மலையரா, வெஞ்சி னங்கொண்முழை வாய்தி றந்துபொரு வாரை விக்கிட விழுங்குமால், குஞ்ச ரங்கொடிய முசலம் வீசியெதிர் குறுகு வார்தலைகள் சிதறுமால், அஞ்சு வெம்பொறி விசைப்பி னுங்கடுகி யடுபு லிப்பொறி யழுக்குமால். 25

எள்ளி யேறுநரை யிவுளி மார்பிற வெறிந்து குண்டகழி யிடைவிழத், தள்ளி மீளுமுருள் கல்லி ருப்புமுளை தந்து வீசியுடல் சிந்துமாற், கொள்ளி வாயலகை வாய்தி றந்துகனல் கொப்புளிப்பவுடல் குப்புறத், துள்ளி யாடுவன கைகள் கொட்டுவன தோள்பு டைப்பசில கூளியே. 26

துவக்கு சங்கிலி யெறிந்தி ழுக்குமரி தொடர்பி டித்தகை யறுக்கவிட், டுவக்கு மொன்னலர்க டலைக ளைத்திருகி யுடனெருக்குமர நிலைகளாற், கவைக்கொ ழுந்தழல் கொளுத்தி வீசுமெதிர் கல்லு ருட்டியடு மொல்லெனக், குவைக்க டுங்கன்மழை பெய்யு மட்டமணல் கொட்டு மேவலர்கள் கிட்டவே. 27

---

23. எல்லை தேர் வழி சூரியனது தேர் செல்லும் வழி; அளவு செய்யப் புகுந்த வழி. பொறி - யந்திரம்

24 கழு - சூலப்படை எழு - வளை தடி. கப்பணம் - இரும்பால் யானை நெருஞ்சிமுள் வடிவாகச் செய்யப்பட்டதொரு படைக்கலம்.

25. பில்கு - சிந்துகின்ற. முசலம் - உலக்கை.

26. இவுளி - குதிரை. தந்து - அரிகயிறு. அலகை - பேய். கூளி - பேய்.

27. துவக்கு - கட்டுகின்ற. அரிதொடர் - அரி சங்கிலி. தலைகளைத் திருகியுடன் நெருக்கும் மரம் - ஐயவித்துலாம்.

உருக்கி யியமமழை பெய்யு மாலய வுருக்கு வட்டுருகு செம்
பினீர், பெருக்கி வீசும்விடு படையெ லாமெதிர் பிடித்து விட்டவர்
தமைத்தெறச், செருக்கி வீசுநடை கற்ற மாடமொடு சென்று
சென்றுதுடி முரசொடும், பெருக்கி மீளுநடை வைய மேனடவி
யெய்யும் வாளிமழை பெய்யுமால். 28

வெறிகொ ளைம்பொறியை வெல்லினும் பொருது வெல்லு
தற்கரிய காலனை, முறிய வெல்லினும் வெலற்கருங் கொடிய
முரணவா யமர ரரணெலாம், அறிவி னுனிறுவு கம்மி யன்செயவு
மரியவா யவனர் புரியுமிப், பொறிகள் செய்யும்வினை யின்ன
பொன்னணி புரத்து வீதிக ளுரைத்துமால். 29

அகநகர்

கழையுந் தாமமுஞ் சுண்ணமு மணிநிழற் கலனுங்
குழையுந் தூபமுந் தீபமுங் கும்பமுந் தாங்கித்
தழையுங் காதலர் வரவுபார்த் தன்பகந் ததும்பி
விழையுங் கற்பினு ரொத்தன விழாவரு வீதி. 30

ஆல நின்றமா மணிமிடற் றண்ணலா னந்தக்
கோல நின்றசேவடிநிழல் குறுகினர் குணம்போல்
வேலை நின்றெழு மதியெதிர் வெண்ணிலாத் தெண்ணீர்
கால நின்றன சந்திர காந்தமா ளிகையே. 31

குன்ற நேர்பளிக் குபரிகை நிரைதொறுங் குழுமி
நின்ற பல்சரா சரமுமந் நீழல்வாய் வெள்ளி
மன்ற கம்பொலிந் தாடிய மலரடி நிழல்புக்
கொன்றி யொன்றறக் கலந்தபல் லுயிர்நிலை யனைய. 32

கறித்த ருந்துபுற் குவைகழீஇக் காற்றொடர் பரியத்
தெறித்த கன்றயன் மரகதச் சித்திரத் தெற்றி

---

28 நடை கற்ற மாடம் - வேண்டுமிடங்களுக்குத் தானே செல்லு மாடம். நடை வையம் - தானே ஓடும் தேர்.

29. முரணவாய் - வலிமையுடையனவாய். கம்மியன் - தேவ தச்சன். யவனர் - சிற்பர்; இரேக்கர்.

30. கழை - கரும்பு. குழை - மாந்தளிர்.

31. ஆலம் - விஷம் காந்தம் - காந்தக் கல்.

32 சராசரம் - அசையும் பொருளும் அசையாப் பொருளும். சர + அசரம் = சராசரம்.

எறித்த பைங்கதிர்க் கொழுந்தையு மெட்டிநா வளைத்துப்
பறித்து மென்றுவா யசைப்பன பசலையான் கன்று. 33

சிறுகு கண்ணவாய்க் காற்றெறி செவியவாய்ப் பாசம்
இறுகு காலவாய்க் கோட்டுமா னினம்வழங் காறும்
குறுகு நுண்மருங் கிறுத்தெழு கோட்டுமா னினம்போம்
மறுகும் வண்டுசூழ்ந் திறைகொள மான்மத நாறும். 34

மாட மாலையு மேடையு மாளிகை நிரையும்
ஆட ரங்கமு மன்றிவே ளன்னவர் முடியும்
ஏட விழ்ந்ததா ரகலமு மிணைத்தடந் தோளுஞ்
சூடு மாதரார் சீறடிப் பஞ்சுதோய் சுவடு. 35

மருமச் செம்புன லாறிட மாறடு கோட்டுப்
பருமச் செங்கண்மால் யானையின் பனைக்கையு மறைநூல்
அருமைச் செம்பொரு ளாய்ந்தவர்க் கரும்பொரு ளீவோர்
தருமச் செங்கையு மொழுகுவ தானநீ ராறு. 36

பரிய மாமணி பத்தியிற் பதித்திருட் படலம்
பொரிய வில்லிடக் குயிற்றிய பொன்னர மியமுந்
தெரிய மாமுர சொலிகெழு செம்பொனு டரங்கும்
அரிய மின்பயோ தரஞ்சுமந் தாடுவ கொடிகள். 37

வலம்ப டும்புயத் தாடவர் மார்பமேற் புலவிக்
கலம்ப டர்ந்தபூண் முலையினார் காலெடுத் தோச்சச்
சிலம்ப லம்பிசை மழுங்கமுன் னெழுமவர் தேந்தார்ப்
புலம்பு வண்டுநொந் தரற்றிய பொங்குபே ரொலியே. 38

தைய லார்மதி முகங்களுந் தடங்களுங் குழைய
மைய ளாவிய விழிகளு மாடமுங் கொடிய

---

33. கறித்து - கடித்து. காற்றொடர் - காலிற் கட்டிய கயிறு. தெற்றி - திண்ணை. பசலை - இளமை.

34. பாசம் - கட்டு; சங்கிலி. கோட்டுமான் - யானை. மான் மதம் - பெரிய மதம்; கத்தூரி.

36. மருமம் - மார்பு. செம்புனல் - இரத்தம். பருமம் - கவசம்.

37. அரமியம் - நிலாமுற்றம். மின் - மின்னல்; இடை. பயோ தரம் - மேகம்; கொங்கை. கொடிகள் - கொடிகள்; பெண்கள்.

38. வலம் - வெற்றி. புலவி - ஊடல்.

கையு நாண்மலர்ப் பொதும்பருங் கறங்கிசை வண்ட
ரெய்ய வோதியும் வீதியு நீளற னெறிய. 39

மலருந் திங்கடோய் மாடமுஞ் செய்வன மணங்கள்
அலருந் தண்டுறை யுங்குடைந் தாடுவ தும்பி
சுலவுஞ் சோலையு மாதருந் தூற்றுவ வலர்கள்
குலவும் பொய்கையு மனைகளுங் குறைபடா வன்னம். 40

ஊடி னூரெறி கலன்களு மம்மனை யுடன்பந்
தாடி னூர்பரி யாரமு மடியினூற் சிற்றில்
சாடி னூரொடு வெகுண்டுகண் டதும்பு[1]முத் துறைப்ப
வாடி னூர்பரி நித்தில மாலையுங் குப்பை. 41

ஐய வென்னுரை [2]வரம்பின வாகுமோ வடியர்
உய்ய மாமணி வரிவளை விறகுவிற் றுழன்றோன்
பொய்யில் வேதமுஞ் சுமந்திடப் பொருதகன் றரற்றுஞ்
செய்ய தாண்மலர் சுமந்திடத் தவஞ்செய்த தெருக்கள். 42

தோரண நிரைமென் காஞ்சி சூழ்நிலை நெடுந்தே ரல்குற்
பூரண கும்பக் கொங்கைப் பொருவில்மங் கலமா மங்கை
தாரணிந் தாரந் தூக்கிச் சந்தகி ரிமிர்ந்து பாலிச்
சீரணி முளைவெண் மூரல் செய்துவீற் றிருக்கு மன்றே. 43

திங்களைச் சுண்ணஞ் செய்து சேறுசெய் தாட்டி யன்ன
பொங்குவெண் மாடப் பந்தி புண்ணியம் பூசுந் தொண்டர்
தங்கண்மெய் வேடந் தன்னைத் தரித்தன சாலக் கண்கொண்
டங்கணன் விழவு காண்பா னடைந்தென மிடைந்த வன்றே. 44

---

39 குழைய - குண்டலங்களையுடையன; தழைகளையுடையன. கொடிய - கொடுமையினையுடையன; கொடிகளையுடையன வண்ட - வளையல்களையுடையன; வண்டுகளையுடையன அறல் - கருமணல். நெறிய - நெளிவையுடையன; தரும நெறியையுடையன

40. மணம் - வாசனை; விவாகம் தும்பி - வண்டு; யானை அலர் - மலர்; பழிச்சொல். அன்னம் - அன்னப் பறவை; சோறு.

41. பரி - அறுத்தெறிந்த.

42. ஐய - ஆச்சரியம்: வியப்பிடைச்சொல்.

43. காஞ்சி - எண் கோவை மணி. பாலி - முளைப்பாலிகை.

44 புண்ணியம் - விபூதி. சாலக்கண் - மிகவும் கண்கள்; பல கணிகள் அங்கணன் - சிவபெருமான்.

பா-ம்—1 முத்திறைப்ப. 2 வரம்பினதாகுமோ.

தேரொலி கலினப் பாய்மான் சிரிப்பொலி புரவி பூண்ட
தாரொலி கருவி யைந்துந் தழங்கொலி முழங்கு கைம்மான்
பேரொலி யெல்லா மொன்றிப் பெருகொலி யன்றி யென்றுங்
காரொலி செவிம டாது கடிமணி மாடக் கூடல். 45

**பரத்தையர் வீதி**

இழிபவ ருயர்ந்தோர் மூத்தோ ரிளையவர் கழியா நோயாற்
கழிபவர் யாவ ரேனுங் கண்வலைப் பட்டு நெஞ்சம்
அழிபவர் பொருள்கொண் டென்றுங் கெண்ணெய்போ லளந்து காட்டிப்
பழிபடு போகம் விற்பா ராவணப் பண்பு சொல்வாம். 46

மெய்படு மன்பி னார்போல் விரும்பினுக் கருத்துந் தங்கள்
பொய்படு மின்பம் யார்க்கும் புலப்படத் தேற்று வார்போல்
மைபடு கண்ணார் காமன் மறைப்பொருள் விளங்கத் தீட்டிக்
கைபடச் சுவராய்த் தோன்றச் சித்திரங் காணச் செய்வார். 47

திருவிற்கான் மணிப்பூ ணாகம் பலகைபாத் தெண்முத் தார
அருவிக்கால் வரைமென் கொங்கைச் சூதொட்டி யாடி வென்றும்
மருவிக்கா முகரைத் தங்கள் வடிக்கண்வே லான் மார்பந் தைப்பக்
கருவிச்சூ தாடி வென்றுங் கைப்பொருள் கவர்தல் செய்வார். 48

தண்பனி நீரிற் றோய்த்த மல்லிகைத் தாம நாற்றி
விண்படு மதியந் தீண்டும் வெண்ணிலா முற்றத் திட்ட
கண்படை யணைமேற் கொண்டு காமனுங் காமுற் றெய்தப்
பண்பல பாடி மைந்த ராவியைப் பரிசில் கொள்வார். 49

குரும்பைவெம் முலையிற் சிந்து சாந்தமுங் குழலிற் சிந்தும்
அரும்பவிழ் மாலைத் தாது மளிநுகர்ந் தெச்சி லாகிப்

---

45 கலினம் - கடிவாளம். கருவி ஐந்து - தோற்கருவி, துளைக் கருவி, நரப்புக் கருவி, கஞ்சக் கருவி, மிடற்றுக் கருவி கைம்மான் - யானை. கடி - விளக்கம்.

46. கழிபவர் - மெலிகின்றவர் ஆவணம் - வீதி.

47. காமன் மறைப் பொருள் - பற்குறி, நகக்குறி முதலிய கலவிக் கரணங்கள்

48. சூது - சூதாடுங் காய் ஒட்டி - பந்தயம் வைத்து. வடி - மாவடுவின் பிளவு

49 தாமம் - மாலை நாற்றி - தொங்கவிட்டு

50 வெம் - விருப்பம் அரமாதர் தெய்வப் பெண்கள்; அரம்பை முதலியோர். இயல் மணம் - இயற்கை வாசனை. சூழ்போய் - சூழ்ந்து

பொரும்பரிக் காலிற் றூளாய்ப் போயர மாதர் மெய்யும்
இருங்குழற் காடுஞ் சூழ்போ யியன்மணம் விழுங்கு மன்றே. 50

ஆலவா யுடையா னென்று மங்கயற் கண்ணி யென்றுஞ்
சோலைவாழ் குயிலி னல்லார் சொல்லியாங் கொருங்கு சொல்லும்
பாலவாங் கிளிகள் பூவை பன்முறை குரவ னோதும்
நூலவாய்ச் சந்தை கூட்டி நுவன்மறைச் சிறாரை யொத்த. 51

ஔவிய மதர்வேற் கண்ணா ரந்தளிர் விரன டாத்துந்
திவ்விய நரம்புஞ் செவ்வாய்த் தித்திக்கு மெழாலுந் தம்மிற்
கௌவிய நீர வாகிக் காளையர் செவிக்கா லோடி
வெவ்விய காமப் பைங்கூழ் விளைதர வளர்க்கு மன்றே. 52

கட்புல னாதி யைந்து [1]முவப்புறக் கனிந்த காமம்
விட்புலத் தவரே யன்றி வீடுபெற் றவரும் வீழ்ந்து
பெட்பமுற் றமுதுங் கைப்பப் பெருங்குலக் கற்பி னார்போல்
நட்பிடைப் படுத்தி விற்கு நல்லவ ரிருக்கை யீதால். 53

வேளாளர் வீதி

வழுக்கறு வாய்மை மாண்புங் கங்கைதன் மரபின் வந்த
விழுக்குடிப் பிறப்பு மூவ ரேவிய வினைகேட் டாற்றும்
ஒழுக்கமு மமைச்சாய் வேந்தர்க் குறுதிசூழ் வினையுங் குன்றா
இழுக்கறு மேழிச் செல்வர் வளமறு கியம்ப லாற்றாம். 54

வருவிருந் தெதிர்கொண் டேற்று நயனுரை வழங்கு மோசை
அருகிருந் தடிசி லூட்டி முகமனங் கறையு மோசை
உரைபெறு தமிழ்பா ராட்டு மோசைகேட் டுவகை துள்ள
இருநிதி யளிக்கு மோசை பொழுகட [2]லடைக்கு மோசை. 55

---

51. நூல் அவாய் - வேதத்தை விரும்பி. சந்தை கூட்டல் - ஆசிரியர் கூறிய வேத வாக்கியங்களை ஒரு சேரச் சொல்லுதல்.

52. ஔவியம் - பொறாமைக்குணம். திவ்விய - தெய்வத்தன்மையுடைய. எழால் - கண்டப்பாட்டு; மிடற்றொலி.

53. வீடு பெற்றவர் - சீவன் முத்தர். பெட்பம் - மையல். நல்லவர் - பரத்தையர்; விலைமாதர்

54. மூவர் - அந்தணர், அரசர், வணிகர்; சேர, சோழ, பாண்டியர் எனினுமாம்

55. அடிசில் - உணவு. முகமன் உபசார வார்த்தை.

பா-ம்-1 உவர்ப்புறக் 2 லடக்கு மோசை.

அருந்தின ரருந்திச் செல்ல அருந் துகின் றுரு மாங்கே
இருந்தினி தருந்தா நிற்க இன்னமு தட்டுப் பின்னும்
விருந்தினர் வரவு நோக்கி வித்தெலாம் வயலில் வீசி
வருந்திவிண் ணோக்கு மோரே ருழவர்போல் வாடி நிற்பார். 56

வானமுந் திசையும் பொங்கும் புகழ்மையும் வானம் பேணும்
ஞானமும் பொறையுங் குன்று நன்றியு மூக்கப் பாடுந்
தானமுங் கொடையு மன்பும் வரிசையுந் தகைசா னண்பும்
மானமுந் தவஞ்செய் தீன்ற மகவுபோல் வளர்க்க வல்லார். 57

### வணிகர் வீதி

புல்லியோர் பண்டங் கொள்வார் [1]வினவின பொருட்பக்கல், இல்லெனி னினமா யுள்ள பொருளுரைத் தெதிர்மறுத்தும், அல்லதப் பொருளுண் டென்னின் விலைசுட்டி யறுத்து நேர்ந்துஞ், சொல்லினு மிலாபங் கொள்வார் தொன்மர பிருக்கை சொல்வாம். 58

நீல வேதிமேற் பளிங்கினு னிழற்சுவர் நிறீஇமின்
கால வாலிய வைரவாட் கானிரைத் தும்பர்க்
கோல [2]வாணிலாச் சொரிமணி குயிற்றிவெண் மாடம்
மாலை போல்வகுத் தியற்றின பீடிகை மறுகு. 59

திரைய ளிப்பவுந் திரைபடு தீம்புனல் வேலிக்
கரைய ளிப்பவுங் [3]கரையிலா னிரைபடு கானத்

56. இச்செய்யுள் விருந்தோம்புவார் இயல்பைக் கூறியது.

57. புகழ்மை - கீர்த்தி, வரிசை - தத்தமக்குரிய நிலையில் தவறுமை; தகுதி.

58. சொல்லினும் - பொருளாலே அன்றிச் சொல்லாலும்; உம்: இறந்தது தழுவிய எச்சவும்மை.

59. வேதி - திண்ணை. வாலிய - வெள்ளிய. பீடிகை மறுகு - வணிகர் தெரு; கடைவீதி: இருபெயரொட்டு.

60. மாடம் - பண்ட சாலைகள். திரை அளிப்ப - கடல் அளிப்பன; உப்பு. முத்து, பவளம், சங்கு, ஓக்கோலை என்பன, புனல் வேலிக் கரை அளிப்ப - மருத நிலம் அளிப்பன; செந்நெல், சிறு பயிறு, கரும்பு, வாழை, செவ்விளநீர் என்பன. கானத் தரை அளிப்பன — காடு அளிப்பன; தேனடை, தேன், மயிற் பீலி, அரக்கு, நாவி என்பன. வரையளிப்பன - மலையளிப்பன; மிளகு, கோட்டம், அகில், தக்கோலம், இலவங்கம் என்பன.

பா-ம் 1 வினவினப் பொருளும் பக்கம். 2 வாணிலா. 3 கரையிலா திரை.

தரைய ளிப்பவுந் தரைகிழித் தூன்றிவிண் டாங்கும்
வரைய ளிப்பவும் வாங்கிவாய் மடுப்பன மாடம். 60

கரிய கம்பலக் கிடுகின்மேற் கதிர்விடு பவளத்
தெரியல் பொன்னரி மாலிகை தெண்ணிலாச் சொரியும்
பரிய நித்தில மணிவட மரகதப் பசுந்தார்
விரிய விட்டன விந்திர வின்னிரை யனைய. 61

நாள்க ளுங்குளிர் திங்களு ஞாயிறு மேனைக்
கோள்க ளுங்குளிர் விசும்பொரீஇக் குடிபுகுந் தாங்கு
வாள்கி டந்திராப் பகலொளி மழுக்கலால் வணிகர்
ஆள்க லம்பகர் பீடிகை துறக்கநா டனைய. 62

பன்னி றத்தபல் பெருவிலைப் பட்டெலா மவண
அன்ன பட்டின்மேம் படுவிலைப் பருத்தியு மவண
எந்நி லத்தரும் பொருள்பதி னெழுபுல வணிகர்
மன்னி ருக்கையு மரும்பெறல் வளனெலா மவண. 63

மரக தத்தினு லம்மிகள் வைரவா ளுலக்கை
உரல்கள் வெள்ளியா லடுப்பகில் விறகுலை பனிநீர்
அரிசி முத்தமல் செம்மணி யடுகலன் பிறவும்
எரிபொ னலிழைத் தாடுப விவர்சிறு மகளிர். 64

செயிரிற் றீர்ந்தசெம் பொன்னினுற் றிண்ணிலைக் கதவம்
வயிரத் தாழுடைத் தவர்கடை வாயிலு மென்றால்
அயிரிற் றீர்ந்தபே ரறிஞரு மனையர்தஞ் செல்வத்
தியலிற் றுமென வரையறுத் திசைப்பதை யெவனோ. 65

எரிக்கு றும்பொறி யனையசெம் மணிசுட ரெறிபொன்
அரிச்சு ரும்புநேர் மரகத முத்துவாள் வைரந்

---

61. கரிய கம்பலக் கிடுகு - கறுப்புக் கம்பளத்தைப் பரப்பிய சட்டம்.

62. நாள் - நட்சத்திரம். கோள் - கிரகம். ஆள் கலம் - (யாவரும்) அணியும் ஆபரணங்கள்.

63. அவண - அங்கிடத்துள்ளன. பதினெழு புலம் - தமிழ் ஒழிந்த பதினேழு நிலங்கள்.

64. அடுகலன் - சமைக்கும் பாத்திரங்கள்.

65. செயிர் - குற்றம். பொன் - ஆடகம், கிளிச் சிறை, சாதரூபம், சாம்புநதம் என்ற நால் வகைப்படும். அயிர் - ஐயம்.

தெரிப்ப ருந்துகிர் சிந்தின செல்லுநா ளொன்றுக்
கரிப்பர் கையகப் படுவன வாயிரத் திரட்டி. 66

பாய தொன்மரப் பறவைபோற் பயன்கொள்வான் பதினெண்
தேய மாந்தருங் கிளந்தசொற் றிரட்சிதான் றூய
மாயை காரிய வொலியன்றி வான்முதற் கருவின்
ஆய காரிய வோசையே யாய்க்கிடந் தன்றே. 67

ஒழிவில் வேறுபல் பொருளுமே லோகமும் பிறவும்
வழுவில் வேறுபல் கலைகளு மரபுளி வகுத்துத்
தழுவி வேண்டினர் தாங்கொளத் தக்கவா பகரா
அழிவி லாமறை போன்றன வாவண வீதி. 68

திக்கெ லாம்புகழ் மதுரையைச் சிவபுர மாக்கி
முக்க ணாயக னரசுசெய் முறையினுக் கேற்பத்
தக்க தோழனே டளகைமா நகருறை தயக்கம்
ஒக்கு மந்நகர் வாணிக ருறையுள்சூழ் [1]நியமம். 69

மன்னவர் வீதி

ஒற்றை யாழியா னுலகிரு ளொதுக்குமா போலச்
செற்ற நேமியாற் கலியிரு டின்றுகோ லோச்சி
மற்ற டம்புய வலியினுன் மாறடு சீற்றக்
கொற்ற மன்னவர் விழுக்குடிக் கோமறு குரைப்பாம். 70

தரங்க வேலைக டம்மையே தாளுறப் பிணித்துத்
துரங்க மாவெனத் தொகுத்தமந் துரைபல வருவி

66 துகிர் - பவளம். அரிப்பர் - அரிப்பாளர்கள்.

67. தொன் மரம் - ஆல மரம். தூய மாயை காரிய ஒலி - சுத்த மாயா காரிய ஒலி ; இது பொருள் பயக்கும் அக்கரங்களின் வடிவா யிருக்கும் வான் முதற் கருவியின் ஆய காரிய ஓசை - ஆகாயமாகிய முதற் காரணத்தின் உண்டாகிய ஒலி ; இது பொருள் பயவாத ஒலி மாத்திரையாக இருக்கும்

68 பல் பொருள் - பல பண்டங்கள் ; அற முதலிய உறுதிப் பொருள் மரபு உளி - வரிசையால்.

69. சிவபுரம் - சிவராசதானி. தோழன் - இங்குக் குபேரன். தயக்கம் - தங்கிய தோற்றம் நியமம் - கடைவீதி.

70 கலி - வருத்தம் ; செருக்குமாம். கோ - அரசன்

71. துரங்கமா - குதிரை மந்துரை குதிரை லாயங்கள்.

பா ம் 1 நிகமம்.

இரங்கு மோரறி வுயிர்வரை யாவையும் பெயர்த்து
மரங்கொல் யானைபோற் பிணித்தகூ டம்பல மன்றே. 71

மழுக்கள் வச்சிரங் கார்முகம் வாளிமுக் குடுமிக்
கழுக்கள் சக்கர முடம்பிடி கப்பண நாஞ்சில்
எழுக்க ளுந்தகம் பலகைதண் டிவைமுதற் படையின்
குழுக்க ளோடிகல் விந்தைவாழ் கூடமும் பலவால். 72

தொளைய கல்லைமா லெனக்கொண்டு சுழற்றியுஞ் செந்தூள்
அளையும் யானைபோற் பாய்ந்துமல் லாற்றியு மாற்றல்
விளைய வாளொடு கேடகம் வீசியும் வென்றி
இளைய ராடமர் பயில்வன எண்ணிலாக் கூடம். 73

தேசவிர் நீல மாடஞ் செம்மணிச் சென்னி மாடங்
காசறு கனக மாடஞ் சந்திர காந்த மாடம்
மாசற விளங்கு மின்ன மாடநீண் மாலை கூடற்
பாசிழை மடந்தை பூண்ட பன்மணிக் கோவை யன்ன. 74

விரையகல் கதுப்பி னல்லார் வீங்கிளங் கொங்கை போழ்ந்த
வரையகன் மார்ப மன்றி வடுப்படார் தமக்கன் பில்லார்
உரையகன் மான வாற்ற லொழுகுவார் பலகை யொள்வாட்
கரையகல் விஞ்சை வீரர் கணம்பயில் காட்சித் தெங்கும். 75

மின்னைவா ளென்ன வீசி வீங்குகார் தம்மிற் போர்மூண்
டென்னவாள் மருப்பு நீட்டி யெதிரெதிர் புதையக் குத்தி
அன்னவா னென்ன வாய்விட் டதுவெனச் செந்நீர் சோரப்
பொன்னவா மகன்ற மார்பர் பொருகளி றூட்டு வார்கள். 76

தூண்டுவா ருளமுந் தங்கள் பின்னிடத் துவக்குண் டூர்த்துத்
தாண்டுமா றொற்றை யாழித் தேரினுந் தள்ளித் துள்ளப்

---

72 கார்முகம் - வில் உடம்பிடி - வேல். கப்பணம் - கைவேல் நாஞ்சில் - கலப்பை எழுக்கள் - வளைதடி நாந்தகம் - வாள் பலகை கேடயம் இகல் விந்தை - விரலக்குமி; துர்க்கையுமாம் இகல் விந்தை வாழ்கூடம் - ஆயுத சாலை.

73. மால் - திருமால். என : உவமஉருபு.

74. காசு, மாசு - குற்றம். கூடல் - மதுரை.

75 விஞ்சை - வித்தை. கதுப்பு - கூந்தல். வரை - மலை.

76. அன்ன - அந்த. பொன் - திருமகள்.

77. பாண்டில் - உருளை. சென் - தூரம்.

பாண்டில்வாய்ப் பசும்பொன் றேயப் பார்மகண் முதுகு கீண்டு
சேண்டிசை போய்மடங்கச் செல்வத்தேர் நடாத்து வார்கள். 77

மைந்தர்தந் நெருக்கிற் சிந்து கலவையு மகளிர் கொங்கைச்
சந்தமுங் கூந்தல் சோர்ந்த தாமமுஞ் சிவிறி வீசு
சிந்துரப் பொடியு நாறத் தேனொடு [1]மெழுந்து செந்தூள்
அந்தர வயிறு தூர்ப்ப வடுபரி நடாத்து வார்கள். 78

தம்முயிர்க் கிரங்கா ராகித் தருக்கொடு மான மீர்ப்பத்
தெம்முனை யெதிர்ந்தா ராற்றுஞ் செருவெனக் குருதிச் செங்கேழ்க்
கொய்ம்மலர் குடுமிச் சேவல் கோழிளந் தகர்போர் மூட்டி
வெம்முனை நோக்கி நிற்பார் வேறவற் றாறு நோக்கார். 79

பெண்முத்த மனைய பேதைச் சிறுமியர் பெருநீர் வைகை
வெண்முத்த மிழைத்த சிற்றில் சிதைபட வெகுண்டு நோக்கிக்
கண்முத்தஞ் சிதறச் சிந்துங் கதிர்முத்த மாலை தட்பத்
தெண்முத்தி னகைத்துச் செல்வச் சிறூர்கடே ருருட்டு வார்கள். 80

கொடிமுகி லுழாவு மிஞ்சிக் கோநகர் வடகீழ் ஞாங்கர்
முடிமிசை வேம்பு நாற முருகவி ழாரும் போந்தும்
அடிமிசை நாறத் தென்னர் வழிவழி யரசு செய்யும்
இடிமுர சறங்கா வாயி லெழுநிலை மாடக் கோயில். 81

### மறையவர் வீதி

ஆத்திக ருண்டென் றோது மறமுதற் பொருள்க ளென்னும்
நாத்திகம் பேசும் வஞ்சர் நாவரி கருவி யாக
ஆத்தனு லுரைத்த வேத வளவுகண் டுள்ளந் தேறித்
தீர்த்தராய் முத்தீ வேட்குஞ் செல்வர்தம் மிருக்கை சொல்வாம்.

---

78 தாமம் - இங்கு மகரந்தம் சிவிறி - துருத்தி. சிந்துரப் பொடி - குங்குமம்

79. தருக்கு - வீரச் செருக்கு கேழ் - நிறம். மலர் - செங்காந் தட்பூ தகர் - ஆட்டுக்கிடாய்.

80 தட்ப - தடை செய்ய. சிறூர் - அரசச் சிறுவர்.

81 இஞ்சி - மதில். ஞாங்கர் - பக்கம். ஆர் — ஆத்தி போந்து - பனை.

82. ஆத்தன் - சிவபெருமான். தீர்த்தர் - பரிசுத்தமுடையவர்.

பா-ம் 1 மெழுந்த.

முஞ்சிநாண் மருங்கின் மின்னப் பொன்செய்த முளரி வேய்ந்த
குஞ்சிநான் றசையத் தானைச் சொருக்குமுன் கொய்து தூங்கப்
[1]பஞ்சிநாண் கலைத்தோன் மார்பும் பலாசக்கோல் கையுந் தாங்கி
[2]எஞ்சினுன் மறைநூல் கற்போர் கிடைகளே யில்ல மெல்லாம். 83

தீவினை யந்த ணாளர் சிருர்பயி றெய்வ வேதம்
நாவுரு வேற்றக் கேட்டுக் கிளிகளோ நவிலும் வேற்றுப்
பூவையும் பயின்று புத்தே ளுலகுறை புதுமந் தாரக்
காவுறை கிளிகட் கெல்லாங் கசடறப் பயிற்று மன்றே. 84

வேதமு மங்க மாறு மிருதியும் புராண நூலின்
பேதமுந் தெரிந்தோ ராலும் பிறர்மதங் களைய வல்ல
வாதமு மதமேற் கொண்டு மறுத்தலு நிறுத்த வல்ல
போதமு முடையோ ராலும் பொலிந்தன கழக மெல்லாம். 85

உறிபொதி கரகக் கைய ரொளிவிடு செங்கற் றோய்த்த
அறுவைய ருயிர்க்கூ றஞ்சு நடையின ரவிச்சை மாள
எறிசுடர் மழுவா ளென்னக் கோவணம் [3]யாத்த கோலர்
மறைமுடி வன்றித் தேரு மாதவர் மடங்க ளெங்கும். 86

அட்டில்வாய்ப் புகையு மாடத் தகில்படு புகையும் வேள்வி
விட்டெழு புகையு மொன்றி விரிசுடர் விழுங்கக் கங்குல்
பட்டது பலருந் தத்தம் பயில்வினை [4]யிழக்க நங்கை
மட்டவிழ் கடுக்கை யான்கண் புதைத்தநாண் மானு மன்றே. 87

## சைவர் வீதி

தெய்வ நீறுமைந் தெழுத்துமே சிதைக்கல னாக
எவ்வ மாசிரு வினையுடம் பெடுத்துழல் பிறவிப்

---

83 முஞ்சி - ஒருவகை நாணற் புல். குஞ்சி - சிகை. சொருக்கு - சொருகல். பலாசம் - முள்முருக்கு. பஞ்சி நாண் - பூணூல். எஞ்சி - ஏக்கற்று நின்று. கிடைகள் - வேத பாடசாலைகள்.

84. தீவினை - தீ வளர்க்குந் தொழில். பூவை - நாகணவாய்ப்புள். கா - சோலை.

85 அங்கம் ஆறு - மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம் என்னும் ஆறங்கம். கழகம் - பாடசாலை.

86 செங்கல் - சிவந்த காவி. அறுவை - ஆடை. அவிச்சை - அஞ்ஞானம்,

87. அட்டில் - மடைப்பள்ளி. மட்டு - வாசனை

பா-ம்—1 பஞ்சிநாண் 2 எஞ்சிநாண். 3 ஆர்த்த. 4 யிழப்ப.

பௌவ மேழையுங் கடந்தரன் பதமலர்க் கரைசேர்
சைவ மாதவ ருறைமடத் தனிமறு குரைப்பாம். 88

எங்கு மீசனைப் பூசைசெய் திகபர மடைவார்
எங்கு மன்பரைப் பூசைசெய் தெழுபிறப் பறுப்பார்
எங்கு மாகமஞ் செவிமடுத் தெதிர்வினை தடுப்பார்
எங்கு நாயகன் வடிவுணர்ந் திருண்மலங் களைவார். 89

அறிவி லானுரை யாகம மிலக்கமாய்த் தவற்றுள்
விழுமி தாகிய விதியினும் விலக்கினு [1]மடியைத்
தழுவு தொண்டர்கண் மைந்தர்கள் சாதகர் பாசங்
கழுவி வீடருள் போதகக் காட்சியர் பலரால். 90

மறைக ளாகமம் பொதுச்சிறப் பெனச்சிவன் [2]வகுத்து
முறையி னோதிய விதிவிலக் குரைகளு முடிவில்
அறையும் வீடுமொன் றிரண்டெனும் பிணக்கற வமைந்த
குறைவி லாச்சிவ யோகியர் குழாங்களும் பலவால். 91

திருக்கோயில்

குழலுந் தும்புரு நாரதர் பாடலுங் குனித்துச்
சுழலுங் கொம்பனா ராடலு மூவர்வாய்த் துதியும்
விழவின் செல்வமுஞ் சுருதியுந் திசையெலாம் விழுங்கும்
முழவுங் கண்டுயி லாதது முன்னவன் கோயில். 92

மடங்க லின்றிவிண் பிளந்துமேல் வளர்ந்துவெள் ளேற்று
விடங்கர் வெள்ளிமன் றிமைத்தெழு வெண்சுடர் நீட்டம்

---

88. சிதை - பாய்மரம். கலன் - மரக்கலம். பிறவி ஏழ் - தேவர், மக்கள், விலங்கு, பறவை, நீர் வாழ்வன, ஊர்வன, தாவரம் என்ற எழுவகைப் பிறவிகள்.

89. எதிர்வினை - ஆகாமிய வினை. இருண்மலம் - ஆணவமலம்.

90. அடியைத் தழுவு தொண்டர் - சரியை வழி நிற்போர். மைந்தர்கள் - கிரியை வழி நிற்போர். சாதகர் - யோக வழி நிற்போர். போதகக் காட்சியர் - மெய்ஞ்ஞானிகள்.

91. சிவயோகியர் - சிவஞானிகள்.

92. குனித்து - வளைந்து. செல்வம் - சிறப்பு: ஓசை.

93. விடங்கர் - பேரழகர். கண்ணி - தலையிற் சூடும் மாலை. மூவுலகு - சுவர்க்கம், பூமி, பாதாளம். ஓக்கம் - உயர்ச்சி.

பாடம்—1 மடியில். 2 வகுத்த - முறையும்.

முடங்கல் வெண்பிறைக் கண்ணியான் கயிலைமூ வுலகும்
ஒடுங்கு கின்றநா ளோங்கிய வோக்கமே யொக்கும். 93

சுரந்து தேன்றுளித் தலர்களுஞ் சொரிந்துவண் டரற்ற
நிரந்து சுந்தரற் கொருசிறை [1]நின்றபூங் கடம்பு
பரந்து கட்புன லுகப்பல மலர்கடுய்ப் பழிச்சி
இரந்து நின்றருச் சனைசெயு மிந்திர னிகரும். 94

உழல்செய் தீவினை யுருப்பற வுயிர்க்கெலா மடியின்
நிழல்செய் வார்க்குநீ ணிழல்செயா நின்றபூங் கடம்பின்
குழல்செய் வண்டுகற் பகமதுக் கொணர்ந்துவந் தூட்டித்
தழல்செய் காமமென் பேடையி னூடலைத் தணிக்கும். 95

ஆரு நீர்க்கட லன்றது வெனநிறை பகழ்கார்
ஊரு மாழியன் றதுவென வோங்கெயி லெட்டாய்ச்
சாரு நேமியன் றதுவெனச் சமைந்தகோ புரம்பொன்
மேரு வன்றது வெனச்சுடர் விசும்பிழி விமானம். 96

வேத வந்தமுந் துளக்கற மெய்ப்பொருள் விளங்கும்
நாத வந்தமுங் கடந்ததோர் நடுநிலைப் பொருளின்
பாத வந்தனைப் பத்தியின் பாலராய்ப் பயில்வோர்
மாத வந்தரு பயனெனத் தழைத்தபல் வளனும். 97

பொறிக ளைந்தினுக் கூட்டுபல் போகமு மிதப்பச்
செறிதொ ணீரவர் [2]உவப்பவத் திருநகர் மாக்கள்
நெறிகொள் செஞ்சடைப் பிறைமுடி நிருமலக் கொழுந்தின்
வெறிகொ ளெண்மல ரடிதமீஇ வீடுபெற் றார்போல். 98

முன்ன வன்னர சிருக்கையா லந்நகர் முளரிப்
பொன்னை யீன்றதா லதுபல பொருணிறை செல்வந்

94. நிரந்து - தழைத்து. பழிச்சி - துதித்து.

95. உழல் - (பிறப்பு இறப்புக்களில்) உழன்றுவர. உருப்பு - கோடை வெப்பம்.

96. ஆழி - சக்கரவாளகிரி. நேமி - மலை.

97. வேத அந்தம் - உபநிடதங்கள். நாதம் - நாததத்துவம்.

98. மிதப்ப - மிக. வெறி - வாசனை.

பா-ம்—1 நின்றவர் கடம்பு. 2 உவப்ப.

தன்னை யீன்றதா லதுபல தருமமென் றுரைக்கும்
மின்னை யீன்றதஃ தீன்றதால் விழுத்தகு புகழே. 99

எழுக்க டந்ததோ ளுருத்திர வுலகமென் றியாரும்
வழுத்த நின்றவிந் நகர்வயி னும்பரின் மாண்ட
விழுத்த கும்பல செல்வமும் வியந்துபார்த் துள்ளத்
தழுக்க றுமையா லின்னமு மமரர்கண் ணுறங்கார். 100

விரைய விழ்ந்ததார் மீனவர் வாகைவேல் விடுத்துத்
திரையை வென்றது முடிதகர்த் திந்திரன் செருக்குக்
கரைய வென்றதுங் கார்தளை யிட்டதுங் கனக
வரையை வென்றது மிந்நகர் வலியினா லன்றே. 101

எங்கு நாவுமா யெங்கணுங் கண்ணுமா யெங்குந்
தங்கு பேரொளி யல்லதித் தனிநகர்ச் செல்வஞ்
செங்க ணாயிர நாவினான் செப்பவு மெதிர்கண்
டங்க ணாயிர முடையவ னளக்கவும் படுமோ. 102

புண்ணி யம்புரி [1]பூமியா ரதில்வரு போகம்
நண்ணி யின்புறு பூமிவா னுடென்ப நாளும்
புண்ணி யம்புரி பூமியு மதில்வரு போகம்
நண்ணி யின்புறு பூமியு மதுரைமா நகரம். 103

பண்கனிந் தனைய சொல்லார் [2]நரப்பிசைப் பாணி தேவர்
உண்கனி யமுதுங் கைப்பச் செவிதொளைத் தூட்ட வுண்டும்
பெண்களி னமுத மன்னார் பெருமித நடன முண்ணக்
கண்களை விடுத்துக் காலங் கழிப்பவ ரளவி லாதார். 104

கலவிவித் தாக வூடிக் கட்புனல் குளிக்கு நல்லார்
புலவிதீர் செல்வி நோக்கிப் புணர்முலைப் போகந் துய்த்தும்

---

99 முன்னவன் சிவபெருமான்
100. எழு – தூண். வழுத்த – துதிக்க. அழுக்கு – பொறாமை.
101. வாகை – வெற்றி. தளை – விலங்கு.
102 ஆயிர நாவினான் ஆதிசேடன் கண்ணாயிரமுடையவன் – இந்திரன்.
103. போகம் – எண்வகை இன்பங்கள்; அவை பெண், ஆடை, அணி, உணவு, தாம்பூலம், பரிமளம், இசை, பூம் படுக்கை என்பன.
104 பாணி – இசை; பாட்டு.
பா-ம்—1 பூமியார். 2 நரப்பிசை பாணி.

நிலைநிலை யாமை நோக்கி நெறிப்படு தரும தானங்
கலைஞர்கைப் பெய்துங் காலங் [1]கழிப்பவ ரெண்ணி லாதார். 105

சந்தித்து மீள நோக்கி தலைவனை மூன்று போதும்
வந்தித்து மீசன் பூசை மரபுளி முடித்தும் வேதம்
அந்தித்து மறியான் செய்த திருவிளை யாடல் கேட்டுஞ்
சிந்தித்து மன்பர் பூசை செய்துநாள் கழிப்பர் பல்லோர். 106

கற்பவை கற்றுங் கேட்டுங் கேட்டவை கருத்து ளூறச்
சொற்பொரு ளினைந்துங் கேட்போர்க் குணர்த்தியுட் டுளக்கந்தீர்த்தும்
எற்பக லிரவு நீங்கு மிடத்துமெய் யறிவா னந்த
அற்புத வெள்ளத் தாழா தாழ்ந்துநாள் கழிப்பர் சில்லோர். 107

தன்னிக ருயர்ச்சி யில்லான் காப்பியத் தலைவ னாக
முன்னவர் மொழிந்த தேனோர் தமக்கெலா முகம னன்றே
அன்னது தனதே யாகு மண்ணவேல பாண்டி வேந்தாய்
இந்நகர்க் கரச னாவா னிக்கவிக் கிறைவ னாவான். 108

என்னென வுரைப்பே னந்த விறைமகன் பண்பை யேனை
மன்னவர் வானோர் போல மதித்துரை விரிக்கற் பாற்றே
அன்னவ னானை யாற்று னடப்பதிவ் வகில மென்றால்
முன்னவன் செய்த வாடல் வரவினை முறையிற் சொல்வேன். 109

ஆகச் செய்யுள்—200

---

105. வித்து - காரணம். செவ்வி – சமயம். நிலை நிலையாமை - தோற்றக் கேடுகள்,

106. அந்தித்தல் - அணுகுதல்.

107. அற்புதம் – திருவருள்.

108. முன்னவர் - பழம் புலவர். கவி - இங்குக் காப்பியம்.

109. இறைமகன் - சோமசுந்தரர். ஆடல் வரவு - திருவிளையாடலாகிய நிகழ்ச்சிகள்,

பாடம் 1 கடப்பவர்.

# திருக்கயிலாயச் சிறப்பு

—o—

வரங்க டந்தரு ளமுது வானவர் முனிவோர்
கரங்க டந்தலை முகிழ்த்திடக் கருணைசெய் தவிச்சை
உரங்க டந்துரை யுணர்வெலாங் கடந்தரு மறையின்
சிரங்க டந்தவ னிருப்பது திருக்கயி லாயம். 1

புரந்த ராதிவா னவர்பதம் போதுறை புத்தேள்
மரந்த வான்பதஞ் சக்கரப் படையுடைப் பகவன்
வரந்த வாதுவாழ் பதமெலா நிலைகெட வருநாள்
உரந்த வாதுநின் றூழிதோ றோங்குமவ் வோங்கல். 2

அரம்பை மாதரா ராடலி னரவமும் பாடல்
பரம்பி னோசையு முழவதிர் சும்மையு நால்வாய்
வரம்பி லோதையு மருவியி னொலியுமா றாது
நிரம்பி வானமுந் திசைகளு நிமிர்வன மாதோ. 3

வெந்த நீற்றொளி வெண்மையும் விமலனை பாகங்கொண்
டந்த மின்றியே யனைவரு மிருக்கையு மருவி
வந்த கண்களுங் கொண்டவ ணிருக்குமா தவர்க்குத்
தந்த தாலரன் கயிலையுந் தனதுசா ரூபம். 4

ஆங்கு வெண்டுகில் விரித்தெனக் கல்லென வார்த்து
வீங்கு காலரு வித்திரள் வெள்ளமே யன்றி
ஓங்கு நான்மறைக் குடுமியி னுள்ளொளி நோக்கித்
தூங்கு மாதவர் கண்களுஞ் சொரிவன வெள்ளம். 5

கோட்டு மாமலர் நிலமலர் குண்டுநீ ரெடுத்துக்
காட்டு மாமலர் கொடிமலர் கொண்டுமுட் கரைந்த

---

1. முகிழ்த்திட - கூப்பி வணங்க. அவிச்சை - பாசம். மறையின் சிரம் - வேதாந்தம்.

2. தவாது - கெடாது. ஓங்கல் - மலை.

3. அரவம், சும்மை, ஓதை - ஓசை.

4. கண்கள் - இடங்கள். சாரூபம் - நான்கு பதவிகளுள் ஒன்று; இறைவன் திருவுருவைப் பெற்றிருத்தல்.

5. தூங்குமாதவர் - பரசிவத்தி லழுந்திய தவத்தோர்.

பாட்டு மாமலர் கொண்டுநம் பரஞ்சுட ரடியிற்
சூட்டு மாதவர் தொகுதியுஞ் சூழ்வன வொருபால். 6

கைய நாகமுங் காய்சின வுழுவையுங் கடுவாய்ப்
பைய நாகமுந் தங்கிளை பரவிய முக்கண்
ஐய னுகமெய் யருந்தவர் தமையடைந் தன்பு
செய்ய நாகமும் வையமும் புகழ்வதச் சிலம்பு. 7

ஆகச் செய்யுள்—207

---

6. குண்டு - சுனை. இச் செய்யுளுள் நால் வகை மலர்களும் காட்டப் பெற்றுள்ளன.

7. உழுவை - புலி. கடு - விஷம். நாகம் - யானை பாம்பு, தேவ ருலகம். சிலம்பு - மலை.

# புராண வரலாறு

—o—

அளந்தி டற்கரி தாயவக் குன்றின்மேற்
களங்க றுத்துவிண் காத்தவன் கோயின்முன்
விளம்பு ருஞ்சிவ தீர்த்தத்தின் மிக்கதாய்
வளம்பொ றுஞ்சிவ தீர்த்தத்தின் மாடது. 1

தண்ட ருங்கதிர்ச் சந்திர காந்தத்திற்
[1]பண்ட யங்க நவமணி பத்திசெய்
தண்டர் தச்ச னநேக தவஞ்செய்து
கண்ட தாயிரக் கான்மண் டபமரோ. 2

ஆன பான்மையி னுலந்த மண்டபம்
ஞான நாயக னுண்மலர்த் தாடொழ
வான மீனொடு வந்து பதங்குறித்
தூன மின்மதி வைகுவ தொத்ததே. 3

அன்ன மண்டபந் தன்னு ளருந்தவம்
என்ன வேங்கை யதண்மே லிருந்தனன்
பன்னு கேள்விப் பதினெண் புராணமுஞ்
சொன்ன மாதவச் சூத முனிவனே. 4

அந்த வேலையி லச்சிவ தீர்த்தத்தில்
வந்து மூழ்கியம் மண்டபத் தேறியே
சந்தி யாதி தவமுடித் தீறிலா
இந்து சேகரன் றாளிணைந் தேத்தியே. 5

சம்பு பத்தன் சதானந்த னுத்தமன்
அம்பு யத்த னனைய மகோதரன்

---

1. களம் - கண்டம். விண் - தேவர்; ஆகுபெயர். மாடு - பக்கம்.
2. தண் குளிர்ச்சி. பண்ட தயங்க - ஒப்பனை விளங்க. அண்டர் தச்சன் - தேவ தச்சன்; மயன்.
3. வானமீன் - நட்சத்திரம். பதம் குறித்து - காலம் நோக்கி.
4. அதள் - தோல். பன்னுதல் - சிறப்பித்தல்.
5. வேலை - பொழுது. இந்து சேகரன் - சோமசுந்தரக் கடவுள்.
பா-ம்—1 பண்டயங்கு

உம்ப ரஞ்சிய வுக்கிர விரியன்
நம்பு கேள்விப் பிரசண்ட நற்றவன். 6

ஆதி மாதவர் யாவரு மன்புமை
பாதி யாய்முற்று மாகும் பராபரச்
சோதி பால்வைத்த சூதனைத் தோத்திரம்
ஓதி யஞ்சலித் தொன்று வினவினர். 7

வேத வாகம புராணமே மிருதியே முதலா
ஓது நூல்களின் றுணிபொரு ளுலகெலாம் பயந்த
பேதை பாகனே பரமெனத் தேர்ந்துணர் பெரிய
போத மாதவ வுனக்கியாம் புகல்வதொன் றுளதால். 8

மேரு மந்தரங் கயிலைபர்ப் பதமுதல் விடைமேல்
ஊரு மந்தர நாடவ னுறைபதி யனந்தம்
ஆரு மந்தமில் போகம்வீ டடைவதெவ் றவற்றின்
கார ணங்களோ டுரைத்தனை கருத்தினுக் கிசைய. 9

ஐய மாதிமுக் குற்றமு மகலநீ யருளிச்
செய்ய வுந்தெளிந் திலேங்கள்யாஞ் சிற்றறி வுடையேம்
மைய னெஞ்சினே மாகையான் மயக்கற வின்னம்
உய்யு மாறருள் செய்தியென் றுரைத்தனர் மன்னோ. 10

தலங்க டம்மின்மிக் குள்ளதாய்த் தகுதிசா றீர்த்தக்
குலங்க டம்மின்மிக் [1]குள்ளதாய்க் குறையிரந் தோர்க்கு
நலங்க டந்தருண் மூர்த்தியாய் நாதவே தாந்தப்
புலங்க டந்தபே ரொளியுறை தலனொன்று புகலாய். 11

என்ற போதெதிர் முகமலர்ந் திருண்மல வலியை
வென்ற சூதனுந் தலங்களின் விசேடமாய்ந் தம்பொற்

---

6. அம்புயத்தன் - பிரமன்.
7. அஞ்சலித்து - கைகூப்பி.
8. மிருதி - தரும நூல். போதம் - ஞானம்.
9. பர்ப்பதம் - திருப்பருப்பத மலை. ஆரும் - யாவரும்.
10. ஐயமாதிமுக்குற்றம் - ஐயம், திரிபு, அறியாமை என்னும் முக்குற்றம்.
11. தலன் - தலம் : போலி.
12. இருள் மலம் - ஆணவ மலம்.
பா-ம்—1 குடைய தாய்க்.

குன்ற வார்சிலை யானிடங் கொண்டுறை பதியுள்
ஒன்று கேட்கவீ டளிப்பதா யுளதுமற் றதுதான். 12

முற்ற வோதிய புராணமூ [1]வாறினுட் காந்தம்
பெற்ற தாறுசங் கிதையவை யாறுந்தம் பெயராற்
சொற்ற பேர்சனற் குமரயா முனிவரன் சூதன்
கற்றை வார்சடைச் சங்கரன் மாலயன் கதிரோன். 13

இன்ன வாறனுட் சங்கர சங்கிதை யொன்று
சொன்ன நூலினை யுணர்த்தினன் சங்கரன் றுணைவிக்
கன்ன போதவண் மடியினி லிருந்துகேட் டதனை
மின்னு வேல்பணி கொண்டவேள் வெளிப்பட வுணர்ந்தான். 14

குன்றெ றிந்தவேள் வழிபடு குறுமுனிக் குரைத்தான்
அன்று தொட்டஃ தகத்திய சங்கிதை யாகி
நின்ற தன்னது கேட்பவர்க் கரனடி நீழல்
ஒன்று மின்பவீ டளிப்பதா வொருதல னுரைக்கும். 15

அதிக வப்பதி யாதெனி னாலவாய் கேட்கக்
கதிய ளிப்பதென் றோதிய சூதனைக் கதியின்
மதியை வைத்தவ ரன்னதைப் பகரென வந்த
விதியி னிற்புகல் கின்றனன் வியாதன்மா ணாக்கன். 16

புதிய தாமரை மேவிய பழமறைப் புத்தேள்
விதியி னாற்கடு நடைப்பரி மகஞ்செய்வான் வேண்டிக்
கதியை மாய்ந்தவர்க் குதவுதண் டுறைகெழு காசிப்
பதியின் மைந்தரோ டெய்தினன் பண்டொரு வைகல். 17

அகத்தியன் வியாத னாரதன் சனக னாதிநான் முனிவர்கோ
தமனாற், சிகைத்தெளி வுணர்ந்த பராசரன் வாம தேவன்வான்

13. காந்தம் - கந்த புராணம். சங்கிதை - வரலாறு.
14. துணைவி - இங்கு உமாதேவி. வேள் - முருகக் கடவுள்.
15. குன்று - கிரவுஞ்சமலை. குறுமுனி - அகத்தியன். ஒன்றும் - பொருந்தும்.
16. கதி - மோட்சம் மதி - சிந்தை வியாதன் மாணாக்கன் - சூத முனிவன்.
17. புதிய - வாடாத. பரிமகம் - அசுவமேத யாகம். வைகல் - காலம்.

பா.ம்—1 வாறனுட்.

மீகியே வசிட்டன், சகத்தியல் கடந்த சுகன்முதன் முனிவர் தம் மொடும் பத்துவெம் பரிமா, மகத்தொழின் முடித்து மற்றவர்க் குள்ள மகிழ்வுற வழங்குந வழங்கா. 18

சத்திய வுலகிற் சரோருகக் கிழவன் சார்ந்தபின் புலப்பகை சாய்த்த, அத்திரு முனிவ ரனைவருங் காசி யடிகளை யடைந்தனர் பணிந்து, முத்திமண் டபத்தின் அறமுத னுன்கு மொழிந்தருண் மூர்த்திசந் நிதியிற், பத்தியா யிருந்து நாரத முனியைப் பார்த் தொரு வினவுரை பகர்வார். 19

தலமுதன் மூன்றுஞ் சிறந்ததோர் சைவத் தலமுறை யென் னநா ரதன்ருன், கலைமுழு துணர்ந்த சனற்குமா ரன்பாற் கற்ற வன் வியாதனு மவன்பால், நலமுறக் கேண்மி னெனவவன் கதிர் வே ளம்பிபான் மறைமுத லனைத்தும், [1]அலைவற வுணர்ந்தோன் குறுமுனி யாகு மவனிடைக் கேண்மென விடுத்தான். 20

மலயமா தவனை யடைந்துகை தொழுது வாழ்த்திவா தாவி வில் வலனைக், கொலைபுரி தரும மூர்த்தியே விந்தக் குன்றடக் கியதவக் குன்றே, அலைகடல் குடித்த வருட்பெருங் கடலே அருந் தமிழ்க்கொண்டலே தென்பார், துலைபெற நிறுத்த கனகனே யொன்று சுருதியா யிரமெனத் துதித்தார். 21

மூவகைச் சிறப்பு முள்ளதோர் தான மொழிகென முக மலர்ந் தருள்கூர்ந், தியாவையு முணர்ந்தோன் முத்திமண் டபத்தின் [2]ஈரிரு தொகையிவ்வந் திறக்குஞ், சேவல்க டமையு

---

18. நூற்சிகைத் தெளிவு - வேத நூல் முடிபின் துணிபொருளாகிய பரசிவம். சகம் - தோன்றியழிவது ; உலகம்.

19. சரோருகக் கிழவன் - பிரமன். காசியடிகள் - காசியில் எழுந்தருளிய சிவபெருமான்.

20. தலமுதல் மூன்று - தலம், தீர்த்தம், மூர்த்தி என்ற மூன்று. கதிர்வேல் நம்பி - முருகக் கடவுள். அலைவு - துன்பம் ; ஐயம்.

21. கொண்டல் - மேகம். தென்பார் - தென்னுடு துலைபெற - தராசு போன்று சமனுகுமாறு கனகன் - பற்றுக்கோடு ஆயிரம் - அனந்தம்.

22. மூவகைச் சிறப்பு தலம், தீர்த்தம், மூர்த்தி என்பவற்றின் சிறப்புக்கள் தானம் - சிவத்தலம். முத்தி மண்டபம் - காசியில் உள்ள ஓரிடம். சேவல்கள் - மாகனந்தன் என்ற மறையவனும் அவன் மனை வியும் மக்களிருவரும் இவர்கள் வேடுவரால் கொலை செய்யப்

பா-ம்—1 அலமற. 2 ஈரிரு திசையினு மிருக்கும்.

மைங்கரன் றனையுஞ் சேவலங் கொடியுடை வடிவேற், காவலன் றனையும் வடநிழ லமர்ந்த கண்ணுதற் பரனையும் பணியா. 22

அங்கயற் கண்ணி தன்னையு மெந்தை யாலவா யானையு மிதயப், பங்கயத் திருத்திச் சமாதியி லிருந்து பரவச மடைந்து பார்ப்பதிக்குச், சங்கர னருளிச் செய்தசங் கிதையைத் தாரக னுடலிரண் டாகச், செங்கைவேல் விடுத்த சேவக னெனக்குத் தெருட்டினா னனையசங் கிதையில். 23

பெறற்கருந் தவஞ்செய் தகந்தெளிந் தரிதிற் பெறுங்கதி கேட்பவர்க் கெளிதாய், உறப்படுந் தலநீர் விளம்புமுச் சிறப்பு முள்ளதெத் தலத்தினுங் கழிந்த, சிறப்பினாங் கெண்ணெண் டிருவிளை யாடல் செய்தருள் வடிவெடுத் தென்றும், மறைப்பொருள் விளங்கு மாலவா யதனை மண்ணின்மேற் சிவனுல கென்னும். 24

அத்தலத் தனைய மூவகைச் சிறப்பு மளவிலா வுயிர்க்கெலாங் கருணை, வைத்தவன் செய்த திருவிளை யாட்டும் வரையுரங் கிழிய வேலெடுத்த, வித்தக னெனக்கு விளம்பிய வாறே விளம்புவ னுமக்கென வந்த, உத்தம முனிவர் யாவருங் கேட்க உணர்த்துவான் கடலெலா முண்டான். 25

ஆகச் செய்யுள் 232

---

படுங்கால் காசியை நினைந்த விசேடத்தினால், கோழிகளாய்ப் பிறந்து காசியையடைந்து, முத்திமண்டபத்திலிருந்து தவமியற்றி முத்தியடைந்தவர் என்பது காசி காண்ட வரலாறு. வடம் - கல்லாலமரம்.

23. சமாதி - தியான நிலை. தெருட்டி - தெளிவு படுத்தி.

24. தவம் - இங்குச் சரியை கிரியை, யோகங்கள். அகந் தெளிதல் - ஞானமுறுதல். அரிதிற் பெறுங்கதி - மோட்சம். கழிந்த - மிகுந்த. எண்ணெண் திருவிளையாடல் - 64 திருவிளையாடல்கள்.

25 வித்தகன் - மேலானவன்; முருகன்.

# தலவிசேடம்

—o—

நாட்டமொரு மூன்றுடைய நாயகனுக் கன்புடையீர் நயந்து நீவிர், கேட்டதல மீண்டுரைத்த திருவால வாயதனுட் கிளைத்துப் பொன்னங், தோட்டலர்தா மரைமுளைத்த தொருதடமுஞ் சுந்தரச்செஞ் சோதி ஞான, ஈட்டமென முளைத்தசிவ லிங்கமொன்று முளவின்னு மிசைப்பக் கேண்மின். 1

திருவால வாய்க்கிணையா மொருதலமுந் தெய்வமணஞ் செய்யப் பூத்த, மருவார்பொற் கமலநிகர் தீர்த்தமுமத் தீர்த்தத்தின் மருங்கில் ஞான, உருவாகி யுறைசோம சுந்தரன்போ லிக பரந்தந் துலவா வீடு, தருவானு முப்புவனத் தினுமில்லை யுண்மையீது சாற்றின் மன்னோ. 2

அவ்வகைய மூன்றின்முதற் றலப்பெருமை தனைச்சுருக்கி யறையக் கேண்மின், எவ்வகைய வுலகத்துந் தருமதல மதிகமவற் றீறி லாத, சைவதல மதிகமவற் றறுபத்தெட் டதிகமவை தமிலீரெட்டுத், தெய்வதல மதிகமவற் றதிகதல நான்கவற்றைச் செப்பக் கேண்மின். 3

அன்னமலி வயற்புலியூர் காசிநகர் காளத்தி யால வாயாம், இன்னவளம் பதிநான்கிற் றிருவால வாயதிக மெவ்வா றென்னின், மின்னவிரம் பலங்காணக் காசிநகர் வதிந்திறக்க வியன்காளத்திப், பொன்னகரம் பத்தியினால் வழிபாடு செயவளிக்கும் போகம் வீடு. 4

அறந்தழையுந் திருவால வாய்கேட்டவுடன் போக மளிக்கு மீண்டு, பிறந்திறவாப் பேரின்பக் கதியளிக்கு மிதுவன்றிப் பிறழா தெங்கும், நிறைந்தபர னெத்தலமும் படைப்பானித் தலத்தை

---

1. நாட்டம் - கண். தோடு - இதழ். ஈட்டம் - திரட்சி.

2. பொற்கமலம் - பொற்றாமரைத் தீர்த்தம். உலவா - அழியாத. முப்புவனம் - சொர்க்கம், பூமி, பாதலம்.

3. தருமதலம் - புண்ணியத் தலம்.

4. புலியூர் - தில்லை. அம்பலம் - பொன்னம்பலம்; சிதம்பரம்.

5. நிருமித்து - உண்டாக்கி.

முதனிருமித் [1]திங்கள், உறைந்தருளி ஞனன்றி யின்னமுள்ள
திதன்பெருமை யுரைப்பக் கேண்மின். 5

திருவால வாயென்று கேட்டவரே அறம்பெறுவர் செல்வ
மோங்குந், திருவால வாயென்று நினைத்தவரே பொருளடைவர்
[2]தேவ தேவைத், திருவால வாயிடத்துக் கண்டவரே இன்பநலஞ்
சேர்வ ரென்றுந், திருவால வாயிடத்து வதிந்தவரே [3]வீட்டுநெறி
சேர்வ ரன்றே. 6

சுரநதிசூழ் காசிமுதற் பதிமறுமைக் கதியளிக்குந் தூநீர்
வைகை, வரநதிசூழ் திருவால வாய்சிவன் முத்திதரும் வதிவோர்க்
கீது, திரனதிகம் பரகதியும் பின்கொடுக்கு மாதலினிச் சிவன்
முத்தி, புரனதிக மெய்ப்பதெவ னதற்கதுவே யொப்பாமெப்
புவனத் துள்ளும். 7

ஆதலினிப் பதிவிட்டுப் பிறபதியிற் போய்நோற்போ ரங்கை
கொண்ட, சீதளவா னமுதேய்ப்பத் தித்திக்கத் தேம்பெய்து
செய்த தீம்பால், ஓதனத்தைக் கைவிட்டுப் புறங்கையை நக்குவா
ரொப்பா ரிந்த, மாதலத்தின் பெருமைதனை யாவரே யளவிட்டு
வழுத்தற் பாலார். 8

மற்றைய தலங்க டம்மிற் பரிமகம் வாச பேயம்
அற்றமில் சோட சாக மக்கினிட் டோமம் யார்க்கும்
முற்றரு மிராச சூய முதன்மக முடித்த பேறுஞ்
செற்றமி றரிச பூர்ண முதலிட்டி செய்த பேறும். 9

எள்ளிழு தன்னங் கன்னி யிவுளிதே ரியானை யில்லம்
வெள்ளியான் பொன்பூ ணாடை விளைவொடு பழன முன்னாத்

---

6. தேவ தேவு - தேவாதி தேவன். வதிதல் - வசித்தல்.

7. சுரநதி - தேவ நதி; கங்கை. வரம் - மேன்மை. திரம் - உறுதி. புரன் - புரம்; போலி.

8. ஏய்ப்ப ஒப்ப; உவமவுருபு. தேம் - தேன். ஓதனம் - சோறு. வழுத்தல் - சொல்லுதல்.

9. வாசபேயம், சோடசாகம், அக்கினிட்டோமம் - அந்தணர் செய்யும் யாக வகைகள். இராச சூயம் - அரசர் செய்யும் ஒரு வகை யாகம். தரிச பூர்ணம் - சிவனுக்கு மகிழ்வு தரும் ஒரு வகைக் கிரியை இட்டி - கிரியை. பேறு - பயன்.

பா-ம்—1 இங்கண் ; அங்கண். 2 தேவதேவன் திருவாலவாயதனைக். 3 பரவீடு சேர்வர்.

தள்ளரு மடிமை யாதி தானங்கள் செய்த பேறும்
வள்ளறன் காசி யாதிப் பதிகளில் வதிந்த பேறும். 10

கங்கைகா ளிந்தி வாணி காவிரி கண்ண வேணி
துங்கபத் திரைதீம் பாலி தூயதண் பொருநை முன்னுச்
சங்கையி னதிகண் முற்று மாடிய தவத்தின் பேறும்
மங்கல மதுரை தன்னில் வைகலும் வதிவோர்க் கெய்தும். 11

அன்னிய தலங்க டம்மி லாற்றிய பிரம கத்தி
பொன்னினைக் களவு செய்தல் கள்ளுண்டல் புனித வாசான்
பன்னியைப் புணர்த லின்ன பாதக மனைத்து மென்றுந்
தன்னிக ரால வாயில் வதிபவர் தமைவிட் டேகும். 12

மற்றைய தலத்திற் சாந்தி ராயண மதியந் தோறும்
உற்றபே றிங்குக் கங்கு லுண்டியா லடைபே றாகும்
மற்றைய தலத்தின் மாதப் பட்டினிப் பலத்தின் பேறிங்
குற்றொரு வைக லுண்டி யொழிந்தவர் பெறும்பே றாகும். 13

அயனக ரடைந்து நான்கு திங்களுண் பாற்றும் பேறிவ்
வியனக ரடைந்து நோற்கு மட்டமி விரத நல்கும்
அயனக ரெய்தி யாறு திங்களுண் பாற்றும் பேறிவ்
வியனகர்ச் சோம வார விரதமே யளிக்கு மன்றே. 14

ஏனைய தலத்தி லோராண் டுணவொழிந் தியற்று நோன்பால்
ஆனபே றிங்கு நோற்குஞ் சிவனிரா வளிக்கு மிங்கே
ஊனவைம் பொறியும் வென்றோன் முப்பொழு துண்டு வைகித்
தானமர்ந் தாலுங் காலுண் டியற்றுமா தவத்தோ னாகும். 15

இந்தநாள் மாட மோங்கு மாலவா யிடத்தியா ரேனும்
அந்தணர் தமக்கோர் முட்டி யருந்தவர் தமக்கோர் பிச்சை

---

10 இழுது - நெய். இவுளி - குதிரை. ஆன் - பசு. பழனம் - வயல். வள்ளல் - சிவபெருமான்.

11. காளிந்தி - யமுனை. வாணி - சரசுவதி நதி. கண்ண வேணி - கிருட்டினை. பாலி - பாலாறு. சங்கையில் - அளவற்ற

12. ஆசான் பன்னி - குருபத்தினி.

13. சாந்திராயணம் - ஒருவகை நோன்பு. கங்குல் - இரவு.

14. அயல் நகர் - மற்றைய தலம். அட்டமி விரதம் - அட்டமி திதியில் சிவனைக் குறித்துச் செய்யும் விரதம்.

15. சிவன் இரா - சிவராத்திரி விரதம். ஊனம் - குற்றம். கால் - காற்று : காற்றுணவு.

தந்தவர் புறம்பு செய்த சோடச தானந் தம்மால்
வந்தபே றடைவர் பல்வே றுரைப்பதென் மதியான் மிக்கீர். 16

பல்வகைத் தலங்க ளெல்லாம் வைகிய பயனு மென்றும்
பல்வகைத் தீர்த்த மெல்லா மாடிய பயனு மென்றும்
பல்வகைத் தான மெல்லா நல்கிய பயனு மென்றும்
பல்வகைத் தான பூசை பண்ணிய தவத்தின் பேறும். 17

பல்வகைத் தவங்க ளெல்லா முற்றிய பயனுந் தூய
பல்வகை மந்தி ரத்தி லெய்திய பயனு நூலின்
பல்வகைக் கேள்வி யெல்லா மாய்ந்துணர் பயனும் யோகம்
பல்வகை ஞான மெல்லாம் பயின்றுணர்ந் தடங்கும் பேறும். 18

அனையதொல் பதியி லென்றும் வைகுவோ ரடைவ ரென்றால்
இனையதொல் பதிக்கு நேர்வே றில்லையிப் பதியின் மேன்மை
தனையறி பவரா [1]ரீசன் றனன்றி யாத லாலே
வினையைவெல் பவரங் கெய்தி வ்திவதே வேண்டு மாதோ. 19

கைத்தலநான் கிரண்டுடைய மலர்க்கடவுண் மேலொருநாட் கயிலை யாதி, எத்தலமு மொருதுலையிட் டித்தலமு மொருதுலையிட் டிரண்டுந் தூக்க, உத்தமமாந் திருவால வாய்மிகவுங் கனத்தது கண் டுலகின் மேலா, வைத்ததல மிதுவென்று விதன்பெருமை யாவரே வழுத்தற் பாலார். 20

அத்திருமா நகரின்பேர் சிவநகரங் கடம்பவன [2]மமர்ந்தோர் சீவன், முத்திபுரங் கன்னிபுரந் திருவால வாய்மதுரை முடியா ஞானம், புத்திதரும் பூவுலகிற் சிவலோகஞ் சமட்டிவிச்சா புரந் தென் கூடல், பத்திதரு துவாதசாந் தத்தலமென் றேதுவினுற் பகர்வர் நல்லோர். 21

---

16. நான்மாடம் - நான்மாடக்கூடல். முட்டி - கையளவு உணவு. சோடச தானம் - பதினாறு வகைத் தானங்கள்.

17. வைகிய - தங்கிய. தானம் - தருமம்; தலம்.

18. முற்றிய பயன் - முடித்தலால் வரும் பயன்.

19. வினையை வெல்பவர் - இருவினையை வேரறுக்க விரும்புபவர்.

20. துலை - துலாத்தட்டு: ஆகுபெயர்.

21. சமட்டி - விச்சாபுரம். சிவ ஞானம் முதலிய எல்லா ஞானங் களையும் தரும் நகரம். சமட்டி - நிறைவு. விச்சை - ஞானம்.

பா-ம்—1 ஈசனன்றியே; ஈசனென்றறி. 2 மமர்ந்த.

என்றுதலச் சிறப்புரைத்த குறுமுனிவ னெதிரறவோ ரிறும்பூ தெய்தி, நன்றுதலப் பெருமையருள் செய்தனைகேட் டுட லெடுத்த நயப்பா டெல்லாம், இன்றடைந்தே மினிச்சுவண புண்டரிகச் சிறப்பதனை யிசைத்தி யென்னக், குன்றமடக் கிய கருணைக் குன்றனையான் வரன்முறையாற் கூறு கின்றான். 22

விரதமா தவத்தீர் காணின் வெவ்வினை யெல்லாம் வீட்டிச்
சரதமாப் போக நல்குந் [1]தமனிய முளரி வந்த
வரவுமக் கனக கஞ்சப் பெருமையும் வளனு நன்கா
உரைசெய்துங் கேண்மி னென்னு முனிவர னுரைக்கு மன்னோ. 23

ஆகச் செய்யுள்-255

---

22. இறும்பூது - வியப்பு. நயப்பாடு - நன்மை. சுவணப் புண்டரீகம் - பொற்றாமரைத் தீர்த்தம்.

23. வீட்டி - வீழ்த்தி. சரதம் - உண்மை. தமனிய முளரி, கனக கஞ்சம் - பொற்றாமரை. இங்கே, 'காணின்' என்றதை முதனூலார் 'கேட்கின்' என்று கூறியுள்ளார்.

பா-ம்—1 தபனிய.

# தீர்த்தவிசேடம்

—o—

கண்ணகன் குடுமி மாடக் கடிபொழி லால வாயின்
அண்ணலம் பெருமை யாரே யளப்பவ [1]ரவிர்தண் முத்த
வெண்ணகை யுமையா ளன்பு விளைமுகச் செவ்வி போலத்
தண்ணறுங் கமலம் பூத்த தடப்பெருந் தகைமை சொல்வாம். 1

ஆற்றினுக் கரசாங் கங்கை காவிரி யாதி யாறும்
வேற்றுரு வாய முந்நீர் வேலையும் பிறவுங் காருந்
தோற்றுமுன் றன்னை யாட்டச் சுந்தர மூர்த்தி செங்கண்
ஏற்றினன் கண்ட தீர்த்த மாகுமீ தெவ்வா றென்னின். 2

அகளமா யுலக மெல்லா மொடுக்கியந் நெறியே யார்க்கும்
[2]நிகளமாம் விருத்தி தோன்ற நினைவற நினைந்து நிற்குந்
துகளிலா வறிவா னந்த சுந்தரச் சோதி மேனாட்
சகளமா முருவங் கொண்டு தானொரு விளையாட் டாலே. 3

மூக்கண னரவப் பூண நூலினன் முகிழ்வெண் டிங்கட்
செக்கரஞ் சடையன் சூல கபாலத்தன் செங்க ணேற்றன்
மைக்கருங் கயலுண் கண்ணி வாமத்தன் முன்னும் பின்னும்
பக்கமு நந்தி யாதி கணநிபர் பரவிச் சூழ. 4

சென்றுதன் மேனித் தேசாற் றிசையெலாம் விளங்கச் செங்கண்
வென்றிகொ ளுரக வேந்த னகரமும் விபுதர் வேந்தன்
பொன்றிகழ் நகரும் வேதன் புரமுமால் புரமு மேலைத்
தன்றிரு நகருஞ் சென்று சஞ்சரித் தாடி மீள்வான். 5

---

1. கண் - இடம். குடுமி - சிகரம். கடி - வாசனை.

2. ஆட்ட - திருமஞ்சனஞ் செய்விக்க. கண்ட - தோற்றுவித்த.

3. அகளம் - நிட்களம்; அருவமாகிய சிவம். நிகளம் - பாசம்; தளை. சகளம் - உருவத் திருமேனி.

4 செங்கண் ஏறு - தருமவிடை. வாமத்தன் - இடப்பாகத்தில் கொண்டவன்; சிவன்.

5. தேசு - ஒளி. உரக வேந்தன் - ஆதிசேடன். விபுதர் - தேவர். வேதன் - பிரமன். தன் திருநகர் - சிவலோகம்.

பா-ம்—1 ரவிர்ந்த முத்த. 2 நிகளமாய்.

அன்னபோ தயனுந் தேவர்க் கரசனு மாழி வேந்தும்
முன்னர்வந் திறைஞ்சி யேத்த முனிவரும் பேறு நல்கித்
தன்னக ரடைந்து நீங்காத் தனிப்பெருங் கணத்தி னோரை
இன்னருள் சுரந்து நோக்கி யிலிங்கத்திற் புகுது மெல்லை. 6

வேத்திரப் படையோ னாதி கணநிபர் வீழ்ந்து பால
நேத்திர வன்பர்க் கன்ப நிரஞ்சன நிருத்தா னந்த
சாத்திர முடிவுந் தேறாத் தனிமுத லொருவ வென்னாத்
தோத்திர வகையா லேத்தித் தொழுதொன்று வினவல் செய்வார். 7

ஐயவிவ் விலிங்க மூர்த்திக் காட்டவு மடியே மூழ்கி
உய்யவுங் கங்கை யாதி நதிகளு முலகத் [1] துள்ளோர்
மையறு தடாக நீரு மற்றிலை யிருமைப் பேறுஞ்
செய்யவோர் தீர்த்த மிங்குண் டாக்கெனச் செப்ப லோடும். 8

அத்தகை யிலிங்க மூர்த்திக் கடுத்ததென் கீழ்சா ராக
முத்தலை வேலை வாங்கி நாட்டினன் முதுபார் கீண்டு
பைத்தலைப் பாந்தள் வேந்தன் பாதலங் கீண்டு போயெண்
கைத்தலப் பிரம னண்ட கடாகமுங் கீண்ட தவ்வேல். 9

அவ்வழிப் புறம்பு சூழ்ந்து கிடந்தபே ராழி யூழிப்
பௌவநீ ரென்ன வோங்கப் பாணியா லமைத்து வேணித்
தெய்வநன் னீரைத் தூவிக் கலந்துமா தீர்த்த மாக்கிக்
கைவரை கபாலி நந்தி கணத்தினை நோக்கிக் கூறும். 10

இன்னமா தீர்த்தந் தன்னை யெனைப்பல தீர்த்தங் கட்கு
முன்னம்யா மிங்குக் கண்ட முதன்மையா லாதி தீர்த்தம்

---

6. ஆழி - சக்கரம். ஆழிவேந்து - திருமால். முனிவு - வெறுப்பு.

7. வேத்திரப் படையோன் - திரு நந்திதேவர். பாலம் - நெற்றி. நிரஞ்சன - களங்கமில்லாதவனே!

8 ஐய: விளி. மை - ஆணமலம்; பாவம். அறுநீர் - அறுத்தற்குக் காரணமாகிய நீர். இருமைப் பேறு - இம்மை மறுமைப் பயன். செய்ய - நல்க.

9. சார்-பக்கம் அண்ட கடாகம்-அண்ட கோளத்தின் புறவோடு.

10. புறம்பு சூழ்ந்து கிடந்த பேர் ஆழி - (சக்கரவாளகிரியின்) புறம்பு சூழ்ந்து கிடந்த பெரும்புறக் கடல். பௌவம் - கடல். பாணி - கை.

11. கண்ட - உண்டாக்கிய. மன் - நிலைபெறு.

பா-ம்—1 துள்ள. (உள்ள - மதிக்க; உள்ளம் - ஆன்மா.)

என்னலா மினியுண் டாக்குந் தீர்த்தங்க ளெவைக்கு மேலாய்
மன்னலாற் பரம தீர்த்த மெனப்பெயர் வழங்க லாகும். 11

மருட்கெட மூழ்கி னோர்கள் மங்கலம் பெறலா னாமம்
அருட்சிவ தீர்த்த மாகும் புன்னெறி யகற்றி யுள்ளத்
திருட்கெட ஞானந் தன்னை யீதலான் ஞான தீர்த்தந்
தெருட்கதி தரலான் முத்தி தீர்த்தமென் றிதற்கு நாமம். 12

குடைந்துதர்ப் பணமுஞ் செய்து தானமுங் [1]கொடுத்தம் மாடே
அடைந்தெழுத் தைந்து மெண்ணி யுச்சரித் தன்பா லெம்மைத்
தொடர்ந்துவந் திறைஞ்சிச் சூழ்ந்து துதித்தெமை யுவப்பச் செய்தோர்
உடம்பெடுத் ததனா லெந்த வுறுதியுண் டதனைச் சேர்வார். 13

இந்தநீ ரெம்மை யாட்டி னேழிரண் டுலகின் மிக்க
அந்தமி றீர்த்த மெல்லா மாட்டிய பயன்வந் தெய்தும்
வந்திதின் மூழ்கி யிங்கு வைகுநங் குறியை யுங்கள்
சிந்தையி லார்வம் பொங்கப் பூசனை செய்மி னென்றான். 14

விண்ணவர் தம்மின் மேலாம் வேதிய னாகி நின்ற
பண்ணவன் றானந் நீரிற் படிந்துதன் [2]னனுஞை யாலே
அண்ணலங் கணத்தி னோரை மூழ்குவித் தனாதி யாய
புண்ணிய விலிங்கந் தன்னுட் புகுந்தினி திருந்தான் மன்னோ. 15

அந்தமா நீரா னந்தி யாதியோர் விதியாற் சோம
சுந்தரன் முடிமே லாட்டித் துகளறப் பூசை யாற்றிச்
சிந்தையில் விழைந்த வெல்லா மடைந்தனர் செம்பொற் கஞ்சம்
வந்தவா றிதுவத் தீர்த்த மகிமையு முரைப்பக் கேண்மின். 16

வளையெறி தரங்க ஞான வாவியை நோக்கிற் பாவத்
தளையறு மூழ்கின் வேண்டுங் காமிய மெல்லாஞ் சாரும்
உளமுற மூழ்கு மெல்லை முழுக்கொன்றற் குலகத் துள்ள
அளவறு தீர்த்த மெல்லா மாடிய பயன்வந் தெய்தும். 17

---

12. மருள் - அஞ்ஞானம்.
13. தர்ப்பண நீர்-மந்திர நீர். அம்மாடே-அத்தீர்த்தத்தின் அருகே.
14. குறி - திருவருட் குறி ; சிவலிங்கம்.
15. அனுஞை - கட்டளை. அனாதி - தனக்கோர் முதலில்லாதது.
16. செம்பொன் கஞ்சம் - பொற்றாமரை.
17. காமியம் - விரும்பும் பொருள்.
பாடம்—1 கொடுத்துமாடே. 2 அனுச்சையாலே.

மெய்யைமண் ணாதி கொண்டு விதிவழி சுத்தி செய்து
மையறு வருண [1]சூத்த மந்திர நவின்று மூழ்கிற்
றுய்யமா தீர்த்த மெல்லாந் தோய்ந்துநான் மறையு மாய்ந்தோர்
கையிலெப் பொருளு மீந்த காசறு பேறு நல்கும். 18

தெய்வவித் தீர்த்தந் தன்னை நினைவின்றித் தீண்டி னாலும்
அவ்விய வினையி னீந்தி யரும்பெறல் வீடு சேர்வர்
இவ்வுரை மெய்யே யாகு மென்னெனின் மனத்தா றன்றி
வெவ்வழ றீண்டி னாலுஞ் சுடுமன்றி விடுமோ வம்மா. 19

ஆருமந் நீரி லென்று மாடினார் சீவன் முத்தி
சேருவ ரந்நீ ராடுஞ் சிறப்புறு பயனுக் கொவ்வா
வாருண மாக்கி னேய மந்திர மிவைமுன் னான
பேருணர் வளிக்கு நானஞ் செய்தவர் பெறும்பே றெல்லாம். 20

அன்னநீர் தன்னையு மாடி யாலவா யுடைய நாதன்
தன்னையும் பணிவோன் மேலைப் பரகதி தன்னைச் சாரும்
[2]என்னநன் னூலிற் சொன்ன பவித்திர மெவைக்கு மேலாய்ப்
பன்னரும் புனித மான பவித்திர மாகி நிற்கும். 21

ஆதர விலனா யந்நீ ராடினோன் சுவர்க்கஞ் சேரும்
ஆதர வுளனாய் மூழ்கி வானவ ராதி யானோர்க்
காதர வரிசி யெள்ளுத் தருப்பண மமையச் செய்தோன்
ஆதர வேள்வி முற்று மாற்றிய பயனைச் சேரும். 22

ஏனைமா தலங்க டம்மி லிருந்துசெய் விரதம் பூசை
தானமா தரும மோமந் தவஞ்செபந் தியானந் தம்மால்
ஆனமா பயனிற் கோடி யதிகமா மடைந்து மூழ்கி
ஞானமா தீர்த்த ஞாங்க ரிருந்தவை நயந்து செய்யின். 23

---

18. மண்ணாதி - ஒன்பது வகை மண்ணும், எழுவகைத் தளிரும், பஞ்ச கௌவியமும் ஆகும். வருண சூத்த மந்திரம் - வருண பகவானின் தோத்திர மந்திரம்.

19. அவ்விய வினை - பொறாமை முதலிய தீக்குணம்.

20. வாருணம் - வருணஸ்நானம். ஆக்கினேயம் - வெந்நீர் ஸ்நானம். மந்திரம் - மந்திரஸ்நானம். நானம் - ஸ்நானம்.

21. பவித்திரம் - புனிதம்; பாவத்தை நீக்கி மோட்சத்தைத் தருவது. என்ன - எப்படிப்பட்ட.

22. ஆதரவு, ஆதரம் - விருப்பம்.

23. ஞாங்கர் - கரை.

பா-ம்—1 சூக்க. 2 இன்னம்.

பிறந்தநா ளங்கீர் மூழ்கின் மேலைவெம் பிறவிப் பௌவம்
மறிந்திடு மறிதேள் கும்ப மதிகளின் மூழ்கித் தென்பால்
உறைந்தவர் பொருட்டுப் பிண்ட முதவினு லவர்தா மாழ்ந்து
நிறைந்திடு பிறவிப் பௌவ நின்றுமே லெழுவ ரன்றே. 24

அத்தட மருங்கின் யாவர் தென்புல மடைந்தோர் தங்கள்
சித்தமா சகற்ற வேண்டிச் செய்கடன் முடிக்கி னன்னோர்
எத்தனை யெண்ணோர்ந் தாலு மெள்ளுக்கா யிரமாண் டாக
அத்தனை யாண்டு மட்டு மவரைவிண் ணுள வைப்பார். 25

மூவகை யுலகி லுள்ள தீர்த்தமு முறையா லென்றுஞ்
சேவகஞ் செய்யு மிந்தத் தீர்த்தமெந் நாளு மூழ்கி
ஏவரந் நீரா லென்று மீசனைப் பூசை செய்வோர்
ஆவரிப் பிறவி தன்னி லவர்[1]கதிக் கரையைச் சார்வார். 26

விடுத்திட லரிய நித்த வேள்விமா விரதம் வேதந்
தடுத்திட லரிய தானந் தவமிவை தரும்பே றெல்லாம்
அடுத்ததன் கரையில் வைகி யீசனை யருச்சிப் போர்க்குக்
கொடுத்திடு புண்ணி யத்திற் கோடியி லொன்றுக் கொவ்வா. 27

உம்மையிற் பிறவி தோறு நியமநல் லொழுக்கம் பூண்டு
பொய்ம்மையில் விரதந் தானந் தவஞ்செய்து புனித ராகிச்
செம்மைநன் னெறியி னின்ற சித்தருக் கலதித் தீர்த்தம்
இம்மையி லடைந்து நித்த மாடுதற் கெய்தா தன்றே. 28

மதிகதிரோ னிடத்தொடுங்கு தினந்திங்கட் பிறப்பரவம்
வாயங் காந்து, கதிர்கடமை விழுங்குதினம் விதிபாத மிந்நாளிற்
கருதி மூழ்கித், துதிகடருப் பணந்தானம் புரிதன்மனு வோது

---

24. மறிந்திடும் - வற்றும். மறி - சித்திரை மாதம். தேள் - கார்த்திகை மாதம் கும்பம் - மாசி மாதம்

25. தென்புலம் - பிதிரர் உலகம்.

26. சேவகம் - ஏவற் பணிவிடை

27. நித்தவேள்வி - நித்தியாக்கினி காரியம்.

28. உம்மை - முற்பிறவி. செம்மை நன்னெறியில் நின்ற சித்தர் - முழுதும் நல்வழியினிலைத்த சித்தத்தையுடையோர்; நடுநிலையாகிய நல்லொழுக்கத்தின் நின்ற சித்தருமாம்.

பா-ம்—1 கதிக்கரசராவார்.

தலத்தொகையொன் றற்கொன், றதிகபல் னம்முறைறநூ றுயிர நூறுயிரமோ ரனந்த மாகும். 29

பொருவரிய தகர்த்திங்க டுலாத்திங்க ளிவையுதிக்கும் போது மூழ்கின், ஒருபதிறு யிரமடங்காஞ் சுறவுகவைத் தாளலவ னுதிப்பின் மூழ்கின், இருபதிறு யிரமடங்கா மிந்திரவி யிடத்தொடுங்கு மிந்து வாரம், வருவதறிந் தாடிமனு வோதன்முதற் செயினனந்த மடங்குண் டாகும், 30

பிரயாகை தனின்மகர மதிநாண்முப் பதுங்குடைந்து பெறும்பே றிந்தத், திரையார்பைந் தடத்தொருநாண் மூழ்குவோன் பெறும்விரத சீலம் பூண்டு, வரையாம லொருவருடம் படிந்துமையை யமரர்சிகா மணியாம் வேத, உரையானை வழிபடுமேன் மலடிக்கு நன்மகப்பே றுண்டா மன்றே. 31

எண்டிசைய நதிவாவி வடிவான மாதீர்த்த மெல்லா மிப்பொற், புண்டரிக தடத்திலொரு கோடியிலோர் கூறுநிகர் போதா வீது, கண்டதனு லறந்தீண்டப் பெற்றதனு னற்பொருளங் கையா லள்ளிக், கொண்டதனு லின்பநலங் குடைந்ததனுற் பேரின்பங் கொடுக்கு மன்றே. 32

முன்னவ னருளிச் செய்த காரண முறையா லன்றி
இன்னமிப் புனித வாவிக் கேதுவா லெய்து நாமம்
மின்னவிர் சடையான் சென்னி மேவிய கங்கை நீரிற்
பின்னது கலந்த நீராற் பெறுஞ்சிவ கங்கையென்றும். 33

---

29. மதி கதிரோன் இடத்து ஒடுங்கு தினம் - அமாவாசை. திங்கள் பிறப்பு - மாதப் பிறப்பு. அரவம் வாய் அங்காந்து கதிர்கள் தமை விழுங்கு தினம் - கிரகண நாள். விதிபாதம் - ஒரு யோகம்.

30. தகர்த்திங்கள் - சித்திரை மாதம். துலாத்திங்கள் - ஐப்பசி மாதம். சுறவு - தை மாதம். கவைத்தாள் அலவன் - பிளவுபட்ட காலையுடைய நண்டு; ஆடி மாதம். இந்து வாரம் - திங்கட்கிழமை. மனு - மந்திரம்.

31. மகரமதி - தை மாதம். வரையாமல் - தவறுமல்.

32. பொற்புண்டரிகதடம் - பொற்றாமரைத் தீர்த்தம்

33. வாவி - தடாகம் சிவகங்கை - சிவதீர்த்தம்.

அலகிலாத் தீர்த்தந் தம்மு ளதிகவுத் தமமாய்த் தோன்றி
இலகலா விதனைத் தீர்த்த வுத்தம மென்ப ராய்ந்தோர்
பலவிதழ் விரித்துச் செம்பொற் பங்கய மலர்ந்த நீரால்
உலகவர் யாரும் பொற்றா மரையென வுரைப்ப ரன்றே. 34

தருமமுன் னுகு நான்குந் தருதலாற் றரும தீர்த்தம்
அருமைசா லருத்த தீர்த்த மரும்பெறற் காம தீர்த்தம்
இருமைசேர் முத்தி தீர்த்த மென்பதா மினைய தீர்த்தம்
வெருவரு பாவ மென்னும் விறகினுக் கெரியா மன்றே. 35

இவ்வருந் தலத்தி னுன்ற பெருமையுமெரிகால் செம்பொற்
றெய்வத பதும தீர்த்தப் பெருமையுஞ் செப்பக் கேட்டோர்
எவ்வமில் போகம் வீடு பெறுவரென் றிசைத்தான் முந்நீர்ப்
பௌவமுண் டமரர் வேந்தன் பரிபவ விழுமந் தீர்த்தோன்.

ஆகச் செய்யுள்-291

---

34. அலகு - அளவு. இலகல் - விளங்குதல்.

35. இருமை - பெருமை. வெரு - அச்சம்.

36. பதுமம் - தாமரை. பரிபவ விழுமம் - துன்பம்.

# மூர்த்திவிசேடம்

—c—

ஆலவா [1]யலர்ந்த செம்பொ னம்புயப் பெருந்தீர்த் தத்தின்
மேலவாம் பெருமை தன்னை விளம்புவா ரெவரே யங்கண்
நீலமா மிடற்று முக்க ணிராமய னறிவா னந்த
மூலமா விலிங்க மேன்மை முறையினு லறைய லுற்றும். 1

பொன்னெடு மேரு வெள்ளிப் பொருப்புமந் தரங்கே தாரம்
வன்னெடும் புரிசை சூழ்ந்த வாரண வாசி யாதிப்
பன்னருந் தலங்க டம்மிற் பராபர விலிங்கந் தோன்றும்
முன்னரிக் கடம்பின் மாடே முளைத்ததிச் சைவ லிங்கம். 2

அப்பதி யிலிங்க மெல்லா மருட்குறி யிதனிற் பின்பு
கப்புவிட் டெழுந்த விந்தக் காரண மிரண்டி னுலும்
ஒப்பரி தான ஞான வொளி[2]திரண் டன்ன விந்தத்
திப்பிய விலிங்க மூல விலிங்கமாய்ச் சிறக்கு மன்றே. 3

இந்தமா விலிங்கத் தெண்ணுன் கிலக்கண விச்சை மேனி
அந்தமி லழகன் பாகத் துமையொடு மழகு செய்து
சந்ததம் விளக்கஞ் செய்யுந் தகைமையை நோக்கிச் சோம
சுந்தர னென்று நாமஞ் [3]சாத்தினுர் துறக்க வாணர். 4

திறப்படு முலக மெங்கும் வியாபியாய்ச் சிறந்து நிற்கும்
அறப்பெருங் கடவுள் சோம சுந்தர னதனு லன்றே
கறைக்கதிர் வடிவேற் றென்னன் கையிற்பொற் பிரம்பு பட்ட
புறத்தடித் தழும்பு மூன்று புவனமும் பட்ட தன்றே. 5

---

1. மேல் - விண்ணவர்; ஆகுபெயர். நிராமயன் - நோயில்லாதவன்; இறைவன்

2. வாரணவாசி - காசி. பராபரன் - பரைக்கு நாயகன்.

3. கப்பு - கிளை.

4. சந்ததம் - எப்பொழுதும். சோமசுந்தரன் - உமையோடுகூடி அழகு செய்பவன்.

5. வியாபி - வியாபகன். கறை - இரத்தம். புறம் - முதுகு.

பா-ம்—1 யமர்ந்த. 2 திரண்டான. 3 சாற்றினுர்.

சொற்றவிச் சமட்டி யான சோமசுந் தரனைக் காணப்
பெற்றவர் வியட்டி யான பிறபதி யிலிங்கங் காணல்
உற்றவ ராவ ரென்னென் றுரைக்கின்வே றுட்டு நீர்போய்
மற்றைய சினைக ளெல்லாந் தழைவிக்கு மரத்தின் மாதோ. 6

எத்தலத் தியாவ னெண்ணெண் டிருவிளை யாடல் செய்தான்
அத்தலத் தவனுக் கொப்பு மதிகமாஞ் சிறப்பும் பெற்ற
உத்தம னென்று [1]மெந்த வுலகிலு மில்லை யந்த
வித்தக னதிகத் தன்மை யெனைத்தெனின் விளம்பக் கேண்மின். 7

பொருப்பினுட் டலைமை யெய்தும் பொன்னெடுங் குடுமி மேரு
தருக்களிற் றலைமை சாருந் தண்ணறுந் தெய்வ தாரு
விருப்புறு வேள்வி தம்முண் மேம்படும் புரவி மேதம்
அருட்படு தானந் தம்முள் விழுமிதா மன்ன தானம். 8

மனிதரி லுயர்ந்தோ ராதி மறையவர் தேவர் தம்மிற்
பனிதரு திங்கள் வேணிப் பகவனே யுயர்ந்தோன் வேட்டோர்க்
கினிதருள் விரதந் தம்மு ளதிகமா மிந்து வாரம்
புனிதமந் திரங்க டம்முட் போதவைந் தெழுத்து மேலாம். 9

மின்மைசான் மணியிற் சிந்தா மணிவரம் விழுப்ப நல்குந்
தன்மைசா லறங்க டம்மின் மிகுஞ்சிவ தரும மென்ப
இன்மைசா னெறியின் றேருக் கேற்குநற் கலங்க டம்மின்
நன்மைசான் றவரே முக்க ணுதனுக் கன்பு பூண்டோர். 10

[2]தீயவாஞ் சுவைப்பா லாவிற் றேவரா வதிகம் பல்வே
றுயமா தீர்த்தந் தம்மு ளதிகமாஞ் சுவண கஞ்சம்
மாயமா சறுக்க வெல்லாத் தலத்திலும் வதிந்து மன்னுந்
தூயவா னவரிற் சோம சுந்தரன் சிறந்தோ னாகும். 11

---

6. சமட்டி - எல்லாமானது; சூக்கும மூர்த்தி. வியட்டி - வெவ்வேறானது; தூலமூர்த்தி.

7. வித்தகன் - ஞானமூர்த்தி. வித்தகம் - ஞானம்.

8. தெய்வதாரு - கற்பகத்தரு. மேதம் - யாகம்.

9. இந்து வாரம் - திங்கட்கிழமை.

10. மின்மை - ஒளி. இன்மைசால் நெறி - இல்லற நெறி. கலம் - தான பாத்திரம்.

11. தீ - இனிமை. தேவர் ஆ - காமதேனு சுவணம் - பொன்.

பா-ம்—1 எல்லா வுலகிலும். 2 தீயவான்சுவைப்.

அந்தமு முதலு மில்லா வகண்டபூ ரணமா யார்க்கும்
பந்தமும் வீடு நல்கும் பராபரச் சோதி தானே
வந்தனை புரிவோர்க் கிம்மை மறுமைவீ டளிப்பா னிந்தச்
சுந்தர விலிங்கத் தென்றும் விளங்குவான் சுருதி யேத்த. 12

இத்தகு சயம்பு தன்னை யேனைய சயம்பு வெல்லாம்
நித்தமுந் தரிசித் தேகு நிருமல வொளியா மிந்த
உத்தம விலிங்கங் கண்டோ ருரையுணர் வொடுங்க வுள்ளே
சித்தமா மொழியத் தோன்றுஞ் சிவபரஞ் சுடரைக் கண்டோர். 13

இத்தனிச் சுடரை நேர்கண் டிறைஞ்சினோர் பாவ மெல்லாங்
கொத்தழற் பொறிவாய்ப் பட்ட பஞ்சுபோற் கோப மூள
மெய்த்தவஞ் சிதையு மாபோன் மருந்தினால் வீயு நோய்போல்
உத்தம குணங்க ளெல்லா முலோபத்தா லழியு மாபோல். 14

கலிகட விரவி தோன்றக் கருகிரு ளுடையு மாபோல்
ஒலிகெழு பெருங்கா றள்ள வுடைபடு மேகம் போல
வலிகெழு மடங்கல் சீற மாயுமால் யானை போலக்
குலிசவல் லேறு தாக்கப் பொடிபடுங் குன்றம் போல. 15

மருட்சிசெய் காம நோயான் மதிகெடு மாறு போல
அருட்சிவ ஞான நோக்கால் வலிகெடு மவிச்சை போலத்
தருக்குறு முவணஞ் சீறத் தழலரா விளியு மாபோற்
செருக்குற வழியுங் கற்ற கல்விபோற் சிதையு மன்றே. 16

புலரியிற் சீவன் முத்தி புரேசனைக் காணப் பெற்றால்
அலைகட லுன்குட் பட்ட வவனிமா தானஞ் செய்த
பலனுறுங் கதிர்கா லுச்சி வைகலிற் பணியப் பெற்றாற்
கலைஞர்பா லாற்றுப் பத்துக் கபிலைமா தானப் பேறும். 17

---

12. சுருதி - வேதங்கள்.

13. சயம்பு - சுயம்பு; தானேயுண்டானது. உரையுணர்வு வாக்கு மனம்.

14. உலோபம் - ஈயாமைக்குணம்.

15. மடங்கல் - சிங்கம். குலிசம் - வச்சிராயுதம். ஏறு - இடி.

16. மருட்சி - மயக்கம். அவிச்சை - அஞ்ஞானம். உவணம் - கருடன். விளிதல் - அழிதல்.

17. புலரி - விடியற்காலம். அவனி - பூமி. கபிலை - பசு.

விண்ணிடைப் பரிதிப் புத்தேண் மேலைநீர் குளிக்கு மெல்லை
அண்ணலை வணங்கிற் கோடி யானினத் தானப் பேரும்
பண்ணவர் பரவும் பாதி யிருள்வயிற் பணியப் பெற்றால்
வண்ணவெம் புரவி மேத மகம்புரி பெரும்பே றெய்தும். 18

இன்னன வதிக மாம்பே றறிந்துபோ யெத்தே வர்க்கும்
முன்னவன் சமட்டி விச்சா புரமுறை முதல்வன் றன்னைச்
சொன்னவிக் காலந் தோறு மிறைஞ்சியுந் தொழுதுஞ் சூழ்ந்தும்
பொன்னடிக் கன்ப ராகி வழிபடும் புனித சிலர். 19

உம்மையில் வினைக ளென்னும் பிணியவிழ்ந் தொருவித் தூய
செம்மைய ராகி யாறுத் திருவொடு செல்வ மோங்க
வெம்மையில் போக மூழ்கி மலவிருள் வீக்க நீந்தி
மைம்மவி கண்டத் தெங்கோன் மலரடி நீழல் வாழ்வார். 20

அறவுருவ னுலவா யானுமஞ் செவிமடுத்தா லடைந்த பத்துப், பிறவிவினை யறுநினைந்தா னூறுபெரும் பவப்பாவப் பிணிபோங் கூடல், இறைவனையின் றிறைஞ்சுதுமென் றெழுந்து மனைப் புறம்போந்தா லீரைஞ் ஞூறு, மறமுறுவெம் பவத் திழைத்த பாதகவல் வினையனைத்து மாயு மன்றே. 21

புழைக்கைவரை தொலைத்தானைத் தரிசித்தோ ராயிரவாம் புரவி வேள்வி, தழைத்தபெரும் பயன்பெறுவ ருருத்திரசூத் தம் மதனுற் றவவா னோர்கள், தொழற்கரியான் றனைத்துதித்தோர் கணத்துக்கா யிரராச சூய யாகம், இழைத்தபெரும் பயன்பெறு வர் சமட்டிவடி வாகியவவ் விலிங்கந் தன்னை. 22

அங்கையள வாகியநன் னீராட்டிப் பூசித்தோ ரளவி லேனைத், துங்கதலத் துறையிலிங்க மூர்த்திகளைச் சிவாகமநூல் சொன்ன வாற்றான். மங்கலமா கியமுகம னீரெட்டும் வழுவாது

---

18. பரிதிப்புத்தேள் - சூரியன்.
19. சமட்டி விச்சாபுரம் - மதுரை.
20. செம்மை - நடுநிலைமை. ஆறுத்திரு - நீங்காத செல்வம்.
21. மறம் - தீமை. பவம் - பிறப்பு.
22. புழைக்கை வரை - யானை. வாம் - தாவும், சூத்தம் - சூக்தம்; நல்லவாக்கியம்.
23. துங்க - மேலான. முகமன் ஈரெட்டு - சோடசோபசாரம்.

வாசந் தோய்ந்த, செங்கனக மணிக்கலசப் புனலாட்டி மாபூசை செய்தோ ராவார். 23

அவ்வண்ணஞ் சுந்தரனை யைந்தமுத மானுதவு மைந்து தீந்தேன், செவ்வண்ணக் கனிசாந்தச் சேறுமுதன் மட்டித்துத் தேவர் தேரு, மெய்வ்வண்ணங் குளிரவிரைப் புனலாட்டி மாபூசை விதியாற் செய்தோர், மைவ்வண்ண வினைநீந்தி அறமுதனாற் பொருளடைந்து மன்னி வாழ்வார். 24

நல்லவகை முகமனீ ரெட்டுள்ளும் வடித்தவிரை நன்னீ ராட்ட, வல்லவர்நூ றுயிரமா மேதமகப் பயன் பெறுவர் வாச நானம், எல்லவிர்குங் குமஞ்சாந்த மிவைபலவு மட்டித்தோ ரெழிலார் தெய்வ, முல்லைநகை யாரோடும் விரைக்கலவை குளித் தின்ப மூழ்கி வாழ்வார். 25

நன்மலரொன் றுலவா யான்முடிமேற் சாத்தினு னயந்து நூறு, பொன்மலர்கொண் டயற்பதியிற் பூசித்த பயனெய்தும் புனித போகத், தன்மைதரு சுந்தரற்குத் தூபமொரு காற் கொடுப்போர் தமக்குத் தாங்கள், சொன்மனமெய் யுறச்செய்த குற்றமா யிரம்பொறுப்பன் சுருதி நாதன். 26

திருவமுது நிவேதிப்போ ரவிமொன்றற் குகமொன்றுச் சிவலோ கத்தின், மருவிநிறை போகமுடன் வைகுவர்தாம் பூலமுக வாச மீந்தோர், பொருவரிய கடவுளராண் டொருநூறு கோடி சிவ புரத்து வாழ்வார், ஒருபளித விளக்கிடுவோர் வெண்ணிறமுங் கண்ணுதலு முடைய ராவார். 27

நறுந்திருமஞ் சனமெடுக்கக் குடமாட்ட மணிக்கலச நல்ல வாசம், பெறுந்தகைய தூபக்கா ரீபக்கான் மணியின்ன பிறவுங் கங்குல், தெறுங்கதிர்கான் மணிமாட மதுரைநா யகர்க்கீந்தோர் செய்த பாவம், வெறுந்துகள்செய் தைம்பொறிக்கும் விருந்தூட் டும் பெருங்காம வெள்ளத் தாழ்வார். 28

---

24. ஐந்து அமுதம் - பஞ்சாமிர்தம். மட்டித்து - அப்பி.
25. விரை - வாசனை. நானம் - கத்தூரி.
26. சொல் மனம் மெய் - திரிகரணங்கள்.
27. அவிழ் - பருக்கை. முகவாசம் - தக்கோலம், ஏலம், இலவங்கம் கர்ப்பூரம், சாதிக்காய் என்னும் ஐந்து. பளிதம் - கர்ப்பூரம்.
28. துகள்செய்து - பொடிசெய்து. விருந்து - புதுமை.

[1]கயலிசைய கண்ணுமைகோன் றிருமுன்னர்ப் பல்லியமுங் கல்லென் றார்ப்ப, இயலிசைய பாடலினோ டாடலிவை செய்விப் போ ரிறுமாப் பெய்திப், புயலிசைய வியங்கலிப்ப மூவுலகுந் தொழுவரசாய்ப் பொலங்கொம் பாடுஞ், செயலிசைய வணங் கனையா ராடரங்கு கண்டின்பச் செல்வத் தாழ்வார். 29

ஒருகாலட் டாங்கமுடன் பஞ்சாங்க [2]முடனுத லொண்செங் கால்வெண், [3]குருகாலு மலர்த்தடஞ்சூழ் கூடனு யகற்பணிவோர் கோலொன் றேச்சிப், பொருகாலின் வருபரித்தேர் மன்னவரா யாவருந்தம் புடைவந் தெய்தி, இருகாலுந் தலைவருட வெக் காலுந் தமைவணங்க விருப்ப ரன்றே. 30

இத்தகைய திருவால வாயுடையான் றிருமுன்ன ரியற்று மோமம், மெய்த்தவமந் திரந்தான மின்னவனு வளவெனினு மேரு வாகும், உத்தமமா மிவ்விலிங்கப் பெருமையெலாம் யாவ ரளந் துரைப்பர் வேத, வித்தகரே சிறிதறிந்த வாறுரைத்தே மினிப்பலகால் விளம்பு மாறென். 31

இத்தலத்துக் கொப்பாக வொருதலமும் பொற்கமல மென்னு மிந்த, உத்தமமா தீர்த்தத்துக் கொப்பதொரு தீர்த்தமு மெய் யுணர்வா னந்த, வித்தனைய விலிங்கமிதற் கொப்பாவோ ரிலிங்கமும்பார் விண்மே லென்னும், முத்தலத்து மிலையந்த மூர்த்திதிரு நாமங்கண் மொழியக் கேண்மின். 32

கருப்பூர சுந்தரன்பூங் கடம்பவன சுந்தரனுட் கரவாத் தொண்டர், விருப்பூருங் கலியாண சுந்தரனல் லறவடிவாய் விளங்கு மேற்றுப், பொருப்பூரு மபிராம சுந்தரன்றேன் புடை கவிழப் பொன்னிற் பூத்த, மருப்பூசு சண்பகசுந் தரன்மகுட சுந்தரன்முன் வாழி மன்னோ. 33

---

29. இசைய, அ: சாரியை. இசை - ஒத்த. பல்லியம் - பல வாத்தி யங்கள்.

30. ஆலும் - ஒலிக்கும்.

31. வித்தகர் - அறிவுடையோர்.

32. மெய் உணர்வு ஆனந்தம் - சச்சிதானந்தம்.

33. கடம்பவனம் - மதுரை. கடம்பு - ஒருவகை மரம்.

பா-ம்—1 கயலிசையும்; கயலிசையம். 2 முடனுகவொண். 3 குருகாரும்.

மான்மதசுந் தரன்கொடிய பழியஞ்சு சுந்தரனோர் மருங்கின்
ஞானத், தேன்மருவி யுறைசோம சுந்தரன்றேன் செவ்வழியாழ்
செய்யப் பூத்த, கான்மருவு [1]தடம்பொழில்சூ ழாலவாய்ச் சுந்த
ரன்மீன் கணங்கள் சூழப், பான்மதிசூழ் நான்மாடக் கூடலு
யகன்மதுரா பதிக்கு வேந்தன். 34

சிரநாலோன் பரவரிய சமட்டிவிச்சா புரநாதன் சீவன்
முத்தி, புரநாதன் பூவுலக சிவலோகா திபன்கன்னி புரேசன்
யார்க்கும், வரநாளுந் தருமூல விலிங்கமென விவைமுதலா மாடக்
கூடல், அரனுமை மின்னமளப் பிலவாகு முலகுய்ய வவ்வி லிங்கம்.

பாதாள மேழுருவ முளைத்தெழுந்த தவ்விலிங்கப் படிவந்
தன்னுள், ஆதார மாகவமர்ந் தறுபத்து நாலுவிளை யாடல்
செய்த, போதானந் தன்பெருமை நங்குரவன் மொழிப்படியே
புகன்றே மென்றான், வேதாதி கலைதெரிந்த மலையமுனி கேட்டற
வோர் வினுதல் செய்வார். 36

அருட்கடலே யிறைவிளையாட் டறுபத்து நான்கென்று
யவையா னந்தப், பொருட்கடவு ளெக்காலத் தியாவர்பொருட்
டாடினனெம் போதந் தேறித், தெருட்படர வரன்முறையாற்
செப்புகெனக் கரங்குவித்தார் தென்பால் வெற்பில், இருப்ப
வனும் வினயபடிக் கிறைநிரம்பத் தொகுத்துவிரித் தியம்பு
கின்றான். 37

ஆக செய்யுள்—328

---

34. ஞானத்தேன் - உமாதேவியார்.

35. சிரம் நாலோன் - பிரமதேவன்.

36. உருவ - ஊடுருவ. குரவன் - இங்கு முருகக் கடவுள்.

37. இறை - விடை

பா-ம்—1 கடம்பொழில்சூ.

# பதிகம்

—o—

வானவர்கோன் பழிதொலைத்து விளையாட்டுங் கரிசாப மாய்த்த வாறும், மீனவர்கோன் காடெறிந்து புரங்கண்ட பெருஞ் சிறப்பு மீன நோக்கி, ஆனதடா தகையழல்வா யவதரித்துப் பாராண்ட வருளு மீசன், தானவளை மணஞ்செய்து முடிதரித்து மண்காத்த தகைமைப் பாடும். 1

புலிமுனியும் பணிமுனியுந் தொழுவெள்ளி மன்றுணடம் புரிந்த வாறும், வலிகெழுதோட் குண்டகட்டுக் குறட்கன்னக் குன்றளித்த வகையும் பின்னும், நலிபசிநோய் கெடவன்னக் குழி யழைத்துக் கொடுத்துநீர் நசைக்கு வைகை, அலைபுனல்கூ யருத்தியதும் பொன்மாலைக் கெழுகடலு மழைத்த வாறும். 2

அந்தரர்கோ ளுதனத்தி லுறைமலயத் துவசனைமீண் டழைத்த வாறும், சுந்தரவுக் கிரகுமர னவதரித்த வாறும்வளை சுடர்வேல் செண்டு, தந்தையிடத் தவன்பெற்ற வாறுமவ னவ் வடிவேல் சலதி வீறு, சிந்தவிடுத் ததுமகவான் முடியைவளை யெறிந்திறைவன் சிதைத்த வாறும். 3

பொன்னசலந் தனைச்செண்டாற் புடைத்துநிதி யெடுத்ததுவும் புனிதர்க் கீசன், பன்னரிய மறைப்பொருளைப் பகர்ந்ததுவு மாணிக்கம் பகர்ந்த வாறுந், தொன்னகர்மே னீர்க்கிழவன் வரவிடுத்த கடல்சுவறத் தொலைத்த வாறும், அன்னதனித் தொன்மதுரை நான்மாடக் கூடனக ரான வாறும். 4

---

1. மீனவர்கோன் - குலசேகர பாண்டியன்.

2. புலிமுனி - வியாக்கிரபாதர். பணிமுனி - பதஞ்சலி. குண்டு - ஆழம். அகடு - வயிறு - குறள் - பூதம்; குண்டோதரன். பொன்மாலை - காஞ்சனமாலை; மலயத்துவச பாண்டியன் மனைவி.

3. சலதி - கடல். வீறு - செருக்கு. மகவான் - இந்திரன். வளை - சக்கரம்.

4. அசலம் - மலை. நீர்க்கிழவன் - வருணன்.

வட்டங்கொள் சடையுடைய சித்தர்விளை யாடியதோர் வனப்புங் கையிற், கட்டங்கந் தரித்தபிரான் கல்லானை கரும்பருந் தக் காட்டு மாறும், உட்டங்கு வஞ்சனையா லமணர்விடு வாரணத் தை யொழித்த வாறும், இட்டங்கொள் கெள்ளிமுனம் விருத்த னிளை யோன்குழவி யான வாறும். 5

செய்யதாண் மாறிநட மாடியதும் பழியஞ்சு திறனுந் தாயை, மையலாற் புணர்ந்தமகன் பாதகத்தை மாற்றியது மதியா தாசான், தையலா டனைவிரும்பு மாணவனை வாளமரிற் றடிந்த வாறும், பையரா வெய்ததுவும் படிற்றமணர் விடுத்தபசுப் படுத்த வாறும். 6

அறவேற்றுப் பரியுகைத்து மெய்க்காட்டுக் கொடுத்தவிளை யாட்டுங் [1]காட்டுச், சுறவேற்றுக் கொடியரசன் றனக்குலவாக் கிழிகொடுத்த தொடர்பு நாய்கர், நறவேற்ற மலர்க்குழலார் மனங்கவர்ந்து வளைபகர்ந்த நலனு மாறு, மறவேற்கண் மாதரார்க் கட்டமா சித்தி[2]பெற வகுத்த வாறும். 7

சென்னிபொருட் டெயில்வாயி றிறந்தடைத்து விடைபொ றித்த செயலுஞ் சென்னி, மன்னிகலிட் டமர்விளைப்ப மீனவற்கு நீர்ப்பந்தர் வைத்த வாறும், பொன்னனையாள் பொருட்டிரத வாதவினை முடித்ததுவும் புகார்க்கு வேந்தன், தன்னை யகன் குழிவீட்டித் தென்னவற்கு மறவாகை தந்த வாறும். 8

மனக்கவலை கெடவுலவாக் கோட்டையடி யாற்களித்த வகையு மாமன், எனக்கருணை வடிவாகி வழக்குரைத்துப் பொருள் வணிகற் கீந்த வாறுஞ், சினக்கதிர்வேல் வரகுணற்குச் சிவலோ கங் காட்டியதுந் திவவுக் கோலான், தனக்கடிமை யெனவிறகு திருமுடிமேற் சுமந்துபகை தணித்த வாறும். 9

---

5. கட்டங்கம் - மழு. வாரணம் - யானை.

6. படிறு - வஞ்சம்.

7. காடு - வனம்; வனம் - நீர். காட்டுச்சுறவு - நீர் வாழ் சுறு. ஏறு - ஆண். நாய்கர் - வணிகர்.

8. சென்னி - சோழன். மற வாகை - வெற்றிக்குரிய வாகைமாலை.

9. திவவுக்கோலான் - பாணபத்திரன். திவவு - வீணைவலிக்கட்டு. பா-ம்—1 நாட்டுஞ். 2. யுறமதித்த.

அப்பாணற் கிருநிதியஞ் சேரனிடைத் திருமுகமீந் தளித்த வாறும், அப்பாணன் பாடமழை யரையிரவிற் பொற்பலகை யளித்த வாறும், அப்பாணன் மனைவியிசைப் பகைவெல்ல வண்ணலவை யடைந்த வாறும், அப்பாண னுளென்றோன் முலை யருத்திப் பன்றியுயி ரளித்த வாறும். 10

வயவேனக் குருளைகளை மந்திரிக ளாக்கியதும் வலியுண் டாகக் கயவாய்க்குக் குருமொழிவைத் தருளியது நாரைக்குக் கருணை நாட்டந், தயவால்வைத் தருண்முத்தி நல்கியதுங் கூட னகர் தன்னைச் சித்தர், புயநாகம் போய்வளைந்து திருவால வாயாக்கிப் போந்த வாறும். 11

சுந்தரனென் றெழுதியகூ ரம்பெய்து செம்பியன்போர் தொலைத்த வாறுஞ், செந்தமிழோர்க் கியற்பலகை யருளியதுந் தருமிக்குச் செம்பொன் பாடித், தந்ததுவு மாறுபடு கீரற்குக் கரையேற்றந் தந்த வாறும், விந்தமடக் கியமுனியாற் கீரனியற் றமிழ்தெளிய விடுத்த வாறும். 12

ஊமனுற் புலவரிக லகற்றியது மிடைக்காட னுடன்போய்க் கொன்றைத், தாமனுர் வடவால வாயமர்ந்த பரிசும்வலை சலதி வீசிப், பூமனுய் குழலியைவேட் டருளியதும் வாதவூர்ப் புனிதர்க் கேறத், தேமனுண் மலரடிகண் முடிசூட்டி யுபதேசஞ் செய்த வாறும். 13

நரிகள்பரி யாக்கியதும் பரிகணரி யாக்கியது நாகம் பூண் டோன், அரியதிரு மேனியின்மே லடிசுமந்து மண்சுமந்த வருளுந் தென்னன், எரியடுவெஞ் சுரந்தணித்த வாறுமம ணரைக்கழுவி லிட்ட வாறுங், கரியதென வன்னிகிண றிலிங்கங்கூய் வணிக மகட் காத்த வாறும். 14

---

10. திருமுகம் - திருமுகப்பாசுரம்.

11. வயம் - வெற்றி. ஏனக்குருளை - பன்றிக்குட்டி. கயவாய் கரிக் குருவி

12 செம்பியன் - விக்கிரமசோழன். கீரன் - நக்கீரன். கீரற்கு, கு : உருபுமயக்கம்.

13. ஊமன் - உருத்திரசன்மன். புலவர் - கடைச்சங்கப் புலவர். இகல் மாறுபாடு.

14. தென்னன் - கூன்பாண்டியன். கரி சாட்சி.

*எனத்தொகையா லறுபத்து நான்கிவற்றை [1]நிறுத்தமுறை யீறி லாத, வினைத்தொகையா றகன்றீரெக் காலமெவர் பொருட் டெனநீர் வினைய வாற்றான், மனத்தளவி லன்புமடை யுடைந் தொழுகத் திருவால வாயான் றனை, நினைத்தளவி லானந்தம் பெருகவிரித் துரைப்பலெனை நெறியாற் கூறும்.* **15**

ஆகச் செய்யுள்—343

---

15. வினை - இருவினை.

பா-ம்—1 நிரைத்தமறை.

# 1. இந்திரன் பழிதீர்த்த படலம்

—o—

மின்பயில் குலிசப் புத்தேள் விருத்திரா சுரனைக் கொன்ற
வன்பழி விடாது பற்றக் கடம்பமா வனத்தி லெய்தி
என்பர வாரம் பூண்ட இறைவனை யருச்சித் தேத்திப்
பின்பது கழிந்து பெற்ற பேற்றினை யெடுத்துச் சொல்வாம். 1

முன்னதா முகத்தில் வண்டு மூசுமந் தார நீழற்
பொன்னவிர் சுணங்குண் கொங்கைப் புலோமசை மணாளன் பொற்பூண்
மின்னவிர்ந் திமைப்பச் சிங்கஞ் சுமந்தமெல் லணைமேன் மேவி
அன்னமென் னடையா ராடு மாடன்மே லார்வம் வைத்தான். 2

மூவகை மலரும் பூத்து வண்டுளே முழங்கத் தெய்வப்
பூவலர் கொடிபோர்ந் தன்ன பொன்னனார் கூத்து மன்னார்
நாவல ரமுத மன்ன பாடலு நாக நாட்டுக்
காவலன் கண்டு கேட்டுக் களிமதுக் கடலு ளாழ்ந்தான். 3

பையரா வணிந்த வேணிப் பகவனே யனைய தங்கள்
ஐயனும் வியாழப் புத்தே ளாயிடை யடைந்தா னாகச்
செய்யதாள் வழிபாடின்றித் தேவர்கோ னிருந்தா னந்தோ
தையலார் மயலிற் பட்டோர் தமக்கொரு மதியுண் டாமோ. 4

ஒல்லெனக் குரவ னேக வும்பர்கோன் றிருவி னாக்கம்
புல்லெனச் சிறிது குன்றப் புரந்தர னறிந்திக் கேடு
நல்லதொல் குரவற் பேணா நவையினால் விளைந்த தென்னா
அல்லலுற் றறிவன் றன்னைத் தேடுவா னாயி னானே. 5

---

1. குலிசப்புத்தேள் - இந்திரன்.

2. முன்னதாம் உகம் - கிரேதாயுகம். மூசும் - மொய்க்கும். சுணங்கு தேமல். புலோமசை - இந்திராணி.

3. மூவகைமலர் - கோட்டுப்பூ, கொடிப்பூ, நிலப்பூ நாஅலர் - நாவினின்றுந் தோன்றிய.

4. பகவன் - ஆறுகுணங்களையுடையவன் : இறைவன்.

5. நவை - குற்றம் அறிவன் - தேவகுரு.

அங்கவ னிருக்கை புக்கான் கண்டில னவித்த பாசப்
புங்கவ ருலகு மேனோர் பதவியும் புவன மூன்றில்
எங்கணுந் துருவிக் காணு னெங்குற்றான் குரவ னென்னுஞ்
சங்கைகொண் மனத்த னாகிச் சதுர்முக னிருக்கை சார்ந்தான். 6

துருவின னங்குங் காணுன் திசைமுகற் றொழுது தாழ்ந்து
பரவிமுன் பட்ட வெல்லாம் பகர்ந்தனன் பகரக் கேட்டுக்
குரவனை யிகழ்ந்த பாவங் கொழுந்துபட் டருந்துஞ் செவ்வி
வருவது நோக்கிச் சூழ்ந்து மலர்மக னிதனைச் சொன்னான். 7

அனையதொல் குரவற் காணு மளவுநீ துவட்டா வீன்ற
தனையன்முச் சென்னி யுள்ளான் தானவர் குலத்தில் வந்தும்
வினையினு லறிவான் மேலான் விச்சுவ வுருவ னென்னும்
இனையனைக் குருவாக் கோடி யென்னலு மதற்கு நேர்ந்தான். 8

அழலவிர்ந் தனைய செங்கே ழுடுக்கிதழ் முளரி வாழ்க்கைத்
தொழுதகு செம்ம றன்னைத் தொழுதுமீண் டகன்று நீங்கா
[1]விழைதகு காதல் கூர விச்சுவ வுருவன் றன்னை
வழிபடு குருவாக் கொண்டான் மலர்மகன் சூழ்ச்சி தேறுன். 9

கைதவக் குரவன் மாயங் கருதிலன் வேள்வி யொன்று
செய்திட லடிக ளென்னத் தேவர்கட் காக்கங் கூறி
வெய்தழல் வளர்ப்பா னுள்ளம் வேறுபட் டவுணர்க் கெல்லாம்
உய்திற நினைந்து வேட்டான் றனக்குமே லுறுவ தோரான். 10

வாக்கினுன் மனத்தால் வேறாய் மகஞ்செய்வான் செயலை யாக்கை
நோக்கினு னோதி தன்னு னோக்கினன் குலிச வேலால்
தாக்கினன் றலைகண் மூன்றுந் தனித்தனி பறவை யாகப்
போக்கினு னலகை வாயிற் புகட்டினன் புலவுச் சேரி. 11

---

6. அவித்த - கெடுத்த. சங்கை - ஐயம்.

7. கொழுந்துபட்டு - கிளைத்து. செவ்வி - காலம்.

8. துவட்டா - ஓர் அசுரன். கோடி - கொள்வாய்.

9 கேழ் - நிறம். சூழ்ச்சி - ஆலோசனை.

10. கைதவம் - வஞ்சனை.

11. யாக்கை நோக்கினன் - உடலிற்கண்களையுடையவன்; இந்திரன்.

பா-ம்—1 விழைதரு; (-வினைதரு - உண்டாகின்ற.)

தெற்றெனப் பிரம பாவஞ் சிறிவந் தமரர் வேந்தைப்
பற்றலு மதனைத் திர்ப்பான் பண்ணவர் மரமேன் மண்மேற்
பொற்றொடி யார்மே னீர்மேல் வேண்டினர் புகுத்த லோடும்
மற்றவ ரிஃதியாந் தீர்க்கும் வண்ணம்யா தென்ன விண்ணோர். 12

அப்பிடை நுரையாய் மண்ணி லருவருப் புவரா யம்பொற்
செப்பிளங் கொங்கை யார்பாற் றீண்டுதற் கரிய பூப்பாய்க்
கப்பிணர் மரத்திற் காலும் பயினதாய்க் கழிக வென்றார்
இப்பழி சுமந்த வெங்கட் கென்னல மென்றார் பின்னும். 13

கருவின் மாதர் கருவுயிர்க்கு மளவு முறையாற் கணவர்தோள்
மருவி வாழ்க மண்ணகழ்ந்த குழியு மதனால் வடுவொழிக
பொருவி னீரு மிறைதோறு மூறிப் பொலிக மரங்குறைபட்
டொருவி னாலுந் தழைகவென வொழியா நலனு முதவினார். 14

மாசிற் கழிந்த மணியேபோல் வந்த பழிதீர்ந் திந்திரனுந்
தேசிற் றிகழத் துவட்டாதன் செல்வன் றன்னைத் தேவர்பிரான்
வீசிக் குலிசத் துயிருண்ட விழுமங் கேட்டு வெகுண்டுயிர்த்துக்
கூசிப் பழிகோள் கருதியொரு கொடிய வேள்வி கடிதமைத்தான்.

அந்தக் குண்டத் தெரி[1]சிகைபோ லழலுங் குஞ்சி யண்டமுக
டுந்தக் கொடிய தூமம்போ லுயிர்த்துச் செங்கண் சினச்செந்தீச்
சிந்தப் பிறைவா ளெயிறதுக்கித் திசைவான் செவிடு படநகைத்து
வந்தக் கொடிய விடம்போல வெழுந்தா னொருவாண் மறவீரன்.

ஈங்குவன் விருத்திர னென்ப வாரழற்
றாங்குவன் கணைவிடு தூர நீண்டுநீண்
டோங்குவ னோங்குதற் கொப்ப வைகலும்
[2]வீங்குவ னறணிலார் வினையி னென்பவே. 17

---

12. பிரமபாவம் - பிரமகத்தி.
13. பயின் - பிசின். நலம் - பயன்.
14. இறைதோறும் - இறைக்குந்தோறும்.
15. விழுமம் - துன்பம்.
16. அழலும் - விளங்கும்.
17. உவன் - இங்கு இவன்.

பா-ம்—1 சிகைநின்றனலுங். 2 வீங்குவன் றனிலரா வினையி னென்பவே.

வீங்குடல் விருத்திரன் றன்னை விண்ணவர்
ஏங்குற வருதுவட் டாவெ னும்பெயர்த்
தீங்குறு மனத்தினேன் றேவர் கோனுயிர்
வாங்குதி பொருதென வரவிட் டானரோ. 18

மதித்துணி யெயிற்றினேன் வடவை [1]போற்சினை இக்
கொதித்தெதிர் குறுகினுன் கொண்ட லூர்தியும்
எதிர்த்தனன் களிற்றின்மே லிமயத் துச்சிமேல்
உதித்ததோர் கருங்கதி ரொக்கு மென்னவே. 19

அறத்தொடு பாவநேர்ந் தென்ன வார்த்திரு
திறத்தரு மூண்டமர் செய்யக் கற்சிறை
குறைத்தவன் றகுவன்மேற் குலிச வேலெடுத்
துறைத்திட வீசினு னுடன்று கள்வனும். 20

[2]இடித்தனன் கையிலோ ரிருப்பு லக்கையைப்
பிடித்தனன் வரையெனப் பெயர்ந்து தீயெனத்
துடித்தனன் சசிமுலைச் சுவடு தோய்புயத்
தடித்தன னிந்திர னவச மாயினுன். 21

அண்டரே றனையவ னவச மாறிப்பின்
கண்டகன் கைதவ நினைந்திக் கள்வனேர்
மண்டம ராற்றுவான் வலியி லோமெனப்
புண்டரீ கத்தவ னுலகிற் போயினுன். 22

தாழ்ந்து[3]தான் படுதுயர் விளம்பத் தாமரை
வாழ்ந்தவன் வலாரியோ டணைந்து மாமகள்
வீழ்ந்தமார் பினனடி வீழ்ந்து செப்பமால்
சூழ்ந்துவா னுடனை நோக்கிச் சொல்லுவான். 23

---

19. வடவை - வடவாமுகாக்கினி. இது பெண் குதிரை முகம்போ லிருக்கும் ஊழித்தீ. கொண்டலூர்தி - இந்திரன்.

20. தகுவன் - அசுரன்.

21. இடித்தனன் - ஆரவாரித்து. சசி - இந்திராணி. அவசம் - மூர்ச்சை.

22. கண்டகன் - கொடியன்.

23. மாமகள் - இலக்குமி. வலாரி - இந்திரன். வீழ்ந்த - விரும்பிய.

பாடம்—1 போற்றினை. 2 எடுத்தனன். 3 தன்.

ஆற்றவும் பழையதுன் னங்கை வச்சிரம்
மாற்றவ ருயிருண வலியின் றுதலால்
வேற்றொரு புதியது வேண்டு மாலினிச்
சாற்றுது மதுபெறுந் தகைமை கேட்டியால். 24

தொடையகன் மார்பநாந் தூய பாற்கடல்
[1]கடையுநாள் அசுரருஞ் சுரருங் கையில்வெம்
படையொடு மடையன்மின் பழுதென் றப்படை
அடையவுந் ததீசிபா லடைவித் தாமரோ. 25

சேட்படு நாணணி செல்லத் தேவரா
வாட்படை யவுணரா வந்து கேட்டிலர்
ஞாட்படை படையெலா ஞான நோக்கினால்
வேட்படை வென்றவன் விழுங்கி னனரோ. 26

விழுங்கிய படையெலாம் வேற றத்திரண்
டொழுங்கிய தான்முது கந்தண் டொன்றியே
எழுங்கதிர்க் குலிசமா [2]மதனை யெய்துமுன்
வழங்குவன் கருணையோர் வடிவ மாயினான். 27

என்று மாதவ னியம்ப வும்பர்கோன்
ஒன்றும் வானவர் தம்மொ டொல்லெனச்
சென்று மாயையின் செயலை [3]நோன்பினால்
வென்ற மாதவ னிருக்கை மேவினான். 28

அகமலர்ந் தருந்தவ னமரர்க் கன்புகூர்
முகமலர்ந் தின்னுரை முகமன் கூறிநீர்
மிகமெலிந் தெய்தினீர் விளைந்த தியாதது
தகமொழிந் திடலென வலாரி சாற்றுவான். 29

அடிகணீர் மருதமொன் றதனை வேண்டியிம்
முடிகொள்வா னவரொடு [4]முந்தி னேனது
செடிகொள்கா ரிருளுட லவுணர்த் தேய்த்தெமர்
குடியெலாம் புரப்பதோர் கொள்கைத் தாயது. 30

---

24. மால் - இந்திரனே ; விளி.
26. ஞாட்பு - சண்டை.
27. ஒழுங்கியது - ஒழுங்குபட்டது.
30. செடி - முடைநாற்றம்.
பா-ம்—1 கடையுநர் 2 மிதனை. 3 அன்பினால். 4 முன்னி.

யாதெனி னிஃதெனி னிணையதுன் யாக்கை யுள்ளதென்
றோதலும் யாவையு முணர்ந்த மாதவன்
ஆதவற் கண்டதா மறையி னானனப்
போதலர்ந் தின்னன புகல்வ தாயினன். 31

நாய்நம தெனநரி நமதெ னப்பிதா
தாய்நம தெனநமன் றனதெ னப்பிணி
பேய்நம தெனமன மதிக்கும் பெற்றிபோ
லாய்நம தெனப்படும் யாக்கை யாரதே. 32

விடம்பயி லெயிற்றர வுரியும் வீநுழை
குடம்பையுந் [1]தானெனுங் கொள்கைத் தேகொலாம்
நடம்பயில் கூத்தரி னடிக்கு மைவர்வாழ்
உடம்பையும் யானென வுரைக்கற் பாலதோ. 33

நடுத்தயா விலார்தமை நலியத் துன்பநோய்
அடுத்தயா வருந்திரு வடைய யாக்கையைக்
கொடுத்தயா [2]வறம்புகழ் கொள்வ னேயெனின்
எடுத்தயாக் கையின்பய னிதனின் யாவதே. 34

என்றனன் கரண மொன்றி யெழுகருத் தறிவை யீர்ப்ப
நின்றனன் பிரம நாடி நெறிகொடு கபாலங் கீண்டு
சென்றனன் விமான மேறிச் சேர்ந்தன னுலகை நோன்பால்
வென்றவன் துறக்கம் புக்கு வீற்றினி திருந்தா னம்மா. 35

அம்முனி வள்ள லீந்த வடுபடை முதுகந் தண்டைத்
தெம்முனை யடுபோர் சாய்க்குந் திறல்கெழு குலிசஞ் செய்து
கம்மியப் புலவ னுக்கங் கரைந்துகைக் கொடுப்ப வாங்கி
மைம்முகி லூர்தி யேந்தி மின்விடு மழைபோ னின்றான். 36

---

31. ஆனனம் - முகம்

33. வீ - பறவை.

34. யாவது - யாது.

35. பிரமநாடி - பிரம ரந்திரத்தின் சம்பந்தமா யுள்ள சுழுமுனை நாடி. கபாலம் - தலையின்மேலோடு

36. கரைந்து - சொல்லி.

பா-ம் - 1 நானெனும். 2 அரும்புகழ்.

மறுத்தவா வஞ்சப் போரால் வஞ்சித்து வென்று போன
கறுத்தவா ளவுணற் கொல்வான் கடும்பரி நெடுந்தேர் நீழல்
வெறுத்தமால் யானை மள்ளர் வேலைபுக் கெழுந்து குன்றம்
அறுத்தவா னவர்கோ னந்த வவுணர்கோ மகனைச் சூழ்ந்தான். 37

வானவர் சேனை மூண்டு வளைத்தலும் வடவைச் செந்தீ
யானது வரையி னோங்கி யழன்றுருத் தெழுந்தா லென்னத்
தானவர் கோனு மானந் தலைக்கொள வெழுந்து பொங்கிச்
சேனையுந் தானு மூண்டு சீறிநின் றடுபோர் செய்வான். 38

அடுத்தன ரிடியே றென்ன வார்த்தன ராக்கங் கூறி
எடுத்தனர் கையிற் சாப மெறிந்தனர் சிறுநா ணோசை
தொடுத்தனர் [1]மீளி வாளி தூர்த்தனர் குந்த நேமி
விடுத்தனர் வானோர் சேனை வீரர்மே லவுண வீரர். 39

கிட்டினர் கடகக் கையாற் கிளர்வரை யனைய திண்டோள்
கொட்டினர் சாரி மாறிக் குதித்தனர் பலகை நீட்டி
முட்டின ரண்டம் விள்ள முழங்கினர் வடிவா ளோச்சி
வெட்டின [2]ரவுணச் சேனை வீரரை வான வீரர். 40

வீழ்ந்தனர் தோளுந் தாளும் விண்டனர் சோரி வெள்ளத்
தாழ்ந்தனர் போருந் தாரு மகன்றன ரகன்ற மார்பம்
போழ்ந்தனர் சிரங்க ளெங்கும் புரண்டனர் கூற்றூர் புக்கு
வாழ்ந்தன ரடுபோ ராற்றி வஞ்சகன் சேனை மள்ளர். 41

தாளொடு கழலு மற்றார் தலையொடு முடியு மற்றார்
தோளொடு வீர மற்றார் தும்பையொ டமரு மற்றார்
வாளொடு கரமு மற்றார் மார்பொடு கவச மற்றார்
கோளொடு மாண்மை யற்றார் குறைபடக் குறையா மெய்யர். 42

---

37. மறுத்தவா - குற்றத்தினின்று நீங்காத
39. மீளி - வலிமை.
40. சாரி - வலசாரி, இடசாரி.
41. விண்டனர் - சொரிந்தார்கள். மள்ளர் - வீரர்.
42. கழல் - வீர கண்டை. கோள் - வலிமை. குறைபடக் குறையா மெய்யர் - இறத்தலில்லாதவர்; தேவர்.
பா-ம்—1 மீள. 2 ரவுணர் சேனை.

தொக்கன கழுகு சேனஞ் சொரிசுடர் பிடுங்கி யீர்ப்ப
உக்கன குருதி மாந்தி யொட்டல்வாய் நெட்டைப் பேய்கள்
நக்கன பாடல் செய்ய ஞாட்பினுட் கவந்த மாடப்
புக்கன பிணத்தின் குன்றம் புதைத்தபார் சிதைத்த தண்டம். 43

இவ்வகை மயங்கிப் போர்செய் திறந்தவ ரொழியப் பின்னுங்
கைவ்வகை யடுபோ ராற்றிக் கரையிறந் தார்கண் மாண்டார்
அவ்வகை யறிந்து வானத் தரசனு மவுணர் வேந்துந்
தெய்வதப் படைகள் வீசிச் சீறிநின் றடுபோர் செய்வார். 44

அனற்படை விடுத்தான் விண்ணோ ராண்டகை யதனைக் கள்வன்
புனற்படை விடுத்துச் [1]சீற்றந் தணித்தனன் புனிதன் காற்றின்
முனைப்படை விடுத்தான் வெய்யோன் முழுங்குகால் விழுங்குநாகச்
சினப்படை தொடுத்து வீசி விலக்கினன் றேவ ரஞ்ச. 45

நாகமாப் படைவிட் டார்த்தா னகர்கோ னுவணச் செல்வன்
வேகமாப் படையை வீசி விலக்கினன் றகுவர் வேந்தன்
மோகமாப் படையைத் தொட்டு முடுக்கினன் முனிவ னன்ன
தேகமாப் படிறன் ஞானப் படைவிடுத் திருள்போ னின்றான். 46

மட்டிடு தாரான் விட்ட வானவப் படைக்கு மாறு
விட்டுடன் விலக்கி வேறும் விடுத்திடக் கனன்று வஞ்சன்
முட்டிட மான வெங்கான் மூட்டிடக் கோபச் செந்தீச்
சுட்டிடப் பொருது பொங்கிச் சுராதிப னிதனைச் செய்தான். 47

வீங்கிரு ளொதுங்க மேக மின்விதிர்த் தென்னக் கையில்
ஓங்கிருங் குலிச வேலை யொல்லென விதிர்த்த லோடுந்
தீங்குளம் போன்றி ருண்ட திணியுடற் கள்வ னஞ்சி
வாங்கிருங் கடலில் வீழ்ந்தான் மறைந்தமை நாக மொத்தான். 48

---

43. சேனம் - பருந்து. ஞாட்பு - போர்க்களம். கவந்தம் தலையிழந்த வுடல்.

44. கைவகை - கைவரிசையின் வகைகளால்.

45. கால் விழுங்கு நாகம்-காற்றினை யுணவாகக் கொள்ளும் பாம்பு.

46. உவணச் செல்வன் - கருடன். படிறன் - வஞ்சகன்.

47. மட்டு - தேன். சுராதிபன் - இந்திரன்; சுர + அதிபன்.

48. விதிர்த்து - வீசியது. மைநாகம் - மைநாக மலை.

பா-ம்—1 சிந்தத் துணித்தனன்.

ஒக்கவிந் திரனும் வீழ்ந்தா னுடல்சின வுருமே றன்னான்
புக்கிடந் தேடிக் காணான் புண்ணிய முளரி யண்ணல்
பக்கம்வந் தனைய செய்தி பகர்ந்தனன் பதகன் மாளத்
தக்கதோர் சூழ்ச்சி முன்னிச் சராசர மீன்ற தாதை. 49

விந்தவெற் படக்கி னாற்கீ துரையென விடுப்ப மீண்டு
சந்தவெற் படைந்தான் வானோர் தலைவனை முகமன் கூறிப்
பந்தவெற் பறுத்தான் வந்த தெவனெனப் [1]பறைக ளெல்லாஞ்
சிந்தவெற் பறுத்தான் வந்த செயலெலா முறையாற் [2]செப்பி. 50

யாவையு முணர்ந்த வெந்தைக் கியானெடுத் துணர்த்து கின்ற
தாவதென் னமருக் காற்றா தாழிபுக் கொளித்தா னாவி
வீவது மவனால் வந்த விழுமமோ வெல்லா மின்று
போவதுங் கருதி நும்பாற் புகுந்தன மடிக ளென்றான். 51

என்றவ னிடுக்கண் டீர்ப்பா னிகல்புரி புலன்க ளைந்தும்
வென்றவ னெடியோன் றன்னை விடையவன் வடிவ மாக்கி
நின்றவ னறிவா னந்த மெய்ம்மையாய் நிறைந்த வெள்ளி
மன்றவ னாழிச் செந்தீ வடிவினை மனத்துட் கொண்டான். 52

கைதவன் கரந்து வைகுங் கடலைவெற் படக்குங் கையிற்
பெய்துழுந் தெல்லைத் தாக்கிப் பருகினான் பிறைசேர் சென்னி
ஐயன தருளைப் பெற்றார்க் கதிசய மிதென்கொன் மூன்று
வையமுத் தொழிலுஞ் செய்ய வல்லவ ரவரே யன்றோ. 53

அறந்துறந் திட்டு வார்த மரும்பெறற் செல்வம் போல
வறந்தன படுநீர்ப் பௌவம் வடவைகட் புலப்பட் டாங்கு
நிறைந்த செம்மணியு மத்தீ நீண்டெரி சிகைபோ னீண்டு
சிறந்தெழு பவளக் காடுந் திணியிருள் [3]விழுங்கிற் றம்மா. 54

---

49. உடல் சினம் - மிகுந்த கோபம்; உடலுதல் - கோபித்தல். பதகன் - பாதகன்; இங்கு விருத்திராசுரன்.

50. சந்த வெற்பு – சந்தன மரங்களையுடைய பொதிய மலை. பாச வெற்பு - பாசபந்தமாகிய மலை. பறைகள் - சிறகுகள்,

52. நெடியோன் தன்னை விடையவன் வடிவமாக்கி நின்றவன் – அகத்தியர்; இது திருக்குற்றால நகரில் எழுந்தருளிய திருமாலைச் சிவலிங்க வடிவாய் அகத்தியர் செய்த வரலாற்றைக் குறிப்பது.

53. கைதவன் - வஞ்சகன்.

பா–ம்–1 பகைக. 2 செப்ப, சொல்வான். 3 விழுங்குமன்றே.

பணிகளின் மகுட கோடிப் பரப்பென விளங்கிப் பல்கா
சணிகலப் பேழை பேழ்வாய் திறந்தனைத் தாகி யொன்பான்
மணிகிடந் திமைக்கு நீரான் மகபதி வேள்விக் காவாய்த்
திணியுட லவுணன் பட்ட செங்கள மனைய தன்றே. 55

வறந்தநீர் தன்னின் மின்னு வான்விதிர்த் தென்னப் பன்மீன்
எறிந்தன நெளிந்த நாக மிமைத்தன வளையு முத்துஞ்
செறிந்தன கரந்த யாமை சேர்ந்தபல் பண்டஞ் சிந்தி
முறிந்தன வங்கங் கங்க [1]முக்கின சிறுமீ னெல்லாம். 56

செருவினி லுடைந்து போன செங்கண்வா ளவுண னங்கோர்
அருவரை முதுகிற் கார்போ லடைந்துவா னுடர் செய்த
உருகெழு பாவந் தானே ருருவெடுத் திருந்து நோற்கும்
பரிசென நோற்று [2]னின்னும் பரிபவ விளைவு பாரான். 57

கைதவ நோன்பு நோற்குங் கள்வனைக் கண்டு வானோர்
செய்தவ மனையான் யாணர் வச்சிரஞ் சீரிப் பான்போற்
பொய்தவன் றலையைக் கொய்தான் புணரிவாய் நிறையச் சோரி
பெய்தது வலாரி தன்னைப் பிடித்தது [3]பிரமச் சாயை. 58

உம்மெனும் மார்பைத் தட்டு முருத்தெழு மதிர்க்கும் போர்க்கு
வம்மெனும் வாய்ம டிக்கும் [4]வாளெயி றதுக்கும் வீழுங்
கொம்மென வோடு மீளுங் கொதித்தழுஞ் சிரிக்குஞ் சீறும்
இம்மெனு மளவு நீங்கா தென்செய்வா னஞ்சி னானே. 59

விரைந்தரன் றிசையோர் வாவி வீழ்ந்தொரு கமல நாளுட்
கரந்தனல் மகவா னிப்பாற் கற்பக நாடு புல்லென்

---

55. பேழை - பெட்டி. பேழ் - பிளந்த. மகபதி - இந்திரன். செங்களம் - போர்க்களம்.

56. கங்கம் - பருந்து. முக்கின - விழுங்கின.

57. உருகெழு - அச்சமிக்க. வரை முதுகு - மலையின் நடுப்பாகம்.

58. யாணர் - புதிய. சீரிப்பான் போல் - பரீட்சிப்பவனைப்போல. பிரமச்சாயை - பிரமகத்தி.

59. அதுக்கும் - கடிக்கும். கொம்மென - விரைந்து.

60. அரன் திசை - ஈசான திசை. வாவி - இங்குத் தாமரைத் தடாகம். புல்லென்று - பொலிவழிந்து. இம்பர் - நிலவுலகம். நகுடன் - ஓர் அரசன்.

பா-ம்—1 மூக்கின. 2 னின்னம். 3 பிரம சாலை. 4 வோலெயி.

றிருந்ததா விருக்கு மெல்லை யிம்பரி னகுட னென்போன்
அரும்பரி மேத வேள்வி யாற்றினா னாற்று மெல்லை. 60

அரசிலா வறுமை நோக்கி யவனைவா னாடர் யாரும்
விரைசெய்தார் மகுடஞ் சூட்டி வேந்தனாக் கொண்டார் வேந்தாய்
வருபவன் சசியை யீண்டுத் தருகென மருங்கு ளார்போய்த்
திரைசெய்நீ ரமுத னாட்குச் செப்பவக் கற்பின் மிக்காள். 61

பொன்னுயிர்த் தனைய காட்சிப் புண்ணிய குரவன் முன்போய்
மின்னுயிர்த் தனையா ளின்று விளம்புவா ளிதென்கொல் கெட்டேன்
என்னுயிர்த் துணைவ னாங்கே யிருக்கமற் றொருவ னென்னைத்
தன்னுயிர்த் துணையாக் கொள்கை தருமமோ வடிக ளென்றாள்.

மாதவ ரெழுவர் தாங்க மாமணிச் சிவிகை மீது
போதரி னவனே வானோர் புரந்தர னவனே யுன்றன்
காதல னாகு மென்றான் கைதொழு ததற்கு நேர்ந்தம்
மேதகு சிறப்பா லிங்கு வருகென விடுத்தா ளேது. 63

மணிதரின் மகவா னாகி வருபவன் சிவிகை தாங்கும்
புனிதமா தவரை யெண்ணான் புன்கணோய் விளைவும் பாரான்
கனிதரு காமந் தூய்க்குங் காதலால் விரையச் [1]செல்வான்
இனிதயி ராணி பாற்கொண் டேகுமின் சர்ப்ப வென்றான். 64

சர்ப்பமா கெனமுற் கொம்பு தாங்கிமுன் னடக்குந் தென்றல்
வெற்பனா முனிவன் சாபம் விளைத்தனன் விளைத்த லோடும்
பொற்பமா சுணமே யாகிப் போயினா னறிவி லாத
அற்பரா னவர்க்குச் செல்வ மல்லது பகைவே றுண்டோ. 65

பின்னர்த்தங் குரவ னான பிரானடி பணிந்து வானோர்
பொன்னகர் வேந்த னின்றிப் புலம்படை கின்ற தைய

---

61. அரசு - அரசன்; பண்பாகுபெயர். சசி - இந்திராணி

62. உயிர்த்து - உருவங் கொண்டதை. கெட்டேன் - ஆச்சரியம்: வியப்பிடைச்சொல்.

63. மாதவர் எழுவர் - அகத்தியன், ஆங்கிரசன், கோதமன், காசிபன், புலத்தியன், மார்க்கண்டன், வசிட்டன் என்ற எழு இருடிகள்.

64. புன்கண் - துன்பம். சர்ப்ப - விரைந்து நடக்கவென ஏவுதல்.

65. மாசுணம் - பெரும் பாம்பு.

பா-ம்—1 சொல்வான்.

என்னலுங் குரவன் போயவ் விலஞ்சியு ளொளித்தாற் கூவித்
தன்னுரை யறிந்து போந்த சதமகற் கொண்டு மீண்டான். 66

கொடும்பழி கோட்பட் டான்றன் குரவனை வணங்கி யென்னைச்
சுடும்பழி கழிவ தெங்ஙன் சொல்லெனத் தொலைவ தோர்ந்தான்
அடும்பழி மண்மே லன்றி யருதுநீ வேட்டைக் கென்னப்
படும்பழி யிதனைத் தீர்ப்பான் பார்மிசை வருதி யென்றான். 67

ஈசனுக் கிழைத்த குற்றந் தேசிக னெண்ணித் தீர்க்குந்
தேசிகற் கிழைத்த குற்றங் குரவனே தீர்ப்ப தன்றிப்
பேசுவ தெவனோ தன்பாற் பிழைத்தகா ரணத்தால் வந்த
வாசவன் பழியைத் தீர்ப்பான் குரவனே வழியுங் கூற. 68

வாம்பரி யுகைத்துத் தன்னால் வழிபடு குரவன் வானோர்
தாம்பரி வோடுஞ் சூழத் தராதலத் திழிந்து செம்பொற்
காம்பரி தோளி பங்கன் கயிலைமால் வரையைத் தாழ்ந்து
தேம்பரி யலங்கன் மார்பன் றென்றிசை நோக்கிச் செல்வான். 69

கங்கைமுத லளவிறந்த தீர்த்தமெலாம் போய்ப்படிந்து காசி காஞ்சி, அங்கனக கேதார முதற்பதிகள் பலபணிந்து மவுணற் கொன்ற, பொங்குபழி விடாதழுங்கி யராவுண்ண மாசுண்டு பொலிவு மாழ்குந், திங்களனை யான்கடம்ப வனத்தெல்லை யணித் தாகச் செல்லு மேல்வை. 70

தொடுத்தபழி வேறுகி விடுத்தகன்ற திந்திரன்றான் சுமந்த பாரம், விடுத்தவனைத் தளவிறந்த மகிழ்வெய்தித் தேசிகன்பால் விளம்பப் பாசங், கெடுத்தவன்மா தலம்புனித தீர்த்தமுள விவண மக்குக் கிடைத்தல் வேண்டும், அடுத்தறிக வெனச்சிலரை விடுத் தவ்வே றுஙிலநின் றப்பாற் செல்வான். 71

---

66. புலம்படைகின்றது - வருத்தமடைகின்றது. இலஞ்சி தடாகம். சதமகன் - இந்திரன்.

67. கொடும்பழி கோட்பட்டான் - கொடிய பழியால் கொள்ளப் பட்ட இந்திரன்.

68. தேசிகன் - குரு. வாசவன் - இந்திரன். வழி – உபாயம்.

69. குரவன் - வியாழபகவான். காம்புஅரி - மூங்கில்.

70. அழுங்கி - வருந்தி. ஏல்வை - பொழுது.

71. தொடுத்தபழி - விடாது பற்றிய பிரமகத்தி. வேறுநிலை - பழி பிரிந்து நின்ற இடம்.

அருவிபடிந் தருவியெறி மணியெடுத்துப் பாறையிலிட் டருவி நீர் தூய்க், கருவிரல்கொய் தலர்சூட்டிக் கனியூட்டி வழி படுவ கல்லா மந்தி, ஒருதுறையில் யாளிகரி புழைக்கைமுகந் தொன்றற்கொன் றூட்டி யூட்டிப், பருகுவன புலிமுலைப்பால் புல்வாய்க்கன் [1]றருத்தியிடும் பசிநோய் தீர. 72

நெளியராக் குருளைவெயில் வெள்ளிடையிற் கிடந்துயங்கி நெளியப் புள்ளே, றொளியருச் சிறைவிரித்து நிழல்பரப்பப் பறவைநோ யுற்ற தேகொல், அளியவா [2]யச்சோவென் றோதி யயன் மடமந்தி யருவி யூற்றுந், துளியநீர் வளைத்தசும்பின் முகந் தெடுத்துக் கருங்கையினூற் சொரிவ மாதோ, 73

படவரவ மணியீன்று நொச்சிப்பா சிலையன்ன பைந்தாண் மஞ்ஞை, பெடைதழுவி மணஞ்செய்ய மணவறையில் விளக்கிடுவ பெருந்தண் கானத், தடர்சிறைமென் குயிலோமென் றூர்ப்பமடக் கிள்ளையெழுத் தைந்து மோசைத், தொடர்புபெற வுச்சரிப்பக் குருமொழிகேட் டாங்குவப்ப தொடிக்கட் பூவை. 74

இன்னவிலங் கொடுபுள்ளின் செயற்கரிய செயனோக்கி யிறும்பூ தெய்திப், பொன்னகரான் புளகமுடல் புதைப்பநிறை மகிழ்ச்சியுளம் புதைப்பப் போவான், அன்னபொழு தொற்றுவர் மீண் டடிவணங்கி யின்சுவைப்பா லருந்து வான்முன், [3]பின்னரிய தேன்சொரிந்தாங் குவகைமேற் பேருவகை பெருகச் சொல்வார்.

எப்புவனத் திலுமென்றுங் கண்டறியா வதிசயமு மெண்ணுக் கெய்தாத், திப்பியமு மிக்கடம்ப வனத்தின்று கண்டுவகை திளைத்தே மங்கண், வைப்பனைய வொருபுனித வாவிமருங் கொரு கடம்ப வனத்தி னீழல், ஒப்பிலொளி யாய்முளைத்த சிவலிங்க மொன்றுளதென் றுரைப்பக் கேட்டான். 76

---

72. கல்லா - அறிவில்லாத. மந்தி - பெண் குரங்கு. புல்வாய் - மான்.

73. குருளை - குட்டி. புள் ஏறு - கருடன். அச்சோ - ஐயோ : இடைச்சொல். வளை - சங்கு. தசும்பு - குடம்.

74. கிள்ளை - இங்கு பஞ்சவர்ணக் கிளிகள். தொடிக் கண் - வளையல் போலும் வட்டமாகிய கண். பூவை - நாகணவாய்ப்புள்.

75. விலங்கு - குறுக்கு நீண்டிருப்பது ; மிருகம்.

76. திப்பியம் - தெய்வத்தன்மை ; சிறப்பு.

பா-ம்-1 றருந்தியிடும் பசிக டர. 2 வச்சோ. 3 பின்னறிய.

செவித்துளையி லமுதொழுக்கு முறையரொடும் வழிக்கொண்டு சென்னிமேற்கை, குவித்துளமெய் மொழிகரணங் குணமூன்று மொன்றித்தன் [1]கொடிய பாவம், அவித்துளயர் வொழிக்க முளைத் தருள்குறிமே லன்பீர்ப்ப வடைவான் கானங், கவித்துள பூந் தடம்படிந்து கடம்பவனத் துழைநுழைந்தான் கவலை தீர்வான். 77

அருவாகி யுருவாகி யருவுருவங் கடந்துண்மை யறிவா னந்த, உருவாகி யளவிறந்த வுயிராகி யவ்வுயிர்க்கோ ருணர்வாய்ப் பூவின், மருவாகிச் சராசரங்க ளகிலமுந்தன் னிடையுதித்து மடங்க நின்ற, கருவாகி முளைத்தசிவக் கொழுந்தையா யிரங்கண்ணுங் களிப்பக் கண்டான். 78

கண்டுவிழுந் தெழுந்துவிழி துளிப்பவெழு [2]களிப்பென்னுங் கடலி லாழ்ந்து, விண்டுமொழி தழுதழுப்ப வுடல்பனிப்ப வன்புருவாய் விண்ணோர் வேந்தன், அண்டர்பிரா னருச்சனைக்கு வேண்டுமுப கரணமெலா மகல்வா னெய்திக், கொண்டுவரச் சிலரைவிடுத் தவரேகப் பின்னுமொரு குறைவு தீர்ப்பான். 79

தங்குடிமைத் தச்சனையோர் விமானமமைத் திடவிடுத்தத் தடத்தின் பாற்போய், அங்கணனைக் கடிதருச்சித் திடநறிய மலர் இடையா தயர்வா னந்தச், சங்கெறிதண் டிரைத்தடத்தி லரனருளாற் பலபரிதி சலதி யொன்றிற், பொங்குகதிர் பரப்பிமுளைத் தாலென்னப் பொற்கமலம் பூப்பக் கண்டான். 80

அன்புதலை சிறப்பமகிழ்ந் தாடினான் காரணத்தா [3]லதற்கு நாமம், என்பதுபொற் றாமரையென் றேழுலகும் பொலிகவென

77. உமையர் - ஒற்றர். கரணம் - மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக்கரணங்கள். குணம் மூன்று - சாத்துவிகம், இராசதம், தாமதம் என்பன.

78. அரு - வடிவில்லது; நிட்களத்திருமேனி. உரு - வடிவுடையது; சகளத்திருமேனி. அருவுரு - வடிவும் வடிவில்லதுமாயது; சகள நிட்களத் திருமேனி.

79. தழுதழுத்தல் - நாப்பின்னுதல். சிலர் - இங்குத் தேவர்கள்.

80. தம் குடிமை - தமது குடிக்குரிய. அங்கணன் - சிவன். சலதி - கடல்.

81. மின்பதுமம் - பொற்றாமரை. என்பது : இடைச்சொல்.

பா-ம்—1 கொடிய பாசம். 2 களியென்னும். 3 விதற்கு.

விசைத்துப் பின்னும், மின்பதுமத் தடங்குடைந்து பொற்கமலங் கொய்தெடுத்து மீண்டு நீங்காத், தன்பிணிநோய் தணியமுளைத் தெழுந்தமுழு முதன்மருந்தின் றன்பால் வந்து. 81

மொய்த்தபுனக் காடெறிந்து நிலந்திருத்தி வருமளவின் முளைத்த ஞான, வித்தனைய சிவக்கொழுந்தின் றிருமுடிமேற் பரிதிகர மெல்லத் தீண்டச், சித்தநெகிழ்ந் திந்திரன்றன் வெண் கவிகைத் திங்கணிழல் செய்வா னுள்ளம், வைத்தனனப் போதி ரவி மண்டலம்போ லிழிந்ததொரு மணிவி மானம். 82

கிரியெட்டு மெனமழையைக் கிழித்தெட்டும் புழைக்கை மதிக் கீற்றுக் கோட்டுக், கரியெட்டுஞ் சினமடங்க ஞெலெட்டு மெட்டெட்டுக் கணமுந் தாங்க, விரியெட்டுத் திசைபரப்ப மயனிருமித் துதவியவவ் விமானஞ் சாத்தி, அரியெட்டுத் திரு வுருவப் பரஞ்சுடரை [1]யருச்சிப்பா னுயி னுனே. 83

மூந்தவம ருலகடைந்து பூசனைக்கு வேண்டுவன முழுதுந் தேர்வார், வந்துதரு வைந்தீன்ற பொன்னுடை மின்னுமிழு மணிப்பூண் வாசச், சந்தனமந் தாகினிமஞ் சனந்[2]தூபந் திருப்பள் ளித் தாமந் தீபம், அந்தமிலா வைந்துநறுங் கனிதீந்தேன் றிருவமுத மனைத்துந் தந்தார். 84

தெய்வத்தா மரைமுளைத்த தடம்படிந்து பவந்தொலைக்குந் திருநீ ருடிச், சைவத்தாழ் வடந்தாங்கி யன்புருவா யருளுருவந் தானுய்த் தோன்றும், பைவைத்தா டரவார்த்த பசுபதியை யவனுரைத்த பனுவ லாற்றின், மெய்வைத்தா தரம்பெருக வருச்சனைசெய் தானந்த வெள்ளத் தாழ்ந்தான். 85

பாரார வட்டாங்க பஞ்சாங்க விதிமுறையாற் பணிந்துள் வாய்மெய், நேராகச் சூழ்ந்துடலங் கம்பித்துக் கும்பிட்டு நிருத் தஞ் செய்து, தாராருந் தொடைமிதப்ப வானந்தக் கண்ணருவி

82. பரிதிகரம் - சூரிய கிரணம்.

83. கணம் - சிவகணம். அரி - இந்திரன் எட்டுத் திருவுரு பஞ்சபூதம், சந்திர சூரியர், ஆன்மா; அட்டமூர்த்தம்.

84. மந்தாகினி - கங்கை. திருப்பள்ளித்தாமம் - பத்திர புஷ்ப மாலைகள்.

85. பைவைத்து - படமெடுத்து. பசுபதி - பிரமன் முதலிய பசுக்களுக்குத் தலைவன்; சிவன்.

பா-ம்—1 யர்ச்சிப்பதாயினுன். 2 தூமம்.

ததும்ப நின்றன், பாராமை மீக்கொள்ள வஞ்சலித்துத் துதிக்
கின்றா னமரர் கோமான். 86

அங்கணு போற்றி வாய்மை யாரணு போற்றி நாக
கங்கணு போற்றி மூல காரணு போற்றி நெற்றிச்
செங்கணு போற்றி யாதி சிவபரஞ் சுடரே போற்றி
எங்கணு யகனே போற்றி யீறிலா முதலே போற்றி. 87

யாவையும் படைப்பாய் போற்றி யாவையுந் துடைப்பாய் போற்றி
யாவையு மானாய் போற்றி யாவையு மல்லாய் போற்றி
யாவையு மறிந்தாய் போற்றி யாவையு மறந்தாய் போற்றி
யாவையும் புணர்ந்தாய் போற்றி யாவையும் பிரிந்தாய் போற்றி.

இடருறப் பிணித்த விந்தப் பழியினின் றென்னை யீர்த்துன்
அடியிணைக் கன்ப னுக்கு மருட்கடல் போற்றி சேற்கண்
மடவரன் மணாள போற்றி கடம்பமா வனத்தாய் போற்றி
சுடர்விடு விமான மேய சுந்தர விடங்க போற்றி. 89

பூசையும் பூசைக் கேற்ற பொருள்களும் பூசை செய்யும்
நேசனும் பூசை கொண்டு [1]நியதியிற் பேறு நல்கும்
ஈசனு மாகிப் பூசை யான்செய்தே னெனுமென் போத
வாசனை யதுவு மான மறைமுத லடிகள் போற்றி. 90

என்னநின் றேத்தி னானை யின்னகை சிறிது தோன்ற
முன்னவ னடியா ரெண்ண முடிப்பவ னருட்க ணோக்கால்
உன்னது வேட்கை யாதிங் குரையென விரையத் தாழ்ந்து
சென்னிமேற் செங்கை கூப்பித் தேவர்கோ னிதனை வேண்டும். 91

ஐயநின் னிருக்கை யெல்லைக் கணியனு மளவி னீங்கா
வெய்யவென் பழியி னோடு மேலைநா ளடியேன் செய்த
மையல்வல் வினையு மாய்ந்துன் மலரடி வழுத்திப் பூசை
செய்யவு முரிய னானேன் சிறந்தபே றிதன்மேல் யாதோ. 92

---

86. கம்பித்து - நடுங்கி. அஞ்சலி - வணக்கம்.
87. அம்கண் - கிருபாநோக்கம். செங்கண் - அக்கினிக்கண்.
89. ஈர்த்து - விடுவித்து. விடங்கன் - உளிநீக்கமுள்ளவன்; அழகன். (டங்கம் - உளி.)
91. ஏத்தினானை - துதித்த இந்திரன்மீது. ஐ: உருபுமயக்கம்.
92. அணியன் - சமீபித்தவன். வழுத்தி - துதித்து.

பா-ம்—1 நியதியின் பேறு.

இன்னரின் பாதப் போதே யிவ்வாறே யென்றும் பூசித்
துன்னடி யாருள் யானு மோரடித் தொண்ட னாவேன்
அன்னதே யடியேன் வேண்டத் தக்கதென் றடியில் வீழ்ந்த
மன்னவன் றனக்கு முக்கண் வரதனுங் கருணை பூத்து. 93

இருதுவிற் சிறந்த வேனிலு மதியா திரண்டினிற் சிறந்த வான் றகரும், பொருவிரு ரகையிற் சிறந்தசித் திரையுந் திதியி னிற் சிறந்தபூ ரணையும், மருவுசித் திரையிற் சித்திரை தோறும் வந்துவந் தருச்சியோர் வருடந், தெரியுநாண் மூந்நூற் றறுபது மைந்துஞ் செய்தவர்ச் சனைப்பய னெய்தும். 94

துறக்கநா டணைந்து சுத்தபல் போகந் துய்த்துமேன் மலபரி பாகம், பிறக்கநான் முகன்மான் முதற்பெருந் தேவர் பெரும்பதத் தாசையும் பிறவும், மறக்கநாம் வீடு வழங்குது மென்ன வாய் மலர்ந் தருளிவான் கருணை, சிறக்கநால் வேதச் சிகையெழு மறுதி சிவபரஞ் சுடர்விடை கொடுத்தான். 95

மூடினான் புளகப் போர்வையால் யாக்கை முடிமிசை யஞ் சலிக் கமலஞ், சூடினான் வீழ்ந்தா னெழுந்துகண் ணருவி துளும் பினான் பன்முறை துதிசெய், தாடினா னைய னடிபிரி வாற்று தஞ்சினா னவனருளாணை, நாடினான் பிரியா விடைகொடு துறக்க நண்ணினான் விண்ணவர் நாதன். 96

வந்தரமங் கையர்கவரி மருங்கு வீச மந்தாரங் கற்பகம்பூ மாரி தூற்ற, அந்தரநாட் டவர்முடிக ளடிகள்சூட வயிராணி முலைத்த டந்தோய்ந் தகலந் திண்டோள், விந்தமெனச் செம் மாந்து விம்மு காம வெள்ளத்து ளுடலமுழுந்த வுள்ளஞ் சென்று, சுந்தரநா யகன்கருணை வெள்ளத் தாழ்ந்து தொன்முறையின் முறைசெய்தான் றுறக்க நாடன். 97

ஆகச் செய்யுள்—440

---

93. அடி - தாழ்மை. வரதன் - சிவன்.

94. வேனில் - வேனிற் பருவம். மதி - மாதம். தகர் - மேடம்; சித்திரை. தாரகை - நட்சத்திரம்.

95. பரிபாகம் - நெகிழ்ச்சி. வான்கருணை - பெருங்கருணை.

96. புளகம் - மயிர்ச்சிலிர்ப்பு. பிரியாவிடை - உள்ளம் பிரியா அன்புடன் விட்டு நீங்குதல். துறக்கம் - சுவர்க்கம்.

97. செம்மாந்து - இறுமாப்புக்கொண்டு; செம்மா - பகுதி.

## 2. வெள்ளையானைச் சாபந்தீர்த்த படலம்

—o—

மட்டவிழுங் கொன்றைச் சடையான் மகவானைத்
தொட்ட பழியின் றொடக்கறுத்த [1]வாறீது
பட்டமத வேழம் பரனைப் பராய்முனிவன்
இட்டகொடுஞ் சாபநீத் தேகியவா றோதுவாம். 1

கருவா சனைகழிக்குங் காசிநகர் தன்னில்
துருவாச வேதமுனி தொல்லா கமத்தின்
பெருவாய்மை யாற்றன் பெயர்விளங்க வீசன்
ஒருவா விலிங்க வொளியுருவங் கண்டான். 2

இன்புற் றருச்சனைசெய் தேத்துவா னவ்வேலை
அன்புக் கெளிய னருளாற் றிருமுடிமேன்
மின்பொற் கடிக்கமலப் போதொன்று [2]வீழ்த்திடலுந்
தன்பொற் கரகமலப் போதலர்த்தித் தாங்கினான். 3

தாங்கிக்கண் சென்னி தடமார் பணைத்துடலம்
வீங்கித் தலைசிறந்த மெய்யுவகை மேற்கொள்ள
நீங்கிக் கழிந்த கருணை நிதியனையான்
பூங்கற் பகநாட்டிற் போகின்றா னவ்வேலை. 4

சங்கலறச் செங்களத்துத் தானவரைத் தேய்த்துவிறற்
கொங்கலர்தார் வேய்ந்தமரர் கோமான்றன் கோநகரிற்
செங்க ணமரர்பெருஞ் சேனைக் கடல்கலிப்ப
மங்கலப்பல் லாண்டு மறைமுழங்க வந்தணைவான். 5

---

1. மட்டு - தேன். வேழம் - இங்கு ஐராவதம் என்னும் வெள்ளை யானை. முனிவன் - துருவாச முனிவன்.

2. கருவாசனை - கர்ப்ப வாசனை: இருவினை. வாய்மையால் உண்மை வாக்கியத்தால். கண்டான் - நிறுவினான்.

3. கரகமலம் - கைத்தாமரை; உருவகம்.

5. சங்கு - வெற்றிச் சங்கு. அலர - முழங்க. கொங்கு - மணம். விறல் - வெற்றி.

பா-ம்—1 வாறோதி. 2 வீழ்ந்திடலும்; வீழ்த்திடவும்.

எத்திக்குங் கல்லென் றியங்கலிப்ப வேந்திழையார்
தித்தித் தமுதொழுக்குங் கீதஞ் செவிமடுப்பப்
பத்திக் கவரிநிரை தானைப் படுகடலில்
தத்திப் புரளுந் திரைபோற் றலைபனிப்ப. 6

அங்கட் கடலி னெடுங்கூம் பகநிமிர்ந்த
வங்கத் தலையுய்க்கு மீகான் றனைமானத்
திங்கட் குடைநிழற்றத் தீந்தே மதங்கவிழ்க்கும்
வெங்கட் களிற்றின் மிசைப்பவனி போந்தணைந்தான். 7

அத்தலைவிண் ணுட ரருகணைந்து வெவ்வேறு
தத்த மனக்கிசைந்த கையுறைக டாங்கொடுத்துக்
கைத்தலங்கள் கூப்பினார் [1]கண்டான் கடவுளரில்
உத்தமனை யர்ச்சித்துப் போந்தமுனி யுத்தமனும். 8

தீங்கரிய வாசிமொழி செப்பித்தன் செங்கரத்தின்
நீங்கரிய தாமரையை நீட்டினான் மற்றதனைத்
தாங்கரிய செல்வத் தருக்காலோர் கையோச்சி
வாங்கிமத யானையின்மேல் வைத்தான் மதியில்லான். 9

கீறிக் கிடந்த மதியனைய கிம்புரிக்கோட்
டூறிக் கடங்கவிழ்க்கு மால்யானை யுச்சியின்மேல்
நாறிக் கிடந்த நறுமலரை வீழ்த்தியுரற்
சீறிக் கிடந்தநெடுந் தாளாற் சிதைத்தன்றே. 10

கண்டான் முனிகாமற் காய்ந்தா னுதற்கண்போல்
விண்டா ரழல்சிதற நோக்கினான் வெங்கோபங்
கொண்டா னமர ரொதுங்கக் கொதித்தாலம்
உண்டா னெனநின் றுருத்தா னுரைக்கின்றான். 11

---

6. நிரை - வரிசை. பனிப்ப - அசைய. தித்தித்த : அகரவிறு தொகுத்தல்.

7. கூம்பு - பாய் மரம். வங்கம் - கப்பல். மீகாமன் - மாலுமி. தீம் தேம் - இனிய வாசனை : ஒரு பொருட் பன்மொழி.

8. அத்தலை - அவ்விடம். கையுறை - கையில் வரப்படுவது ; காணிக்கை.

10. கிம்புரி - பூண். ஊறி - ஊற்றெடுத்து. கவிழ்க்கும் - கொட்டும்.

11. ஆலம் உண்டான் என - உருத்திரமூர்த்திபோல. உருத்தான் - கோபித்து : முற்றெச்சம்.

பா-ம்—1 கண்டார்.

புள்ளியதோ லாடை புனைந்தரவப் பூணணிந்த
வெள்ளிய செங்கண் விடையா னடிக்கமலம்
உள்ளிய மெய்யன் புடையா ரருவருத்துத்
தள்ளிய செல்வத் தருக்கிளு யென்செய்தாய். 12

கதிர்த்தார் முடியமரர் கையுறையே நன்கு
மதித்தா யெம்மீசன் மதிமுடிமேற் சாத்தும்
பொதித்தா தவிழ்மலரைப் போற்ருது வாங்கி
மிதித்தானை சிந்தவதன் மேல்வைத்தாய் பேதாய். 13

வண்டுளரும் தண்டுழாய் மாயோ னிறுமாப்பும்
புண்டரிகப் போதுறையும் புத்தே ளிறுமாப்பும்
அண்டர்தொழ வாழுன் னிறுமாப்பு மாலாலம்
உண்டவனைப் பூசித்த பேறென் றுணர்ந்திலையால். 14

சேட்டானை வானவரின் சென்னி செழியரிலோர்
வாட்டானை வீரன் வளையாற் சிதறுகரின்
கோட்டான [1]நாற்கோட்டு வெண்ணிறத்த குஞ்சரமுங்
காட்டானை யாகவென விட்டான் கடுஞ்சாபம். 15

சவித்தமுனி பாதந் தலைக்கொண்டு செங்கை
குவித்தமரர் தங்கோன் குறையிரப்பா ரைய
அவித்தபொறி யாயெம் மரசுங்கா றள்ளுஞ்
செவித்தறுகண் வேழமுந் தீங்குடைய ரன்ருே. 16

அத்தகைய நீராற் சபித்தி ரடிகேண்மற்
றித்தகைய சாப மினிவிடுமி னென்றிரந்து
கைத்தலங்கள் கூப்பிக் கரைந்தார்க் கிரங்கியருள்
வைத்த முனிபிறிது சாபம் வகுக்கின்ருன். 17

---

13. பேதாய் - அறிவில்லாதவனே !

14. உளரும் - கிண்டுகின்ற. இறுமாப்பு - மிக்க களிப்பு.

15. சேட்டானை - பெரிய யானை. சேடு - பெருமை. கோள் - வலிமை. தானம் - மதம்.

16. பொறி - மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து பொறிகள்.

17. நீரால் - இங்குக் குற்றங்களால். பிறிது - வேறு.

பா-ம்—1 நாற்கோட்ட.

சிந்தனை வாக்கிற் கெட்டாச் சிவனரு ளளித்த சேட
நிந்தனை பரிகா ரத்தா னீங்காது தலைமட் டாக
வந்தது முடிமட் டாக மத்தமா வனமா வாகி
ஐந்திரு பஃதாண் டெல்லை யகன்றபின் பண்டைத் தாக. 18

என்றனன் பிறிது சாப மிந்திரன் மகுட பங்கம்
ஒன்றிய செய்கை பின்ன ருரைத்துமற் றஃது நிற்க
நின்றவெள் ளானை வான நீத்தறி விழுந்து நீலக்
குன்றென வனத்து வேழக் குழாத்தொடு குழீஇய தன்றே. 19

மாவொடு மயங்கிச் செங்கண் மறம்பயில் காடு முல்லைப்
பூவொடு வழங்கு நீத்தப் புறவமுங் குறவர் தங்கள்
தேவொடு பயிலுங் கல்லுந் திரிந்துநா றியாண்டுஞ் செல்லக்
காவொடு பயிலுந் தெய்வக் கடம்பமா வனம்புக் கன்றே. 20

புக்குரல் வட்டத் திண்காற் பொருவிறே வியலிற் றீர்ந்த
மைக்கருங் களிறு முக்கண் மாதவ னருள்வந் தெய்தத்
தக்கதோ ரமையஞ் சார மரகதந் தழைத்து மின்னு
நக்கபொன் முளரி பூத்த நளிர்கயந் [1]தலைக்கண் டன்றே. 21

கண்டபோ தறிவு தோன்றக் [2]கயந்தலைக் குடைந்த போது
பண்டைய வடிவந் தோன்றப் பரஞ்சுட ரருட்கண் டோன்றக்
கொண்டதோர் பரமா னந்தக் குறியெதிர் தோன்றக் கும்பிட்
டண்டர்நா யகனைப் பூசை செய்வதற் கன்பு தோன்ற. 22

தூம்புடைக் கையான் மொண்டு மஞ்சனத் தூநீ ராட்டித்
தேம்புடை யொழுகப் பள்ளித் தாமமுந் தெரிந்து சாத்திப்
பாம்புடைத் தாயவேணிப் பரனையர்ச் சிக்கவுள்ளத்
தாம்புடை யறிந்த வெந்தை யானையை நோக்கிக் கூறும். 23

---

18. சிந்தனை - மனம். சேடம் - பிரசாதம். நிந்தனை - அவமதிப்பு. மத்தமா - மதமயக்கத்தையுடைய வெள்ளை யானை. வனமா - காட்டானை.

20. மா - இங்குக் காட்டானை. மறம் - மறவர்கள் : பண்பாகு பெயர். தே - தெய்வம் ; முருகன். புக்கன்று - புகுந்தது.

21. மாதவன் - சிவபெருமான் ; (மாது + அவன் ; மா + தவன்). நக்க - விளங்கின. நளிர் - குளிர்ச்சி. கயந்தலை - குளமாகிய இடம்.

22. குடைதல் - மூழ்குதல். குறி - சொக்கலிங்கமூர்த்தி.

23. தூம்பு - தொளை. தேம் - தேன்.

பா-ம்—1 தலை கண்டன்றே. 2 கயந்தலை குடைந்த.

வந்ததை யெவனீ வேண்டும் வரமெவ னுரைத்தி யென்னச்
சிந்தையி லன்பு கூர்ந்த தெய்வத வேழந் தாழ்ந்து
முந்தையில் விளைவும் வந்த முறைமையு முறையாற் கூறி
எந்தையை யடையப் பெற்றேற் கினியொரு குறையுண் டாமோ.

[1]என்பதா மாரம் பூண்ட வெந்தையிக் கரிக ளெட்டோ
டொன்பதா யடிய னேனு முன்னடி பிரியா துன்றன்
முன்பதா யிவ்வி மான முதுகுறச் சுமப்ப லென்றோர்
அன்பதா யொன்றெ னுள்ளத் தடுத்ததா லஃதே வேண்டும். 25

இடையறு வன்பின் வேழ மிங்ஙனங் கூற விண்ணு
டுடையவ னம்பான் மெய்யன் புடையவ னவனைத் தாங்கி
அடைவதே நமக்கு வேண்டு மகமகிழ் வென்னப் பின்னும்
விடையவன் வரங்க ணல்கி விடைகொடுத் தருளினானே. 26

விடைகொடு வணங்கி யேகும்வெள் ளானை மேற்றிசை யடைந்துதன் பெயரால், தடமுமற் றதன்பா லரனையுங் கணே சன் றன்னையுங் கண்டருச் சனைசெய், திடையறு வன்புந் தானுமங் கிருக்கு மெல்லையிச் செய்திகேட் டருள்கூர், கடவுளர் பெருமா னுழையரை விளித்தெங் களிற்றினைக் கொணர்கென விடுத்தான்.

வல்லவந் தழைத்தார் தம்மைமுன் போக்கி வருவலென் றெழுந்துகீழ்த் திசையோர், எல்லவந் தோரூர் [2]தன்பெய ராற் கண் டிந்திரேச் [3]சுரனென விறைவன், றொல்லைவண் பெயரா லொன்றுகண் டரனைத் தூயபூ சனைசெய்தங் கிருப்பக், கல்லைவன் சிறகு தடிந்தவ னின்னுங் களிறுவந் திலதெனப் பின்னும். 28

---

24. வந்ததை, ஐ : சாரியை. எவன் - என்ன? முந்தை - முன் செய்தி.

25. என்பதாம் ஆரம்-எனும்பாகிய மாலை. அஃது - அச் சுமத்தன் தொழில்.

26. விண்ணுடுடையவன் - இந்திரன்.

27. கண்டு - பிரதிட்டை செய்து. கடவுளர் - தேவர்.

28. தொல்லை வண்பெயர்-தொன்றுதொட்டுள்ள அழகிய பெயர். கல்லை வன் சிறகு தடிந்தவன் - இந்திரன் ; கல் - மலை.

பா-ம்—1 என்பராவாரம். 2 தனது பேராற் கண். 3 சரமென; சுரமென.

மனத்தினுங் கடிய தூதரை விடுப்ப வானடைந் திறைவனை வணங்கிப், புனத்தினுங் கடிய கல்லினும் பன்னாட் புன்கணோ யுறவரு சாபங், கனத்தினுங் கரிய கண்டனைக் கண்டு களைந்ததுங் கிளந்துதிக் கயத்தின், இனத்தினுங் கழிந்த தெய்வத வேழ மினிதுவீற் றிருந்தது மாதோ. 29

குடவயி னயிரா வதப்பெருந் தீர்த்தங் குடைந்தயி ராவத கணேசக், கடவுளைத் தொழுதை ராவதேச் சுரத்துக் கடவுளைப் பணிந்தவர் சாபத், தொடர்பினும் பாவத் தொடர்பினும் கழிவர் சுராதிபன் களிறுசென் னெறிபோய், இடர்கெட வைகை படிந்து தென் கரையி லிந்திரேச் சுரனடி பணிவோர். 30

இம்மையி லறமுன் மூன்று மெய்திய பயனை யெய்தி
அம்மையின் மகவா னீரே முரும்பத மளவும் வானில்
வெம்மையில் போகமூழ்கி வெறுப்புவந் தடைய வுள்ளச்
செம்மையில் விளைபே ரின்பச் சிவகதிச் செல்வ ராவார். 31

ஆகச் செய்யுள்—471

---

29. புனம் - காடு. கல் - மலை. கனத்தினும் - மேகத்தினும். திக்கயம் - எட்டுத் திசைகளிலுமுள்ள யானைகள்.

30. குடவயின் - மேலைத்திசையிலுள்ள. படிந்து - மூழ்கி.

31. அறமுன்மூன்று - அறம், பொருள், இன்பம் என்ற மூன்று. அம்மை - மறுமை.

# 3. திருநகரங் கண்ட படலம்

—o—

தான வாறிழி புகர்முகத் தடுகரி சாபம்
போன வாறுரை செய்துமேற் புதுமதி முடிமேல்
வான வாறினன் கடம்பமா வனமுது நகரம்
ஆன வாறது தனைச்சிறி தறிந்தவா றறைவாம். 1

இன்ன ரம்புள ரேழிசை யெழான்மிடற் றளிகள்
கின்ன ரம்பயில் கடம்பமா வனத்தினின் கீழ்சார்த்
தென்னர் சேகர னெனுங்குல சேகர னுலக
மன்னர் சேகர னரசுசெய் திருப்பது மணவூர். 2

குலவு மப்பெரும் பதியிளங் கோக்களி லொருவன்
நிலவு மாநிதி போலருச் சனைமுத னியதி
பலவு மாஞ்சிவ தருமமுந் தேடுவான் பரன்பாற்
றலைமை சான்றமெய் யன்பினான் றனஞ்சய னென்பான். 3

செல்வ மாநக ரிருந்துமேற் றிசைப்புலஞ் சென்று
மல்லல் வாணிகஞ் செய்துதன் வளம்பதி மீள்வான்
தொல்லை யேழ்பவக் கடற்கரை தோற்றுவித் தடியார்
அல்ல றீர்ப்பவன் கடம்பமா வனம்புகு மளவில். 4

இரவி கண்மறைந் தேழ்பரி யிரதமுந் தானும்
உரவு நீர்க்கருங் கடலில்வீழ்ந் தொளித்தன னாக
[1]இரவு நீண்மயங் கிருள்வயிற் றமியனாய் மெலியும்
அரவு நீர்ச்சடை யண்ணலுக் கன்பினோ னங்கண். 5

வாங்கு நான்மருப் பேந்திய மதமலை யெருத்தந்
தாங்கி யாயிரங் கரங்களாற் றடவியெண் டிசையுந்
தூங்கு காரிரு டுரத்துசெஞ் சுடரெனச் சூழ்போய்
வீங்கு காரிரு ளொதுக்கிய விமானனேர் கண்டான். 6

---

1, தானம் - மதம். புகர் - புள்ளி. புதுமதி - பிறைச் சந்திரன்.
2. உளர் - தடவுதலினால். கின்னரம் - வீணை யிசை.
3. இளங்கோக்கள் - வணிகர். பரன் - மேலானவன்; சிவன்.
4. மல்லல் - (செல்வ) மிகுதி. கரை - இங்கு மோட்சம்.
6. எருத்தம் - பிடரி. தடவி - துருவி.
பா-ம்—1 விரவு நீண் மயங்கு.

அடுத்த ணைந்தன னவிர்சுடர் விமானமீ தமர்ந்த
கடுத்த தும்பிய கண்டனைக் கண்டுதாழ்ந் துவகை
மடுத்த நெஞ்சினா னங்ஙனம் வைகிருள் கழிப்பான்
எடுத்த சிந்தையி னிருந்தன னிருக்குமவ் விருள்வாய். 7

சோம வாரமன் றாதலாற் சுரர்களங் கெய்தி
வாம மேகலை மலைமக டலைமகன் மலர்ந்த
காமர் சேவடி பணிந்தவன் கங்குல்போற் கருதி
யாம நான்கினு மருச்சனை யின்புறப் புரிவார். 8

அண்டர் வந்தது மருச்சனை புரிவது மனைத்துந்
தொண்ட ரன்பினுக் கெளியவன் சுரர்தொழக் கறுத்த
கண்ட னின்னருட் கண்ணினாற் கண்டன னுதலிற்
புண்ட ரம்பயி லன்புடைப் புண்ணிய வணிகன். 9

நான மென்பனி நறும்புன னாயகன் பூசைக்
கான நல்விரை வருக்கமு மமரர்கைக் கொடுத்து
ஞான வெண்மதிச் சடையவன் கோயிலின் ஞாங்கர்த்
தான மர்ந்தருச் சனைசெய்வான் றங்கணா யகனை. 10

வள்ள றன்னைமெய் யன்பினா லருச்சிசெய் வானோர்
உள்ள வல்வினை யீட்டமுங் கங்குலு மொதுங்கக்
கள்ள மில்லவன் யாரையுங் கண்டிலன் கண்டான்
தள்ள ருஞ்சுடர் விமானமேற் றனித்துறை தனியை. 11

ஆழ்ந்த சிந்தைய னதிசய மடைந்துசே வடிக்கீழ்த்
தாழ்ந்தெ ழுந்திரு கைகளுந் தலைமிசைக் கூப்பிச்
சூழ்ந்து தன்பதிக் கேகுவா னொருதலை துணிந்து
வாழ்ந்த வன்பினான் விடைகொடு வழிக்கொடு வந்தான். 12

முக்க டம்படு களிற்றினான் முகிறவழ் கோயில்
புக்க டங்கலர் சிங்கமன் றானெதிர் புகல்வான்

---

8. வாமம் - ஒளி; அழகு. காமர் - அழகு. அவன் கங்குல்போல் - சிவராத்திரியைப்போல.

9. புண்டரம் - திரிபுண்டரமாக அணிந்த விபூதி.

10. விரை - வாசனை. ஞாங்கர் - பக்கம்.

11. அருச்சிசெய் - அருச்சித்த. தனி - தனிமுதல்; சோமசுந்தரர்.

12. ஒருதலை - ஒரு பட்சம்.

திக்க டங்கலுங் கடந்தவெந் திகிரியாய் நெருநல்
அக்க டம்பமா வனத்திலோ ரதிசயங் கண்டேன். 13

வல்லை வாணிகஞ் செய்துநான் வருவழி மேலைக்
கல்ல டைந்தது வெங்கதிர் கங்குலும் பிறப்பும்
எல்லை காணிய கண்டன னிரவிமண் டலம்போல்
அல்ல டுஞ்சுடர் விமானமு மதிற்சிவக் குறியும். 14

மாவ லம்புதார் மணிமுடிக் கடவுளர் வந்தத்
தேவ தேவனை யிரவெலா மருச்சனை செய்து
போவ தாயினர் யானுமப் பொன்னெடுங் கோயின்
மேவு மீசனை விடைகொடு மீண்டன னென்றான். 15

மூளு மன்பினன் மொழிந்திட முக்கணெம் பெருமான்
தாளு மஞ்சலி கரங்களுந் தலையில்வைத் துள்ளம்
நீளு மன்புமற் புதமுமே நிரம்பநீர் ஞாலம்
ஆளு மன்னவ னிருந்தனன் போயினா னருக்கன். 16

ஈட்டு வார்வினை யொத்தபோ திருண்மலங் கருக
வாட்டு வாரவர் சென்னிமேன் மலரடிக் கமலஞ்
சூட்டு வார்மறை கடந்ததந் தொல்லுரு விளங்கக்
காட்டு வாரொரு சித்தராய்த் தோன்றினார் கனவில். 17

வடிகொள் வேலினாய் கடம்பமா வனத்தினைத் திருந்தக்
கடிகொள் காடகழ்ந் தணிநகர் காண்கென வுணர்த்தி
அடிக ளேகினார் கவுரிய ராண்டகை கங்குல்
விடியும் வேலைகண் விழித்தனன் பரிதியும் விழித்தான். 18

---

13. முக்கடம் - மும்மதம்; கைம்மதம், இரண்டு கபோல மதம். அடங்கலர் - பகைவர்.

14. மேலைக்கல் - அத்தமனகிரி.

15. மா - வண்டு. அலம்பு - ஒலிக்கின்ற.

16. மன்னவன் - குலசேகர பாண்டியன். அஞ்சலி கரங்கள் - கூப்பிய கைகள்.

17. தொல்லுரு - அனாதியாயுள்ள உண்மைத் திருவுருவம். வாட்டிச் சூட்டிக் காட்டுங் கடவுள் என்க: வாட்டுவாராய்ச் சூட்டு வாருமாம்.

18. அடிகள் - சோமசுந்தரக் கடவுள். கவுரியர் - பாண்டியர்.

கனவிற் றீர்ந்தவ னியதியின் கடன்முடித் தமைச்சர்
சினவிற் றீர்ந்தமா தவர்க்குந்தன் கனுத்திறஞ் செப்பி
நனவிற் கேட்டதுங் கனவிற் கண்டது நயப்ப
வினவித் தேர்ந்துகொண் டெழுந்தனன் மேற்றிசைச் செல்வான்.

அமைச்ச ரோடுமந் நீபமா வனம்புகுந் தம்பொன்
சமைச்ச விழ்ந்தபொற் றுமரைத் தடம்படிந் தொளிவிட் .
டிமைச்ச லர்ந்தபொன் விமானமீ தினிதுவீற் றிருந்தோர்
தமைச்ச ரண்பணிந் தஞ்சலி தலையின்மேன் முகிழ்த்தான். 20

அன்பு பின்றள்ள முன்புவந் [1]தருட்கணீர்த் தேக
என்பு நெக்கிட வேகிவீழ்ந் திணையடிக் கமலம்
பொன்பு னைந்ததார் மௌலியிற் புனைந்தெழுந் திறைவன்
முன்பு நின்றுசொற் பதங்களாற் றோத்திர மொழிவான். 21

சரண மங்கையோர் பங்குறை சங்கர சரணஞ்
சரண மங்கல மாகிய தனிமுதல் சரணஞ்
சரண மந்திர வடிவமாஞ் சதாசிவ சரணஞ்
சரண மும்பர்க ளுயக பசுபதி சரணம். 22

ஆழி ஞாலமே லாசையு மமரர்வான் பதமேல்
வீழு மாசையும் வெறுத்தவர்க் கன்றிமண் ணுண்டு
பீழை மூழ்கிவா னரகொடு பிணிபடச் சுழலும்
ஏழை யேங்களுக் காவதோ வெந்தைநின் கருணை. 23

சூள தாமறைச் சென்னியுந் தொடத்தொட நீண்ட
[2]நீள னீயுனக் கன்பில மாயினு நீயே
மூள வன்புதந் தெங்குடி முழுவதும் பணிகொண்
டாள வேகொலிக் கானகத் தமர்ந்தனை யென்று. 24

---

19. சினவு – கோபம்; தொழிற் பெயர்.

20. நீபம் - கடம்பமரம். நீபமாவனம் - கடம்பவனம்; மதுரை.

21. நெக்கிட - கரைந்துருக. மௌலி - முடி. சொற்பதம்: ஒரு பொருட் பன்மொழி.

22. மந்திரம் - இங்குப் பஞ்சப் பிரம மந்திரம். சதாசிவம் – ஐந்து திருமுகங்களையுடைய மூர்த்தி.

23. பீழை - துன்பம். பிணி - கட்டு.

24. சூள் - (தொடுவேன் என்னும்) சபதம்.

பா-ம்—1 தருட்கணீர்தேங்க. 2 நீளநீ

சுரந்த வன்பிரு கண்வழிச் சொரிவபோற் சொரிந்து
பரந்த வாரொடு சிவானந்தப் பரவையுட் படிந்து
வரந்த வாதமெய் யன்பினால் வலங்கொடு புறம்போந்
தரந்தை தீர்ந்தவ [1]னொருசிறை யமைச்சரோ டிருந்தான். 25

ஆய வேலையின் மன்னவ னாணையா லமைச்சர்
மேய வேவலர் துறைதுறை மேவினர் விடுப்பப்
பாய வேலையி னார்த்தனர் வழிக்கொடு படர்ந்தார்
சேய காடெறிந் தணிநகர் செய்தொழின் மாக்கள். 26

வட்ட வாய்மதிப் பிளவின்வெள் வாய்க்குய நவியம்
இட்ட தோளினர் யாப்புடைக் கச்சின ரிரும்பின்
விட்ட காரொளி மெய்யினர் விசிகொள்வார் வன்றோல்
தொட்ட காலினர் வனமெறி தொழிலின ரானார். 27

மறியு மோதைவண் டரற்றிட மரந்தலை பனிப்ப
எறியு மோதையு மெறிபவ ரோதையு மிரங்கி
முறியு மோதையு முறிந்துவீ ழோதையு முகில்வாய்ச்
செறியு மோதையுங் கீழ்ப்பட மேற்படச் செறியும். 28

ஒளிறு தாதொடு போதுசெந் தேனுக வொலித்து
வெளிறில் வன்மரஞ் சினையிற வீழ்வசெங் களத்துப்
பிளிறு வாயவாய் நிணத்தொடு குருதிநீர் பெருகக்
களிறு கோடிற மாய்ந்துவீழ் காட்சிய வனைய. 29

பூவ டைந்தவண் டினமயற் புறவொடும் பழனக்
காவ டைந்தன பறவைவான் கற்பக மடைந்த
கோவ டைந்திட வொதுங்குறுங் குறும்புபோற் செறிந்து
மாவ டைந்தன மாடுள வரைகளுங் காடும். 30

---

25. அரந்தை - மனக்கவலை. சிறை - பக்கம்.

27. குயம் - கொடுவாள். நவியம் - கோடரி. விசி கொள்வார் - வாரால் கட்டினைக்கொண்ட. தோல் – செருப்பு.

28. மறியும் - (இலைகள்) மடங்கி விழும். செறியும் - ஒலிக்கும்.

29. வெளிறு - வெள்ளடை; வயிரமின்மை. வன்மரம் - ஒரு வகை மரம்.

30. புறவு - முல்லைநிலம். குறும்பு - குறுநில மன்னர். மா - மிருகங்கள். ஒதுங்குறும்: ஒரு சொல்.

பா-ம்—1 ணொருசிறை.

இருணி ரம்பிய வனமெலா மெறிந்துமெய் யுணர்ந்தோர்
தெருணி றைந்தசிந் தையின்வெளி செய்துபல் லுயிர்க்கும்
அருணி றைந்துபற் றறுத்தர னடிநிழ லடைந்த
கருணை யன்பர்தம் பிறப்பென வேரொடுங் [1]களைந்தார். 31

களைந்து நீணிலந் திருத்திச்[2]செந் நெறிபடக் கண்டு
வளைந்து நன்னக ரெடுப்பதெவ் வாறெனத் தேறல்
விளைந்து தாதுகு தார்முடி வேந்தன்மந் திரரோ
டளைந்த ளாவிய சிந்தையோ டிருந்தன னங்கண். 32

மெய்ய ரன்புதோய் சேவடி வியனிலந் தீண்டப்
பொய்ய கன்றவெண் ணீறணி மேனியர் பூதிப்
பையர் நள்ளிருட் கனவில்வந் தருளிய படியே
ஐயர் வல்லைவந் தருளினா ரரசுளங் களிப்ப. 33

கனவி லும்பெருங் கடவுளர் காண்பதற் கரியார்
நனவி லும்வெளி வந்தவர் தமையெதிர் நண்ணி
நினைவி னின்றதா ளிறைஞ்சிநேர் நின்றுநல் வரவு
வினவி யாதனங் கொடுத்தனன் மெய்யுணர் வேந்தன். 34

தென்ன ரன்பினி லகப்படு சித்தர்தா முன்னர்ச்
சொன்ன வாதிநூல் வழிவரு சார்புநூற் றொடர்பால்
நன்ன ராலய மண்டபங் கோபுர நகரம்
இன்ன வாறுசெய் யெனவகுத் திம்மென மறைந்தார். 35

மறைந்தெ வற்றினு நிறைந்தவர் மலரடிக் கன்பு
நிறைந்த நெஞ்சுடைப் பஞ்சவ னிலத்துமேம் பட்டுச்

---

31. மெய்யுணர்ந்தோர் - தத்துவ ஞானமுணர்ந்தோர். பற்று - அகப்பற்று, புறப்பற்று.

32. தேறல் - தேன். மந்திரர் - அமைச்சர்.

33. வியன் - அகன்ற. வெண்ணீறு - விபூதி.

34. பெருங்கடவுளர் - (பிரமன் முதலிய) பெரிய கடவுளர்.

35. ஆதி நூல் - முதனூலாகிய ஆகமம். வழி நூல் - சிற்பம். சார்பு நூல் - சிவாகமம், சிற்பம் ஆகிய இவைகளை ஒருபுடை தழுவிக் கூறும் ஏனைய நூல்கள். நன்னர் - நன்கு.

36. பஞ்சவன் - (குலசேகர) பாண்டியன். மலரடிக்கு - திருவடியில்; கு: உருபு மயக்கம்.

பா-ம்—1 களைந்தான். 2 சென்னெறி (செல்லுகின்ற வழி).

சிறந்த சிற்பநூற் புலவராற் சிவபரஞ் சுடர்வந்
தறைந்து வைத்தவா ருலய மணிநகர் காண்பான். 36

மறைபயில் பதும மண்டப மருத்த மண்டப மழைநுழை வளைவாய்ப், பிறைபயில் சிகைமா மண்டப மறுகாற் பீடிகை திசையெலாம் பிளக்கும், பறைபயி னிருத்த மண்டபம் விழாக் கொள் பன்மணி மண்டபம் வேள்வித், துறைபயில் சாலை திரு மடைப் பள்ளி சூழுறை தேவர்தங் கோயில். 37

வலவயி னிமய வல்லிபொற் கோயின் மாளிகை யடுக்கிய மதில்வான், நிலவிய கொடிய நெடிய சூளிகைவா னிலாவிரி தவளமா ளிகைமீன், குலவிய குடுமிக் குன்றிவர் செம்பொற் கோபுரங் கொண்டல்கண் படுக்குஞ், சுலவெயி லகழிக் கிடங்குகம் மியநூற் றொல்வரம் பெல்லைகண் டமைத்தான். 38

சித்திர நிரைத்த பீடிகை மறுகு தெற்றிகள் வாணிலாத் தெளிக்கும், நித்தில நிரைத்த விழாவரு வீதி நிழன்மணிச் சாளர வொழுக்கப், பித்திகை மாடப் பெருந்தெருக் கவலை பீடுசால் சதுக்கநற் பொதியில், பத்தியிற் குயின்ற மன்றுசெய் குன்று மருமணி மேடையா டரங்கு. 39

அருந்தவ ரிருக்கை யந்தண ருறையு ளரசரா வணங்குல வணிகப், பெருந்தெரு நல்வே ளாளர்பே ரறஞ்சால் பெருங்குடி யேனைய கரிதேர், திருந்திய பரிமா நிலைக்களங் கழகந் தீஞ்சுவை யாறுநான் குண்டி, இரந்தவர்க் கருத்து நல்லறச் சாலை யினையன பிறவுநன் கமைத்தான். 40

---

37. பீடிகை - அறுகாற் பீடம்.

38. சூளிகை - இறப்புக்கள். குடுமி - சிகரம். இவர் - உயர்ந்த. கம்மி நூல் - சிற்ப நூல். வரம்பு எல்லை : ஒரு பொருட் பன்மொழி.

39. தெற்றிகள் - சித்திரக்கூடங்கள். பித்திகை - சுவர். கவலை - கவர் வழிகள். சதுக்கம் - நாற் சந்தி. பொதியில் - அம்பலங்கள். குயின்ற - இயற்றிய.

40. ஆவணம் - வீதி. கழகம் - கல்விச்சாலை. சுவை ஆறு - அறுசுவை ; கைப்பு, புளிப்பு, கார்ப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, இனிப்பு என்பன. நான்குண்டி - உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன ஆகிய நான்கு வகை உணவுகள்.

துணிகயந் தெண்ணீர்க் கூவல்பூ வோடை தொடுகுளம் பொய்கைநந் தவனந், திணிமலர்ச் சோலை துடவையுய் யானந் திருநகர்க் கணிபெறச் செய்து, மணிமலர்த் தாரோன் மாளிகை தனக்கும் மாநகர் வடகுண பாற்கண், டணிநகர் சாந்தி செய்வது குறித்தா னன்னலா [1]ரறிந்து செய்வார். 41

பொன்மய மான சடைமதிக் கலையின் புத்தமு துகுத்தன ரதுபோய்ச், சின்மய மான தம்மடி யடைந்தார்ச் சிவமய மாக்கிய செயல்போற், றன்மய மாக்கி யந்நகர் முழுதுஞ் சாந்திசெய் ததுவது மதுர, நன்மய மான தன்மையான் மதுரா நகரென வுரைத்தனர் நாமம். 42

கீட்டிசைக் கரிய சாத்தனுந் தென்சார் [2]கீற்றுவெண் பிறை நுதற் களிற்றுக், கோட்டிளங் களபக் கொள்கையன் னையருங் குடவயின் மதுமடை யுடைக்குந், தோட்டிளந் தண்ணந் துழாயணி மௌலித் தோன்றலும் வடவயிற் றோடு, நீட்டிரும் போந்தி னிமிர்குழ லெண்டோ ணீலியுங் காவலா நிறுவி. 43

கைவரை யெருத்திற் கனவரை கிடந்த காட்சியிற் பொலிந் தொளிர் கோயின், மைவரை மிடற்று மதுரைநா யகரை மரபுளி யருச்சனை புரிவான், பொய்வரை மறையா கமநெறி யொழுகும் புண்ணிய முனிவரை யாதி, சைவரைக் காசிப் பதியினிற் கொணர்ந்து தலத்தினிற் றாபனஞ் செய்தான். 44

உத்தம குலத்து நாற்பெருங் குடியு முயர்ந்தவு மிழிந்தவு மயங்க, வைத்தவு மான புறக்குடி மூன்று மறைவழுக் காமனு

---

41. துணிகயம் - தெளிந்த நீர் நிறைந்த சிறுகுளம். கூவல் - கிணறு. துடவை - தோட்டம்.

42. சின்மயம் - ஞானமயம். சிவமயம் - சிவரூபம்.

43. கீட்டிசை - கீழ்த்திசை. சாத்தன் - ஐயனார். களபம் - கலவைச் சாந்து. அன்னையர் - சத்தமாதர். நீலி - காளி.

44. கைவரை - யானை. எருத்தம் - பிடரி. கனவரை - பொன்மலை. மைவரை - கருமை தங்கிய.

45. நாற்பெருங்குடி - அந்தணர், அரசர், வணிகர், வேளாளர். புறக்குடி மூன்று - அநுலோமர், பிரதிலோமர், சங்கர சாதியார். வைத்து - பகைமையுடைத்தாய்.

பா-ம்—1 ரறிந்தது. 2 கீற்றிளம்பிறை.

வருத்த, தத்தம நெறியி னொழுகவை திகழுஞ் சைவமுந் தரும
முந் தழைப்பப், பைத்தெழு திரைநீர் ஞாலமேற் றிலகம் பதித்
தென நகர்வளம் படுத்தான். 45

அன்றுதொட் டரச னங்கக ரெய்தி யணிகெழு மங்கல
மியம்ப, என்றுதொட் டிமைக்கு மனையின்மங் கலநா ளெய்திரு
ணிருந்துமுப் புரமுங், குன்றுதொட் டெய்தான் கோயின்மூன்
றுறுப்புங் குறைவில்பூ சனைவழா தோங்கக், கன்றுதொட்
டெறிந்து கனியுகுத் தான்போற் கலிதுரந் தரசுசெய் நாளில். 46

பவநெறி கடக்கும் பார்த்திவன் கிரணம் பரப்பிளம் பரிதி
போன் மலயத், துவசனைப் பயந்து மைந்தன்மேன் ஞாலஞ்
சுமத்திநாள் பலகழித் தொருநாள், நவவடி விறந்தோ னாலயத்
தெய்தி நாதனைப் பணிந்துமூ வலஞ்செய், துவமையி லின்ப
வருணிழ லெய்தி யொன்றியொன் றாநிலை நின்றான். 47

ஆகச் செய்யுள்—518

---

46. என்று - சூரியன். மூன்றுறுப்பு - நித்தியம், நைமித்தியம், காமியம் (பிராயச்சித்தம்). கனி-விளாங்கனி. உகுத்தான் - வீழ்த்தின திருமால். கலி - துன்பம்.

47. பவநெறி - பிறவித் தொடர். நவவடிவிறந்தோன் - துரிய சிவன். நவவடிவம் - உருவம் நான்கு, அருவம் நான்கு, அருவுருவம் ஒன்று ஆக ஒன்பது வடிவம்; இவை முறையே பிரமன், திருமால், உருத்திரன், மகேசன்; விந்து, நாதம், சத்தி, சிவம்; சதாசிவமாம்.

# 4. தடாதகைப்பிராட்டியார்

## திருவவதாரப்படலம்

—o—

கன்னியொரு பங்கினர் கடம்பவன மெல்லாம்
நன்னகர மானது நவின்றுமுல கீன்ற
அன்னைமக ளாகிமல யத்துவச னாகுந்
தென்னனிடை வந்துமுறை செய்ததுரை செய்வாம். 1

மனுவற முவந்துதன் வழிச்செல நடத்தும்
புனிதன்மல யத்துவசன் வென்றிபுனை பூணான்
கனியமுத மன்னகரு ணைக்குறையுள் காட்சிக்
கினியன்வட சொற்கட றமிழ்க்கட லிகந்தோன். 2

வேனில்விறல் வேள்வடிவன் வேட்கைவிளை பூமி
ஆனமட வார்கள்பதி னாயிரவ ருள்ளான்
வானொழுகு பானுவழி வந்தொழுகு சூர
சேனன்மகள் காஞ்சனையை மன்றல்வினை செய்தான். 3

கண்ணுதலை முப்பொழுதும் வந்துபணி கற்றான்
எண்ணில்பல நாண்மகவி லாவறுமை யெய்திப்
பண்ணரிய தானதரு மம்பலவு மாற்றிப்
புண்ணிய நிரம்புபரி வேள்விபுரி குற்றான். 4

ஈறின்மறை கூறுமுறை யெண்ணியொரு தொண்ணூற்
றாறினொடு மூன்றுமக மாற்றவம ரேசன்
நூறுமக மும்புரியி னென்பதநொ டிப்பின்
மாறுமென மற்றதனை மாற்றியிது சாற்றும். 5

---

1. மலயத்துவசன் - மலயம் என்னும் பெயருடைய பொதியமலையைத் தன் கொடியில் எழுதிக் கைக்கொண்டவன்; பாண்டியன்.
2. உறையுள்–இருப்பிடம். இகந்தோன்-நிலைகண்டு கடந்தவன்.
3. விறல் - வெற்றி. பானு - சூரியன். மன்றல் - திருமணம்.
4. பணி - வணங்குதலையே. பரிவேள்வி - அசுவமேதயாகம்.
5. பதம் - இந்திர பட்டம். நொடிப்பின் - நொடிப்பொழுதில்.

நன்பொருள் விரும்பினை யதற்கிசைய ஞாலம்
இன்புறு மகப்பெறு மகத்தினை யியற்றின்
அன்புறு மகப்பெறுதி யென்றமரர் நாடன்
தன்புல மடைந்திடலு நிம்பநகு தாரான். 6

மிக்கமக வேள்விசெய் விருப்புடைய னாகி
அக்கண மதற்குரிய யாவையு மமைத்துத்
தக்கநிய மத்துரிய தேவியொடு சாலை
புக்கன னிருந்துமக வேள்விபுரி கிற்பான். 7

[1]ஆசறம றைப்புலவ ராசிரியர் காட்டும்
மாசறுச டங்கின்வழி மந்திரமு தாத்த
ஓசையனு தாத்தசொரி தந்தழுவ வோதி
வாசவ னிருக்கையி [2]லிருந்தெரி வளர்ப்பான். 8

விசும்புநில னுந்திசையும் வேள்வியடு சாலைப்
பசும்புகை படர்ந்தொரு படாமென மறைப்பத்
தசும்புபடு நெய்பொரி சமித்தினொடு வானோர்க்
கசும்புபடு மின்னமுதி னாகுதி மடுத்தான். 9

ஐம்முக னனுதிபர மாத்தனுரை யாற்றால்
நெய்ம்முக நிறைத்தழ [3]னிமிர்த்துவரு மெல்லை
பைம்முக வராவணி பரஞ்சுடர் தனிப்ப
மைம்முக நெடுங்கணிம வான்மனைவி நாண. 10

வள்ளன்மல யத்துவச மீனவன் வலத்தோள்
துள்ளமனை காஞ்சனை சுருங்கிய மருங்குல்
தள்ளவெழு கொங்கைகட தும்பநிமிர் தீம்பால்
வெள்ளமொழு கக்கரிய வேற்கணிட னாட. 11

---

6. நன்பொருள் - சற்புத்திரன். நிம்பம் - வேம்பு.

7. மகவேள்வி – புத்திரகாமேஷ்டி யாகம்.

8. உதாத்தம் - எடுத்தல். அனுதாத்தம் - படுத்தல். சொரிதம் - நலிதல். வாசவனிருக்கை - கீழ்த்திசை.

9. படாம் - போர்வை. தசும்பு - குடம். அசும்பு - ஊற்று.

10. ஐம்முகன் – சிவபெருமான். பரமாத்தன் - மேலான ஆப்தன்; தோழன். உரை - வேதம். ஆறு – வழி. இமவான் மனைவி - மேனை.

11. ஆண்களுக்கு வலத்தோள் துடித்தல் பெண்களுக்கு இடக்கண் துடித்தல் நற்சகுனமாம்.

பா-ம்—1 ஆசறும. 2 னிருந்தெரி. 3 நிமிர்ந்துவரு.

இவ்வுலக மன்றியுல கேழுமகிழ் வெய்தச்
சைவமுத லாயின தவத்துறை நிவப்ப
ஔவிய மறங்கெட வறங்குது கலிப்பத்
தெய்வமறை துந்துபி திசைப்புல னிசைப்ப. 12

மைம்மலர் நெடுங்கணர மங்கையர் நடிப்ப
மெய்ம்மன மொழிச்செயலின் வேறுபட லின்றி
அம்மதுரை மாநகரு ளாரக மகிழ்ச்சி
தம்மையறி யாதன தலைத்தலை சிறப்ப. 13

மாந்தர்பயின் மூவறுசொன் மாநில வரைப்பில்
தீந்தமிழ் வழங்குதிரு நாடது சிறப்ப
ஆய்ந்ததமிழ் நாடர சளித்துமுறை செய்யும்
வேந்தர்களின் மீனவர் விழுத்தகைமை யெய்த. 14

நொய்தழ லெரிக்கடவு ளுற்றபய னெய்தக்
கொய்தளி ரெனத்தழல் கொழுந்துபடு குண்டத்
[1]தைதவி ழிதழ்க்கமல மப்பொழு தலர்ந்தோர்
மொய்தளிர் விரைக்கொடி முளைத்தெழுவ தென்ன. 15

விட்டிலகு சூழியம் விழுங்குசிறு கொண்டை
வட்டமதி வாய்க்குறு முயற்கறையை மானக்
கட்டியதி ணுற்றிய கதிர்த்தரள மாலை
சுட்டியதில் விட்டொழுகு சூழ்கிரண மொப்ப. 16

தீங்குதலை யின்னமுத மார்பின்வழி சிந்தி
யாங்கிள நிலாவொழுகு மாரவட மின்ன
வீங்குட லிளம்பரிதி வெஞ்சுடர் விழுங்கி
வாங்குகடல் வித்துரும மாலையொளி கால. 17

---

12. ஔவிய மறம் - பொறாமையால் விளைந்த பாவம்.

14. மூவறு சொல் மா நில வரைப்பு - பதினெண் மொழிகள் வழங்கும் பதினெட்டு நிலங்கள். வேந்தர்கள் - சேர சோழ பாண்டியர்.

15. நொய்து - எளிதில். ஐது - அழகிதாக.

16. சூழி - உச்சிக்கொண்டையில் அணியும் அணி. சூழி+அம்= சூழியம்; அம்: பகுதிப்பொருள் விகுதி.

17. குதலை - உருத்தெரியாச்சொல். அமுதம் - வாயூறல். வித்துருமம் - பவளம்.

பா-ம்—1 தைதவ.

சிற்றிடை வளைந்தசிறு மென்றுகில் புறஞ்சூழ்
பொற்றிரு மணிச்சிறிய மேகலை புலம்ப
விற்றிரு மணிக்குழை விழுங்கிய குதம்பை
சுற்றிருள் கடிந்துசிறு தோள்வருடி யாட. 18

தெள்ளமுத மென்மழலை சிந்துவிள மூரல்
முள்ளெயி றரும்பமுலை மூன்றுடைய தோர்பெண்
பிள்ளையென மூவொரு பிராயமொடு நின்றாள்
எள்ளரிய பல்லுயிரு மெவ்வுலகு மீன்றாள். 19

குறுந்தளிர்மெல் லடிக்கிடந்த சிறுமணிநூ புரஞ்சதங்கை குழறி யேங்க, நறுந்தளிர்போ லசைந்துதளர் நடையொதுங்கி மழலையிள நகையுந் தோன்றப், பிறந்தபெரும் பயன்பெறுபொன் மாலைமடி யிருந்தொருபெண் பிள்ளை யானாள், அறந்தழுவு நெறி நின்றோர்க் [1]இகம்போகம் வீடளிக்கு மம்மை யம்மா. 20

செய்யவாய் வெளிருது துணைமுலைக்கண் கருகாது சேல்போ னீண்ட, மையவாய் மதர்த்தகருங் கண்பசவா தையிரண்டு மதியந் தாங்கா, தையவா லிலைவருந்தப் பெருதுபெறு மகவையெடுத் தணைத்தாண் மோந்தாள், துய்யவாய் முத்தங்கொண் டின்புற் ருண் முன்பெற்ற தோகை யன்னாள். 21

பரையாதி விருப்பறிவு தொழிலாகி யுலகமெலாம் படைத்துக் காத்து, வரையாது துடைத்துமறைத் தருளியவை நின்றுந் தன் வடிவு வேறாய், உரையாதி மறைகடந்த வொருமுதல்வி திருமகளா யுதித்தற் கிந்தத், தரையாளு மன்னவன்செய் தவமிதுவோ வதற்குரிய தவந்தான் மன்றோ. 22

---

18. மேகலை - எண்கோவையணி; எழுகோவையணியுமாம். குதம்பை - ஓர் ஆபரணம்.

19. மழலை - பொருள் நிரம்பாத சொல். மூரல் - பற்கள்.

20. குழறி யேங்க - கலந்து ஒலிக்க. இகம் - இவ்வுலக இன்பம். போகம் - சுவர்க்காதி இன்பம்.

21. முன்பெற்றதோகை - மேனை. அன்னாள் - ஒத்தவள்.

22. பரை - பராசத்தி. ஆதி - ஆதி சத்தி. விருப்பு - இச்சாசத்தி. அறிவு - ஞான சத்தி. தொழில் - கிரியாசத்தி. மன்: மிகுதிப் பொருளை உணர்த்தும் இடைச்சொல்.

பா-ம்—1 இகபோகம்.

கள்ளமா நெறியொழுகும் பொறிகடந்து கரணமெலாங் கடந்தா னந்த, வெள்ளமாம் பரஞான வடிவுடையா டன்னன் பின் வெளிவந் தின்றோர், பிள்ளையா யவதரித்த கருணையுந்தன் மணாட்டிதவப் பேறுந் தேருன், பள்ளமா கடற்றுளைப் பஞ்ச வர்கோ னெஞ்சகத்துப் பரிவு கூர்ந்தான். 23

மகவின்றிப் பலபகல்யான் வருந்தியருந் தவம்புரிந்தேன் மைந்தற் பேறு, தகவிந்த மகஞ்செய்தே னதுவுமொரு பெண் மகவைத் தந்த தந்தோ, முகவிந்து நிலவொழுக வருபெண்ணு முலைமூன்றாய் முகிழ்த்து மாற்றார், நகவந்த தென்னேயோ வென்றுவகை யிலனாகி நலியு மெல்லை. 24

மன்னவனின் றிருமகட்கு மைந்தர்போற் சடங்கனைத்தும் வழாது வேதஞ், சொன்னமுறை செய்துபெயர் தடாதகையென் றிட்டுமுடி சூட்டு வாயிப், பொன்னனையா டனக்கிறைவன் வரும்பொழுதோர் முலைமறையும் புந்தி மாழ்கேல், என்னவர னருளாலோர் திருவாக்கு விசும்பிடைநின் றெழுந்த தன்றே. 25

அவ்வாக்குச் செவிநிரம்ப வன்புவகை யகநிரம்ப வகல மெல்லாம், மெய்வாக்கு மனமொன்ற விழிவாக்கும் புனனிரம்ப விமலற் போற்றி, நெய்வாக்கு மகநிரப்பி யெழுந்துமனை யொடுஞ்சாலை நீத்தி ரண்டு, கைவாக்கு மியங்கலிப்பக் கடிமாட மனைபுகுந்தான் கழற்கால் வேந்தன். 26

முரசதிர்ப்ப மங்கலங்கொண் டெதிர்வருவார் முகத்துவகை முறுவல் பூப்ப, அரசிருக்கு மண்டபம்புக் கினிதமர்ந்து கனக மழை யான்ற கேள்வி, விரசிருக்கு மறையவர்கைப் பெய் தெவர்க்கு மம்முறையால் வெறுப்ப நல்கிப், பரசிருக்குங் கரதலத்தெம் பரன்கோயி னணிசிறப்புப் பல்க நல்கா. 27

---

23. மணாட்டி - மணவாட்டி. பஞ்சவர் - பாண்டியர்.

24. இந்து - சந்திரன். முகிழ்த்து - அரும்ப. மாற்றார்-பகைவர்.

25. புந்திமாழ்கேல் - மனம் வருந்தாதே.

26. வாக்கும் - சொரியும். கைவாக்கும்-கைகளால் தாக்கப்படும். அகலம் - மார்பு.

27. மங்கலம் - அட்டமங்கலம். அவை : சாமரம், நிறை குடம், கண்ணாடி, தோட்டி, முரசு, விளக்கு, கொடி, இணைக்கயல் என்பன. விரசிருக்கும் - பொருந்தியிருக்கும். பரசு - மழுப்படை.

சிறைவிடுமின் சிறைக்களமுஞ் சீத்திடுமி னேழாண்டு தேயத் தீட்டும், இறைவிடுமி னயல்வேந்தர் திறைவிடுமி னிறை நிதிய மீட்டு மாயத், துறைவிடுமி னறப்புறமு மால்யமும் பெருக்குமெனத் தொழாரைக் காய்ந்த, கறைவிடுமின் னயில் வேலான் வள்ளுவனைக் கூய்முரசங் கறங்கச் சாற்றி. 28

கல்யாண மணிமௌலி வேந்தரையுங் கால்யாப்புக் கழல நீத்துக், கொல்யானை பரிநெடுந்தே ரரசுரிமை தொன்முறையாற் கொடுத்துப் போக்கிப், பல்லாருங் கொள்கவெனப் பண்டாரந் தலைதிறந்து பசும்பொன் னுடை, வில்லாரு மணிக்கொடும்பூண் வெறுக்கைமுத லெனைப்பலவும் வெறுப்ப வீசி. 29

தூமரபின் வருபெருமங் கலகவிகட் கிருநிதியந் துகில்பூண் பாய்மா, காமர்கரி [1]பரித்தடந்தேர் முதலாய பலபொருளுங் களிப்ப நல்கிக், கோமறுகு களிதூங்கச் சுண்ணமொடு மெண்ணெய்விழாக் குளிப்ப நல்கி, மாமதுரா நகரன்றி மற்றுமுள நகரெங்கு மகிழ்ச்சி தூங்க. 30

இவ்வண்ண நகர்களிப்ப விறைமகனுங் களிப்பெய்தி யிறைவர் சொன்ன, அவ்வண்ணஞ் சாதமுதல் வினைநிரப்பித் தடாதகையென் றழைத்துத் தேவி, மெய்வண்ண மறையுணரா விறைவிதனை மேனைபோன் மேனு ளேற்ற, கைவண்ணத் தளிர் தீண்டி வளர்ப்பவிம வான்போலக் களிக்கு நாளில். 31

திருந்தாத விளங்குதலை யாயமொடு புறம்போந்து சிறூர்க்குச் சிற்றில், விருந்தாக மணற்சிறுசோ றட்டும்வரை யுரங்கிழித்த வேளும் வாய்வைத், தருந்தாத விளமுலைவாய் வைத்தருந்தப் பாவைதனக் களித்தும் போதில், வருந்தாதை யண்டமெலாஞ் சிற்றிலிழைப் பாளாய்க்கு மகிழ்ச்சி செய்தாள். 32

---

28. சீத்திடுமின் - தூய்மை செய்யுங்கள். தொழார் - பகைவர்,

29. கல்யாணம் - பொன். யாப்பு - கட்டு, விலங்கு. பண்டாரம் - பொக்கிஷம். வெறுக்கை - செல்வம்.

30. காமர் - அழகு. சுண்ணம் - வாசனைப்பொடி. மறுகு - வீதி.

31. சாதமுதல் வினை - சாதகன்மம் முதலிய சடங்குகள். சாதம் - சனனம்.

32. ஆயம் - கூட்டம். வரை - கிரௌஞ்சமலை. வேள் - முருகன். போதில் வருந் தாதை - பிரமன்.

பா-ம்—1 பரிநெடுந்தேர்.

நீட்டுவா ளிரண்டனைய கண்களிப்பத் தோழியர்க்குத் தெரிய வாடிக், [1]காட்டுவா ளெனக்கழங்கு பந்துபயின் றம்மனையுங் கற்றுப் பாசம், வீட்டுவாண் மேலொடுகீழ் தள்ளவெமை வினைக் கயிறு வீக்கி யூசல், ஆட்டுவாள் காட்டுதல்போ லாடினா ணித்தி லத்தாம் பசைத்த வூசல். 33

இம்முறையாற் றுயர்க்குந் தோழியர்க்கு மகத்துவகை யீந்தா ளாகி, அம்முறையாற் றுதைக்கு மகத்துவகை யீவாளா யாத்த வாய்மைச், செம்மறைய ரணமுதனா லீரெட்டுக் கலைமுழுதுந் தெளிந்தா ளந்த, மெய்ம்மறையார் கலையனைத்து மேகலையா மருங்கசைத்த விமலை யம்மா. 34

சொல்வாய்மைக் கலைத்தெளிவு முழுமதியைப் பிளந்திருபாற் சொருகி யன்ன, பல்வாய்மைக் கடகரிதேர் பரியுகைக்குந் திறனு மழற் பகழி தூர்க்கும், வில்வாள்வச் சிரமுதற்பல் படைத் தொழிலுங் கண்டிளமை விழுங்கு மூப்பிற், செல்வாய்மைத் திறலரசன் றிருமகட்கு முடிசூட்டுஞ் செய்கை பூண்டான். 35

முடிகவிக்கு மங்கலநாள் வரையறுத்துத் திசைதோறு முடங்கல் போக்கிக், கடிகெழுதார் மணிமௌலிக் காவலரை வருவித்துக் காவல் சூழ்ந்த, கொடியணிமா நகரெங்கும் விழா வெடுப்ப வழகமைத்துக் குன்ற மன்ன, தொடிகெழுதோட் சுமதி திரு மணத்தினுக்கு வேண்டுவன சூழ்ந்து செய்தான். 36

மங்கலதூ ரியமுழங்க மால்யானை யுச்சிமிசை வந்த பூத, கங்கைமுத லொன்பதுநீர்த் தமுநிரப்பிக் கதிர்விடு பொற் கடம்பூ சித்துப், புங்கவரை மந்திரத்தீ வளர்த்தமுத மருத்தியெரி பொன் னாற் செய்த, சிங்கமணி யாதனத்தை நேசித்துப் பூசித்துத் [2]தெய்வ மேற்றி. 37

---

33. வினை - நல்வினை, தீவினை. தாம்பு - வடம்.
34. ஆரணம் - வேதத்தின் பாகுபாடு. ஆத்தம் - உண்மை.
35. பகழி தூர்க்கும் - அம்புகளைப் பொழியும்.
36. முடங்கல் - திருமுகம்; ஓலை. காவல் - மதில்.
37. தூரியம் - வாத்தியம். பூத கங்கை - தூய்மையான கங்கை.
பா-ம்—1 காட்டுவாள் போற்கழங்கு. 2 தெய்வமேத்தி.

திருமுடியை மதயானை மிசைவைத்து நகரைவலஞ் செய்து பூசித், தருமணியாற் சுடிகையிழைத் தாடகத்தாற் குயிற்றியதோ ரைவாய் நாகம், பெருமணிநீள் படம்பரப்பி மிசைகவிப்ப வச் சிங்க பீடத் தேற்றிக், குருமணிவா ணகைமயிலைக் கும்பத்துப் புண்ணியநீர் குளிர வாட்டி. 38

புங்கவர்மந் தாரமழை பொழியவருந் தவராக்கம் புகலத் தெய்வப், பங்கயமென் கொம்பனையா ராடமுனி பன்னியர்பல் லாண்டு பாட, மங்கலதூ ரியமுழங்க மறைதழங்க மாணிக்க மகுடஞ் சூட்டி, எங்கருணைப் பெருமாட்டிக் கரசமைச்சர் பணி யுந்தன் னிறைமை நல்கா. 39

பாலனைய மதிக்கவிகை மிசைநிழற்ற [1]மதிகிரணம் பரப்பி யன்ன, கோலமணிக் கவரிபுடை யிரட்டமலர் மழைதேவர் குழாங்க டூற்றக், காலையிளங் கதிர்கயிலை யுதித்தெனவெண் கடாயானைக் கழுத்தில் வேப்ப, மாலைமுடிப் பெண்ணரசை மங்கலதூ ரியமுழங்க வலஞ்செய் வித்தான். 40

விண்ணாடு மொழிகேட்ட மகிழ்ச்சியினுந் திருமகடன் விளக்க நோக்கி, உண்ணாடு பெருங்களிப்புத் தலைசிறப்பச் சிலபகல்சென் றொழிய மேனாட், புண்ணாடு வேன்மங்கை குதுகலித்து நடிப் பத்தன் புயமேல் வைத்த, மண்ணாடு மகட்களித்து வானாடு பெற்றானம் மகவு பெற்றான். 41

விரதநெறி யடைந்தீற்றுக் கடன்பிறவுந் தாதைக்கு விதியா லாற்றி, அரதனமெல் லணைமேற்கொண் டுலகமெலா மொரு குடைக்கீ ழாள்வா ளானாள், சரதமறை யாய்மறையின் பொரு ளாயப் பொருண்முடிவு தானாய்த் தேனின், இரதமெனப் பூவின் மண மெனப்பரம னிடம்பிரியா வெம்பி ராட்டி. 42

---

38. சுடிகை - சூட்டு. ஆடகம் - பொன். குருமணி - நிறம் பொருந்திய முத்து. மயில் : உவமையாகுபெயர்.

39. புங்கவர் - தேவர். ஆக்கம் - ஆசி.

40. கவிகை - குடை. தூற்ற - சிந்த.

41. விண்ணாடு மொழி - அசரீரி வாக்கு. வேன்மங்கை - விஜ லட்சுமி. வானாடு - சுவர்க்கம்.

42. ஈற்றுக்கடன் - ஈமக்கடன், அந்தியேட்டி.

பா-ம்—1 மதிக்கிரணம்.

மண்ணர சிறைஞ்ச ஞால மநுவழி புரந்து மாறன்
விண்ணர சிருக்கை யெய்தப் பெற்றபின் விடையோ னுள்ளத்
தெண்ணர சன்ன மென்னத் தென்னவ னீன்ற கன்னிப்
பெண்ணர சிருந்து நேமி யுருட்டிய பெருமை சொல்வாம். 43

இன்னிய [1]மியம்பு மாக்க ளெழுப்பவா னிரவி தோன்றக்
கன்னலைந் தென்னப் பள்ளித் துயிலெழீஇக் கடிநீ ராடித்
தன்னிறை மரபுக் கேற்ற நியதிமா தான மன்பு
துன்னிய கடவுட் பூசைத் தொழின்முத லனைத்து முற்று. 44

திடம்படு மறிஞர் சூழச் சிவபரன் கோயின் முன்னிக்
கடம்படி முளைத்த முக்கட் கரும்பினை மறைவண் டார்க்கும்
விடம்பொதி [2]கண்டத் தேனை விதிமுறை வணங்கி மீண்டு
குடம்பயில் குடுமிச் செம்பொற் குருமணிக் கோயி னண்ணி. 45

அரசிறை கொள்ளுஞ் செம்பொ னத்தாணி யிருக்கை யெய்தி
வரைசெறி மடங்க லாறு முடங்கின நிமிர்ந்து தாங்க
விரைசெறி மலர்மீப் பெய்த வியன்மணித் தவிசின் மேவித்
திரைசெறி யமுதிற் செய்த பாவை போற் சிறந்து மாதோ. 46

அனிந்திதை யமுதின் சாயற் கமலினி யணங்குங் காதல்
கனிந்தபார் மகளி ராய்வந் தடைப்பைபொற் களாஞ்சி யேந்த
இனந்திரி பதுமக் கோயி லிருவரு மனைய ராகிப்
புனைந்தவெண் கவரிக் கற்றை யிருபுடை புரட்டி வீச. 47

செடியுட லெயினச் செல்வன் சென்னிமேற் சுமந்து சாத்துங்
கடியவிழ் மலரிற் பொன்னிக் காவலன் குடக்கோ னேனை

---

43. மநுவழி - மநுநூல் முறை. மாறன் - மலயத்துவச பாண்டியன். நேமி - ஆக்கினை சக்கரம்.

44. கன்னல் - நாழிகை. கடி - வாசனை.

45. சிவபரன் - சோமசுந்தரக் கடவுள். குடம் - கலசங்கள்.

46. அத்தாணி - கொலுமண்டபம். மடங்கல் - சிங்கம்.

47. களாஞ்சி - தம்பலப் படிகம். இனந்திரி பதுமம் - செந்தாமரை வெண்டாமரை. இருவர் - திருமகள் கலைமகள்.

48. செடியுடல் - புலால் நாற்றம் பொருந்திய உடம்பு. எயினச் செல்வன் - கண்ணப்பர். பொன்னி - காவிரி. குடக்கோன் - சேரன்.

பா-ம்—1 மியக்குமாக்கள். 2 கண்டத்தோனை.

முடிகெழு வேந்த ருள்ளார் முடிமிசை மிலைந்த தாமம்
அடிமிசைச் சாத்தி நங்கை யாணையா றேவல் செய்ய. 48

வையுடை வாள ராகி மார்புறப் பின்னி யார்த்த
கையின ராகி யன்னை யென்றுதன் கருணை [1]நோக்கஞ்
செய்யுமென் [2]றிமையார் நோக்கி நோக்குமேற் செங்கை கூப்பி
உய்குந மெனவாய் பொத்தி யுழையர்தம் பணிகேட் டுய்ய. 49

ஆங்கவன் மராடர் வேந்த னவன்கரு நாடர் வேந்தன்
ஈங்கிவன் விராடர் வேந்த னிவன்குரு நாடர் வேந்தன்
ஊங்குவன் சேரன் சென்னி யுவனெனக் கோலாற் சுட்டிப்
பாங்கிரு மருங்குங் காட்டக் கஞ்சுகப் படிவ மாக்கள். 50

செந்தமிழ் வடநூ லெல்லை தெரிந்தவர் மறைநூ லாதி
அந்தமி லெண்ணெண் கேள்வி யளந்தவர் சமய மாறும்
வந்தவர் துறந்தோர் சைவ மாதவர் போத மாண்ட
சிந்தனை யுணர்வான் மாயை வலிகெடச் செற்ற வீரர். 51

முன்னிருந் தினிய தேற்று மூத்தவ ரைந்நி யெண்ணிப்
பன்னுமைந் துறுப்பிற் கால மளந்தறி பனுவன் மாந்தர்
பின்னுமுன் னோக்குஞ் சூழ்ச்சிப் பெருந்தகைச் சுமதி யோடும்
இன்னமு தனைய கேள்வி மந்திரர் யாருஞ் சூழ. 52

கற்றறி யந்தணாளர் விருத்திகள் கடவுட் டானத்
தற்றமில் பூசைச் செல்வ மறப்புற நடக்கை யேனைச்
செற்றமில் குடிகண் மற்று மமைச்சராற் றெளித்தும் வெவ்வே
றொற்றுவிட் டுணர்ந்தும் வேறு குறையுண்டே லொறுத்துந் தீர்த்தும்.

---

49. வை - கூரிய. உழையர் - ஏவல் செய்வோர்.

50. ஊங்கு - நடு. உவன் - நடுவிருப்பவன். கஞ்சுகப்படிவ மாக்கள் - சட்டை தரித்த உருவத்தினையுடைய மாக்கள்; தூதர்.

51. எண்ணெண் கேள்வி - அறுபத்து நான்கு கலைஞானம். சமயம் ஆறும் - சைவம் முதலிய உட்சமயங்கள் ஆறும்.

52. ஐந்துறுப்பு - திதி, வாரம், நட்சத்திரம், யோகம், கரணம் என்னும் பஞ்சாங்கம். அறிபனுவல் - சோதிட நூல். சுமதி - நல்லறி வுடையவன்; மந்திரி.

53. விருத்தி-சீவிதம். கடவுட்டானம்-திருக்கோயில். செற்றம் இல் - மாறுபாடு இல்லாத. ஒற்று - வேவு. ஒறுத்து - தண்டித்து.

பா-ம்—1 நாட்டஞ். 2. றிமையா.

ஆதியுத் தேசத் தானு மிலக்கண வமைதி யானுஞ்
சோதனை வகைமை யானுஞ் சொன்னநூ லனுவா தித்து
நீதியி னவற்றுற் கண்டித் தவ்வழி நிறுத்தித் தம்மில்
வாதிகள் வாதஞ் செய்யுங் கோட்டிமேன் மகிழ்ச்சி கூர்ந்தும். 54

பையுள பகுவாய் நாகப் பள்ளியோ னாதி வானோர்
கையுள வலியா லட்ட கடலமு தனைத்தும் வாரிப்
பொய்யுள மகலக் கற்ற புனிதநூற் புலவர் நாவிற்
செய்யுளின் விளைவித் தூட்டத் திருச்செவி தெவிட்ட வுண்டும்.

தொல்லைநான் மறையோர் சைவர் துறந்தவர் யார்க்கு மின்பம்
புல்லவா னதுமுங் கைப்பப் பாகநூற் புலவ ரட்ட
முல்லைவான் முகையி னன்ன வறுசுவை முரியா மூரல்
நல்லவூ ணருத்தி யன்னார் நாவிருந் தமுது செய்தும். 56

எல்லவ னுச்சி நீந்து மெல்லையி னான்கு மாறும்
வல்லவர் சூத னோதி வகுத்தமூ வாறு கேள்வி
சொல்லவுண் மலர்ந்து மேனை மநுமுதற் றுறைமாண் கேள்வி
நல்லன நயந்து கேட்டு நன்பகற் போது நீத்தும். 57

கலைக்குறை விரிப்பா ரென்ன வறுமையிற் கல்வி போலப்
புலப்படா மருங்கு னல்லா ரெந்திரப் புலவன் பூட்டி
அலைத்திடு பாவை போனின் றுடல்செய் யாடற் கண்ணும்
நலத்தகு பாடற் கண்ணு நல்லரு ளூட்டஞ் செய்தும். 58

---

54. உத்தேசம்-உணர்த்தப்படும் பொருளைப் பெயர் மாத்திரையாற் கூறுதல்; அஃது இலக்கியம். இலக்கணம் - சிறப்பியல்பு. சோதனை - இலக்கியத்தில் இலக்கணம் உண்டோ இல்லையோ என ஆராய்தல். அநுவாதித்து - (முன்னர்ப் பெறப்பட்டதொன்றை வேறொன்று விதிந்தற்பொருட்டுப்) பின்னரும் எடுத்து மொழிந்து. கோட்டி - வாக்கிய முடிவு.

55. பகுவாய் - பிளந்த வாய். அட்ட - கடைந்த.

56. பாகநூல் புலவர் - பாக சாஸ்திர அறிஞர். மூரல் - சோறு.

57. எல்லவன் - சூரியன். நான்கு - நான்கு வேதங்கள். ஆறு - ஆறங்கம். மூவாறு கேள்வி - பதினெண் புராணம்.

58. கலை - பரதநூல். எந்திரப் புலவன் - சூத்திரப்பாவையை யாட்டும் தொழிலில் வல்லவன்.

இன்னிலை யொழுகுந் தொல்லோ ரியற்றிய தருமம் வேறும்
அந்நிலை நிறுத்தும் வேள்வி யறம்பல வாக்கஞ் செய்ய
நன்னிதி யளித்தும் வேள்வி நடாத்தியுஞ் செல்வங் கல்வி
தன்னிரு கண்க ளாகத் தழைந்திட வளர்க்கு நாளும். 59

ஒப்புரு முதலீ றில்லா வொருத்திதன் சத்தி பெற்ற
முப்பெருந் தேவ ராலே முத்தொழி னடாத்து மென்று
செப்பலும் புகழன் றென்னிற் றென்னவன் கன்னி யாகி
இப்புவி மனுவிற் காக்கு மென்பதென் பேதை மைத்தே. 60

வரைசெய் பூண்முலைத் தடாதகை மடவரற் பிராட்டி
விரைசெய் தார்முடி வேய்ந்துதண் குடைமனு வேந்தன்
கரைசெய் நூல்வழி கோல்செலக் கன்னியாம் பருவத்
தரசு செய்தலாற் கன்னிநா டாயதந் நாடு. 61

இன்ன வாறுமை யவதரித் திருந்தன ளென்னுப்
பொன்ன வாவினர் பெறவெறி பொருனைகால் பொருப்பன்
சொன்ன வாய்மைகேட் டகங்களி தூங்கினர் தொழுது
மின்னு வார்சடை முனிவரோர் வினவுரை செய்வார். 62

திருந்து நான்மறைச் சென்னியுந் தீண்டுதற் கரிதாய்
இருந்த நாயகி யாவையு மீன்றவெம் பிராட்டி
விரிந்த வன்புகூர் தக்கனும் வெற்பனும் பன்னுள்
வருந்தி நோற்றலா லவர்க்கொரு மதலையாய் வந்தாள். 63

மனித்த னாகிய பூழியன் மகளென வீங்குத்
தனித்த காரணம் யாதெனத் தமனியப் பொதுவிற்
குனித்த சேவடிக் கன்புடைக் குடமுனி யருள்கூர்ந்
தினித்த தோர்கதை கேண்மினென் றெடுத்துரை செய்வான். 64

---

59. இன்னிலை - இல்லறம். வேறு - பிரமசரியம், வானப்பிரத்தம், சந்நியாசம் என்பன. ஆக்கம் - விருத்தி.

60. ஒப்பரு முதலீறு இல்லா ஒருத்தி - அருட்சத்தி. தன் சத்தி - மகேசைமுதலியோர்.

61. விரை - வாசனை. கரைசெய் - வரையறுத்த.

62. பொருனை - தாமிரபர்ணி நதி. வாய்மை - வாய்மொழி.

63. தக்கன் - தட்சன். வெற்பன் - மலையரசன்.

64. மனித்தன் - மானிடன். பூழியன் - பாண்டியன். குனித்த - ஆடுகின்ற.

விச்சு வாவசு வெனுமொரு விச்சையன் பயந்த
நச்சு வாள்விழி மடந்தைவிச் சாவதி நாமம்
அச்சு வாகத மொழியினு ளம்பிகைக் கன்பு
வைச்சு வாழ்வுறு மனத்தினு டாதையை வணங்கா. 65

ஐய வம்பிகை தன்னையா னன்பினுல் வழிபட்
டுய்ய வேண்டுமென் றுளவ னுலகெலாம் பயந்த
தையன் மந்திரந் தனைமக டனக்குப தேசஞ்
செய்ய வந்நெறி யொழுகுவாள் செப்புவாள் பின்னும். 66

இறைவி தன்னையா தரிப்பதற் கிம்பரிற் சிறந்த
குறைவி னன்னகர் யாதெனத் கூறுவான் கேள்வித்
துறைவி ளங்கினோர் பயில்வது துவாதச முடிவென்
றறைவ ளம்பதி யவனிமேற் சிவபுர மாமால். 67

சேடு தாங்குமூ வுலகினுட் சிறந்தன சத்தி
பீட மூவிரு பத்துநான் கவற்றின்முற் பீடம்
மாட மோங்கிய மதுரையா மற்றது போகம்
வீடும் வேண்டிய சித்தியும் விளைப்பதென் றெண்ணு. 68

அல்லு மெல்லும்வா னகர்க்கத வடைப்பின்றிச் சுவர்க்கச்
செல்வ ரங்கடைந் துமையருள் சித்தியால் வினையை
வெல்லு வாரதான் றெந்தையோ டைவர்கள் வேண்டி
நல்வ ரம்பல வடைந்தனர் நமர்களந் நகரில். 69

எம்மை யாரையும் யாவையு மீன்றவங் கயற்கண்
அம்மை யாவரே யாயினு மன்பினு தரிப்போர்
இம்மை யாகிய போகம்வீ டெண்ணியாங் கெய்தச்
செம்மை யாகிய வின்னருள் செய்துவீற் றிருக்கும். 70

---

65. விச்சையன் - வித்தியாதரன்; இசை நூலில் வல்லவன். அச்சுவாகதம் - அழகிய கிளி.

66. ஐய - ஐயனே! அவன் - அவ்விச்சுவாவசு.

67. துவாதசம் - துவாதசாந்தம். வளம்பதி - க்ஷேத்திரம்.

68. சேடு - பெருமை. மூவிருபத்துநான்கு - அறுபத்துநான்கு.

69. அல்லும் எல்லும் - இரவும் பகலும். ஐவர்கள் - இயக்கன், வித்தியாதரன், வசுபூர்ணன், சுவச்சவித்திரன், பஞ்சசுவரன் என்னும் ஐவர்கள்.

70. யாரையும் யாவையும் - சராசரங்கள். யாவரேயாயினும் - தேவரேயன்றி மனிதர் முதலியோரையும்.

என்ற தாதையை யிறைஞ்சினு [1]ளனுச்சைகொண் டெழுந்தாள்
மன்றன் மாமலர் வல்லிபோல் வழிக்கொடு கானங்
குன்ற மாறுபின் கிடப்பமுன் குறுகினு ளன்பின்
வின்ற வாதியெம் பரையரு ணிறைந்தவர் நகரில். 71

அடைந்தி ளம்பிடி யாடல்போ லாடக கமலங்
குடைந்து நான்மறைக் கொழுந்திடங் கொண்டுறை குறிப்பாற்
படர்ந்த பொன்மலை வல்லியைப் பணிந்துவெங் கதிரோன்
தொடர்ந்த வான்சுரு மதியமே யாதியாத் தொடங்கா. 72

பெரும்பக னல்லூண் கங்குலூ ணுதவப் பெற்றவூ ணிலைமுதற் பல்லூண், அரும்பொடி யெள்ளுண் சாந்திரா யணமா னைந்துபா னறியநீர் தருப்பை, இரும்புத னுனிநீர் காலிவை நுகர்ந்து மியற்றரும் பட்டினி யுற்றும், வரம்புற விராறு திங்களு நோற்று வாடிமேல் வருஞ்சுரு மதியில். 73

சந்நிதி யடைந்து தாழ்ந்துநின் றிளமாந் தளிரடிக் காஞ்சி சூழ் கிடந்த, மின்னிகர் மருங்கு லிழையிடை நுழையா வெம்முலைச் செம்மலர்க் காந்தட், பொன்னிரை வளைக்கை மங்கலக் கழுத்திற் பூரண மதிக்கலை முகத்தின், இன்னிசை யளிசூ ழிருட்குழற் கற்றை யிறைவியை யிம்முறை நினையா. 74

கோலயாழ்த் தெய்வம் பராய்க்கரங் குவித்துக் கொழுஞ்சுடர்ப் பசுங்கதிர் விளக்கம், போலநூற் பெல்லாம் பொத்து பொன் னிறத்த போர்வைநீத் தவிழ்கடி முல்லை, மாலைமேல் வீக்கிப் பத்தர்பின் கிடப்ப மலர்க்குழ றேய்சுவற் கிடத்திச், சேலைநேர் விழியாண் மாடகந் திரித்துத் தெறித்தனள் பண்ணு றிந் திசைப்பாள். 75

---

71. அனுச்சை - விடை. மா - வண்டு.

72. நான்மறைக் கொழுந்து-நால்வேதக் கொழுந்தாகிய பரமன். வான் சுருத் தொடர்ந்த மதியம் - பெரிய மகர ராசியிற் புகுந்த தை மாதம்.

73. இராறு திங்கள் - பன்னிரண்டு மாதம். சுருமதி-தை மாதம்.

74. காஞ்சி - இருகோவையணி; ஓர் ஆபரணம்.

75. கோலம் - அழகு. பொல்லம் பொத்து - தைத்து; ஒரு பொருட் பன்மொழி. பத்தர் - யாழுறுப்பு. சுவல் - முதுகு. மாடகம் - முறுக்காணி.

பா-ம்—1 ளநுனை.

ஒளியா லுலகின் றுயிரனைத்து மீன்போற் செவ்வி யுறநோக்கி
அளியால் வளர்க்கு மங்கயற்க ணன்னே கன்னி யன்னமே
அளியா விமவான் றிருமகளா யாவி யன்ன மயில்பூவை
தெளியா மழலைக் கிளிவளர்த்து விளையாட் டயருஞ் செயலென்னே. 76

அண்டக் குவைவெண் மணற்சிறுசோ றாக்கித் தனியே விளையாடுங், கொண்டற் கோதாய் படியெழுத லாகா வுருவக் கோகிலமே, கொண்டற் குடுமி யிமயவரை யருவி கொழிக்குங் குளிர்முத்தால், வண்டற் குதலை மகளிரொடும் விளையாட் டயரும் வனப்பென்னே. 77

வேத முடிமே லானந்த வுருவாய் நிறைந்து விளையாடும்
மாத ரரசே முத்தநகை மானே யிமய மடமயிலே
மாத ரிமவான் றேவிமணி வடந்தோய் மார்புந் தடந்தோளும்
பாத மலர்சேப் புறமிதித்து விளையாட் டயரும் பரிசென்னே. 78

யாழியன் [1]மொழியா ளிவ்வழி பாடி யேத்திடு ளாகமெய் யுள்ளத், தாழிய வன்பின் வலைப்படு கருணை யங்கயற் கண்மடமாதேனுர், சூழிய நுழைமெல் விளங்குழற் குதலைத் தொண்டைவா யகவைமூன் றெய்தி, வாழிளங் குழவி யாகியா லயத்து வந்துநின் றுள்வரங் கொடுப்பாள். 79

இறைஞ்சியஞ் சலித்தா டன்னையெம் மன்னை யாதுவேண் டினையென வென்றும், நிறைந்தபே ரன்பு நின்னடிப் போதி னீங்கலா நிலைமைதந் தருளென், றறைந்தன ளின்னும் வேண்டுவ தேதென் றருளவிம் மகவுரு வாகிச், சிறந்துவந் தென்பா லருள்சுரந் திருக்கத் திருவுளஞ் செய்யெனப் பணிந்தாள். 80

---

76. ஒளி - அருள். மீன்போற் செவ்வியுற நோக்கி - மீன் தான் பெற்ற குஞ்சுகளைப் பக்குவமுறப் பார்வையால் வளர்த்தல் போல, தான் பெற்ற ஆன்ம கோடிகளை அருட்பார்வையால் நோக்கி.

77. அண்டக்குவை - அண்ட கோடிகளின் கூட்டம். கொண்டல் - மேகம். படி - ஒப்பு; உலகம். வண்டல் - மகளிர் விளையாட்டு.

78. சேப்புற - சிவக்குமாறு. பரிசு - தன்மை.

79. அன்பின் வலை - அன்பாகிய வலை. தொண்டை - கொவ்வைக் கனி. அகவை - ஆண்டு; வயது.

80. அஞ்சலித்தாள் - கைகூப்பித் துதித்த விச்சாவதி. சிறந்து - சிறக்க.

பா-ம்—1 மொழியாள்.

அடுத்தனள் சுந்தரி யம்பொன டைப்பை
எடுத்தன ளாடி திலோத்தமை யேந்திப்
பிடித்தனள் விந்தை பிடித்தனள் பொற்கோல்
உடுத்த நெருக்கை யொதுக்கி நடந்தாள். 167

கட்டவிழ் கோதை யரம்பை களாஞ்சி
தொட்டன ளூர்ப்பசி தூமணி யால
வட்ட மசைத்தனள் வன்ன மணிக்கா
சிட்டிழை கோடிக மேனகை கொண்டாள். 168

கொடிக ளெனக்குளிர் போதொடு சிந்தும்
வடிபனி நீரினர் வீசுபொன் வண்ணப்
பொடியின ரேந்திய பூம்புகை தீபத்
தொடியணி கையினர் தோகையர் சூழ்ந்தார். 169

தோடவி ழோதியர் சோபன கீதம்
பாட விரைப்பனி நீரொடு சாந்தம்
ஏடவிழ் மென்மல ரிட்ட படத்திற்
பாடக மெல்லடி யைப்பைய வையா. 170

செம்மல ராளொடு நாமக டேவி
கைம்மலர் பற்றின கல்வியொ டாக்கம்
இம்மையி லேபெறு வார்க்கிது போதென்
றம்மணி நூபுர மார்ப்ப நடந்தாள். 171

ஒல்கினண் மெல்ல வொதுங்கின ளன்பு
பில்கி யிருந்த பிரானரு கெய்தி

---

167. சுந்தரி - இந்திராணி. விந்தை - வீரலட்சுமி. பொற்கோல் - பொற்கட்டமைந்த பிரம்பு. உடுத்த - சூழ்ந்த.

168. ஊர்ப்பசி - ஊர்வசி. மணிக்காசு - இரத்தினம்.

169. கொடிகள் என - கொடிகள்போல. போது - மலர். வடி - வடித்த. வண்ணப்பொடி - வாசனைப் பொடி. பூம்புகை-வாசனைமிக்க தூபம்.

170. தோடு அவிழ் - இதழ் விரிந்த மலர்களை அணிந்த. ஓதியர் - இங்குப் பாடல் மகளிர். படம் - நடைப் பாவாடை. பைய - மெல்ல.

171. தேவி - தடாதகைப் பிராட்டியார். ஆக்கம் - செல்வம். இது போது - இதுதான் சமயம்.

172. பில்கி - நிறைந்து. மெல்கி - மேன்மைக்குணம் நிறைந்து. எருத்தம் - பிடரி.

மெல்கி யெருத்த மிசைத்தலை தூக்கிப்
புல்கிய காஞ்சி புலம்ப விருந்தாள். 172

அற்பக விமைக்குஞ் செம்பொ னரதன பீடத் தும்பர்ப்
பொற்பக லாத காட்சிப் புனிதனோ டிருந்த நங்கை
எற்பகல் வலங்கொண் டேகு மெரிகதிர் வரையி னுச்சிக்
கற்பக மருங்கிற் பூத்த காமரு வல்லி யொத்தாள். 173

பண்ணுமின் னிசையு நீருந் தண்மையும் பாலும் பாலில்
நண்ணுமின் சுவையும் பூவு நற்றமு மணியு மங்கேழ்
வண்ணமும் வேறு வேறு வடிவுகொண் டிருந்தா லொத்த
தண்ணலு முலக மீன்ற வம்மையு மிருந்த தம்மா. 174

விண்ணுளார் திசையி னுள்ளார் வேறுளார் பிலத்தி னுள்ளார்
மண்ணுளார் பிறரும் வேள்வி மண்டபத் தடங்கி யென்றும்
பண்ணுளா ரோசை போலப் பரந்தெங்கு நிறைந்த மூன்று
கண்ணுளா ரடியி னீழல் கலந்துளார் தம்மை யொத்தார். 175

ஆயபோ தாழி யங்கை யண்ணல்பொற் கரக நீராற்
சேயவான் சோதியாடற் சேவடி விளக்கிச் சாந்தந்
தூயபோ தவிழச் சாத்தித் தூபமுஞ் சுடருங் கோட்டி
நேயமோ டருச்சித் தைய னிறையருள் பெற்று நின்றான். 176

விண்டலத் தவரு ளாதி வேதியன் பாத தீர்த்தம்
முண்டகத் தவனு மாலு முனிவரும் புரந்த ராதி
அண்டரு நந்தி தேவு மடுகணத் தவரு மேனைத்
தொண்டரும் புறம்பு முள்ளு நனைத்தனர் சுத்தி செய்தார். 177

---

173. அல் பக - இருள் கெட. எல்பகல் - சூரியன். கதிர் - பிரகாசம். வரை - மேருமலை. காமருவல்லி - காமவல்லிக்கொடி.

174. தண்மை - குளிர்ச்சி. கேழ் - நிறம். அண்ணல் - சிவபெருமான். இருந்தது - (வெவ்வேறாய்) இருந்தருளிய திருக்காட்சி.

175. பண்ணுள் இசைபரவி இருத்தல்போலச் சிவபெருமான் எங்கும் அத்துவிதமாய் இருத்தலின், 'பரந்து' எனவும், தேவர் முதல் மண்ணுலக மக்கள் முதலிய யாவரும் பேதமின்றித் திருமண மண்டபத்தில் கலந்திருத்தலின், 'அடியின் நீழல் கலந்துளார் தம்மை ஒத்தார்' எனவும் கூறினார்.

176. ஆழி அம் கை அண்ணல் - திருமால். ஆடல் சேவடி - நடனம் புரியும் சிவந்த திருவடிகள். கோட்டி - சுழற்றி.

177. ஆதி வேதியன் - சிவபெருமான். கணத்தவர் - சிவகணத்தவர்.

அத்தலை நின்ற மாயோ [1]னாதிசெங் கரத்து நங்கை
கைத்தலங் கமலப் போது பூத்ததோர் காந்த ளொப்ப
வைத்தரு மனுவா யோதக் கரகநீர் மாரி பெய்தான்
தொத்தலர் கண்ணி விண்ணோர் தொழுதுபூ மாரி பெய்தார். 178

ஆடினா ரரம்பை மாதர் விஞ்சைய ரமுத கீதம்
பாடினா ரரவென் றார்த்துப் பரவினார் முனிவர் வானோர்
மூடினார் புளகப் போர்வை கணத்தவர் முடிமேற் செங்கை
சூடினார் பலரு மன்றற் றொடுகட லின்பத் தாழ்ந்தார். 179

புத்தனா றெறிந்த கல்லும் போதென மிலைந்த வேத
வித்தனா ரடிக்கீழ் வீழ விண்ணவர் முனிவ ரேனோர்
சுத்தநா வாசி [2]கூறக் குங்குமத் தோயந் தோய்ந்த
முத்தவா லரிசி வீசி மூழ்கினார் போக வெள்ளம். 180

அம்மையோ டப்ப னென்ன வலர்மணம் போல நீங்கார்
தம்மருள் விளையாட் டாலே யாற்றநாட் டமியர் போல
நம்மனோர் காணத் தோன்றி நன்மணம் புணர ஞாலம்
மும்மையு முய்ந்த வொன்றுத் தத்தமின் மொழிய லுற்றார். 181

காமரு சுரபித் தீம்பால் கற்பகக் கனிநெய் கன்னல்
நாமரு சுவைய வின்ன நறுமது பருக்கஞ் செம்பொன்
ஆமணி வட்டத் திண்காற் பாசனத் தமையப் பெய்து
தேமரு கொன்றை யானைத் திருக்கைதொட் டருள்க வென்றார். 182

---

178. ஆதி - சிவபெருமான். கரகநீர்மாரி பெய்தான் - கமண்டலத்திலுள்ள நீரை வார்த்தான்; தாரை வார்த்தான்.

179. தொடு கடல் - சகரர் தோண்டிய கடல். இன்பக்கடல் - இன்பமாகிய கடல்.

180. புத்தனார் - சாக்கிய நாயனார். முத்தவாலரிசி - வெள்ளிய முத்தாகிய அரிசி; முத்தினையொத்த வெள்ளிய அரிசியுமாம்.

181. ஆற்றநாள் - நீண்டநாள். தமியர் - தனித்தவர்; பிரிந்தவர். மும்மை ஞாலம் - பூமி, சுவர்க்கம், பாதாளம்.

182. காமரு சுரபி - அழகிய காமதேனு; கற்பக நீழலிற் பொருந்திய காமதேனுவுமாம். காமரு சுரபி - காமம் வருசுரபி - விருப்பம் வருகின்ற சுரபி என்றலுமாம். கற்பகக்கனி - வாழைக்கனி. கன்னல் - சருக்கரை. பாசனம் - உண்கலம்.

பா-ம்—1 னாறுதிசெங். 2 கூறிக்.

அங்கைவைத் தமுது செய்தாங் ககமகிழ்ந் தட்ட மூர்த்தி
கொங்கவிழ் குமுதச் செவ்வாய் கோட்டிவாண் முறுவல் பூத்தான்
புங்கவர் முனிவர் கற்பின் மகளிரும் போதின் மேய
மங்கைய ரிருவ ரோடு மங்கலம் பாட லுற்றார். 183

மாக்கடி முளரி வாணன் மைந்தரோ டொருங்கு வைகி
நாக்களி னடுநா வாரத் துடுவையா னறுநெ யார்த்தி
வாக்கிட வார மாந்தி வலஞ்சுழித் தகடு வீங்கித்
தேக்கிடு மொலியி னார்த்து நிமிர்ந்தது தெய்வச் செந்தீ. 184

கூற்றுநான் மறைக ளார்ப்பத் தூரியஞ் சங்க மேங்கக்
கற்றநான் முகத்தோன் வேள்விச் சடங்குநூல் கரைந்த வாற்றால்
முற்றமங் கலநாண் சாத்தி முழுதுல கீன்றாள் செங்கை
பற்றினன் பற்றி லார்க்கே வீடருள் பரம யோகி. 185

இணரெரித் தேவுந் தானே யெரிவளர்ப் பவனுந் தானே
உணவுகொள் பவனுந் தானே யாகிய வொருவன் வையம்
புணர்வுறு போக மூழ்கப் புருடனும் பெண்ணு மாகி
மணவினை முடித்தா னன்னான் புணர்ப்பையார் மதிக்க வல்லார்.

பின்புதன் பன்னி யோடு பிறைமுடிப் பெருமான் கையில்
நன்பொரி வாங்கிச் செந்தீ நாமடுத் தெனைத்து மான
தன்படி வுணர்ந்த வேத முனிவர்க்குத் தக்க தானம்
இன்பகந் ததும்ப நல்கி யெரிவல முறையால் வந்து. 187

---

183. அட்டமூர்த்தி - நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், சூரியன், சந்திரன், ஆன்மா என்னும் எட்டுருவாய் நிற்கும் அருள் வடிவு. புங்கவர் - தவசிரேஷ்டர். கற்பின் மகளிர் - சத்த விருடிகளின் பத்தினிமார்.

184. மாக்கடி - சிறந்த வாசனைமிக்க. முளரிவாணன் - பிரமன். வாழ்+நன்=வாணன். மைந்தர் - சாதகர்; சனகர் முதலியோருமாம். துடுவை - சுருக்கு சுருவம். ஆர்த்தி - நிரப்பி. அகடு - வயிறு.

185. கரைந்த - கூறிய. பற்றிலார்க்கே - அகப்பற்று, புறப்பற்று என்ற இருவகைப் பற்றுக்களையும் விட்ட சிவயோகிகளுக்கே.

186. இணர் - நெருங்கிய. உணவு - அவிசு. ஒருவன் - ஒப்பற்ற சோமசுந்தரக் கடவுள்.

187. பன்னி - பத்தினியாகிய தடாதகைப் பிராட்டியார். படிவு - திருவுருவம்.

மங்கலம் புனைந்த செம்பொ னம்மிமேன் மணாட்டி பாத
பங்கய மலரைக் கையாற் பரிபுரஞ் சிலம்பப் பற்றிப்
புங்கவன் மனுவா லேற்றிப் புண்ணிய வசிட்டன் றேவி
எங்கெனச் செங்கை கூப்பி யெதிர்வர வருட்கண் சாத்தி. 188

விதிவழி வழாது வேள்வி வினையெலா நிரம்ப விங்ஙன்
அதிர்கட லுலகந் தேற வாற்றினான் மறைக ளார்ப்பக்
கதிர்மணி நகையார் வாழ்த்தக் காமனைக் காய்ந்த நம்பி
மதிநுதன் மங்கை யோடு மணவறை தன்னிற் புக்கான். 189

மனிதரு மிமையா தையன் மங்கல வனப்பு நோக்கிப்
புனிதவா னவரை யொத்தா ரவர்க்கது புகழோ வெந்தை
கனிதரு கருணை நாட்டம் பெற்றவர் கடவு ளோராற்
பனிதரு மலரிட் டேத்தி வழிபடற் பால ரன்றே. 190

மானிட ரிமையோ ரென்னும் வரம்பில ராகி வேள்வி
தானிட ரகல நோக்கித் தலைத்தலை மயங்கி நின்றார்
கானிட நடனஞ் செய்யுங் கண்ணுத லருட்க ணோக்கால்
ஊனிட ரகலு நாளி லுயர்ந்தவ ரிழிந்தோ ருண்டோ. 191

மணவறைத் தவிசி னீங்கி மன்றன்மண் டபத்திற் போந்து
கணமணிச் சேக்கை மேவிக் கருநெடுங் கண்ணன் வாணி
[1]துணைவனே முதல்வா னோர்க்குஞ் சூழ்கணத் தொகைக்கு மென்றுந்
தணவறு செல்வந் தந்தோன் சாறுசால் சிறப்பு நல்கி. 192

---

188. பரிபுரம் - சிலம்பு. சிலம்ப - ஒலிக்க. புங்கவன் - சோம சுந்தரக் கடவுள். மனுவால் - மந்திர விதியால். வசிட்டன் தேவி - அருந்ததி.

189. வேள்வி வினை - திருக்கலியாணச் சடங்கு. மணவறை - மணமண்டபம்.

190. புனிதம் - பரிசுத்தம். கனிதரு கருணை நாட்டம் - முதிர்ந்த கிருபா நோக்கம்.

191. தான் : அசை. இடர் - பிறவித்துன்பம். தலைத்தலை - இடங்கள் தோறும். கான் - மயானம். ஊன் இடர் அகலும் நாள் - பிறப்பு ஒழியும் நாள்.

192. சேக்கை - சிங்காதனம். தணவு - நீக்கம். சாறு -(திருமண) விழா.

பா-ம்—1 துணைவனை. (ஐ : அசை.)

ஏட்டுவாய் முளரி யான்மா லேனைவா னவருந் தத்தம்
நாட்டுவாழ் பதியிற் செல்ல நல்விடை கொடுத்து வேந்தர்க்
காட்டுவா னுடிக் காட்டுந் தன்மைபோ லரசு செய்து
காட்டுவா னுகி யையன் றிருவுளக் கருணை பூத்தான். 193

அதிர்விடைக் கொடியங் கயற்கொடி யாக வராக்கலன் பொற்கல னுகப்
பொதியவிழ் கடுக்கை வேம்பல ராகப் புலியதள் பொலந்துகி லாக
மதிமுடி வைர மணிமுடி யாக மறைகிடந் தலம்புமா மதுரைப்
பதியுறை சோம சுந்தரக் கடவுள் பாண்டிய னுகிவீற் றிருந்தான்.

விண்டவழ் மதியஞ் சூடுஞ் சுந்தர விடங்கப் புத்தேள்
கொண்டதோர் வடிவுக் கேற்பக் குருதிகொப் பளிக்குஞ் சூலத்
திண்டிறற் சங்கு கன்னன் முதற்[1]கணத் தேவர் தாமும்
பண்டைய வடிவ மாறிப் பார்த்திபன் பணியி னின்ருர். 195

[2]தென்னவன் வடிவங் கொண்ட சிவபர னுலகங் காக்கும்
மன்னவர் சிவனைப் பூசை செய்வது மறையா றென்று
சொன்னது மன்ன ரெல்லாந் துணிவது பொருட்டுத் தானும்
அந்நகர் நடுவூ ரென்ருே ரணிநகர் சிறப்பக் கண்டான். 196

மெய்ம்மைநூல் வழியே கோயில் விதித்தருட் குறிநி றீஇப்பேர்
இம்மையே நன்மை நல்கு மிறையென நிறுவிப் பூசை
செம்மையாற் செய்து நீப வனத்துறை சிவனைக் கால
மும்மையுந் தொழுது வைய முழுவதுங் கோன டாத்தும். 197

---

193. ஆட்டுவான் - பரதநூல் முறைப்படி ஆட்டுதலில் வல்லோன் (முன்னர்). ஐயன் - சோமசுந்தரக் கடவுள்.

194. பொதி - அரும்பு; கட்டு. அராக்கலன் - சர்ப்பாபரணம். கடுக்கை - கொன்றை. அதள் - தோல்.

195. விடங்கம் - அழகு. குருதி - உதிரம். பண்டைய வடிவம் மாறி - தேவ வடிவத்தினின்று அரசர் பணி செய்தற்கேற்ற உருவங் கொண்டு. பார்த்திபன் பணி - அரசுத் தொழில்.

196. மறை ஆறு-வேத நெறி. தானும்-சோமசுந்தரக் கடவுளும். சொன்னது - (தாம்) திருவாய் மலர்ந்ததை.

197. மெய்ம்மை நூல் - சிவாகமம். குறி - சிவலிங்கம். நன்மை நல்கும் இறை - இது தாபித்த சிவலிங்கத்தின் பெயர்; இதற்கு வடமொழி 'மகாபீஷ்டப் பிரதேஸ்வரர் என்பதாம்.

பா-ம்—1 கணதேவர். 2 தென்னவர்.

பூவரு மயன்மா லாதிப் புனிதரு முனிவ ரேனோர்
யாவருந் தனையே பூசித் திகபர மடைய நின்ற
மூவருண் மேலா முக்கண் மூர்த்தியே பூசை செய்த
தாவர விலிங்க மேன்மைத் தகுதியா ரளக்க வல்லார். 198

மனித்த ருக்கர சாகிந்தெவ் வேந்தர்க்கு மடங்கலாய் மட நல்லார்க், கினித்த வைங்கணைக் காளையாய் நிலமகட் கிணர்த்துழா யணிமாலாய், அனித்த நித்தமோர்ந் திகபரத் தாசைநீத் தகந் தெளிந் தவர்க்கொன்றாய்த், தனித்த மெய்யறி வானந்த மாம்பர தத்துவ மாய்நின்றான். 199

ஆகச் செய்யுள்—798

---

198. மூவர் - பிரமன், திருமால், உருத்திரன் என்ற மும்மூர்த்தி; தாவர இலிங்கம் - பரார்த்த லிங்கம்; அதாவது சிவபெருமான் எப்பொழுதும் சாந்நித்தியராய் இருந்து ஆன்மாக்களுக்கு அநுக்கிரகிக்கப்பெறும் இலிங்கமாம்.

199. தெவ் - (தம்மோடு) மாறுபட்ட. ஐங்கணைக்காளை - மன்மதன். அனித்தம் - அழியுந்தன்மை. நித்தம் - நிலையுடைமை. ஒன்றாய் - அபேதமாய்.

## 6. வெள்ளியம்பலத் திருக்கூத்தாடிய படலம்

—o—

உலகிய லிறுத்து வான்வந் தொருபரஞ் சுடர்வான் றிங்கட்
குலமணி விளக்கை வேட்டுக் கோமுடி கவித்துப் பாராண்
டிலகுறு தோற்ற மீதான் முனிவர ரிருவர் தேற
அலகிலா னந்தக் கூத்துச் செய்தவா றறைய லுற்றாம். 1

புண்ணிய மலர்மென் கொம்பை வேட்டபின் புவனந் தாங்கும்
கண்ணுதன் மூர்த்தி யாய கவுரியன் மணத்தில் வந்த
மண்ணியல் வேந்தர் வானோர் மாதவர் பிறரு முண்ண
நண்ணுதி ரென்ன லோடு நண்ணுவார் விரைவி னெய்த. 2

பொன்னவிர் கமலம் பூத்த புனிதநீ ராடித் தத்தம்
நன்னெறி நியம முற்றி நண்ணினார் புலிக்கா லோனும்
பன்னக முனியுந் தாழ்ந்து பரவியம் பலத்து ளாடும்
நின்னரு ணடங்கண் டுண்ப தடியேங்க ணியம மென்றார். 3

என்னலு மந்தக் கூத்தை யிங்குநாஞ் செய்துந் தில்லைப்
பொன்னக ருலக மெல்லா முருவமாம் புருடற் குள்ளம்
[1]இன்னதாந் துவாத சாந்த மென்றிறை யருளிச் செய்ய
மன்னவ வேனை யங்கம் யாவென மன்னன் சொல்வான். 4

---

1. உலகு இயல் - உயர்ந்தோர் வகுத்தன ; அவை அறநிலையறம், மறநிலையறம், அறநிலைப்பொருள், மறநிலைப்பொருள், அறநிலையின்பம், மறநிலையின்பம் என்பன. முனிவர் இருவர் - பதஞ்சலி, வியாக்கிரபாதர்.

2. வேட்டல் - மணத்தல். கவுரியன் - சவுந்தரபாண்டியன்.

3. புனிதநீர் - பொற்றாமரைத் தீர்த்தத்தில். நியமம் - நித்திய கடன்கள். அம்பலம் - பொன்னம்பலம்.

4. தில்லைப் பொன் நகர் - சிதம்பரம். உலக புருடன் - விராட் புருடன். உள்ளம்-இதயத்தானம். இன்னதாம் - இத்தலம்; மதுரை. ஏனை அங்கம் - (விராட்புருடனுக் குரிய) மற்றைய உறுப்புக்கள். மன்னன் - சோமசுந்தரக் கடவுளாகிய சவுந்தரபாண்டியன்.

பா-ம்—1 இன்னது.

அரைக்குமே லுலகே மென்று மரைக்குக்கீ ழுலகே மென்றும்
உரைக்கலா லுலக மெல்லா முருவமாம் புருடற் கிந்தத்
தரைக்குமே லனந்தந் தெய்வத் தானமுண் டனைத்துங் கூறின்
வரைக்குறு சிலதா னங்கள் வகுத்துரை செய்யக் கேண்மின். 5

திருவள ராரூர் மூலந் திருவானைக் காவே குய்யம்
மருவளர் பொழில்சூ ழண்ணா மலைமணி பூர நீவிர்
இருவருங் கண்ட மன்ற மிதயமாந் திருக்கா ளத்தி
பொருவருங் கண்ட மாகும் புருவமத் தியமாங் காசி. 6

பிறைதவழ் கயிலைக் குன்றம் பிரமரந் திரமாம் வேதம்
அறைதரு துவாத சாந்த மதுரையீ ததிக மெந்த
முறையினு லென்னின் முன்னர்த் தோன்றிய முறையா லென்றக்
கறையறு தவத்த ரோடு கவுரியன் கோயில் புக்கான். 7

தன்னரு ளதனு னீத்த தன்னையே தேடிப் போந்த
மின்னவிர் கயிலை தானே விடையுரு மாறி மன்றாய்
மன்னிய தேயோ திங்கண் மண்டல மேயோ வென்னப்
பொன்னவிர் விமானக் கீழ்பால் வெள்ளியம் பொதுவுண் டாக. 8

மின்பயில் பரிதிப் புத்தேள் பாற்கடல் விளங்கி யாங்குப்
பின்பதன் மிசைமா ணிக்கப் பீடிகை தோன்றிற் றன்ன
தன்பர்த முளமே யாகு மல்லது வேதச் சென்னி
என்பதா மஃதே யன்றி யாதென விசைக்கற் பாற்றே. 9

அன்னதோர் தவிசி னும்ப ராயிரங் கரத்தா லள்ளித்
துன்னிருள் விழுங்குங் கோடி சூரிய ரொருகா லத்து

---

5. அரைக்குமேல் - இடைக்குமேல். வரை - அளவு.

6. மூலம் - மூலாதாரம். குய்யம் - மறைவிடம்; சுவாதிட்டானம். இதயம் - அநாகதம். கண்டம் - விசுத்தி. புருவமத்தி - ஆக்கினேயம்.

7. ஈது - இத்தலம். அதிகம் - (எத்தலத்தினும்) மேம்பட்டது. கறை அறு - குற்றமற்ற.

8. விடை - இடபவூர்தி. மன்று - வெள்ளியம்பலம்; மதுரை. பொது - அம்பலம்.

9. ஆங்கு - போல. பீடிகை - பீடம். சென்னி என்பதாம், என்பது : எழுவாயுருபு; அசைநிலையுமாம்.

10. உம்பர் - மேல். பின் முதல் - பின்னும் முன்னும். தோன்றி - (சவுந்தரபாண்டியர்) தோன்றி.

மன்னின ருதித்தா லொப்ப மனமொழி பக்கங் கீழ்மேல்
பின்முதல் கடந்த ஞானப் பேரொளி வடிவாய்த் தோன்றி. 10

முந்துறு கணங்கண் மொந்தை தண்ணுமை முழக்கஞ் செய்ய
நந்திமா முழவந் தாக்க நாரண னிடக்கை யார்ப்ப
வந்துகந் தருவ நூலின் மரபுளி யிருவர் பாட
வைந்துதுந் துபியுங் கல்லென் றூர்கலி முழக்கங் காட்ட. 11

மதுமுகத் தலர்ந்த வெண்டா மரைமகள் சுருதி கூட்டச்
சதுமுகத் தொருவன் சாம கீதயாழ் தடவிப் பாட
விதுமுகத் தருகு மொய்க்கு மீனென ஞான வெள்ளிப்
பொதுமுகத் தமரர் தூற்றும் பூமழை யெங்கும் போர்ப்ப. 12

பொருங்கட னிறத்த செந்தீப் பொங்குளைக் குறளன் மீது
பெருங்கடல் வடவைச் செங்கண் பிதுங்கமேற் றிரிந்து நோக்கி
முருங்கட லெரியிற் சீற முதுகிற வலத்தா ளூன்றிக்
கருங்கடன் முளைத்த வெய்யோன் காட்சியிற் பொலிந்து நின்று. 13

கொய்யுஞ்செங் கமலப் போது குவிந்தென வெடுத்துக் கூத்துச்
செய்யும்புண் டரிகத் தாளுந் திசைகடந் துளவீ ரைந்து
கையுந்திண் படையுந் தெய்வ மகளிர்மங் கலநாண் காத்த
மையுண்ட மிடறுஞ் சங்க வார்குழை நுழைந்த காதும். 14

செக்கரஞ் சடையுந் தேசார் வெண்டிரு நீறுந் தெய்வ
முக்கணு முரகக் கச்சு முள்ளெயி றிமைக்கு மார்பும்
மைக்கருங் கயற்க ணங்கை வல்லியி னொதுங்கி நிற்கும்
பக்கமு மவண்மேல் வைத்த பார்வையு நகையுந் தோன்ற. 15

---

11. மொந்தை - ஒரு வாத்தியம். தண்ணுமை - சிறிய மத்தளம். முழவம் - பெரிய மத்தளம். கந்தருவநூல் - இசைநூல். ஐந்துதுந்துபி - தோற்கருவி துளைக்கருவி, கஞ்சக்கருவி, நரப்புக்கருவி, மிடற்றுக்கருவி என்பன. ஆர்கலி—கடல்,

12. விதுமுகம் - சந்திரமண்டலம். மீன் - நட்சத்திரங்கள். பொதுமுகத்து - அம்பலத்துள்.

13 உளை - புறமயிர். குறளன் - முயலகன். வடவை - வடவாமுகாக்கினி; இது கடலின் நடுவில் உள்ளது. முருங்கு - முருக்கு, அழிக்கும். அடல் - வலிமை. எரியில் - வடவைபோல.

14. தெய்வமகளிர் - திருமகள் முதலிய தெய்வப் பெண்கள்.

15. செக்கர் - செந்நிறம். உரகம் - பாம்பு எயிறு - ஆதிவராகத்தின் தந்தம். நங்கை - உமாதேவியார்.

கங்கையா றலம்பு மோசை கடுக்கைவண் டிரங்கு மோசை
மங்கல முழவி னோசை மந்திர வேத வோசை
செங்கையா டெரியி னோசை திருவடிச் சிலம்பி னோசை
எங்கணு நிரம்பி யன்ப ரிருசெவிக் கமுத மூற்ற. 16

ஆடினா னமல மூர்த்தி யஞ்சலி முகிழ்த்துச் சென்னி
சூடினா ரடியில் வீழ்ந்தார் சுருதியா யிரநா வாரப்
பாடினார் பரமா னந்தப் பரவையிற் படிந்தா ரன்பு
நீடினார் நிருத்தா னந்தங் காண்பது நியமம் பூண்டார். 17

முனிவர்கந் தருவர் வானோர் தானவர் மோன யோகர்
புனிதகிம் புருட ராதிப் புலவரு மிறைஞ்சி யன்பிற்
கனிதரு மின்பத் தாழ்ந்தார் திருமணங் காண வந்த
மனிதருங் காணப் பெற்றார் மாதவர் பொருட்டான் மன்னோ. 18

அனந்தனா முனிவர் வேந்த னளவிலா னந்த மூறி
மனந்தனி னிரம்பி மேலும் வழிவது போல மார்பம்
புனைந்தபுண் ணியவெண் ணீறு கரைந்திடப் பொழி[1]கண் ணீருள்
நனைந்திரு கரமுங் கூப்பி நாதனைப் பாடு கின்றான். 19

பராபர முதலே போற்றி பத்தியில் விளைவாய் போற்றி
சராசர மாகி வேறாய் நின்றதற் பரனே போற்றி
கராசல வுரியாய் போற்றி கனகவம் பலத்து ளாடும்
நிராமய பரமா னந்த நிருத்தனே போற்றி போற்றி. 20

ஒன்றாகி யைந்தா யையைந் துருவாகி வருவாய் போற்றி
இன்றாகிச் சென்ற நாளா யெதிர்நாளா யெழுவாய் போற்றி

---

16. அலம்பும் - ஒலிக்கும். மந்திரவேதம் - மந்திரம் நிறைந்த வேதம். எரி - மழு.

17. அமலன் - மலரகிதன். ஆயிரம் - அனந்தம். பரமானந்தப் பரவை - பேரின்பக் கடல்.

18. மோனம் - மௌனநிலை. கிம்புருடராதிப்புலவர் - கிம்புருடர் முதலிய இசைநூலில் வல்ல தெய்வப்புலவர்கள்.

19. அனந்தன் ஆம் முனிவர் வேந்தன் - ஆதிசேடாவதாரமாகிய பதஞ்சலி முனிவர்.

20. பராபரம் - அறுதியாயுள்ளது. கராசலம் - (கரம்+அசலம்) கைம்மலை ; யானை. நிராமயன் - நோயில்லாதவன்.

பா-ம்—1 கண்ணீரும்.

நன்றாகித் தீய தாகி நடுவாகி முடிவாய் மன்றுள்
நின்றாடும் பரமா னந்த நிருத்தனே போற்றி போற்றி. 21

அடியரேம் பொருட்டு வெள்ளி யம்பலத் தாடல் போற்றி
பொடியணி தடந்தோள் போற்றி புரிசடை மகுடம் போற்றி
கடியவிழ் மலர்மென் கூந்தற் கயல்விழி பாகம் போற்றி
[1]நெடியநற் பரமா னந்த நிருத்தனே போற்றி போற்றி. 22

என்றுநின் றேத்தி னுன்பின் னிருவரை நோக்கி வெள்ளி
மன்றுணின் றாடா நின்ற மறைமுதல் கருணை கூர்ந்து
ஒன்றுநீர் வேட்ட தென்னென் றருள்செய நாதன் பாதந்
துன்றுமெய் யன்பிற் றாழ்ந்து தொழுதுநின் றிதனைச் சொல்வார். 23

எந்தையித் திருக்கூத் தென்று மிந்நிலை நின்றி யார்க்கும்
பந்தவெம் பாச நீங்கப் [2]பரித்தருள் செய்தி யென்னச்
செந்தமிழ்க் கன்னி நாடு செய்தமா தவப்பே றெய்தத்
தந்தன மென்றான் வேதந் தலைதடு மாற நின்றான். 24

[3]அராமுனி யீது வேண்டு மாதியெம் பெரும விந்த
நிராமய பரமானந்த நிருத்தநேர் கண்டோ ரெல்லாந்
தராதல மிசைவந் தெய்தாத் தனிக்கதி பெறுதல் வேண்டும்
பராபர வென்று தாழ்ந்தான் பகவனு மதற்கு நேர்ந்தான். 25

ஆர்த்தனர் கணத்தோர் கைகோத் தாடின ரலர்பூ மாரி
தூர்த்தனர் விண்ணோர் கண்ணீர் துளும்பினர் முனிவ ராகம்

---

21. ஒன்று - (சகளமும், நிட்களமும், சகளநிட்களமும் கடந்து நின்ற) பரசிவம். ஐந்துஉரு - பரசிவன், அநுகதசிவன், சதாசிவன், மகேசன், உருத்திரன் என்னும் ஐந்து மூர்த்திகள். ஐயைந்து - சந்திர சேகரர் முதலிய இருபத்தைந்து சிவ மூர்த்தங்கள்.

22. அடியரேம் - அடியேங்கள். கயல்விழி - அங்கயற் கண்ணி அம்மையார். பாகம் - இடப்பாகம்.

23. மறைமுதல் - சிவபெருமான். வேட்டது - விரும்பியது.

24. இந்நிலை - இந்த வெள்ளியம்பலம். கன்னிநாடு - பாண்டி நாடு. பேறு - பயன்.

25. அராமுனி - பதஞ்சலி முனிவர். தராதலம் - பூமி. தனிக்கதி - சிவகதி.

பா-ம்—1 நெடியவ பரமானந்த, நெடியதற் பரமானந்த. 2 பரிந்தருள் செய்தி. 3 அராமுனி மீது. (மீது - மேலும், பின்னும்.)

போர்த்தனர் புளக மன்பிற் புதைந்தனர் விழுங்கு வார்போற்
பார்த்தனர் புல்லிக் கொண்டார் பரவியவ் விருவர் தம்மை. 26

அனித்த மாகிய பூதமைம் பொறிபுல னுதியா ருருகி
இனித்த மாயையோ டருவினைத் தொடக்கினு மிருளினும் வேறாகித்
தனித்த யோகிக ளகநிறைந் தாடிய தனிப்பெருந் திருக்கூத்தைக்
குனித்த வண்ணமாக் கண்டவர்க் கிகபரங் கொடுத்தவ னுறைகின்றான்.

குனிவி லாதிரைத் தினந்தொடுத் தெதிர்வரு கொடுவி லாதிரை யெல்லை, புனித வாடக முளரிதோய்ந் தத்தனிப் பொதுநடந் தரிசித்தங், கினித மர்ந்துநூற் றெண்மடங் கைந் தெழுத் தெண்ணியிந் நிலைநிற்குங், கனியு மன்பினு ரெண்ணியாங் கெய்துவர் கருதிய வரமெல்லாம். 28

ஆகச் செய்யுள்—826

---

26. அலர் பூ - மலர்ந்த பூ. புல்லுதல் - தழுவுதல். பரவி வணங்கி.

27. இருள் - சகச மலமாகிய ஆணவம். குனித்த வண்ணம் ஆடிய திருக்கோலம்.

28. வில் - தனுமாசமாகிய மார்கழி; குனித்தல் வில்லை விசேடித்தது. ஆதிரை - திருவாதிரை நட்சத்திரம். ஆடக முளரி - பொற்றாமரைத் தீர்த்தம்.

# 7. குண்டோதரனுக்கு அன்னமிட்ட படலம்

—o—

பன்ன கேசனு மடுபுலிப் பாதனும் பணிய
மின்னு வார்சடை மன்னவன் வெள்ளிமன் றுடல்
சொன்ன வாறிது பசித்தழல் சுடவொரு பூதம்
அன்ன மாமலை தொலைத்தவா றெடுத்தினி [1]யறைவாம். 1

கன்னி யர்க்கர சாயினாள் கடிமனை புகுந்த
மின்னி யற்சடை மாதவர் வேதிய ரேனோர்
எந்நி லத்துள மன்னவர் யாவர்க்கு முறையே
பொன்னி யற்கலத் தறுசுவைப் போனக மருத்தா. 2

பூசு கின்றவு முடுப்பவும் பூண்பவும் பழுக்காய்
வாச மெல்லிலை யேனவு மம்முறை வழங்காத்
தேச மன்னவ ரேனையோர் செல்லுநர்ச் செலுத்தி
ஈச னன்புறு கற்பினா ளிருக்குமவ் வேலை. 3

மடைவ ளத்தொழிற் புலவர்வந் தடியிணை வணங்கி
அடிய ரேமட்ட போனக மாயிரத் தொன்றின்
இடைய தாயினுந் தொலைந்தில தியாங்கண்மேற் செய்யக்
கடவ தேதெனப் பிராட்டிதன் கணவர்முன் குறுகா. 4

---

1. பன்னகேசன் - பதஞ்சலி முனிவர். புலிப்பாதன் - வியாக்கிரம பாதர். பசி தழல் சுட - பசியாகிய உதிராக்கினி சுட்டு வருத்த. தொலைத்த - உண்டொழித்த.

2. மின் இயல் - மின்னலைப்போல விளங்கும். கலம் - உண்கலம். போனகம் - திருவமுது. அருத்தா - உண்பித்து.

3. பழுக்காய் - பாக்கு. ஏனவும் - பிறவற்றையும் : மலர் முதலியவற்றையும்.

4. மடை - சோறு. அட்ட - சமைத்த முன்குறுகா - முன் சென்று.

பா-ம்—1 தறைவாம்.

பணிந்தொ துங்கிநின் றடிகண்முப் பத்துமுக் கோடி
கணங்க டம்மொடு மிங்கெழுந் தருள்வது கருதி
இணங்கு மின்சுவைப் போனக மெல்லையின் றாக்கி
உணங்கு கின்றதுண் டெஞ்சிய தெனைத்தென வுரைக்கின். 5

இமையக் குன்றமு மடைகலா யிதன்புறங் கிடந்த
சிமையக் குன்றுக ளீட்டமுஞ் சேர்ந்தென நிமிரச்
சமையக் கொட்டிய வாலரிப் புழுக்கலுஞ் சாதக்
கமையக் கொட்டிய கறிகளின் வருக்கமு மனைத்தே. 6

என்ற போதிறை யெம்பிரான் றேவியா ரிடத்தில்
ஒன்று மன்பினு லொருவிளை யாடலை நினைத்தோ
தன்ற னிக்குடைப் பாரிடத் தலைவனை தாற்றல்
அன்றி யாவரு மறிந்திடக் காட்டவோ வறியேம். 7

சிறிது வாணகை செய்துமூ வேந்தரிற் சிறந்த
மறுவின் மீனவ னரும்பெறன் மகளுனக் கரிதிற்
பெறுவ தேதுவான் றருவுநின் பணிசெயப் பெற்றிங்
குறைவ தேற்பிறர் திருவெலா முன்னதே யன்றோ. 8

அளவி லாதநின் செல்வத்தின் பெருக்கைநா மறிய
விளைவு செய்தனை போலுநின் விருந்துணப் பசியாற்
களைய டைந்தவ ராகிநங் கணத்தினுட் காணேந்
தளவ மூரலா யாஞ்செயத் தக்கதே தென்றான். 9

அடுக்க நின்றகுண் டோதர னகட்டிடை வடவை
மடுக்க வுன்னினு னதுவந்து வயிற்றெரி பசியாய்த்

---

5. உணங்குகின்றது - வாடுகிறது. எனைத்து - எவ்வளவு.

6. அடைகல்-பக்கமலை. சிமையக்குன்று - உச்சியையுடைய சிறு குன்றுகள். அரி - அரிசி. புழுக்கல் - சோறு. சாதக்கு - சாதத்துக்கு.

7. ஒன்றும் அன்பு - ஒத்த அன்பு. பாரிடத் தலைவன் - பூதகணத் தலைவன் ; குண்டோதரன்.

8. மீனவன் - இங்கு மலயத்துவச பாண்டியன். அரும் பெறல் மகள் - பெறுதற்கரிய பெற்ற மகளே ! மகன் : அண்மை விளி.

9. விருந்து-விருந்தினர்க்கு அளிக்கும் உணவு. தவளம்-முல்லை. மூரல் - பற்கள்.

10. அகடு - வயிறு. வடவை (ஆய்) - வடவைபோல. மடுக்க - குடிகொள்ள. ஆலம் - விடம். உயங்கல் - வருந்துதல்,

தொடுக்க வாலமுண் டாங்குடல் சோர்ந்துவேர்த் தாவி
ஒடுக்க முற்றைய பசியினு லுயங்கினே னென்றான். 10

குடையெ டுக்குமிக் குறியதாட் குறட்கொரு பிடிசோ
றிடுமி னப்புறஞ் சோறுமா லெனத்தொழு தெல்லாம்
உடைய நாயகி போயினுள் குறியனு முடனே
நடைத ளர்ந்துகண் புதைந்துவாய் புலர்ந்திட நடந்தான். 11

படைக்க ணேவல ரிறைமகள் பணியினுற் பசிநோய்
தொடுத்த வன்றனைக் கொண்டுபோய்ச் சொன்றிமுன் விடுத்தார்
அடுத்தி ருந்ததே கண்டன ரன்னமா மலையை
எடுத்த யின்றது மடிசிலங் கிருந்ததுங் காணுர். 12

சிலம்பு நூபுரச் சீறடிச் சேடியர் சில்லோர்
அலம்பு வால்வளைக் கைநெரித் ததிசய மடைந்தார்
புலம்பு மேகலை யார்சிலர் பொருக்கென வெருண்டார்
கலம்பெய் பூண்முலை யார்சிலர் [1]கண்புதைத் திரிந்தார். 13

முரவை போகிய முரிவில்வான் மூரல்பால் வறையல்
கருனை திம்பய றடுதுவை பல்வகைக் கறிகள்
விரவு தேம்படு பாறயி ரிழுதுதேன் வெள்ளம்
வரைவி லாதன மிடாவொடு வாரிவாய் மடுத்தான். 14

பல்ப முக்குவை வேற்றுருப் பண்ணியங் கன்னல்
மெல்சு வைத்தண்டு தெங்கிவை யன்றியும் வேவா
வல்சி காய்களின் வருக்கமு நுகர்ந்துமா ருமல்
எல்லை தீர்நவ பண்டமு மெடுத்துவாய் மடுத்தான். 15

---

11. குறிய தாள் குறள் - குறுகிய காலையுடைய பூதம்; குண்டோதரன். சோறும் - சொல்லுவாம்.

12. படைக்கண் ஏவலர் - வாட்படை போலும் கண்களையுடைய ஏவல் மகளிர். சொன்றி, அடிசில் - சோறு.

13. சீறடி - சிற்றடி. சேடியர் - பாங்கியர். இரிந்தார் - ஓடினர்.

14. முரவை - தவிடு நீங்குமுன் அரிசியிலிருக்கும் சிவந்த வரி. வால் மூரல் - வெள்ளிய சோறு. பால் வறையல் - பால் சேர்த்துச் சமைத்த துவட்டல். பால் - வெண்மையுமாம். கருனை - பொரிக்கறி. துவை - துவையல். இழுது - வெண்ணெய்.

15. பண்ணியம் - பலகாரம். கன்னல் - சருக்கரை. மெல்சுவைத் தண்டு - கரும்பு. வல்சி - உணவு. நவபண்டம் - நவதானியம்.

பா-ம்—1 கண்புதைத்திருந்தார்.

பாரித் துள்ளவிப் பண்டமும் பருஉக்குறுங் கையால்
வாரித் தன்பெரு வயிற்றிடை வைப்பவுந் துடுவை
பூரித் தாகுதி பண்ணிய தழலெனப் பொங்கிக்
கோரித் தொன்பது வாயிலும் பசித்தழல் கொளுத்த. 16

அலங்க லோதிகண் டதிசய மடைந்துதன் னன்பின்
நலங்கொ ளுயகன் முன்புபோய் நாணமுட் கிடப்ப
இலங்கு பூங்குழல் சுவன்மிசை யிறக்கியிட் டொல்கி
கிலங்கி ளைத்துநின் றுணிலை கண்டன னிருபன். 17

அஞ்சி லோதியை வினவுவா னறிகலான் போலக்
குஞ்சி யாரழ லன்னவக் குடவயிற் றவனுண்
டெஞ்சி யுள்ளவேற் பூதங்க ளின்னமும் விடுத்துன்
நெஞ்சு வப்பவே யருத்துது மென்னலு நிமலை. 18

ஐய வின்னுமிக் குறட்பசி யடங்கிடா வேறு
வெய்ய பாரிட வீரரை விடுத்தியே லெடுத்து
வையம் யாவையும் வயிற்றிடை வைப்பரே யதனாற்
செய்ய காலருத் திரப்பெயர் தேற்றமா முனக்கே. 19

சங்க வார்குழைக் குறண்மகன் றன்செய றுனே
இங்கு வந்துரை செய்திட வறிதியென் றிறைமுன்
மங்கை நாயகி குமுதவாய் மலர்பொழு தெயிற்றுத்
திங்கள் வாய்முழை யான்பசித் தீச்சுட வந்தான். 20

நட்ட மாடிய சுந்தர நங்கையெம் பிராட்டி
அட்ட போனகம் பனிவரை யனையவாய்க் கிடந்த

---

16. பாரித்துள்ள - நிறைந்துள்ள. துடுவை - சுருக்கு சுரவம். கோரித்து - அதிகரித்து; கொழையுற்று.

17. சுவல்-பிடரி. ஒல்கி-துவண்டு. கிளைத்து-(பெருவிரலால்) கிளரி.

18. அம் - அழகிய. சில் - வட்டத் தகட்டு அணி; சிலவாகிய எனினுமாம். நிமலை - தடாதகைப் பிராட்டியார்.

19. ஐய - ஐயனே! பசி அடங்கிடா - தீப்பசி அடங்கவில்லை. அதனால் - அக் காட்சி யளவையினால்.

20. குறள் மகன் - குறளாகிய மகன்: குண்டோதரன். முழை - மலைக்குகை.

21. நட்டம் - திரு நடனம். பனிவரை - இமயமலை. காந்துவது - எரிகின்றது.

தொட்டு வாய்மடுத் திடவுமென் சுடுபசி தணியா
திட்டு ணுதவர் வயிறுபோற் காந்துவ தென்றான். 21

கையர் முப்புரத் திட்டதீக் கடும்பசி யுருவாய்ப்
பொய்ய னேன்வயிற் றிடைக்குடி புகுந்ததோ வென்னும்
கையெ றிந்திடு மண்டங்கள் வெடிபடக் கதறும்
ஐய கோவெனு முயிர்த்திடு மாவிசோர்ந் தயரும். 22

ஆகச் செய்யுள்—848

---

22. கையர் - வஞ்சகர். முப்புரம் - திரிபுரம். பொய்யனேன் - மெய்யன்பில்லாதேன்.

# 8. அன்னக்குழியும் வைகையுமழைத்த படலம்

—o—

வேத நாயகன் பாரிட வேந்தனுக் கமையா
ஓத ஞுதிக ளருத்திய தன்மையீ துவையும்
போத ராமையா லமைவுறப் போனகக் குழிதந்
தோத மாநதி யருத்திய செய்தியு முரைப்பாம். 1

கவன மால்விடை யாளிபின் கடிகமழ் தென்றற்
பவன மாமலை யாட்டியைப் பார்த்துளே நகைத்துத்
தவன மாபசி யுடையவன் றன்பொருட் டன்ன
புவன மாதினை நினைத்தன ளினைக்குமுன் போந்தாள். 2

நாற்ற டந்திசைத் தயிர்க்கட னனந்தலை நிலங்கீண்
டேற்றெ ழுந்துநாற் கிடங்கரா யுதித்தெழுந் தாங்கு
மாற்ற ருஞ்சுவைத் தீந்தயிர் வாலரிப் பதத்தோ
டேற்றெ ழுந்தது நாற்குழி யிடத்திலும் பொங்கி. 3

குரும திக்குல மன்னவன் மருகனக் குண்டப்
பெருவ யிற்றிரு பிறையெயிற் றெரிசிகைப் பேழ்வாய்
ஒருகு றட்குடை வீரனை யுன்பசி தணியப்
பருகெ னப்பணித் தருளலும் பாரிடத் தலைவன். 4

அத்த யிர்ப்பதக் கிடங்கரி லலைகடல் கலக்கும்
மத்தெ னக்கரம் புதைத்தெடுத் தெடுத்துவாய் மடுத்துத்
துய்த்தி டப்பசி விடுத்தது [1]சுருதிநா யகன்றாட்
பத்தி வைத்துவீ டுணர்ந்தவர் பழவினைத் தொடர்போல். 5

---

1. அமையா ஓதனுதிகள் - (வயிறு) நிரம்பாத அன்ன முதலியவைகள். உவை – அவ்வன்னமுதலியவை : சுட்டுப் பெயர்.

2. பவனம் - காற்று. மலையாட்டி - பொதிய மலையை ஆள்பவன்; தடாதகைப் பிராட்டியார். தவனம் - தாகம். புவன அன்ன மாது - உலகத்தார்க்கு அன்னமளிக்கும் அன்னபூரணி.

3. நனந்தலை - நடுவிடம். கிடங்கர் - குழி. வால் அரிப் பதம் - வெள்ளிய அரிசியாலமைந்த சோறு.

4. குரு - நிறம். பேழ்வாய் - பிளந்த வாய்.

5. தயிர்ப்பதம் - தயிர்ச் சோறு. பழ வினை - சஞ்சித வினை.

பா-ம்—1 சுந்தரன் ருளிற்.

வாங்கி வாங்கிவாய் மடுத்தலு முடம்பெலாம் வயிருய்
வீங்கி ஞன்றரை கிழிபடப் பொருப்பென வீழ்ந்தான்
நீங்கு நீளுயிர்ப் பிலனுடல் புரண்டன னீர்வேட்
டாங்கு நீர்நிலை தேடுவா ஞயினு னெழுந்தான். 6

ஆவி யன்னவர்ப் பிரிந்துறை யணங்கனுர் போலக்
காவி நாண்மலர் தாமரைக் கடிமலர் வாட
வாவி யோடையுங் குளங்களும் வறப்பவாய் வைத்துக்
கூவ நீணிலை நீர்களும் பசையறக் குடித்தான். 7

அனைய ஞகியு நீர்நசை யாற்றலன் வருந்தும்
வினைய ஞகிவா னதிச்சடை வேதியன் பாதத்
தினைய நாதனுந் தன்றிரு முடியின்மீ திருக்கும்
[1]நனைய நாண்மல ரோதியைப் பார்த்தொன்று நவில்வான். 8

தேங்கு நீர்த்திரை மாலிகைச் செல்விநீ யிந்த
வாங்கு நீர்த்தடம் புரிசைசூழ் மதுரையின் மாடோர்
ஓங்கு நீத்தமா யொல்லென வருதியென் றுரைத்தான்
நீங்கு நீர்த்திரு [2]மாதவ னொருமொழி நிகழ்த்தும். 9

அன்று மெம்பிரா ஞணையாற் பகீரதன் பொருட்டுச்
சென்று நீயொரு தீர்த்தமாய்த் திளைப்பவர் களங்கம்
ஒன்று தீவினைத் தொடக்கறுத் தொழுகெனப் பணித்தாய்
இன்று மோர்நதி யாகெனப் பணித்தியே லென்னை. 10

தெரிசித் தோர்படிந் தாடினேர் செங்கையா லேனும்
பரிசித் தோர்பவத் தொடர்ச்சியின் பற்றுவிட் டுள்ளத்

---

6. நீள் உயிர்ப்பு - நெட்டுயிர்ப்பு. வேட்டு - விரும்பி.

7. காவி - நீலோற்பலம். வாவி - நடை வாவி; படியில் நடந்து செல்லுங் கிணறு. கூவம் - கிணறு.

8. நசை - விருப்பம். இனைய - (விழுந்து) வருந்த. நனைய - தேனையுடைய.

9. திரைமாலிகைச் செல்வி - கங்கை: விளி. வாங்கு நீர்த்தடம் - வளைந்த அகழி. மாடு - பக்கம்.

10 எம்பிரான்: விளி. களங்கம் ஒன்று - குற்றம் பொருந்திய.

11. உருசித்து - இன்ப ஊற்றெடுத்து. விச்சை - சிவஞானம். விரிசித்து - எங்கும் நிறைந்த அறிவுப்பொருள்.

பா-ம்—1 நனைய வார்குழ லோதியைப். 2 மாதரு மொருமொழி.

துருசித் தோர்வுறு பத்தியும் விச்சையு முணர்வாய்
விரிசித் தோர்வுறு மெய்யுணர் வால்வரும் வீடும். 11

தந்தி டப்பணித் தருளொளுத் தடம்புனற் செல்வி
சுந்த ரப்பெருங் கடவுளை வரங்கொண்டு தொழுது
வந்த ளப்பிலா வேகமோ டெழுந்துமா நதியாய்
அந்த ரத்துநின் றிழிபவ ளாமென வருமால். 12

திரைவளை யணிகர முடையவள் செழுமணி நகையுடையாள்
நுரைவளை துகிலுடை யவள்கொடி நுணுகிடை யவளறனீள்
விரைவளை குழலுடை யவள்கயல் விழியுடை யவள்வருவாள்
வரைவளை சிலையவன் முடிமட வரனதி வடிவினுமே. 13

விரைபடு மகிலரை பொரிதிமில் வெயில்விடு மணிவரையோ
டரைபட முதுசினை யலறிட வடியொடு கடிதகழாக்
குரைபடு கழலிற வுளர்சிறு குடியடி யொடுபறியாக்
கரைபட வெறிவது வருவது கடுவிசை வளியெனவே. 14

பிணையொடு கலைபிடி யொடுகரி பிரிவில வொடுபழுவப்
பணையொடு கருமுசு வயிறணை பறழொடு தழுவியதன்
துணையொடு கவிபயின் மரனிரை தொகையொடு மிறவுளர்வெங்
கணையொடு சிலையித ணொடுமெறி கவணொடு கொடுவருமால். 15

அடியிற நெடுவரை யுதைவன வகழ்வன வகழ்மடுவைத்
திடரிடு வனமழை செருகிய சினைமர நிரைதலைகீழ்
படவிடி கரைதொறு நடுவன படுகட லுடைமுதுபார்
நெடுமுது கிருபிள வுறவரு நெடுநதி யினவலையே. 16

---

12. இழிபவள் ஆம் என - (பகீரதன் பொருட்டு) இறங்கினவள் போல.

13. அறல் - கருமணல். விரை - (இயற்கை) மணம். மடவரல் இங்குக் கங்கை.

14. பொரி அரை திமில் - பொருக்குப் பொருந்திய அடியினை யுடைய வேங்கை மரம். இறவுளர் - குறிஞ்சிநில மக்கள்; வேடர். சிறுகுடி - சீறூர்.

15. பிணை - பெண்மான். கலை - ஆண் மான். பிடி - பெண் யானை. பழுவம் - காடு; பழுத்தலுமாம். பணை - அரசமரம்; மரக் கிளையுமாம். முசு - ஆண் குரங்கு. பறழ் - குட்டி. இதண் - பரண். ஒடுக்கள்: எண்ணிடைச் சொற்கள்.

16. திடர் - மேடு. மழை - மேகம். படுகடல் - ஒலிக்கின்ற கடல்.

பிளிறொலி யினமுது மரமகழ் பெருவலி யினவசையா
வெளிறடி வனவெறி மண்ணியின விரைசெல வினமதமோ
டொளிறளி யினநுரை முகபட முடையன வெனவரலாற்
களிறனை யதுமது விதழிகள் கவிழ்சடை யணிகுடிஞை. 17

நீடிய பிலமுறு நிலையின நிருமலன் மதிமுடிமீ
தாடிய செயலின வெயிலுமி ழருமணி தலையினநீள்
கோடிய கதியின நிரைநிரை குறுகிய பலகாலின்
ஓடிய வலியின வளையுட லுரகமு மெனவருமால். 18

மண்ணகழ் தலின்வளை யணிகரு மாவனை யதுமிசைபோய்
விண்ணள வலினவு ணர்களிறை விடுபுன லொடுநெடுகும்
அண்ணலை யனையது சுவையிழு தளையளை வுறுசெயலாற்
கண்ணனை யனையது நெடுகிய கடுகிய கதிநதியே. 19

திகழ்தரு கரிபரி கவரிகள் செழுமணி யொடுவருமா
றிகழ்தரு குடபுல வரசர்க ணெறிசெய்து கவர்திருவோ
டகழ்தரு பதிபுகு மதிகுல வரசனை யதையலதேற்
புகழ்தரு திறையிட வருகுட புலவர சனுநிகரும். 20

ஆரொடு மடலவிழ் பனையொடு மரநிக ரிலைநிம்பத்
தாரொடு புலியொடு சிலையொடு தருகய லொடுதழுவாப்
பாரொடு திசைபர வியதமிழ் பயிலர சர்கள்குழுமிச்
சீரொடு பலதிரு வொடுவரு செயலனை யதுநதியே. 21

---

17. இது யாற்றுக்கும் யானைக்கும் சிலேடை. பிளிறல் - ஒலித்தல்; விறிடல். முது மரம்-ஆல மரம்; முதிர்ந்த மரம். வெளில்-விளா மரம்; கட்டுத்தறி. மதம் - வலிமை; மதநீர். அளி - குளிர்ச்சி; வண்டு. முகபடம் - போர்வை; நெற்றிப்பட்டம். குடிஞை - (கங்கா) நதி.

18. இது யாற்றுக்கும் பாம்புக்கும் சிலேடை. பிலம் - பாதலம்; பிலத்துவாரம். ஆடிய-தங்கியசைகின்ற; ஆடுகின்ற. மணிதலையின - மணிகளைத்தம்மிடமுடையன; மணிகளைச்சுடிகையிலுடையன. கோடிய - வளைந்த. காலின் - கால்வாய்களின்; கால்களின். உரகம் - பாம்பு.

19. வளை - சங்கு. கருமா - பன்றி; வராகமூர்த்தி. அவுணர்கள் இறை - மாவலி. நெடுகும் அண்ணல் - வாமன மூர்த்தி. அளை - தயிர்.

20. நெறி - ஆணை. பதி - இங்கு மதுரை. அரசு - அரசத் தன்மையுடைய பாண்டியன். குடபுலம் - மேற்றிசை, சேரநாடு.

21. ஆர் - ஆத்தி மாலை. அரம் - ஒரு கருவி. தமிழ் பயில் அரசர் - சேர சோழ பாண்டியர்கள்.

கல்லார் கவிபோற் கலங்கிக்கலை மாண்ட கேள்வி
வல்லார் கவிபோற் பலவான்றுறை தோன்ற வாய்த்துச்
செல்லாறு தோறும் பொருளாழ்ந்து தெளிந்து தேயத்
தெல்லாரும் வீழ்ந்து பயன்கொள்ள விறுத்த தன்றே. 22

வண்டோதை மாறு மலர்வேணியின் வந்த நீத்தங்
கண்டோத நஞ்சுண் டருள்கண்ணுதல் மூர்த்தி பேழ்வாய்
விண்டோ தணியா தென்விடாயென வெம்பி வீழ்ந்த
குண்டோ தரனை விடுத்தானக் குடிஞை ஞாங்கர். 23

அடுத்தா னதியின் னிடைபுக்கிருந் தாற்ற லோடும்
எடுத்தான் குறுங்கை யிரண்டுங்கரை யேற நீட்டித்
தடுத்தான் மலைபோ னிமிர்தண்புனல் வாயங் காந்து
மடுத்தான் விடாயுங் கடலுண்ணு மழையு நாண. 24

தீர்த்தன் சடைநின் றிழிதீர்த்த மருந்தி வாக்குக்
கூர்த்தின்பு கொண்டு குழகன்றிரு முன்ன ரெய்திப்
பார்த்தன் பணிந்த பதமுன்பணிந் தாடிப் பாடி
ஆர்த்தன் புருவாய்த் துதித்தானள வாத கீதம். 25

பாட்டின் பொருளா னவன்பாரிட வீரன் பாடல்
கேட்டின்ப மெய்திக் கணங்கட்குக் கிழமை நல்கி
மோட்டின் புனன்மண் முறைசெய் திருந்தா னளகக்
காட்டின் புறம்போய் மடங்குங்கயற் கண்ணி யோடும். 26

---

22. இது கவிக்கும் நதிக்கும் சிலேடை. மாண்ட - மாட்சிமைப் பட்ட. மாண் : பகுதி. துறை - அகப்பொருட்டுறை, புறப்பொருட் டுறை; நீர்த்துறை. பயன் - அறம், பொருள், இன்பம், வீடு என்ற நால்வகைப் பயன்கள்; பிரயோசனம். இறுத்தல் - நிலைபெறுதல்.

23. ஓதம் - கடல். விண்டு - திறந்து. ஞாங்கர் - பக்கம்.

24. குறுங்கை-சிறியகை. அங்காந்து-வாயைத்திறந்து. விடாய் - தாகவிடாய்.

25. கூர்த்து - மிகுத்து. பார்த்தன் - அருச்சுனன். அளவாத - அளவில்லாத.

26. பாட்டு - சொல்; இது சத்தி வடிவு. பொருளானவன் - பொருள் வடிவாயுள்ள சோமசுந்தரக் கடவுள். கிழமை - (தலைமை யாம்) உரிமை. மோட்டின் புனல் - கடல். மோடு - பெருமை; இன் : சாரியை.

தீர்த்த னிதழிச் சடைநின்று மிழிந்து வரலாற் சிவகங்கை
தீர்த்த னுருவந் தெளிவோர்க்கு ஞானந் தரலாற் சிவஞான
தீர்த்தங் காலிற் கடுகிவருஞ் செய்தி யாலே வேகவதி
தீர்த்தங் கிருத மாலையென வைகை நாமஞ் செப்புவரால். 27

ஆகச் செய்யுள்—875

---

27. தீர்த்தன் - பரிசுத்தன்; சிவபெருமான். வைகை - வைகை நதி.

# 9. எழுகடலழைத்த படலம்

—o—

முடங்கன்மதி முடிமறைத்த முடித்தென்னன் குறட்கன்னக்
கிடங்கரொடு நதியழைத்த கிளர்கருணைத் திறனிதுமேல்
மடங்கல்வலி கவர்ந்தான்பொன் மாலைபடிந் தாடவெழு
தடங்கடலு மொருங்கழைத்த தன்மைதனைச் சாற்றுவாம். 1

ஓதவரும் பொருள்வழுதி யுருவாகி யுலகமெலாஞ்
சீதளவெண் குடைநிழற்றி யறச்செங்கோல் செலுத்துநாள்
போதவரும் பொருணர்ந்த விருடிகளும் புனிதமுனி
மாதவரும் வரன்முறையாற் சந்தித்து வருகின்றார். 2

வேதமுனி கோதமனுந் தலைப்பட்டு மீள்வானோர்
போதளவில் கற்புடைய பொன்மாலை மனைபுகுந்தான்
மாதவளும் வரவேற்று முகமனுரை வழங்கிப்பொன்
ஆதனமிட் டஞ்சலிசெய் தரியதவத் திறங்கேட்பாள். 3

கள்ளவினைப் பொறிகடந்து கரைகடந்த மறைச்சென்னி
உள்ளபொருள் பரசிவமென் றுணர்ந்தபெருந் தகையடிகேள்
தள்ளரிய பவமகற்றுந் தவமருள்செய் கெனக்கருணை
வெள்ளமென முகமலர்ந்து முனிவேந்தன் விளம்புமால். 4

தவவலியா லுலகீன்ற தடாதகைக்குத் தாயானாய்
சிவபெருமான் மருகனெனுஞ் சீர்பெற்றாய் திறன்மலயத்
துவசனருங் கற்புடையாய் நீயறியாத் தொல்விரதம்
அவனியிடத் தெவரறிவா ரானாலு மியம்பக்கேள். 5

---

1. முடங்கல் - வளைவு. மடங்கல் - (நர) சிங்கமூர்த்தி : இயமனுமாம். கவர்ந்தான் : (சிவபெருமான்) வினையாலணையும் பெயர். பொன்மாலை - காஞ்சனமாலை.

2. அறம் - தரும நூல். போதம் - ஞான நூல். இருடிகள் - சத்தரிஷிகள் - அவர் அகத்தியர், ஆங்கிரசர், கௌதமர், காசிபர், புலத்தியர், மார்க்கண்டர், வசிட்டர் என்போர்.

3. தலைப்பட்டு - சந்தித்து. திறம் - பாகுபாடு.

4. பொறி - ஐம்பொறிகள். மறைச்சென்னி - உபநிடதம்.

5. திறல் - வெற்றி. அவனி - பூமி.

மானதமே வாசிகமே காயிகமே யெனவகுத்த
ஈனமில்சீர்த் தவமூன்று மிவற்றின்மா னதந்தரும
தானமிசை மதிவைத்த றயவுபொறை மெய்சிவனை
மோனமுறத் தியானித்த லைந்தடக்கன் முதலனந்தம். 6

வாசிகமைந் தெழுத்தோதன் மனுப்பஞ்ச சாந்திமறை
பேசுசத வுருத்திரந்தோத் திரமுரைத்தல் பெருந்தருமங்
காசகல வெடுத்தோதன் முதலனந்தங் காயிகங்கள்
ஈசனருச் சனைகோயில் வலஞ்செய்கை யெதிர்வணங்கல். 7

திருத்தனுறை பதிபலபோய்ப் பணிதல்பணி நிறைவேற்றல்
திருத்தன்முடி நதியாதி தீர்த்தயாத் திரைபோய்மெய்
வருத்தமுற வாடலிவை முதற்பலவவ் வகைமூன்றிற்
பொருத்தமுறு காயிகங்கள் சிறந்தனவிப் புண்ணியத்துள். 8

திருத்தயாத் திரையதிக மவற்றதிகஞ் சிவனுருவாந்
திருத்தமாங் கங்கைமுதற் றிருநதிக டனித்தனிபோய்த்
திருத்தமா [1]டுவதரிதத் திருநதிக ளவைவந்து
திருத்தமாய் நிறைதலினு லவற்றதிகந் திரைமுந்நீர். 9

என்றுமுனி விளம்பக்கேட் டிருந்தகாஞ் சனமாலை
துன்றுதிரைக் கடலாடத் துணிவுடைய விருப்பினளாய்த்
தன்றிருமா மகட்குரைத்தாள் சிறிதுள்ளந் தளர்வெய்திச்
சென்றிறைவற் குரைப்பலெனச் செழியர்தவக் கொழுந்தனையாள்.

---

6. மானதம் - மனத்தாற் செய்வது. வாசிகம் - வாக்காற் செய்வது. காயிகம் - காயத்தாற் செய்வது. தருமம் - இங்கு முப்பத்திரண்டு அறங்கள். தானம் - தக்கார்க்கு அளிப்பது.

7. பஞ்சமனு - பஞ்சப்பிரம மந்திரங்கள். சாந்தி - உபநிடதம், சதவுருத்திரம் - சதவுருத்திர மந்திரங்கள்.

8. பணி - திருப்பணிகள். திருத்தன் - தீர்த்தன். ஆடல் - மூழ்குதல்.

9. திருத்தம் - தீர்த்தம். சிவபெருமான் காசிப்பதியிற் கங்கை வடிவமாக நின்று மரிக்கும் உயிர்களுக்கு முத்தியருளுதலால், 'சிவனுருவாம்... கங்கை' என்றார்.

10. முனி - கௌதம முனிவர். செழியர் தவக்கொழுந்து அனையாள் - தடாதகைப் பிராட்டியார்.

பா-ம்—1 டுவதநிகத்

நன்றன்னை யுடையபெருந் தகைவேந்தர் பெருமான்முன்
சென்றன்ன மெனநின்று செப்புவாள் குறள்வீரற்
கன்றன்னக் குழியினொடு மாறழைத்த வருட்கடலே
இன்றன்னை கடலாட வேண்டினா ளென்றிரந்தாள். 11

தேவிதிரு மொழிகேட்டுத் தென்னவராய் நிலம்புரக்குங்
காவிதிகழ் மணிகண்டர் கடலொன்றோ வெழுகடலுங்
கூவிவர வழைத்துமென வுன்னினார் குணபாலோர்
வாவியிடை யெழுவேறு வண்ணமொடும் வருவனவால். 12

துண்டமதித் திரளனைய சுரிவளைவாய் [1]விடவுதைத்து
வெண்டவள நுரைததும்பச் சுறாவேறு மிசைக்கொட்பத்
தண்டரள மணித்தொகுதி யெடுத்தெறியுந் தரங்கநிரை
அண்டநெடு முகடுரிஞ்ச வார்த்தெழுந்த கடலேழும். 13

காணுமா நகர்பனிப்பக் கலிமுடிவி னயன்படைப்புக்
கோணுமா றெழுந்ததெனக் கொதித்தெழுந்த கடலரவம்
பூணுநா யகனகில புவனமெலாங் கடந்ததிரு
ஆணையா லவனடிசென் றடைந்தார்போ லடங்கியதால். 14

தன்வண்ண மெழுகடலின் றனிவண்ண மொடுகலந்து
பொன்வண்ண நறும்பொகுட்டுப் பூம்பொய்கை பொலிவெய்தி
மின்வண்ணச் சடைதாழ [2]வெள்ளிமணி மன்றாடும்
மன்வண்ண மெனவெட்டு வண்ணமொடும் வயங்கியதால். 15

ஆகச் செய்யுள்—890

---

11. தன்றன்னை - தன் + தன்னை. குறள்வீரன் - குண்டோதரன்.

12. காவி - நீலோற்பலம். குணபால் ஓர்வாவி - பொற்றாமரைத் தீர்த்தம். வேறு - வெவ்வேறு வகைப்பட்ட. வண்ணம் - நிறம்.

13. சுரி - சுரிந்த முகத்தையுடைய கொட்ப - சுழல.

14. பனிப்ப - வருந்த. கலி - கலியுகம். ஆணை - கட்டளை.

15. தன்வண்ணம் - பொற்றாமரைத் தீர்த்தத்தின் நிறமாகிய வெண்மை நிறம். சிவபெருமான் அட்ட மூர்த்தியாக நிற்குங்கால், மண், நீர், தீ, காற்று, ஆகாயம், சூரியன், சந்திரன், ஆன்மா முறையே, பொன்னிறம், வெண்ணிறம், செந்நிறம், கருமை நிறம், புகை நிறம், சுக்கில் நிறம், இரத்த நிறம், படிக நிறம் ஆகிய நிறங்களைப் பெற்று நிற்பதால் 'மன்றாடும் மன் வண்ணம்' என்றார்.

பா-ம்—1 விடவுதைந்து. 2 வெள்ளி மன்றா ணடமாடும்.

# 10. மலயத்துவசனை யழைத்த படலம்

—c—

எழுகட லழைத்தவா றியம்பி னுமினிச்
செழுமதி மரபினோன் சேணி னிந்துதன்
பழுதில்கற் பில்லொடும் பரவை தோய்ந்தரன்
அழகிய திருவுரு வடைந்த தோதுவாம். 1

புரவலன் தடாதகைப் பூவை யோடும்வந்
துரவுநீர்க் கடன்மருங் குடுத்த சந்தனம்
மரவமந் தாரமா வகுளம் பாடலம்
விரவுநந் தனத்தரி யணையின் மேவினான். 2

தாதவிழ் மல்லிகை முல்லை சண்பகப்
போதுகொய் திளையருஞ் சேடிப் பொற்றொடி
[1]மாதருங் கொடுத்திட வாங்கி மோந்துயிர்த்
தாதர மிரண்டற வமரு மெல்லையில். 3

தன்னமர் காதலி தன்னை நோக்கியே
மன்னவ னுன்பொருட் டேழு வாரியும்
இந்நக ரழைத்தன மீண்டுப் போந்துநின்
அன்னையை யாடுவா னழைத்தி யாலென. 4

மடந்தையு மன்னையைக் கொணர்ந்து வாவிமா
டடைந்தன ளாகமற் றவள்பு ராணநூற்
படர்ந்தகேள் வியர்தமை நோக்கிப் பௌவநீர்
குடைந்திடும் விதியெவன் கூறு மென்னவே. 5

---

1. செழுமதி மரபினோன் - மலயத்துவசன். சேண் - விண்ணுலகம். பரவை தோய்ந்து - கடலாடி.

2. புரவலன் - சவுந்தர பாண்டியன். உரவு - வலிமை. மரவம் - குங்குமம். வகுளம் - மகிழ். பாடலம் - பாதிரி. நந்தனம் - நந்தவனம்.

3. இளையர் - (ஏவல் வழி நிற்கும்) மங்கையர். பொன் தொடி சேடி மாதர் - தோழிப் பெண்கள். ஆதரம் - அன்பு.

4. காதலி - இங்குத் தடாதகைப் பிராட்டியார். வாரி - கடல்.

5. கொணர்ந்து - அழைத்து வந்து. கொணு : பகுதி. புராணநூல் படர்ந்த கேள்வியர் - முனிவர்கள்.

பா-ம்—1 மாதருந் தொடுத்திட.

கோதறு கற்பினாய் கொழுநன் கைத்தலங்
காதலன் கைத்தல மன்றிக் கன்றின்வால்
ஆதலிம் மூன்றிலொன் றங்கை பற்றியே
ஓதநீ ராடுதன் மரபென் றோதினார். 6

மறையவர் வாய்மைபொன் மாலை கேட்டுமேற்
குறைவறத் தவஞ்செயாக் கொடிய பாவியேற்
கிறைவனுஞ் சிறுவனு மில்லை யேயினிப்
பெறுவது கன்றலாற் பிறிதுண் டாகுமோ. 7

ஆதலாற் கன்றின்வால் பற்றி யாடுகோ
மாதரா யென்றுதன் மகட்குக் கூறலும்
வேதன்மால் பதவியும் வேண்டி னார்க்கருள்
நாதனா ருயிர்த்துணை யாய நாயகி. 8

தன்னுயிர்க் கிழவனை யடைந்து தாழ்ந்துதன்
அன்னைதன் குறையுரை யாட வாண்டகை
மன்னவன் வலாரியோ டொருங்கு வைகிய
தென்னவன் மேன்மனஞ் செலுத்தி னானரோ. 9

சிலையத் திரியார் திருவுள் ளமுணர்ந்
தலையத் திரியட் டவனா தனநீத்
துலையத் திரியொத் தவிமா னமொடு
மலையத் துவசச் செழியன் வருமால். 10

மண்பே றடைவான் வருமேழ் கடல்வாய்
எண்பே றடையா வருளின் னமுதைப்

---

6. கொழுநன் - கணவன். காதலன் - புதல்வன். கன்று - ஆன் கன்று; காளை.

7. மறையவர் - முனிவர்கள். இறைவன் - கணவன். கன்று - கன்றின் வால்.

8. ஆடுகோ - (கடல்) ஆடுவேனோ. ஆடு - பகுதி.

9. ஆண்டகை மன்னவன் - சவுந்திரபாண்டியர். வலாரி - இந்திரன். வைகிய - வீற்றிருந்த.

10. சிலையத்திரியார் - அத்திரிச்சிலையார் - மேருமலையை வில்லாக உடைய சிவன். அலையத்திரியட்டவன் - பறக்கின்ற மலைகளை வென்ற இந்திரன். உலையத்திரி - சஞ்சரிக்கின்ற மலை, (கொல்லன்) உலைமூக்கிலுள்ள துருத்தி எனினுமாம். (அத்திரி - துருத்தி).

பா-ம்—1 பாவியேற்.

பெண்பே றதனாற் பெறுபே றிதெனக்
கண்பே றடைவா னெதிர்கண் டனனே. 11

வந்தான் மருகன் சரணம் பணிவான்
முந்தா முனமா மனெனும் முறையால்
அந்தா மரையங் கையமைத் துமகட்
டந்தா னையெதிர்ந் துதழீஇ யினனால். 12

ஆத்தன் றிருவுள் ளமகிழ்ந் தருளாற்
பார்த்தன் புகிரம் பியபன் னியொடுந்
தீர்த்தம் புகுந்தா டியசெல் கவெனப்
பூத்தண் பொருநைப் புனனா டவனும். 13

முன்னைத் தவமெய் திமுயன் றுபெறும்
அன்னப் பெடையன் னவள்வந் தெதிரே
தன்னைத் தழுவத் தழுவிக் கிரிவேந்
தென்னக் குறையா மகிழ்வெய் தினனே. 14

தண்டே மொழிவேள் விதவக் குறையாற்
கண்டே னிலனென் றுகருத் தவலம்
உண்டே யஃதிவ் வுவகைக் களிதேன்
வண்டே யெனவுண் டுமறந் தனனால். 15

சேணுற் றவனைச் சிலநாள் கழியக்
காணுற் றவள்போ னிறைகற் புடையாள்

---

11. பேறு - பயன். என் பேறு - அளவிறந்தது. இன் அமுது இனிய அமுதம் போன்ற தன் மருகர்.

12. முாமன் - மாமனார். மகள் தந்தானை - மகட் கொடை அளித்த மலயத்துவச பாண்டியனை.

13. ஆத்தன் - சிவபெருமானாகிய சவுந்திர பாண்டியர். பொருநைப் புனல்நாடன் - மலயத்துவச பாண்டியன்.

14. அன்னப்பெடை அன்னவள் - தடாதகைப் பிராட்டியார். கிரிவேந்து - மலையரசன்.

15. வேள்வி – திருமணம். கருத்து - (என்) மனத்தில். அவலம் - கவலை.

16. சேண் - தூரதேசம். நிறைகற்புடையாள் - காஞ்சனமாலையார். பூண் உற்று மலர்ந்ததோர் பொற்கொடி - திருமங்கல சூத்திர முதலிய ஆபரணங்களைப் பொருந்திய மலர்ந்த மின்னற்கொடி: இஃது இல்பொருளுவமை அணி.

பூணுற் றுமலர்ந் ததொர்பொற் கொடிபோல்
நாணுற் றெதிர்நண் ணியிறைஞ் சினளால். 16

மஞ்சோ தியகாஞ் சனமா லைகையிற்
பைஞ்சோ திவிளங் குபவித் திரையாய்ச்
செஞ்சோ திமுடிச் சிவநா மவெழுத்
தஞ்சோ திநெடுங் கடலா டுமரோ. 17

துங்கக் கலைவே தியர்தொன் மறைநூற்
சங்கற் பவிதிப் படிதன் றுணைகை
அங்கைத் தளிர்பற் றியகத் துவகை
பொங்கப் புணரிப் புனலா டினளே. 18

குடைந்தார் கரையே றினர்கொன் றைமுடி
மிடைந்தார் கருணைக் கண்விழிக் கமலம்
உடைந்தா ரனைமா ருதரங் குறுகா
தடைந்தா ருமைபா கரருட் படிவம். 19

ஒண்கொண் டன்மிடற் றொளியும் மொருநால்
எண்கொண் டபுயத் தெழிலும் மழல்சேர்
கண்கொண் டநுதற் கவினும் பொலியா
மண்கண் டுவியப் ப[1]வயங் கினனால். 20

விண்ணின் றுவழுக் கிவிழுங் கதிர்போற்
கண்ணின் றநுதற் கருணா கரன்வாழ்
எண்ணின் றபுரத் தினிழிந் திமையா
மண்ணின் றதொர்தெய் வவிமா னமரோ. 21

---

17. மஞ்சு - மேகம். ஓதி - கூந்தல். பைஞ்சோதி - பசியகிரணம். பவித்திரை - பவித்திரமுடையவள். பைஞ்சோதி பவித்திரம் - தருப்பைப் பவித்திரம்.

18. தன் துணை - தனது துணைவனாகிய மலயத்துவச பாண்டியன்.

19. மிடைந்தார் - தரித்தவர்; சிவன். உடைந்தார் - (பாசம்) ஒழிந்தார். உதரம் - கருப்பத்தில். அருட்படிவம் - சிவ சாரூப்பியம்.

20. எழில் - எழுச்சி - உடம்பின் வளர்ச்சி. வயங்கினன் - (மலயத்துவச பாண்டியன்) விளங்கினான்.

21. கதிர் - சூரியன். கண் - இங்கு மேனோக்கிய கண்; நெற்றிக் கண். எண் நின்றபுரம் - (திருமால் முதலியோர்) எண்ணத்தில் நிலைபெற்று நின்ற சிவபுரம்; மதிக்கத்தக்க சிவபுரமுமாம்.

பா-ம்—1 வயங்கினரால்.

அத்தெய் வவிமா னமடுத் திடலும்
முத்தெய் வதமுக் கணவன் பணியால்
நத்தெய் வதருக் கரனங் கையொடும்
எத்தெய் வதமுந் தொழவே றினனால். 22

தேமா ரியெனும் படிசிந் தநறும்
பூமா ரிபொழிந் ததுபொன் னுலகந்
தூமா மறையந் தரதுந் துபிகார்
ஆமா மெனவெங் குமதிர்ந் தனவால். 23

எழுந்தது விமானம் வான மெழுந்ததுந் துபியு நாணி
விழுந்தது போலு மென்ன வரவொலி யெங்கும் விம்மத்
தொழுந்தகை முனிவ ரேத்தச் [1]சுராதிகள் பரவத் திங்கட்
கொழுந்தணி வேணிக் கூத்தர் கோநகர் குறித்துச் செல்வார். 24

[2]முன்புதம் முருவாய் வைய முறைபுரி கோல்கைக் கொண்டு
[3]பின்புதம் முருவந் தந்த மருகனும் பெருகு கேண்மை
அன்புதந் தருகு நின்ற தடாதகை யணங்கு மீண்டு
பொன்புனை குடுமிக் கோயில் புகுந்துநன் கிருப்பக் கண்டார். 25

முன்னைவல் வினையால் யாக்கை முறைதடு மாறித் தோற்றம்
மன்னிய மனிதர் போலப் பண்டைய வடிவ மாறி
அன்னையே மகளா வீன்ற வப்பனே மருக னுக்
என்னயா நோற்றே மியார்க்கு மியற்றருந் தவந்தா னென்னு. 26

கன்றக லான்போ லையன் கனைகழல் விடாது பற்றி
ஒன்றிய வன்பு பின்னின் றீர்த்தெழ வுள்ளத் தோடுஞ்

---

22. முத்தெய்வதம் - சூரியன், சந்திரன், அக்கினி என்னும் மூன்று தெய்வங்கள். ந - சிறந்த. தெய்வ தருக்கரன் - தெய்வத் தன்மை பொருந்திய கற்பகம் போன்ற கையையுடைய மலயத்துவச பாண்டியன்.

23. தேமாரி - இனிய மழை. கார் - காளமேகம்.

24. அர ஒலி - அரகர என்னும் பேரொலி. சுராதிகள் - தேவர் முதலியோர். கோநகர் - சிவபுரம்.

25. முன்பு தம் உருவம் - பாண்டியர் திருவுருவம். பின்பு தம் உருவம் - சிவசாருப்பியம். குடுமி - சிகரம்.

26. முறைதடுமாறி - பிறப்பு முறை மாறி மாறி. பண்டைய வடிவம் - சத்தியும் சிவமும்.

பா-ம் - 1 சுராதிபர். 2 முன்புதன்னு. பின்புதன்னு.

சென்றிரு கண்ணு முட்டி யடிக்கடி திரும்பி நோக்கக்
குன்றுறழ் விமானந் தன்னை யஞ்சலி கூப்பிச் செல்வார். 27

புவலோகங் கடந்துபோய்ப் புண்ணியருக் கெண்ணிறந்த
போக மூட்டுஞ், சுவலோகங் கடந்துபோய் மகலோகஞ் சனலோ
கந் துறந்து மேலைத், தவலோகங் கடந்துபோய்ச் சத்தியலோ
கங்கடந்து தண்டு மூரயோன், நவலோகங் கடந்துலக நாயகமாஞ்
சிவலோக நண்ணி னாரே. 28

அறக்கொடிபின் னிறைமகனை யடிபணிந்து தனையீன்றார்க்
காதி வேத, மறைப்பொருடன் வடிவளித்த வருளின்மன நிறை
மகிழ்ச்சி வாய்கொள் ளாமற், புறப்படுவ தெனவிரண்டு திருச்
செவிக்குஞ் செங்குமுதம் பொதிந்த தீந்தேன், நிறைப்பதெனப்
பன்முறையாற் றுதிசெய்து தொழுதொன்று நிகழ்த்தா
நின்றாள். 29

எண்ணிறந்த தேவர்க்கும் யாவர்க்கும் பயன்சுரக்கு [1]மிமை
யோர் நாட்டுப், புண்ணியவான் றன்புனிற்றுக் கன்றுக்குக் குறை
வேதென் பொருட்டென் னீன்றாள், எண்ணியது கடலொன்றே
யெழுகடலு மீண்டழைத்தா யின்று ளாட, விண்ணிருந்த கண
வனையும் விளித்துனருள் வடிவளித்துன் மேனு டைந்தாய். 30

---

27. ஆன் - பசு. ஐயன் - சோமசுந்தரக் கடவுள்.

28. புவலோகம் - சந்திர சூரியர் முதலியோர் வசிக்கும் பதம். சுவலோகம் - இந்திரனிருக்கும் பதம். மகலோகம் - இருடிகள் சித்தர்கள் வசிக்கும் பதம். சனலோகம் - பிதிர் தேவர்கள் முதலியோர் இருக்கும் பதம். தவலோகம் - சனகர், சனந்தனர் முதலியோர் தவஞ் செய்யும் பதம். சத்தியலோகம் - பிரமதேவன் இருக்கும் பதம். நவலோகம் - திருமால் வசிக்கும் பதம். சிவலோகம் - உமாதேவியாரோடு சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் பதம்.

இவை எட்டும் முறையே பதினைந்து லட்சம், எண்பது லட்சம், இரண்டு கோடி, எட்டுக்கோடி, பன்னிரண்டு கோடி, பதினாறு கோடி, நாலு கோடி, ஆறு கோடி யோசனை உயரமுள்ளன என்று சிவதருமோத்திரம் கூறுகின்றது.

29. அறக்கொடி - தரும வடிவாகிய தடாதகைப்பிராட்டியார்.

30. புண்ணிய ஆன் - புண்ணிய வடிவமாகிய காமதேனு. புனிறு - இளமை. அருள் வடிவு - சிவ சாருப்பியம்.

பா-ம்—1 மிமையார நாட்டப்.

தென்னர்மர பிறந்ததெனப் படுபழியி லாழவருஞ் செவ்வி நோக்கிப், பொன்னவிர்தார் முடிபுனைந்து கோலோச்சி வருகின் றாய் போலு மேலும், இந்நிலைமைக் கிடையூறு மினியின்றே யெனத்தலைவி யியம்ப லோடுந், தன்னிறைவி யுட்கோளை யகங் கொண்டு மகிழ்ந்திருந்தான் தமிழர் கோமான். 31

ஆகச் செய்யுள்—921

---

31. செவ்வி - காலம். உட்கோள் - உட்கிடை ; மனக் கொள்கை. தமிழர் கோமான் - சவுந்தர பாண்டியர்.

# 11. [1] உக்கிரபாண்டியன் திருவவதாரப் படலம்

—o—

மன்ன வன்குல சேகரன் றிருமகன் மனைவி
தன்னொ டுங்கட லாடிய தகுதியீ தந்தத்
தென்ன வன்றனித் திருமக டிருவுளங் களிப்ப
உன்ன ருந்திற லுக்கிர னுதித்தவா றுரைப்பாம். 1

தண்ணிலா மௌலி வேய்ந்த சுந்தர சாமி ஞாலத்
தெண்ணிலா வைக றன்ன திணையடி நிழல்போல் யார்க்குந்
தெண்ணிலாக் கவிகை நீழல் செய்தருட் செங்கோ லோச்சி
உண்ணிலா வுயிர்தா னாகி முறைபுரிந் தொழுகு நாளில். 2

கரியவன் கமலச் செம்மன் மறைமுதற் கலைகள் காண்டற்
கரியவ னன்பர்க் கென்று மெளியவ னாகு மேன்மை
தெரியவன் பகன்ற சிந்தைத் தென்னவன் றனக்குங் கற்பிற்
குரியவ டனக்குங் காதன் மகனென வுமையைத் தந்தான். 3

மற்றதற் கிசையத் தானு மருமக னாகி வைய
முற்றும்வெண் குடைக்கீழ் வைக முறைசெய்தா னாக மூன்று
கொற்றவர் தம்மிற் றிங்கட் கோக்குடி விழுப்ப மெய்தப்
பெற்றது போலு மின்னும் பெறுவதோர் குறைவு தீர்ப்பான். 4

ஒன்றினைச் செய்கை செய்யா தொழிகைவே றொன்று செய்கை
என்றிவை யுடையோ னாதி யீறிலாப் பரம யோகி
கன்றுதீ திகழ்ச்சி வேட்கை நட்பிகல் விளக்கு மாயை
வென்றவன் செய்யு மாயை விருத்தியா ரளக்க வல்லார். 5

---

1. குலசேகரன் திருமகன் - மலயத்துவச பாண்டியன். உக்கிரன் - உக்கிரகுமார பாண்டியன்.

2. சுந்தர சாமி - சவுந்திர பாண்டியர். எண்ணிலாவைகல் - அறுபத்தாறாயிரம் வருடம். உண்ணிலா - உள்ளே விளங்கும்.

3. கற்பிற்குரியவள் - காஞ்சன மாலையார்.

4. மூன்று கொற்றவர் - சேர சோழ பாண்டியர். திங்கள் கோக்குடி - சந்திரன் வழிவந்த பாண்டியர் மரபு. விழுப்பம் - மேன்மை.

5. ஒன்றினைச் செய்கை - கர்த்திருத்துவம். செய்யாதொழிகை - அகர்த்திருத்துவம். வேறொன்று செய்கை - அந்நியதா கர்த்திருத்துவம். என்றிவையுடையோன் - என்ற இம்மூக்குணங்களையும் ஒருங்கே யுடையவன். இகல் - பகை.

பா-ம்—1 உக்கிர குமார பாண்டியரது. உக்கிர பாண்டிய தேவர்.

இந்திர சால விச்சை காட்டுவா னென்னத் தன்பாற்
செந்தமி ழூட்ட மீன்ற செல்வனைக் கருப்ப மெய்தா
தந்தமி லுயிரு ஞால மனைத்தையு மீன்ற [1]தாயாஞ்
சுந்தர வல்லி தன்பாற் றோன்றுமா றுள்ளஞ் செய்தான். 6

அங்கவன் வரவுக் கேற்ப வாயமும் பிறருந் தாழ்ந்து
மங்கையின் வடிவுக் கேற்பக் கருவுரு வனப்புஞ் சீருந்
திங்கடோ றூற்று மன்றற் செவ்வியுங் காண வாசை
பொங்கிய தெங்கட் கென்றூர் புனிதையப் படிபோ லானாள். 7

கருமணிச் சிகரச் செம்பொற் கனவரை யனைய காட்சித்
திருமுலை யமுதம் பெய்த செப்பிரண் டனைய வாக
வருமுலை சுமந்து மாய்ந்த மருங்குலும் வந்து தோன்ற
அருள்கனிந் தனையா ளைவிற் கின்சுவை யார்வம் பொங்க. 8

என்னவு மெளிய வேனு மரியன வென்ன வேட்டாள்
அன்னவும் போக பூமி யரும்பெற லுணவு நல்கிப்
பன்னக ரமுதுந் திங்கட் படுசுவை யமுதுந் தெய்வப்
பொன்னக ரமுது மாசை புதைபடக் கணங்க ணல்க, 9

புண்ணிய முனிவர் வேத பண்டிதர் போந்து வேந்தர்க்
கண்ணிய சடங்கு மூதா ரருங்கடி வெள்ளத் தாழ
எண்ணிய திங்க டோறு மியற்றவிக் கன்னித் தேயம்
பண்ணிய தருமச் சார்பாற் படுபயன் றலைப்பா டெய்த. 10

---

6. இந்திரசால விச்சை - இந்திரசால வித்தை. சாலம் - வலை. செந்தமிழ் நாட்ட மீன்ற செல்வன் - முருகன். சுந்தரவல்லி - தடாதகைப் பிராட்டியார்.

7. ஆயம் - தோழியர் கூட்டம். மன்றல் செவ்வி - திருவிழாப் பொலிவு; கர்ப்பச் சடங்குகள். புனிதை - தடாதகைப் பிராட்டியார்.

8. கருமணி - நீலமணி; இங்கு முலைக்கண். கனம் - கனகம், பொன். மாய்ந்த - மறைந்த. கனிந்து - கனிந்தாள்.

9. போகபூமி - உத்தரகுரு. இஃது இன்பம் அனுபவிக்குமிடம். பன்னகர் - நாகருலகம்.

10. அண்ணிய - பொருந்திய. சடங்கு - இங்குக் கருப்பாதானம். பும்சவனம். சீமந்தம், விண்டுபலி முதலியன. கடி - திருவிழா. எண்ணிய - மதித்த.

பா-ம்—1 தாரச்.

மாசறத் துறந்தோ ருள்ள மானவான் களங்க நீங்க
ஈசர்தங் கிழமை யென்னு மிந்துவா திரைநாள் செய்த
பூசையின் பயன்று னெய்த வெரிபசும் பொற்கோள் வந்து
தேசொடு கேந்தி ரத்திற் சிறந்தநல் லோரை வாய்ப்ப. 11

முந்தைநான் மறைக டாமே முழங்கமந் தார மாரி
சிந்தநாண் மலர்பூத் தாடு மின்னெனத் திசைக டோறும்
அந்தர மகளி ராடத் துந்துபி யைந்து மார்ப்ப
விந்தையுந் திருவும் வெள்ளைக் கிழத்தியும் வீறு வாய்ப்ப. 12

அந்தணர் மகிழ்ச்சி தூங்க வடுத்தவர் வளர்க்கு முன்னர்
மந்திர வேள்விச் செந்தீ வலஞ்சுழித் தெழுந்தார்த் தாடச்
சிந்துர நுதன்மா வெட்டுஞ் சேடனும் பொறையெய்ப் பாற
இந்திரன் மேருப் புத்தேள் புனலிறைக் கிடத்தோ ளாட. 13

ஆலத்தை யமுத மாக்கு மண்ணலு மணங்குங் கொண்ட
கோலத்துக் கேற்பக் காலைக் குழந்தைவெங் கதிர்போ லற்றைக்
காலத்தி லுதித்த சேய்போற் கண்மழை பிலிற்று நிம்ப
மாலைத்தோட் செழியன் செல்வ மகள்வயிற் றேன்றி னனே. 14

எடுத்தனண் மோந்து புல்லி யேந்தினள் காந்தன் கையிற்
கொடுத்தனள் வாங்கி வீங்கு கொங்கைநின் றிழிபால் வெள்ளம்
விடுத்தனள் குமுதப் போதில் வெண்ணிலா வெள்ளம் போல்வாய்
மடுத்தன ளருத்தி னுடன் மைந்தனை யெம்பி ராட்டி. 15

சலத்தலைக் கிடக்கைப் புத்தே டருநிழல் வாழ்க்கைப் புத்தேள்
அலர்த்தலை யிருக்கைப் புத்தே ளாதிப்புத் தேளிர் வேதப்

---

11. ஈசர் தம் கிழமை என்னும் இந்து - சோமவாரம்; திங்கட் கிழமை. எரி பசும் பொற்கோள் - வியாழன்; குரு. கேந்திரம் - இலக்கினத்திற்கு ஒன்று, நான்கு, ஏழு, பத்துஆம் இராசிகள். ஓரை - இலக்கினம்.

12. விந்தை - வீரலட்சுமி. வீறு - இறுமாப்பு.

13. சிந்துர நுதல் மா - சிந்துரம் அணிந்த அட்ட கஜங்கள். பொறை - பாரம். எய்ப்பு - இளைப்பு, புனல் இறை - வருணன்.

14. சேய் - முருகக்கடவுள். கள் - தேன். பிலிற்றும் - பொழியும்.

15. காந்தன் - கணவன். குமுதப்போது - அல்லிமலர்.

16. சலத்தலைக் கிடக்கைப்புத்தேள் - திருமால். தரு நிழல் வாழ்க்கைப்புத்தேள் - இந்திரன். அலர் தலையிருக்கைப் புத்தேள் - பிரமன். புத்தேளிர் - தேவர். வேதப்புலம் - வேதத்தினிடம்.

புலத்தலைக் கேள்வி சான்ற புண்ணிய முனிவ ரேனோர்
குலத்தலை மகளி ரோடுங் கோமகன் கோயில் புக்கார். 16

குடபுலத் தரசும் பொன்னிக் குளிர்புனற் கோழி வேந்தும்
வடபுலத் தரசர் யாருங் குறுநில வாழ்க்கைச் செல்வத்
தடல்கெழு தொண்டைத் தண்டா ரரசொடு மனிகஞ் சூழக்
கடல்கணற் றிசையும் பொங்கி வருவபோற் கலிப்ப வந்தார். 17

மன்னனைத் தேவி தன்னை முறையினால் வழுத்தி வாழ்த்தி
நன்னர்கோ ளாகி யோகை நவின்றுவெண் மழுமா னீத்த
தென்னவர் பெருமான் றேவி திருமுகக் கருணை பெற்றுப்
பொன்னடி பணிந்து தம்மூர் போகுவா ரினைய சொல்வார். 18

வழுதியர் பெருமான் றன்பாற் கந்தனே வந்தா னென்பார்
பழுதறு கற்பி னுடன் பாக்கிய மிதுவே யென்பார்
அழகினுன் மதனும் பெண்மை யவாவுறு மிவன்கோ லானை
எழுகட லுலகோ வைய மேழையுங் காக்கு மென்பார். 19

மனிதர்வான் றவமோ தென்பார் வைகுவோர் தவமோ வானப்
புனிதர்வான் றவமோ வேள்விப் பூசுரர் தவமோ கேள்வி
முனிவர்வான் றவமோ வீறு முதலிலா முதல்வ னுள்ளக்
கனிதரு கருணை போலிக் காதலன் றோற்ற மென்பார். 20

தருமமா தவத்தின் பேறோ வருத்தமா தவத்தின் பேறோ
பெருமைசால் காம நோற்ற பெருந்தவப் பேறோ வெய்தற்
கருமையாம் வீடு நோற்ற வருந்தவப் பேறோ விந்தத்
திருமக னென்று தம்மில் வியைம்மகிழ் சிறப்பச் சென்றார். 21

---

17. குடபுலத்தரசு - சேரன். பொன்னி - காவிரி. கோழி - உறையூர். கோழி வேந்தன் - சோழன். தொண்டை - தொண்டை நாடு. கலித்தல் - ஒலித்தல்.

18. வழுத்தி - துதித்து. வாழ்த்தி - பல்லாண்டு முதலியன கூறி. நன்னர் கோளாகி - (வழுத்தலும் வாழ்த்தலுமாகிய) நல்ல கொள்கையையுடையராய்; நன்கு ஏற்றுக்கொள்ளப்பட்டவர்களாய் என்றனுமாம். ஓகை - மகிழ்ச்சி மொழிகள்.

19. வழுதியர் - தென்னாட்டவர். மதன் - மன் மதன். கோல் - செங்கோல்.

20. தென்பார் - பாண்டிநாடு. பூசுரர் - அந்தணர்.

21. அருத்தம் - பொருள். திருமகன் - உக்கிரகுமார பாண்டியன்.

அவ்வவர் மனைக டோறு மங்கல வணிக ளாகக்
கௌவைமங் கலங்க [1]ளார்ப்பக் கடிநக ரெங்கும் பொங்க
நெய்விழா வெடுப்பக் கேள்வி நிரம்பிய மறையோர்க் கீந்த
தெய்வமா தான நீத்தந் திரைக்கடல் மடுத்த தம்மா. 22

கன்னலும் பொரியுந் தூவெள் ளரிசியுந் தூர்வைக் காடுந்
தன்னறுஞ் சிவிறி வீசு தண்பனி நீருஞ் சாந்தும்
எண்ணெயு நானச் சேறும் பசையற வெடுத்து வாரிக்
[2]கண்ணக னகர மெங்குங் கழுவின தான வெள்ளம். 23

செம்பொன்செய் துருத்தி தூம்பு செய்குழல் வட்ட மாக
அம்பொன்செய் சிவிறி வெண்பொ னன்னடைகொண் டாரத் தூவும்
வம்பஞ்சு மூழ்லியி னாரு மைந்தரு மாறி யாட
அம்பஞ்சு மாறி மாறி யனங்கனு மாடல் செய்வான். 24

இன்னணங் களிப்ப மூதூ ரிந்துவா திரைநன் னாளிற்
பொன்னவன் கேந்தி ரித்த புனிதலக் கினத்திற் போந்த
தென்னவர் பெருமான் சேய்க்குச் சாதகச் செய்தி யாதி
மன்னவர்க் கியன்ற வேத மரபினால் வயங்க வாற்றி. 25

கரியவெண் டிரைநீர்ச் செல்வன் கல்விற கரிந்த வென்றித்
தெரியல னுலகந் தாங்கு தெய்வத வரைக்கோ னுதித்
தரியலர் வீரஞ் சிந்தத் தருக்கழித் தச்சந் தோற்றற்
குரியகா ரணத்தா னும முக்கிர வருமனென்பார். 26

---

22. கௌவை மங்கலம் - ஒலியையுடைய மங்கல வாச்சியங்கள். நெய்விழா - எண்ணெய் ஆட்டு.

23. தூர்வைக்காடு - அறுகம்புல்லின் குப்பை. தானவெள்ளம் - தான நீர்ப்பெருக்கு; யானை மத நீர்ப்பெருக்குமாம்.

24. தூம்பு - தொளை. சிவிறி - நெடுந்துருத்தி. அன்னடை - நீர் தூவும் ஒருவகைக் கருவி. அனங்கன் - மன்மதன். துருத்தி குழல், சிவிறி, அன்னடை - இவை ஒவ்வொரு வகையாக நீர் தூவும் கருவிகள்.

25. மூதூர் - மதுரை. பொன்னவன் - குரு. கேந்திரித்த - கேந்திரத்தான மடைந்த. சாதகச் செய்தி - குழந்தை பிறந்தபின் செய்யும் ஒருகிரியை. ஆதி என்றதனால் உத்தாபனக்கிரியையும் கொள்க. (உத்தாபனம் - அசுத்தமாகிய அறை விட்டினின்று சுத்தமாகிய உயர்ந்த இடத்தில் குழந்தையைச் சேர்ப்பிக்கும் கிரியை.)

26. வருமன், வர்மா என்பது அரசர்க்குரிய சிறப்புப்பெயர்.

பா-ம்—1 ளாரிப்பக். 2 கண்ணகக் குரமெங்கும்.

நாலாகு மதியிற் சந்தி மிதிப்பது நடாத்தி யாரும்
பாலாகு மதியி லன்ன மங்கலம் பயிற்றி யாண்டின்
மேலாகு மதியிற் கேச வினைமுடித் தைந்தா மாண்டின்
நூலாறு தெரிந்து பூணு நாற்கடி முடித்துப் பின்னர். 27

பத நிரை பாழி சாகை யாரணம் பணைத்த வேத
முதனிரைக் கலையும் வென்றி மூரிவிற் கலையும் வாளும்
மதநிரை யொழுகு மையன் மாநிரை வையம் பாய்மா
விதநிரை பெற்ற மற்று முணர்த்தினன் வியாழப் புத்தேள். 28

குருமுகத் தறிய வேண்டு மென்பதோர் கொள்கை யாலே
ஒருமுறை கேட்டாங் கெண்ணெண் கலைகளு மொருங்கு தேறி
அரனல தொருவ ராலுந் தேற்றுவ தருமை யாலப்
பரனிடைத் தெளிந்தான் பாசு பதாத்திரப் படையு மன்னோ. 29

எல்லையில் கலைக ளெல்லா மகவைநா லிரண்டின் முற்றத்
தொல்லறி வுடைய னாகிக் குரவரைத் தொழுது போற்ற
வல்லவ னாகி யன்னார் மகிழ்ச்சிகொள் கலனும் வென்றிச்
செல்வவேற் றிளைய ரேறுந் திருவிளை யாடல் செய்வான். 30

---

27. சந்திமிதித்தல் - குழந்தையை ஆலயத்திற்குக் கொண்டு போதலாகிய பிரவேசக்கிரியை. அன்னமங்கலம் - சோறூட்டுங்கிரியை. கேசவினை - மயிர்வினை செய்யுங்கிரியை சௌளம். பூணுநூற்கடி - உபநயனக்கிரியை.

28. பதநிரைபாழி.........கலை - வேதபாகங்களை அத்தியயனஞ் செய்ய ஆரம்பிக்குங்கிரியை; காண்டோபாக்கிரமணக்கிரியை. பதம் - வாசகம். நிரை - பூர்வ பூர்வ பதத்தை அநுசரித்து உத்தரோத்தர பதத்தை உச்சரிக்கும் க்ரமம். பாழி - இரண்டு பதத்தை எடுத்துக் கொண்டு பூர்வ பதத்தை ஒருமுறை யுச்சரித்து உத்தரபதத்தை இரண்டு முறை யுச்சரித்து, மீட்டும் பூர்வபதத்தை இரண்டுமுறை யுச்சரித்து உத்தரபதத்தை ஒருமுறை யுச்சரிக்குஞ் சடை. சாகை - சத்தகாண்டத்தின் வேறுபுள்ளது. ஆரணம் - அச்சாகையில் பத்துப்பிரச்சினங் கொண்டுடையது. பணைத்த - இவ்வுறுப்புக்களால் நிரம்பிய வேதமுதல் நிரைக்கலை - மந்திரம் வியாகரணம், நிகண்டு, சந்தோவிசிதம், நிருத்தம், சோதிடம் என்ற ஆறங்க. வையம் - தேர். பாய்மா - குதிரை.

29. எண்ணெண்கலை - அறுபத்துநான்கு கலைகள்.

30. அகவை - வயது. மகிழ்ச்சி கொள்கலன் - மகிழ்ச்சிக்கோர் பாத்திரம்.

புகர்மத வேழ [1]முட்டிப் போர்வினை யாடி வென்றுந்
தகரொடு தகரைத் தாக்கித் தருக்கம ராடி வென்றும்
வகிர்படு குருதிச் சூட்டு வாரண மாடி வென்றும்
நகைமணிப் பலகை செம்பொ னான்குறுப் பாடி வென்றும். 31

காற்றினுங் கடிய மாவிற் காவதம் பலபோய் மீண்டுங்
கூற்றினுங் கொடிய சீற்றக் குஞ்சர முகைத்தும் வைகை
யாற்றினும் யானத் தாவி யகத்தினு மின்பந் துய்த்தும்
வெற்றிறன் மைந்த ரோடு மல்லமர் விளைத்து வென்றும். 32

சந்தவெற் படைந்து வேட்டஞ் செய்துமச் சைல வாழ்க்கை
அந்தண ராசி கூற வவர்தொழில் வினவு மன்னூர்
கந்தமென் கனி[2]வி ருந்தாண் கைதழீஇக் களித்து மீண்டும்
இந்தவா றைம்மூ வாண்டு கழியமே லெய்து மாண்டில். 33

சூர்முத றடிந்த தங்க டோன்றலே யிவனென் றெண்ணிக்
கார்முக மயிலும் வேலுங் கைவிடாக் காக்கு மாபோல்
வார்முக முலையி னாரும் வடிக்கணு மருங்கு மொய்ப்பக்
கூர்முக வேலா னின்ன கொள்கைய னாகத் தாதை. 34

பங்கயச் செவ்வித் தாகிக் கண்மனம் பருகு காந்தி
அங்கழற் காலுஞ் சொன்ன வடைவினிற் றிரண்டு நீண்ட
[3]சங்கமும் வட்டந் தோன்றுச் செழுமுழந் தாளு நால்வாய்த்
துங்கவீர்ங் கவுண்மால் யானைத் துதிக்கைபோற் றிரள்க வானும்.

---

31. புகர் - புள்ளி. தகர் - ஆட்டுக்கடா. வகிர் - பிளவு. வாரணம் - சேவல். நான்கு உறுப்பு ஆடி - சதுரங்க உறுப்புக்களைத் தொட்டு விளையாடி.

32. மா - குதிரை. காவதம் - காதம்; அது நாலுகூப்பிடுகொண்ட தூரம். ஆவி - பொய்கை.

33. சந்தவெற்பு - பொதியமலை. சைலம் - மலை. கந்தம் - கிழங்கு. விருந்து - விருந்து : வலித்தல் விகாரம். கைதழீஇ - கைக்கொண்டு.

34. சூர் - சூரபன்மன். தோன்றல் - சண்முகக்கடவுள். மருங்கு - பக்கம்.

35. செவ்வித்து - அழகினையுடையது. சொன்ன அடைவு - சாமுத்திரிகை நூலிற் கூறிய முறையே. சங்கம் - கணைக்கால். கவான் - தொடை.

பாடம்—1 முட்டியும். 2 விருந்துண். 3 சங்கையும். (சங்கை - கணைக்கால்.)

சிறுகிய வயிறுந் தாழ்ந்த நாபியுஞ் செவ்வி நோக்கும்
மறுவில்கண் ணடியி னன்ன கடியகல் வரைகொண் மார்பும்
எறியிசை வீணைத் தண்டி னிணைத்துநீண் டுருண்ட கையும்
வெறியதார் கிடந்த மேரு வெற்பிரண் டனைய தோளும். 36

வலம்புரி யென்ன வாய்ந்த கண்டமு மலரான் மன்னும்
பொலம்புரி கமல மன்ன வதனமும் பொதுவா நோக்கி
நிலம்புரி தவப்பே றன்னான் வடிவெலா நின்று நின்று
நலம்புரி நூலா நோக்கிச் சோதிப்பா னடிக்க வல்லான். 37

உன்னத மாறு நீண்ட வுறுப்பைந்து குக்கந் தானும்
அன்னது குறுக்க நான்கா மகலுறுப் பிரண்டே யாகச்
சொன்னது சிவப்பு மூன்று கம்பீரந் தொகுத்த வாறே
இன்னவை விரிக்கி னெண்ணூன் இலக்கண வுறுப்பா மென்ப. 38

வயிறுதோ ணெற்றி நாசி மார்புகை யடியில் வாறும்
உயரில்வான் செல்வ னுரு மொளிகவர் கண்க போலம்
புயல்புரை வள்ளற் செங்கை புதுமணங் கவருந் துண்டம்
வியன்முலை நடுமார் பைந்து நீண்டவேல் விளக்கு நன்மை. 39

நறியபூங் குஞ்சி தொக்கு விரற்கணு நகம்பல் லைந்துஞ்
சிறியவே லாயுள் கோசஞ் [1]சங்கா முதுகி னான்கும்
குறியவேற் பாக்கி யப்பே றுஞ்சிரங் குளமென் றுய்ந்தோர்
அறியுமில் வுறுப்பி ரண்டு மகன்றவே வதுவு நன்றாம். 40

அகவடி யங்கை நாட்டக் கடையிதழ் முன்னை நாக்கு
நகமிவை யெழுஞ் சேந்த நன்மையாற் பெறுமா லின்பம்

---

36. கடி - விளக்கம். வரைகொண் மார்பு - (மூன்று) வரிகளைத் தன்னிடத்தே கொண்ட மார்பு; மலையை ஒத்த மார்புமாம்.

37. நின்று நின்று நோக்கி - உற்றுப்பார்த்து. நலம்புரி நூல் - சாமுத்திரிகை நூல்.

38. குக்கம் - சிறிய உறுப்புக்கள். அன்னது - அவ்வளவு. கம்பீரம் - ஆழம்.

39. உயரில் - உயர்ந்திருக்கில். துண்டம் - மூக்கு. நீண்டவேல் - நீண்டிருக்கில்.

40. குஞ்சி - சிகை. தொக்கு - தோல். கோசம் - ஆண்குறி. குளம் - நெற்றி.

பா-ம் - 1 சங்கைநா.

இகல்வலி யோசை நாபி யென்றிவை மூன்று மாழ்ந்த
தகைமையா லெவர்க்கு மேலா நன்மைசா றக்கோ னென்ன. 41

எல்லையின் மூர்த்தி மைந்த னிலக்கண நிறைவி னோடு
நல்லவாங் குணனு நோக்கிப் பொதுவற ஞாலங் காக்க
வல்லவ னாகி வாழ்நா ளனிபெற வல்ல னென்னு
அல்லணி மிடற்றான் பின்னு மனத்தினு ளளந்து சூழும். 42

இத்தகு பண்பு சான்ற சீர்மையா னிசைமை நீதி
வித்தக நல்ல வுள்ள முடைமைமெய் வீறு தெய்வ
பத்திமை யுலகுக் கெல்லா மகிழ்ச்சிசெய் பண்பு சாந்த
சித்தமெவ் வுயிர்க்கு மன்பு செய்கைநல் லீகை கல்வி. 43

வெல்லுதற் கரியார் தம்மை வெல்லுத றேவ ராலுஞ்
செல்லுதற் கரிய தேத்துஞ் சென்றிடு திறையுங் கோடல்
புல்லுதற் கரிய ஞால மாலைபோற் புயத்தி லேந்திச்
சொல்லுதற் கரிய [1]சீர்த்தி யுலகெலாஞ் சுமப்ப வைத்தல். 44

என்றிவை யாதி யாய வியற்குண முடைய னாகி
நன்றிசெய் துலகுக் கெல்லா நாயக னொருவ னாகி
நின்றிடு மிவற்குப் பின்னர் நீண்முடி கவித்து முன்னர்
மன்றல்செய் கென்று சூழ்ந்து மதிஞரோ டுசாவி னானே. 45

ஆகச் செய்யுள்—966

---

41. அகலடி - உள்ளங்கால். அங்கை - உள்ளங்கை. இறும் - [illegible]. அண்ணம் - மேல்வாய். இகல்வலி - மார்பு. ஓசை - கழுத்து. வலி, ஓசை : ஆகுபெயர்கள்.

42. எல்லையின்மூர்த்தி - சவுந்தரபாண்டியர். வாழ்நாள் - ஆயுள்.

43. இசைமை - புகழ். வித்தகம் - சதுரப்பாடு. வீறு - பிறிதின்மை.

44. தேத்தும் - தேயங்களிலும். திறை - கப்பம். கீர்த்தி - வெற்றியால் வரும் புகழ்ச்சி.

45. இயல் - இயற்கை. செய்கென்று - செய்வோமென்று. மதிஞர் - (சுமதி முதலிய) அமைச்சர்.

பாடம்—1 கீர்த்தி, வீரம்.

# 12. [1]உக்கிரபாண்டியனுக்கு வேல் வளை செண்டு கொடுத்த படலம்

—o—

உருக்குந் திறலுக் கிரகுமா ருதய மிதுவான் மதியுகதிப்.
பெருக்குங் கரந்த சடைக்கற்றைப் பெருந்தேர்ச் செழியர் பிரான
வற்குச், செருக்குஞ் செல்வ மணமுடித்துச் செவ்வேல் வளைசெண்
டளித்துள்ளங், தருக்கு முடிதந் தரசுரிமை தந்த செயலுஞ்
சாற்றுவாம். 1

வையைக் கிழவன் றன்னருமைக் குமரன் றனக்கு மணம்
புணர்ச்சி, செய்யக் கருதுந் திறநோக்கி யறிஞ ரோடுந் திரண்
டமைச்சர், மையற் றழியா நிலத்திருவு மரபுங் குடியும் புகழ்மையு
நம், ஐயற் கிசையத் தக்ககுலத் தரசர் யாரென் றளக்கின்றார். 2

தீந்தண் புனல்சூழ் வடபுலத்து மணவூ ரென்னுந் திரு
நகர்க்கு, வேந்தன் பரிதி திருமரபின் விளங்குஞ் சோம சேகர
னென், றேய்ந்த கேள்வி யவனிடத்துத் திருமா தென்ன வவதரித்த.
காந்தி மதியை மணம்பேச விருந்தா ரற்றைக் கனையிருள்வாய். 3

வெள்ளைக் களிற்றின் பிடர்சுமந்த குடுமிக் கோயின் மேய
விளம், பிள்ளைக் கதிர்வெண் மதிமௌலிப் பெருமா னிரவி
மருமானும், வள்ளற் கரத்தான் கனவிலெழுந் தருளி வானோர்
நனவிற்குங், கள்ளத் துருவாந் திருமேனி காட்டி யிதனை
விளம்புவார். 4

---

1. உதயம் - அவதரித்த வரலாறு. மணம் - திருமணம். வளை - சக்கரம். செண்டு - இங்கு வளைதடி.

2. வையைக்கிழவன் - சவுந்தரபாண்டியன். அளக்கின்றார் - ஆராய்கின்றார்.

3. வடபுலத்து மணவூர் - (மதுரைக்கு) வடக்கிலுள்ள கல்யாண புரம். அற்றை - அந்நாள். கனையிருள் - நடுஇரவு.

4. இரவி மருமானும் வள்ளற் கரத்தான் - சோமசேகர சோழன். மருமான் - வழித்தோன்றல். நனவு - சாக்கிரம். கள்ளத்து - இட்டாது மறையும்.

பா-ம்—1 உக்கிர குமாரனுக்கு.

T—13

அன்ன மிறைகொள் வயன்மதுரைச் சிவன்யா மரச னீயின்ற, பொன்னே யனையா டனைமதுரா புரியிற் கொடுபோய் மறு புலத்து, மன்னர் மகுட மணியிடற மழுங்குங் கழற்காற் சுந் தரனுந், தென்னர் பெருமான் குமரனுக்குக் கொடுத்தி யென்று செப்புதலும். 5

உள்ளக் கமல முககமல முடனே மலர விருதடங்கண், அள்ளற் கமல மலர்ந்தன்ன தங்கைக் கமல முகிழ்ந்தெழுந்து, வள்ளற் பரமன் கருணையெளி வந்த செயலை நினைந்தன்பின், வெள் ளத்தழுந்தி யெழுந்திரவி வேலை முளைக்கும் வேலையினில். 6

நித்த நியமக் கடனிரப்பி நிருப னமைச்ச ரொடுநான்கு, பைத்த கருவிப் படையினொடு பலவே தியருங் கலிப்பத்தன், பொய்த்த மருங்குற் றிருமகளைப் பொன்ன னாரோ டிரதமிசை, வைத்து மணஞ்சேர் திருவினொடு மதுரை நோக்கி வழிக்கொண் டான். 7

நென்ன லெல்லை மணம்பேச நினைந்த வாறே யமைச்சர்மதி, மன்னர் பெருமான் றமரோடு மணவூர் நோக்கி வழிவருவார், அன்ன வேந்தன் றனைக்கண்டா ரடல்வேற் குமர னனையானைத், தென்னர் பெருமான் குமரனுக்குன் றிருவைத் தருதி யெனவனை யான். 8

குலனுங் குடியுங் கனவின்கட் கொன்றை முடியார் வந் துரைத்த, நலனுங் கூறி மணநேர்ந்து நயப்ப வதனை நன்முதி யோர், புலனொன் றுழையர் தமைவிடுத்துப் பொருநைத் துறை வற் குணர்த்திவரு, வலனுந் தயில்வேன் மன்னனொடு மதுரை மூதூர் வந்தணைந்தார். 9

---

5. அன்னம் இறைகொள் - அன்னம் வசிக்கும். பொன்னே அனையாள் - இலக்குமியை ஒத்த காந்திமதி.

6. அள்ளல் - சேறு. வேலை இரண்டனுள் முன்னது கடல்; பின்னது விடியற்காலம்.

7. நிருபன் - சோமசேகர சோழன். பைத்த - பரந்த. பொய்த்த மருங்குல் - பொய் போலும் இல்லாத இடை.

8. நென்னல் எல்லை - நேற்றைப்பொழுது. அன்ன வேந்தன் - சோமசேகர சோழன். அடல் - கொல்லுதல்.

9. புலன் ஒன்று உழையர் - அறிவு சான்ற தூதுவர். வலன் - வெற்றி. அயில் - கூர்மை.

இரவி மருமான் மதிமருமா னெதிரே பணியத் தழீஇமுக மன், பரவி யிருக்கை செலவுய்த்துப் பாண்டி வேந்த னிருந்தான் மேல், விரவி யமைச்சர் திருமுகங்கள் வேந்தர் யார்க்கும் விடுத்து நகர், வரைவு நாள்செய் தணிசெய்ய மற்றன் முரச மறைவித்தார்.

மாடம் புதுக்கிப் பூகதமுங் கதலிக்காடு மறுகெங்கும், நீட நிரைத்துப் பாலிகையு நிறைபொற் குடமு முறைநிறுத்தி, ஆடு கொடியுந் தோரணமும் புனைவித் தழகுக் கழகாகக், கூட நெருங்கு நகரைமணக் கோலம் பெருகக் கொளுத்தினர். 11

தென்ற னாடன் திருமகளைத் தேவர் பெருமான் மணம்புரிய, மன்ற லழகா லொருநகரோப் பதிக மின்றி மதுரைநகர், அன்று தானே தனக்கொப்ப தாகும் வண்ண மணியமைத்தார், இன்று தானே தனக்கதிக மென்னும் வண்ண மெழிலமைத்தார். 12

முன்னர் மாலை முடியணி சுந்தரத்
தென்ன ரேற்றின் றிருமுகங் கண்டுதாழ்ந்
தன்ன வாசக முட்கொண் டயற்புல
மன்னர் மாதவர் யாரும் வருவரால். 13

புரவி வெள்ளமும் போர்க்கரி வெள்ளமும்
[1]வரவிற் கால்வலி மன்னரின் வெள்ளமும்
விரவி யாழிய வெள்ளமு மூன்றுற
இரவி நன்வழித் தோன்றல்வந் தெய்தினன். 14

கோடு வில்லொடு மேகக் குழாங்கண்மின்
நீடு வாளொடு நேர்ந்தென மார்புதாழ்ந்
தாடு குண்டலக் காதுடை யாடவர்
சேட னீகத்துச் சேரன்வந் தீண்டினன். 15

---

10. வரைவு நாள் - திருக்கலியாண மகோற்சவ நாள்.

11. பூகதம் - பாக்குமரம். மறுகு - வீதி. கூடம் - யானைகட்டு மிடம். கொளுத்தினர் - அலங்கரித்தார்.

12. தென்றல் நாடன் - மலயத்துவச பாண்டியன். அன்று - தடாதகைப்பிராட்டியார் திருமணக் காலம்.

13. சுந்தரத் தென்னர் - சவுந்தரபாண்டியர்.

14. கால் - காற்றைப்போல. மன்னர் - காலாட் படைவீரர். ஆழிய வெள்ளம் - தேர்க்கூட்டம்.

15. கோடு - வளைந்த. சேடு - பெருமை. அனீகம் - சேனை.

பா-ம்—1 வரவில்.

கடலு முள்ளமுங் காற்றும்பல் வண்ணமும்
உடலங் [1]கொண்டன வுந்துறு வாம்பரிப்
படுக டற்குட் பரிதியிற் றோன்றினன்
அடுப ரிப்பதி யாகிய வேந்தனே. 16

அலகி லாவுத யந்தொறு மாதவர்
அலகி லாருதித் தென்னப்பொன் னோடைசேர்
அலகி லானை யளிகமொர் டெய்தினன்
அலகி லாற்றற் கயப்தி யண்ணலே. 17

தொக்க மள்ள ரடிப்படு தூளிபோய்த்
திக்க டங்க விழுங்கித் திரைக்கடல்
எக்கர் செய்ய வெழுந்தியங் கல்லென
நக்க வேற்கை நரபதி நண்ணினன். 18

மீன வேலையிற் கந்துக மேற்கொடு
கூனல் வார்சிலை வஞ்சக் கொடுஞ்சமர்க்
கான வாழ்க்கை யரட்டக் கரும்படை
மான வேற்குறு மன்னவர் நண்ணினர். 19

சீனர் சோனகர் சிங்களர் கொங்கணர்
மான வேல்வல மாளவர் சாளுவர்
தான மாகிரைச் சாவக ராதியாம்
ஏனை நாட்டுள மன்னரு மீண்டினர். 20

நூலொ டுந்துவக் குண்டு நுடங்குமான்
றோலர் தூங்கு சுருக்குடைத் தானையர்

---

16. உந்துறும் - விரைவாக. வாம் - தாவிச்செல்லும்.

17. அலகு - அளவு. ஆதவர் - சூரியர். ஓடை - நெற்றிப்பட்டம்.

18. தொக்க - நெருங்கிய. எக்கர் - மேடு ; திடர். நக்க - விளங்கிய.

19. கந்துகம் - குதிரை. அரட்டர் - குறும்பர். கரும்படை - பெரிய சேனை.

20. சோனகர் - ஆரிய தேசத்துக்கு மேற்கிலுள்ள ஒரு தேசத்தவர் ; துலுக்கர்.

21. நூல்-பூணூல். துவக்கு - கட்டு. தூங்குதல் - தொங்குதல். முஞ்சி - ஒருவகைப்புல். கிஞ்சுகம் - பலாசம் ; முள்முருக்கு. நூல் பயில் நாவினர் - மாணவர் ; பிரமசாரிகள்.

பா-ம்—1 கொண்டென.

கோல முஞ்சியர் கிஞ்சுகக் கோலினர்
நாலு நால்பயி லுவினர் நண்ணினர். 21

வட்ட நீர்க்கலக் கையினர் வார்ந்துதோள்
விட்ட குண்டலக் காதினர் வேட்டதீத்
தொட்ட கோலினர் வேள்வியிற் சுட்டநீ
றிட்ட நெற்றிய ரில்லொடு நண்ணினர். 22

முண்ட நெற்றியர் வெண்ணிற மூரலர்
குண்டி கைக்கையர் கோவணம் வீக்கிய
தண்டு கையர்கற் றூனையர் மெய்யினைக்
கண்டு பொய்யினைக் காய்ந்தவர் நண்ணினர். 23

தீந்தண் பாற்கடல் செந்துகிர்க் காட்டொடும்
போந்த போன்மெயிற் புண்ணியப் பூச்சினர்
சேந்த வேணியர் வேதச் சிரப்பொருள்
ஆய்ந்த கேள்வி யருந்தவ ரெய்தினர். 24

ஆதி சைவர் முதற்சைவ ரைவருங்
கோதி லாவகச் சைவக் குழாங்களும்
பூதி மேனியர் புண்ணிய வைந்தெழுத்
தோது நாவின ரொல்லைவந் தெய்தினர். 25

வெண்க ளிற்றவன் வேரியந் தாமரைப்
பெண்க ளிப்புறு மார்பன் பிரமனோ
டொண்க ளிப்புற வும்பர் முதற்பதி
னெண்க ணத்தவர் யாவரு மீண்டினர். 26

---

22. தீத்தொட்ட கோல் - தீக்கடைகோல். வேள்வியிற்சுட்ட நீறுஇட்ட நெற்றியர் - வானப்பிரத்தர்கள்.

23. முண்டம் - திரிபுண்டரம். மூரல் - பல். கல்தானை - காவியுடை. பொய்யினைக்காய்ந்தவர் - சந்நியாசிகள். பொய் - உலகோர் கூறும் கற்பனை.

24. துகிர் - பவளம். புண்ணியப்பூச்சினர் - விபூதி தரித்தவர். சேந்த - சிவந்த. வேதச்சிரப்பொருள் - சிவபெருமான். கேள்வி அருந்தவர் - சிவாகம நூற்கேள்வியையுடைய அரிய சைவ தபோதனர்.

25. ஆதி சைவர் முதல் சைவர் ஐவர் - ஆதி சைவர், மகாசைவர், அநு சைவர், அவாந்தரசைவர், பிரவர சைவர். அகச் சைவம் - சைவம், பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வாமம், வைரவம் என்பன.

26. வெண்களிற்றவன் - இந்திரன். வேரி - வாசனை ; தேன்.

அணைந்து கோயி லடைந்தரிச் சேக்கைமேற்
குணங்க டந்தவன் கோமள வல்லியோ
டிணங்கி வைகு மிருக்கைகண் டேத்தினர்
வணங்கி னார்வணங் கும்முறை வாழ்த்தினர். 27

விரைசெய் தார்முடிச் சுந்தர மீனவன்
சுரர்கண் மாதவர் வேந்தர்க்குத் தொன்முறை
வரிசை நல்கி யிருந்தனன் மன்னவன்
திரும கன்மணஞ் செய்திறஞ் செப்புவாம். 28

சோம சேகரன் றேகை வனப்பெலாங்
கோம கன்கண் டுவப்பவக் கொள்கைகண்
டேம மேனிய னூல்வழி யார்க்குமத்
தேமன் கோதை யுறுப்பிய றேற்றுவான், 29

பெருகநீண் டறவுங் குறுகிடா [1]வாகிப் பிளந்திடாக் [2]கடைய வாய்த் தழைந்து, கருவிவான் வண்டின் கணமெனக் கறுத்துக் கடைகுழன் றியன்மணங் கான்று, புரையறச் செறிந்து நெறித்து மெல் லென்று புந்திகண் கவரநெய்த் திருண்ட, மருமலர்க் குழலா டன்பதிக் கினிய மல்லல்வான் செல்வமுண் டாகும். 30

திண்மத வேழ மத்தகம் போலத் திரண்டுயர் சென்னியா ளவடன், உண்மகிழ் கணவ னுயுனிண் டகில வுலகர சுரியனு மெட்டாந், தண்மதி போன்று மயிர்நரம் பகன்று தசைந்துமூ விரலிடை யகன்ற, ஒண்மதி நுதறன் பதிக்குநற் றிருவோ டுலப்பிலா ரோக்கிய முண்டாம். 31

கண்கடை சிவந்தாள் பாலென வெளுத்து நடுவிழி கழியவுங் கரிதாய், எண்கவி னடைந்து கோமள மாகி யிமைகரு மயிர்த்

---

27. அரிச்சேக்கை - சிங்காதனம். குணம் - முக்குணங்கள். கோமளம் - இளமை ; அழகு.

28. சுரர்கள் - திருமால் முதலிய தேவர்கள். திருமகன் - உக்கிர குமாரன்.

29. கோமகன் - சவுந்தரபாண்டியர். ஏம மேனியன் - பொன் னிறம் பொருந்தியவன் ; குரு. கோதை - இங்குக் காந்திமதி.

30. கருவி - உலகத்திற்குத் துணைக்காரணமான. நெய்த்து - நெய்ப்பசையுடைய. மல்லல் - வளமை.

31. எட்டாம் தண்மதி - அர்த்த சந்திரன். உலப்பு - கேடுதி.

பா-ம்—1 தாகிப் 2 கடையதாய்த் தழைத்துக்.

தெனி[1]னினிய, ஒண்கரும் புருவங் குனிசிலை யொத்த தத்தமி லொத்திரு தொளையும், பண்கொள வுருண்டு துண்டமெட் போது பதுமமேற் பூத்தது போலும். **32**

வள்ளைபோல் வார்ந்து தாழ்ந்திரு செவியு மடற்சுழி நல்ல வாய் முன்னர்த், தள்ளிய காது மனோகர மாகுந் தன்மையா னன் மையே தழைக்கும், ஒள்ளிய கபோலம் வட்டமாய்த் தசைந்திட் டுயர்ந்துகண் ணாடிமண் டலம்போற், றெள்ளிய வூற்ற மினியது நன்றென் றோதினன் றிரைகடற் செல்வன். **33**

கொவ்வைவா யதரந் திரண்டிரு புடையுங் குவிந்துசேந் திரேகைநேர் கிடந்தால், அவ்வணி யிழைதன் னன்பனுக் கென்று நண்புரு வாகுமெண் ணான்கு, வல்ல[2]வா ளெயிறு மிடைவெளி யின்றி வார்ந்துமேல் கீழிரண் டொழுங்குஞ், செவ்வனேர்ந் தா வின் பாலென [3]வெள்கித் திகழினன் றென்பர் நூறெளிந்தோர். **34**

மெல்லிதாய்ச் சிவந்து கோமள மான நாவினுள் வேட்ட வேட் டாங்கே, வல்லைவந் தெய்த நுகர்ந்திடுந் தசைந்து வட்டமா யங்குல மிரண்டின், எல்லைய தாகி மஞ்சுள மாகி யிருப்பது [4]சிபுக நன்றென்பர், அல்லியங் கமலம் போன்[5]மலர்ந் திருடீர்ந் தவிர்மதி போல்வது முகமே. **35**

திரைவளைக் கழுத்துத் தசைந்துநால் விரலி னளவதாய்த் திரண்டுமூன் றிரேகை, வரைபடிற் கொழுந னகிலமன் னவனா மார்பகந் தசைந்துமூ வாறு, விரலள வகன்று மயிர்நரம் புகன்று மிதந்ததேல் விழுமிதாம் வேய்த்தோள், புரையறத் தசைந்து மயிரகன் றென்பு புலப்படா மொழியகோ மளமாம். **36**

---

32. பண் - அமைதி. துண்டம் - மூக்கு. எள்போது - எள்ளின் பூ.

33. வார்ந்து - நீண்டு. தசைந்திட்டு - தசைப்பற்றுடையதாய். ஊற்றம் - பரிசம். திரைகடற் செல்வன் - வருணன்.

34. கொவ்வை - கோவைக்கனி. அணி இழை - பெண். நூல் - சாமுத்திரிகை என்னும் நூல்.

35. மஞ்சுளம் - அழகு. சுபுகம் - மோவாய். அல்லி - அகவிதழ்.

36. வரை - கீற்று. அகிலம் - உலகம். தசைந்து - தசைப்பற் றுடையதாய். மொழி - நரம்பு முடிச்சு.

பா-ம்—1 னினியது. 2 வாலெயிறு. 3 வெள்கிச்சிறிதுயர்ந்திருப் பினன் கென்பர். 4 சுபுக. 5 மணந்.

[1]செங்கை நீண் டுருண்டு கணுக்கள்பெற் றடைவே சிறுத்திடிற் செல்வமோ டின்பந், தங்கும்வள் ளுகிர்சேந் துருண்டுகண் ணுள் ளங் கவர்வதாய்ச் சரசரப் பகன்றால், அங்கவை நல்ல வகங்கை மெல் லெனச்சேந் திடைவெளி யகன்றிடை யுயர்ந்து, மங்கல மாய்ச்சில் வரைகளி னல்ல விலக்கண வரையுள மாதோ, 37

முத்தணி தளங்கள் கடினமாய்த் தசைந்து வட்டமாய் முகிழ்த்திரு கடநேர், ஒத்திறு மாந்திர்க் கிடையற நெருங்கி யுள் ளன மெலிந்தமர்ந் துரோம, பத்திபெற் றயலே மயிர்நரம் பகன்ற பண்டியா ளுண்டிவேட் டாங்கே, துய்த்திடு நாபி வலஞ்சுழித் தாழ்ந்தாற் றுலைவிலாத் திருவளம் பெருகும். 38

இடைமயிர் நரம்பற் றிருபதோ டொருநான் கெழில்விர லளவொடு வட்ட, வடிவதாய்ச் சிறுகி மெலிவது நிதம்ப மத்தகம் யாமையின் புறம்போற், படிவநே ரொத்த னன்றிரு குறங்கும் படுமயி ரென்பகன் றியானைத், தடவுடைக் கையுங் கரபமுங் கதலித் தண்டுமொத் திருக்கினன் றென்ப. 39

அங்கமுண் மறைந்து வட்டமாய்த் தசைவ தணிமுழந் தாண்மயிர் நரம்பு, தங்கிடா தடைவே யுருட்சியாய்ச் சிறுத்துச் சமவடி வாயழ கடைந்த, [2]சங்கையாஞ் சிரையென் பறத்தசைந் தியாமை முதுகெனத் திரண்டுயர்ந் தழகு, மங்கலம் பொலிந்த புறவடி மடந்தை மன்னவன் பன்னியா மன்றே. 40

அல்லியங் கமலக் கால்விர லுயர்ந்து தூயவா யழகவாய்க் கழுநீர், மெல்லிதழ் நிரைத்தாங் கொழுங்குறத் திரண்டு வாளுகிர் வெண்மதிப் பிளவு, புல்லிய போன்று மெல்லிய வாகிப் [3]புகரறத்

37. கை - கைவிரல். வன்உகிர் - கூரிய நகம். சரசரப்பு - முர முரப்பு. நல்ல - சுபத்தைச் செய்வன.

38. கடம் - குடம். இறுமாந்து - செருக்குற்று. பண்டி - வயிறு.

39. நிதம்பம் - இடைக்குந் தொடை மூலத்துக்கும் நடு; அல்குல். யாமை - பெண்ணுமை. படிவம் - வடிவம். குறங்கு - தொடை. தடவு - பெருமை. கரபம் - கையினடி; அது மணிக்கட்டிலிருந்து சிறு விரலடிவரை உள்ள வெளிப்பாகம்.

40. அங்கம் - எலும்பு. சங்கை - கணைக்கால். ஆம் - நன்றும். சிரை - நரம்பு.

41. புகர் - துகள்; குற்றம். அகத்தாள் - உள்ளங்கால்.

பா-ம்—1 செங்கையங் குலிநீண் டுருண்டுகண் மரீஇ நேர் சிறந்திடில். 2 கங்கமாஞ். 3 புரைவறத்.

தசைந்தன வகத்தாள், சொல்லிய தசைவு மென்மையுஞ் சமமுந் துகளறப் படைத்தன நன்றால். 41

வண்ணமாந் தளிர்போற் சிவந்தெரி பொன்போல் வைகலும் வெயர்வையற் றுகம், உண்ணமா யிருக்கிற் செல்வமுண் டாகு மொண்மணம் பாடலங் குவளை, தண்ணறு முளரி மல்லிகை நறுந்தண் சண்பகம் போல்வன வாகும், பண்ணவாங் கிளவி குயில்கிளி யாழிற் படின்வரும் பாக்கிய மென்ன. 42

கருங்குழற் கற்றை தொட்டுச் செம்மலர்க் காலி னெல்லை
மருங்குனல் கூர்ந்த கன்னி வடிவெலாம் வாக்கின் செல்வன்
ஒருங்குநா லுணர்வாற் றெள்ளி யிம்பரின் றும்பர் தேத்தும்
இரங்குமிக் குயிலன் னுண்மெய் யிலக்கண மரிய தென்றான். 43

அங்கது கேட்டோர் யாரு மகங்களி துளும்ப விப்பாற்
கொங்கலர் நறுந்தார்க் குஞ்சி யுக்கிர [1]குமரன் போந்து
மங்கல வரிசை [2]மாண மத்தமான் சுமந்த வைகைச்
சங்கெறி துறைநீ ராடித் தகுங்கடி வனப்புக் கொள்வான், 44

கட்டவிழ் கண்ணி வேய்ந்து மான்மதக் கலவைச் சாந்தம்
மட்டனஞ் செய்து முத்தா னாண்கலன் முழுதுந் தாங்கி
விட்டவிர் கலைவான் றிங்கள் வெண்கதிர்ச் செல்வன் போல்வந்
திட்டபூந் தவிசின் மேற்கொண் டிருந்தனன் சங்க மேங்க. 45

அங்கிலை மணநீ ராட்டி யருங்கலப் போர்வை போர்த்த
கன்னியைக் கொணர்ந்து நம்பி வலவயிற் கவின வைத்தார்
பன்னியோ டெழுந்து சோம சேகரன் பரனும் பங்கின்
மன்னிய வுமையு மாக மதித்துநீர்ச் சிரகந் தாங்கி. 46

---

42. உண்ணம் - உஷ்ணமென்பதன் சிதைவு; வெம்மை. பாடலம் - பாதிரி. குயில் - பெண்குயில். கிளி - பெண் கிளி.

43. நல்கூர்ந்த - வறுமையுற்ற; சிறுமையுடைய. வாக்கின் செல்வன் - மொழிச் செல்வனாகிய வியாழகுரு. இரங்கும் - கூவும்.

44. கொங்கு - மகரந்தம்; தேனுமாம். மத்தமான் - மதமயக்கத்தையுடைய யானை.

45. கட்டு - முறுக்கு. கண்ணி - மாலை. மட்டனஞ்செய்து - மட்டித்து, பூசி. ஏங்க - ஒலிக்க.

46. மணநீர் - பலவகை வாசனைப் பொருள்கள் கலந்து ஊறிய நீர். சிரகம் - கரகம், கமண்டலம்.

பா-ம்—1 வழுதி. 2 மான.

மங்கல நீரா னம்பி மலரடி விளக்கி வாசக்
கொங்கலர் மாலை சூட்டிக் குளிர்மது பருக்க மூட்டி
நங்கைதன் கையைப் பற்றி நம்பிதன் கையி லேற்றிப்
புங்கவ ரறிய நன்னீர் மந்திரம் புகன்று பெய்வான். 47

இரவிதன் மருமான் சோம சேகர [1]னென்பேர் திங்கள்
மரபினை விளக்க வந்த சுந்தர மாறன் மைந்தன்
உரவுநீர் ஞாலந் தாங்கு முக்கிர வருமற் கின்றென்
குரவலர்க் கோதை மாதைக் கொடுத்தன னெனநீர் வார்த்தான். 48

மைந்துறு மடங்கற் றிண்கால் மணிவட வயிரவூசல்
ஐந்துடன் பதஞ்செய் பஞ்சி யணையிலோ டன்னத் தூவிப்
பைந்துகி லணையி ரைந்து பவளவாய்ப் பசும்பொன் மேனி
இந்திர மணிக்கட் பாவை விளக்குநான் கிரட்டி யென்ப. 49

அட்டில்வா யடுக்குஞ் செம்பொற் கலங்களா றம்பொன் வாக்கி
இட்டிழை மணிக்க ளாஞ்சி யேழுபொற் கவரி யெட்டு
விட்டொளிர் பசும்பொற் கிண்ணப் பந்திசூழ் விளங்க நாப்பண்
நட்டபொற் காவி னோடு நகைமணிக் கலநா றென்ப. 50

பெருவிலை யாரப் பேழை யாயிரம் பெற்ற நுண்டூ
சருவிலைப் பட்டு வெவ்வே றமைத்தன பேழை மூன்றா
றுருவமு தெழுதிச் செய்த வோவியப் பாவை யன்றோர்
திருமணிக் கலனோ டேவற் சேடிய ரெழுநூற் றைவர். 51

[2]விலைவொடு மூன்று மூதூர் மின்னுவிட் டெறியுஞ் செம்பொன்
அளவிரு கோடி யின்ன வரும்பெறன் மகட்குச் செல்வ

---

47. மது பருக்கம் - பால் பழம் தேன் நெய்யமுதத்தின் தொகுதி.

48. உரவுநீர் - கடல். என் - என்னுடைய. குரவு அலர் - குரவ மலர்.

49. மைந்து - வலிமை. மணிவடம் - முத்துவடம். தூவி - சிறை யடியிலுள்ள மெல்லிய மயிர். இந்திரமணி - நீலமணி. என்ப : அசை நிலை.

50. அட்டில் - மடைப்பள்ளி. பொன்வாக்கி - பொன்னால் வார்த்து. என்ப : அசைநிலை.

51. பேழை - பெட்டி. தூசு - பருத்தி ஆடை. சேடியர் - தோழியர்.

52. மூதூர் - பெரிய ஊர். மதுநிலை - தேனை அநுபவிக்கும்.

பா-ம்—1 னென்பேன். 2 விலைவொன்று.

வளமுற வரிசை யாக வழங்கினன் முழங்கி வண்டு
திளைமதுக் கண்ணிச் சோம சேகர மன்னன் மாதோ. 52

ஆர்த்தன வியங்க ளெல்லா மமரர்மந் தார மாரி
தூர்த்தனர் வேள்விச் செந்தீச் சுழித்தது வலமாய்த் துள்ளி
வார்த்தன மடவார் நாவின் முளைத்தன வாழ்த்து மன்றல்
பார்த்தனர் கண்க ளெல்லாம் பெற்றன படைத்த பேறு. 53

பொதியவிழ் கடப்பந் தண்டார்ப் புயத்திளங் காளை யன்னான்
முதியவர் செந்தீ யோம்ப வின்னிய முழங்கக் காந்தி
மதியைமங் கலநாண் பூட்டி வரிவளைச் செங்கை பற்றி
விதிவழி யேனை மன்றல் வினையெலா நிரம்பச் செய்தான். 54

எண்ணி லாத வளத்தினெடு மிரவி மருமான் மடப்பிடியைப்
பண்ணி லாவு மறையொழுக்கம் பயப்ப வேள்வி வினைமுடித்துத்
தண்ணி லாவெண் கலைமதியுந் தாரா கணமுந் தவழ்ந்துமுல
விண்ணி லாவு மணிமாட வீதி வலமாய் வருமெல்லை. 55

மின்னேர் பொன்னந் தொடியினரு மென்செம் பஞ்சி யடியினரும்
பொன்னேர் மணிப்பூண் முலையினரும் புலம்பு மணிமேகலையினரும்
அன்னே ரோதித் தாரினரு மாகிக் கண்ணு மனமுமவன்
முன்னே தூது நடப்பதென நடப்ப நடந்தார் முகிழ்முலையார். 56

சுருங்கு மிடையார் தன்பவனி தொழுது வருவார் தமக்கிரங்கி, மருங்குற் பாரங் கழிப்பான்போற் கலையைக் கவர்ந்தும் [1]வரைத்தோண்மேல், ஒருங்கு பாரங் கழிப்பான்போல் வளையைக் கவர்ந்து முள்ளத்துள், நெருங்கு பாரங் கழிப்பான்போ னிறையைக் கவர்ந்து நெறிச்செல்வான். 57

---

53. சுழித்தது - சுழன்றது. வார் - கச்சு அணிந்த. பேறு - பயன்.

54. கடப்பம் தண் தார்ப் புயத்திளங்காளை அன்னான் - முருகக் கடவுளை ஒத்த உக்கிர குமார பாண்டியன்.

55. இரவி மருமான் மடப்பிடி - காந்திமதி. நிலா - கிரணம். தாரா கணம் - நட்சத்திரக்கூட்டம்.

56. தொடியினர், அடியினர், முலையினர், மேகலையினர், தாரினர் இவர்கள் முறையே பவனி காணவந்த பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவைப்பருவப் பெண்களாகும்.

57. கலை - மேகலை. வரை - மூங்கில். நிறை - மனம் தீயவழியிற் செல்லாது நன்னெறியில் நிறுத்துதல்.

பா-ம்—1 வளைத்தோண்மேல்.

வான மதிசேர் முடிமறைத்த வழுதி மகனே யிவனென்றால்
ஆனை யெருத்திற் சிங்கவிள வடலே றென்ன வயல்வேந்தர்
சேனை தழுவ வரும்பவனிக் கொப்பே தொப்புச் செப்புங்கால்
யானை மகளை மணந்துவரு மிளையோன் பவனிச் செல்வமே. 58

இம்மை தனிலு நன்மைதரு மீசன் றனையும் வாச வற்கு
வெம்மை தருவன் பழிதவிர்த்த விமலன் றனையு மங்கயற்கண்
அம்மை தனையும் பணிந்துமீண் டரசன் கோயி லடைந்தின்றோர்
தம்மை முறையா லடிக்கமலந் தலையிற் பணிந்தான் றனிக்குமரன்.

ஆறு வாறு சுவையடிசி லயில்வோர் தம்மை யயில்வித்து
நாறு வரிசை வரன்முறையா னல்கி விடையு நல்கிப்பின்
வானு டவர்க்கும் விடைகொடுத்து மதிக்கோ னொழுகி வைகுநாட்
டேனுர் கண்ணித் திருமகனுக் கிதனைச் செப்பி யிதுசெய்வான்.

மைந்த கேட்டி யிந்திரனுங் கடலு முனக்கு வான்பகையாஞ்
சந்த மேருத் தருக்கடையுஞ் சதவேள் விக்கோன் முடிசிதற
இந்த வளைகொண் டெறிகடலி லிவ்வேல் விடுதி யிச்செண்டால்
அந்த மேரு தனைப்புடையென் றெடுத்துக் கொடுத்தா னவைமூன்றும்.

அன்ன மூன்று படைக்கலமுந் தொழுது வாங்கி யடலேறு
தன்னை நேரா யெதிர்நிற்குந் தனயன் றனையுக் கிரவழுதி
என்ன வாதி மறைமுழங்க வியங்க ளேங்க முடிகவித்துத்
தன்ன தானை [1]யரசுரிமை தனிச்செங் கோலுந் தானல்கா. 62

---

58. எருத்து - பிடரி. யானைமகள் - தெய்வயானையார். இளையோன் - குமாரக் கடவுள். செல்வம் - சிறப்பு.

59. நன்மைதரும் ஈசன் - மகாபீஷ்டப் பிரதேசுரர். வன்பழி தவிர்த்த விமலன் - சோமசுந்தரக் கடவுள். அங்கயற்கண் அம்மை - மீனாட்சியம்மையார்.

60. ஆறு - நீங்காத. மதிக்கோன் - சவுந்திரபாண்டியர். ஒழுகி - மநுநீதி வழி நடந்து.

61. வான்பகை - பெரிய பகைவர். முன்னொரு காலத்தில் இந்திரன், கடல், மேரு இம்மூன்றும் தீவினை வசத்தால் கர்வங்கொண்டு சிவபெருமானை இகழ்ந்து பகை கொண்டன என்பது வரலாறு. சதவேள்விக்கோன் - இந்திரன்.

62. அடல் ஏறு - சிங்கம். தனையன்தனை - புதல்வனை.

பா-ம்—1 யரசுரிமைத்.

சூட்சி வினையிற் பொன்னனைய சுமதி தன்னைத் தொன்னூலின்
மாட்சி யறிஞர் தமைநோக்கி வம்மி னிவனைக் கண்ணிமைபோற்
காட்சி பயக்குங் கல்வியும்போற் காப்பீ ரிதுநுங் கடனிம்மண்
ஆட்சி யிவன தென்றினைய வரியே றனையான் றனைநல்கா. 63

வெய்யவேற் காளை யன்னான் றன்னையும் வேறு நோக்கி
ஐயவிவ் வையந் தாங்கி யளித்தன னெடுநா ளிந்த
மையறு மனத்தார் சொல்லும் வாய்மையா றொழுகி நீயுஞ்
செய்யகோன் முறைசெய் தாண்டு திருவொடும் பொலிக வென்றான்.

பன்னருங் கணங்க ளெல்லாம் பண்டைய வடிவ மாகத்
தன்னருட டுணையாய் வந்த தடாதகைப் பிராட்டி யோடும்
பொன்னெடுங் கோயில் புக்குப் பொலிந்தன னிச்சை தன்னால்
இன்னருட் படிவங் கொள்ளு மீறிலா வின்ப மூர்த்தி. 65

பின்ன ருக்கிரப் பெயர்த ரித்தவத்
தென்னர் கோமகன் றெய்வ நான்மறை
மன்னு நல்லறம் வளர வையகந்
தன்ன தாணையாற் றாங்கி வைகினான். 66

ஆகச் செய்யுள்—1,032

---

63. சூட்சி - மந்திராலோசனை. பொன் - பிரகஸ்பதி. காட்சி பயக்கும் கல்வி - (தளர்ந்தவிடத்து) அறிவுதந்து ஊன்றுகோல் போலுதவும் கல்வி. காட்சி - அறிவு.

64. மை - குற்றம். வாய்மை ஆறு - உண்மை வழி.

65. பன்அரும் - சொல்லுதற்கரிய. அருள் - திருவருள். துணையாய் - துணைவியாய்.

66. தன்னது ஆணையால் - தமது ஆணைவழி நிற்க.

# 13. கடல்சுவற வேல்விட்ட படலம்

—o—

வளையொடு செண்டுவேன் மைந்தற் கஞ்சுரும்
பளையவேம் பணிந்தகோ னளித்த வாறிதத்
தளையவிழ் தாரினான் றனயன் வேலைமேல்
இளையவ னென்னவே லெறிந்த தோதுவாம். **1**

திங்களி னுக்கிரச் செழியன் வெண்குடை
எங்கணு நிழற்றவிற் றிருக்கு நாள்வயிற்
சங்கையில் லாதமா தரும வேள்விகள்
புங்கவர் புடைதழீஇப் போற்ற [1]வாற்றுநாள். **2**

அரும்பரி மகந்தொணூற் றாறு செய்துமிச்
[2]சுரும்பரி பெரும்படைத் தோன்ற றண்ணறு
விரும்பரி முரன்றுசூழ் வேம்பி னங்குழைப்
பொரும்பரி வீரன்மேற் பொருது பொங்கினான், **3**

மன்னிய நாடெலாம் வளஞ்சு ரந்துவான்
பொன்னிய னாடுபோற் பொலித லாலிந்த
மின்னிய வேலினான் வேள்வி செய்வதென்
றுன்னிய மனத்தனோர் சூழ்ச்சி யுன்னினான். **4**

பொருங்கடல் வேந்தனைக் கூவிப் பொள்ளென
இருங்கட லுடுத்தபா ரேழு மூழிநாள்

---

1. வேம்பு அணிந்த கோன் - சவுந்தர பாண்டியர். இளையவன் அன்ன-(சூரபன்மன் நிலைகெட வேலெறிந்த) முருகக் கடவுளைப்போல.

2. சங்கை இல்லாத மா தரும் வேள்விகள் - இராசசூய முதலிய பெரிய யாகங்கள். சங்கை - அளவு. புடை - பக்கம்.

3. பரிமகம் - அசுவமேத யாகம். சுரும்பு அரி - மலைகளின் சிறகினை அரிந்த. பெரும் படை - வச்சிராயுதம். தோன்றல் - இந்திரன். நறு - தேன். அரி - வண்டு. குழை - இங்கு மலர். வீரன் - உக்கிரகுமார பாண்டியன்.

4. பொன் இயல் நாடு - தேவலோகம். உன்னிய - கருதிய.

5. பொள்ளென - விரைந்து. பார் ஏழ் - ஏழு தீவுகள் : அவை நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், புட்கரம், தெங்கு, கமுகு என்பன. உருத்து - கோபித்து. கடி - காவல்.

பா-ம்—1 வாற்றினான். 2 சுரும்பரி னிசைத்தருத்தோன்ற.

ஒருங்கடு வெள்ளமொத் துருத்துப் போய்வளைந்
தருங்கடி மதுரையை யழித்தியா லென்றான். 5

விளைவது தெரிகிலன் வேலை வேந்தனும்
வளவயன் மதுரையை வளைந்திட் டிம்மெனக்
களைவது கருதினான் பேயும் கண்படை
கொளவரு நனந்தலைக் குருட்டுக் கங்குல்வாய். 6

கொதித்தலைக்க ரங்களண்ட கூடமெங்கு மூடுபோய்
அதிர்த்தலைக்க வூழிநாளி லார்த்தலைக்கு நீத்தமாய்
மதித்தலத்தை யெட்டிமுட்டி வருமொரஞ்ச னப்பொருப்
[1]புதித்தலொத்து மண்ணும்விண்ணு முட்கவந்த துததியே. 7

வங்கவேலை [2]வெள்ளமாட மதுரைமீது வருசெயல்
கங்குல்வாய திங்கண்மீது காரிவாய காருடல்
வெங்கண்வாள ராவிழுங்க வீழ்வதொக்கு மலதுகார்
அங்கண்மூட வருவதொக்கு மல்லதேது சொல்வதே. 8

வட்டயாமை பலகைவீசு வாளைவாள்கண் மகரமே
பட்டயானை பாய்திரைப்ப ரப்புவா ம்பரித்திரள்
விட்டதோணி யிரதமின்ன விரவுதானை யொடுகடல்
அட்டமாக வழுதிமேல மர்க்கெழுந்த தொக்குமே. 9

இன்னவாறெ ழுந்தவேலை மஞ்சுறங்கு மிஞ்சிசூழ்
நன்னகர்க்கு ணக்கின்வந்து நணுகுமெல்லை யரையிரா
மன்னவன்க னவில்வெள்ளி மன்றவாணர் சித்தராய்
முன்னர்வந்தி ருந்தரும்பு முறுவறோன்ற மொழிகுவார். 10

---

6. வேலை வேந்தன் - வருணன். கண்படை - தூக்கம். நனந்தலைக்குருட்டுக் கங்குல் - பார்வையுடையவரையும் குருடராகச் செய்யும் இருள் மிகுந்த நடு இரவு.

7. நீத்தம் - பெருவெள்ளம். மதித்தலம் - சந்திர மண்டலம். உட்க - அஞ்சுமாறு. உததி - கடல்.

8. வங்கம் - மரக்கலம். காரி - விஷம். அரா - இராகு. கார் - (சிவபெருமான் ஏவலால்) நான்கு மேகங்கள்.

9. பலகை - கேடகம். அட்டம் ஆக - எதிராக, குறுக்காக.

10. மஞ்சு - மேகம். இஞ்சி - மதில். குணக்கு - கிழக்கு. அரை இரா எல்லை - நடு இரவு. வெள்ளி மன்றவாணர் - சோம சுந்தரக் கடவுள்.

பா-ம்—1 புதித்த தொத்து. 2 வெள்ளை மாட.

வழுதியுன்ற னகரழிக்க வருவதாழி வல்லைநீ
எழுதிபோதி வென்றிவேலெ றிந்துவாகை பெறுகெனத்
தொழுதசெங்க ரத்தினுன்று திக்குநாவி னுனெழீஇக்
கழுதுறங்கு கங்குலிற்க னுவுணர்ந்து காவலான். 11

கண்ணிறைந்த வமளியிற்க ழிந்துவாயில் பலகடந்
துண்ணிறைந்த மதியமைச்ச ருடன்விரைந்து குறுகியே
[1]மண்ணிறந்த தெனமுழங்கி வருதரங்க வாரிகண்
[2]டெண்ணிறந்த வதிசயத்த னுகிநிற்கு மெல்லைவாய். 12

கனவில்வந்த சித்தவேடர் நனவில்வந்து காவலோன்
நினைவுகண்டு பொழுதுதாழ நிற்பதென்கொ லப்பனே
சினவிவேலை போலவந்த தெவ்வைமான வலிகெட
முனையவேலெ றிந்துஞால முடிவுதீர்த்தி யாலென. 13

எடுத்தவேல்வ லந்திரித்தெ றிந்தவேலை வேன்முனை
மடுத்தவேலை சுஃறெனவ்வ றந்துமான வலிகெட
வடுத்துவேரி வாகையின்றி யடிவணங்கு தெவ்வரைக்
கடுத்தவேல்வ லான்கணைக் காலின்மட்ட [3]தானதே. 14

சந்தவேத வேள்வியைத்த டுப்பதன்றி யுலகெலாஞ்
சிந்தவேறு சூழ்ச்சிசெய்த தேவர்கோவி னேவலால்
வந்தவேலை வலியழிந்த வஞ்சகர்க்கு நன்றிசெய்
திந்தவேலை வலியிழப்ப தென்றுமுள்ள தேகொலாம். 15

---

11. ஆழி - கடல். வல்லை - விரைந்து. எழுதி - (நீ) எழுவாய். போதி - போவாய். கழுது - பேய்.

12. கண் நிறைந்த-கண் துயின்ற. எண்ணிறந்த-அளவில்லாத.

13. தெவ்வை-பகைவனை. மானம் வலி-பெருமையும் வலிமையும்.

14. திரித்து - சுழற்றி. சுஃறென - ஒலிக்குறிப்பு. அடுத்து - அடைக்கலம் புகுந்து; வடுத்து என்றால் குற்றப்பட்டு எனப் பொருள் படும். வேரி - மணம்.

15. சந்தம்-பண். முன்பு கடல், சூரபன்மனுக்கு இடங்கொடுத்து முருகக் கடவுள் வேலால் வலி கெட்டு அழிந்ததையும், விருத்திராசுர னுக்கு இடங்கொடுத்து அகத்தியர் ஆசமனத்தால் வலிகெட்டு அழிந்த மையும் குறிக்க, 'இந்த வேலை வலியிழப்பதென்று முள்ளதே கொலாம்' என்ருர்.

பா-ம்—1 மண்ணிறைந்த. 2. எண்ணிறைந்த. 3. மானதே.

புன்னிடை நுழைந்த வேலைப் புணரியைப் புறங்கண் டோன்பால்
மண்ணிடை நின்ற சித்தர் வானிடை [1]மறைந்து ஞானக்
கண்ணிடை நிறைந்து தோன்றுங் கருணையால் வடிவங் கொண்டு
விண்ணிடை யணங்கி னோடு விடையிடை விளங்கி நின்றார். 16

முக்கணும் புயங்க ளான்கு மம்மதிக் கண்ணி வேய்ந்த
செக்கரஞ் சடையுங் காள கண்டமுந் தெரிந்து தென்னன்
பக்கமே பணிந்தெ ழுந்து பரந்தபே ரன்புந் தானுந்
தக்கவஞ் சலிசெய் தேத்தித் தரைமிசை நடந்து செல்வான். 17

துந்துபி யைந்து மார்ப்பப் பாரிடந் தொழுது போற்றத்
தந்திர வேத கீதந் ததும்பியெண் டிசையுந் தாக்க
அந்தர நாட ரேத்த வகல்விசும் பாற தாக
வந்துதன் கோயில் புக்கான் வரவுபோக் கிறந்த வள்ளல். 18

அஞ்சலி முகிழ்த்துச் சேவித் தருகுற வந்த வேந்தன்
இஞ்சிசூழ் கோயி லெய்தி யிறைஞ்சினன் விடைகொண் டேகிப்
பஞ்சின்மெல் லடியா ரட்ட மங்கலம் பரிப்ப நோக்கி
மஞ்சிவர் குடுமி மாட மாளிகை புகுந்தான் மன்னோ. 19

வளையெயின் மதுரை மூதூர் மறிகட லிவற்றி னுப்பண்
விளைவய னகர மெல்லாம் வெள்ளியம் பலத்து ளாடுந்
தளையவிழ் கொன்றை வேணித் தம்பிரான் றனக்கே சேர்த்துக்
களைகணு யுலகுக் கெல்லா மிருந்தனன் காவல் வேந்தன். 20

ஆகச் செய்யுள்—1,052

---

16. புன் இடை - பகைவர் உடலில். சித்தர் - சித்த மூர்த்தியாய் நின்ற சோமசுந்தரக் கடவுள். விடை - இடபம்.

17. செக்கர் - செந்நிறம். காளகண்டம் - நீலகண்டம். பக்கம் - சோமசுந்தரக் கடவுள் எழுந்தருளி நிற்கும் திக்கு; பட்சமுமாம்.

18. பாரிடம் - பூதகணங்கள். தந்திரம் - ஆகமம். வரவு போக்கு இறந்த வள்ளல் - பிறப்பு இறப்பு இல்லாத சோமசுந்தரக் கடவுள்.

19. முகிழ்த்து - குவித்து. பரிப்ப - தாங்க (எதிர்வர).

20. வளை - வளைந்த. களைகணும் - பற்றுக்கோடாய்.

பாடம்—1 நிறைந்து.

# 14. [1]இந்திரன் முடிமேல் வளையெறிந்த படலம்

—o—

மின்னவிர் மணிப்பூண் மார்பன் வேலையை வேலால் வென்று
பொன்னவிர் வாகை வேய்ந்த புகழுரை செய்தேம் நாக
நன்னக ராளி செம்பொ னகைமுடி சிதற வந்த
மன்னவன் வளைகொண் டோச்சி வென்றதும் வகுத்துச் சொல்வாம். 1

கோமக னிகழு நாளிற் கோணிலை பிழைத்துக் கொண்மூ
மாமழை மறுப்பப் பைங்கூழ் வறந்துபுற் றலைக டந்து
காமரு நாடு மூன்றுங் கையுற வெய்த மன்னர்
தாமது தீர்வு நோக்கித் தமிழ்முனி யிருக்கை சார்ந்தார். 2

முனிவனை யடைந்து வேந்தர் மூவருந் தங்க ளுட்டிற்
பனிவரு மாரி யின்றி வறந்தமை பகர மேருக்
குனிவரு சிலையார்க் கன்பன் கோணிலை குறித்து நோக்கி
இனிவரு மாரி யில்லை யாதினு [2]லென்னிற் கேண்மின். 3

காய்சின வெய்யோன் சேயோன் முன்செலக் கதிர்கால் வெள்ளித்
தேசிகன் பின்பு சென்று நடக்குமிச் செயலான் முந்நீர்த்
தூசின வுலகிற் பன்னீ ராண்டுவான் சுருங்கு மென்று
பேசின நூல்கண் மாரி பெய்விப்போற் சென்று கேண்மின். 4

---

1. மணிப்பூண் மார்பன் - உக்கிர குமார பாண்டியன். நாக நன்னகராளி - இந்திரன்.

2. இகழும் - செங்கோலோச்சும். கோள் - நவக்கிரகம். கொண்மூ - மேகங்கள். பைங்கூழ் - பசிய பயிர். கையுறவு - வறுமை. தமிழ்முனி - அகத்தியர்.

3. பனி வரு மாரி - குளிர்ச்சியைத் தரும் மழை; பனி என்னும் நோய் வருதற்குக் கருவியாகிய மழை எனப் பொருள் கொள்ளினுமாம். பனி - அம்மை; இது குட நாட்டு வழக்கு. மேருக்குனிவருசிலையார் - சிவபெருமான்.

4. வெய்யோன் - சூரியன். சேயோன் - செவ்வாய். பின்பு சென்று - வக்கிரித்து. தூசின - ஆடையாகவுடைய. வான் - மழை.

பா-ம்—1 இந்திரன் முடி தகர்த்த படலம். 2 லென்று.

என்றவ னெதிர்யா மெவ்வா றேகுது மென்று னைந்தும்
வென்றவன் சோம வார விரதநீ நோற்று வெள்ளி
மன்றவ னருளைப் பெற்று வான்வழிச் சென்மி னென்றக்
குன்றவன் சிலையா னோன்பின் விதியினைக் கூறு கின்றான். 5

உத்தம வானோர் தம்மு ளுத்தம னுரு மீசன்
உத்தம சத்தி மாரு ளுத்தமி யுருத்தி ராணி
உத்தம விரதந் தம்மு ளுத்தமந் திங்க ணோன்பென்
றுத்தம மறைநூ லாதி யுரைக்குமிச் சோம வாரம். 6

மந்தரங் காசி [1]யாதிப் பதிகளில் வதிந்து நோற்கத்
தந்திடும் பயனிற் கோடி தழைத்திடு மதுரை தன்னில்
இந்தநல் விரத நோற்போர்க் கதிகம்யா தென்னிற் சோம
சுந்தர னுரிய வார மாதலாற் சோம வாரம். 7

அங்கதி னதிகப் பேறுண் டருக்கனின் மதிதோய்ந் தொன்றித்
தங்கிய திங்க ணோன்பு தகுதியி னோற்க வல்லார்க்
கிங்கதி னதிக நீதி யிட்டிய பொருள்கொண் டாற்றும்
மங்கல விரதப் பேறொன் றனந்தமாய் வளரு மன்றே. 8

நலமலி விரத [2]நோற்பத் தொடங்குநா ளைவில்வாந் தேளிற்
சிலையினி லாத லன்றி யிரட்டிய தெரிசஞ் சேர்ந்த
மலமதி யொழித்து மற்றை மதியினு முந்தைப் பக்கத்
தலர்கதிர் வாரத் தல்லூ ணயின்றிடா தயலிற் றுஞ்சா. 9

5. ஐந்தும் வென்றவன் - இங்கு அகத்திய முனிவர்.

6. வானோர் - திருமால் முதலிய தேவர்கள். சத்தி - இலக்குமி முதலிய சத்திகள். உருத்திராணி - [illegible].

7. மந்தரம் - ஒரு தலம். அதிகம் - அதிக பலன் (இடைப்பதற்குக் காரணம்).

8. அருக்கனில் மதி தோய்ந்து ஒன்றித் தங்கிய திங்கள் - அமாவாசையில் வரும் சோமவாரம்.

9. தேளிற் சிலையினில் - கார்த்திகையிலும் மார்கழியிலும். தெரிசம் - அமாவாசை. மலமதி - குற்றமுள்ள மாதம். முந்தைப் பக்கம் - சுக்கில பட்சம். கதிர் வாரம் - ஞாயிறு. அல் - இரவு. அயலிற் றுஞ்சல் - சுத்தமாகிய தரையில் தனித்துத் தூங்குதல்.

பா-ம்—1 யாதி. 2 நோற்கத்.

வைகறை யெழுந்து சேற்கண் மணாளனை யுன்னி யற்றைச்
செய்கட னிறீஇக்கா மாதி சிந்தைநீத் தலர்பொற் கஞ்சப்
பொய்கையை யடைந்து கையிற் பவித்திரம் புனைந்து வாக்கு
மெய்கருத் தொருப்பா டெய்தச் சங்கற்பம் விதந்து கூறி. 10

கடம்படி முளைத்த முக்கட் கரும்பினை நினைந்து ஞாலத்
திடம்படு தீர்த்த மெல்லா மாடிய பயனை யீண்டுத்
திடம்படத் தருதி யென்னாத் திரைத்தடம் படிந்து வெண்ணீ
றுடம்பணிந் தக்க மாலை யொளிபெற விதியாற் றாங்கி. 11

வெள்ளைமந் தார முல்லை மல்லிகை வெடிவாய்ச் சாதி
கள்ளவிழ் மயிலை யாதி வெண்மலர் கவர்ந்து வேழப்
பிள்ளையை முந்தப் பூசித் திரந்துசங் கற்பம் பேசி
உள்ளனேந் துச்சி மேற்பன் னிருவிர லுயர்ச்சிக் கும்பர். 12

சத்திய ஞான னந்த தத்துவந் தன்னை யுன்னி
வைத்ததன் வடிவங் கொண்டு மண்முதற் சிவமீ றான
அத்துவ விலிங்கந் தன்னை யாசன மூர்த்தி மூல
வித்தைமற் றூது நூலின் விதியினாற் பூசை செய்க. 13

ஐந்தமு தாவி னைந்து நறுங்கனி யைந்து செந்தேன்
சந்தன தோயம் புட்பத் தண்புனல் மணிநீ ராட்டிச்
கந்தர வெண்பட் டாடை கருப்புரச் சுண்ணஞ் சாந்தங்
கந்தமல் லிகைமுன் னான வெண்மலர்க் கண்ணி சாத்தி. 14

---

10. வைகறை - விடியற்காலம். காமாதி - காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம் என்னும் தீக்குணங்கள். ஒருப்பாடு எய்த - ஒன்றுபட.

11. கடம்பு - கடம்பமரம். நீறு - விபூதி. விதியால் - ஆகம விதிப்படி. அக்கமாலை - உருத்திராட்சமாலை.

12. மயிலை - இருவாட்சி. வேழப் பிள்ளை - சித்தி விநாயகர்.

13. சத்திய ஞானனந்த தத்துவம் - சோம சுந்தரக் கடவுள். உன்னி வைத்து - மனத்து நிறுவி. அதன் வடிவம் கொண்டு - (மந்திர சத்தியால்) அச்சொரூபமாய் நின்று. வித்தை - மந்திரம்.

14. ஐந்து அமுது - பஞ்சாமிர்தம்: அது சர்க்கரை, தேன், பால், நெய், தயிர் ஐந்தும் கூடியது. ஆவின் ஐந்து - பஞ்சகௌவியம். நறுங்கனி ஐந்து - எலுமிச்சம் பழம், நாரத்தம் பழம், தமரத்தம் பழம், குளஞ்சிப்பழம், மாதுளம் பழம் என்ற ஐந்து. தோயம் - குழம்பு.

ஆதியில் லிங்கந் தீண்டற் குரியரல் லாத வேத
வேதியர் முதலோ ரிட்ட லிங்கத்தில் விதியா லர்ச்சித்
தோதிய விரத நோற்க வர்ச்சனைக் குரிய ரல்லாச்
சாதியர் பொருணேர்ந் தாதி சைவராற் பூசை செய்தல். 21

பொருவிலிவ் விரத மைவகைத் துச்சிப் போதிலூ ணிரவிலூ
ணிரண்டும், ஒருவுத லுறங்கா திருத்தலர்ச் சனைநால் யாமமு
முஞற்றுத லென்னக், கருதினிவ் வைந்து மொன்றினுக் கொன்று
கழியவு மதிகமா நோற்கும், வருடமொன் றிரண்டு மூன்றுபன்
னிரண்டு வருடம்வாழ் நாளள விவற்றுள். 22

உடலள வெண்ணி நோற்பவர் முந்த வுத்தியா பனஞ்
செய்து நோற்கக், கடவரவ் வருடக் கட்டளைக் கிறுதி கழிப்பதுத்
தாபன விதிதான், மடலவிழ் மாலை மண்டபங் குண்ட மண்டலம்
வகுத்துமா பதியைப், படரொளி வெள்ளி முப்பது கழஞ்சிற்
படிமையா னிருமிதஞ் செய்து. 23

காலையி லாசான் சொல்வழி நித்தக் கடன்முடித் துச்சி
தொட்டந்தி, மாலையி னளவும் புராணநூல் கேட்டு மாலைதொட்
டியாமமோர் நான்குஞ், சேலன கண்ணாள் பங்கனைப் பூசை
செய்கவப் பூசனை முடிவின், மூலமந் திரநூற் றெட்டுநூற்
றெட்டு முறையினா லாகுதி முடித்தல். 24

வில்லமா யிரங்கொண் டாயிர நாமம் விளம்பிநால் யாமமுஞ்
சாத்தல், நல்லவைந் தெழுத்தா லைந்தெழுத் துருவி னுதனுக்

---

21. வேத வேதியர்-வைதிகப் பிராமணர். இட்ட லிங்கம்-ஆன்மார்த்த லிங்கம்.

22. ஒருவுதல் - விடுதல். உஞற்றுதல் - செய்தல்.

23. உத்தியாபனம் - குறித்த ஆண்டுவரை விரதம் அனுட்டித்து முடிக்கும்பொழுது செய்யும் கிரியை. உடல் அளவு எண்ணி நோற்போர்க்கு உத்தியாபனம் இல்லை என்பது முதனூல்துணிபும் பிறநூல் துணிபும் ஆகும். கட்டளை - நியதி. மண்டலம் - அனந்த விஜயம் முதலிய மண்டலம். உமாபதி - உமையும் பதியும். கழஞ்சு - பன்னிரண்டு பணவெடை கொண்ட நிறை. (பணவெடை - வராகனின் ஒன்பதில் ஒரு பங்கு.) படிமை - வடிவம்.

24. காலையில் - உதய காலத்தில். புராணம் - சிவபுராணங்கள்.

25. வில்லம் - வில்வம். வில் அழல் - அர்த்த சந்திர குண்டத்தில் உள்ள வேள்வித்தீ ; விளங்கும் வேள்வித்தீ எனினுமாம்.

கருக்கியங் கொடுத்தல், எல்லையின் மூல மந்திரத் தாலு மேனைமந் திரங்களி னாலும், வில்லழ லோம்பிப் பூரணா குதிசெய் தீறிலான் வேள்வியை முடித்தல். 25

புலர்ந்தபின் னித்த வினைமுடித் தரம்பைப் பொதுளும்பா சிலைபதின் மூன்றின், நலந்தரு தூவெண் ணரிசிபெய் தினிய நறியகாய் கறியொடு பரப்பி, அலந்தர வான்பா னிறைகுடம் பதின்மூன் றரிசிமேல் வைத்தர னடியிற், கலந்தவன் பினராய்ச் சிவார்ச்சனைக் குரிய கடவுள்வே தியர்களை வரித்து. 26

காதணி கலனுங் கையணி கலனுங் கவின்பெற வளித்தர னாக, ஆதரம் பெருக நினைந்தருச் சனைசெய் தரியதக் கிணை யொடும் பாதப், போதணி காப்பு விசிறிதண் கவிகை பூந்துகின் முதற்பல வுடனே, மேதகு தானஞ் செய்துபின் குருவைக் கற்புடை மின்னிடை யோடும். 27

ஆசனத் திருத்திப் பொலந்துகில் காதுக் கணிகள்கைக் கணிகளு மணிந்து, வாசகன் மலரிட் டருச்சனை செய்து மலைமக டலைவனை வரைந்து, பூசனை செய்த படிமையோ டம்பொன் பூதலம் பதாதிகள் பிறவுந், தூசலர் மாலை கோட்டணி புனைந்த சுரபிமா தானமுஞ் செய்து. 28

இனையவா றந்தா பனமுடித் தாசா னேவலாற் சிவனடிக் கன்பர், தனையரோ டொக்க லுடனமு தருந்த றகுதியில் விரத முன் கன்னைல், [1]நனையதா மரையோ னிந்திரன் முதல்வா னுடவர் மூவறு கணத்தோர், அனைவரு நோற்றார் மனிதரு மனுட்டித் தரும்பெறற் போகம்வீ டடைந்தார். 29

சதுரோற் பவர்வெம் பகைமனத் துயர்தீர்ந் தாயிரம் பிறவியி லியற்றுந், தீதுசேர் வினைதீர்ந் தெடுத்தயாக் கையினிற் சிவகதி

---

26. அரம்பைப் பொதுளும் பாசிலை - வாழை மரத்திற் செழித்துத் தளிர்த்த பசிய இலைகள். அலம் - அமைவு. கடவுள் வேதியர் - ஆதி சைவர்.

27. ஆதரம் - அன்பு. பாதப் போதணி காப்பு - பாதுகை.

28. படிமை - திருவுருவம். கோட்டணி - கொம்பிலிடும் பூண். சுரபி - பசு.

29. தனையர் - புதல்வர். ஒக்கல் - சுற்றம். நனை - தேன்.

பா-ம்—1 அனையதா.

படைவரில் விரதம், ஓதினோர் கேட்டோர் மனைவியர் மக்க
ளொக்கலோ டினிதுவாழ்ந் தும்பர், மேதகு பதினு விந்திரன்
பதத்தில் வீற்றினி திருப்பரென் றறவோன். 30

சொல்லிய நெறியாற் சோம சுந்தரன் விரத நோற்பான்
வில்லிடு மணிப்பூண் வேந்தர் முனிவனை விடைகொண் டேகி
அல்லியங் [1]கனக கஞ்சத் தாடியங் கயற்கண் வல்லி
புல்லிய பாகன் றன்னை வழிபடூஉப் போற்றி நோற்றார். 31

சுந்தரன் றன்னைப் பூசைத் தொழில்செய்து வரம்பெற் றேகி
அந்தரத் தாறு செல்வா ரணிநகரிந் தமரர் வேந்தன்
வந்தவ ரிருக்க வேறு மடங்கன்மான் றவிசு மூன்று
தந்திடப் பணித்தா னிட்டார் தனதரி யணையிற் றாழ. 32

வான்வழி வந்த மூன்று மன்னரும் பொன்னு டெய்தி
ஊன்வழி குலிச வைவே லும்பர்கோன் மருங்கிற் புக்கார்
தேன்வழி போந்தின் கண்ணிச் சேரனு மார்த்தார் வேந்தன்
கான்வழி தாரு நாடன் காட்டிய தவிசின் வைக. 33

மைக்கடல் வறப்ப வென்ற வாகைவேற் செழியன் மௌலிச்
செக்கர்மா மணிவிற் காலத் தேவர்கோன் றவிசி லேறி
ஒக்கவீற் றிருந்தா னாக வும்பர்கோ னழுக்கா றெய்திப்
பக்கமே யிருந்த வேனைப் பார்த்திவர் முகத்தைப் பாரா. 34

முகமனன் கியம்பி நீவிர் வந்ததென் மொழிமி னென்ன
மகபதி யெங்க ணாட்டின் மழைமறுத் தடைந்தே மென்றார்
அகமலர்ந் தனையார் நாட்டு ளளவும்வான் சுரக்க நல்கி
நகைமணிக் கலன்பொன் னாடை நல்கிநீர் போமி னென்றான். 35

---

30. பதினுன் இந்திரன் பதம் - ஒரு பிரம கற்பம். அறவோன் - அகத்தியன்.

31. முனிவன் - அகத்தியர். கனக கஞ்சம் - பொற்றாமரைத் தீர்த்தம்.

32. சுந்தரன் - சோமசுந்தரக் கடவுள். மடங்கன் மான் றவிசு - சிங்காதனம்.

33. குலிசம் - வச்சிராயுதம். போந்து - பனை. ஆர் - ஆத்தி.

34. செழியன் - உக்கிரகுமாரபாண்டியன். அழுக்காறு - பொறாமை. ஏனைப் பார்த்திவர் - சேரசோழர்.

35. மகபதி - இந்திரனே! வான் சுரக்க - மழை வளம் மிக.

பா-ம் — 1 கனகக்.

வேட்டத்திற் பட்ட செங்கண் வேழம்போற் கொண்டு போகிக்
கோட்டத்தி லிட்டா னாகக் குன்றிற கரிந்த வென்றி
நாட்டத்துப் படிவத் தண்ட நாடன்மற் றதனைக் கேட்டுக்
காட்டத்துக் கனல்போற் சீறிக் கடுஞ்சமர் குறித்துச் செல்வான்.

வாங்குநீர் வறப்ப வேலை விடுத்ததும் வலிய வாரந்
தாங்கிய செருக்குங் காரைத் தளையிடு தருக்கு நோக்கி
ஈங்கொரு மனித யாக்கைக் கித்துணை வலியா தென்னா
வீங்கிய மான மூக்க மீனவன் மதுரை சூழ்ந்தான். 43

ஓடின ரொற்றர்போய்ச் செழிய னொண்கழல்
சூடினர் நகர்ப்புறஞ் சுரர்கள் சேனைகள்
மூடின வென்னலு முனிவு மானமும்
நீடின னரியணை [1]யிழிந்து நீங்குவான். 44

பண்ணுக தேர்பரி பகடு வீரர்முன்
நண்ணுக கடிதென நடத்தி யாவரென்
றெண்ணலன் மதமலை யெருத்த மேற்கொடு
கண்ணகன் கடிநகர்க் காப்பு நீங்குமுன். 45

அடுத்தனர் வானவ ரார்த்துப் பல்படை
எடுத்தனர் வீசினர் சிலையி லெய்கணை
தொடுத்தன ரிறுதிநாட் சொரியு மாரிபோல்
விடுத்தனர் மதிக்குல வீரன் சேனைமேல். 46

ஆர்த்தனர் மலயவெற் பரையன் சேனையோர்
பார்த்தனர் வேறுபல் படைக்க லக்குவை
தூர்த்தனர் குனிசிலை தொடுத்து வாளியாற்
போர்த்தன ரமரர்மெய் புதைத்த வென்பவே. 47

---

42. கோட்டம் - சிறைக்கூடம். நாட்டம் - கண்கள். படிவம் - உடல். காட்டம் - விறகு.

43. ஊக்க - செலுத்த. சூழ்ந்தான் - முற்றுகையிட்டான்.

44. மூடின - முற்றுகை செய்தன. முனிவு - கோபம்.

45. பகடு, மதமலை - யானை. காப்பு - இங்கு மதில்.

46. இறுதிநாள் - ஊழிக்காலம். மதிக்குல வீரன் - உக்கிரகுமார பாண்டியன்.

47. மலய வெற்பு அரையன் - உக்கிரகுமார பாண்டியன். குவை - கூட்டம்.

பா-ம் - 1 யிருந்து.

தறிந்தன தாள்சிரந் தகர்ந்த தோள்கரம்
பறிந்தன குருதிநீர் கடலிற் பாய்ந்தன
செறிந்தன பாரிடஞ் சேனங் கூளிகள்
முறிந்தன மானவர் முதல்வன் சேனையே. 48

ஆடின குறைத்தலை யவிந்த போர்க்களம்
பாடின பாரிடம் விந்தைப் பாவைதாள்
சூடின கூளிகள் கோரி சோரப்பார்
மூடின பிணக்குவை யண்ட முட்டவே. 49

வெஞ்சின வலாரிதன் வீரச் சேனைகள்
துஞ்சின கண்டெரி சொரியுங் கண்ணனைப்
பஞ்சின்முன் னெரியெனப் பதைத்துத் தெய்வத
வஞ்சினப் படைகளான் மலைவ துன்னினான். 50

வெங்கதிர்ப் படைவிட் டார்த்தான் விண்ணவ னதனைத் திங்கட்
பைங்கதிர்ப் படைதொட் டோச்சி யவித்தனன் பாராள் வேந்தன்
சிங்கவெம் படைவிட் டார்த்தான் தேவர்கோ னதனைச் சிம்புட்
புங்கவன் படைதொட் டோச்சி யடக்கினான் புணரி வென்றோன்.

தானவர் பகைவன் மோக சரந்தொடுத் தெறிந்தா னாக
மீனவ னதனை ஞான வாளியால் விளித்து மாய்ந்து
போனபின் மற்போ [1]ராற்றிப் புக்கனர் புக்கார் தம்மில்
வானவன் மண்ணி னான்மேல் வச்சிரம் வீசி யார்த்தான். 52

காய்சின மடங்க லன்னான் கைவளை சுழற்றி வல்லே
வீசினன் குலிசந் தன்னை [2]வீழ்த்தது விடுத்தான் சென்னித்
தேசினன் மகுடந் தள்ளிச் சிதைத்தது சிதைத்த லோடுங்
கூசின னஞ்சிப் போனான் குன்றிற கரிந்த வீரன். 53

---

48. குருதி நீர் - உதிரம். சேனம் - பருந்து. கூளி - பேய்.

49. குறைத்தலை - கவந்தம். விந்தைப்பாவை - கொற்றவை.

50. வஞ்சினம் - நெடுமொழி கூறல்: அது போர்முகத்துத் தமது வீரத்தைப் புகழ்ந்து கூறுதல்.

51. புங்கம் வன் - மிக்க வலிமை. சிம்புள் - சரபம். புணரிவென்றோன் - உக்கிரகுமார பாண்டியன்.

52. தானவர் - அசுரர். தானவர் பகைவன் - இந்திரன். விளித்து - அழிக்க.

53. கைவளை - கையிலுள்ள சக்கரத்தை. தேசு - ஒளி.

பா-ம்—1 ராற்றப். 2 விண்டது.

இலங்கொளிய விந்நீல மெய்ப்படுப்போர் மங்கலஞ்சேர் திருப்பா ரேனை, அலங்குகதிர் நீலத்திற் பெருவிலையா யிரப்பத்தி னளவைத் தாகித், துலங்குவதான் பாற்கடத்தி னூறுகுணைச் சிறப்படைந்து தோற்றுஞ் சோதி, கலங்குகட லுடைவைப்பி லரிதிந்த விந்திரன்பேர்க் கரிய நீலம். 73

மைந்துறுசெம் மணிமுத்து வாள்வயிரம் பச்சையொளி வழங்கு நீலம், ஐந்திவைமேற் கோமேத முதற்பவள மீருக வறைந்த நான்கும், நந்தொளிய வேனுமவை சிறுவேட்கை பயப்பவழ னகுசெங் குஞ்சி, வெந்தறுகண் வலனிணங்கள் சிதறு மிடைப் படுவனகோ மேதமென்ப. 74

உருக்குநறு நெய்த்துளிதேன் றுளிநல்லான் புண்ணியநீ ரொத்துச் சேந்து, செருக்குபசும் பொன்னிறமும் பெற்றுமெலி தாய்த்தூய்தாய்த் திண்ணி தாகி, இருக்குமது தரிக்கினிருட் பூரவம்போம் பரிசுத்தி யெய்தும் வென்றித், தருக்குவலன் கபம் விழுந்த விடைப்புருட ராகமொளி தழையத் தோன்றும். 75

தாழ்ந்தபிலத் திழிந்தெரிபொற் கண்ணவுண னுயிர்குடிக் குந் தறுகட் பன்றி, போழ்ந்தமுழை வாய்திறந்து திசைசெவிடு படநகைத்துப் பொன்போற் கக்கி, வீழ்ந்தகபம் படுதீவிற் படு முச்சி வட்டமாய் மெலிதாய்ப் பொன்போற், சூழ்ந்தொளிவிட் டவிர்தழல்போற் றெளிவெய்தி மனங்கவர்ந்து தோற்றஞ் செய்யும். 76

---

73. இந்நீலம் - இந்த நாற்சாதி நீல மணிகள். மெய்ப்படுப்போர் - அணிவோர். அலங்கு - விளங்காநின்ற. கதிர் நீலம் - மாநீலம். கடலுடைவைப்பு - கடல் சூழ்ந்த உலகம். இந்திர நீலம் மாநீலத் தைக்காட்டிலும் பெருவிலையுடையது ; கிடைப்பது மிக அரிது.

74. மைந்து - வன்மை. செம்மணி - பதும ராகம். நந்து ஒளிய- மிக்க ஒளியினையுடைய. வேட்கை - விருப்பம் ; விலை. கோமேதகம் முதல் பவளம் - கோமேதகம், புருட ராகம், வைடூரியம், பவளம் என்பன.

75. நல் ஆன் புண்ணிய நீர் - கோசலம். சேந்து - சிவந்து. செருக்கு - உயர்ந்த. மெலிது - வழுவழுப்புடையது.

76. பிலம் - பாதலம். இழிந்த - இறங்கி ஒளித்த. எரி பொற் கண். அவுணன் - இரணியாக்கன் ; இவன் இரணியனின் தமயன்.

இந்தமணி பாரியாத் திரகிரியிற் கொடுமுடியா யிலங்குந் தெய்வ, மந்தரமால் வரைப்புறஞ்சூழ் மேகலையா மயனிந்த மணியி னாலே, அந்தரநா டவனகரு மரசிருப்பு மண்டபமு மமைத்தா னிந்தச், சந்தமணி தரிப்பவரே தரியார்வெந் நிடவாகை தரிக்க வல்லார். 77

வலன்மயிராம் வயிடூய மிளாவிருத கண்டத்தில் வந்து தோன்றிப், பலர்புகழுங் கோரக்க மகதஞ்சிங் களமலயம் பாரசிகம், இலகுதிரி கூடாதி தேயங்கள் பிறதிப மெங்குந் தோற்றும். அலைகடலும் படுமிறுதிக் காரிடிக்கும் போதுமிற மதற்கியா தென்னில். 78

கழையிலைகார் மயிலெருத்தம் வெருகின்கண் ணிறத்ததாய்க் கனத்த தாகி, விழைவுதரு தெளிதாகித் திண்ணிதாய் மெலிதாகி விளங்கு மீதில். அழகுபெற வலமிடமேல் கீழொளி[1]விட் டன முறையே யறவோ ராதித், தழைவுறுநாற் சாதிகளாந் தின மிதனைப் பூசித்துத் தரிக்க சான்றோர். 79

வலத்தவுணன் றசைவீழ்ந்த [1]வழிப்படுதுப் பயன்சந்தி வடிவ மாத்தென், புலத்தவரை விதிக்குமிடத் தவனுடன்மா சிழிபுலத் தும் புயல்போல் வண்ணன், வலத்தமது கைடவரைக் குறை குருதி வழிநிலத்தும் மகவான் வெற்பின், குலத்தையிற கரிசோரி சிதறிடத்தும் வந்துகுடி கொண்டு தோன்றும். 80

அவ்வழியிற் படுபவள முருக்கம்பூப் பசுங்கிளிமூக் கலர்ந்த செவ்விச், செவ்வரத்த மலர்கொவ்வைக் கனிபோலுங் குணங்

---

77. பரியாத்திரகிரி - குமரிகண்டத்திலுள்ள ஏழு மலைகளுள் ஒன்று. மயன் - தேவதச்சன். அயன் எனப் பிரித்துப் பொருள் கூறுதலும் ஒன்று. தரியார் - பகைவர். வெந்நிட - புறங்கொடுக்க.

78. வந்து - (மேற்குத் திசையில்) வந்து. இறுதிக்கார் - ஊழிக் காலமேகம்.

79. கழை - மூங்கில். வெருகு - பூனை. அறவோர் - அந்தணர்.

80. வலம் - வெற்றி. சந்தி - சந்தியா காலம். பிரமா, சத்துவ குண வடிவெடுத்துப் பிதிர்க்களை அதினின்று தோற்றுவித்து அவ்வுடலத்தை விடுத்தார்; அக்காலமே சந்தியா கால வடிவாம் உடல் மாசு - உடலின் அழுக்கு. இழிபுலத்தும் - ஒழிந்த விடத்தும். மது கைடவர் - இவர்கள் திருமாலின் இரு செவிகளினின்று தோன்றிய அசுரர்கள்.

பா-ம்—1 விட்டான். 2 வழிபடுந்துப்.

குற்றந் திருகிக் கோடல், எவ்வமுறப் புழுவரித்தன் முகமொடிதல் பெரும்பாலு மிப்பூ ணேந்தல், பெய்வளையார் தமக்கேயாந் தரிக்கின்மகப் பேறுமுதற் பேறுண் டாகும். 81

இரவியெதி ரெரியிறைக்குங் கல்லுமதி யெதிர்செழுநீ ரிறைக்குங் கல்லும், உரையிடுமொன் பதிலொன்றி லுட்கிடையாய்க் கிடக்குமென வொன்பான்வேறு, மரபுரைத்து வணிகரே ருகியவா னவரேறு வடபா லேக்கிப், பரவியிருந் தருச்சித்து மணிக்கைக்கொண் டெதிர்மதுரைப் பரனை நோக்கா. 82

அஞ்சலிசெய் தகநோக்கா விக்குமரற் களவிறந்த வாயுள் செல்வம், விஞ்சுகவென் றளித்தருள விறைமகனும் விண்ணிழிந்த விமான நோக்கிச், செஞ்சரணம் பணிந்திருகைத் தாமரையும் விரித்தேற்றுன் செல்வ நாய்கர், மஞ்சனையும் புடைநின்ற வமைச்சரையு நோக்கிமுக மலர்ந்து சொல்வார். 83

இம்மணியா லிழைத்துநவ முடிசூட்டி யிச்சிங்க விளவேறன்ன, செம்மறனை யபிடேக பாண்டியனென் றியம்புமெனச் செம்பொன் றூக்கிக், கைம்மறியில் வணிகருக்கு விலைகொடுப்பான் வருவார்முன் கருணை நாட்டம், அம்மகன்மே னிரப்பியிள நகையரும்பி நின்றுரை யங்குக் காணேர். 84

ஒருருவாய் நேர்நின்ற வணிகேசர் விடையின்மே லுமையாளோடும், ஈருருவாய் முக்கண்ணு நாற்கரமு மஞ்சமர நிறவாவாறு, காருருவா யெழுமிடறுங் காட்டித்தங் கோயில்புகக் கண்டா ரின்று, பாருருவாய் நின்றவணி கேசரிவ ரெனவேபின் பற்றிப் போவார். 85

---

81. கோடல் - கோணுதல். எவ்வம் - குற்றம். ஏந்தல் - தரித்தல்.

82. கல் - சூரிய காந்தக் கல்; சந்திரகாந்தக் கல். உரையிடும் - உரைக்கும்; இடு: பகுதிப் பொருள் விகுதி. விலை பகருங்கால் கீழ்த்திசை நோக்கியிருந்து மணியை அருச்சித்தலும், கொடுக்குங்கால் வடதிசை நோக்கி இருந்து மணியை அருச்சித்தலும் மரபாம்.

83. விஞ்சுக - ஓங்குக. நாய்கர் - வணிகர், செல்வ நாய்கர் - சோமசுந்தரக் கடவுள். மஞ்சன் - மைந்தன்; அரசிளங் குமரன்.

84. நவமுடி - புதுமுடி. நவம் என்பதை மணியுடன் கூட்டிப் பொருள் கூறுதலுமாம். தூக்கி - (துலையால்) தூக்கி.

85. பாருருவாய் - உலகின்கண் வணிகருருவாய்.

தேன்செய்த கொன்றைநெடுஞ் சடையார்முன் றாழ்ந்தெழுந்து செங்கை கூப்பி, யான்செய்யுங் கைம்மாறு யெம்பிராற் கொன் றுண்டோ யானு மென்ன, தான்செயுட லும்பொருளு முயிரு மெனி னவையாவு முனவே யையா, வான்செய்யு நன்றிக்கு வையகத்தோர் செய்யுங்கைம் மாறுண் டேயோ. 86

என்றுமுன் வழுத்தலு றும் விறன்மாறன் கோக்கொழுந்தை யிகல்வேல் விந்தை, மன்றுகு மிவற்குமன வாக்கிறந்த பூரணமா மதுரை நாதன், [1]பொன்றுரு மணிமகுடஞ் சூடமணி நல்குதலாற் புவிய நேகம், பன்றுளு முறைபுரியத் தக்கதென வாழ்த்தினர் பல்சான் றோரும். 87

ஏத்திவலங் கொண்டிருநான் கிபந்தழுவப் பெற்றோங்கி யிருக்கு மட்ட, மூர்த்திவிடை யருள்பெற்று மூவாநன் மறையாசி முனிவர் கூறப், பார்த்திவன்றன் பொலன்மாட மனைபுகுந்தா னிறைமணிப்பண் பாயுங் கேள்விச், சாத்திரரு மந்திரரு மணி நோக்கி [2]வியப்படைந்தார் சங்கை கூர்ந்தார். 88

வேளென வந்த நாய்கர் சுந்தர விடங்க ராறல்
நாள்களுங் கோளும் பற்றி நவமணி யாக்கி றேரோ
தாள்களுந் தோளு மார்புந் தரித்தநீ றுகை மீன்ற
வாள்விடு மணியோ வீந்தார் யாதென மதிக்கற் பாலேம். 89

இந்திரக் கடவு ளுட்டு மிம்மணி யரிய வென்று
மந்திரக் கிழவர் நல்கி மயனினு மாண்ட கேள்வித்
தந்திரக் கனகக் கொல்லர்க் குவப்பன ததும்ப வீசிச்
செந்திரு மார்பி னற்குத் திருமணி மகுடஞ் செய்தார். 90

---

86. என்னது - என்னுடைய. உனவே - உன்னுடையனவே. வான் - மேகம்.

87. மாறன் - வீரபாண்டியன். கோக்கொழுந்து - அரசிளங் குமரன். ஐ : சாரியை. விந்தை மன் - வீர லட்சுமியின் தலைவன். இறந்த - கடந்த.

88. இபம் - யானை. மூவா - கெடாத. சங்கை - ஐயம்.

89. வேள்-முருகக்கடவுள். நாள்கள்-நட்சத்திரங்கள். கோள்-நவக்கிரகங்கள்.

90. இந்திரக்கடவுள் - இந்திரன். மாண்ட - மாட்சிமையுடைய. தந்திரம் - சிற்பநூல். கனகக்கொல்லர் - பொற்கொல்லர்.

பா-ம்—1 பொன்றுரும். 2 வியப்படைந்தா சங்கை.

மங்கல மரபான் மாலை மணிமுடி சூட்டி நாமஞ்
செங்கணே றுயர்த்த நாய்கர் செப்பிய முறையால் வேத
புங்கவ ரிசைப்ப வீதி வலஞ்செய்து புனிதன் பாத
பங்கய மிறைஞ்சி வேந்தன் பன்மணிக் கோயி லெய்தா. 91

போர்மகட் குறையு ளான புயத்தபி டேகத் தென்னன்
தேர்முதற் கருவித் தானைத் தெவ்வர்நீண் முடியெ லாந்தன்
வார்கழற் கமலஞ் சூட மனுமுறை பைங்கூழ் காக்குங்
காரெனக் கருணை பெய்து வையகங் காக்கு நாளில். 92

தந்தைதன் காமக் கிழத்திய ரீன்ற தனயராய்த் தனக்குமுன் னவராய், முந்தைநா ளரசன் பொன்னறை முரித்து முடிமுதற் பொருள்கவர்ந் துட்குஞ், சிந்தைய ராகி மறுபுலத் தொளித்த தெவ்வரைச் சிலர்கொடு விடுப்ப, வந்தவர் கவர்ந்த தனமெலா மீள வாங்கின னீர்ங்கதிர் மருமான். 93

ஆகச் செய்யுள்—1,287

---

91. வேத புங்கவர்-அந்தணர். புனிதன்-சோம சுந்தரக்கடவுள்.

92. போர்மகள் - ஜயலட்சுமி. தெவ்வர் - பகைவர்.

93. உட்கும் - (தீச்செயலால்) இடுக்கிடும். ஈர்ங்கதிர் மருமான் - இங்கு அபிடேக பாண்டியன்.

# 18. வருணன்விட்ட கடலை வற்றச்செய்த படலம்

—o—

காழ்கெழு கண்டத் தண்ணல் கௌரியன் மகுடஞ் சூட
வீழ்கதிர் மணிக ளீந்த வியப்பிது விடையோன் சென்னி
வாழ்கரு முகிலைப் போக்கி மதுரைமேல் வருணன் விட்ட
ஆழ்கடல் வறப்பக் கண்ட வாடலைப் பாடல் செய்வாம். 1

சித்திரை மதியிற் சேர்ந்த சித்திரை நாளிற் றென்னன்
மைத்திரண் மிடற்று வெள்ளி மன்றுளாற் களவு மாண்ட
பத்திமை விதியிற் பண்டம் பற்பல சிறப்ப நல்கிப்
புத்தியும் வீடு நல்கும் பூசனை நடத்த லுற்றான். 2

நறியநெய் யாதி யார நறுங்குழம் பீறு வாட்டி
வெறியகர்ப் புரநீ ராட்டி யற்புத வெள்ளம் பொங்க
இறைவனை வியந்து நோக்கி யேத்துவா னெறிநீர் வைகைத்
துறைவநீ யென்கர்ப் பூர சுந்தர னேயோ வென்றான். 3

பூசனை புரியு மெல்லைப் பொன்னகர்க் கிறைமை பூண்ட
வாசவன் வருடந் தோறும் பூசித்து வருவா னன்ன
காசறு மனத்தான் பூசை கழிவுறு மளவுந் [1]தாழ்த்துத்
தேசமை [2]சிறப்பார் பூசை செய்துதன் னாடு புக்கான். 4

அன்றுநீர்க் கடவுள் வேள்வி நாயக னவையத் தெய்தி
நின்றவன் றன்னோய் தீருஞ் செவ்வியி னிகழ்ச்சி தோன்றக்

---

1. காழ் - கருமை. கௌரியன் - இங்கு அபிடேக பாண்டியன். வறப்ப – வற்ற.

2. சித்திரை நாள் - இங்குப் பௌர்ணமி கூடிய சித்திரை நட்சத்திரம். பத்திமை - அன்பு: பத்தி. புத்தி - போகம்; ஞானமுமாம்.

3. கர்ப்புர நீர் - பச்சைக் கர்ப்பூரக் குழம்பு. அற்புத வெள்ளம் - சிவநேயப் பெருக்கு.

4. பூசை கழிவுறும் அளவும் - பூசை முடியும் வரையும். சிறப்பார் பூசை - (சிவாகம விதிப்படி) சிறப்புடன் பூசையினை,

பா-ம்—1 தாழ்ந்து. 2 சிறப்பாற் பூசை.

குன்றவன் சிறக ரீர்ந்த கொற்றவன் முகத்தை நோக்கி
இன்றுநீ சிறிது தேம்பி யிருத்தியா லிதென்கொ லென்றான். 5

சிலைப்படு முகிலூ ரண்ணல் செப்புவா னிருடீ ரன்பின்
வலைப்படு பெருமா னெம்மான் மதுரையெம் பிரானை யன்பு
தலைப்படு பூசை செய்யத் தாழ்த்ததின் றதனு லிப்போ
தலைப்படச் சிறிதெ னுள்ள மாகுல மடைந்த துண்டால். 6

என்னவவ் விலிங்கந் தான்மா விலிங்கமோ வென்று முந்நீர்
மன்னவன் வினவ லோடு மகபதி மொழிவான் முன்பென்
றன்னரும் பழியும் வேழச் சாபமுந் தொலைத்த தன்றோ
அன்னதை யறிந்தி லாய்கோ லென்னநீ ரண்ணல் கூறும். 7

அற்றது வாகிற் றெய்வ மருத்துவ ராலுந் தீரச்
செற்றிட வரிதா யென்னைத் தெறும்பெரு வயிற்று நோயை
வற்றிடு மாறு தீர்க்குங் கொல்லென வலாரி யையம்
உற்றுநீ வினைய தென்னென் றுண்ணகை யரும்பிச் சொல்வான். 8

அரியய ராலுந் தீராப் பிறவிநோ யறுக்க வல்ல
பெரியவ னிந்த யாக்கைப் பெரும்பிணி பிறவுந் தீர்த்தற்
கரியனோ வையன் செய்யுந் திருவிளை யாட்டை யின்னே
தெரியநீ சோதி யென்னத் தெண்கடற் சேர்ப்பன் சொல்வான். 9

கல்விற கரிந்தோ யிங்கு நான்வருங் காலை வேட்டார்க்
கெல்லையில் காம நல்குஞ் சுரபியு மின்பால் சோரப்
புல்லிய கன்று மாற்றுப் பட்டவப் போது கண்ட
நல்லசோ பனத்தா லிந்த நன்மொழி கேட்டே னென்னு. 10

---

5. வேள்வி நாயகன் - இந்திரன், நின்றவன் - வருணன். தன் நோய் - தன்னுடைய சலோதர நோய்; வயிற்று நீர் நோய். ஈர்ந்த - அறுத்த. தேம்பி - வருந்தி.

6. சிலை - இந்திர தனுசு. அன்பின் வலை - பத்தி வலை. ஆகுலம் - துன்பம்.

7. மா - மேம்பட்ட. நீர் அண்ணல் - வருணன்.

8. அது - அச்சிவலிங்கம். தெய்வ மருத்துவர் - அச்சுவனி தேவர். தெறும் - வருத்தும்.

9. அரி அயராலும் - பிரம விஷ்ணுக்களாலும். கடல் சேர்ப்பன் - கடல் தலைவனாகிய வருணன்.

10. காமம் - விரும்பப்பட்ட பொருள் : ஆகுபெயர். ஆறு - வழி. சோபனம் - நிமித்தம்.

வருணனு மேகி வெள்ளி மன்றுடை யடிகள் செய்யுந்
திருவிளை யாடல் கண்டு வயிற்றுநோய் தீர்ப்பா னெண்ணி
முரசதிர் மதுரை மூதூர் முற்றுநீ யழித்தி யென்னுக்
குரைகட றன்னை வல்லே கூவினு னேவி னுனே. 11

கொதித்தெழுந்து தருக்களிறக் கொத்தியெடுத் தெத்திசையும்
அதிர்த்தெறிந்து வரைகளெல்லா மகழ்ந்துதிசைப் புறஞ்செல்லப்
பிதிர்த்தெறிந்து மாடநிரை பெயர்த்தெறிந்து பிரளயத்தில்
உதித்தெழுந்து வருவதென வோங்குதிரைக் கடல்வருமால். 12

கந்தமலர்த் தனிக்கடவுள் கற்பத்து மழியாத
இந்தவளம் பதிக்கிடையூ றெய்தியதெம் பதிக்குமினி
வந்ததெனச் சுந்தரனை வந்திறைஞ்சி வானவருஞ்
சிந்தைகலங் கினர்வருணன் செய்தசெய றெளியாதார். 13

சூலமோ டழலேந்துஞ் சொக்கர்திரு விளையாட்டின்
சீலமோ நாமிழைத்த தீவினையின் றிறமிதுவோ
ஆலமோ வுலகமெலா மழியவரும் பேரூழிக்
காலமோ வெனக்கலங்கிக் கடிநகரம் பனிப்பெய்த. 14

மண்புதைக்கத் திசைபுதைக்க மயங்கிருள்போல் வருநீத்தம்
விண்புதைக்க வெழுமாட வியனகரின் புறத்திரவி
கண்புதைக்க வருமளவிற் கண்டரச னடுநடுங்கிப்
பெண்புதைக்கு மொருபாகப் பிரானடியே சரணென்னு. 15

ஆலமெழுந் திமையவர்மே [1]லடர்க்கவரும் பொழுதஞ்சும்
மாலெனவுந் தன்னுயிர்மேன் மறலிவரும் பொழுதஞ்சும்
பாலனென வுங்கலங்கிப் பசுபதிசே வடியில்விழுந்
தோலமென முறையிட்டா னுலகுபுக ழுறையிட்டான். 16

---

11. முரசு - இங்குக் கொடைமுரசு. வல்லே - விரைந்து.
12. கொத்தி - கல்லி. பிதிர்த்து - பொடிசெய்து.
13. கந்தமலர்த் தனிக்கடவுள் கற்பத்தும் - பிரம கற்பத்தும்.
14. சீலம் - செய்கை. நகரம் - நகரமாந்தர். பனிப்பு-நடுக்கம்.
15. நீத்தம் - பெருவெள்ளம். அரசன் - அபிடேக பாண்டியன்.
16. ஆலம் - விஷம். மறலி - எமன். பாலன் - மார்க்கண்டன். உலகு புகழ் உறையிட்டான் - உலகத்தார் கூறும் புகழையே கவசமாக அணிந்தான்; உலகத்திற்குத் தனது புகழாகிய கவசத்தை அணிந்தவன் எனினுமாம்.

பா-ம்—1 லடரவரும்.

முறையிட்ட செழியனெதிர் முறுவலித்தஞ் சலையென்னுக்
கறையிட்டு விண்புரந்த கந்தரசுந் தரக்கடவுள்
துறையிட்டு வருகடலைச் சுவறப்போய்ப் பருகுமெனப்
பிறையிட்ட திருச்சடையிற் பெயனான்கும் வரவிடுத்தான். 17

நிவப்புற வெழுந்த நான்கு மேகமு மிமிர்ந்து வாய்விட்
டுவர்ப்புறு கடலை வாரி யுறிஞ்சின வுறிஞ்ச லோடுஞ்
சிவப்பெருங் கடவுள் யார்க்குந் தேவெனத் தெளிந்தோ ரேழு
பவப்பெரும் பௌவம் போலப் பசையற வறந்த தன்றே. 18

அந்நிலை நகரு ளாரும் வானவ ராதி யோருந்
தென்னவர் பிரானு மெந்தை திருவிளை யாட னோக்கிப்
பன்னரு மகிழ்ச்சி பொங்கப் பன்முறை புகழ்ந்து பாடி
இன்னறீர் மனத்த ராகி யீறிலா வின்பத் தாழ்ந்தார். 19

ஆகச் செய்யுள்—1,306

## மதுரைக் காண்டம்

முற்றிற்று

---

17. கறை - விஷம். துறை யிட்டு - பல துறைகளை உண்டாக்கி. பெயல்-மேகம். "திருச்சடை நுனியில் நான்கு மேகங்களை உண்டாக்கி அனுப்பினார் என்ற ஆலாசிய மான்மியத்தின் கருத்தும் அடங்க, 'திருச்சடையிற் பெயல் நான்கும் வரவிடுத்தான்' என்றார்.

18. நிவப்புற - உயர. சிவப்பெருங் கடவுள் - பரமசிவம். தே - கடவுள். பசை - நீர்ப்பசை.

19. எந்தை - எம் தந்தையாகிய சோமசுந்தரக் கடவுள். ஈறு இலா இன்பம் - முடிவில்லாத இன்பம்.

உ

செந்திலாண்டவன் துணை

திருச்சிற்றம்பலம்

# 2. கூடற் காண்டம்



## 19. நான்மாடக்கூடலான படலம்

### பரமசிவம்

பூதங்க ளல்ல பொறியல்ல வேறு புலனல்ல வுள்ள மதியின்
பேதங்க ளல்ல வினையன்றி நின்ற பிறிதல்ல வென்று பெருநூல்
வேதங்கி டந்து தடுமாறும் வஞ்ச வெளியென்ப கூடன் மறுகிற்
பாதங்க ணோவ வளையிந்த னாதி பகர்வாரை யாயு மவரே. 1

### சிவசத்தி

திருமகள் வலக்கண் வாக்கின் சேயிழை யிடக்கண் ஞானப்
பெருமக ளுதற்க ணாகப் பெற்றுவான் செல்வங் கல்வி
அருமைவீ டளிப்பாள் யாவ ளவளுயிர்த் துணைவன் காண
ஒருமுலை மறைந்து நாணி யொசிந்தபூங் கொம்பி னின்றாள். 2



கதிர்மதி மிலைந்த வேணிக் கண்ணுதல் வருண னேய
அதிர்கடல் வறப்பச் செய்த வாடலீ தனையா னேய
முதிர்மழை யேழின் மேலு முன்னைநான் முகிலும் போக்கி
மதுரைநான் மாடக் கூட லாக்கிய வண்ணஞ் சொல்வாம். 3

எற்றுதெண் டிரைநீர்ச் சேர்ப்பன் றன்செய விழுக்கி நாணம்
உற்றிரு கண்ணுஞ் சேப்ப வுடன்றெழு கோபச் செந்தீப்

---

1. உள்ளமதியின் பேதங்கள் - மனமாதி அந்தக்கரண விகற்பங்கள். பிறிது - ஆன்மா. வஞ்சவெளி - வெறுவெளி. வளை - வளையல். இந்தனம் - விறகு. ஆதி என்றதனால் மாணிக்கம் விற்றதும் குதிரை விற்றதும் கொள்க.

2. வாக்கின் சேயிழை - சரசுவதி. ஞானப்பெருமகள் - உமை.

3. ஏய - ஏவிய. ஆடல் - திருவிளையாடல்.

பற்றிட வாகம் வெம்பிப் பரவையும் யாறும் வெந்து
வற்றிட வெகுண்டு நின்றான் மானமும் வலியுங் குன்றான். 4

தளிர்புனன் மதுரை மூதூர் நாயக னுட றன்னைத்
தெளிகில னாகிப் பின்னுஞ் செழுமுகி லேழுங் கூவிக்
குளிர்கடல் வறந்த தென்னக் குடித்தெழுந் திடித்துப் பெய்யா
ஒளிவளர் மதுரை முற்று மொல்லெனக் களைமி னென்றான். 5

பொள்ளென மேக மேழும் புகுந்துபார் தெரிய முந்நீர்ப்
பள்ளமும் வறப்ப முற்றப் பருகிமெய் கருகி மின்னித்
தெள்ளருந் திசையும் வானுஞ் செவிடுறப் பிலமும் பாரும்
விள்ளமால் வரைக ளெட்டும் வெடிபட மேருச் சாய. 6

ஊழிநாள் வெடிக்கு மண்ட கடாகத்தி னொலிபோ லார்த்துப்
பாழிவா னுருமு வீழப் பணாடவி மணிகள் சிந்தி
ஆழிநீர் ஞாலந் தாங்கு மராவுட னெளியத் திக்கிற்
சூழிமால் யானை நின்ற நிலைகெடத் துணுக்கங் கொள்ள. 7

வெள்ளிய நீறு பூத்த முழவென வீங்கு காய்போற்
றெள்ளிய வாலி சிந்தத் திரண்டதிண் பளிக்குத் தூண்போல்
ஒள்ளிய தாரை சோர வும்பர்மீன் கணங்க ளோடுந்
துள்ளிய திரையி லாடு மீன்கணந் துடித்து வீழ. 8

ஆர்த்தெழு கொண்மூ வேழுஞ் சராசர மனைத்துஞ் சூழ்ந்து
போர்த்தன ஞால முண்ணப் புக்கதோர் வடிவங் கொண்ட
தீர்த்தனில் விசும்பும் பாருந் திசைகளுந் தெரியா வாகப்
பார்த்தகண் ணுழையா வாகப் பரந்திருள் கான்ற வன்றே. 9

பைஞ்சுட ரெறிக்கும் பச்சை காரொளி பரப்பு நீலம்
புஞ்சவா ளுடுக்க ளென்ன நித்திலம் பொன்னங் குப்பை

---

4. ஆகம் - உடல். வெம்பி - கருகி. பரவை - கடல்.

5. தளிர் - குளிர்ச்சி. பெய்யா-பெய்து. ஒளி - புகழ். களைமின்- அழியுங்கள்.

6. முந்நீர்ப் பள்ளமும் - கடலும். விள்ள - பிளவுபட.

7. பாழி - வலிய. மணி-மாணிக்கம். அரா-இங்கு ஆதிசேடன். சூழி - முகபடாம்.

8. முழவு - மத்தளம். வீங்குகாய் - பருத்த பூசினிக்காய். ஆலி - மழைத்துளி.

9. தீர்த்தன் - இங்குப் பிரளய கால உருத்திரமூர்த்தி. கான்ற - தோற்றுவித்தன.

செஞ்சுடர் மணிக டுப்புச் சிதறுவ கணவ ரோடும்
விஞ்சையர் மகளி ரூடி வெறுத்தெறி கலன்கள் போல. 10

கடியகா லுதைப்பப் பெய்யுங் [1]கடுஞ்செல வெழிலி மாடக்
கொடியநீ ணகரைச் சூழ்ந்து புதைத்தலுங் கோனொன் றேச்சிப்
படியெலாம் புரக்குங் கோனு நகருளார் பலரு ஞாலம்
மடியுநா ளிதுவே யென்று மயங்கினு ருயங்கி னாரே. 11

கண்ணுதன் மூர்த்தி தானே யின்னமுங் காக்கு மென்னப்
புண்ணிய நகரா ரோடும் பொருக்கெனக் கோயி லெய்தி
விண்ணிழி விமான வாழ்க்கை விடையவ னடிக்கீழ் வீழ்ந்தான்
அண்ணலா ராடன் மூன்று மறிந்துகை கண்ட வேந்தன். 12

விடையினை யால முண்ட மிடற்றினை கங்கை தாங்குஞ்
சடையினை கூற்றை வென்ற தாளினை மேரு சாபப்
படையினை யடியேந் துன்பப் பாட்டினை நீக்கி யாளும்
நடையினை [2]யாகி யெங்க ணல்லுயிர் காத்தல் வேண்டும். 13

என்னலுந் தென்னர்க் கென்று மெய்திய விடுக்கண் டீர்க்கும்
முன்னவன் முன்போ னன்கு முகிலையு நோக்கி யின்ன
தொன்னக ரெல்லை நான்குஞ் சூழ்ந்துநான் மாட மாகி
[3]வின்னெடு மாரி யேழும் விலக்குமி னெனவி டுத்தான். 14

வந்துநான் மாட மாகி வளைந்துநாற் றிசையுஞ் சூழ்ந்து
சந்துவாய் தெரியா தொன்றித் தாமொரு குடிலாய் மாடப்

---

10. புஞ்சவான் - திரண்ட ஒளிபொருந்திய. பொன்னங்குப்பை-பொற்குவியல். ஏழு மேகங்களுள் சம்வர்த்தம், புட்கலாவர்த்தம் என்னும் இரண்டு மேகங்களே மரகதம், நீலம், முத்து, பொன், பதுமராகம், பவளம் என்ற மணிகளைச் சொரிந்தன என்க.

11. கடி - அச்சம்; வேகம். கால் உதைப்ப-காற்றடித்துத் தாக்க. எழிலி - மேகம்.

12. பொருக்கென - விரைந்து. விண்ணிழி விமான வாழ்க்கை விடையவன் - சோமசுந்தரக் கடவுள்.

13. மேரு சாபப்படை - மேருவாகிய விற் படை. துன்பப்பாடு - துன்ப மிகுதி.

14. முன்னவன் - சோமசுந்தரக் கடவுள். இன்ன - இந்த. நெடுமாரி - பெரிய மேகங்கள்.

பா-ம்—1 கடுஞ்சல. 2 யாகி லெங்க. 3 இந்நெடு.

பந்திகோ புரஞ்செய் குன்றங் கால்கள்போற் பரிப்பப் போர்த்த
இந்துவார் சடையோ னேய வெழிலிமா நகர மெங்கும். 15

அன்னநாள் மாடத் துள்ளு நகருளா ரமைச்சர் வேந்தன்
றன்னநாற் கருவித் தானை சராசரம் பிறவுந் தாழ்ந்து
முன்னைநா டனினு மின்ப மூழ்கிநன் கிருந்தா ரூழிற்
பொன்னனாள் பாகன் றுளிற் புக்கமர்ந் திருந்தா ரொத்தார். 16

கழைகெழு வரையி னுச்சி கவிழ்கின்ற புயல்போற் கார்சூழ்ந்
திழைமணி மாடத் தும்ப ரெறிதுளி யுடைந்து துள்ளத்
தழைகடல் வறப்ப வாங்கித் தம்முடல் வறப்பப் பெய்து
மழைகளும் வெள்கி நின்ற வருணனும் வெள்கி நின்றான். 17

நடுங்கினன் கழிந்த வச்ச நாணமீ தார மானம்
ஒடுங்கின னுள்ளத் துள்ளோ ருவகைவந் [1]தெய்தப் பொற்பூத்
தடங்கரை குறுகா முன்னோய் தணிந்துபின் றோய்ந்து பாசம்
[2]மடங்கினன் மடங்கா வன்பின் வள்ளலைப் பூசை செய்வான். 18

புனிதநீ றுடிக் கண்டி பூண்டுவான் கங்கை யாதி
வனிதையர் பசும்பொற் கும்ப வாசநீர் வடித்து நீட்டப்
பனிமலர் சந்தங் கந்த மணிக்கலன் பசும்பொன் னுடை
இனையன பிறவு மீன்று கற்பக மெடுத்துக் காட்ட. 19

ஐங்கனி யமுத மைந்து கௌவிய மமுது தூபஞ்
செங்கதிர் விளக்க மின்ன தேவரான் கொடுப்பச் சேற்கண்

---

15. சந்துவாய்-பொருந்துவாய். குடில்-குடிசை. செய்குன்றம்-கட்டுமலை. பரிப்ப - தாங்க. இந்து - சந்திரன்.

16. தன்ன - தன்னுடைய. தாழ்ந்து - தங்கி. முன்னைநாள் - வருணன் விட்ட கடலை வற்றச்செய்த காலம். ஊழின் - (சிவபுண்ணிய முதிர்ச்சியால் இருவினை யொப்பு மலபரிபாகம் வந்து திருவருள் மேலிட்டால் கூடும்) ஊழ்வினைப்பயனால்.

17. கழை - மூங்கில். கவிழ்கின்ற - பெய்கின்ற. வெள்கி - வெண்ணிறமுற்று; நாணுற்று.

18. பொற்பூத்தடம் - பொற்றாமரைத் தீர்த்தம். தோய்ந்து - நீராடி. மடங்கா - குறையாத.

19. கண்டி-உருத்திராட்சமாலை. சந்தம்-சந்தனக்குழம்பு. கந்தம்-வாசனைப் பொருள்கள்.

பா-ம்—1 தேமக் கஞ்சத். 2 அடங்கின னடங்கா வன்பினண்ணலைப்.

நங்கைதன் பதியைப் பூசித் தாயிர நாமங் கூறிப்
பைங்கதிர் முத்தஞ் சாத்தித் தொழுதடி பணிந்து நின்றான். 20

அருச்சனை யுவந்த வாதி யமலனீ யாது வேண்டிற்
றுரைத்தியென் றோத நீர்க்கோ னெல்லைதாழ்ந் தொன்றி னாலுங்
கரைத்திட வரிய விந்தக் கடியவென் வயிற்று நோய்நின்
திரைத்தட [1]மாடு முன்னே தீர்ந்திடப் பெற்றே னெந்தாய். 21

வேதமுதற் கலைகாட்சி முதலளவை விரிஞ்சன்முதல் விண்ணோர் செய்யுஞ், சோதனையு ளகப்படாச் சோதியுனைச் சோதிக்கத் துணிந்தே னந்தோ, பேதைமையே னிடத்தென்ன குணங்கண்டென் பிணிதீர்த்தென் பெற்றா யாசை, கோதமிலாய் குற்றமே குணமாகக் கொள்வதுநின் குணமோ வையா. 22

பொன்னகரான் காலந்தாழ்த் துனையருச்சித் தயர்ச்சியொடும் போன வாறும், என்னெனயான் வினவியதும் வலாரியிறை கொடுத்ததுமவ் விறைக்கு நேர்யான், பின்னைவினா யதுமவன்சொல் வழியுன்னைச் சோதித்த பெற்றி தானும், முன்னவனே யுன்னருளா லென்பிணிக்கு மருந்தாகி முடிந்த வாறே. 23

ஆறுமதி முடியணிந்த வருட்கடலே வயிற்றுநோ யன்றி மேனாள், மாறுபடு மிருவினையு மலவலியுங் கெடவீட்டின் வழியும்

20. ஐங்கனி - எலுமிச்சம்பழம், நாரத்தம்பழம், தமரத்தம்பழம், குளஞ்சிப்பழம், மாதுளம்பழம் என்பன. அமுதம் ஐந்து - பஞ்சாமிர்தம்; அது பால், தயிர், நெய், தேன், சருக்கரை என்ற ஐந்தும் கூடியது; இவற்றுடன் வாழைப்பழம், பலாப்பழம், மாம்பழம் என்னும் மூன்றையுங் கூட்டில் பல பஞ்சாமிர்தம் எனப்படும். கௌவியம் - பஞ்சகௌவியம்.

21. நீர்க்கோன் - வருணன். ஒன்றினாலும் - மணி மந்திர ஔஷதாதிகளினாலும்.

22. வேத முதற் கலை அளவை-வேதமாகிய முதன்மை பொருந்திய கலையளவை: இஃது ஆகமவளவை. காட்சி - பிரத்தியட்ச அளவை. முதல் அளவை-அனுமான அளவை. அளவை-பிரமாணம். விரிஞ்சன் - பிரமன். கோதம் - குரோதம் - வெறுப்பு.

23. அயர்ச்சி - சோர்வு. இறை கொடுத்தது - விடை அளித்தது. இச்செய்யுள் கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என்ற மூன்று உண்மை ஞானங்களை உட்கொண்டு விளங்குதல் அறிக.

பா-ம்—1 மாடி யின்னே.

பெற்றேன், வேறினிமந் திரமென்னை மணியென்னை மருந்தென்னை
மெய்ம்மை யாகத், தேறுமவர்க் கிப்புனித தீர்த்தமே பிணியனைத்
துந் தீர்ப்ப தன்றோ. 24

அடியனேன் முன்னஞ் செய்த வபராத மிரண்டுந் தீரும்
படிபொறுத் தருள்வா யென்று பன்முறை பரவித் தாழ்ந்து
மடிவிலா மகிழ்ச்சி பொங்க வரங்களுஞ் சிறிது வேண்டிக்
கடியதன் னகரம் புக்கான் குடதிசைக் காவல் வேந்தன். 25

வன்றிறல் வருணன் விட்ட மாரியை விலக்க வீசன்
மின்றிகழ் சடையி னின்று நீங்கிய மேக நான்குங்
குன்றுபோ னிவந்து நான்கு கூடமாக் கூடலாலே
அன்றுநான் மாடக் கூட லானதான் மதுரை மூதூர். 26

ஆகச் செய்யுள்—1,332

---

24. மேனாள் - அநாதியே. மாறுபடும் - (என்னுடன்) முரணிய. மல வலி - ஆணவமலக்கட்டு. மணி - இங்குக் குளிகை; இது தரிப்பதால் நோய் நீங்குதலாகும்.

25. அபராதம் இரண்டு - இரண்டு குற்றங்கள். அவை, மதுரையை அழிக்கக் கடலை ஏவியதும், மேகங்களை ஏவியதும் ஆகும். பரவி - துதித்து. குடதிசைக் காவல் வேந்தன் - மேற்றிசைக் காவலனாகிய வருணன்.

26. நிவந்து - உயர்ந்து. அன்று - அன்று முதல். நான் மாடக் கூடல் - மதுரையின் வேறு பெயர்.

# 20. எல்லாம் வல்ல [1]சித்தரான படலம்

—o—

சத்த நான்மறைப் பொருள்வரை தள்ளுநீண் முடிமேல்
வைத்த கார்கணன் மாடமாய் மதுரைமேல் வருணன்
உய்த்த மாரியைத் தடுத்தவா றுரைத்துமே றுயர்த்தோர்
சித்த ராய்விளை யாடிய செயல்சிறி துரைப்பாம். 1

தேட ருங்கதிர் மணிமுடிச் செழியனும் பாண்டி
நாட ருந்திரு வெய்திமே னல்லவீ டெய்தக்
கூட லம்பதி மேவிய குணங்குறி கடந்த
வேட ரங்கொரு சித்தமெய் வேடராய் வருவார். 2

வட்ட வார்சடைக் குஞ்சியும் பூணநூன் மார்பும்
இட்ட நீறணி திலகமு மிணைக்குழை தூங்க
விட்ட வெள்ளைமுத் திரையுந்தோல் விரித்தபட் டிகையுஞ்
சுட்ட வெண்பொடிப் பொக்கணந் தூக்கிய தோளும். 3

தூய்ய வெண்பொடி யழிந்துமெய் சிவந்திடச் சுவடு
செய்யும் வெண்டிரட் படிகநீண் மாலையுஞ் சிவந்த
கையி லங்குகட் டங்கமுங் கண்டவர் மனஞ்சென்
றுய்ய வன்புற வீக்கிய வுதரபந் தனமும். 4

அட்ட வேங்கையி னுரிவைகீண் டசைத்தகோ வணமும்
ஒட்ட வீக்கிய புலியத ளுடுக்கையு மிடத்தோள்

---

1. சத்தம் - ஒலிவடிவாகிய. வரை தள்ளும்-எல்லையைக் கடந்த.

2. குணம்-ஆணவம். மாயை, கன்மம் என்ற மூன்று. குறி-ஆண், பெண் என்ற பகுப்பு. வேடர் - வடிவினர் ! வேண்டுருக் கொள்வோர் எனினுமாம்.

3. சடைக்குஞ்சி - சடையாகிய சிகை. வெள்ளை முத்திரை - படிக குண்டலம். பட்டிகை - அரைஞாண். பொக்கணம் - விபூதிப் பை. பிறர்க்கு விபூதி தருதற்கு இப்பி வடிவாகத் தலையோட்டில் அமைத்த தொரு கருவி என்பர் நச்சினார்க்கினியர்.

4. கட்டங்கம் - மழு. வன்புற - வலியுற, சிக்கென.

பா-ம்—சித்தர் திருவிளையாடற் படலம்.

இட்ட யோகபட் டிகையும்பொன் னிடையிடை கட்டப்
பட்ட சுஃறெருலி வேத்திரப் படைக்கையும் படைத்து. 5

வேத கிண்கிணி சிலம்புசூழ்ந் தடிகளின் மிழற்ற
ஓத ரும்பத முளரியூ றருண்மது வொழுகப்
போத வானந்த மதுநுகர்ந் தலர்முகம் பொலியப்
பாத பங்கய முபரிடப் பாதுகை சூட. 6

சிறிது மூரலும் வெயர்வையுந் திருமுகத் தரும்பக்
குறுகி யாவணஞ் சித்திர கூடநாற் சந்தி
மறுகு சூளிகை யுபரிகை மாளிகை வாயில்
அறுகு சூழ்திரைத் தெற்றியிவ் விடந்தொறு மடைந்து. 7

தெற்கி ருப்பவர் போல்வட திசைவயிற் சென்று
புக்கி ருப்பதுங் கிழக்குளார் போலமேற் றிசையில்
நக்கி ருப்பதும் யாவரு நாடின ரறியத்
தக்க தன்றியே யிந்திர சாலமாத் தணந்தும். 8

சேய வெற்பினை யணியதாச் செய்துமற் றணித்தாய்
மேய வெற்பினைச் சேயதா விடுத்துமெய்ம் முதுமூப்
பாய மக்களை யிளையவ ராக்கியுங் குதலை
வாய மக்களைக் கழிமுது மக்களா வகுத்தும். 9

ஆணைப் பெண்ணுரு வாக்கியும் பெண்ணையா ணுருவா
மாணக் காட்டியு மலடியை மகப்பெறச் செய்துங்
கோணற் கூன்செவி டூமைகண் குருடுபங் கெவருங்
காணத் தீர்த்துநா லுலோகமுங் கனகமாச் செய்தும். 10

செல்வர் தம்மனைப் பொருளெலாம் வறுமையிற் சிறந்தோர்
இல்ல மெய்தவு நட்டவ ரிகலின்றித் தம்மின்

---

5. உரிவை, அதள் - தோல். சுஃறெருலி - பிரம்பை வீசும்போது உண்டாகும் ஒருவிதக் குறிப்போசை.

6. அருள் - திருவருள். மது - தேன். பாதுகை - மிதியடி.

7. மூரல்-புன்னகை. ஆவணம்-கடைவீதி. சூளிகை-வீட்டிறப்பு. அறுகு - சிங்கம். தெற்றி - திண்ணை.

8. நக்கு - நகைத்து. நாடுதல்-தேடுதல். தணந்தும்-மறைந்தும்

9. சேய வெற்பு - தூரத்திலுள்ள மலை. மெய்ம்முது மூப்பு ஆய மக்கள் - விருத்தர். குதலை - இளஞ்சொல். கழி - மிக்க.

10. பங்கு-முடம். நால் உலோகம் - வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம் என்ற நான்கு.

மல்லு வெஞ்சம ரிழைப்பவுங் காஞ்சிர மரத்தின்
நல்ல தீங்கனி பழுப்பவும் விஞ்சைக ணயந்தும். 11

பருவ மாறிய பருவத்தில் வைகைநீர் பரந்து
வருவ தாக்கியு மீளவும் வறந்திடச் செய்தும்
பொருவி றீஞ்சுவை யோடையும் பொய்கையு முவர்ப்புத்
தருவ வாக்கியு முவரியின் சுவையவாத் தந்தும். 12

வீசி மாத்திரைக் கோலினை விண்ணினட் டதன்மேல்
ஊசி நாட்டியிட் டூசிமேற் பெருவிர லூன்றி
ஆசி லாடியு மூசிமேற் றலைகிழக் காக
மாசில் சேவடிப் போதுவான் மலர்ந்திடச் சுழன்றும். 13

சண்ட வெம்பணிப் பகையெனப் பறந்துவிண் டாவிக்
கொண்ட லைப்பிடித் திடியொடுங் குடித்தநீர் பிழிந்து
கண்ட வர்க்கதி சயம் பெறக் காட்டியுங் காண
விண்ட லத்தினிற் பண்டுபோ லிறைகொள விடுத்தும். 14

எல்லி டைப்படும் பொருள்களை யிராவெழப் பார்த்தும்
அல்லி டைப்படும் பொருள்களைப் பகல்வர வமைத்தும்
வல்ல ழற்புன லுளர்வளி வலிகெடப் பார்த்தும்
நல்ல போதுகாய் கனியிலா நாள்படக் கண்டும். 15

பீளை கால்விழிக் கிழவரைப் பிரம்பினால் வருடிக்
காளை யாடவ ராக்கியக் கணவருக் கிசைய
[1]ஈளை வாய்முது கற்பினார் கருவடைந் திளமை
ஆள வேத்திரம் வருடிநீ றளித்தருள் செய்தும். 16

---

11. இகல் - பகை. மல்லு வெம் சமர் - கொடிய மற்போர். உ: சாரிகை. காஞ்சிர மரம் - எட்டி மரம். விஞ்சை - வித்தைகள்.

12. பருவம் - முதுவேனிற் பருவம். பரந்து - பெருக்கெடுத்து. உவரி - கடல்.

13. ஆசு இல் ஆடியும் - குறைபாடில்லாமல் ஆடியருளியும். தலை இழக்காக - தலைகீழாக.

14. வெம் சண்ட பணிப்பகை - கொடிய வேகத்தையுடைய கருடன். பணி - பாம்பு. இறைகொள - உலாவி வசித்த.

15. எல் - பகல். அல் - இரவு. வளி - காற்று.

16. வருடி - தடவி. வேத்திரம் - பிரம்பு.

பா-ம்—1 வீளை. (வீளை - வாயாற் செய்யும் ஒரு வகை ஒலி.)

அகர மாதிமூன் றாகிய வாகரு டணமே
புகரி லாவதி ரிச்சிய மஞ்சனம் பொருவில்
வகர மாதிமூன் றாகிய வசியமே வாதம்
இகலி லாவயத் தம்பமென் றின்னவை செய்தும். 17

வேத நூறெளி யார்கெளக் கலைகளும் விளங்கப்
பூதி நாவினிற் சிதறியும் பூழியன் காதன்
மாத ராரொடும் பயில்புது மணமலர்க் காவிற்
காத நீண்டகோட் டெங்கினைக் கரும்பனை செய்தும். 18

ஏனை வான்றருக் குலங்களைப் புட்களை யிருகோட்
டானை யாதிபல் விலங்கினை யொன்றையொன் றாக
ஞான நோக்கினு ணோக்கியு நாடிய வினையோர்
மானி ணோக்கிய ராகிலோ மெனவெழில் வாய்த்தும். 19

நாக நாடுபொன் னாட்டுள பொருளுமந் நகருள்
ஆக வாக்கியு மின்னணம் விச்சைக ளனந்தம்
மாக நாயகன் மலைமக ணாயகன் மதுரை
ஏக நாயகன் றிருவிளை யாடல்செய் திருந்தான். 20

சித்த யோகிகள் செய்கின்ற வாடன்மேற் செலுத்தி
வைத்த கண்களுஞ் சிந்தையும் வாங்கலர் திகைத்துத்

---

17. அகரம் ஆதி-அகரமே முதலிலுள்ள. ஆகருஷணம்-தூரத்திலுள்ள பொருளைச் சமீபத்தே வர இழுத்தல். அதிரிச்சியம் - கண்களுக்குப் புலப்படுகின்ற பொருளைப் புலப்படாமற் செய்தல். அஞ்சனம்-மறைந்து கிடக்கும் பொருளை வெளிப்படக் காட்டுதல். வசியம்-பகைவரையும் தன் வயப்படுதல். வாதம் - இரும்பு முதலியவற்றைப் பொன்னாக்குதல். வயத்தம்பம் - வயதைத் தம்பித்தல்; அது குழந்தையைக் குழந்தையாகவே இருக்கச் செய்தல்.

18. பூதி - விபூதி. பூழியன் - அபிடேக பாண்டியன். காதம் - காததூரம். கோள் தெங்கு - காய்களைக் கொண்ட தென்னைமரம். கோன் - வயிரமுமாம்.

19. தருக்குலம் - மரங்கள். எழில் - பேரழகு.

20. நாக நாடு - பாதலம். இன்னணம்-இவ்விதம். ஏகநாயகன் - ஒப்பற்ற தலைவன்.

21. ஆள்வினைத்தொழில் - நித்திய கருமங்கள். முத்த - சீவன் முத்தி பெற்ற; விடுபட்ட. (முத்தர் - ஆன்மாவின் தோற்றமற்றுச் சிவதோற்மாய் நிற்பவர்; இவர் உலகில் தாமரையிலைத் தண்ணீர் போல் கூடியிருப்பர்.)

தத்த மாள்வினைத் தொழின்மறந் திருந்தனர் தகைசால்
முத்த வேதிய ராதிய முதுநகர் மாக்கள். 21

இனைய செய்தியை யுழையரா லிறைமக னறிந்தான்
அனைய சித்தரை யிங்ஙனந் தருகென வடுத்தார்
தனைய கற்றினன் சித்தரைச் சார்ந்தவர் தாமும்
வினையை வென்றவ ராடலை வியந்துகண் டிருந்தார். 22

அமைச்சர் தங்களை விடுத்தன னமைச்சருஞ் சித்தர்
தமைச்ச ரண்பணிந் தரசன்முன் வருகெனத் தவத்தோர்
எமக்கு மன்னனு லென்பய னெனமறுத் திடமண்
சுமக்கு மன்னவன் [1]றம்மவர் தொழுதனர் போனார். 23

மன்னன்மு னமைச்சர் சித்தர் மறுத்துரை மாற்றங் கூற
முன்னவ னருள்பெற் றிம்மை மறுமையு முனிந்த யோகர்
இந்நில வேந்தர் மட்டோ விந்திர னயன்மா லேனோர்
தன்னையு மதிப்ப ரோவென் றிருந்தனன் தரும வேந்தன். 24

ஆகச் செய்யுள்—1,356

---

22. உழையர் - வேவு பார்ப்பவர். வினையை வென்றவர் - இயல்பாகவே பாசங்களினின்று நீங்கியவர்; சித்தமூர்த்தி.

23. தவத்தோர் - சித்தமூர்த்தி. தம்மவர் - உறவினர்; இங்கு மந்திரிகள்.

24. முன்னவன் - சிவபெருமான். தரும வேந்தன் - அபிடேக பாண்டியன். தருமம் - இங்குச் சிவபுண்ணிய வடிவு.

பா-ம்—1 றம்மனோர்.

# 21. கல்லானைக்குக் கரும்பருத்திய படலம்

—o—

செல்லார் பொழில்சூழ் மதுராபுரிச் சித்த ரெல்லாம்
வல்லா ரவரா டலையா ருரைசெய்ய வல்லார்
எல்லாரும் வியப்புற வித்தனிச் சித்த சாமி
கல்லானை தின்னக் கரும்பீந்த கதையுஞ் சொல்வாம். 1

பின்னேய மச்சம் பெருகப்பெரி யோரை யெண்ணு
தென்னே யெளியா ரெனயானிகழ்ந் திங்ங னீண்டச்
சொன்னே னவர்க்கென் குறையென்னிற் றுருவி நானே
தன்னே ரிலாதார் தமைக்காணத் [1]தகுவ னென்று. 2

ஆனந்த சித்தர் தமைக்காண்பலென் றன்பு கூர்ந்த
மீனந் தரித்த கொடிவேந்தன் குறிப்பு நோக்கி
மோனந் தரித்த சிவயோகரு முந்தித் தம்பொன்
மானந் தனக்கு வடமேற்றிசை வந்தி ருந்தார். 3

அருகாத செல்வத் தவனன்றுதைத் திங்க டோற்றம்
வருகால மாக மதுரேசனை வந்து வந்தித்
திருகா [2]தரத்தாற் கழிந்துள்வல மாக [3]மீள
வருவா னவன்முன் வருகாஞ்சுகி வன்கண் மாக்கள். 4

சீறிட்ட வேங்கை யதட்சேக்கையர் சீறி யைந்தும்
பாறிட்ட வேடர் யோகபட்டத்தர் கட்டங் கத்தில்

---

1. செல் - மேகம். கல்லானை - கல்லால் ஆகிய யானை.

2. ஈண்ட - வரும்படி. துருவி - தேடி.

3. காண்பல் - காண்பேன். குறிப்பு - உளக்குறிப்பு. மானம் - இந்திர விமானம்.

4. அருகாத செல்வத்தவன் - அபிடேக பாண்டியன். ஆதரம் - அன்பு. கழிதல் - மிகுதல். காஞ்சுகி வன்கண் மாக்கள் - மெய்க்காப்பாளர்கள். கஞ்சுகம் - சட்டை.

பா-ம்—1 தகுவ தென்று. 2 தரத்தான். 3 முன்பு.

ஏறிட்ட கைய ரிறுமாந்திருப் பாரை நோக்கி
மாறிட்டு [1]நீக்கி யெழப்போகென வந்து சொன்னார். 5

பின்னா வருதென் னர்பிரான்பெரி யோரை நோக்கி
[2]என்னாடு நும்மூ ருமக்கென்வரும் யாது வேண்டும்
நுந்நாம மேது நுவன்மின்னென வைய ரெந்த
நன்னாடு மெந்த நகருள்ளுந் திரிவ மப்பா. 6

ஆனாலு மிப்போ தணிகான்மிர நாட்டிற் காசி
தானா மிருக்குந் தலமாகு [3]மநாத ராகி
ஆனாத பிச்சைப் பெரு[4]வாழ் வுடையார் நமரா
நாணாளும் விஞ்சை [5]நடாஅய்த்திரி சித்த ரேம்யாம். 7

ஆனந்த கானந் தொடுத்திங்குள வான சைவத்
தானம் பலவுந் தொழுதற்பர மாகி வந்தேம்
ஞானந் தருமிந் நகரிம்மையிற் சீவன் முத்தி
மானந் தமான பரமுத்தி மறுமை நல்கும். 8

ஈண்டுள்ள வர்க்கெம் விளையாடலைக் காட்டி யிச்சை
வேண்டும் பலசித் தியுநல்குவம் வேத மாதி
மாண்டங்கு மெண்ணெண் கலைஞானமும் வல்ல மல்லாற்
சேண்டங்கு மெல்லாப் பொருளும்வல சித்த ரேம்யாம். 9

---

5. சேக்கை - ஆசனம். ஐந்தும் - ஐம்புலன்களையும். பாறிட்ட - ஒட்டிய. பட்டத்தர் - பட்டிகையுடையர். மாறு இட்டு - பிரம்பினை நீட்டி. எழப்போக - எழுந்துபோக.

6. என்னாடு நும்மூர் - நும் நாடு ஊர் என் என்க.

7. கான்மிர நாட்டில் - காசுமீர நாட்டில். அநாதர் - அநாதரர், பற்றில்லாதவர்.

8. ஆனந்த கானம் - காசித்தலம்; சிதம்பரம் என்பாருமுளர். தற்பரம் - மிக்க ஆசை, ஆன்ம நாயகராகிய கடவுள். தத்-அதுவே; பரம் - பிரயோசனம். தொழுதல் பரம் எனப் பிரித்துத் தொழுதல் பொருட்டு எனவும் பொருள் கொள்ளலாம். மான் அந்தமான - பிரகிருதி மாயைக்கு அப்பாற்பட்ட. மால் நந்தமான எனப் பிரித்து, பாசமாகிய மயக்கங் கெட எனப் பொருள் கொள்ளலும் ஒன்று.

9. வ(ல்)ல - (அழைத்தலில்) வல்ல. சித்தரேம் - ஆக்கினா சித்தர் எனப் பெயரும் உடையேம்.

பா-ம்—1 நீட்டி. 2 எந்நாடு. 3 மநாத னாகி; நாதராகி. 4 வாழ்வுடையான் றமரா. 5 நடாத்திடுஞ் சித்த.

உன்னால் நமக்குப் பெறல்வேண்டுவ தொன்று மில்லை
தென்று வெனவுண் ணகைசெய்தனர் சித்த யோகர்
மன்று மிவர்தம் மிறுமாப்புஞ் செருக்கும் வீறும்
என்று லளவிட் டறிவேனென வெண்ணித் தேர்வான். 10

தேரும் பொழுதோ ருழவன்றெரு செல்வக் கன்னல்
ஆருங் கமுகென்ன வயிர்ப்புறக் கொண்டு தாழப்
பாருந் திசையும் புகழ்பங்கயச் செங்கை தாங்கி
நீரும் பிறையுங் கரந்தார்தமை நேர்ந்து சொல்வான். 11

வல்லாரில் வல்லே மெனவும்மை மதித்த நீரிக்
கல்லானைக் கிந்தக் கரும்பை யருத்தி னெல்லாம்
வல்லாரு நீரே மதுரைப்பெரு மானு நீரே
அல்லா லெவர்நும் மனம்வேட்ட தளிப்ப னென்றான். 12

என்று முகிலைத் தளையிட்டவன் கூறக் கேட்டுத்
தென்று வருதி யெனப்புன்னகை செய்து சித்தர்
நின்னால் வருவ தெமக்கேது நினக்கு நாமே
உன்னுசை தீரத் தருகின்ற தலாம லுண்டோ. 13

செல்லா வுலகத் தினுஞ்சென்றொரு விஞ்சை கற்றோர்
பல்லாரு நன்கு மதிக்கப்பய னெய்து வார்கள்
எல்லா மறிந்த வெமக்கொன்றிலு மாசை யில்லை
கல்லானை கன்னல் கறிக்கின்றது காண்டி யென்றார். 14

கடைக்கண் சிறிதே குறித்தார்முன் கடாக்கல் யானை
மடைக்கண் டிறந்து மதமூன்றும் வழிய விண்வாய்

---

10. மன்றும் - நிலைபெற்ற. வீறு - பெருமை. என்றால்-எதனால், என்றாலே.

11. தேரும்பொழுது - ஆராயும்பொழுது. செல்வக் கன்னல் - செழுங் கரும்பு. ஆரும் - யாவரும். அயிர்ப்பு - சந்தேகம்.

12. உம்மை மதித்த நீர் - தம்மைத் தாமே நன்கு மதித்த நீர். எவர் - யாருளர்.

13. முகிலைத்தளையிட்டவன் - பாண்டியன். நாமே, ஏ: பிரிநிலை.

14. செல்லா - அடைதற்கரிய. கறிக்கின்றது - கடிக்கின்றது. காண்டி - காண்பாய்.

15. கடாக்கல் யானை - மதத்தினையுடைய கல் யானை. கடாம் - மும்மதம்; இது சாதியடைமொழியாக வந்தது. விண் வாய்-மேகத்தின் வாய். புழை - தொளை. தொடைக்குன்றனன் - மாலையை அணிந்த மலைபோன்ற திண்மை பொருந்திய பாண்டியன்.

அடைக்கும் படிவாய் திறந்தார்த்துப் புழைக்கை நீட்டித்
தொடைக்குன் றனுன்கைச் சுவைத்தண்டைப் பறித்த தன்றே.

பறித்துக் கடைவாய் வழிசா றளி பாய்ந்து நக்கக்
கறித்துக் குதட்டிப் பருகிக்கர மூச லாட
நெறித்துத் தருக்கி நிழல்சீறி நிமிர்ந்து நிற்ப
மறித்துக் கடைக்கண் குறித்தார்பினு மாயம் வல்லார். 16

மட்டுற்ற தாரான் கழுத்திற்கண்ட மாலை தன்னை
எட்டிப் பறித்த திகல்காஞ்சுகி மாக்கள் சீறிக்
கிட்டிக் களிற்றைப் புடைப்பான்கிளர் கோல்கொண் டோச்சச்
சிட்டத் தவர்கண் சிவந்தானையைச் சீறி நோக்க. 17

[1]கண்டா வளியைக் களிறுண்டது கண்கள் [2]சேப்புக்
கொண்டா னரசன் சிவயோகரிற் கோப [3]மூளத்
தண்டா வரசன் றமருட்டறு கண்ணர் சீறி
வண்டா ரிறைவன் மறைத்தாரை யடிக்க வந்தார். 18

அப்போ திளமூர லரும்பியச் சித்த சாமி
கைப்போ தமைத்துக் கடிந்தோர்தமை நின்மி னென்ன
மைப்போ தகமன் னவர்வைத்தடி பேர்க்க லாற்று
தொப்போ தரிய நிலைபோவியம் போல நின்றார். 19

மத்தக் களிற்றுன் வெகுளித்தழன் மாறி யன்பு
பொத்தப் புதைந்த மனத்தற்புதம் பொங்கிச் சோரச்
சித்தப் பெருமா னடிமாமுடி தீண்டப் பாச
பெத்தத் தமியேன் பிழையைப்பொறு மென்று வீழ்ந்தான்.

---

16. அளி பாய்ந்து நக்க - வண்டுகள் மொய்த்துப் பருக. குதட்டி - மென்று.

17. மட்டு - தேன் ; வாசனையுமாம். கண்டமாலை - கண்டசரம்: இஃது ஒற்றை வடமாகிய முத்துமாலை. சிட்டத்தவர் - சித்தமூர்த்திகள். சிட்டம் - ஒழுக்கம்.

18. கண்டாவளி - கண்டமாலை. சேப்பு - சிவப்பு. சிவயோகரின் - சிவயோகரின்மீது. தறுகண் - அஞ்சாமை.

19. மைப்போதகம் அன்னவர் - கரிய யானையைப்போன்ற வீரர்கள். ஓவியம் - சித்திரம்.

20. பொத்த - போர்த்த. பாச பெத்தம் - ஆணவாதி மலங்கள்.
பா-ம்—1 கண்டாவலியைக். 2 சேப்பக். 3 மீளத்.

அன்புக் கிரங்குங் கருணைக்கட லான வையர்
இன்புற்று வேண்டும் வரங்கேளெனத் தாழ்ந்து வேந்தன்
நன்புத் திரப்பே றருள்வாயென நல்கிச் செங்கை
வன்புற்ற வேழ மிசைவைத்தரு ளூட்டம் வைத்தார். 21

தழைக்கு நீள்கதிர்த் தண்முத்த மாலையைப்
புழைக்கை நீட்டிக் கொடுத்தது போதகம்
மழைக்கை நீட்டினன் வாங்கின னீதியிற்
பிழைக்க லாத பெருந்தகை வேந்தனே. 22

மூத்த மாலிகை வாங்குமுன் முன்னின்ற
சித்த சாமி திருவுருக் கண்டிலன்
மத்த யானை வடிவமு மேனைய
ஒத்த தாக வுரவோன் வெருவினான். 23

இந்த வாட லெமக்குயி ராயவிவ்
வந்த மில்லி யருள்விளை யாட்டென்று
முந்தை வேத முதல்வனை மீளவும்
வந்து வந்தனை செய்தனன் மன்னனே. 24

முழுது ணர்ந்த முதல்வநின் னுடலை
இழுதை யேனறி யாதளந் தேனென்று
அழுதி றைஞ்சி யபராத மீந்துகை
தொழுது நின்று துதிக்கத் தொடங்கினான். 25

வேதியாய் வேத விளைபொருளாய் வேதத்தின்
நீதியாய் நீதி நெறிகடந்த நீளொளியாய்
ஆதியா யீறாய் நடுவா யவைகழிந்த
சோதியாய் நின்றாயென் சோதனைத்தோ நின்னியல்பே. 26

---

21. ஐயர் - சித்த மூர்த்திகள். வன்பு உற்ற வேழம் - கல் யானை.

22. போதகம் [illegible] கல் யானை. நீதியில் - ஆட்சி புரிவதில். பிழைக்கலாத - சிறிதும் தவறாத.

23. ஏனைய - (அங்கு விமானத்தைத் தாங்கி நிற்கும்) மற்றைய கல்லானைகளை. வெருவினான் - அச்சமுற்றான்.

24. அந்தமில்லி - ஈறில்லாதவன். முந்தை - முற்பட்ட.

25. இழுதையேன் - அறிவில்லாதவனாகிய நான். அளந்தேன் - அளந்தறியத் தொடங்கினேன்.

26. வேதியாய் - வேதத்தையுடையவராய்; முற்றறிவுடையவராய் எனினுமாம்.

நின்னுன் மொழிந்தமறை நின்னடிகள் வந்தித்தும்
பன்னு ளருச்சித்தும் பாதந் தலைசுமந்தும்
உன்னுமம் வாசித்து முன்னையறி யேனென்று
சொன்னு [1]லடியனேன் சோதனைத்தோ நின்னியல்பே. 27

பெரியதினும் பெரியதுமாய்ச் சிறியதினுஞ் சிறியதுமாய்
அரியதினு மரியதுமா யெளியதினு மெளியதுமாய்க்
கரியதுமாய்க் காண்பானுங் காட்சியுமா யவைகடந்த
துரியமுமாய் நின்ருயென் சோதனைத்தோ நின்னியல்பே.

என்றுபல முறைபழிச்சி மனையெய்தி விக்ரமனை யீன்று பன்னுட், டொன்றுமுறை கோலோச்சி விக்கிரமன் சுவன்மிசைப் பார் சுமத்திப் பாசம், வென்றுகளைந் தருட்சித்த சாமிதிரு வருளுக்கால் விளைபே ரின்ப, [2]மன்றன்மது வீழ்வண்டிற் கலந்திருந்தா னபிடேக மாறன் மன்னே. 29

ஆகச் செய்யுள்—1,385

---

27. பாதந் தலை சுமந்தும் - (உமது) திருவடிகளைத் தலைமேற் சுமந்தும்; பாதுகையாயிருந்து சுமந்தும் எனினுமாம்.

28. சிறியது - அணு. கரியது - சாட்சி; அது: பகுதிப் பொருள் விகுதி. காண்பான் - இங்கு ஆன்மா. காட்சி - விடயப் பொருள். துரியம் - மேலான பொருள்; காட்டுவான்.

29. பழிச்சி - துதித்து. விக்கிரமன் - விக்கிரம பாண்டியன். சுவல் மிசை - தோள்மேல்.

பா-ம்—1 லடியேனென், லடியேன்றன்: (அடியேனுகிய எனது.) 2 மன்றமது.

# 22. யானையெய்த படலம்

—o—

கட்டவிழ் கடுக்கையர் கலானைகழை தின்ன
இட்டதிது பஞ்சவ னிடத்தமண ரேவி
விட்டமத யானைவிழ மேவலர் புரத்தைச்
சுட்டகணை விட்டுயிர் தொலைத்தமுறை சொல்வாம். 1

விக்கிரம பாண்டியன் வெலற்கரிய செங்கோல்
திக்குநில னுந்திறைகொள் செல்வநிறை வெய்த
அக்கிரம வெங்கலி யரும்பகை யொதுங்கச்
சக்கர முருட்டியிடர் சாய்த்துமுறை செய்வான். 2

புத்தரம [1]ணாதிய புறக்களை யகழ்ந்து
நித்தமறை யாகம நெறிப்பயிர் வளர்த்து
மெய்த்தவிதி பத்தியின் விளைந்தபயன் யாருந்
துய்த்திட மனுத்தொழி னடத்திவரு தூயோன். 3

மருவிதழி யானுறையும் வானிழி விமானத்
தருகுவட பக்கமுற வாலய மெழுப்பி
உருவரு விரண்டினையு மொருவிவரு சித்தர்
திருவுருவு கண்டுபணி [2]செய்தொழுகு நாளில். 4

செய்யகதி ரோன்வழிய செம்பிய னொருத்தன்
கையனவன் வென்றிபயில் காஞ்சிநக ருள்ளான்
பொய்யமணர் கட்டுரை புறத்துறையி னின்றான்
மையின்மதி மாறனொடு மாறுபட னின்றான். 5

---

1. பஞ்சவன் - விக்கிரம பாண்டியன். அமணர் - சமணர்.

2. அக்கிரமம்-நீதியில்லாத செயல். வெங்கலி-கொடிய வறுமை.

3. புறக்களை - புறமதக்களைகள். மறை யாகம நெறி - வைதிகச் சைவம். விதி - அருளை நோக்காது அறத்தினை ஈட்டல். பத்தி-(அறத்தின் முதிர்ச்சியால்) அருள்வழி நிற்றல். மனு - மனுநூல்.

4. உரு - தூலவடிவு. அரு - சூக்கும வடிவு. ஒருவி - நீங்கி.

5. கையன் - வஞ்சகன். கட்டுரை - வார்த்தை (களைக்கேட்டு). புறத்துறை - புற மார்க்கம்; சமண மார்க்கம்.

பா-ம்—1 ணாதியர். 2 செய்துவரு.

முடங்கன்மதி செஞ்சடை முடித்துவிடை யேறும்
விடங்கரது சேவடி விழுங்கிய மனத்து
மடங்கனிகர் தென்னனெதிர் வந்துபொர லாற்றா
தடங்கலனோர் வஞ்சனையி னாலட மதித்தான். 6

அஞ்சனங் கவுஞ்சங் கோவர்த் தனந்திரி கூடங் [1]காஞ்சிக்
குஞ்சரஞ் சைய மேம கூடமே விந்த மென்னும்
மஞ்சிவர் வரைக ளெட்டும் வைகுறு மமணர் தம்மில்
எஞ்சலில் குரவர்க்கோலை வேறுவே றெழுதி விட்டான். 7

வடிவுபோ லுள்ள மெல்லா மாசிருள் புதைய நின்ற
அடிகண்மா ராவா ரெண்ணா யிரவரு மார்த்தார் வேய்ந்த
முடிகெழு வேந்தன் விட்ட முடங்கலை நிமிர்த்து வாசித்
திடிகெழு கார்போற் குன்றி னிழிந்துவே றிடத்திற் செல்வார். 8

யாவரு மொருங்கு கூடி யிருள்வழி கொள்வ தேய்ப்பக்
காவல்வல் லரணஞ் சூழ்ந்த காஞ்சிமா நகரத் தெய்திப்
பூவலர் தாரான் கோயிற் புறங்கடை புகுந்து வேந்தன்
ஏவலர் விடுப்ப வுள்போ யிறைமக னிருக்கை புக்கார். 9

மன்னவன் முடிமேற் பீலி வைத்தன ராக்கங் [2]கூற
அன்னவ னவரை நோக்கி வசியமுன் னாறும் வல்லீர்

---

6. விடங்கர் - சோமசுந்தரக் கடவுள். விழுங்கிய -(இடையறாது) பதித்த. அடங்கலன் - பகைவனாகிய சோழன்.

7. கவுஞ்சம் - கிரௌஞ்சம். காஞ்சிக் குஞ்சரம் - காஞ்சிபுரத்தி லுள்ள அத்திகிரி. குஞ்சரத்தைச் சையத்திற்குக் கூட்டி யானைகள் வசிக்கும் சையமலை என்பாருமுளர். குரவர் - இவர் ஆசிரியத் தன்மை வாய்ந்த எண்ணாயிரம் சமண குருமார்.

8. அடிகள் - இது சமணருள் ஆசிரியராய் நின்றவர்க்குச் சிறப்புப் பெயர். மார் : பன்மை விகுதி. வேறிடம் - தமதிருக்கைக்கு வேறான இடம்; இங்குக் காஞ்சி நகர்.

9. அரணம் - மதில். பூ அலர் தார் - ஆத்தி மாலை. புறங்கடை - தலைவாயில்.

10. பீலி - மயிற்றோகை. வைத்தனர் - வைத்து : முற்றெச்சம். வசியமுன் ஆறும் - வசியம், வயத்தம்பம், வாதம், அதிரிசியம், அஞ்சனம், ஆகருஷணம் என்ற ஆறும். ஆபிசாரம் - அபிசார யாகம்; சத்துரு மரண வேள்வி.

பா-ம்—1 காஞ்சி குஞ்சர சைய. 2 கூறி.

தென்னனை யாபி சாரஞ் செய்துயிர் செகுத்தா லுங்கட்
கென்னது நாடு பாதி தருவல்போ யியற்று மென்றான். 10

தவம்புரிந் தவமே செய்வார் தாமதத் துடன்பட் டேகி
நிவந்ததெண் டிரைநீர்ப் பாலி நெடுங்கரைக் காத மூன்றிற்
கவர்ந்தகன் சாலை கோலி யோசனை யகலங் கல்லி
அவம்படு வேள்விக் குண்டங் கோணமெட் டாகக் கண்டார். 11

விடம்பொதி காட்டம் பெய்து நிம்பநெய் விராய நஞ்சின்
உடம்புடை யுயிரின் கோழூன் கறிப்பொடி யூறு மெண்ணெய்
இடம்பட வாயங் காந்த வெரிக்குழி புதையப் பெய்து
கொடும்பழி வேள்வி செய்தார் கொல்லாத விரதம் பூண்டார். 12

மாடுள பொதும்பர் நந்தா வனமுள சோலை யுள்ள
காடுள கருகிச் சாயக் கயலுள வோடை யுள்ள
கோடுள வாவி யுள்ள குளமுள வறப்பத் தாவிச்
சேடுள முகிலுந் தீயச் சிகையெழு குண்டத் தீவாய். 13

கூற்றெழு தோற்றம் போல வஞ்சனைக் குன்றம் போலக்
காற்றெழு செவியு நால்வாய்க் களவிய மருப்பு மாறு
ஊற்றெழு மதமு மூச லாடிய வொற்றைக் கையும்
ஏற்றெழு விடம்போற் சீறி யெழுந்ததோர் தறுகண் யானை. 14

அந்தமா வேள்வித் தீயு மவியமும் மதமுஞ் சோர
வந்தமா களிற்றை நீபோய் வழுதியை மதுரை யோடுஞ்
சிந்தவே தொலைத்தி யென்றுத் தென்றிசைச் செல்ல வேவி
முந்தவே விடுத்த மாசு மூழ்குட லமணப் பேய்கள். 15

---

11. அவம் - அவத்தை; துன்பம். காதமூன்றிற் கவர்ந்த அகன் சாலை - மூன்று காத அளவினை அகப்படுத்திய அகன்ற வேள்விச் சாலை.

12. விடம் பொதி காட்டம் - விஷத்தன்மை பொருந்திய எட்டி முதலிய விறகு. நிம்ப நெய் - வேப்பெண்ணெய். கோழூன் - கொழுப்பு. கறிப்பொடி - மிளகுத் தூள். எண்ணெய் ஊறும் கறிப்பொடி என மாறுக.

13. மாடுள - பக்கத்திலிருக்கும்; பெருமை பொருந்திய என்றுமாம். கோடுள - கரையுள்ள. சேடுள - பெரிய.

14. நால்வாய் - தொங்குகின்ற வாய். தறுகண் - அஞ்சாமை.

15. அவிய - அவியும்படி. தொலைத்தி - அழிப்பாய். அமணப் பேய்கள் - இஃது இழிவு குறித்து நின்றது.

அருளற்றிரு ளுடலிற்புதை யமணக்கய வர்களுட்
டெருளற்றரு மறையிற்படர் செயலற்றிக பரமெய்ப்
பொருளற்றவ னனிகத்தொடு புறமொய்த்திட மதமா
வெருளற்றிடி குரலிற்படி வெடிபட்டிட வருமால். 16

அடியின்னள வகல்பாதல முடியின்னள வண்டம்
இடியின்னள வெழுகார்செவி யெறிகாலள வகிலம்
மடியும்மள வுளர்கான்மத மழையின்னள வுலக
முடிவின்னெழு கடல்கண்ணழ லளவாமுது வடவை. 17

[1]கூற்றஞ்சிய வருமிக்கரி குரலஞ்செவி முழைவாய்
ஏற்றஞ்செய மடங்குஞ்செவி யெறிகால்வழி விழித்தீ
ஊற்றஞ்செய மடைவாயுடைந் தொழுகுங்கட மதநீர்
நாற்றஞ்செயத் திசைவேழமு நடுக்கஞ்செய்து நலியும். 18

இடிக்கும்புயல் வயிற்றைக்கிழித் திடியேற்றினை யுதிர்க்கும்
வெடிக்கும்பிளி றொலியாற்றிசை விழுங்கிச்செவி டாக்குந்
துடிக்கும்புழைக் கையோச்சிவிண் டொடுகுன்றினைச் சுற்றிப்
பிடிக்குங்கடல் கலக்குந்தனிப் பெருமத்தெனத் திரிக்கும். 19

உருமுக்குர லொலியிற்றுள றொலிவிட்டெறி செவியிற்
றிருமுட்பிறை யெயிறிற்றழ [2]லெரிகட்டிரு ளுடலிற்
றருமுக்கட வருவித்துர லடியிற்றென நிலமேல்
வருமுக்கிர வடவைக்கன லரிஞெப்பத மதமா. 20

[3]தெழிபட்டதிக் கயத்தின்செவி தீயப்பகை யோடும்
[4]வழிபட்டொரு கடுங்கூற்றென வருகுஞ்சர வரைை

16. அருள் அற்று -(அகத்தில்) கருணையாகிய ஒளி சிறிதுமின்றி. இருள் - பாவத் தொழிலாகிய இருள். கயவர்கள் - கீழ் மக்கள். உட்டெருள் - அகத்திலே தெளிந்த அறிவு.

17. பாதலம் - பாதாளம். அண்டம் - வானுலகம். உளர்கால் - சஞ்சரிக்கும் ஊழிக்காற்று. முதுவடவை - ஊழித்தீ.

18. முழைவாய் - குகையினிடம். ஏற்றஞ் செய - தாக்க. ஊற்றம் - மிகுதி. நலியும் - வருந்தா நிற்கும்.

19. பிளிறு ஒலி - பேரொலி. திரிக்கும் - சுழற்றும்.

20. உருமுக்குரல் - இடிக்குரல். உளறொலி - சூறைக் காற்று. கட்டு - கண்களையுடையது; (கண் + து = கட்டு; து: ஒன்றன்பால் விகுதி.)

பா-ம்—1 கூற்றஞ்சிட. 2 லெறிகட்டிரு. 3 தெழிப்பட்ட. 4 வழி பட்டொரு.

[1]விழிபட்டவர் மொழியாலுணர் விரைபட்டலர் வேம்பன்
[2]சுழிபட்டலை புனல்போன்மனஞ் சுழன்றுளினைந் தழன்றான். 21

மைப்போதகம் பொறையாற்றிய மணிக்கோயின்முன் குறுகாக்
கைப்போதக முரித்தான்கழற் காற்போதக முறத்தாழ்ந்
திப்போதகந் தனையுந்தொலைத் தெனைக்காத்தியென் றிரந்தான்
அப்போதகல் வானின்றொரு திருவாக்கெழுந் தன்றே. 22

விட்டார்வலி கெடநாமொரு விற்சேவக னாகி
ஒட்டார்விட வருவெங்கரி யுயிர்வௌவுது முதனின்
மட்டார்பொழிற் கடிமாநக ரயற்கீட்டிசை மருங்கோர்
அட்டாலைமண் டபஞ்செய்யென வதுகேட்டெழுந் தரசன். 23

அகங்கவ்விய களிப்பெய்திவந் தட்டாலைமண் டபம்பொன்
நகங்கவ்விய தெனத்தூசொரு நாளுன்கினி லெடுத்தே
சகங்கவ்விய புகழான்செயத் தறுகட்களி மதமா
முகங்கவ்விய விற்சேவகன் வருவானது மொழிவாம். 24

நீனிற நீத்த நீந்து நிழன்மதி யிரண்டுண் டென்ன
வானிற வலயச் சங்க வார்குழை நுழைவித் தம்பூம்
பானிற வெகினங் காணாப் படர்சடை மறைத்துத் தோற்றுங்
கானிறை குஞ்சிச் சூட்டிற் களிமயிற் கலாபஞ் சூடி. 25

கருங்கடன் முளைத்த செக்கர்க் கதிரெனக் குருதிக் கச்சை
மருங்குற வீக்கிச் சோரி வாயுடை வாளுங் கட்டி

---

21. தெழிபட்ட - முழக்கம் தாக்கிய. பகையோடும் - பகைவராகிய சமணரோடும். விழிபட்டவர் - கண்ணுற்றவர்.

22. மைப் போதகம் - கரிய திக்கு யானைகள். பொறை யாற்றிய - சுமக்கப்பட்ட. மணிக்கோயில் - இந்திர விமானம். எழுந்தன்று - எழுந்தது ; அன் : சாரியை.

23. ஒட்டார் - பகைவர். அட்டாலை மண்டபம் - பரண் வடிவாக இயற்றப்பட்ட மண்டபம் ; உன்னத மண்டபம் : இஃது 'அட்டாலம்' எனவும் பெயர் பெறும்.

24. பொன் நகங் கவ்வியது - பொன்மலையே உருமாறிச் சுமக்கின்றது.

25. வலயம் - வட்டமாகிய. அம் பூம் பால் நிற எகினம்-அழகிய தாமரையில் வசிக்கும் வெண்ணிறமுடைய பிரமதேவனாகிய அன்னம். கால் - மணம். குஞ்சிச்சூடு - மயிர்முடி.

பா-ம்—1 விழிப்பட்டவர். 2 சுழிப்பட்டலை.

இரங்குநான் மறைக ளேங்க விருவிலங் திண்டு தாளிற்
பொருங்கழல் வளைத்து வாளிப் புட்டிலும் புறத்து வீக்கி. 26

வீங்கிய தடந்தோ ளிட்ட வார்சிலை வில்லி ளேடும்
பாங்குறை யிமயப் பாவை பாதியே யன்றி முற்றும்
வாங்கிய வண்ணம் போன்று மல்லது மாலு மோர்பால்
ஓங்கிய வண்ணம் போன்று மொளிநிறம் பசந்து [1]தோன்ற. 27

காமனுங் காமுற் றஞ்சுங் காளையாம் பருவந் தோன்றத்
தாமுல களந்த வென்றித் தனிவிற்சே வகனுய்த் தோன்றி
மாமறை மகுட மன்ன மண்டபத் தேறித் தென்னர்
கோமக னிடுக்கண் டீர்ப்பான் குஞ்சர வரவு [2]நோக்கா. 28

அஞ்சுகூ விளிசேய்த் தென்ன வதுவர வறனி லாதான்
வெஞ்சினக் கோலி ளேன்றுண் மிதித்துமெய் குழைய வாங்கிச்
செஞ்சிலை நெடுநாண் பூட்டித் திருவிர றெறித்துத் தாக்கிக்
குஞ்சர மெட்டு மஞ்சக் கோளரி முழக்கங் காட்டி. 29

இங்கித நெடுங்கோ தண்ட மிடங்கையி லெடுத்து நார
சிங்கவெங் கணைதொட் டாகந் திருகமுன் னிடத்தாள் செல்ல
அங்குலி யிரண்டா லையன் செவியுற வலித்து விட்டான்
மங்குலின் முழங்கும் வேழ மத்தகங் கிழிந்த தன்றே. 30

கொண்டலி னலறிச் சீறி வீழ்ந்தது கொடிய வேழம்
பிண்டது பாருஞ் சேடன் சென்னியும் பிளந்த தண்டம்

---

26. குருதிக் கச்சை - செந்நிறக் கச்சை. வாளிப் புட்டில் - அம்பறுத்தூணி.

27. வீங்கிய - பூரித்த. இமயப் பாவை - உமாதேவியார். பசந்து - பரவி.

28. உலகு தாம் அளந்த - உலகமுற்றுந் தம் கீழ்ப்படுத்திய. விற்சேவகன் - வில் வீரன் ; வேடுவன்.

29. கூவிளி - கூப்பீடு. நோன்றுள் – வலிய கால். கோளரி முழக்கம் - சிங்கமுழக்கம்.

30. இதம் - நன்மை (செய்தற் பொருட்டு). அங்குலி - விரல். ஆகம் திருக முன் இடத்தாள் செல்ல - உடல் திருகும்படி (வலக்கால் மண்டலித்து) முன்னே தனது இடக்கால் செல்ல; இந்நிலை, வில் வளைத்து அம்பினை எய்வார்க்குரிய நிலைகள் நான்கனுள் ஆலீட நிலையாம்.

31. கொண்டலின் - மேகம்போல. பிண்டது - பிளந்தது.

பா-ம்—1 தோன்றி. 2 நோக்கி.

விண்டது போலு மென்னத் துண்ணென வெருவிப் போன
பண்டைய தருக்கும் வீறும் படைத்தன திசைமால் யானை. 31

புதைபடக் கரித்தோல் போர்த்த புண்ணிய மூர்த்தி தாளால்
உதைபடக் கிடந்த கூற்ற மொத்தது மத்த யானை
சுதைபடு மதிக்கோ வேந்தன் றொழுகுலச் சிறுவ னொத்தான்
பதைபடு மமணர் கால படரெனப் படரிற் பட்டார். 32

இருள்கிடந் தனைய தானை யிட்டசிந் துரங்கார் மாலை
இருண்முகத் தொதுங்கிச் செல்லு மிரவிசெங் கிரணம் போன்ற
திருண்முழு துண்ணக் காலை யெழுகதிர் வட்ட மன்ன
திருளினை மறைத்த கண்ட னெய்த[1]வாய் பெய்யுஞ் செந்நீர். 33

பொய்யரு மனத்தார் தேற்றும் புன்னெறி யொழுக்கம் பூண்ட
வெய்யகோன் கொடுங்கோ றன்னை வெண்மருப் பாகத் தாங்கி
மையன்மா வடிவங் கொண்டு வந்தவெங் கலியைத் தென்னன்
செய்யகோ லையன் சிங்க வாளியாய்ச் சிதைத்த தன்றே. 34

உருமுவீழ்ப் புண்ட குன்றி னும்பன்[2]மா னம்பு தொட்ட
பெருமுழை வாயும் வாயும் பெருகின வருவிச் சோரி
கருமுகின் மானச் சேனங் கழுதுகள் பூத மொய்த்த
திருமணித் தடந்தோள் [3]வீங்கத் தென்னவ னுவகை பூத்தான். 35

ஆனையின் புண்ணீ ருண்ண வடுத்தகா ருடற்பே யென்னச்
சேனையின் செல்லப் போந்த திணியிரு ளமணர் தம்மை

---

32. சுதை - அமிழ்தம். தொழுகுலச் சிறுவன் - மார்க்கண்டன். பதைபடும் - பதைக்கின்ற. கால படர் - இயம தூதர். படர்-துன்பம்.

33. சிந்துரம் - சிவந்த பொட்டு. கதிர் வட்டம் - சூரியன். செந்நீர் - உதிரம்.

34. பொய் - பொய்யொழுக்கம். வெய்யகோன்-இங்குச் சோழன். மையல் மா - மத மயக்கத்தையுடைய யானை.

35. உருமு - இடி. உம்பல் மான் - யானை. (உம்பல் - யானை.) மான் அம்பு தொட்ட எனக்கொண்டு சோமசுந்தரக் கடவுளுடைய பாணம் துளைத்த எனப் பொருள் கூறுதலும் ஒன்று. மகரன், மான் என்றாயது.

36. புண்ணீர் - உதிரம். திணி இருள் - மிகக் கருநிறம் பொருந்திய. முடுக்கலுற்றார் - துரத்தலுற்றார்.

பா-ம்—1 வாய்ப் பெய்யுஞ். 2 மாவம்பு; மாலம்பு. (மாலம்பு - நாரசிங்காஸ்திரம்.) 3 வீங்கித்.

மீனவன் கண்டு சீற வேந்தவன் குறிப்பி னிற்கும்
மானவெஞ் [1]சினவேன் மள்ளர் வல்லைபோய் முடுக்க லுற்றார். 36

எடுத்தனர் கையிற் றண்ட மெறிந்தனர் மறிந்து சூழ்போய்த்
தடுத்தனர் கரகந் தூளாத் தகர்த்தனர் பீலி யோடுந்
தொடுத்தன ருடுத்த பாயைத் துணிபடக் கிழித்துக் கால்வாய்
விடுத்தனர் மானம் போக்கி விட்டனர் சில்லோர் தம்மை. 37

எறியுண்டு செய்த மாய மிழப்புண்டு சேனை யோடு
முறியுண்டு நடுக்கம் பாவ மூழ்குண்டு மாழ்கிச் சாம்பிப்
பறியுண்ட தலையர் யாரும் பழிப்புண்டு பாயுந் தாமும்
உறியுண்ட கரகத் தோடு மொதுங்குண்டு பதுங்கிப் போனார். 38

மாதங்கந் தடிந்தட் டாலை மண்டபத் திருந்த வீரன்
பாதங்கள் கையாற் பற்றிப் பாண்டிய னிரந்து வேண்டிப்
போதங்கள் கடந்தா யென்றும் பொலியவிங் கிருத்தி யென்ன
வேதங்கட் கருத்தஞ் சொன்ன வேதிய னதற்கு நேர்ந்தான். 39

பின்னுஞ்சில் வரங்க ணல்கப் பெற்றுநான் மாடக் கூடல்
மன்னுஞ்சின் மயனை வந்து வந்தித்து வருநாட் காமன்
என்னுஞ்சின் மலர்ப்பூந் தண்டா ரிராசசே கரனைப் பெற்று
மின்னுஞ்சில் லியந்தேர் வேந்தன் மேதினி புரக்கு மன்னோ. 40

வம்புளாய் மலர்ந்த வாரான் வரவிடு மத்தக் குன்றிற்
சிம்புளாய் வடிவங் கொண்ட சேவக னேவல் செய்த

---

37. கரகம் - கமண்டலம். துணி - துண்டம். கால்வாய் விடுத்தனர் - காற்றின்கண்ணே பறக்க வீசினர். மானம் போக்கிவிட்டனர் - அவமானப்படுத்தி விட்டனர்.

38. பறியுண்ட தலையர் - மயிர் பறிக்கப்பட்ட தலையையுடைய சமணர்.

39. மாதங்கம் - யானை. தடிந்து - கொன்று. போதங்கள் - பசு ஞான பாச ஞானங்கள்.

40. சின்மயன் - ஞானவடிவாகிய சோமசுந்தரக் கடவுள். சில்லி - உருள்; சக்கரம்.

41. வம்புளாய் - மணத்தை அகத்தே கொண்டதாய். ஆரான் - ஆத்தி மாலையை யணிந்த சோழன். விள்ள - பிளவுபட. சிம்புள் - சரபம். செம்புள் - கருடன்.

பா-ம்—1 மன்னர் - (மன்னர் - இங்குச் சேனைத் தலைவர்.)

அம்புளாய்த் தூணம் விள்ள வன்றவ தரித்த வாபோற்
[1]செம்புளாய்க் கொடிய நார சிங்கமா யிருந்த தன்றே. 41

உலகெலா மழித்து மீளவுண் டாக்கு முருத்திரன் வீரசத் தியினிற், சிலதரித் திறவா வவுணன்மார் பிடந்த சிங்கநா யகனை யங் கெய்தி, அலகின்மா தவஞ்செய் துரோமசன் றன்பே ரறிய வோர் தீர்த்தமுண் டாக்கி, இலகுபே றடைந்தான் பிரகலா தனு நோற் றீறிலாப் பெருவர மடைந்தான். 42

ஆகச் செய்யுள்—1,427

---

42. வீர சத்தி - அருட்சத்தி. இறவா அவுணன் - இரணியன். உரோமசன் - உரோமச முனிவன்.

பா-ம்—1 செம்புளாய் கொடிய. (செம்புள் - கருடன். ஆய் - இயானிக்கின்ற. கொடிய - உக்கிரமுள்ள.)

# 23. விருத்த குமாரபாலரான படலம்

—o—

தழையு லாங்கைய ரேவிய தந்திமேல் விடைமேல்
அழகர் சேவகஞ் செய்தவா றறைந்தன மவரே
கிழவ னாகிப்பின் காளையாய்க் கிஞ்சுகச் செவ்வாய்க்
குழவி யாய்விளை யாடிய கொள்கையைப் பகர்வாம். 1

தென்னன் விக்கிர மன்புயத் திருநிலச் செல்வி
மன்னி வாழுநாண் மதுரையின் மறையவ னொருவன்
அன்ன வன்விரு பாக்கனா மவன்குடி வாழ்க்கை
மின்ன னாள்வட மீனனாள் பெயர்சுப விரதை. 2

அனையர் தங்களுக் கரும்பெறன் மகவின்றி யநந்தம்
புனித நல்லறஞ் செய்தொழி லொழுக்கமும் பூண்டு
நனைய வார்குழ லன்னைய ரெழுவர்பா லண்ணி
இனிய மாதவஞ் செய்தொரு பெண்மக வின்றார். 3

பேருங் கௌரியென் றழைத்தனர் பிராயமோ ரைந்திற்
சாருங் கௌரியும் பிறவிநோய் தணிப்பதற் குறுதி
தேருஞ் சிந்தையா டந்தையை வணங்கியிச் செனனம்
ஈருந் தெய்வத மந்திர மியாதென வினவ. 4

அந்த னாளனு மதிசயித் தரும்பெறன் மகட்குச்
சிந்தை யார்வமோ டிறைவிதன் மனுவினைச் செப்பத்

---

1. தழை உலாங் கையர் - மயிற்றோகை பிடித்துப் பைய நடக்கும் ஒழுக்கத்தையுடைய சமணர்; இவர் தாம் செல்லும் வழியிலுள்ள சிறு செந்துக்கள் தம் காற்கீழ் அகப்பட்டு இறவாமல் ஒதுக்குதற்கு மயிற்றோகையும், ஒதுக்கினவற்றுள் தப்பின சாவாமைப் பொருட்டும் உற்றுப் பார்த்தற் பொருட்டும் மந்த நடையும் கொண்டவர் என்பதாம். தழை-மயிற்றோகை. உலாவல் - பைய நடத்தல். கை - ஒழுக்கம். கையர் - கீழ் மக்கள் என்றலுமாம். தந்தி - யானை. கிஞ்சுகம் - முருக்கிதழ்.

2. விருபாக்கன் - மேல் நோக்கிய விழிகளை யுடையவன்; சிவ பெருமான் திருப்பெயர்களில் ஒன்று.

3. அன்னையர் எழுவர் - அபிராமி, மகேசுவரி, கௌமாரி, நாராயணி, வராகி, இந்திராணி, காளி என்ற சத்த கன்னியர்.

4. உறுதி - (உமாதேவியின்) திருவருட் பயன். ஈரும் - ஒழிக்கும்.

தந்தை பாலது தெளிந்துநாத் தழும்புறப் பயின்றாள்
முந்தை நாளருந் தவக்குறை முடித்திட வந்தாள். 5

தாதை தன்றவக் கொழுந்தினுக் கிசையமா சைவ
மாத வத்தனு யாதியாச் சிரமத்தில் வழங்கும்
வேத வித்துமாய் மரபினுன் மேம்படு வானெப்
போது போதுமென் றுளத்தொடு புகன்றுகொண் டிருந்தான்.

பருவ நாலிரண் டாகமேற் கடிமணப் பருவம்
வருவ தாகவங் கொருபகல் வைணவப் படிவப்
பிரம சாரியாய்க் கடைதொறும் பிச்சைபுக் குண்பான்
ஒருவன் வந்தனன் பலிக்கவ [1]ணயற்புலத் துள்ளான். 7

பிச்சை வேண்டினு னவற்குத்தன் பெண்ணினைக் கொடுப்பான்
இச்சை கூர்ந்தருந் தவத்தினல் வருந்தியீன் றெடுத்த
விச்சை வேதியன் மனையொடு சுற்றமும் வினவா
தச்ச மின்றிநீ ரெடுத்தவ னங்கையிற் பெய்தான். 8

கலிக்கு நூபுரச் சீறடிக் கன்னிதன் விதியும்
பலிக்கு வந்தவ னல்வினைப் பகுதியுந் துரப்ப
ஒலிக்கு மந்திரச் சிரகநீ ரொழுக்கினுன் [2]முந்திச்
சலிக்கு மன்னையுந் தமர்களுங் கேட்டுளந் தளர்வார். 9

குலனு மோர்கிலன் கோத்திர மோர்கிலன் குடிமை
நலனு மோர்கில னொழுக்கமுங் கல்வியு நண்ணுங்

---

5. இறைவிதன் மனு - பராசத்தி திருமந்திரம். தெளிந்து - (கேட்டுச் சிந்தித்துத்) தெளிந்து. பயின்றாள் - பழகி வந்தாள், செபித்து வந்தாள்.

6. மா சைவன் - சிவதீட்சை பெற்ற வைதிகப் பிராமணன். ஆதியாச்சிரமம் - பிரமசரியம். மரபு - இங்குக் கோத்திர சூத்திரங்கள். போதும் - வருவான்.

7. பருவம் - வயது. கடைதொறும் - வாயில்தோறும்.

8. பிச்சை வேண்டினுன் அவற்கு - பிச்சை கேட்டுவந்த அவ் வைணவப் பிரமசாரிக்கு. விச்சை - கல்வியில் (வல்ல).

9. கலிக்கும் - ஒலிக்கும். சீறடி - சிற்றடி. விதி - போகூழ்ப் பயன். நல்வினைப் பகுதி - ஆகூழ்ப் பயன்.

10. குடிமை - குடிப்பிறப்பு. எப்புலனும் - எல்லா நூல்களையும். விதி வழி மதி - விதியின் வழியே அறிவும் செல்லும்; 'விதியே மதியாய் விடும்' என்பது ஔவையார் அமுதமொழி.

பா-ம்—1 ணயற்புலத். 2 முந்தச்.

தலனு மோர்கிலன் கன்னியைத் தத்தஞ்செய் தானெனப்
புலனு மோர்ந்தவன் விதிவழி மதியெனப் புலந்தார். 10

மற்ற வன்குடி கோத்திரஞ் சூத்திர மற்றும்
உற்ற றிந்துநம் மரபினுக் கொக்குமான் மாயோன்
சொற்ற தந்திர வைணவத் தொடக்குண்டு திரியுங்
குற்ற மொன்றினி மறுப்பதென் கொடுப்பதென் றிசைந்தார்.

தாயு மொக்கலு மொத்தபின் முதையும் வேதத்
தாயு மெண்மணத் தாதியா மறங்கில யாற்றாற்
றேயு நுண்ணிடைக் கன்னியைச் செம்பொனாற் புதைத்துக்
காயு மாரழன் முன்னரக் காளைக்குக் கொடுத்தான். 12

தெய்வ மங்கல வரிசைகள் செய்துதான் பயந்த
மௌவ லங்குழற் கன்னியை மணமக ளோடுங்
கௌவை யம்புனல் வேலிசூழ் கடிநகர் விடுத்தான்
சைவ மங்கல வேதியத் தாபத னிப்பால். 13

இல்லார்க்குக் கிழியீடு நேர்பட்டா லெனப்பல்லா ரில்லந்
தோறுஞ், செல்லாங்கின் றிரந்துண்டு திரிந்தமகன் மணமகளுச்
செல்வ நல்க, வல்லாளை மணந்துவரு வான்போற்றம் மனைபுகுத
வன்கட் சிலப், பொல்லாராய் வைணவத்துப் புக்கொழுகு தாய்
தந்தை பொருர்க ளாகி. 14

வந்தமண வாட்டிசிவ சிந்தனையுஞ் சைவதவ வடிவு நோக்கி,
வெந்தவுடல் போன்மனமும் வெந்தவளை வேறொதுக்கி
வேண்டா ராகி, நிந்தனைசெய் தொழுகுவா ரவளையொரு

---

11. சூத்திரம் - போதாயனம், ஆபஸ்தம்பம், ஆஸ்வலாயனம், திராக்ஷாயனம் முதலியன. மாயோன் சொற்ற தந்திரம் - திருமால் கூறிய பாஞ்சராத்திரம், வைகானசம் என்ற ஆகமங்கள்.

12. ஒக்கல் - சுற்றத்தார். எண்மணத்து ஆதி - பிரம விவாகம்; இது பிரமசாரிக்குக் கன்னிகையைத் தீ முன்னர்க் கொடுப்பது. எண் மணம் – பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், அசுரம், இராக்கதம், பைசாசம் என்ற எண்வகை மணம். புதைத்து - அலங்கரித்து.

13. மௌவல் - முல்லை. கௌவை - ஒலி. புனல்வேலி - வயல். தாபதன் - தவவொழுக்கமுடைய மறையோன்.

14. கிழியீடு-பொன் முடிப்பு. செல்வம் நல்க வல்லாள்-இலக்குமி. வன்கண் - கொடுமை.

நாணித்து நீங்கி வேற்றார்த், தந்தமர்மங் கலங்[1]காண்பார் தனி
யேவைத் தகம்பூட்டித் தாங்கள் போனார். 15

உண்மாசு கழுவுவது நீறென்றே யுபநிடத முறைப்பக்
கேட்டும், மண்மாசு படப்பூசும் வடிவுடையா ரகன்றதற்பின்
மனையில் வைகும், பெண்மாசு கழியவொரு சிவனடியார் தமைக்
காணப் பெறுமை லின்றென், கண்மாசு படுவதெனக் கனிந்
தொழுகு தலையன்பாற் கவலை கூர்வாள். 16

சிவனடியார்க் கன்பிலாச் சிந்தையே யிரும்பேவல் செய்து
நாளும், அவனடியார் திறத்தொழுகா வாக்கையே மரஞ்செவிகண்
ணுதி யைந்தும், பவனடியா ரிடைச்செலுத்தாப் படிவமே
பாவைமறை பரவுஞ் சைவ, தவநெறியல் லாநெறியே பவநெறி
யென் றளியளாய்த் தளர்வாள் பின்னும். 17

எனைத்துயிர்க்கு முறுதியிக பரமென்ப வவைகொடுப்பா
னெல்லாந் தானாய், அனைத்துயிர்க்கு முயிராகு மரனென்ப
வவனறிவார்க் கங்கம் வாக்கு, மனத்துறுமெய்ப் பத்திவழி வரு
மென்ப வப்பத்தி வழிநிற் பார்க்கு, வினைத்துயர்தீர்த்
திடவெடுத்த வடிவென்ப தவனடியார் வேட மன்றே. 18

என்னவிருந் தலமருவா ளிருக்குமிடத் தவளுள்ளத்
தெண்ணி யாங்கே, தென்னவனு யிருந்தரசு செய்தபிரா னவட்
கருளுஞ் செவ்வி நோக்கிக், கன்னமுரங் கரஞ்சிரந்தோள் கண்ட
முங்கண் டிகைபூண்டு கையிற் றம்போற், பன்னெடுநாட் பழகிய
தோர் தனிப்பெரிய புத்தகமும் பக்கஞ் சேர்த்தி. 19

கரிந்தநீள் கயன்முள்ளி னரையுமுது திரைகவுளுங் கனைக்கு
நெஞ்சுஞ், சரிந்தகோ வணவுடையுந் தலைப்பணிப்பு முத்தரியங்

---

15. வெந்த உடல்போல் - (வைணவக் கோட்பாட்டின்படி சுடப்பட்டு) வெந்த உடம்புபோல. தமர் - சுற்றம்.

16. உள் மாசு - மும்மலங்கள். நீறு - விபூதி. தலையன்பு - சிவநேசம்.

17. ஆக்கை - சரீரம். பவநெறி - பாவத்தைத் தரும் வழி. அளியளாய் - அன்புடையவளாய்.

18. உறுதி - பயன். இகம் - இம்மை இன்பம். பரம் - மறுமை இன்பம். மெய்ப்பத்தி - சிவபத்தி.

19. அலமரல் - வருந்தல். செவ்வி - காலம். கன்னம் - காது. உரம் - மார்பு.

பா-ம்—1 காண்பான்.

தாங்கு தோளும், புரிந்தநூல் கிடந்தலையும் புண்ணியநீ
றணிமார்பும் பொலிய நீழல், விரிந்ததோர் தனிக்குடையுந்
தண்டூன்றிக் கவிழ்ந்தசையு மெய்யுந் தாங்கி. 20

ஒருத்தரா யுண்டிபல பகல்கழிந்த பசியினர்போ லுயங்கி
வாடி, விருத்தவே தியராய்வந் தகம்புகுதக் கண்டெழுந்து மீதூ
ரன்பின், கருத்தளாய்த் தவிசிருத்திக் கைதொழுது சிவனை
யிங்குக் காண வென்ன, வருத்தமா தவமுடையே னெனமுனிவர்
பசித்துன்பால் வந்தே மென்றார். 21

இற்பூட்டிப் போயினா ரெமரங்க ளெனக்கௌரி யியம்ப
மேரு, விற்பூட்டிப் புரம்பொடித்த வேதியர்நின் கைதொட்டு
விடுமுன் யாத்த, கொற்பூட்டு விடுந்திறந்து கடிதடிசில்
சமைத்தியெனக் குமரி தாளில், அற்பூட்டு மடவரலு மவ்வாறே
யட்டில்புகுந் தடிசி லாக்கி. 22

தையன்மா தவக்கொழுந்து புறம்போந்து சிரகநீர்
தளிர்க்கை தாங்கி, ஐயனே யமுதுசெய வெழுந்தருளு மென
வெழுந்த வடிகள் பாதச், செய்யதா மரைவிளக்கி யந்நீர்தன்
சென்னியின்மேற் றெளித்துப் பாச, மையன்மா சிருள்கழுவி
யகம்புகுவித் தாசனமேல் வைத்துப் பின்னர். 23

நகைமலரிட் டருச்சித்து நல்லபரி கலந்திருத்தி நறுவீ
முல்லை, முகையனைய பாலடிசில் வெள்ளிமலை யெனப்பருப்பு
முதுகிற்செம்பொற், சிகரமெனப் பல்வேறு கருணைபுறந் தழீஇக்
கிடந்த சிறுகுன் றீட்ட, வகையெனநெய் யருவியெனப் படைத்
தனைய சிற்றுண்டி வகையும் பெய்து. 24

---

20. கரிந்த - கரிய. கவுள் - கபோலம். பனிப்பு - நடுக்கம்.

21. உயங்கி - மயங்கி. தவிசு - ஆசனம். வருத்த - வருத்திச் செய்த.

22. எமரங்கள் - எம்மவர்; அம் : சாரியை. கொல்பூட்டு - கொல்லனாற் செய்யப்பட்ட பூட்டு; கொல்லன் என்பது விகுதியின்றிக் 'கொல்' என நின்றது. அற்பூட்டும் - அன்பினைச் செலுத்திய.

23. தையல் மாதவக்கொழுந்து - கௌரியம்மையார். சிரகநீர் - கமண்டல நீர்.

24. பரிகலம் - உண்கலம். நறு வீ முல்லை முகை - நறுமணத்தை விரும்பி வண்டுகள் வீழ்கின்ற முல்லை யரும்பு; வீ-புள்; இங்கு வண்டு. கருணை - பொரிக்கறி.

செய்யவா யிடையிடையே முகமனுரை யின்னமுது செவியி லூட்டத், தையலாள் வளைக்கையறு சுவையமுது வாயூட்டத் தளர்ந்த யாக்கை, ஐயர்தாந் திருவமுது செய்தமுதுண் டவரென மூப் பகன்று பூவிற், கையதே மலர்வாளிக் காளைவடி வாயிருந்தார் கன்னி காண. 25

பூசியவெண் ணீறுபோய்க் கலவையாய்க் கண்டிகைபோய்ப் பொன்செய் பூணுங், காசணிபொற் குண்டலமுங் கடகமுமாய் மூப்புப்போய்க் காளை யான, தேசுருவங் கண்டுநடு நடுங்கிவளைக் கரநெரித்துத் திகைத்து வேர்த்துக், கூசியொரு புறத்தொதுங்கி நின்றாளக் கற்புமலர்க் கொம்ப ரன்னாள். 26

ஆனபொழு தருங்கடிநன் மணங்குறித்து மனையிற்றீர்ந் தயலூர் புக்க, தேனொழுகு துழாயலங்கற் றீர்த்தனுக்கன் புடையார்போற் றிரியும் வஞ்ச, மானமுடை யார்மீண்டு மனை புகலும் பதினாறு வயதின் மேய, பானன்மணி கண்டனுதற் காப்பணிந்தோர் பசுங்குழவிப் படிவங் கொண்டான். 27

எழுதரிய மறைச்சிலம்பு கிடந்துபுறத் தலம்பவன்ப ரிதய மென்னுஞ், செழுமலரோ டையின்மலர்ந்து சிவானந்தத் தேன் றதும்பு தெய்வக் கஞ்சத், தொழுதகுசிற் றடிப்பெரிய விரல் சுவைத்து மைக்கணீர் துளும்ப வாய்விட், டழுதணையா டையிற் கிடந்தா னனைத்துயிரு மீன்றுகாத் தழிக்கு மப்பன். 28

---

25. அமுது - தேவாமிர்தம். பூ வில் - மலர் வில்; இது தேவர்கள் மேல் மன்மதன் தனது பாணங்களை எய்யும் வில்; பூவில் - பூமியில் எனினுமாம். தே மலர் வாளிக் காளை - மன்மதன்.

26. வெண்ணீறு - வெண்ணிற விபூதி; இதுவே அளவில்லாத புண்ணியத்தை அளிப்பது. கருநிற விபூதி நோயை யுண்டாக்கும்; செந்நிற விபூதி கீர்த்தியைப் போக்கும்; புகை நிற விபூதி ஆயுளைக் குறைக்கும்; பொன்னிற விபூதி செல்வத்தை அழிக்கும்.

27. அருங்கடி நல் மணம் - அரிய விளக்கத்தினையுடைய நல்ல மணம். தீர்ந்து - நீங்கி. துழாய் அலங்கல் தீர்த்தன் - திருமால். வஞ்ச மானம் உடையோர் - வஞ்சமும் சமய மானமும் உடைய மாமி முதலியோர். பானல் - நீலோற்பலம். நுதல் காப்பு அணிந்த - நெற்றி யில் திலப்பொட்டு அணிந்த.

28. அலம்ப - ஒலிக்க. தொழுதகு - துதிக்கத்தக்க. அப்பன் - தந்தையாகிய சோமசுந்தரக் கடவுள்.

தாய்விட்டுப் போனதொரு தனிக்குழவி யெனக்கலங்கித் தாங்கித் தேடி, ஆய்விட்டுப் பிரமனுழ மறைகளுழ வன்புடையா ளன்பிற் பட்டு, வாய்விட்டுக் கிடந்தழுத மகவினைக்கண் டணங் கனையாண் மாமி யென்னுங், காய்விட்டு மதக்கொடியா ளிம்மகவே தெனக்கேட்டாள் கௌரி தன்னை. 29

நத்தனயன் றனக்கரிய நாயகனுக் கன்புடையா ணவில்வா டேவ, [1]தத்தனயந் தருமனைவி யொடுபோந்து சிறுபோது தைய லாயீண், டித்தனயன் றனைப்பார்த்துக் கோடியென வைத்தகன்று னென்று முன்னஞ், சித்தநய னங்கலங்கச் சீறிமண வாட்டிதன் மேற் செற்றங் கொண்டாள். 30

என்புபூண் டிடுகாட்டிற் பொடியாடு முருத்திரனுக் கிடைய ருத, அன்புபூண் டான்மகவுக் கன்புடையாய் நீயுமெமக் காகா யென்றுத், துன்புபூண் டயர்வாளை மகவையுங்கொண் டகத்தை விடத் துரத்தி னார்கள், வன்புபூண் டொழுகுவை ணவம்பூண்டு பொறையிரக்க மான [2]நீத்தார். 31

தாயிலாப் பிள்ளைமுகந் தனைநோக்கித் தெருவினிடைத் தளர்வா ளுள்ளங், கோயிலாக் கொண்டுறையுங் கூடலு யகனை மனக் குறிப்பிற் கண்டு, வேயிலாக் கியதடந்தோட் கௌரிதிரு

---

29. தாங்கி - (பன்றி வடிவத்தையும் அன்ன வடிவத்தையும்) எடுத்து. ஆய் - ஆராய்ந்து. விட்டு - விண்டு; திருமால். விண்டு என்பது விட்டு என விகாரமாயிற்று. ஆய் விட்டு - ஆராய்ந்து எனினு மாம். அணங்கு - இங்குத் தாக்கி வருத்தும் பெண் தெய்வம். காய்தல்- கடுங்கோபம். விட்டு மதம் - வைணவ மதம். காய் விட்டு மதக்கொடி யாள் - கோபிக்கின்ற மலைபோன்ற நிலை பிரியாத மிக்க கொடியவள் எனினுமாம். விட்டு - மலை. மத: மிகுதிப் பொருள் உணர்த்தும் உரிச் சொல்.

30. நத்தன் - சங்கினை யேந்திய திருமால். நந்து - சங்கு. தேவதத்தன் - ஓர் அந்தணன் பெயர் என்பர். குறிக்கப்படாத ஒரு வனைக் குறிப்பிட்டுக் கூற வேண்டின் 'தேவதத்தன்' எனக் கூறுதல் உலக வழக்காம். நயம்தரு மனைவி - இங்குச் சீதேவி. கோடி - கொள் வாய்: முன்னிலை வினைமுற்று.

31. இடுகாடு - சுடுகாடு. பொடியாடும் - சாம்பற் பூசி யாடும். வன்பு - கொடுஞ்சீலம்.

பா-ம்—1 தத்தனயன் றரு மனைவி. 2 நீத்தோர்.

மந்திரத்தை விளம்ப லோடுஞ், [1]சேயிலாய்க் கிடந்தழுத குழவி வீசும் பிடைவிடைமேற் றெரியக் கண்டாள். 32

மழவுருநீத் தடலேற்றின் வருவார்தம் மிடத்தணங்கின் மனுவை யோதிப், பழகியபார்ப் பனமகளைப் பார்ப்பதியின் வடி வாக்கிப் பலருங் கண்டு, தொழவிடைமே லேற்றிவீசும் பாருக மலர்மாரி சுரர்க ளூற்ற, அழகரெழுந் தருளினர் களிதூங்கி யதி சயித்தா ரவனி மாக்கள். 33

ஆகச் செய்யுள்—1,460

---

32. வேய் - மூங்கில். மனக் குறிப்பு - மனக்கண். சேய் இல் ஆய்-தூரம் இல்லாததாக, சமீபமாக. ஆய் : ஆக என்னும் எச்சந் திரிபு.

33. மழ உரு - குழவி உருவம். பார்ப்பதியின் வடிவாக்கி - உமா தேவியார் சாருப வடிவாக்கி. களி தூங்கி-பெரு மகிழ்ச்சியில் அழுந்தி.

பா-ம்—1 சேயிலாக்.

# 24. கான்மாறியாடின படலம்

—o—

திருத்த ராய்மது ராபுரி மேவிய சித்தரா கியசெல்வர்,
விருத்த ராயிளை யவருமாய் மழவுமாய் வேடங்கொண் டடலேற்
றின், ஒருத்த ராய்விளை யாடிய வாடலை யுரைத்தன மினிமன்றுள்,
நிருத்த ராயவர் மாறிநின் றாடிய நிலைசிறி துரைசெய்வாம். 1

வேந்தன்[1]மீனவண் கொடியவ னாகிய விக்கிர மன்றன்றோள்,
ஏந்து மண்பொறை யிராசசே கரன்புயத் திறக்கியைந் தருநாடன்,
பூந்தண் மாமலர் வேதியன் மாதவன் புரத்தின்மேற் பொலிந்
தோங்குஞ், சாந்த நீறெனச் சண்ணித்த புண்ணியத் தனிமுத
னகர்சார்ந்தான். 2

கண்ண கன்புவி யிராசசே கரன்பொதுக் கடிந்துசெங்
கோலோச்சி, வண்ண வெண்குடை நிழற்றுவா னானந்த வடிவ
மாய்த் தனிமன்றுள், அண்ண லாடிய திருநடத் தன்பினா லாடனூ
லொழித்தேனை, [2]எண்ணி மூவிரு பத்துமுக்கலையுங்கற் றிறை
முறை செயுநாளில். 3

சிலம்பி வாயினா லிழைத்திடு பந்தரிற் செங்கண்மா றொழ
வைகும், அலம்பு தெண்டிரைப் பொன்னியந் தண்டுறை யானைக்கா
விறைக்கன்பு, கலந்த சிந்தையான் மூவிரு பத்துநாற் கலைகளும்
பயின்றுள்ளம், மலர்ந்த வன்கரி காற்பெரு வளத்தவன் வையகம்
புரக்கின்றான். 4

---

1. திருத்தர் - நின்மலர். மழவு - குழந்தை. மன்றுள் - வெள்ளியம்பலத்துள்.

2. வண் - வளமை. மா மலர் - இலக்குமி வசிக்கும் தாமரை மலர். வேதியன் - பிரமன். சண்ணித்த - பூசிய.

3. ஆனந்த வடிவம் - பேரின்ப வடிவம். ஆடல் நூல் - பரத நூல், நாட்டிய சாத்திரம்.

4. பொன்னி - காவிரி. ஆனைக்கா - திருவானைக்கா. கரிகாற் பெருவளத்தவன் - கரிகாற் சோழன்; இவன் உறையூரிலிருந்து அரசு புரிந்தவன். வளத்தவன் - வளவன் - சோழன். வளவன் - வளமையை யுடையவன்.

பா-ம்—1 மீனவன். 2எண்ணு.

பொன்னி நாடவன் வாயிலுள் ளாரொரு புலவன்வந் தலர்வேம்பின், கன்னி நாடனைக் கண்டுமுன் பரவுவான் கனைகழற் கரிகாலெம், மன்ன வற்கறு பத்துநாற் கலைகளும் வரும்வரா துனக்கொன்று, தென்ன ரேறனை யாயது பரதநூ றெறிந்திலை யெனச்சொன்னான். 5

கேட்ட மீனவன் மறுபுல விஞ்சையன் கிளத்துசொல் லிகன்மானம், மூட்ட வாகுல மூழ்கிய மனத்தனாய் முதுமறைச் சிரமன்றுள், நாட்ட மூன்றுடை நாயக னாடலை நானுமா டுதற்குள்ளம், வேட்ட தேகொலா மிதுவுமெம் பிரானருள் விதியென வதுகற்பான். 6

ஆடனூல் வரம்பு கண்டவ ராகி யவ்வழி யாடலும் பயின்ற, நாடக நடைதேர் புலவரைத் துருவி நண்ணிய வவர்க்கெலா மகிழ்ச்சி, வீடருஞ் சிறப்பா லறுவையும் பூணும் வெறுக்கையும் வெறுத்திடக் கொடுத்துப், பாடல்வண் டரற்றுந் தாரினான் பரதப் பனுவலுங் கசடறப் பயில்வான். 7

பாவமோ டராகந் தாளமிம் மூன்றும் பகர்ந்திடு முறையினாற் பரதம், ஆவயி னங்க முபாங்கமே பிரத்தி யாங்கமே யலர்முக ராகம், ஓவறு சிர்சால் கரப்பிர சார முவமையில் சிரக்கர கருமந், தாவறு கரகேத் திரங்கர கரணந் தானக மேசுத்த சாரி. 8

விண்டிடாத் தேசி சாரியே நியாயம் விருத்தியே பிரவிசா ரம்பூ, மண்டல முடனா காசமண் டலமே மாசில்சுத் தக்கர ணஞ்

---

5. முன் பரவுவான் - முன்னே நின்று புகழ்கின்றவன். தெரிந்திலை - கற்றுணர்ந்திலை.

6. விஞ்சையன் - கவிஞன். இகல் - பகைமை. ஆகுலம் - துன்பம்.

7. மகிழ்ச்சி வீடரும் சிறப்பு - மகிழ்ச்சி நீங்குதலில்லாத வரிசைகள். அறுவை - ஆடை. வெறுக்கை - பொன். தாரினான் - மாலையை அணிந்த இராசசேகர பாண்டியன்.

8. பாவம் - பாவகம், அவிநயம்; இஃது இருபத்துநான்கு வகைப்படும். அராகம் - இசை. பரதம், (நாட்டியம்) இது பாவம், அராகம், தாளம் ஆகிய இவற்றுடன் கூடியது. ஆவயின் - அப்பரத நூலினிடத்து. அங்கம் கீதாங்கம், நிருத்தாங்கம், உபயாங்கம் என மூவகைப்படும். கீதாங்கம் - கீதத்துக்கு வாசிப்பது; நிருத்தாங்கம் - நிருத்தத்துக்கு வாசிப்பது; உபயாங்கம் - இரண்டிற்கும் வாசிப்பது. அலர்முக ராகம் - தன்மை மிக்க முகராகம்.

சீர், கண்டவுற் புலித கரணமே யங்க காரமே யிரேசித மெல்லனக், கொண்டனர் லிலந்து பேதமுங் கற்றுக் கோதறப் பயின்றபி னவற்றுள். 9

வருத்தமின் மனோபா வாதியா மெட்டு வகைசிருத் தங்களிற் சாரி, நிருத்தமா கியதாண் டவமக மார்க்க நிகழ்த்திடுந் தேசியே வடுகே, அருத்தமா கியசிங் களமென மூன்று மதுநிலை யாறுமூ விரண்டு, திருத்தமாம் பதமுந் திகழிரே காதி செப்பிய வங்கமீ ரெட்டும். 10

நால்வகைத் தாகுங் கரணமு மேலோர் நாட்டிய விருவகைக் கரமுங், கால்வகை புரிகை முதற்பதி னாறுங் கவான்மனை யாதியா [1]மிரண்டும், பாலது மடிப்பு வகையெழு நான்கும் பழிப்பறு சுத்தசா ரியெனும், ஏலுறு பூசா ரிகள்பதி னாறு மித்துணைக் ககனசா ரிகளும். 11

ஏற்றதிக் கிராந்த மாதியா முப்பத் திருவகைத் தேசிசா ரிகளுங், காற்றினுங் கடுந்தேர்ச் சக்கர முதலாங் ககனசா ரிகைகளே மைந்துஞ், சாற்றுவித் துவற்பி ராந்தமா தியவாஞ்

---

9. சுத்தக் கரணம் - சுத்த நிருத்தத்துக்குரிய நூற்றெட்டுக் கரணம். அங்ககார முதல் இரேசிதமீறுகிய இருபது பேதங்களாகிய பொது விலக்கணங்கள் என்க

10. சாரி நிருத்தமாகிய தாண்டவம் அக மார்க்கமாம்; இன்னும் தேசி, வடுகு. சிங்களம் மூன்றும் அக மார்க்கமென்று சொல்லப்படும். அகமார்க்கம் - அகக்கூத்து ; இஃது அகச்சுவைபற்றி நிற்பது. தேசி - கீதத்துக்கு அடிசாரி முதலாகக் காற்சுற்றுதல், எறிதல் முதலியன. வடுகு - கால்களும் உடற்றாக்கு முதலிய வுடல் வர்த்தனையுமுடையது. சிங்களம் - மேற்கூறிய இரண்டிலக்கணங்களையுமுடையது. இவை மெய்த்தொழிற் கூத்தாகலின், மெய்க்கூத்து எனவும் பெயர் பெறும். அது நிலை ஆறு - அவ்வகமார்க்கத்துக்குரிய அறுவகை நிலை. அவை வைணவம், சமநிலை, கைவாசம், மண்டலம், ஆலீடம், பிரத்தியாலீடம் என்பன. மூவிரண்டு திருத்தமாம் பதம் - ஐந்து பாதம். அவை, சமநிலை, உற்கடிதம், சஞ்சாரம், காஞ்சிதம், குஞ்சிதம் என்பன.

11. இருவகைக் கரம் - எழிற்கை, தொழிற்கை என இரண்டு. எழிற்கை - அழகுபெறக் காட்டுங் கை ; தொழிற்கை - தொழிற்பெறக் காட்டுங் கை ; இவை அகக்கூத்துக்குரியன. பாலது - பகுப்பினை யுடையது.

பா-ம்—1 மிரண்டு.

சாரிபத் தொன்பது மாகப், போற்றிவை யனைத்து முட்படப்
புட்ப புடத்திலக் கணமுதற் பொருள்கள். 12

ஆசவாத் தியமுன் பொருண்முதற் களாச மாதியாம்
பாடபே தங்கள், பேசிய பதினு [1]ன்றுன்பதும் படக பேதமொன்
றுழிந்த நாலைந்தும், மாசறு மளக மாதியாம் பாட வகைகளு
லேழுமற் றவற்றிற், பூசல்வார்த் திகந்தொட் டைவகைச் சச்ச
புடாதியாந் தாளமாத் திரையும். 13

இளந்தமாத் திரையின் கதிகளுஞ் சொல்லுங் கீதமும்
பாடமு மெழுத்தும், வளந்தரு மணிபந் தாதிகீ தத்தின் வகுத்
தகட் டளையெழு நான்கும், அளந்திடு சரளை யாதிகட் டளையே
யைந்துநன் [2]கமைந்தபா வாதி, விளம்பிய மூன்று கலப்பு மீறுக
விளைத்திடுங் கூத்தக மார்க்கம். 14

உரைத்தவிக் கூத்துக் கற்கும் போதுதன் னுடம்பிற் சால
வருத்தநோ யெய்தி யிந்த வருத்தநான் மறையுந் தேறு
அருத்தமா யறிவாய் வெள்ளி யம்பலத் தாடி நின்ற
நிருத்தனர் தமக்கு முண்டே யென்பது நினைவிற் கொண்டான். 15

கரியதா மரைக்கண் ணனுங் கமலநான் முகனுங் காண்டற்
கரியதா னொன்றே நோவ வாற்றநா ணிற்ப தந்தோ

---

12. புட்பபுடத்திலக்கணம் - "புட்பபுடமென்பது புகலுங்காலை - யொத்த விரண்டு குடங்கையு மியைந்து - பக்கங் காட்டும் பான்மைத் தென்ப" என்பது சூத்திரம்.

13. சச்சபுடாதியாம் ஐவகைத் தாள மாத்திரையும் எனக் கொள்க. ஐவகைத் தாளம் - சச்சபுடம், சாசற்புடம், சட்பிதா புத்திரிகம், சம்பத்து வேட்டம், உற்கடிதம் என்பன. தாள மாத்திரை - தாளமும் மாத்திரையும் : உம்மைத்தொகை.

14. மாத்திரை - இங்குத் தாள மாத்திரை. சொல் - உட்சொல், புறச்சொல், ஆகாயச்சொல் என மூவகைப்படும். உட்சொல் என்பது நெஞ்சொடு கூறல்; புறச்சொல் என்பது கேட்போர்க்குரைத்தல்; ஆகாயச்சொல் என்பது தானே கூறல். எழுத்து - இன்ன சாதித் தாளத்திற்கு இத்தனை எழுத்தென்று வரையறுக்கப்பட்ட எழுத்துகள். விளம்பிய பாவாதி மூன்று கலப்பு - பரத நூலிற் கூறப்பட்ட பாவம், இராகம், தாளம் இம்மூன்றுந் தம்முட் பிளவுபடாமல் ஒத்த பான்மை.

15. இக்கூத்து - இவ்வகைக் கூத்து. அருத்தமாய் - பொருளாய். அறிவாய் - ஞான வடிவாய்.

பா-ம்—1 றென்பதும். 2 கமைந்துபா.

உரியதா மிதனைக் கற்று வருத்தமுற் றோர்ந்து மீது
தெரியநா னிருப்ப தேயோ வறனெனச் சிந்தை நோவான். 16

வடுப்படு பிறவிப் பௌவ வரம்புகாண் கின்ற நாள்வந்
தடுப்பவர் யாவ ரேனு மவர்க்கெலாம் போகம் வீடு
கொடுப்பவர் செய்யு மிந்தக் கூத்தையெப் படிநாஞ் சென்று
தடுப்பது தாகாதன் றேனும் வருந்துமே சரண மென்னு. 17

இதற்கிது துணிவென் றுன்னி யெழுந்துபோய்ச் சிவனி ராவிற்
கதக்களிற் றுருத்த லேந்துங் கதிர்மணிக் குடுமிக் கோயில்
மதக்கரி யுரியி னூற்கு வரம்பறச் சிறந்த பூசை
விதப்பட யாம நான்கும் விதிவழி யியற்றல் செய்யா. 18

விண்டக மலர்த்தா ளேத்தி வெள்ளியம் பலத்து ளன்பர்
தொண்டக மலர நின்ற சோதிமெய்ஞ் ஞானக் கூத்தைக்
கண்டக மகிழ்ந்து தாழ்ந்து கட்புனல் சோரச் செங்கை
முண்டக முடிமே லேற்றி முகிழ்த்துநின் றிதனை வேண்டும். 19

நின்றதா ளெடுத்து வீசி யெடுத்ததா ணிலமீ தூன்றி
இன்றுநான் காண மாறி யாடியென் வருத்தமெல்லாம்
பொன்றுமா செய்தி யன்றேற் பொன்றுவ லென்னு வன்பின்
குன்றனான் சுரிகை வாண்மேற் குப்புற வீழ்வே லென்னு. 20

நாட்டினன் குறித்துப் பரிய நண்ணுமுன் னிடத்தா ளூன்றி
நீட்டினன் வலத்தாள் வீசி நிருமலன் மாறி யாடிக்
காட்டினன் கன்னி நாடன் கவலையும் பாச மூன்றும்
வீட்டினன் பரமா னந்த வேலையுள் வீட்டி னனே. 21

---

16. தான் ஒன்றே - ஒரு திருவடியே. ஆற்ற நாள் - அனேக நாள் (ஆடி). நிற்பது - நிற்கின்றது. தெரிய - தெரிந்து.

17. பிறவிப் பௌவம் - பிறவியாகிய கடல். சரணம் - திருவடி.

18. சிவன் இரா - சிவராத்திரி. களிற்றுருத்தல் - ஆண் யானை. விதப்பட - முறைப்பட. விதி - சிவாகம விதி.

19. விண்டகம் - அகம் விண்டு - மனமுருகி. தொண்டகம் - தொண்டு பூண்ட மனம். மெய்ஞ்ஞானக் கூத்து - முத்தியருளும் ஞான நடனம்.

20. பொன்றும் ஆ(று) - அழியும் வண்ணம். பொன்றுவல் - இறப்பேன். சுரிகை - உடைவாள்.

21. நிருமலன் - சோமசுந்தரக் கடவுள். பாசம் மூன்று - ஆணவம் மாயை கன்மம் என்னும் மூன்று.

விளைகள்வாய் வீழ்ந்த வண்டின் மெய்யறி வின்ப மென்னும்
அளவிலா முந்நீர் வெள்ளத் தாழ்ந்தவ னெழுந்து பின்னும்
உளமும்வா சகமு மெய்யு முடையவ னதுவே யாகப்
பளகிலா வன்பு தானே படிவமாய்ப் பழிச்ச லுற்றான். 22

பெரியாய் சரணஞ் சிறியாய் சரணங்
கரியா கியவங் கணனே சரணம்
அரியா யெளியா யடிமா றிநடம்
புரிவாய் சரணம் புனிதா சரணம். 23

நதியா டியசெஞ் சடையாய் நகைவெண்
மதியாய் மதியா தவர்தம் மதியிற்
பதியாய் பதினெண் கணமும் பரவுந்
துதியாய் சரணஞ் சுடரே சரணம். 24

பழையாய் புதியாய் சரணம் பணிலக்
குழையாய் சரணங் கொடுவெண் மழுவாள்
உழையாய் சரணம் முருகா தவர்பால்
விழையாய் சரணம் விகிர்தா சரணம். 25

இருளாய் வெளியாய் சரணம் மெனையும்
பொருளா கவினைந் துபுரந் தரன்மால்
தெருளா தநடந் தெரிவித் தெனையாள்
அருளாய் சரணம் மழகா சரணம். 26

அயனத் தனெனப் படுமா டரவச்
சயனத் தவனைத் தருதத் துவநால்
வயனத் தவவா னவர்வா னவசேல்
நயனத் தவனு யகனே சரணம். 27

---

22. விளை கள் - (முதிர்ந்த) இனிமைமிக்க கள். பளகு - குற்றம். பழிச்சல் - துதித்தல்.

23. கரி - சாட்சி. அங்கணன் - அழகிய இருக்கண்களையுடையவன்; வங்கணன் - உற்றதோழன் எனினுமாம்.

24. துதியாய் - துதியையுடையவனே. சுடர் - பேரொளி.

25. பணிலம் - சங்கு. விகிர்தன் - வேறுபாடுடையவன்.

26. புரந்தரன் - இந்திரன். தெருளாத - தெளியாத.

27. அயனத்தனென - அயன்+நத்தனென - பிரமனும் சங்கையேந்தியவனும். நால் வயனம் - நான்கு வேதம். வசனம் வயனமென்றாயது.

கதவெங் கரியின் னுரியாய் சரணம்
முதலந் தமிலா முதலே சரணென்
றதிர்பைங் கழனூ புரவண் டலறும்
பதபங் கயமுன் புபணிந் தரசன். 28

என்றுமிப் படியே யிந்தத் திருநடம் யாருங் காண
நின்றருள் செய்ய வேண்டு நிருமல மான வெள்ளி
மன்றவ வடியேன் வேண்டும் வரமிது வென்று தாழ்ந்தான்
அன்றுதொட் டின்று மெங்கோ னந்நட நிலையாய் நின்றான். 29

ஆகச் செய்யுள் -1,489

---

28. கதம் - கோபம். பைங்கழல் - ஒளிபொருந்திய வீரக்கழல்

29. இந்தத் திருநடம் - காண்மாறியாடின இத்திருநடனம். எங்கோன் - எம்பெருமான்.

# 25. பழியஞ்சின படலம்

—o—

ஈறிலான் செழிய னன்புக் கெளியவ னாகி மன்றுள்
மாறியா டியகூத் தென்சொல் வரம்பின தாமே கங்கை
ஆறுசேர் சடையான் றானோ ரரும்பழி யஞ்சித் தென்னன்
தேறலா மனத்தைத் தேற்றுந் திருவிளை யாடல் சொல்வாம். 1

இனையநாட் சிறிது செல்ல விராசசே கரன்றன் காதற்
றனயனுங் குலோத்துங் கற்குத் தன்னர சிருக்கை நல்கி
வினையெலாம் வென்று ஞான வெள்ளியம் பலத்து ளாடுங்
கனைகழ னிழலிற் பின்னிக் கலந்துபே ரின்ப முற்றான். 2

குரவன்செங் கோல்கைக் கொண்ட குலோத்துங்க வழுதி செங்கண்
அரவங்கம் பூண்ட கூட லாதிநா யகனை நித்தம்
பரவன்பின் வழிபா டாறாப் பத்திமை நியமம் பூண்டான்
இரவஞ்சுங் கதுப்பி னல்லா ரீரையா யிரவ ருள்ளான். 3

அப்பதினா யிரவர்க்கு மொவ்வொருத்திக் கவ்வாறாய்
ஒப்பரிய வறுபதினா யிரங்குமர ருளரவருட்
செப்பரிய வல்லாண்மைச் சிங்கவிள வேறனையான்
வைப்பனையான் முதற்பிறந்த மைந்தன்பே ரனந்தகுணன். 4

கலைபயின்று பரிநெடுந்தேர் கரிபயின்று பலகைவாள்
சிலைபயின்று வருகுமரர் திறநோக்கி மகிழ்வேந்தன்
அலைபயின்ற கடலாடை நிலமகளை யடலணிதோள்
மலைபயின்று குளிர்தூங்க மகிழ்வித்து வாழுநாள். 5

செய்யேந்து திருப்புத்தூர் நின்றுமொரு செழுமறையோன்
பையேந்து மரவல்குன் மனைவியொடும் பானல்வாய்க்

---

1. செழியன் - இங்கு இராசசேகர பாண்டியன். அரும்பழி - கொடும்பழி. தென்னன் - இங்குக் குலோத்துங்க பாண்டியன்.

2. ஞானம் - ஞானவடிவாயுள்ள. பின்னிக்கலந்து - இரண்டறக் கலந்து.

3. குரவன் - தந்தை. நியமம் - கடன். கதுப்பு - கூந்தல்.

4. வல்லாண்மை - மிக்க ஆண்மை. வைப்பு - நிதியம்.

5. பலகை - கேடகம். மலைபயின்று - மலையின்கண் தங்கி.

கையேந்து குழவியொடுங் கடம்புகுந்து மாதுலன்பால்
மையேந்து பொழின்மதுரை நகர்நோக்கி வருகின்றான். 6

வருவானுண் ணீர்வேட்டு வருவாளை வழிநிற்கும்
பெருவானந் தடவுமொரு பேராலி னீழலின்கீழ்
ஒருவாத பசுங்குழவி யுடனிருத்தி நீர்தேடித்
தருவான்போய் மீண்டுமனை யிருக்குமிடந் தலைப்படுமுன். 7

இலைத்தலைய பழுமரத்தின் மிசைமுன்னா ளெய்ததொரு
கொலைத்தலைய கூர்வாளி கோப்புண்டு கிடந்ததுகால்
அலைத்தலைய வீழ்ந்தும்மை வினையுலப்ப வாங்கிருந்த
வலைத்தலைய மானோக்கி வயிறுருவத் தைத்தன்றால். 8

அவ்வாறவ் வணங்கனையா ளுயிரிழந்தா ளவ்வேலைச்
செவ்வாளி யேறிட்ட சிலையுடையா னொருவேடன்
வெவ்வாளி யேறனையான் வெயிற்கொதுங்கு நிழறேடி
அவ்வால நிழலெய்தி யயனின்றா னிளைப்பாற. 9

தண்ணீர்க்குப் போயாவி தலைப்பட்ட மறையவனும்
உண்ணீர்கைக் கொண்டுமீண் டொருங்கிருந்த குழவியொடும்
புண்ணீர்வெள் ளத்துக்கா றாழ்ந்துயிரைப் புறங்கொடுத்த
பண்ணீர மழலைமொழிப் பார்ப்பனியைக் கண்ணுற்றான். 10

அயில்போலுங் கணையேறுண் டவ்வழிபுண் ணீர்சோர
மயில்போல வுயிர்போகிக் கிடக்கின்றாண் மருங்கணைந்தென்

---

6. செய் ஏந்து - வயல் சூழ்ந்து (விளங்கும்). பை - படம். பானல்வாய் - பால் நல் வாய்-பால் மணம் மாறாத நல்லவாய். கடம் - காடு. மாதுலன் - மாமன்; இவன் மதுரைக்கும் திருப்புத்தூருக்கும் இடைப்பட்ட ஊரிலிருப்பவன் என ஆலாசிய மான்மியம் கூறும். அவ்வூர்க்கு மதுரையை நோக்கி வருகின்றான் என்க.

7. வேட்டு - விரும்பி. ஒருவாத - (தன் கையினின்றும்) நீங்காத. மனை - மனைவி.

8. பழுமரம் - ஆலமரம். கோப்புண்டு - சிக்கிக்கொண்டு. உம்மை வினை உலப்ப - முன் வினைப்பயன் முடிய. வலைத்தலைய - வலையில் அகப்பட்ட.

9. வெவ் ஆளி ஏறு - கொடிய ஆண் சிங்கம், இளைப்புஆற - களைப்பு நீங்கும்படி.

10. ஆவி - நீரோடை. புண்ணீர் - இரத்தம். கால் - கால்வாய். புறங்கொடுத்த - இழந்த. பண்நீர - பண்போலும் இனிமைத் தன்மை வாய்ந்த.

உயிர்போல்வா யுனக்கிதுவென் னுற்றதென மத்தெறிதண்
தயிர்போலக் கலங்கியறி வழிந்துமனஞ் சாம்பினான். 11

இனையதோர் பெண்பழியை யாரேற்பா ரெனத்தேர்வான்
அனையதோர் பழுமரத்தின் புறத்தொருசா ரழல்காலும்
முனையதோர் கணையோடு முடக்கியகைச் சிலையேந்தி
வினையதோர்ந் ததிர்நின்ற விறல்வேடன் றனைக்கண்டான். 12

காப்பணி தாளன் வாளொடு வீக்கிய கச்சாளன்
கூர்ப்பக ழிக்கோ லேறிடு வில்லன் கொலைசெய்வான்
ஏற்பன கைக்கொண் டிவ்விடை நின்றா னிவனேயென்
பார்ப்பனி யைக்கொன் றின்னுயி ருண்டு பழிபூண்டான். 13

என்ன மதித்தே யேடா வேடா வென்னேழை
தன்னை வதைத்தாய் நீயே யென்னாத் தழல்கால்கண்
மின்ன லெயிற்றுக் கூற்றென வல்வாய் விட்டார்த்து
மன்னவ னாணைப் பாச மெறிந்து வலித்தேகும். 14

மாண்டவ ளைத்தன் வெந்நிடை யிட்டான் மகவொக்கற்
றாண்டவ ணைத்தான் றாய்முலை வேட்டழு தன்சேயைக்
காண்டொறும் விம்மாக் கண்புனல் சோரக் கடிதேகா
ஆண்டகை மாறன் கூட லணைந்தா னளியன்றான். 15

மட்டவிழ் தாரான் வாயின் மருங்கே வந்தெய்தா
உட்டுக ளில்லா வேடனை முன்விட் டுயிரன்னாள்

11. கணை ஏறு - அம்பு. அவ்வழி - அம்பு தைத்த வாயினை. சாம்பினான் - ஒடுங்கினான்.

12. வினையது ஓர்ந்து - மிருகங்களைக் கொல்லும் தொழிலை ஆராய்ந்து. விறல் - வெற்றி.

13. காப்பு - செருப்பு. கச்சாளன் - கச்சையை யுடையவன். பகழிக்கோல் - அம்பு.

14. ஏடா - என்டா. ஏழைதன்னை - மனைவியை. ஆணைப் பாசம் - ஆணையாகிய கயிறு. வலித்து - இழுத்துக்கொண்டு.

15. வெந்நிடை - முதுகின்மேல். ஒக்கல் - இடைப்பக்கம். தாண்ட - பொருந்த. ஏகா - சென்று. அளியன்தான் - இரங்கத்தக்கவனாகிய அந்தணன்.

16. உள் துகள் இல்லா - மனத்தில் சிறிதும் களங்கம் இல்லாத. சட்டகம் - உடல். தமர் - இங்கு மந்திரி முதலியோர்.

சட்டக நேரே யிட்டெதிர் மாறன் றமர்கேட்பக்
[1]கட்டுளி சிந்தா முறையிடு கின்றான் கையோச்சா. 16

கோமுறை கோடாக் கொற்றவ ரேறே முறையேயோ
தாமரை யாள்வாழ் தண்கடி மார்பா முறையேயோ
மாமதி வானோன் வழிவரு மைந்தா முறையேயோ
தீமைசெய் தாய்போற் செங்கை குறைத்தாய் முறையேயோ. 17

பிறங்குங் கோலான் மாறடு கொற்றம் பெறுவேந்தன்
உறங்கும் போதுந் தன்னரு ளாணை யுலகெங்கும்
அறங்குன் றுவாக் காப்பதை யென்ப வஃதியாதிம்
மறங்குன் றுதான் செய்கொலை காவா வழியென்றான். 18

வாயிலு ளார்த மன்னவன் முன்போய் மன்றாநங்
கோயிலின் மாடோர் வேதியன் மாதைக் கொலைசெய்தான்
ஆயின னென்றோர் வேடனை முன்விட் டவிந்தாளைத்
தாயினன் வந்திங் கிட்டயர் கின்றான் றமியென்றார். 19

இறைமக னஞ்சா வென்குடை நன்றோ லென்காவல்
அறமலி செங்கோ லஞ்சு பயந்தீர்த் தரசாளும்
முறைமையு நன்றோன் மண்கலி [2]மூழ்கா முயன்றேந்தும்
பொறைமையு நன்றோ லென்று புலந்து புறம்போந்தான். 20

---

17. கோமுறை - மனுநூல் முறை. தண் கடி - குளிர்ந்த விளக்கமமைந்த. திருமால், உலக பாலர் உருவாய் நின்று உலகங் காக்கு முறைமை பற்றி அரசனை, 'தாமரையாள் வாழ் தண் கடி மார்பா' என்றார். தீமை செய்தாய் போற் செங்கை குறைத்தாய் என்றது பொற்கைப் பாண்டியன் வரலாற்றைக் குறித்து நின்றது.

18. பிறங்கும் - விளங்கும். மாறு - பகை. கொற்றம் - வெற்றி. காப்பதை, ஐ : சாரியை. வேந்தன் உறங்கும்......... காப்பதை என்ப- இக்கருத்தைச் சீவக சிந்தாமணி நூலாரும், "உறங்கு மாயினு மன்னவன் றன்னொளி - கறங்கு தெண்டிரை வையகங் காக்குமால்" என்றார்.

19. கோயில் - அரண்மனை. அவிந்தாளை - உயிரிழந்தாளை. தாயினன் - எடுத்து : முற்றெச்சம். தமி - தனியனாய்.

20. நன்றோல் - நன்றாய் இருந்தது ; இஃது இழிவு குறித்தது. அஞ்சுபயம் - குடிகளுக்கு அரசனாலும், அவன் பரிசனத்தாராலும், பகைவராலும், கள்வராலும், விலங்கு முதலிய பிறவுயிர்களாலும் வருங் கேடுகள். கலி - துன்பம். புலந்து - மனம் வாடி.

பா-ம்—1 கட்டழல் சிந்தா. 2 மூழ்க.

வேதிய னிற்குந் தன்மை தெரிந்தான் மெலிவுற்றான்
சாதியின் மிக்காய் வந்த துனக்கென் றளர்கின்றாய்
ஓதுதி யென்னக் காவலனைப் பார்த் துரைசான்ற
நீதியு ளாய்கே ளென்றுரை செய்வா னிகழ்செய்தி. 21

இன்றிவ னைக்கொண் டோர்வட நீழ [1]லிடைவிட்டுச்
சென்றுத ணீர்கொண் டியான்வரு முன்னிச் சிலைவேடன்
கொன்றய னின்றா னென்றுலை யூட்டுங் கொலைவேல்போல்
வன்றிறன் மாறன் செவிநுழை வித்தான் மறையோனால். 22

அந்தணன் மாற்றந் தன்னையு முட்கொண் டறநோக்குஞ்
சந்தன வெற்பன் மறவனை நோக்கத் தாழ்ந்தன்னான்
எந்தை பிரானே நாயடி யேனின் றெய்ப்பாற
வந்து புகுந்தே னந்த மரத்தின் மருங்கோர்சார். 23

ஐயே நானுங் கொன்றவ னல்லேன் கொன்றாரைக்
கையேன் வேறுங் கண்டில னென்றா னிவளாகத்
தெய்யே றுண்ட வாறெவ னென்றா ரெதிர்நின்றார்
மெய்யே யையா யானறி யேனிவ் விளைவென்றான். 24

இக்கொலை செய்தான் யானல னென்னா துளனென்னத்
தக்கவ னேயோ தறுகண் மறவ னுரைமெய்யோ
சிக்க வொறுத்தா லல்லதை யுண்மை செப்பாயென்
றோக்க வுரைத்தார் மந்திர ருள்ளார் பிறரெல்லாம். 25

மன்னன் றானு மற்றது செய்மின் னெனமள்ளர்
பின்னந் தண்டஞ் செய்தனர் கேட்கப் பிழையில்லான்

---

21. சாதியில் மிக்கது - இங்கு அந்தணர் சாதி. உரை சான்ற - புகழமைந்த.

22. வடநீழல் இடை - ஆலமரத்தின் நிழலில். உலையூட்டும் - உலைக்களத்தில் காய்ச்சிய.

23. சந்தன வெற்பன் - பொதிய மலையையுடைய குலோத்துங்க பாண்டியன். மறவன் - வேடன். எய்ப்பு - இளைப்பு.

24. ஐயே - ஐயனே; இது வேட்டுவ சாதியார் உயர்ந்தாரை விளிக்கும் மரியாதைச்சொல். கையேன் - கீழ் மகனாகிய யான். எய் - அம்பு: தொழிலாகுபெயர். மெய்யே - சத்தியமாகவே.

25. தறுகண் - அஞ்சாமை. உரை - சொல். சிக்க - மிகுதியாக. மந்திரர் - ஆலோசனைக்காரர்.

பா-ம்—1 விடை யிட்டு.

முன்னஞ் சொன்ன சொற்பெய ராஞய் மொழியாயின்
றின்னந் திரத் தேருமி னென்ரு னென்செய்வான். 26

ஆற்றவொ றுக்குந் தண்டமு மஞ்சா னறைகின்ற
கூற்றமு மொன்றே கொன்ற குறிப்பு முகந்தோற்ருன்
மாற்றவ ரேயோ மாவோ புள்ளோ வழிவந்த
கோற்ருெடி யைக்கொன் றென்பெற வல்லான் கொலைசெய்வான். 27

கைதவ ஞமிக் கானவ னேயோ பிறரேயோ
செய்தவர் யாரே யிக்கொலை வேட்டஞ் செய்தோர்மா
எய்த விலக்கிற் றப்பிய கோரு னேறுண்டிம்
மைதவழ் கண்ணுண் மாய்ந்தன ளேயோ வறியேனல். 28

என்று முன்னித் தென்னவ னின்ன மிதுமுன்னூல்
தன்று லாயத் தக்கதை யென்ருன் றகவிற்றன்
அன்று ரந்நூ லாய்ந்திது நூலா லமையாதால்
மன்று தெய்வத் தாலே தேறும் வழியென்ருர். 29

வேந்தர்கள் சிங்கம் வேதிய னைப்பார்த் திதுதீர
ஆய்ந்துன துள்ளக் கவலை யொழிப்பே னஞ்சேனின்
ஏந்திழை யீமக் கடனிறு விப்போ தென்றேவித்
தேந்துணர் வேங்கைத் தார்மற வோனைச் சிறைசெய்தான். 30

மின்னனை யாடன் செய்கடன் முற்ரு மீண்டோனைத்
தன்னமர் கோயிற் கடைவயின் வைத்துத் தானேகிக்

26. மன்னர் - இங்குத் தண்டலாளர். பின்னந்தண்டம் - துணிந்த கருத்தை வேறுபடுக்குந்தண்டம். இன்னம் - இன்னமும். தீர - சந்தேகம் நீங்க, முற்ற.

27. கூற்றமும்-வார்த்தையும். மாற்றவரேயோ-(இவ்வந்தணனும் மனைவியும் இவ்வேடனுக்குப்) பகைவரேயோ. கோற்ருெடி - இங்குப் பார்ப்பனி: அன்மொழித்தொகை.

28. கைதவன் - வஞ்சகன். வேட்டஞ்செய்தோர் - வேட்டையாடுவோர்.

29. முன்னூல் - அறநூல்; வேதத்தைத் தழுவிய சோதிட நூலுமாம். தகவில் தன் அன்னூர் - தகுதியில் தன்னையொத்த அமைச்சர்கள்; புரோகிதருமாம். தன் என்றது பாண்டியனை.

30. ஈமக்கடன் - தகன முதலிய மயானக்கிரியைகள். நிறுவிப்போது - முடித்து வருக. தேந்துணர் - தேன் சிந்தும் பூந்துணர். வேங்கை - ஒருமரம்.

கொன்னவில் வேலான் றங்கள் குடிக்கோர் குலதெய்வம்
என்ன விருந்தா ரடிகள் பணிந்தா னிதுகூறும். 31

மன்றுடு மணியேயிம் மறவன்றுன் பார்ப்பனியைக்
கொன்றுனே பிறர்பிறிதாற் கொன்றதோ விதுவறநூல்
ஒன்றுனு மளப்பரிதாக் கிடந்ததா லுன்னருளால்
என்றுழ்வு கெடத்தேற்று யென்றிரந்தா னவ்வேலை. 32

திருநகரின் புறம்பொருசார் குலவணிகத் தெருவின்கண்
ஒருமனையின் மணமுளதங் கந்தணனே டொருங்குநீ
வருதியுன துளங்தேரு மாற்றமெலாந் தேற்றுமென்
றிருவிசும்பி னகடுகிழித் தெழுந்ததா லொருவாக்கு. 33

திருவாக்குச் செவிமடுத்துச் செழியன்றன் புறங்கடையிற்
பெருவாக்கு மறையவனே டொருங்கெய்திப் பெரும்பகல்போய்க்
கருவாக்கு மருண்மாலைக் கங்குல்வாய்த் தன்னைவேற்
றுருவாக்கிக் கடிமனைபோ யொருசிறைபுக் கினிதிருந்தான். 34

அன்றிறைவ னருளாலங் கவர்கேட்க வம்மனையின்
மன்றன்மகன் றனக்களந்த நாளுலப்ப மறலியிருட்
குன்றமிரண் டெனவிடுத்த கொடும்பாசக் கையினர்வாய்
மென்றுவருஞ் சினத்தவரி லொருவனிது [1]வினவுமால். 35

---

31. முற்று - முடித்து. தன்னமர் கோயில் - தன்னால் விரும்பப் பட்ட அரண்மனை. அந்தணன் ஆசௌசி ஆதலால் தன்னுடன் அழைத்துச்செல்லாது தானிருக்கும் மாளிகை வாயிலில் வைத்துப் போயினுன் என்க. கொன்னவில் - கொலைத்தொழிலைச் செய்கின்ற: அச்சத்தைச் செய்கின்ற; கொல்லனால் செய்யப்பட்ட.

32. பிறர் - இவ்வேட்டுவன் அல்லாத பிறர்; இவ்வந்தணனுக்குப் பகைவராகிய பிறர். பிறிதால் - பிற காரணத்தால்; வேறு ஆயுதத் தால்.

33. மணம் - திருமணம். மாற்றம் - வேறுபாடு. ஒருவாக்கு - ஒரு அசரீரி.

34. பெருவாக்கு - (சிவபெருமான்) பெருவாக்காகிய வேதம். கருவாக்கும் - கருமையையுண்டாக்கும். மருள் மாலை - இரவும் பகலும் கலக்கும் அந்திப்போது; மருளல் - கலத்தல்.

35. மன்றன் மகன் - மணமகன். அளந்த நாள் - வரையறுத்த ஆயுள் நாள். உலப்ப - முடிய. மறலி - இயமன்.

பா-ம்—1 விளம்புமால்.

இன்றேயிங் கிவனுயிரைத் தருதிரெனு மிரும்பகட்டுக்
குன்றேறுங் கோனுரையாற் கொள்வதெவன் பிணியுடம்பின்
ஒன்றேனு மிலதொருகா ரணமின்றி யுயிர்கொள்வ
தன்றேயென் செய்துமென மற்றவனீ தறைகிற்பான். 36

ஆற்றாலே [1]றுண்டகணை யருகொதுங்கும் பார்ப்பனியைக்
காற்றால்வீழ்த் தெவ்வாறு கவர்ந்தேமப் படியிந்தச்
சாற்றார வாரத்திற் றும்பறுத்துப் புறநின்ற
ஈற்றாவை வெருளவிடுத் திவனுவி கவர்கென்றான். 37

அந்தமொழி கேட்டரச னருமறையோய் கேட்டனையோ
இந்தமொழி யெனப்பனவ னிவனிவ்வா றிறந்தாலென்
பைந்தொடியா ளிறந்ததுமப் படியேயென் மனக்கவலை
சிந்தவிது காண்பேனென் றொருங்கிருந்தா னென்னனொடும். 38

ஒட்டியபல் கிளைதுவன்றி யொல்லொலிமங் கலந்தொடங்கக்
கொட்டியபல் லியமுழங்கக் குழுமியவோ சையின்வெருண்டு
கட்டியதாம் பிறப்புனிற்றுக் கற்றவொன் [1]றதிர்ந்தோடி
முட்டியதான் மணமகனை முடிந்ததா லவனுவி. 39

மணமகனே பிணமகனாய் மணப்பறையே பிணப்பறையாய்
அணியிழையார் வாழ்த்தொலிபோ யழுகையொலி யாய்க் [2]கழியக்
கணமதனிற் பிறந்திறுமிக் காயத்தின் வரும்பயனை
உணர்வுடையார் பெறுவருணர் வொன்றுமிலார்க் கொன்றுமிலை. 40

கண்டானங் தணனென்ன காரியஞ்செய் தேனெனத்தன்
வண்டார்பூங் குழன்மனைவி மாட்சியினுங் கழிதுன்பங்

---

36. இரும்பகட்டுக் குன்றேறுங்கோன்-இயமன். கொள்வ தன்றே-கொள்வதடாதே.

37. ஆறு ஆல் - வழியில் நின்ற ஆலமரத்தில். ஏறுண்ட - சிக்கிக்கிடந்த. சாறு-திருமண விழா. ஈற்று ஆ - கன்றையுடைய பசு.

38. பனவன் - அந்தணன். இது - இக்காட்சியையும். இவன் - இந்த மணமகன்.

39. வெருண்டு - பயந்து. புனிறு - இளமை. கற்ற - கன்று+ஆ.

40. காயத்தின் வரும்பயனை, "மானிட யாக்கை தானும் வகுத்தது மனவாக் காயம் - ஆனிடத் தைந்து மாடும் அரன்பணிக்காக அன்றோ" எனவும், "பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே" எனவும் வருவனவற்றால் அறிக.

பா-ம்—1 றெதிர்ந்தோடி. 2 கழிந்த.

கொண்டான்மற் றவனெடுந்தன் கோயில்புகுந் தலர்வேப்பந்
தண்டாரா னமைச்சர்க்கும் பிறர்க்குமிது சாற்றினன். 41

மறையவனை யின்னுமொரு மணமுடித்துக் கோடியென
நிறையவரும் பொருளீந்து நீபோதி யெனவிடுத்துச்
சிறையழுவத் திடைக்கிடந்த செடித்தலைய விடிக்குரல
கறையுடல்வே டனைத்தொடுத்த கால்யாப்புக் கழல்வித்து. 42

தெளியாதே யாமிழைத்த தீத்தண்டம் பொறுத்தியென
விளியாவின் னருள்சுரந்து வேண்டுவன நனிநல்கி
அளியாறு மனத்தரச னவனையவ னிடைச்செலுத்திக்
களியானை விழவெய்த [1]கௌரியனைப் போய்ப்பணிவான். 43

ஆதரம் பெருகப் பாவியேன் பொருட்டெம் மடிகணீ ரரும்பழி யஞ்சு, நாதரா யிருந்தீ ரெந்தையார்க் [2]குண்டோ நான் செயத் தக்கதொன் றென்றுக், காதலிற் புகழ்ந்து பன்முறை பழிச்சிக் கரையின்மா பூசனை சிறப்பித், தேதம தகற்றி யுலகினுக் குயிரா யிருந்தன னிறைகுலோத் துங்கன். 44

ஆகச் செய்யுள்—1,533

---

41. மாட்சி - இறப்பு ; மாள் ; பகுதி. கழிதுன்பம் - மிக்கதுன்பம்.

42. கோடி - கொள்வாய் : முன்னிலை வினைமுற்று. சிறையழுவம்- சிறைச்சாலை. செடி - முடை நாற்றம். கறையுடல் - கரிய உடல். கால் யாப்பு - கால் விலங்கு.

43. அளியாறு - தண்ணளி நீங்காத. அவன் இடை செலுத்தி - அவன் இருக்குமிடத்திற்கு அனுப்பி. கௌரியன் - சௌந்தர பாண்டியராகிய சோமசுந்தரக் கடவுள்.

44. ஆதரம் - அன்பு. மா - சிறப்பு ; அது, விழா. ஏதம்-குற்றம். பா-ம்—1 காவலனைப். 2 குண்டே.

# 26. மாபாதகந்தீர்த்த படலம்

—o—

வேத நாயகன் வெம்பழி யஞ்சிய
நாத ஞான நலனிது நல்கிய
தாதை யைக்கொலை செய்த தனயன்மா
பாத கந்தனைத் தீர்த்தமை பாடுவாம். 1

விரைசெய் மாலைக் குலோத்துங்க மீனவன்
திரைசெய் நீர்நிலஞ் செங்கோல் செலத்தனி
அரசு செய்யுமந் நாளி லவந்தியென்
றுரைசெய் மாநக ராளொரு பூசுரன். 2

வெருவுங் காய்சின மாறிய வேதியன்
மருவுங் காதல் மனையெனும் பேரினாள்
திருவுங் [1]காமனற் றேவியு மண்புனை
உருவுங் காமுறு மொப்பில் வனப்பினாள். 3

படியி லோவியப் பாவையொப் பாகிய
மடிவி னாளவள் பான்மக னென்றொரு
கொடிய பாவி பிறந்து கொலைமுதற்
கடிய பாவக் [2]கலன்போல் வளருநாள். 4

---

1. வேத நாயகன் - சோமசுந்தரக் கடவுள். மாபாதகம் - பெரும் பாவம்.

2. விரை - வாசனை. திரை - அலை. பூசுரன் - அந்தணன்.

3. சினம் மாறிய - கோபம் உண்டாகப்பெறாத. மனை எனும் பேரினாள் - (மனைமாட்சியின்றி) மனைவி என்னும் பெயர் மாத்திரையே யுடையவள். மண்புனை - சுதையாற் செய்த.

4. படியில் ஓவியப் பாவை - கொல்லிப் பாவை. படி - பூமி: அது கொல்லிமலை. கொலை முதல் கடிய பாவம் - கொலை, களவு, கள், காமம், குருத்துரோகம் என்னும் பஞ்சமா பாதகங்கள். பாவக்கலன் - பாவங்களாகிய சரக்குகளை ஏற்றிய கப்பல்.

பா-ம்—1 காமன்றன் தேவியும், காமனுந் தேவியும். 2 கனல்போல்.

கோடி கோடி யடுஞ்சிலை கோட்டியே
கோடி கோடி கொடுங்கணை பூட்டியே
கோடி கோடி விகாரமுங் கூட்டியே
கோடி கோடி யனங்கரெய் தார்கொலோ. 5

இளமைச் செவ்விய யாக்கையன் மையல்கூர்
வளமைக் காமமும் வல்வினை யுந்நிறைத்
[1]தளைவிட் டீர்த்தலிற் றன்னை வயிற்றிடை
விளைவித் தீன்றவ டன்னை விரும்பினான். 6

அன்னை யென்னு மழிதகை யாளகத்
தின்னு யிர்த்துணை யும்மனக் காவலாய்
மன்னு நாண மடமுத னல்வருந்
தன்னை நீங்கலிற் றுனுமொத் தாளரோ. 7

இன்ப மோசிறி தாகு மிதில்வருந்
துன்ப மோகரை யில்லாத் தொடுகடல்
என்ப தாரு மிவனு லறியவிவ்
வன்ப தான வினையால் வருந்துவான். 8

---

5. விகாரம் - சுப்பிரயோகம், விப்பிரயோகம், சோகம், மோகம், மரணம் என்னும் அவத்தைகள். சுப்பிரயோகம் - சொல்லும் நினைவும் மாறுபடுதல்; விப்பிரயோகம் - பெருமூச்செறிந்து வருந்துதல்; சோகம் - வெதும்புதல், உண்பன தெவிட்டல்; மோகம் - வருந்துதல், சொற்பல பிதற்றல்; மரணம் - அயர்த்தல், மயங்கல். இவை முறையே தாமரை, மாம்பூ, அசோகு, முல்லை, நீலோற்பலம் என்னும் ஐந்து பாணங்களால் வருவன. அனங்கர் - மன்மதர்கள்.

6. நிறைத்தளைவிட்டு - நிறையாகிய விலங்கை விடுவித்து; நிறை - நெஞ்சைக்கற்புவழியில் நிறுத்தல்.

7. அழிதகையாள் - கற்பழிந்தவள். நாணமடமுதல் நால்வர் - நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் நான்கு காவற்காரர், நாணம் - தன் கணவனை அன்றி மற்றோரைக்காண நாணுதல்: மடம் - குரவர் உணர்த்தக்கொண்டு கொண்டதை வெளிவிடாமை; தன் கணவன் குணத்தையன்றி மற்றோர் குணத்தை யறியாமையுமாம்; அச்சம் - தனித்திருத்தல் முதலியவற்றிற்கு அஞ்சுதல்; பயிர்ப்பு - பயிலாத பொருளில் அருவருப்புக் கொள்ளுதல்.

8. தொடுகடல் - தோண்டப்பட்ட கடல். வன்பது, அது: பகுதிப்பொருள் விகுதி. வன்பு - கொடுமை.

பா-ம்—1 தளையிட்.

மைய லாக மதியை விழுங்கவக்
கைய னாயைக் கலந்தொழு குஞ்செயல்
ஐயன் றான்குறிப் பாற்கண் டயற்செவிக்
குய்ய லாவண்ண முள்ளத் தடக்கினான். 9

வேற்றோர் வைகல் வெளிப்படக் கண்டறஞ்
சாற்று நாவினன் வேறொன் றுஞ் சாற்றிலன்
சீற்ற மேல்கொடு செல்வன்கொல் வேனென
ஏற்றெ ழுந்தன னீன்றாள் விலக்குவாள். 10

'தாயி லின்ப நுகர்ந்தனை தந்தையைக்
காயி லென்பெறு வாயெனக் காமுகர்க்
காயி லன்னையி லப்பனி லென்பயன்
[1]ஏயி லின்னரு ளென்னற மென்னென்றான். 11

மண்டொ டுங்கரு விப்படை வன்கையிற்
கொண்டு தாதை குரவனென் றோர்கிலான்
துண்ட மாகத் துணித்தாளாய் வாய்முகந்
துண்ட காம நறவா லுணர்விலான். 12

மைக்க ருங்கங்குல் வாய்க்கொன்ற தாதைக்குத்
தக்க தீத்தவி சிட்டன்னை தன்னொடுங்
கைக்க டங்கு பொருளொடுங் கன்னெறி
புக்க னன்புடை சூழ்ந்தார் புளிநரே. 13

---

9. மையல் - காம மயக்கம். மதி - அறிவாகிய சந்திரன். கையன் - கீழ்மகன். ஆய் - தாய். உய்யலா - செல்லாத.

10. அறம் சாற்று நாவினன் - அந்தணன். செல்வன் - (கொடும் பாவியாகிய) புதல்வன்.

11. காயில் - கொன்றால். ஏயில் - பொருந்தில். இன் அருள் என் - இனிய கருணையால் விளையும் பயன் என்ன.

12. மண்தொடுங் கருவி - மண்வெட்டி. அரசன், ஆசிரியன், தந்தை, தமையன், குரு இவர்கள் ஐங்குரவர்கள்; இவர்கட்குத் தவறு இழைத்தல் மகாபாதகம் என்பார், 'தந்தை குரவன் என்று ஓர்கிலான்' என்றார்.

13. கங்குல்வாய் - இராப்பொழுதில். தீத்தவிசு இட்டு - தீக்கடன் முடித்து. கல்நெறி - பாலைவனத்தின் வழியாக. புளிநர் - ஆறலைக்கும் வேடர்.

பா-ம்—1 நேயில். (நேயில் - அன்பினால். நே - அன்பு.)

எய்யுங் கோலொடு வில்ல ரிடிக்குநேர்
செய்யுஞ் சொல்லினர் செல்லலை நில்லெனக்
கையி லுள்ளவுங் கைக்கொண்டு காரிகைத்
தைய றன்னையுந் தாங்கொடு போயினார். 14

சென்று சேணிடைச் சிக்கற வாழலாம்
என்ற வெண்ணமொன் றெய்திய வண்ணமொன்
றொன்று நாமெண்ணத் தெய்வமொன் றெண்ணிய
தென்ற வார்த்தை யிவனிடைப் பட்டதால். 15

தாதை தன்றன யற்கினி யார்துணை
மாதர் யாயை மறவர்கைக் கொள்ளவிப்
போது தான்றுணை யென்பவன் போன்றுமா
பாத கத்துரு வாய்வந்து பற்றினான். 16

ஆவ வென்னு மழுஞ்சிவ தாவெனும்
பாவம் பாவம் பழியிது வோவைய
கோவெ னுங்கை குலைத்தெறி யுந்நிழற்
பாவை போல விடாதுபின் பற்றுமால். 17

நல்லதீர்த் தஞ்சிவ தலநலோர் பக்கமுஞ்
செல்லவொட் டாதரன் சீர்த்திநா மஞ்செவிப்
புல்லவொட் டாதுளம் புகுதவொட் டாதுநாச்
சொல்லவொட் டாதுகண் டுயிலவொட் டாதரோ. 18

சுற்றுமுன் பின்புறச் சூழ்ந்துதன் [1]கொடுக்கினிற்
பற்றிநின் றீர்க்குமா பாதகத் தாலலைந்

---

14. கோல் - அம்பு. செல்லலை - செல்லாதே. என - என்று அதட்டி.

15. சிக்கு அற - கஷ்டம் இல்லாமல். இவன் இடைப்பட்டது - இம்மகாபாதகனிடத்தில் புலப்பட்டது.

16. தனயன் - புதல்வன். மாதர் - அழகிய. மாபாதகத்து உரு - பிரமகத்தி வடிவு.

17. ஆவ - ஐயோ. சிவதா - சிவனே முறையோ; சிவதா அவதா என்பதுபோல அவலக் குறிப்பின்கண் வந்தது. கைகுலைத்து எறியும் - கையை அசைத்து நிலத்தில் மோதும்.

18. அரன்கீர்த்தி - சிவசரிதம். நாமம் - சிவநாமம்.

பா-ம்—1 கொடுக்கிறப்.

தெற்றினிச் செய்வதென் ருற்றலா திடருழந்
[1]துற்றவே றுலகெலா மச்சமுற் றுழலுமால். 19

உறுகணே யாற்றநா ளூற்றுழன் றுலகெலாம்
மறுகவே திரியுமா பாதகன் வலியெலாஞ்
சிறுகுவான் சிவனருட் [2]செயலினிற் பாதகந்
குறுகுநாள் குறுகுநாள் கூடலைக் குறுகினான். 20

அழிதகன் குறுகு வான்முன் னங்கயற் கண்ணி தந்தக்
குழையிரு காதுங் கோத்துக் கொலைகெழு புலிப்பற் றாலி
நுழைமயிர் நெடுநாண் பின்ன ஞேன்பிட ரலைப்பப் பூண்டோர்
பழிதகை யாத வேடப் பாவையாய்ப் படிவங் கொள்ள. 21

[3]கொலையிரும் பழிக்கன் றஞ்சுங் கூடலெம் பெருமான் கொன்றை
மிலையிருங் குஞ்சி வேங்கை மெல்லிணர்க் கண்ணி வேய்ந்து
கலையிரு மருப்பிற் கோடிக் காதள.வோடுந் தாடிச்
சிலையிருந் தடக்கை வேடத் திருவுருக் கொண்டு தோன்றி. 22

கொண்டல்கண் படுக்கு மாடக் கோபுர மருங்கிற் போந்தின்
கண்டகக் கருக்கு வாய குரைக்குநாய் கதுவிக் காப்பப்
புண்டலை வாளி வில்லோர் புறங்கிடந் திமைப்பத் திங்கட்
டுண்டவா ணுதலா ளோடுஞ் சூதுபோ ராடல் செய்வான். 23

---

19. கொடுக்கு - கொய் சகம். என்று - யாது. வேறு - தனியாக.

20. உறுகண் - துன்பம். ஆற்ற நாள் - அனேக நாள். குறுகி ஞன் - அடைந்தான்.

21. அழிதகன் - தீ நெறிப்பட்ட பாதகன். நோன்பிடர் - பெருமை பொருந்திய கழுத்தில். நோன் - வலிமையுமாம். பழி - பழித் தொழில்.

22. கண்ணி - தலையில் சூடும் மாலை. கலை இரும் மருப்பில் தாடிச் சிலை, கோடிக்காதளவு ஒடும் சிலை எனத் தனித்தனி கூட்டுக. கலை இரும் மருப்பில் தாடிச்சிலை - வைரம் பொருந்திய யானைக்கொம்பால் செய்த ஆசில் ஏந்திய வில். கலை - வைரம். தாடி - ஆசு; அது விரலுறை. கோடி - வளைந்து. சிலை - வில். கலை இரு மருப்பில் கோடிக்காதள வோடும் தாடி - கலைமானின் இரண்டு கொம்புபோல முறுகி வளைந்து காதளவுஞ் செல்லும் மீசை. தாடி - இங்கே மீசை.

23. போந்தின் கண்டகக் கருக்கு - பனையின் முள்ளோடு கூடிய கருக்கு. போந்து - பனை. கண்டகம் - முள். புண் - மாமிசம்.

பா-ம்—1 துற்றுவே. 2 செயலினிப். 3 கொலையெழு.

வெருவரு வேழ முண்ட வெள்ளில்போல் வறிய னாகிப்
பருவர லுடனுங் கெய்தும் பாதகன் வரவு நோக்கி
ஒருவரு முள்ளத் தாலு முன்னருங் கொடிய பாவி
வருவது காண்டி யென்னு மாதரை நோக்கிக் கூறும். 24

அணங்குநோ யெவர்க்குஞ் செய்யு மனங்கனு லலைப்புண் டாவி
உணங்கினு ருள்ளஞ் செல்லு மிடனறிந் தோடிச் செல்லா
குணங்குல னொழுக்கங் குன்றல் கொலைபழி பாவம் பாரா
இணங்குமின் னுயிர்க்கு மாங்கே யிறுதிவந் துறுவ தெண்ணு. 25

கள்ளுண்டல் காம மென்ப கருத்தறை போக்குச் [1]செய்வ
எள்ளுண்ட காமம் போல வெண்ணினிற் காணிற் கேட்கிற்
றள்ளுண்ட விடத்தி னஞ்சந் தலைக்கொண்டா லென்ன வாங்கே
உள்ளுண்ட வுணர்வு போக்கா துண்டபோ தழிக்குங் கள்ளுண்.26

காமமே கொலைகட் கெல்லாங் காரணங் கண்ணோ டாத
காமமே களவுக் கெல்லாங் காரணங் கூற்ற மஞ்சுங்
காமமே கள்ளுண் டற்குங் காரண மாத லாலே
காமமே நரக பூமி காணியாக் கொடுப்ப தென்றான். 27

கொலைப்பழி கோட்பட் டாங்கே குறுகியான் முகங்கண் டேட
அலைப்பட ருழந்து சாம்பி யழிவதென் பார்ப்பா னென்னக்

---

24. வெருவு அரு - அச்சம் இல்லாத. வேழம் - விளங்கனிக்கு வருவதோர் நோய். அஃது இளநீர்க்குத்தேரை என்னும் நோய் போல விளாங்கனியை உள்ளீடில்லாததாகச் செய்வது. இது வேழம் என்னும் பெயர் ஒற்றுமையால் 'யானையுண்ட விளாங்கனி' எனவும் வழங்கும்; வெள்ளில் - விளாங்கனி. பருவரல் - துன்பம்.

25. அணங்குநோய் - காமநோய். உள்ளம் செல்லா, பாரா, எண்ணு எனமுடிக்க.

26. அறைபோக்கு - நீக்கல், உள்ளதுபோல் ஒழிதல். எள்ளுண்ட - இகழப்பட்ட. தள்ளுண்ட - தவறுதலுற்ற. இங்கே, "உள்ளினுஞ் சுட்டிடு முணருங் கேள்வியிற் - கொள்ளினுஞ் சுட்டிடுங் குறுகி மற்றதைத் - தள்ளினுஞ் சுட்டிடுந் தன்மை யீதினாற் - கள்ளினும் கொடியது காமத் தீயதே" எனவரும் கந்தபுராணச் செய்யுள் சிந்திக்கற்பாலது.

27. கண்ணோடாத - தாட்சணியமில்லாத. காணியா - காணியாட்சியாக, உரிமையாக.

பா-ம்—1 செய்வது.

கலைப்படு திங்கள் வேணிக் கானவ னருட்க ணோக்கந்
தலைப்படச் சிறிது பாவந் தணிந்துதன் னறிவு தோன்ற. 28

முற்பக லிழைத்த [1]பாவ முதிர்ச்சியாற் பிறந்து தந்தை
[2]தற்பக னான வாறுந் தாதையை வதைத்த வாறும்
பிற்பக லந்தப் பாவம் பிடித்தலைத் தெங்குந் தீரா
திப்பழி புகுந்த வாறு மெடுத்துரைத் திரங்கி நின்றான். 29

மறப்பெரும் படிவங் கொண்டு மனத்தருள் சுரந்து நின்ற
அறப்பெருங் கருணை மூர்த்தி யழிதகை யவனைப் பார்த்தித்
திறப்பழி யாங்குச் சென்று மீங்கன்றித் தீரா தென்றக்
கறைப்பழி தீரும் வண்ணங் கருதியோ ருறுதி கூறும். 30

வருதிநின் னுமஞ் சொன்னோர் வருக்கமு நரகில் வீழக்
கருதிநீ செய்த பாவங் கழிப்பவ ரெவர்யா னோக்கந்
தருதலா லெளிதிற் றீரச் சாற்றுது மையங் கையேற்
றொருபொழு துண்டி [3]யீச னுறுதவ ரேவல் செய்தி. 31

செங்கதிர்க் கடவுள் வானந் தீண்டுமுன் னெழுந்து தீந்தண்
பைங்கதி ரறுகு கொய்து பசுக்களை யருத்தி யார்வம்
பொங்கமுப் போதுங் கோயிற் புறத்தொட்டித் தீர்த்த மாடிச்
சங்கரன் றனை நூற் றெட்டு மெய்வலஞ் சாரச் செய்தி. 32

இத்தவ நெறியி னின்ற லிப்பழி கழியு மென்னுச்
சித்தவன் புடைய வேடத் திருவுருக் கொண்ட கொன்றைக்

---

28. கொலைப்பழி - பிரமகத்தி. கோட்பட்டு - விழுங்கப்பட்டு. ஏடா - ஏண்டா. கானவன் - வேடுவனாகிய கடவுள்.

29. தந்தை தற்பகன் - தந்தையின் சயனத்தை யடைந்தவன்; தந்தையின் மனைவியை அடைந்தவன். தற்பகம் - சயனம், மனைவி.

30. மறப்பெரும் படிவம் - வேட்டுவ வடிவம். திறப்பழி-கொடும் பழி. அக் கறைப்பழி - அந்தக் கரிய பெரும்பழி; கறை - குற்றமுமாம்.

31. வருக்கம் - மரபு; ஐயம் - பிச்சை. உண்டி - உண்பாய். தவர் - சிவனடியார்.

32. அறுகு - அறுகம்புல். முப்போது - காலை, மாலை, உச்சி என்ற மூன்று பொழுது. புறத்தொட்டித்தீர்த்தம் - மதுரைச் சிவாலயத்தின் புறத்திலுள்ள தீர்த்தத் தொட்டியிலிருக்கும் தீர்த்தம்; இது கங்கா தீர்த்தத்திற்கு ஒப்பாகும். மெய்வலம் - அங்கப் பிரதக்கணம்.

பா-ம்—1 பாவ முயற்சியால். (பாவமுயற்சி - பாவகன்மம்; பாவப் பயன்.) 2 தற்பகமான, தற்பகையான. 3 யீச னுற்றவ.

கொத்தவ னுரைத்தான் கேட்டுக் கொடிச்சியா யிருந்த வம்மை
மத்தவன் கரித்தோல் போர்த்த மறவனை வினவு கின்றாள். 33

ஐயவிக் கொடியோன் செய்த பாவத்துக் களவில் காலம்
வெய்யநா லேழு கோடி நரகிடை வீழ்ந்தா னேனும்
உய்வகை யிலாத பாவி யிவனுக்கென் னுய்யுந் தேற்றஞ்
செய்வகை யென்று கேட்பச் செங்கண்மால் விடையோன் செப்பும்.

அடுபழி யஞ்சா நீச ராயினு நினைக்கி னச்சம்
படுபழி யஞ்சான் செய்த பாதகத் தொடக்குண் டெங்கும்
[1]விடுவகை யின்றி வேறு களைகணு மின்றி வீயக்
கடவனைக் காப்ப தன்றோ காப்பென்றான் கருணை மூர்த்தி. 35

நெய்தற்போ தனைய வுண்க ணேரிழை நீயா தொன்று
செய்தற்குஞ் செய்யா மைக்கும் வேறொன்று செயற்கு மாற்றல்
மெய்தக்க கருணை வள்ளல் வேண்டினெவ் வினைஞ ரேனும்
உய்தக்கோ ராதல் செய்கை யுன்னருள் விளையாட் டன்றோ. 36

என்றக மகிழ்ச்சி பொங்க வியம்பின ளியம்ப லோடுங்
குன்றக நாட்ட வேடக் குழகனு மறைந்து வெள்ளி
மன்றக நிறைந்தான் மேக மறைந்திட மறைந்து செல்லும்
மின்றக விடாது பின்போம் விளங்கிழை மடந்தை யோடும். 37

[2]ஆததா யியுங்கண் டாறு வற்புத மடைந்து கூடல்
நாதனார் நவின்ற வாற்று னன்னெறி விரதச் செய்கை

---

33. கொடிச்சி - வேட்டுவச்சி. அம்மை - உமாதேவியார். மத்தம் - மதமயக்கம். வன் - வலிய.

34. நால் ஏழு - இருபத்தெட்டு. செங்கண்மால் விடை - சிவந்த கண்களையுடைய திருமாலாகிய இடபம்; சிவந்த கண்களையுடைய பெரிய இடபமுமாம்.

35. களைகண் - பற்றுக்கோடு. காப்பு - பாதுகாப்பு.

36. செய்தற்கும் செய்யாமைக்கும் வேறு ஒன்று செயற்கும் - இவை முறையே கர்த்தத்துவம், அகர்த்தத்துவம், அந்நியதா கர்த்தத்துவம் என்று சொல்லப்படும் இறைமைக்குணங்களாம். கர்த்தத்துவம் - தாமே நேரில் ஒன்றைச் செய்தல், அகர்த்தத்துவம் - வேறு முன்னிலையாகச் செய்வது; அந்நியதா கர்த்தத்துவம் - ஒன்றை மற்றொன்றாகச் செய்தல்.

37. மின்தக - மின்னலைப்போல. தக : உவமவுருபு.

பா-ம்— 1. விடுவதை. 2. ஆதனுங்கதுகண். (ஆதன் - அறிவில்லாதவன்.)

மாதவ வொழுக்கந் தாங்கி வருமுறை மதிய மூன்றிற்
பாதகந் கழிந்து தெய்வப் பார்ப்பன வடிவ மானான். 38

சொற்பதங் கடந்த வெந்தை சுந்தர நாதன் றருளிற்
பற்பல வடசொன் மாலை பத்தியிற் றொடுத்துச் சாத்தித்
தற்பர வறிவா னந்தத் தனியுரு வுடைய சோதி
பொற்பத மருங்கிற் புக்கான் புண்ணிய மறையோ னம்மா. 39

அன்னையைப் புணர்ந்து தாதை குரவனு மந்த ணாளன்
றன்னையுங் கொன்ற பாவந் தணித்துவீ டளித்த தென்றாற்
பின்னைநீ ரிழிநோய் குட்டம் பெருவயி றீளை வெப்பென்
றின்னநோய் தீர்க்குந் தீர்த்த மென்பதோ விதற்கு மேன்மை. 40

அழிந்தவே தியன்மா பாதகந் தீர்த்த தறிந்துவேந் தமைச்சரு ருள்ளார், ஒழிந்தபா ருள்ளார் வானுளார் வியப்ப முற்றுநல் லுரையுணர் வெல்லாங், கழிந்தபே ரருளிக் கயவன் மேல் வைத்த காரணம் யாதெனக் கண்ணீர், வழிந்துநான் மாடக் கூடலா யகனை வழுத்தினர் மகிழ்ச்சியுட் டிளைத்தார். 41

ஆகச் செய்யுள்—1,574

---

38. ஆததாயி - தந்தையைக்கொன்று தாயைப் புணர்ந்தவன்; மகாபாதகன். வடநூலார் தீக்கொளுவுவார், நஞ்சிடுவார், கருவியிற் கொல்வார், களவு செய்வார், ஆறலைப்பார், சூறைகொள்வார், பிறனில் விழைவார் முதலாயினாரை ஆததாயிகள் என்பர். விரதம் - இங்கு ஒரு பொழுதுண்டல், பசுக்களுக்குப்புல் அருத்துதல். மாதவம்— இங்குச் சிவனடியார்க்கு ஏவல்செய்தல், தீர்த்தமாடுதல். மதியம் மூன்று - மூன்று மாதம்.

39. சொற்பதம் - சொல்லளவு; பதம் - அளவு. சொற்பதம் - சொல்லாகிய பதம்: சொற்பிரபஞ்சமுமாம். தற்பரம் - தத்பரம் - உண்மை. தற்பரவறிவானந்தத் தனியுரு - சச்சிதானந்தவடிவு.

40. வீடு அளித்தது என்றால் - (புறத்தொட்டித்தீர்த்தம்) மோட்சத்தையும் தந்தது என்றால். ஈளை - ஒருவித இருமல். வெப்பு - சுரம்.

41. முற்றும் வியப்ப - ஒருசேர அதிசயிக்க. வழுத்தினர் - துதித்தார்கள்.

# 27. அங்கம் வெட்டின படலம்

—o—

[1]வேதகந் தரத்து முக்கண் வேதியன் மறையோன் செய்த
பாதகந் தவிர்த்த வாறு பகர்ந்தனம் விஞ்சை யீந்த
[2]போதகன் மனைக்குத் தீங்கு புந்திமுன் னாகச் செய்த
சாதகன் றனைப்போ ராற்றித் தண்டித்த தண்டஞ் சொல்வாம். 1

கூர்த்தவெண் கோட்டி யானைக் குலோத்துங்க வழுதி ஞாலங்
காத்தர சளிக்கு நாளிற் கடிமதி லுடுத்த கூடல்
மாத்தனி நகருள் வந்து மறுபுலத் தவனு யாக்கை
மூத்தவ னொருவன் வைகி முனையவாள் பயிற்றி வாழ்வான். 2

வாள்வினைக் குரவ னன்னான் வல்லமண் விடுத்த வேழந்
தோள்வினை வலியா லட்ட சுந்தர விடங்கன் றன்னை
ஆள்வினை யன்புந் தானும் வைகலு மடைந்து தாழ்ந்து
மூள்வினை வலியை வெல்லு மூதறி வுடைய னம்மா. 3

கைவினை மறவாள் விஞ்சைக் காவல னவனைத் தாழ்ந்து
தெவ்வினை வெல்வான் கற்குஞ் சிங்கவே றனையார் தம்முள்
உய்வினை யுணராப் பாவி சித்தனென் றொருவ னுள்ளான்
அவ்வினை நிரம்பக் கற்று ளாகலூழ் வலியா லன்னான். 4

---

1. வேத கந்தரத்து - வேதத்தைப்பாடும் மிடற்றையுடைய; (கந்தரம் - மிடறு.) வேதத்தையறிந்த பிரமாவின் சிரசையுடைய; (கம் - பிரமா; தரம் - சிரசு.) ஞான கங்கையைத்தரித்த சிரசையுடைய: (வேதம் - ஞானம்; கம் - நீர்.) விஞ்சை - இங்கு வாள்வித்தை. போதகன் - ஆசாரியன். சாதகன் - மாணாக்கன்.

2. மறுபுலம் - அயல்நாடு. யாக்கை மூத்தவன் - வயது தளர்ந்தவன்: முதியோன்.

3. ஆள்வினை - முயற்சியோடு (இடையறாத). மூள்வினை - ஆன்மாவினால் செய்யப்படும் நல்வினை தீவினை; ஆகாமிய வினை.

4. விஞ்சைக்காவலன் - வித்தையில் வல்லவன். ஆகலூழ் - ஆகூழ். அன்னான் - அந்சித்தன்.

பா-ம்—1 வேதகந் தரித்த. 2 போதகன் றனக்குத்.

மானவாள் விஞ்சை யாலே தனைநன்கு மதிக்கத் தக்க
தானதோர் செருக்கி னாற்றன் னாசிரி யற்கு மாறாய்த்
தானுமோர் விஞ்சைக் கூடஞ் சமைத்துவாள் பலருங் கற்க
ஊனுலாம் படைவல் லானி னூதிய மிதப்பக் கொள்வான். 5

ஒருத்தனே யிருவர் வாளின் விருத்தியு மொருங்கு கொள்ளுங்
கருத்தனாய் விருத்த னாரிற் கழிவது கருதி யன்னான்
வருத்துவா ளினையர் தன்பால் வரமனந் திரித்து நாளும்
விருத்தமே செய்வான் றுயை விரும்பினோற் கிளையோ னன்னான். 6

தொடத்தொடப் பொறுக்குந் திண்மைத் தொன்னில மனையா னில்லை
இடத்தவன் றேவி பாற்போ யிடனுண்டே யிடனுண் டேயென்
றடுத்தடுத் தஞ்சா தென்றுங் கேட்டுக்கேட் டகல்வா னாக
நடைத்தொழிற் பாவை யன்ன நங்கை[1]வா ளாதி ருந்தாள். 7

பின்னொரு பகற்போய்ச் செங்கை பிடித்தனன் வலிப்பத் தள்ளி
வன்னிலைக் கதவ நூக்கித் தாழக்கோல் வலித்து மாண்ட
தன்னிலைக் காப்புச் செய்தா டனிமனக் காவல் பூண்டாள்
அந்நிலை பிழைந்த தீயோ னனங்கத்தீ வெதுப்பப் போனான். 8

அறங்கடை நின்று ருள்ளு மாற்றவுங் கடைய னாகிப்
புறங்கடை நின்றான் செய்த புலைமைதன் பதிக்குந் தேற்றாள்

---

5. மானம் - பெருமை. மாறாய்-மாறுபாடாய். படை வல்லானில்- வாள் வித்தையில் வல்ல (தன்) ஆசிரியனைக் காட்டிலும். ஊதியம் - வருவாய்.

6. விருத்தி - ஊதியம். வருத்துவாள் இளையர் - வருத்துகின்ற வாட்போர் பயிலும் மாணவர்கள். திரித்து - வேறுபடுத்தி. விருத்தம்- பகைமை.

7. தொன்னில மனையான் - பூமியைப்போல பொறுமையில் வல்ல வாளாசிரியன். இடன் - சமயம். நங்கை - (முதியோன் மனைவியாகிய) மாணிக்கமாலை.

8. நூக்கி - சாத்தி. தாழக்கோல் - தாழ்ப்பாள். தன்னிலை - தன் கற்பு நிலை. அந்நிலை பிழைத்த - அப்பொழுது தவறு செய்த; அச் சமயம் தவறிய என்றலுமாம்.

9. அறங்கடை - பாவநெறி. புலைமை - கீழ்மை. தன்பதி - தன் கணவன். மறம் தவிர் கற்பு - அறக்கற்பு. உயிர்கடோறும்...... நிமலனை நினைந்து நொந்தாள் - இஃது அறக்கற்பின் நிலை.

பா-ம்—1 வாளா விருந்தாள்.

மறந்தவிர் கற்பி னுடன் மனம்பொதிந் துயிர்க டோறும்
நிறைந்தநான் மாடக் கூட னிமலனை நினைந்து நொந்தாள். 9

தாதக நிறைந்த கொன்றைச் சடையவன் புறம்பு செய்த
பாதக மறுக்குங் கூடற் பகவனெவ் வுயிர்க்குந் தானே
போதக னாகித் தேற்றும் புண்ணியன் புலைஞன் செய்த
தீதக முணர்ந்து தண்டஞ் செய்வதற் குள்ளங் கொண்டான். 10

கோளுடைக் குரவ னேபோற் சித்தனைக் குறுகிச் சித்தா
காளையா நீயுஞ் சாலக் கழியமூப் படைந்த யாமும்
வாளம ராடி நந்தம் வலிகளு மளந்து காண்டும்
நாளைவா வருது நாமு நகர்ப்புறத் தொருசா ரென்றான். 11

நாதனுங் குரவன் கூற நன்றென வுவந்து நாலாம்
பாதக னதற்கு நேர்ந்தான் படைக்கலக் குரவன் மீண்டு
போதரு மளவில் வையம் புதையிருள் வெள்ளத் தாழ
ஆதவன் வைய முந்நீர் வெள்ளத்து ளாழ்ந்த தம்ம. 12

ஆசினன் குரவற் கின்னா வாற்றினோன் பாவம் போல
[1]மாசிரு டிணிந்த கங்குல் வலிகெட வடிவாள் விஞ்சைத்
தேசிக னொருவ னன்னோன் றிணியுடல் சிதைப்பத் தீட்டுங்
காய்சின வாள்போற் கீழைக் கல்லிடை முளைத்தான் வெய்யோன். 13

நன்றியைக் கொன்று தின்றோ னுயக னுணைக் கஞ்சும்
வன்றிற லரிமா னூர்தித் தெய்வதம் வழிபட் டேத்தி

---

10. புறம்பு - வேற்று நாடு. பகவன் - ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்ற ஆறு குணங்களையுமுடையவன் : இறைவன். புலைஞன் - நீசனாகிய சித்தன்.

11. கோளுடை - வலியமைந்த. சாலக்கழியமூப்பு - மிக்க முதுமைப்பருவம். காண்டும் - காண்போம்.

12. நாதனும் குரவன் - இறைவனாகிய ஆசாரியன். நாலாம் பாதகம் - காமம்.

13. ஆசு - குற்றம். இணிந்த - மிகுந்த. கீழைக்கல் - கீழ்த்திசையிலுள்ள உதயகிரி.

14. நன்றியைக்கொன்று தின்றோன் - குரவன் வாட்போர் கற்பித்த நன்றியை மறந்து குருபத்தினியை மனத்தால் நுகர்ந்தவன் ; முற்றும் மறந்தவன் எனினுமாம். அரிமான் ஊர்தித் தெய்வதம் - சிங்க வாகனமுடைய துர்க்கை. வாளுழவன் - வாளாகிய ஏரினால் பகைவர் உடம்பாகிய நிலத்தை உழுபவன் ; வாள்வீரன்.

பா-ம்—1 மாசிரு டணிந்த. (தணிதல் - மிகுதல்.)

வென்றிவாள் பரவிக் கச்சு வீக்கிவாள் பலகை யேந்திச்
சென்றுவா ளூழவன் சொன்ன செருக்களங் குறுகி னானே. 14

மதுகைவா ளமர்க்கு நென்னல் வந்தறை கூவிப் போன
முதுகடும் புலியே யன்ன முடங்குடற் குரவன் றானும்
அதிர்கழல் வீக்கிக் கச்சு மசைத்துவெண் ணீறுஞ் சாத்திக்
கதிர்கொள்வாள் பலகை தாங்கிக் கயவனுக் கெதிரே வந்தான். 15

மடங்கலே றென்றும் பைங்க ணரியொன்று மலைந்தா லென்ன
முடங்கல்வான் றிங்க ளொன்று முக்கணு நான்கு தோளும்
விடங்கலும் மிடறுந் தோற்று வென்றிவாள் விஞ்சை வேந்தும்
அடங்கலன் றானு நேரிட் டாடம ராடல் செய்வார். 16

எதிர்ப்பர்பின் பறிவர் நேர்போ யெழுந்துவா னேறு போல
அதிர்ப்பர்கே டகத்துட் டாழ்வுற் றடங்குவர் முனைப்பர் வாளை
விதிர்ப்பர்சா ரிகைபோய் வீசி வெட்டுவர் விலக்கி மீள்வர்
கொதிப்பர்போய் நகைப்ப ராண்மை கூறுவர் மாறி நேர்வர். 17

வெந்கிடு வார்போற் போவர் வட்டித்து விளித்து மீள்வர்
கொன்னிடு வாண்மார் பேற்பர் குறிவழி பிழைத்து நிற்பர்
இந்நிலை நாலைங் கன்ன லெல்லைநின் றாடல் செய்தார்
அந்நிலை யடுபோர் காண்பா ரனைவருங் கேட்க வையன். 18

குரத்தியை நினைத்த நெஞ்சைக் குறித்துரை நாவைத் தொட்ட
கரத்தினைப் பார்த்த கண்ணைக் காத்தனை கோடி யென்றென்
றுரைத்துரைத் தவற்றுக் கெல்லா முறுமுறை தண்டஞ் செய்து
சிரத்தினைத் தடிந்து வீட்டித் திருவுரு மறைந்து நின்றான். 19

---

15. மதுகை - பலம் பொருந்திய. நென்னல் - நேற்றைப் பொழுது. அறைகூவல் - போருக்கு அழைத்தல். முடங்கு உடல் - கூனிய சரீரத்தையுடைய.

16. பைங்கண் நரி - ஆண்சிங்கத்தைக் கண்ட மாத்திரத்தே அச்சத்தால்) பசந்த கண்களையுடைய நரி.

17. பின் பரிவர் - பின் வாங்குவர். ஏறு - இடி. சாரிகை - இடசாரி வல சாரியாகச்சுற்றுதல். ஆண்மை - நெடுமொழி; சூள்.

18. வெந் - முதுகு. வட்டித்து - சுழன்று. கொன் இடு வாள் - அச்சத்தைத் தருகின்ற வாள்வெட்டு. கன்னல் - நாழிகை. ஐயன் - சோமசுந்தரக்கடவுள்.

19. குரத்தி - குருபத்தினி. காத்தனை கோடி - காத்துக்கொள்வாய் காத்துக்கொள்வாய்.

போர்கெழு களங்கண் டாருட் பொருபடைக் கேள்விச் செல்வர்
வார்கெழு கழற்கா லானைக் கண்டிலர் மனையிற் றேடி
ஏர்கெழு கற்பி னாளை யெங்குற்றான் குரவ னென்னக்
கூர்கெழு வடிவேற் கண்ணாள் போயினார் கோயிற் கென்றாள். 20

என்றவப் போதே கோயிற் கேகினான் மீண்டான் றேடிச்
சென்றவர் சித்தன் றன்னைச் செருக்களத் தடுபோர் செய்து
வென்றனை யேபின் னந்த வெங்களத் தெங்குந் தேடி
நின்றனைக் காணா திங்கு நேர்ந்தனம் யாங்க ளென்றார். 21

விரைசெய்தா ரவன்யா னங்கம் வெட்டினே னல்லே லீங்கள்
உரைசெய்வ தெவன்யா ரென்போற் சித்தனை யுடன்று மாய்த்து
வரைசெய்தோள் விந்தைக் கீந்தார் மற்றிது சுற்றும் வைகைத்
திரைசெய்நீர்க் கூட லெந்தை திருவுளச் செயல்கொ லென்றான். 22

மட்டித்த கலவைக் கொங்கை மனைவியுஞ் சித்தன் றன்னைக்
கிட்டிப்பல் காலும் வந்து கேட்டது நெருநல் வாய்வந்
தொட்டித்தன் கையைப் பற்றி யீர்த்தது முள்ளம் வெந்து
தட்டிப்போய்க் கதவந் தாழிட் டிருந்ததுஞ் சாற்றி னாளே. 23

அம்மனை யருளிச் சொன்ன படியெலா மருளிச் செய்து
தெம்முனை யடுவாள் வீரர் சித்தனை மாய்த்தா ரீது
மெய்ம்மையா மென்று கண்ட மைந்தரும் விளம்பக் கேட்டான்
எம்மையா ளுடைய கூட லிறைவிளை யாட்டே யென்றான். 24

கொடியையநே ரிடையா ளோடுங் கொற்றவா ளிளைஞ ரோடுங்
கடியநான் மாடக் கூடற் கண்ணுத லடிக்கீழ்த் தாழ்ந்து

---

20. பொருபடைக் கேள்விச் செல்வர் - ஆயுதப் பயிற்சி நூலின் ஆராய்ச்சியையுடைய மாணவர்கள்; முதியோன்பாற் கற்ற மாணவர்கள். ஏர்கெழு - அழகு மிக்க.

21. ஏகினான் - ஏகின முதியோன். நேர்ந்தனம் - தேடி வந்தோம்.

22. விரை செய் தாரவன் - வாசனை வீசும் மலர் மாலையை யணிந்த சித்தனுடைய. உடன்று - கோபித்து. விந்தை - துர்க்கை.

23. மட்டித்த - பூசிய. கிட்டி - நெருங்கி. நெருநல் - நேற்றைப் பொழுது.

24. அம்மனை - தாயாகிய மாணிக்க மாலை. தெவ்+முனை = தெம்முனை; தெவ் - பகைவர்.

25. கொடி - பூங்கொடி. நெடியன் - திருமால். தேறு - தெளிந்துணராத.

நெடியனுன் முகனுந் தேரு நெறியது சிறிய வேழை
அடியனே னளவிற் றேரின் னருள்விளை யாட லென்ருன். 25

தண்மதி வழிவந் தோனு நகருளார் தாமும் பாதி
விண்மதி மிலைந்த வேணி விடையவ னுட னேக்கிக்
கண்மலர் வெள்ளத் தாழ்ந்து கனைகழ லடியிற் ருழ்ந்து
பண்மலர் கீதம் பாடி யாடினுர் பழிச்சி நின்ருர். 26

அடியவருக் கெளியரிவர் பரதேசி காவலரென் றடிவீழ்ந் தேத்தி, வடியயில்வேற் குலோத்துங்கன் மாணிக்க மாலையெனு மனையா ளோடுந், தொடியணிதோண் முதுமகனைக் களிறேற்றி நகரைவலஞ் சூழ்வித் திப்பால், முடியணிவித் தனந்தகுண பாண்டியற்குத் தன்னிறைமை முழுது மீந்தான். 27

நிலைநிலையாப் பொருளுணர்ந்து பற்றிகந்து கரணமொரு நெறியே செல்லப், புலனெறிநீத் தருள்வழிபோய்ப் போதமாந் தன்வலியைப் பொத்தி நின்ற, மலவலிவிட் டகலவரா வுமிழ்ந்த மதி போல்விளங்கி மாறி யாடுந், தலைவனடி நிழல்பிரியாப் பேரின்பக் கதியடைந்தான் தமிழர் கோமான். 28

ஆகச் செய்யுள்—1,602

---

26. மதிவழி வந்தோன் - இங்குக் குலோத்துங்க பாண்டியன். ஆடல் - திருவிளையாடல். பண்மலர் - இசை நிறைந்த. பழிச்சி - வணங்கி.

27. பரதேசி - வேற்று நாட்டவன். தொடி - வாகு வலயம்.

28. நிலை நிலையாப் பொருளுணர்தல் – நித்தியா நித்திய வஸ்து விவேகம். நித்திய வஸ்து - சிவ மாகிய பதி. அநித்திய வஸ்து - இந்திரன் முதலிய இறையவர் பதங்கள். நிலைப்பொருள் - மோட்சம்; நிலையாப் பொருள் - பிரபஞ்சம் எனினுமாம்.

# 28. நாகமெய்த படலம்



செங்கண் மால்விடை மேல்வி டங்கர் செருக்க ளத்திடை வாளெடுத், தங்கம் வெட்டிய சேவ கத்தை யறைந்த னந்தமிழ் மாறன்மேற், சங்கை யிட்டம ணீச ராற்றிய தறுகண் வேள்வி முளைத்ததோர், வெங்கண் வாளர வைத்து ணித்து விளித்த வாறும் விளம்புவாம். 1

கோதி லாத குணத்த னந்த குணப்பெ ருந்தகை மீனவன், ஆதி நாயக னுருவ மாகிய வைந்தெ ழுத்தொடு கண்டிவெண், பூதி சாதன மாவ தேபொரு ளென்று பத்திமை பூண்டுதன், தாதை யேமுத லாய மன்னவர் தம்பி னுந்தலை யாயினான். 2

[1]அத்த கைச்சிவ சாத னந்தனி லன்பு மிக்கவ னொழுகலால், அத்தன் மெய்த்திரு வைந்தெ ழுத்தொலி யாலு நீற்றொளி யாலு முட், பைத்த வல்லிரு ளும்பு றத்திரு ளுஞ்சி தைந்து பராபரன், வித்த கத்திரு [2]வேட மானது மீன வன்றிரு நாடெலாம். 3

நாயி னுங்கடை யான மாசுட னள்ளி ருட்புரை நெஞ்சரெண்
ணாயி ரஞ்சமண் வேட ரன்ன தறிந்து கொண்டு வெகுண்டழற்
றீயி ரும்பென மான வெங்கனல் சுட்டி டத்தரி யார்களாய்
மாயி ருந்தமிழ் மாற னைத்தெற வஞ்ச வேள்வி யியற்றுவார். 4

எல்லை காத மளந்து சாலை யெடுத்த ழற்படு குண்டமுங்
கல்வி யாரழ லிட்டெ ழும்புகை கௌவி யெண்டிசை களுமுறச்

---

1. சேவகம் - வீரம் பொருந்திய திருவிளையாடல். சங்கை - பகை. வாளரவு - கொடிய பாம்பு.

2. கண்டி - உருத்திராட்சம். சாதனம் - சிவச்சின்னம். பத்திமை - சிவநேயம். தாதையே, ஏ : தேற்றம்.

3. உட்பைத்த - உட்பரந்த. வித்தகம் - மேன்மை. ஐந்தெழுத் தொலியால் அகவிருளும், நீற்றொளியால் புறவிருளும் சிதைந்து எனக் கொள்க.

4. தெற - அழிக்க. வஞ்ச வேள்வி - ஆபிசார யாகம்.

பா-ம்—1 இத்த கைச்சிவ சாதனங்களி லன்பு மிக்கவை. 2 வேடமாயின.

செல்ல வான வுடுக்க ளும்பொரி யிற்பொ ரிந்தன சிதறநீண்
டொல்லை தாவி விசும்பு தைவர வோட்டி வெங்கனன் மூட்டினர். 5

அத்த முன்றெரி குண்ட நின்று மகன்பி லத்தெழு வானெனப்
பைத்த துஞ்சிருள் வாயும் வாயிரு பாலும் வாலிய பசிர்மதிக்
[1]கொத்து நஞ்சின மொழுகு பற்களு மூழி யாரழல் விழிகளும்
வைத்த சைந்தொரு வெற்பு வந்தென வந்துளானொரு தானவன்.

உதித்த செங்க ணரக்க வஞ்ச னுருத்தெ ழுந்தெரி வடவையிற்
கொதித்த டும்பசி தாக முங்கொடி தால னக்கொடி யோரைநீர்
விதித்தி டும்பணி யாதெ னக்கென மீன வன்றனை மதுரையோ
டெதிர்த்தெ டுத்துவி ழுங்கி வாவென வேவி னுருட னேகினன். 7

பாயுடை யவர்விட விடநாகப் படிவுகொ ணிசிசர னிலனண்டந், தோயுட லினனுடல் விடமூறிச் சொரிதுளை யெயிறினன் வடவைச்செந், தீயுடை யனவென வெரிகண்ணன் றிணியிருள் வரைமுழை யெனவிண்ட, வாயுடை யவனெடு நெறிமுன்னி மழைநுழை வரையென வருகின்றான். 8

அரவிறை யுறைபிலம் வெளிகாண வரையுடல் புதைபட [2]நிலம்விள்ள, வருவிழி யழலெழ வுயிர்கான்முன் வளியுளர் கிளர்வலி விளிவெய்தப், பொருசின விழியெதிர் படுபைங்கூழ் புகையெழ வனமரை பொரிபொங்கர், கருகிட முதுசினை யிறைகொள்ளுங் ககநிரை சிறைசுருள் படவீழ. 9

5. உறச் செல்ல - மிகச் செல்ல. செல்ல வானம் எனக் கொண்டு, முகிலை யுடைய ஆகாயம் என்றலுமாம். தைவரல் - தடவல்.

6. தழன்று - கொதித்து. பைத்த - பரவிய. வாலிய - வெண்மையாகிய. நஞ்சினம் - விஷப்பெருக்கு. தானவன் - அவுணன்.

7, கொடியோர் - இங்கு அமணர்கள். பணி - கட்டளை.

8. பாயுடையவர் - பாயினை உடையாக உடைய அமணர். நிசிசரன் - இராக்கதன். முன்னி - முற்பட்டு. மழை நுழை வரை என - மேகம் தவழும் மலைபோல.

9. அரவு இறை - ஆதிசேடன். உயிர் கால் முன் - உயிர்க்கின்ற பெரு மூச்சின் முன். உளர் வளி - சஞ்சரிக்கும் காற்று. கிளர் வலி - மிக்க வலி. பொங்கர்-சோலை. இறை கொள்ளும் - வசிக்கும். ககநிரை - பறவைக் கூட்டம்.

பா-ம்—1 கொத்தடுஞ்சின. 2 நிலம் விள்ளா - வருவழி.

அகனிலம் வெருவுற நிலனேந்து மரவிறை வெருவுற வெயில்காலும், பகன்மதி வெருவுற விவைகௌவும் பணிகளும் வெருவுற வகறிக்கின், புகர்மலை வெருவுற வடுதண்டப் புரவலன் வெருவுற வருசெங்கண், நகைமதி புரையெயி றவன்மாட நகரெதிர் குடவயின் வருமெல்லை. 10

கண்டவர் கடிநகர் கடிதோடிக் கௌரிய னடிதொழு தடிகேணங், கொண்டல்கண் வளர்மதில் வளைகூடற் குடவயி னொருபெரு விடநாகம், அண்டமு மகிலமு மொருவாயிட் டயிறர வருவதை யெனநீள்வாய், விண்டுகொண் டணைவதை யெனவோடும் வெருவலன் மதிகுல மறவீரன். 11

மற்றிது முனமத கரிவிட்டோர் வரவிட வருவதை யென வெண்ணம், உற்றிது தனையும் விளித்தற்கெம் முடையவர் விடையவர் விடநாகஞ், சுற்றிய சடையின ருளரென்னுச் சுரருல கிழிசுட ரெனநிற்குங், கற்றளி யிடையுறை யிறைமுன்போய்க் கனைகழ லடிதொழு தறைகிற்பான். 12

வழிவழி யடிமைசெய் தொருபோது மறவலன் வழிபடு மடியேனின், மொழிவழி முறைசெய்து வருவேனிம் முதுநக ரடையவு மமணீசர், அழிவது *கருதினர் விடுநாக மடைவது னருள்வழி யதனுவி, கழிவது கருதிய வடியேனைக் கருணைசெய் தருளிது கடனென்றான். 13

அனுமதி கொடுதொழு திறைபாத [1]மகமதி கொடுபுற னடைகின்ற, பனிமதி வழிவரு தமிழ்மாறன் பகழியொ டடுசிலை யினனேகிக், குனிமதி தவழ்தரு மதினீடுங் கொடியணி குடகடை

10. பணி - இராகு கேதுக்கள். அகல் திக்கின் புகர்மலை - அகன்ற திசைகளிலுள்ள புள்ளிகளையுடைய அட்ட கஜங்கள். தண்டப்புரவலன் - தண்டினை ஏந்திய இயமன். குடவயின் - மேற்குத் திசையை (நோக்கி).

11. கொண்டல் - மேகம். அயில் தர - உண்ணுதற்கு. வருவதை, ஐ : சாரியை.

12. சுரர் உலகு இழி சுடர் - தேவலோகத்தினின்றும் இறங்கிய சூரியன். கற்றளி - மாணிக்க விமானம். தளி - கோயில்.

13. வழிவழி - தொன்றுதொட்டு. மறவலன் - மறவாது. அமண் - சமணர்.

பா-ம்—1 மகமதித்.

குறுகாமுன், தனிவரை யெனநிகர் தருகோபத் தழல்விழி யரவினை யெதிர்கண்டான். 14

பல்பொறிப் பகுவாய்ப் படம்புடை பரப்பிப் பக்கமெண் டிசையொடு விசும்பிற், செல்கதிர் புதைத்துத் திணியிருள் பரப்பித் திங்களின் பகிர்புரை நஞ்சம், பில்கெயி றதுக்கிப் பெரி துயிர்த் தகல்வாய் பிளந்துமா நகரெலா மொருங்கே, ஒல்லெனக் கௌவி விழுங்குவான் சீறி யுருத்தன னுரகவா ளவுணன். 15

அடுத்தன னரச சிங்கவே றிடியே றஞ்சவார்த் தங்கையிற் சாபம், எடுத்தன னெடுநா ணிருதலை வணக்கி யெரிமுகக் கூர்ங் கணை தொடுத்து, விடுத்தனன் விடுத்த சரமெலா முரகன் வெறுந்துகள் படக்கறித் துமிழ்ந்து, படுத்தனன் பொருது பஞ்ச வன் புராரி பங்கயச் சேவடி நினையா. 16

கொடியதோர் பிறைவா யம்பினை விடுத்துக் கோளரா வனையுட றுணித்தான், இடியதோ வெனவார்த் தெரிநிறக் குருதி யிரங்கிவீ ழுருவியிற் கவிழ, நெடியதோ ருடலம் புரள்படக் கூர்வா னெளிதர விளிபவன் மேலைக், கடியதோ [1]ராலகாலவெள்ளம் போலக் கக்கினன் கறையிரு ணஞ்சம். 17

தீவிட முருத்துத் திணியிருள் கடுப்பத் திருநக ரெங்கணுஞ் செறிந்த, காவிடங் கூவல் கயந்தலை சதுக்கங் கழகமா வணமக

---

14. மதி கொடு - மதித்தல் கொண்டு; சிந்தித்து. தமிழ் மாறன் - இங்கு அனந்தகுண பாண்டியன். குடகடை - மேற்கு வாயில். நிகர்தரு - எதிர்ந்த.

15. பொறி - புள்ளி. பகுவாய் - பிளந்த வாய். திங்களின் பகிர் புரை - சந்திரனது பிளவினை யொத்த. பில்கல் - சிந்துதல். உரக வாள் அவுணன் - நாக வடிவுகொண்ட அரக்கன்.

16. எரிமுகம் - தீக் கொப்பளிக்கும் முகம்; (பகைவரை) எரிக் கின்ற முகத்திலே. கறித்து - கடித்து. பஞ்சவன் - பாண்டியன். புராரி - திரிபுரமெரித்த சிவன்.

17. பிறைவாய் அம்பு - அர்த்த சந்திர பாணம். மேலை - முன்னா ளில் (திருப்பாற் கடல் கடைந்த நாளில்) தோன்றிய.

18. கா - சோலை. கூவல் - கிணறு. கயந்தலை - குளம். சதுக்கம் - நாற்சந்தி. கழகம் - கல்விச்சாலை. இஞ்சி - மதில். கோ இடம் - அரசன் மாளிகை. அரங்கு - நாடகசாலை.

பா-ம்—1 ராலா கலவெள்ளம்.

பூழிஞ்சி, கோவிட மாட முபரிகை மேடை கோபுர மரங்கெலாம் பரந்து, தாவிட மயங்கி யுறங்கினர் போலச் சாம்பினர் தனிநகர் மாக்கள். 18

நிலைதளர்ந் துடலந் திமிர்ந்துவேர் வரும்பி நிறைபுலன் பொறிகர ணங்கள், தலைதடு மாறி யுரைமொழி குழறித் தழு தழுப் படைந்துநா வுணங்கி, மலைதரு கபமே னிமிர்ந்துணர் வழிந்து மயங்கிமூச் சொடுங்கியுள் ளாவி, அலைதர வூச லாடினர் கிடந்தா ரன்னதொன் னகருளா ரெல்லாம். 19

தென்னவன் விடங்கண் டஞ்சுமால் போலச் சினகர மடைந்து தாழ்ந்தெந்தாய், முன்னவ வாதி முதல்வ வித்தின்றி முளைத்தவ முடிவிலா முனிவ, என்னவ வன்பர்க் கெளியவ யார்க்கு மிறையவ விந்நகர்க் கென்றும், மன்னவ வநாதி மறையவ முக்கண் வானவ நினைச்சர ணடைந்தேன். 20

அடுத்துவந் தலைக்கு மாழியைத் துரந்து மாழியுண் டேழு மொன் ருகத், தொடுத்துவந் தலைக்கும் பெருமழை தடுத்துந் துளைக்கைவிண் டுழாவவெண் பிறைக்கோ, டெடுத்துவந் தலைக்குங் களிற்றினை விளித்து மிந்நகர் புரந்தனை யின்று, மடுத்துவந் தலைக்கும் விடத்தினன் மயக்கும் வருத்தமுங் களைதியென் றிரந் தான். 21

அருட்கட லனைய வாதிநா யகன்ற னவிர்சடை யணிமதிக் கொழுந்தின், பெருக்கடை யமுதத் தண்டுளி சிறிது பிலிற்றினன் பிலிற்றிட லோடும், பொருக்கென வெங்கும் பாலினிற் பிரை போற்புரையறக் கலந்துபண் டுள்ள, திருக்கிளர் மதுரா நகரமாப் புனிதஞ் செய்ததச் சிறுதுளி யம்மா. 22

---

19. திமிர்ந்து - கம்பித்து. பொறி - ஐம்பொறிகள். கரணங்கள் - மனம் முதலிய அந்தக் கரணங்கள். உணங்கி - வறண்டு.

20. சினகரம் - திருக்கோயில். வித்தின்றி முளைத்தவ - மாயா காரியத் திருமேனி கொள்ளாது சத்தி காரியத் திருமேனி கொண்டவனே; மூலமில்லாமல் தோன்றியவனே. என் நவ - எனக்குப் புதுமையை விளைப்பவனே.

21. ஆழியைத் துரந்தும் - கடலைச் சுவறச் செய்தும். மடுத்து - (நகரினை) அகப்படுத்தி. களைதி - நீக்குவாய்.

22. பொருக்கென - விரைந்து. புரை அற - குற்றமற. திருக்கிளர் - செல்வம் மிக்க.

இரவிமுன் னிருள தெனவிறை யருண்முன் னிருண்மல வலியென வெங்கும், பரவிய வமுதால் விடமகன் றவசப் படிவொழிந் தியாவரு மின்பம், விரவிய களிப்பின் மேவினு ரிருந்தார் மீனவர் பெருந்தகை வேந்தன், அரவணி சடையாற் கன்புருத் தானே யாகிமண் காவல்செய் திருந்தான். 23

ஆகச் செய்யுள்—1,625

---

23. இருள் மலவலி - ஆணவ மலத்தின் வலிமை. அவசப்படிவம் - மயக்க வடிவம்; அவசம் - துக்கமுமாம்.

# 29. மாயப்பசுவை வதைத்த படலம்

—o—

சுருதி யின்புறத் தவர்விடு மராவினைச் சுருதி
கருத ரும்பர னருளுடைக் கௌரியன் றுணித்த
பரிசி தங்கது பொருதமண் படிறர்பின் விடுப்ப
வருபெ ரும்பசு விடையினுன் மாய்த்ததும் பகர்வாம். 1

பணப்பெ ரும்பகு வாயுடைப் பாந்தளை யனந்த
குணப்பெ ருந்தகை துணித்தபின் பின்வரு குண்டர்
தணப்ப ருங்குழாங் காலினுற் றள்ளுண்டு செல்லுங்
கணப்பெ ரும்புயல் போலுடைந் தோடின கலங்கி. 2

உடைந்து போனவ ரனைவரு மோரிடத் திருள்போல்
அடைந்து நாமுன்பு விடுத்தமால் யானைபோ லின்று
தொடர்ந்த பாம்பையுந் தொலைத்தனர் மேலினிச் சூழ்ச்சி
மிடைந்து செய்வதை யாதென வினயமொன் றோர்வார். 3

ஆவை யூறுசெய் யார்பழி யஞ்சுவா ரதனை
ஏவு வாமிது வேபுணர்ப் பென்றுசூழ்ந் திசைந்து
பாவ காரிகள் பண்டுபோற் பழித்தழல் வளர்த்தார்
தாவி லாவுரு வாகியோர் தானவன் முளைத்தான். 4

குண்ட ழற்கணின் றெழுந்தவக் கொடியவெம் பசுவைப்
பண்டு போலவர் விடுத்தனர் கூடலம் பதிமேல்

---

1. சுருதி - வேத நெறி, சைவ நெறி. சுருதி புறத்தவர் - வேத சிவாகமங்களை நிந்திக்கும் புறப்புறச்சமயி; சமணர். படிறர்-வஞ்சகர்.

2. பணம் - படம். குண்டர் - கீழ் மக்கள்; சமணர். தணப் பரும் - நீங்காத.

3. உடைந்து போனவர் - புறங்காட்டி யோடிய சமணர். வினயம் - சூழ்ச்சி, வஞ்சம்.

4. ஆவை - பசுவை. புணர்ப்பு - சூழ்ச்சி. பாவகாரிகள் - பாவமே செய்வோர்; சமணர்.

5. குண்டழல் - வேள்விக்குண்டத்தீ. உண்டு - ஆஸ்தி. இல்லை-நாஸ்தி. தடுமாற்ற நூல் - பூர்வாகம முதலிய சமண நூல். பிண்டி - அசோகு. பிண்டியான் - அருகக்கடவுள்.

உண்டு மில்லையு மெனத்தடு மாற்றநா லுரைத்த
பிண்டி யானுரை கொண்டுழல் பேயமண் குண்டர். 5

மாடமலி மாளிகையி லாடுகொடி மானக்
கோடுகளி னேடுமுகில் குத்திமிசை கோத்துச்
சேடன்முடி யுங்கதிர்கொள் சென்னிவரை யுந்தூள்
ஆடவடி யிட்டுலவை யஞ்சிட வுயிர்த்தே. 6

விடுத்திடு முயிர்ப்பினெதிர் பூளைநறை வீபோல்
அடுத்திடு சராசர மனைத்துயிரி வெய்தக்
கடுத்திடு சினக்கனலி னுக்குலக மெல்லாம்
மடுத்திடு தழற்கடவுள் வார்புனலை மான. 7

உடன்றிறைகொள் புள்ளொடு விலங்கலறி யோட
மிடைந்தபழு வத்தொடு விலங்கலை மருப்பால்
இடந்தெறி மருத்தென வெறிந்தளவி லோரைத்
தொடர்ந்துடல் சிதைத்துயிர் தொலைத்திடியி னார்த்தே. 8

மறலிவரு மாறென மறப்பசு வழிக்கொண்
டறலிவர் தடம்பொருனை யாறுடைய மாறன்
[1]திறலிமலர் மங்கையுறை தென்மதுரை முன்னு
விறலிவரு கின்றதது மீனவ னறிந்தான். 9

மீனவனு மாநகருண் மிக்கவரு முக்கண்
வானவனை மாமதுரை மன்னவனை முன்னோர்
தானவனை யாழிகொடு சாய்த்தவனை யேத்தா
ஆனதுரை செய்துமென வாலய மடைந்தார். 10

---

6. சேடன் - ஆதிசேடன். கதிர்கொள் சென்னி வரை - மேரு மலை. உலவை - காற்று.

7. பூளை - ஒருவிதச் செடி. நறை - தேன். வீ - மலர். சினக் கனல் - கோபத்தீ.

8. பழுவத்தொடு - காடுகளோடு. விலங்கல் - மலை. மருத்து - காற்று.

9. மறலி - இயமன். அறல் - கருமணல். இவர் - பரந்த. திறலி - விரலட்சுமி. மலர் மங்கை - தனலட்சுமி. விறலி - வெற்றிகொண்டு; விறலி - விறலை உடையது ; பசுவாகிய விறலி எனினுமாம்.

10. தானவன் - இங்குச் சலந்தராசுரன். ஏத்தா - ஏத்தி. ஆனது - நிகழ்ந்தது.

பா-ம்—1 திறலிமரை.

நாதமுறை யோபொதுவில் மாறிநட மாடும்
பாதமுறை யோபல வுயிர்க்குமறி விக்கும்
போதமுறை யோபுனித பூரண புராண
வேதமுறை யோவென விளித்துமுறை யிட்டார். 11

நின்றுமுறை யிட்டவரை நித்தனரு ளேக்கால்
நன்றருள் சுரந்திடப நந்தியை விளித்துச்
சென்றமண ரேவவரு தீப்பசுவை நீபோய்
வென்றுவரு வாயென விளம்பினன் விடுத்தான். 12

தண்டங் கெழுகூற் றமுமஞ்சத் தறுகட் செங்கட்
குண்டங் தழன்று கொதிப்பக் கொடுநாக் கெறிந்து
துண்டந் துழாவக் கடைவாய் நுரைசோர்ந்து சென்னி
அண்டந் துழாவ வெழுந்தன் றடலேறு மாதோ. 13

நெற்றித் தனியோடை நிமிர்ந்து மறிந்த கோட்டிற்
பற்றிச் சுடர்செம் மணிப்பூண்பிறை பைய நாகஞ்
சுற்றிக் கிடந்தா லெனத்தோன்றவெள் ளாழி யீன்ற
கற்றைக் கதிர்போற் பருமம்புறங் கௌவி மின்ன. 14

கோட்டுப் பிறைகால் குளிர்வெண்கதிர்க் கற்றை போலச்
சூட்டுக் கவரித் தொடைத்தொங்கலு நெற்றி முன்னுப்
பூட்டுத் தரள முகவட்டும் பொலியப் பின்னல்
மாட்டுச் சதங்கைத் தொடைகல்லென வாய்விட் டார்ப்ப. 15

பணிநா வசைக்கும் படியென்னக் கழுத்தில் வீர
மணிநா வசைப்ப நகைமுத்தின் வகுத்த தண்டை

---

11. பொதுவில் - வெள்ளியம்பலத்தில். போத - ஞானவடிவான வனே.

12. இடபநந்தி - அதிகார நந்திதேவர். விளம்பினன்-விளம்பி; முற்றெச்சம்.

13. கொடுநாக்கெறிந்து துண்டந் துழாவ - வளைந்த நாவானது தாவி மூக்கினைத் துழாவ. அடல் ஏறு - அதிகார நந்திதேவர்.

14. ஓடை - நெற்றிப்பட்டம். வெள் ஆழி - திருப்பாற்கடல். பருமம் - கவசம்.

15. கோட்டுப் பிறை - கொம்பாகிய பிறை ; உருவகம் ; வளைந்த பிறை எனினுமாம். கால் - கக்குகின்ற. தொங்கல் - குஞ்சம். முக வட்டு - முகவட்டம்.

பிணிநாண் சிறுகிங் கிணிபிப்பல மாலைத் தொங்கல்
அணிநா ணலம்பச் சிலம்பார்ப்ப வடிக ளூன்கும். 16

அடியிட்டு நிலங்கிளைத் தண்டமெண் டிக்கும் போர்ப்பப்
பொடியிட் டுயிர்த்துப் பொருகோட்டினிற் குத்திக் கோத்திட்
டிடியிட் டதிர்கா ரெதிரேற்றெழுந் தாங்கு நோக்கிச்
செடியிட் டிருகண் ணழல்சிந்த நடந்த தன்றே. 17

பால்கொண்ட நிழல்வெண் டிங்கட் பகிர்கொண்ட மருப்பிற் கொண்மூச், சூல்கொண்ட வயிற்றைக் கீண்டு துள்ளியோர் வெள்ளிக் குன்றங், கால்கொண்டு நடந்தா லென்னக் கடிந்துடன் ருவைச் சீற்றம், மேல்கொண்டு நாற்றம் பற்றி வீங்குயிர்ப் பெறிந்து கிட்டா. 18

குடக்கது குணக்க தென்னக் குணக்கது குடக்க தென்ன
வடக்கது தெற்க தென்னத் தெற்கது வடக்க தென்ன
முடுக்குறு மருப்பிற் கோத்து முதுகினி றாகத் தள்ளும்
எடுக்குறு மலையைக் கால்பேர்த் தெனத்திசைப் புறத்து வீசும். 19

கொழுமணிச் சிகர கோடி சிதைபடக் குவட்டில் வீசும்
பழுமரச் செறிவில் வான்றோய் பணையிற வெறியும் வானின்
விழுமறப் பசுப்போல் வீழ வேலைவாய் வீசு மிங்ஙன்
செழுமதிக் கோட்டு நந்தித் தேவினை யாடல் செய்து. 20

பூரிய ரெண்ணி யாங்கே பொருதுயி ரூற்றஞ் செய்யா
தாரிய விடைதன் மாண்ட வழகினைக் காட்டக் காமுற்

---

16. பணி - பாம்பு. பிப்பல மாலை - அரசிலை வடிவமாகச் செய்த மாலை.

17. செடியிட்டு - ஒளிவிட்டு, ஊங்காரஞ்செய்து.

18. வெள்ளிக்குன்றம் கால்கொண்டு நடந்தால் என்ன : இஃது இல்பொருளுவமையணி. நாற்றம் பற்றி-(நிலத்தை மோந்து) நாற்றம் பிடித்து.

19. குடக்கு - மேற்கு. குணக்கு-கிழக்கு. முடுக்குறும்-துரத்தும். கால் - காற்று.

20. பழுமரச் செறிவு - ஆலமரச் சூழல். பணை - கிளை. வானின் விழும் அறப்பசு - (துருவாச முனிவர் சாபத்தால்) தேவலோகத்தி லிருந்து கடலில் விழுந்த காமதேனு. தே - கடவுள் ; தேவர்.

21. பூரியர் - கீழ் மக்களாகிய சமணர். ஆரிய - அழகிய ; அரிய என்றலுமாம். ஈரிய - குளிர்ந்த.

றீரிய நறும்பூ வாளி யேறுபட் டாவி யோடும்
விரியம் விடுத்து வீழ்ந்து வெற்புரு வாயிற் றன்றே. 21

வாங்கின புரிசை மாட மாநக ராறு வின்பந்
தூங்கின வரவாய் வேம்பின் றொடைவிழ் தாரான் றிண்டோள்
வீங்கின விரவி தோன்ற வீங்கிரு ளுடைந்த தென்ன
நீங்கின நாண மோடு நிரையுமண் குழாங்க ளெல்லாம். 22

உலகறி கரியாத் தன்பே ருருவினை யிடபக் குன்றுக்
குலவுற நிறுவிச் சூக்க வடிவினாற் குறுகிக் கூடற்
றலைவனை வணங்க வீசன் றண்ணருள் சுரந்து பண்டை
இலகுரு வாகி யிங்கு னிருக்கென விருத்தி னானே. 23

அங்நிலை நகரு ளாரு மரசனு மகிழ்ச்சி தூங்கிச்
சந்நிதி யிருந்த நந்தி தாளடைந் திறைஞ்சிப் போக
மின்னவிர் சடையா னந்தி வென்றிசால் வீறு நோக்கி
இன்னமு தனையா ளோடுங் களிசிறந் திருக்கு நாளில். 24

அவ்விடை வரைமேன் முந்நீ ரார்கலி யிலங்கைக் கேகுந்
தெவ்வடு சிலையி ராமன் வானர சேனை [1]சூழ
மைவரை யனைய தம்பி மாருதி சுக்கி ரீவன்
இவ்வடல் வீர ரோடு மெய்தியங் கிறுத்தான் மன்னோ. 25

அன்னது தெரிந்து விந்த மடக்கிய முனியங் கெய்தி
மன்னவற் காக்கங் கூறி மழவிடைக் கொடியோன் கூடற்
பின்னரும் புகழ்மை யோது பனுவலை யருளிச் செய்ய
முன்னவன் பெருமை கேட்டு முகிழ்த்தகை முடியோ னாகி. 26

முனியொடு குறுகிச் செம்பொன் முளரியுண் மூழ்கி யாதித்
தனிமுத லடியை வேணி முடியுறத் தாழ்ந்து வேத

---

22. புரிசை - மதில். அரம் - ஒருவித வாள். நிரை - வரிசை.

23. பேர்உரு - தூல வடிவம். சூக்க வடிவு - சூக்கும வடிவு. பண்டை இலகு உரு - முன்னுள்ள சிலா வடிவம்.

24. தூங்கி - தங்கி. வீறு - இறுமாப்பு.

25. விடைவரை - இடபக்குன்று. மைவரை - நீலமலை. தம்பி - இலக்குமணன். மாருதி - அநுமான்.

26. விந்தம் அடக்கிய முனி - அகத்தியர். மன்னவன் - இங்கு இராமன். பனுவல் - ஆலாசிய மான்மியம்.

பா-ம்—1 சூழ்ந்த.

மனுமுறை சிவாகமத்தின் வழிவழா தருச்சித் தேத்திக்
கனிவுறு மன்பி லாழ்ந்து முடிமிசைக் கரங்கள் கூப்பி. 27

புங்கவ சிவன் முத்தி புராதிப புனித போக
மங்கல மெவற்றி னுக்குங் காரண வடிவ மான
சங்கர நினது தெய்வத் தானங்க ளனந்த மிந்த
அங்கண்மா ஞால வட்டத் துள்ளன வவைக டம்மில். 28

அற்பு தப்பெரும் பதியிந்த மதுரையீ தாற்றப்
பொற்பு டைத்தென்ப தெவன்பல புவனமு நின்பாற்
கற்பு வைத்துய நீசெய்த கருமத்தின் விருத்தம்
வெற்பு ருக்களாய்ப் புடைநின்று விளங்கலான் மன்னோ. 29

கண்ட வெல்லையிற் றுன்பங்கள் களைதற்கு மளவைக்
கண்ட ரும்பெருஞ் செல்வங்க ளளித்தற்குங் கருணை
கொண்டு நீயுறை சிறப்பினாற் குளிர்மதிக் கண்ணி
அண்ட வாணவிவ் விலிங்கத்துக் கொப்புவே றுமோ. 30

தோய்ந்தி டும்பொழு தீட்டிய தொல்வினைப் படலம்
மாய்ந்தி டும்படி மாய்த்துநின் மங்கல போகம்
ஈந்தி டும்படிக் கிருந்தமா தீர்த்தத்தி னியல்பை
ஆய்ந்தி டும்பொழு ததற்கொரு தீர்த்தமொப் பாமோ.

எத்த லத்தினு மொவ்வொன்று விழுமிதா மிந்த
மெய்த்த லத்திலிம் மூவகை விழுப்பமும் விளங்கும்

---

27. செம்பொன் முளரி - பொற்றாமரைத் தீர்த்தம். வேத மனு - வேதமந்திரம்.

28. புங்கவ - யாவர்க்கும் மேற்பட்டவனே. சங்கர - சுகத்தைத் தருபவனே.

29. அற்புதம் - ஞான வடிவம். கற்பு - உறுதி; தியானம். கருமத்தின் விருத்தம் - திருவிளையாடற்பேதம்; திருவிளையாடற் சரிதம்.

30. அண்டரும் - பொருந்துதல் இல்லாத; அண்ட அரும் எனப் பிரித்து, அரிய இந்திரன் முதலியோர் எனப்பொருள் கொள்ளலுமாம். இவ்விலிங்கத்துக்கு வேறு ஒப்பாமோ என்க. வேறு - வேறிலிங்கம்.

31. ஈட்டிய - (பிறவிதோறும்) சேகரித்த. தொல்வினை - சஞ்சித வினை. மங்கலபோகம் - சிவபோகம்.

32. மூவகை விழுப்பம் - மூர்த்தி தலம் தீர்த்த விசேடம். சித்த சுத்தி - நித்த நைமித்திய கருமங்களைச் சிவார்ப்பணமாகச் செய்தலால் வரும் பேறு. பல்வகைச்சித்தி - அணிமா முதலிய அட்டமாசித்திகள்.

அத்த வாதலா வித்தல மடைந்தவ ரெவர்க்குஞ்
சித்த சுத்தியும் பல்வகைச் சித்தியும் பயக்கும். 32

அடிய னேனெண்ணுங் கருமமுஞ் சரதமே யாக
முடியு மாறரி தச்செயன் முடியுமெப் படியப்
படிபு ரிந்தருள் கடிதெனப் பணிந்தனன் பரனும்
நெடிய வான்படு மமுதென வெதிர்மொழி நிகழ்த்தும். 33

இரவிதன் மரபின் வந்த விராமகே ளமக்குத் தென்கீழ்
விரவிய திசையிற் போகி விரிகடற் சேது கட்டிக்
கரவிய வுள்ளக் கள்வன் கதிர்முடி பத்துஞ் சிந்தி
அரவமே கலையி ளை யருஞ்சிறை யழுவ நீக்கி. 34

மீண்டுநின் னயோத்தி யெய்தி விரிகட லுலகம் பன்னாள்
ஆண்டினி திருந்து மேனாள் வைகுண்ட மடைவா யாக
ஈண்டுநீ கவலை கொள்ளே [1]லெனுமச ரீரி கேட்டு
நீண்டவன் மகிழ்ந்து தாழ்ந்து நிருத்தனை விடைகொண் டேகி. 35

மறைப்பொரு ளுரைத்தோன் சொன்ன வண்ணமே யிலங்கை யெய்தி
அறத்தினைத் தின்ற பாவி யாவிதின் றனையான் செல்வத்
திறத்தினை யிளவற் கீந்து திருவிரா மேசங் கண்டு
கறைப்படு மிடற்றி னானை யருச்சித்துக் கருணை வாங்கி. 36

பற்றிய பழியி னீந்தி யிந்திரன் பழியைத் தீர்த்த
வெற்றிகொள் விடையி னானை மீளவும் வந்து போற்றி
அற்றிர ளனைய கோதைக் கற்பினுக் கரசி யோடுஞ்
சுற்றிய சடையி ராமன் றொன்னக ரடைந்தா னிப்பால். 37

---

33. சரதம் - உண்மை. பரனும் - சோமசுந்தரக் கடவுளும். எதிர்மொழி - அசரீரி.

34. தென்கீழ் விரவிய திசை - தென்கிழக்கு. சேது - சேதுபந்தனம். கள்வன் - இங்கு இராவணன். சிறையழுவம் - நடுங்கத்தக்க சிறைச்சாலையினின்று. அழுவம் - நடுக்கம்.

35. பன்னாள் - பல்லாண்டு. நீண்டவன் - இங்கு இராமன்.

36. பாவி - இராவணன். ஆவிதின்று - கொன்று. இளவல் - இளையவனாகிய விபீடணன்.

37. பற்றிய பழி - (இராவணனைக் கொன்றதனால் தன்னைப்) பற்றிய பிரமகத்தி. அல் - இருள். திரள் - திரட்சி.

பா-ம்—1 லெனவசரீரி.

செங்கோ லனந்த குணமீனவன் றேயங் காப்பக்
கொங்கோ டவிழ்தார்க் குலபூடணன் றன்னை யீன்று
பொங்கோத ஞாலப் பொறைமற்றவன் பாலி றக்கி
எங்கோ னருளாற் சிவமாநக ரேறி னானே. 38

ஆகச் செய்யுள்—1,663

---

38. கொங்கு - தேன், மகரந்தம். சிவமாநகர் - சிவபதம்.

# 30. மெய்க்காட்டிட்ட படலம்

—o—

பாவமென வடிவெடுத்த படிற்றமணர் பழித்தழல்செய்
தேவவரு மறப்பசுவை யேறுயர்த்தோன் விடைநந்திக்
காவலனை விடுத்தழித்த கதையுரைத்து மட்டாலைச்
சேவகன்மெய்க் காட்டிட்டு விளையாடுந் திறமுரைப்பாம். 1

வெவ்வியமும் மதயானை விறற்குலபூ டணன்சமணர்
அவ்வியவஞ் சனைகடந்த வனந்தகுணச் செழியன்பாற்
செவ்வியசெங் கோல்வாங்கித் திகிரிதிசை செலவுருட்டி
வவ்வியவெங் கலிதுரந்து மண்காத்து வருகின்றான். 2

சவுந்தரசா மந்தனெனத் தானைகா வலனொருவன்
சிவந்தசடை முடியண்ண லடியவரே சிவமாகக்
கவர்ந்தொழுகி யருச்சிக்குங் கடப்பாட்டி னெறிநின்றோன்
உவந்தரசற் கிருமைக்குந் துணையாகி யொழுகுநாள். 3

வல்வேடர்க் கதிபதியாய் வருசேதி ராயனெனும்
வில்வேட னொருவனவன் விறல்வலியான் மேவிட்டுப்
பல்வேறு பரிமான்றேர்ப் பஞ்சவன்மேற் படையெடுத்துச்
செல்வேனென் றுறவலித்தான் றென்னர்பிரா னஃதறிந்தான். 4

தன்னதுதா ணிழனின்ற சாமந்தன் றனைப்பார்த்தெம்
பொன்னறைதாழ் திறந்துநிதி முகந்தளித்துப் புதிதாக

---

1. படிற்று அமணர் – வஞ்சனையையுடைய சமணர். விடைநந்தி- இடப உருவோடு கூடிய நந்தி. சேவகன் - இங்குக் குதிரை வீரராக எழுந்தருளிய சோமசுந்தரக் கடவுள்.

2. வெவ்விய - கொடிய. அவ்வியம் - பொறாமை. கலி - துன்பம்

3. சாமந்தன் - படைத்தலைவன். கவர்ந்து - உளங்கொண்டு. கடப்பாடு - உறுதி. இருமை - இம்மை. மறுமை. சேதிராயன் - பெயர். விறல்வலி - வெற்றிக்கேதுவாகிய வலிமை.

4. பஞ்சவன் - பாண்டியன். உறவலித்தான் - உறுதியாகக் கருதினான்.

5. பொன்அறை - பொக்கிஷம். எழுதிக் கொள்க - பதிவு செய்து கொள்க.

இன்னமுநீ சிலசேனை யெடுத்தெழுதிக் கொள்கென்றான்
அன்னதுகேட் டீசனடிக் கன்புளா னென்செய்வான். 5

தென்னவர்கோன் பணித்தபணி பின்றள்ளச் சிந்தையிலன்
புன்னவர னருள்வந்து முன்னீர்ப்ப வொல்லைபோய்ப்
பொன்னறைதாழ் திறந்தறத்தா றீட்டியிடும் பொற்குவையுட்
டன்னதுளத் தவாவமையத் தக்கநிதி கைக்கவரா. 6

எண்ணிறந்த களிப்பினொடுந் திருக்கோயி லிடத்தணைந்து
கண்ணிறைந்த பொன்முளரிக் கயந்தலைநீர் படிந்துதன
துண்ணிறைந்த மெய்யன்பி னொளியுருவாய் முளைத்தெழுந்த
பண்ணிறைந்த மறைப்பொருளைப் பணிந்திறைஞ்சி யிதுவேண்டும்

பண்ணியனான் மறைவிரித்த பரமேட்டி யெங்கோமான்
எண்ணியகா ரியமுடிப்பா யிவையுனக்கு முன்னடிக்கீழ்
அண்ணியமெய் யடியவர்க்கு மாதக்க வெனவிரந்தப்
புண்ணியமா நிதிமுழுது மவ்வழியே புலப்படுப்பான். 8

அண்டமுக டுரிஞ்சிநிமிர் கோபுரமு மாயிரக்கான்
மண்டபமுங் கண்டிகையும் வயிரமணிக் கோளகையுங்
குண்டலமுந் தண்டரளக் குடைநிரையுங் கொடிநிரையுங்
கண்டனன்முன் னவனருளாற் பிறப்பேழுங் கரைகண்டோன். 9

வானாடர்க் கவியுணவின் வகைமுந்நூன் மன்றன்முதல்
நானாவாஞ் சிறுவேள்வி நான்மறையோர்க் கறுசுவையின்
ஆனாத பேருண்டி துறவடைந்தோர்க் கருத்துபலி
தானாதி பலவேறு தருமநனி தழைவித்தான். 10

---

6. அன்பு உன்ன - அன்புடன் நினைத்த அளவிலே. ஒல்லை - விரைந்து. அறத்தாறு - தரும வழி.

7. எண் இறந்த - எல்லை இல்லாத. பொன் முளரிக் கயந்தலை - பொற்றாமரைத் தீர்த்தத்தில்.

8. பரமேட்டி - உயர்ந்த நிலையிலிருப்பவன்; மேலான யாகத்தை யுடையவன். அடி - அருட்சத்தி. அண்ணிய - (சிவத்தொடு) கலந்த. மெய்யடியார் - சீவன் முத்தர். ஆதக்க - ஆகக்கடவன. புலப்படுப்பான் - செலுத்துவான்.

9. கோளகை - தோளணி. கண்டனன் - செய்தமைத்தான். கரைகண்டோன் - இங்குச் சாமந்தன்.

10. முந்நூல் மன்றல் - பூணூல் கல்யாணம். நானாவாம் - பலவான. பலி - பிச்சை.

எவரேனு முருத்திரசா தனங்கண்டா லெதிர்வணங்கி
அவரேநம் பிறப்பறுக்க வடிவெடுத்த வரனென்று
கவராத வன்புள்ளங் கசிந்தொழுக வருச்சித்துச்
சுவையாறி னமுதருத்தி யெஞ்சியவின் சுவைதெரிவான். 11

இன்றைக்கா யிரநாளைக் கிருமடங்கு வருநாட்கும்
அன்றைக்கன் றிருமடங்கா [1]வரசனது பொருளெல்லாங்
கொன்றைச்செஞ் சடையார்க்கு மடியார்க்குங் கொடுப்பதனைத்
தென்றற்கோன் செவிமடுத்தான் சேனைக்கோ னிதுசெய்வான். 12

காவல னவையத் தெய்திக் காரியஞ் செய்வா ரோடு
மேவினன் பிறநாட் டுள்ள வீரர்க்கு வெறுக்கை போக்கிச்
சேவகம் பதிய வோலை செலவிடுத் தழைப்பான் போலப்
பாவகஞ் செய்து திட்டிப் பட்டிமை யோலை யுய்ப்பான். 13

எழுதுக தெலுங்கர்க் கோலை யெழுதுக கலிங்கர்க் கோலை
எழுதுக விராடர்க் கோலை யெழுதுக மராடர்க் கோலை
எழுதுக கொங்கர்க் கோலை யெழுதுக வங்கர்க் கோலை
எழுதுக துருக்கர்க் கோலை யென்றுபொய் யோலை விட்டான். 14

எங்குமிப் படியே யோலை செலவிடுத் திருப்ப வாறு
திங்களி னளவு மந்தச் சேவகர் வரவு காணு
தங்கதிர் வேலோன் சேனைக் கரசனை யழைத்து நாளை
வெங்கதிர் படுமுன் சேனை யாவையும் விளித்தி யென்றான். 15

என்றமன் னவனுக் கேற்கச் சாமந்த னிசைந்து வெள்ளி
மன்றவ னடிக்கீழ் வீழ்ந்து வள்ளலே யரச னீந்த

---

11. எவரேனும் - எக்குலத்தவராயினும். உருத்திர சாதனம் - சிவ சாதனம்; அது, விபூதி, உருத்திராட்சம் முதலிய சிவச்சின்னங்களை அணிதல். எஞ்சிய (அவர் உண்டு) மிஞ்சியவற்றை. சுவை தெரிவான் - சுவை பார்த்தான்; உண்டான்.

12. தென்றற்கோன் - தென்றற் காற்றுக்கு இடமாகிய பொதிய மலைக்கு அதிபதி; இங்கு அனந்தகுண பாண்டியன்.

13. வெறுக்கை - பொருள். சேவகம் பதிய-சேனைத்தொழிலாளர் களாதலைக் கணக்கில் எழுத. பாவகம் - பாவனை. பட்டிமை - வஞ்சனை; பொய். உய்ப்பான் - உய்ப்பானாய்.

15. ஆறுதிங்கள் - ஆறு மாதம். அம்கதிர் வேலோன் - பாண்டியன். வெங்கதிர் படுமுன் - சூரியன் அத்தமித்தற்கு முன்.

பா-ம்—1 அரசனருள்.

குன்றுறழ் நிதிய மெல்லாங் கொண்டெனைப் பணிகொண் டாயே
வன்றிறற் சேனை யீட்டும் வண்ணமையா தென்ன நின்றான்.      16

அடியவர் குறைவு தீர்த்தாண் டருள்வதே விரதம் பூண்ட
கொடியணி மாடக் கூடற் கோமகன் காமற் காய்ந்த
பொடியணி புராணப் புத்தேட் புண்ணிய னருளி னாலே
இடியதிர் விசும்பு கீறி யெழுந்ததோர் தெய்வ வாக்கு.      17

சூழ்ந்தெழு சேனை யோடுந் தோற்றுது நாளை நீயும்
வீழ்ந்தர சவையத் தெய்தி மேவுதி யென்ன விண்ணம்
போழ்ந்தெழு மாற்றங் கேட்டுப் பொருநரே றுவகை வெள்ளத்
தாழ்ந்தனன் முந்நீர் வெள்ளத் தலர்கதி ரவனு மாழ்ந்தான்.      18

மீனவன் காண மேரு வில்லிதன் றமரை வன்கண்
மானவேன் மறவ ராக்கி வாம்பரி விர னாகத்
தானுமோர் கூத்துக் கோலஞ் சமைந்துவந் தாட விட்ட
நீனிற வெழினி போலக் காரிரு ணிவந்த தெங்கும்.      19

புண்ணிய மனையிற் போகிப் புலர்வதெப் போழ்தென் றெண்ணி
அண்ணல்சா மந்தன் றுஞ்சா னடிக்கடி யெழுந்து வானத்
தெண்ணிறை மீன நோக்கி நாழிகை யெண்ணி யெண்ணிக்
கண்ணுத லெழுச்சி காண்பா னளந்தனன் கங்கு லெல்லாம்.      20

தெருட்டரு மறைக டேருச் சிவபரஞ் [1]சுடரோ ரன்பன்
பொருட்டொரு வடிவங் கொண்டு புரவிமேற் கொண்டு போதும்

---

16. குன்றுறழ் - மலைபோன்ற. ஈட்டும் - சேகரிக்கும்.

17. குறைவு தீர்த்து - குறைவை நீக்கி. கூடற்கோமான் - சோமசுந்தரக் கடவுள். புராணம் - பழமைப்பொருள்.

18. வீழ்தல் - விரும்பல். மாற்றம் - சொல். பொருநர் ஏறு - வீரர்தலைவன்; சாமந்தன். முந்நீர் வெள்ளம் - கடல்.

19. மேரு வில்லி - சிவன். தன் தமர் - தமது பிரதம கணங்கள். எழினி - திரை.

20. புண்ணிய மனையில் - சிவபுண்ணியம் நிலைபெற்ற (தனது) இல்லில். எண் நிறை மீனம் - அளவில்லாத நட்சத்திரங்கள்.

21. தெருள் தரு மறைகள் - தெளிவு (ஞானம்) மிக்க வேதங்கள். தெருட்டு அரு மறைகள் எனப்பிரித்து, (பதி பசு பாசம் முதலியவற்றைத் தூலமாகவும் சூக்குமமாகவும்) அறிவிக்கும் அரிய வேதங்கள் எனக் கொள்ள லுமாம். அருட்படை எழுச்சி - அருளாகிய படை எழுதல். அருளினாலே பிரதம கணங்களாகிய படை எழுதல். ஆர்கலி - கடல்.

பா-ம்—1 சுடரோ னன்பன்.

அருட்படை யெழுச்சி காண்பான் போலவார் கலியின் மூழ்கி
இருட்டுகள் கழுவித் தூய விரவிவந் துதயஞ் செய்தான். 21

பொருநரே றனையா னேர்ந்து போந்துநான் மாடக் கூடற்
கருணைநா யகனைத் தாழ்ந்து கைதொழு திரந்து வேண்டிப்
பரவிமீண் டொளிவெண் டிங்கட் பன்மணிக் குடைக்கீ ழேகிக்
குருமதி மருமான் கோயில் [1]குறுகுவான் குறுகு மெல்லை. 22

கரைமதி யெயிற்றுச் சங்கு கன்னன்முன் னான வென்றிப்
பிரமத கணமுங் குண்டப் பெருவயிற் றொருவ னாதி
வரைபுரை [2]குறுத்தாட் பூத மறவருங் குழுமி வீக்கு
குரைகழல் வலிய நோன்றாட் கோளுடை வயவ ராகி. 23

நெட்டிலை வடிவாள் குந்தந் தோமர நேமி நெய்த்தோர்
ஒட்டிய கணிச்சி சாப முடம்பிடி முதலா வெண்ணப்
பட்டவெம் படைமூ வாறும் பரித்தசெங் கையர் காலிற்
கட்டிய கழலர் காலிற் கடியராய்ப் புறம்பு காப்ப. 24

வார்கெழு கழற்கா னந்தி மாகாளன் பிருங்கி வென்றித்
தார்கெழு நிகும்பன் கும்போ தரன்முதற் றலைவர் யாரும்
போர்கெழு கவசந் தொட்டுப் புண்டர நுதலிற் றீட்டிக்
கூர்கெழு வடிவா ளேந்திக் குதிரைச்சே வகராய்ச் சூழ. 25

கற்றைச்சா மரைகள் பிச்சங் கவிகைபூங் கொடிக்கா [3]டெங்கும்
துற்றக்கா ரொலியு நாணத் தூரிய முழுது மேங்கக்
கொற்றப்போர் விடையைத் தானே குரங்குளைப் பரியா மேற்கொண்
டொற்றைச்சே வகராய் மாறி யாடிய வொருவர் வந்தார். 26

---

22. பொருநர் - வீரர். ஏர்தல் - எழுதல். குரு மதி மருமான் - நிறம்பொருந்திய சந்திரன் மரபினனான பாண்டியன்.

23. எயிறு - பல். குண்டப்பெருவயிற்று ஒருவன் - குண்டோதரன் வீக்கும் - கட்டும். நோன் - வலிமை. வயவர் - வீரர்.

24 நெய்த்தோர் - இரத்தம். கணிச்சி - மழு. உடம்பிடி - வேல். காலில் - காற்றினும்.

25. தொட்டு - தரித்து. புண்டரம் - திரிபுண்டரம். நுதல் - நெற்றி.

26. பிச்சம் - பீலிக்குடை. தூரியம் - வாச்சியம். குரங்கு - வளைந்த. உளை - பிடரி மயிர். மாறியாடிய ஒருவர் - சோமசுந்தரக் கடவுள்.

பா-ம்—1 குறுகினான். 2 குறுந்தாள். 3 முற்றக் காலொலியு. (முற்றுதல் - சூழ்தல்.)

பல்லிய மொலிக்கு மார்ப்பும் பாய்பரி கலிக்கு மார்ப்புஞ்
செல்லொலி மழுங்க மள்ளர் தெழித்திடு மார்ப்பு மொன்றிக்
கல்லெனுஞ் சும்மைத் தாகிக் கலந்தெழு சேனை மேனாள்
மல்லன்மா நகர்மேற் சீறி வருகடல் போன்ற தன்றே. 27

சேனையின் வரவு நோக்கித் திருமகன் றிருமுன் னேகுந்
[1]தானையந் தலைவன் றென்னன் றுணிமுல் குறுகிக் கூற
மீனவ னுவகை பூத்து வெயின்மணிக் கடையிற் போந்தங்
கானமண் டபத்திற் செம்போ னரியணை மீது வைகி. 28

தெவ்வடு மகிழ்ச்சி பொங்கச் சேனையின் [2]செல்வ நோக்கி
[3]எவ்வெவ் தேயத் துள்ளா ரிவரென வெதிரே யின்று
கௌவையின் மனச்சா மந்தன் கையிற்பொற் பிரம்பு நீட்டி
அவ்வவர் தொகுதி யெல்லா மணியணி யிறுவிக் கூறும். 29

கொங்கரிவ ரையகுரு நாடரிவ ரைய
கங்கரிவ ரையகரு நாடரிவ ரைய
அங்கரிவ ரையவிவ ராரியர்க ளைய
வங்கரிவ ரையவிவர் மாளவர்க ளைய. 30

குலிங்கரிவ ரையவிவர் கொங்கணர்க ளைய
தெலுங்கரிவ ரையவிவர் சிங்களர்க ளைய
கலிங்கரிவ ரையகவு டத்தரிவ ரைய
உலங்கெழு புயத்திவர்க ளொட்டியர்க ளைய. 31

கொல்லரிவ ரையவிவர் கூர்ச்சரர்க ளைய
பல்லரிவ ரையவிவர் பப்பரர்க ளைய

---

27. செல் - மேகம். தெழித்திடும் - பேரொலி செய்யும். சும்மை - ஒலி.

28. திருமகன் - பெருஞ்செல்வமுடையவன்; பாண்டியன். கடையில் - கடை வாயிலில்.

29. தெவ் - பகைவறுகிய சேதிராயன். சேனையின் செல்வம் - சேனைப்பெருக்கம்; சேனையாகிய செல்வம்; இப்பொருட்கு, இன்: தவிர்வழி வந்த சாரியை. கௌவை - துன்பம். இல் - இல்லாத.

30. கொங்கர் - கொங்கு நாட்டினர். அங்கர் - அங்க நாட்டினர்.

31. கௌடத்தர் - கௌட நாட்டினர். உலம் கெழு - திரண்ட கல் போன்ற.

பா-ம்—1 தானையர். 2 செல்வி. 3 எவ்வெத்.

வில்லரிவ ரையவிவர் விதேகரிவ ரைய
கல்லொலி கழற்புனை கடாரரிவ ரைய. 32

கேகயர்க ளாலிவர்கள் கேழ்கிளர் மணிப்பூண்
மாகதர்க ளாலிவர் மராடரிவர் காஞ்சி
நாகரிக ராலிவர்க ணம்முடைய நாட்டோர்
ஆகுமிவர் தாமென[1]மெய்க் காட்டியறி வித்தான். 33

இத்தகைய சேட்புல னுளாரையிவ னுய்த்த
வித்தகமை யென்னென வினவியருள் செய்யேல்
அத்தநின் னரும்பொரு ளனைத்தும்வரை யாதே
உய்த்தலி னடைந்தனர்க ளாலென வுரைத்தான். 34

அந்நெடுஞ் சேனை தன்னுட் சேணிடை யடன்மா வூர்ந்து
பின்னுற நிற்கு மொற்றைச் சேவகப் பிரானை நோக்கி
மன்னவ னவர்யா ரென்னச் சாமந்தன் வணங்கி யைய
இன்னவர் சேனை வெள்ளத் தியாரையென் றறிவ தென்றான். 35

அவரையிங் கழைத்தி யென்றா னரசன்றன் வழிச்செல் வார்போற்
கவயமிட் டவரும் போந்தார் காவலன் களிகூர்ந் தம்பொன்
நவமணிக் கலன்பொன் னூடை நல்கினா னுள்ளத் தன்பு
தவறிலான் பொருட்டு வாங்கித் தரித்துத்தன் றமர்க்கு மீந்தார். 36

ஆய்ந்தவெம் பரிமாத் தூண்டி யைங்கதி நடத்திக் காட்டி
ஏய்ந்ததஞ் சேனை வெள்ளத் தெய்தினா ரெய்து மெல்லை

---

32. பல்லர் - பல்லவர். பப்பரர் - பப்பர நாட்டினர். வில்லவர் - சேர நாட்டினர். கடாரர் - கடார நாட்டினர்; கடாரம் - பர்மா.

33. காஞ்சி - காஞ்சி நாடு. நாகரிகர் - நாகரிகத்தையுடையவர். மெய்க்காட்டி - (அவரவர்களின்) உருவத்தைக் காட்டி.

34. வித்தகமை - சாமர்த்தியத்தன்மை, அதிசயத்தன்மை. வரையாது - அளவு செய்யாது

35. சேண் இடை - தூரத்தில். மா - குதிரை. மன்னவன் - குலபூடண பாண்டியன்.

36. கவயம் - கவசம். தவறிலான் - (வழிபாட்டில் சிறிதும்) தவறில்லாத சாமந்தன். தமர் - தம்பரிசனம்.

37. ஐங்கதி - மல்லகதி, மயூரகதி, வானரகதி, வல்லியகதி, சரகதி என ஐந்து வகையான நடை; இவை முறையே மெல்லிய நடை, விரைந்த நடை; இருகால் தூக்கியாடிவருநடை, சுற்றியோடல், முழு வோட்டம் ஆகும். புலி கோட்பட்டு - புலியால் கௌவப்பட்டு.

பா-ம்—1 மெய்காட்டி.

வேய்ந்ததார்ச் சேதி ராயன் வேட்டைபோய்ப் புலிகோட் பட்டு
மாய்ந்தன னென்றோ ரொற்றன் வேந்தன்முன் வந்து சொன்னான். 37

முரசதி ரனிக நோக்கி முகமலர்ந் துவகை பூத்த
அரசனு மனிக வேந்தற் களவில்சீர்த் தலைமை யோடும்
வரிசைகண் மிதப்ப நல்கி வந்துமெய்க் காட்டுத் தந்து
பரசிய பதாதி தத்தம் பதிபுகச் செலுத்து கென்றான். 38

அறைந்தவார் கழற்காற் சேனை காவல னனிகந் தத்தஞ்
சிறந்தசே ணாட்டிற் செல்லச் செலுத்துவான் போன்று நிற்ப
நிறைந்தநான் மாடக் கூட லிருத்தனந் நிலைநின் றங்கே
மறைந்தனன் [1]மனித்த வேடங் காட்டிய மறவ ரோடும். 39

கண்டனன் பொருநை நாடன் வியந்தனன் கருத்தா சங்கை
கொண்டனன் குறித்து நோக்கி யீதுநங் கூடன் மேய
அண்டர்தம் பெருமான் செய்த வாடலென் றெண்ணிக் கண்ணீர்
விண்டனன் புளகம் போர்ப்ப மெய்யன்பு வடிவ மானான். 40

தனக்குயிர்த் துணையா நின்ற சாமந்தன் றன்னை நோக்கி
உனக்கெளி வந்தார் கூட லுடையநா யகரே யென்றால்
எனக்கவ ராவார் நீயே யென்றவற் கியாவு நல்கி
மனக்கவல் பின்றி வாழ்ந்தான் மதிவழி வந்த மைந்தன். 41

ஆகச் செய்யுள்—1,704

---

38. அனிகம் - சேனை. பரசிய - துதித்த. தம்தம்பதி - தத்தம் ஊர்.

39. சேண் நாடு - தூர தேசம். அந்நிலை - அவ்விடத்தில். மனித்த வேடம் - மனிதவேடம்.

40. ஆசங்கை - சந்தேகம். விண்டனன் - சொரிந்தனன். மெய்யன்பு வடிவம் - பசுகரணங்கெட்டுச் சிவகரணமாக நிற்கும் வடிவம்.

41. எளிவந்தார் - எளிதில் வந்து அருளினார். மதிவழி வந்த மைந்தன் - பாண்டியன்.

பா-ம்—1 மனித வேடங்.

# 31. உலவாக்கிழியருளிய படலம்

—c—

அடியார் பொருட்டுப் பரிவயவ ராகிச் செழியன் காணவிடைக்
கொடியார் வந்து மெய்க்காட்டுக் கொடுத்த வண்ண மெடுத்துரைத்துங்
கடியார் கொன்றை முடியாரக் கன்னி நாடன் றனக்கிசைந்த
படியா லுலவாக் கிழிகொடுத்த படியை யறிந்த படிபகர்வாம். 1

வள்ளல் குலபூ டணன்றிங்கள் வாரந் தொடுத்துச் சிவதருமம்
உள்ள வெல்லாம் வழாதுநோற் றொழுகும் வலியாற் றன்னாட்டில்
எள்ள லில்லா வேதியரை யிகழ்ந்தா னதனுன் மறைமறுத்து
வெள்ள மருக வளங்குன்றி விளைவஃ கியது நாடெல்லாம். 2

அறவோ ரெல்லாம் நிரப்பெய்தி யாகங் கிடந்த நூலன்றி
மறைநூ லிழந்து முனிவேள்வி வானோர் வேள்வி தென்புலத்தின்
உறைவோர் வேள்வி யிழந்திழிந்த தொழில்செய் தாற்று துயிர்
வளர்ப்பான், புறநா டணைந்தார் பசியாலே புழுங்கி யொழிந்த
குடியெல்லாம். 3

எந்நா டணைவோ மெனவிரங்க விரங்கி மதிக்கோன் மதிநாளிற்
பொன்னுண் முளரித் தடங்குடைந்து சித்திக் களிற்றைப் பூசித்துத்
தன்னு தரவாற் கயற்கண்ணி தலைவன் றன்னை யருச்சித்து
முன்னு வீழ்ந்து கரமுகிழ்த்துப் பழிச்சி மகிழ்ந்து மொழிகின்றான்.

அத்த வுலகி லுயிர்க்குயிர்நீ யல்லை யோவவ் வுயிர்பசியால்
எய்த்த வருத்த மடியேனை வருத்து மாறென் யானீட்டி

---

1. கடி - வாசனை. உலவாக்கிழி - எடுக்க எடுக்கக் குறையாத பொன் முடிப்பு.

2. சிவதருமம் உள்ள எல்லாம் - சிவதருமமாக உள்ள விரதங்களை யெல்லாம்; இதில் அட்டமி, சதுர்த்தசி முதலிய விரதங்களும் அடங்கியவை ஆகும். அஃகியது - சுருங்கியது.

3. நிரப்பு - வறுமை. மறைநூல் இழந்து - தத்தம் நிலைக்குரிய ஒழுக்கத்தை இழந்து. வேதம் ஓதுதல் முனிவர் வேள்வியாம்; ஓமம் வளர்த்தல் வானோர் வேள்வியாம். பிதிரர்க்கு நீர்க்கடன் ஆற்றல் தென்புலத்தார் வேள்வியாம்.

4. மதிக்கோன் - குலபூடண பாண்டியன். மதிநாள் - சோம வாரம். சித்திக்களிறு - சித்தி விநாயகர். ஆதரவு - அன்பு.

வைத்த [1]நிதியந் தருமத்தின் வழியே சென்ற தினியடிகள்
சித்த மலர்ந்தென் னிடும்பைவினை தீர வருட்கண் செய்கவென. 5

கோளா டரவ மரைக்கசைத்த கூடற் பெருமான் குறையிரக்கும்
[2]ஆளா மரசன் றவறுசிறி தகங்கொண் டதனைத் திருச்செவியிற்
கேளார் போல வாளாதே யிருப்ப மனையிற் கிடைத்தமலன்
தாளா தரவு பெறநினைந்து தரையிற் கிடந்து துயில்கின்றான். 6

அங்கண் வெள்ளி யம்பலத்து ளாடு மடிக ளவன்கனவிற்
சங்கக் குழையும் வெண்ணீறுஞ் சரிகோ வணமுந் தயங்கவுரன்
சிங்க நாதங் கிடந்தசையச் சித்த வடிவா யெழுந்தருளி
வெங்கண் யானைத் தென்னவர்கோன் முன்னின் றிதனை விளம்புவார்.

ஏடா ரலங்கல் வரைமார்ப வெம்பா லன்று மன்புடைமை
வாடா விரத விழுச்செல்வ முடையாய் வைய மறங்கடிந்து
கோடா தளிக்குஞ் செங்கோன்மை யுடையா யுனக்கோர் குறையுளதுன்
வீடா வளஞ்சேர் நாட்டிந்நாள் வேள்விச் செல்வ மருகியதால். 8

மறையே நமது பீடிகையா மறையே நமது பாதுகையாம்
மறையே நமது வாகனமா மறையே நமது நூபுரமாம்
மறையே நமது கோவணமா மறையே நமது விழியாகும்
மறையே நமது மொழியாகு மறையே நமது வடிவாகும். 9

வேதந் தானே நமதாணைச் சத்தி வடிவாய் விதிவிலக்காய்ப்,
போதங் கொளுத்தி நிலைநிறுத்திப் போகங் கொடுத்துப் பல்லு

---

5. அத்த - இறைவனே : விளி. சித்தம் - திருவுளம். இடும்பை வினை - துன்ப நோய்.

6. கோள் - கொலைத்தொழிலையுடைய ; வலிமையுடைய எனினு மாம். ஆளாம் அரசன் - தமது தொண்டனாகிய பாண்டியன். தாளா தரவு - திருவருளாகிய பற்றுக்கோடு.

7. சிங்கநாதம் - மான் கொம்பினால் செய்த ஒருவகை வாத்தியம். சிங்கம், சிருங்கம் (கொம்பு) என்பதன் திரிபு. இது சிங்கம்போலக் கர்ச்சித்தலின் இப்பெயர் பெற்றதென்பர்.

8. வாடா - கெடாத. வீடாவளம் - அழியாத வளம். அருகியது - குறைந்தது.

9. பீடிகை - ஆசனம். நூபுரம் - சிலம்பு. கோவணம் - கோவண வுடை. ஏகாரங்கள் : தேற்றம்.

பா-ம்—1 பொருளுந். 2 ஆளா வரசன். (இப்பொழுது வறுமை தீர்த்துக் குடிகளை ஆளாத அரசன்.)

யிர்க்கும், பேதஞ் செய்யும் பிணியவிழ்த்தெம் பிரியா வீடு
தருவதுதேன், நாதஞ் செய்யுந் தார்வேந்தே நமது செங்கோ
லதுவாகும். 10

அந்த மறைக டமக்குறுதி யாவா ரந்நூல் வழிகலிநோய்,
சிந்த மகத்தீ வளர்த்தெம்பாற் சிந்தை செலுத்து மந்தணரால்,
இந்த மறையோர் வேள்விமழைக் கேது வாகு மிவர்தம்மை,
மைந்த விகழ்ந்து கைவிட்டா யதனுன் மாரி மறுத்தன்றால். 11

மும்மைப் புவனங் களுமுய்ய முத்தீ வேட்கு மிவர்தம்மை,
நம்மைப் போலக் கண்டொழுகி நாளு நாளு [1]வறம்பெருக்கிச்,
செம்மைத் தருமக் கோலோச்சித் திகிரி யுருட்டி வாழ்தியென
உம்மைப் பயன்போ லெளிவந்தா ருலவாக் கிழியொன் றுதவு
வார். 12

இந்தக் கிழியி லெத்துணைப்பொன் னெடுத்து வழங்குந் தொறுநாங்கள்
தந்த வளவிற் குறையாத தன்மைத் தாகு [2]மிதுகொண்டு
வந்த விலம்பா டகற்றென்று கொடுத்து வேந்தன் மனக்கவலை
சிந்தத் திருநீ றதுசாத்தி மறைந்தா ரையர் திருவுருவம். 13

கண்ட கனவு நனவாகத் தொழுதா னெழுந்து கௌரியர்கோன்
அண்டர் பெருமான் றிருவடிபோ லம்பொற் கிழியை முடித்தலைமேற்
கொண்டு மகிழ்ச்சி தலைசிறப்ப நின்றோர் முகூர்த்தங் கூத்தாடித்
தண்டா வமைச்சர் படைத்தலைவர் தமக்குங் காட்டி யறிவித்தான்.

---

10. ஆணைச் சத்தி - ஆணையாகிய அருள். போதம் - அறிவு. பல்லுயிர் - விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்னும் மூவகை யான் மாக்கள். பேதஞ்செய்யும் பிணி - வியாபக அறிவைத் தடுத்துச் சிற்றறிவாக வேறுபடுத்தும் ஆணவம்.

11. மறை...குறுதியாவார் - அந்தணர். கலிநோய் - வறுமை நோய். மகத்தீ - வேள்வித்தீ. மைந்த - வலிமையுடையவனே: விளி.

12. மும்மைப் புவனங்கள் - பூமி அந்தர சுவர்க்கங்கள். முத்தீ - ஆகவநீய முதலிய அக்கினிகள். உம்மை - முற்பிறவி. எளிவந்தார் - எளிதில் வந்தருளிய பெருமானார்.

13. நாங்கள், கள் : அசை, பகுதிப்பொருள் விகுதியுமாம். இலம் பாடு - வறுமை.

14. தொழுதான் எழுந்து - தொழுது எழுந்தான். தண்டா - நீங்காத.

பா-ம்—1 வளம்பெருக்கிச். 2 மது கொண்டு.

செங்க ணரிமான் பிடர்சுமந்த தெய்வ மணிப்பூந் தவிசேற்றிச்
சங்க முழங்க மறைமுழங்கச் சாந்தந் திமிர்ந்து தாதொழுகத்
தொங்க லணிந்து தசாங்கவிரைத் தூப நறுநெய்ச் சுடர்வளைத்துக்
கங்கை மிலைந்த கடவுளெனக் கருதிப் பூசை வினைமுடித்தான். 15

அடுத்து வணங்கி வலஞ்செய்திட் டம்பொற் கிழியைப் பொதிநீக்கி, எடுத்து முத்தீ வினைஞர்க்கும் யாகங் களுக்கும் யாவர்க்கும், மடுத்து நாளும் வரையாது வழங்க வழங்க வடியார்க்குக், கொடுக்கக் குறையா வீட்டின்ப மாயிற் றையர் கொடுத்தகிழி. 16

ஆய பொதியில் [1]விளைபொன்னு லசும்பு செய்து விசும்பிழிந்த, கோயி லதனை யகம்புறமுங் குயின்று ஞானக் கொழுந்தனைய, தாயி லறுகாற் பீடிகைவான் றடவு கொடிய நெடியபெரு, வாயில் பிறவு மழகெறிப்ப வேய்ந்தான் மறையின் வரம்பறிந்தான். 17

முந்திக் குறையா நிதிக்கடலை முகந்து முகந்து நாடோறுஞ், சிந்திக் குலபூ டணக்கொண்ட றெய்வ தருமப் பயிர்வளர்ப்பப், பந்தித் திரைமுந் நீர்மேகம் பருகிச் சொரியப் பலவளனும், நந்திக் கன்னி நாடளகை நகர்போற் செல்வந் தழைத்தன்றே. 18

வையா கரணர்க ணையா யிகர்மறை வல்லோர் மறைமுடி சொல்லாய்வோர், மெய்யா மிருதிகள் பொய்யா விரதிகள் வேள்

15. அரிமான் - சிங்கம். சாந்தம் - சந்தனக் குழம்பு. திமிர்ந்து - அப்பி. தசாங்கம் - ஆவாகனம், தாபனம், சந்நிதானம், சந்நிரோ தனம், அவகுண்டனம், தேனுமுத்திரை, பாத்தியம், ஆசமனீயம். அர்க்கியம், புட்பதானம் என்னும் பத்து உபசாரங்கள். விரைத் தூபம் - குந்துருக்கம், பச்சைக் கருப்பூரம், காரகில், வெண் சந்தனம் கருஞ்சீதாரி என்னும் வாசனைப்பொருள்களைக் கலந்து இடும் தூபம். நெய் - பசுநெய்.

16. யாவர்க்கும் - (நவக்கிரகம், இந்திராதி தேவர்கள், முனிவர் கள், பிதிரர்கள் முதலிய) எல்லோர்க்கும்.

17. பொதி - உலவாக்கிழி. அசும்பு - ஒளியின் கசிவு. குயின்று - இழைத்து. தாய் இல் - அங்கயற்கண்ணம்மை கோயில்.

18. குலபூடணக்கொண்டல் - குலபூடணனாகிய மேகம். நந்தல் - மிகுதல். அளகை நகர் - குபேரன் நகரம்.

[1] பா-ம்—1 வளை பொன்னு.

*வித் தழல்களை வாழ்விப்போர், பையா டரவணி யையா னன*
*னுரை பகர்வோ ருலகிய லகல்வோர்கள், எய்யா துறைதலி னையா*
*தளகைய தென்னப் பொலிவது தென்னாடு.* **19**

*ஆகச் செய்யுள்—1,723*

---

***19.** வையா கரணர் - வியாகரண பண்டிதர். நையாயிகர் - நியாய நூற்புலவர். மறைமுடி - உபநிடதம். சொல் - மகாவாக்கியம், பிரணவம். ஐயானனன் உரை - சிவாகமங்கள். ஐயானனன் - ஐந்து முகங்களையுடைய சதாசிவ மூர்த்தி; ஆனனம் - முகம். உலகியல் - உலகப்பற்று.*

# 32. வளையல் விற்ற படலம்

—o—

வேதந் தனது வடிவென்று விண்ணின் றிழிந்த விமானமறைக்
கீதன் செழியன் றனக்குலவாக் கிழிதந் தளித்த வழியிதுவப்
போதங் கடந்த பொருள்வணிகப் புத்தேண் மாட மணிமறுகு
பாதந் தடவ நடந்துவளை பகர்ந்த பரிசு பகர்கிற்பாம். 1

இறைவன் குலபூ டணன்றிகிரி யிவ்வா றுருட்டு நாண்முன்னாட்
சிறைவண் டறையுந் தாருவன தெய்வ முனிவர் பன்னியர்தந்
[1]நிறையன் றளந்து காட்டுகென நெடியோன் மகனைப் பொடியாக்கும்
அறவன் றானோர் காபாலி யாகிப் பலிக்கு வருகின்றான். 2

வேத மசைக்குங் கோவணமு மெய்யி னீறு முள்ளாளக்
கீதமிசைக்குங் கனிவாயு முள்ளே நகையுங் கிண்கிணிசூழ்
பாத மலரும் பாதுகையும் பலிகொள் கலனுங் கொண்டிரதி
[2]மாதர் கணவன் றவவேட மெடுத்தா லொத்து வருமெல்லை. 3

விள்ளுங் கமலச் சேவடிசூழ் சிலம்பி னொலியு மிடறதிரத்,
துள்ளுங் கீத வொலியுங்கைத் துடியி னொலியுஞ் செவித்துளைகீண்,
டுள்ளம் பிளந்து நிறைகளைந்தீர்த் தொல்லை வருமுன் வல்லியர்கள்,

---

1. மறைக்கீதன் - சாம வேத கீதனாகிய சோமசுந்தரக்கடவுள். போதம் - பசுபாச வறிவு. தடவ - தோய்ந்து.

2. மானுட முனிவரும் உளராதலின் பிரமாவின் புதல்வராகிய தாருகவன முனிவர், 'தெய்வ முனிவர்' எனப்பட்டனர். நிறை - (திருமணத்திற்குமுன் பெற்றோரும் அதன்பின் கணவனும் கற்பித்த வழியில்) மனத்தை நிறுத்துதல்; கற்பு; இக்கருத்துப்பற்றியே, கற்பெனப் படுவது சொற்றிறம் பாமை" என்றார் ஔவையார். காட்டுக என - காட்டுவேன் என்று. நெடியோன் மகன் - மன்மதன். காபாலி - தலையோட்டை ஏந்தினவன்; சிவன். பலி - பிச்சை.

3. உள்ளாளக்கீதம் - காற்றினை உள் வாங்கிப் பாடும் பாட்டு: இதனை வழக்கில் 'கானம்' என்பர்; இக்கீதத்தின் இலக்கணத்தை இசைவாது வென்ற படலம் 38-ம் செய்யுளிற் காண்க. இரதி - மன்மதன் மனைவி. மாதர் - அழகு, ஆசை.

பா-ம்—1 நிறைவன். 2 மாது.

பள்ளங் கண்டு வருபுனல்போற் பலிகொண் டில்லின் புறம்
போந்தார். 4

ஐயங்கொண் டணைவா ரையர் பரிகலத் தைய மன்றிக்
கையம்பொன் வளையும் பெய்வார் கருத்துநா ணன்றிக் காசு
செய்யும்பொன் மருங்கு னாணு மிழப்பர்வேள் சிலையம் பன்றிக்
கொய்யுந்தண் மலர்க்க ணம்புங் கொங்கையிற் சொரியச் சோர்வார்.

மடமயி லனையா ரெங்கள் வளையினைத் தருதி ரென்றார்
கடல்விட மயின்றா னுங்கள் கந்தரத் துள்ள தென்றான்
தடமதிக் கொம்ப னாரெங் கலையினைத் தருதி ரென்றார்
முடமதி யிலைந்தா னுங்கண் முகமதி யிடத்த தென்றான். 6

இடையறிந் தெம்மைச் சேர்மி னென்றன ரிளைய ரெங்கோன்
கடலமு தனையீர் நுங்கட் கிடையினிக் காணா தென்றான்
மடநலா ரஃதேற் பண்டை வண்ணமீந் தில்லிற் செல்ல
விடையளித் தருண்மி னென்றார் வேலைபுக் குறங்கு மென்றான். 7

நங்கையர் கபாலிக் கென்று நடுவிலை போலு மென்றார்
அங்கண னடுவி லாமை நும்மனோர்க் கடுத்த தென்றான்

---

4. மிடறு - கண்டம். கீதம் - இராகம். துடி - உடுக்கை. வல்லி யர்கள் - (தாருகவன முனிவர்களின்) மனைவியர்கள்.

5. ஐயம் - பிச்சை. நாண் - வெட்கம். மருங்குல் நாண் - மேகலை. வேள் - மன்மதன். கண்ணம்பு - கண்ணீர்.

6. மடம் - இளமை, அறியாமை. வளை - வளையல், சங்கு. கந்தரம் - கழுத்து. கழுத்துக்குச் சங்கு உபமானம்; சங்குக்கு வளை என்றும் பெயர்; கலை - வஸ்திரம். சந்திரகிரணம். முடம் - வளைவு.

இது முதல் ஐந்து செய்யுட்கள் கடவுளுக்கும் மகளிர்க்கும் நிகழ்ந்த சல்லாபமாகும். இவற்றைச் 'சல்லாபக்கவி' என்பர். இரு பொருள்களுள்ளே, மகளிர் முதலாம் பொருள்களைக் கருதியே வினவினர்; கடவுள் இரண்டாம் பொருளைச் சுட்டியே விடை கூறினர். இதனைத் தார்க்கிகர், 'சலஞ்சாதித்தல்' என்பர். [சலஞ்சாதித்தல் - ஒரு கருத்துப்பற்றிக் கூறிய சொற்கு மற்றொரு பொருள் படைத்துக் கொண்டு நகுதல்.]

7. இடை - சமயம்; இடுப்பு. வண்ணம் - நிறம்; முன்னுள்ள நிறம் காமத்தால் வேறுபட்டு விளர்த்து (பசலைபூத்து) இருத்தலின், 'பண்டை வண்ணம் ஈந்து' என்றார். விடை - உத்தரம், விட்டுனுவாகிய இடபம். வேலை - திருப்பாற்கடல்.

மங்கைய ரடிக ணெஞ்சம் வலியகற் போலு மென்றார்
கொங்கலர் கொன்றை யானுங் கொங்கையே வன்க லென்றான். 8

காதுவே லன்ன கண்ணார் கங்கைநீர் சுமந்த தேதுக்
கோதுமி னென்றார் நும்பா லுண்பலி யேற்க வென்றான்
ஏதுபோ லிருந்த தைய னிசைத்தசெப் பென்றா ரீசன்
கோதுறு வமுதன் னீர்நுங் கொங்கைபோ லிருந்த தென்றான். 9

கறுத்ததை யெவன்கொ லைய கந்தர மென்றார் வேலை
வெறுத்தவன் மாரி பெய்தற் கென்றனன் விழியால் வேலை
ஒறுத்தவர் யாவ தென்றீ ருத்தர மென்றார் கூற்றைச்
செறுத்தவன் றென்பா னின்று நோக்கினாற் றெரிவ தென்றான்.

செக்கரஞ் சடையான் கண்ணிற் றம்முருத் தெரிய நோக்கி
இக்கொடி யார்போற் கண்ணு ளெம்மையு மிருத்தி ரென்றார்
நக்கனுந் தனையன் னார்கண் ணிடைக்கண்டு நகைத்து நம்மின்
மிக்கவர் நுங்க ணுள்ளார் விழித்தவர்க் காண்மி னென்றான். 11

அஞ்சலிப் போது பெய்வார் சரணமென் றடியில் வீழ்வார்
தஞ்செனத் தளிர்க்கை நீட்டித் தழுவிய கிடைக்குந் தோறும்

---

8. நடு - நடுவுநிலைமை எனப்படும் நீதி, இடை. கல் - கடினத் தன்மை. வன்கல் - மலை.

9. காது - கொலைபுரியும். கங்கைநீர் சுமந்தது - கங்கை நதியை நீயிர் தாங்கியது; பிரம கபாலத்தை நீர் கையில் ஏந்தியது, (கம்-தலை. கை - கரம்.) செப்பு - சொல், மரச்செப்பு.

10. கறுத்ததை, ஐ : சாரியை. கந்தரம் - கழுத்து, மேகம். ஒறுத்தவர் - வென்றவர். உத்தரம் - விடை, வடதிசை. செறுத்தவன் - உதைத்தவன். தென்பால் நின்று - தென்றிசைக்கண் நின்று.

11. தம்முரு - தமது சாயை. நக்கன் - சிவன். தனை - தன்னை நம்மின் மிக்கவர் - நம்மைப்போல மேலானவர்.

12. போது - மலர். தஞ்சு - தஞ்சம் - துணை. தழுவிய கிடைக் குந்தோறும் - தழுவ நெருங்குந்தோறும். எஞ்சுவான் - அப்பாற்படு வான். எஞ்சாது - சலிக்காது. எதிர் - எதிர்நின்று. பதிஞானம் உணர்தற்குக் கருவியாகிய வேதம் பசு ஞானமாய் இருத்தலால் அதற்கு அணியன் 'ஆகாதவன்' ,தாருக வனத்துப் பெண்களுக்கு அணியன் ஆதல், கூடாமையின், மையல் வஞ்சியர்க்கு அணியனுமோ' என்றார். இதனை, 'புறத்தார்க்குச் சேயோன்' எனவரும் திருவாசக அடியாலும் உணர்க'.

எஞ்சுவா னெஞ்சா தேத்தி யெதிர்மறை யெட்டுந் தோறும்
வஞ்சனா யகல்வான் மையல் வஞ்சியர்க் கணிய னாமோ. 12

அடுத்தெமைத் தழாதி ரேனீ ரவிழ்த்தபூங் கலையை மீள
உடுத்துமி னும்பால் யாங்கண் மையனோ யுழப்ப நோக்கிக்
கடுத்தெமர் முனியா முன்னங் கழற்றிய வளையுங் கையில்
எடுத்திடு மென்றார் நாளை யிடுதுமென் றேகி னானே. 13

பிள்ளைவெண் டிங்கள் வேய்ந்த பிரான்கொண்டு போன நாணும்
உள்ளமு மீட்க லாற்றா துயங்கினார் கலையுஞ் சங்குந்
துள்ளவைங் கணையான் வாளி துளைப்பவெம் பசலை யாகங்
கொள்ளைகொண் டுண்ண வின்றா ரங்கிலை கொழுநர் கண்டார். 14

பொய்தவ வடிவாய் வந்து நம்மனைப் பொன்னி னன்னார்
மெய்தழை கற்பை நாணை வேரொடுங் களைந்து போன
கைதவன் மாடக் கூடற் கடவுளென் றெண்ணித் தேர்ந்தார்
செய்தவ வலியாற் கால மூன்றையுந் தெரிய வல்லார். 15

கற்புத் திரிந்தார் தமைநோக்கிக் கருத்துத் திரிந்தீர் [1]நீராழி
வெற்புத் திரிந்த மதிற்கூடல் மேய வணிகர் கன்னியராய்ப்
பொற்புத் திரியா தவதரிப்பீர் போமென் றிட்ட சாபங்கேட்
டற்புத் திரிந்தா ரெங்களுக்கீ தகல்வ தெப்போ தெனமுனிவர். 16

அந்த மாட மதுரைநகர்க் கரசா கியசுந் தரக்கடவுள்
வந்து நும்மைக் கைதீண்டும் வழியிச் சாபங் கழியுமெனச்

---

13. தழாதிரேல் - தழுவாது போவீராயின். கடுத்து - கோபித்து. எமர் - எமது கணவர். முனிபன்னியர்கள், பரிசித்தலாலாயினும் மயக்கு ஒழிவோம் என்ற கருத்தினால், 'உடுத்துமின்', 'எடுத்திடும்' என்று கூறினார் என்க. நாளையிடுதும் என்றது இப்பெண்கள் சாபத்தால் மறுபிறப்பில், வணிகக்குலக்கன்னியராய் அவதரிக்கப் போவதால் அவர்கட்கு வளையலிடப் போவது குறித்துக் கூறப்பட்டதாகும்.

14. உயங்கினார் - வாடிய முனிபன்னியர். கலை - மேகலை. சங்கு - வளையல். துள்ள - சரிய. பசலை - காம முதலியவற்றாலுண்டாகும் தேமல். கொழுநர் - தாருகவன முனிவர்.

15. பொன்னின் அன்னார் - இலக்குமியை ஒத்தவர். கைதவன் - இங்கே வஞ்சகன். காலம் மூன்று - இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்பன.

16. நீர் - நீவிர். ஆழிவெற்பு - சக்கரவாளகிரி. பொற்பு - அழகு. அற்பு - அன்பு.

பா-ம்—1 நீளாழி.

சிந்தை தளர்ந்த பன்னியருந் தென்னர் மதுரைத் தொன்னகரிற்
கந்த முல்லைத் தார்வணிகர் காதன் மகளி ராய்ப்பிறந்தார். 17

வளர்ந்து பேதை யிளம்பருவ மாறி யல்குல் புடையகன்று
தளர்ந்து காஞ்சி மருங்கொசியத் ததும்பி யண்ணாந் தரும்புமுலை
கிளர்ந்து செல்லும் பருவத்திற் கிடைத்தா ராக விப்பான்மண்
அளந்த விடையான் வந்துவளை பகரும் வண்ண மறைகிற்பாம். 18

கங்கை கரந்து மணிகண்டங் கரந்து நுதற்கண் கரந்தொருபால்
மங்கை வடிவுங் கரந்துழையு மழுவுங் கரந்து மழவிடையூர்
அங்க ணழகர் வளைவணிக ராகி யேன மளந்தறியாச்
செங்க மலச்சே வடியிரண்டுந் திரைநீர் ஞால மகள்சூட. 19

பண்டு முனிவர் பன்னியர்பாற் கவர்ந்த வளையே பட்டுவடங், கொண்டு தொடுத்து மீண்டவர்க்கே யிடுவே மெனுமுட் கோளினர்போற், றிரண்டர் தொடுத்த வைவண்ணத் துணர்த் தார் போலத் தோள்சுமந்து, மண்டு வளையை விலைபகர்ந்து வணிக மறுகில் வருகின்றார். 20

மன்னு மறையின் பொருளுரைத்த மணிவாய் திறந்து வளை கொண்மின், என்னு மளவிற் பருவமுகி லிமிழின் னிசைகேட் டெழுமயில்போற், றுன்னு மணிமே கலையிழற்றத் தூய வணிகர் குலமகளிர், மின்னு மணிமா ளிகைநின்றும் வீதி வாயிற் புறப்பட்டார். 21

வளைக ளிடுவா ரெனத்தங்கண் மனமெல் லாந்தம் புடை யொதுங்கத், தளைக ளிடுவார் வருகின்றார் தம்மைக் கொம்மை

---

18. பேதை - ஏழுவயதுப்பெண். அண்ணாத்தல் - நிமிர்தல். கிளர்ந்து செல்லல் - வளர்ந்து மேற் போதல். பருவம் - இங்கு மங்கைப்பருவம். மண் அளந்த விடை - பூமியை அளந்த திருமாலாகிய விடை.

19. கரந்து - ஒளித்து. உழை - மான். வளைவணிகர் - வளையல் பகரும் செட்டியார். ஏனம் - பன்றி, இங்குத் திருமால்.

20. வடம் - கயிறு. உட்கோள் - உட்கருத்து. ஐவண்ணம் - வெண்மை, கருமை, செம்மை, பசுமை, பொன்மை என்ற ஐந்து நிறம்: அழகிய பலநிறமுமாம். துணர் - பூங்கொத்து. மண்டு - நெருங்கிய.

21. பருவ முகில் - கார் காலமேகம். இமிழ் - ஒலிக்கும். இழற்ற - ஒலிக்க.

வெம்முலையார், துளைக ளிடுதீங் குழலிசைபோற் சுரும்பு பாடக்
கருங்குழன்மேல், விளைக ளொழுக நுடங்கிவரு மின்போ
லடைந்து கண்டார்கள். 22

கண்ட வடிவாற் றிளைப்பதற்குக் கழிபே ரன்பு காதல்வழிக்,
கொண்டு செல்ல வொருசார்தங் குணமு நாண முதனான்கும்,
மண்டி யொருசார் மறுதலைப்ப மனமு முழன்று தடுமாற,
அண்டர் பெருமான் விளையாடற் கமையச் சூழ்ந்தா
ரமுதனையார். 23

இரங்குமே கலைசிலம் பன்றி யேனைய
விரும்பிய குழைதொடி மின்செய் கண்டிகை
மருங்கிறச் சுமப்பினும் வளைகைக் கில்லெனின்
அரும்பிய முலையினார்க் கழகுண் டாகுமோ. 24

செல்வநல் வணிகிரெஞ் செங்கைக் கேற்பன
நல்வளை தெரிந்திடு மென்று நாய்கர்முன்
வல்வள ரிளமுலை மகளிர் மின்னுமிழ்
கல்வளர் கடகமென் காந்த ணீட்டினார். 25

பண்டருங் கிளவியங் கயற்கட் பாவைகைத்
தண்டளிர் பற்றிய தடக்கை மாதர்கைம்
முண்டகம் பற்றியே முகிழ்த்துப் பல்வரி
வ்ண்டுக ளேற்றுவார் மைய லேற்றுவார். 26

புங்கவ னிடுவளை புடைத்து மீளவந்
தெங்களுக் கிடவிலை யிடுதி ராலெனக்

---

**22.** தளை - விலங்கு. கொம்மை - திரட்சி. விளை கள் - முதிர்ந்த தேன்.

**23.** கழி பேர் அன்பு - மிக்க பெரிய அன்பு. ஒருசார்-ஒருபட்சம். மறுதலைப்ப - முரண.

**24.** இரங்கு - ஒலிக்கின்ற. குழை - குண்டலம். தொடி - சூடகம்.

**25.** நாய்கர் - வணிகர். வல் - சூதாடு கருவி. கல் - இரத்தினக் கற்கள் அழுத்திய. காந்தள் - செங்காந்தள் போன்ற கைகள்.

**26.** பண்தரும் - இசையை ஒத்த. கிளவி - சொல். பல் வரி வண்டு - பல நிறங்களையுடைய வளையல்கள்.

**27.** புங்கவன் - வணிக வேடங்கொண்ட இறைவன். புடைத்து - உடைத்துவிட்டு. இட விலை - கொடுக்கவில்லை. எருத்தம் - பிடர். கொட்டி - வளைத்து.

கொங்கவிழ் பைங்குழ லெருத்தங் கோட்டியின்
றங்கர நீட்டுவா ராசை நீட்டுவார். **27**

எமக்கிடு மெமக்கிடு மெனப்பின் பற்றியே
அமைத்தடந் தோளினா ரனங்கன் பூங்கணை
தமைத்துளை படுத்தவோர் சார்பி லாமையாற்
கமைப்புறு நாண்முதற் காப்பு நீங்கினார். **28**

முன்னிடு வளையெலாங் கழல முன்புசூழ்ந்
தின்னவை பெரியவே றிடுமென் றிட்டபின்
அன்னவு மனையவே யாக மீளவந்
தின்னமுஞ் சிறியவா விடுமென் றேந்துவார். **29**

பின்னிடு வளைகளுஞ் சரியப் பேதுரு
முன்னெதிர் குறுகிநீர் செறித்த மொய்வளை
தன்னொடு கலைகளுஞ் சரிவ தேயென
மின்னென நுடங்கினார் வேனெ டுங்கணார். **30**

இவ்வளை [1]போல்வளை யாமுன் கண்டிலேம்
மெய்வளை வணிகிரிவ் வரிய வெள்வளை
எவ்வயி னுள்ளவின் றினிய வாகியெம்
[2]மெய்ம்மயிர் பொடிப்பெழ வீக்கஞ் செய்தவே. **31**

நாளையும் வளையிட நண்ணு மிங்கென்பார்
கோள்வளை விலையிது கொண்டுபோ மென்பார்
வாள்விழி யீர்பினாள் வாங்கிக் கோடுமென்
றாளரி யேறனா ராடிப் போயினார். **32**

---

**28.** அமை - மூங்கில். பூங்கணை - மலர் அம்பு; அது தாமரை, அசோகு, நீலோற்பலம், மாம்பூ முல்லை என்பன. சார்பு - பற்றுக்கோடு. கமைப்பு - பொறுத்தல்; சார்பு.

**29.** முன் - முன்பு. பெரிய - பெரியன. அன்னவும் - அவ்வளையலும்.

**30.** பேதுரு - மனமயங்கி. செறித்த - கொடுத்த. நுடங்கினார் - துவண்டார்கள்.

**31.** மெய் - இஃது உண்மை. வளை வணிகிர் - வளையல் வியாபாரியாரே! வீக்கம் - பூரிப்பு.

**32.** ஆள் அரி ஏறு - ஆண்மையுடைய சிங்க ஏறு. பினாள் - பின்னாளில். கோடும் - கொள்வோம். ஆடி - நடித்து.

பா-ம்—1 போல்வன. 2 மெய்வளர்.

போயின வணிகர்தம் புடையின் மின்னெனப்
பாயின மகளிரும் பலருங் காணமுன்
மேயின விண்ணிழி விமானத் துள்ளொளி
ஆயின திருவுரு வாகித் தோன்றினர். 33

மட்டலம்பு கோதையார்முன் வளைபகர்ந்த வணிகர்தாம்
பட்டிசைந்த வல்குனங்கை பாகராகு மெனவியந்
துட்டதும்பு முவகைவெள்ள முற்றெழுந்த குமிழிபோற்
கட்டதும்பு புனலிலாழ்ந்து களியடைந்த நகரெலாம். 34

உருவிலாளி யுடல்பொடித்த வொருவர்கூட விருவரான்
மருவிலார் திருக்கைதொட்டு வளைசெறித்த நீர்மையாற்
கருவின்மாத ராகிநாய்கர் கன்னிமார்கண் மின்னுவேற்
பொருவில்காளை யெனவரம்பில் புதல்வரைப் பயந்தனர். 35

பிறந்தமைந்த ரளவிறந்த பெருமைகொண்ட பெருமிதஞ்
சிறந்தவீர மாற்றலேற்ற திறல்புனைந்து வைகினர்
மறந்ததும்பு வேனெடுங்கண் வணிகமாதர் சிறிதுநாள்
துறந்தரன்ற னருளடைந்து துணையடிக்கண் வைகினர். 36

ஆகச் செய்யுள்—1,759

---

33. புடை - பக்கம். பாயின - பரவிய. ஆயின் - ஆகிய.

34. மட்டு - தேன். அலம்பு - ததும்பும். பட்டு இசைந்த - செம் பட்டு அணிந்த. உள்+ததும்பு=உட்டதும்பு. கண்+ததும்பு=கட்டதும்பு. களி - மகிழ்ச்சி.

35. உருவிலாளி - மன்மதன். பொடித்த - நீறுக்கிய. இருவர் - பிரம விஷ்ணுக்கள். மருவிலார் - (தேடி) அறிதற்கரியவர். கருவின் மாதர் - கருப்பம் வாய்ந்த பெண்கள். பொருவு - ஒப்பு.

36. பெருமைகொண்ட பெருமிதம் - பெருமையும் அதனாற்பெற்ற களிப்பும். வீரம்-மனவலிமை. ஆற்றல்-சரீரவலிமை. திறல்-வெற்றி. மறம் - கொலைத்தொழில். துறந்து - கழிந்து.

# 33. அட்டமாசித்தி யுபதேசித்த படலம்

—o—

கொத்திலங்கு கொன்றைவேய்ந்த கூடலாதி மாடநீள்
பத்தியம்பொன் மறுகணைந்து வளைபகர்ந்த பரிசுமுன்
வைத்தியம்பி னுமி[1]யக்க மாதர்வேண்ட வட்டமா
சித்திதந்த திறமினித் தெரிந்தவாறு செப்புவாம். 1

மின்னலங்கல் வாகைவேல் விழுப்பெருங் குலத்தினிற்
றென்னவன்ற னாணைநேமி திசையெலா முருட்டுநாள்
முன்னைவைக லூழிதோறு மோங்குமொய் வரைக்கணே
மன்னு[2]தண் பராரையால நிழன்மருங்கு மறைமுதல். 2

அடுப்பமாசில் வெள்ளிவெற்பி னருகிருக்கு மரகதங்
கடுப்பவாம மிசையிருந்து கனகவெற்பன் மகளொனும்
வடுப்படாத கற்பினாண் மடித்துவெள்ளி லைச்சுருள்
கொடுப்பநேச மூறுபோக குரவனாகி வைகினான். 3

பிருங்கிநந்தி யேமுதற் பெருந்தகைக் கணத்தரும்
மருங்கிருந்த சனகனாதி மாதவத்தர் நால்வரும்
ஒருங்கிறைஞ்சி யுண்ணவுண்ண வமுதமூறு சிவகதைக்
கரும்பருந்த வாய்மலர்ந்து கருணைசெய்யு மெல்லைவாய். 4

---

1. பத்தி - வரிசை. அம்பொன் மறுகு - செல்வம் மலிந்த வீதி. இயக்கமாதர் - கந்தருவப் பெண்கள்.

2. வாகை அலங்கல் - வெற்றி மாலை. ஊழிதோறு மோங்கு மொய் வரை - திருக்கயிலாயமலை; "ஊழிதோறூழி முற்றுயர் பொன்னொடித் தான்மலையே" என்பது சுந்தரர் தேவாரம். ஆல, அ : அசை ஆல் - கல்லால விருட்சம்.

3. வாமமிசை - இடப்பாகத்திலிருந்து. கனகவெற்பு - இங்கு இமயமலை. வெள்ளிலை - வெற்றிலை. போக குரவன் - போக குரு மூர்த்தி; இஃது இறைவன் ஆன்மாக்களுக்குப் போகம் அருளுதற்கும் அனுக்கிரகம் புரிவதற்கும் கொண்டருளும் திருவுருவங்களில் ஒன்றும்.

4. சிவகதைக்கரும்பு - சிவசரித்திரமாகிய கரும்பு : உருவகம்.

பா-ம்—1 யக்கி. 2 தண்.

பௌவமூழ்கு சூர்தடிந்த பாலனுக்கு முலைகொடுத்
தெவ்வமாய வினைகடீ [1]ரியக்கமாத ரறுவருந்
தெய்வநீறு முழுதணிந்து செய்யவேணி கண்டிகைச்
சைவவேட மாதவந் தரித்துவந்து தோன்றினார். 5

மந்திரச்சி லம்பலம்பு மலரடிக்கண் வந்திசெய்
தெந்தையட்ட சித்திவேண்டு மெங்களுக்கெ னத்தொழா
அந்தளிர்க்கை யவரிரப்ப வண்ண றன் மடித்தலந்
தந்திருக்கு மாதையங்கை சுட்டியீது சாற்றுமால். 6

அலர்பசும் பொலங்கொம் பன்ன வணங்கிவ ணிறைவா லெங்கும்
மலர்பரா சத்தி யாகி மகேசையா யணிமா வாதிப்
பலர்புகழ் சித்தி யெட்டும் பணிந்துகுற் றேவல் செய்யுஞ்
சிலதிய ராகிச் சூழ்ந்து சேவகஞ் செய்ய வைகும். 7

இவளைநீர் சிந்தித் தான்முன் னீட்டிய வினையை நீக்கித்
தவலருஞ் சித்தி யெட்டுந் தருமெனக் கருணை பூத்துச்
சிவபரஞ் சோதி யெட்டுச் சித்தியுந் தெளித்தல் செய்தான்
அவரது மறந்தா ரும்மை யாழ்வினை வலத்தான் மன்னோ. 8

செழுமதிப் பிளவு வேய்ந்த தேவுமக் குற்ற நோக்கி
முழுமதி முகத்தி னாரை முனிந்துநீர் பட்ட மங்கைப்
பழுமர முதலஞ் ஞானப் பாறையாய்க் கிடமி னென்னக்
கழுமலுற் றவர்தாழ்ந் தென்று கழிவதிச் சாப மென்றார். 9

---

5. பௌவ மூழ்கு சூர் தடிந்த - கடலிற் புக்கொளித்த சூரபன்மனைக் கொன்ற. எவ்வம் - துன்பம்.

6. மந்திரம் - மந்திரவடிவாய் நிற்கும் வேதம். தன் மடித்தலந் தந்திருக்கு மாதை - தமது மடியில் வைத்திருக்கும் உமையை.

7. அணங்கு இவள் - இந்த உமாதேவியார். மலர் - வியாபித்த. மகேசை - ஆன்மாக்களுக்குப் பாகம் வருவித்துச் சிவபிரான் திருவடியிற் சேர்க்குந் திரோதாயி சத்தி. சேவகம் - குற்றேவல். சிலதியர் - தாதியர்.

8. வினை - நல்வினை தீவினை. உம்மை யாழ்வினை - பிராரத்த கன்மம்.

9. தே - கடவுள். பட்டமங்கை - பாண்டிய நாட்டின்கண் உள்ள ஒரு சிவத்தலம். பழுமர முதல் - ஆலமரத்தடியில். அஞ்ஞானப்பாறை - கருங்காற்பாறை. கழுவல் - துன்பம்.

பா-ம்—1 ரியக்கிமாத.

இப்படிக் கருங்க லாகிக் கிடத்திரா யிரம்யாண் டெல்லைக்
கப்புற மதுரை நின்று மடுத்துமைத் தொடுத்த சாபத்
துப்பற நோக்கி நுங்க டொல்லுரு நல்கிச் சித்தி
கைப்படு கனிபோற் காணக் காட்டுதும் போதி ரென்றான். 10

கொடியனார்க ளறுவரும், நெடியவானி மிர்ந்துகார்,
படியும்பட்ட மங்கையால், அடியிற்பாறை யாயினார். 11

கதிர்கலம்பெய் காட்சிபோல், உதிர்பழத்தி னுடலெலாம்,
புதைபடக் கிடந்தனர், மதரரித் தடங்கணார். 12

பருவமா யிரங்கழிந், தொருவமாட மதுரையெங்,
குரவனெண் குணத்தினான், திருவுளந் திரும்பினான். 13

தன்னதிச்சை கொண்டதோர், இன்னருட் குரவனாய்,
அந்நெடுங்க லாயினார், முன்னர்வந்து தோன்றினான். 14

இருட்டதும்பு கோதையார், மருட்டதும்பு வினைகெட,
அருட்டதும்பு கண்ணினாற், றெருட்டதும்ப நோக்கினான். 15

அடிகளேக்க வம்புயங், கடிகொணெய்தல் காந்தள்பைங்,
கொடிகொண்முல்லை குமுதமேற், படியப்பூத்த பாறையே. 16

---

10. சாபத்துப்பு - சாபத்தின் வலிமை. சித்தி - அட்டமா சித்தி. கைப்படு கனிபோல்-உள்ளங்கை நெல்லிக்கனிபோல். இங்கு, "பட்ட மங்கையிற் பாங்கா யிருந்தங் - கட்டமா சித்தி யருளிய வதுவும்" என வரும் திருவாசக அடிகள் சிந்திக்கற்பாலன.

12. கதிர்கலம் பெய் காட்சிபோல் உதிர்பழம் - (குயவர் வனைந்த) ஒளிவிடும் புதுப்பாண்டங்கள் வீழுந் தோற்றம் போலச் சொரியும் ஆலம்பழம்.

13. ஒருவ - நீங்க. எண்குணம் - தன் வயத்தனாதல், தூய வுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்று முணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை என்பன.

14. தன்னதிச்சை - இங்குச் சுதந்தரத்துவம்; அதாவது தன் வயத்தனாதல் என்ற குணம்.

15. மருள்ததும்பு வினை - அஞ்ஞானத்தால் வந்த பெருந்தீவினை; அஞ்ஞானம் நிறைதற்கேதுவாகிய தீவினையுமாம்.

16. அடிகள் - ஞானசாரியராய் எழுந்தருளிய சிவபெருமான். அம்புயம், நெய்தல், காந்தள், முல்லை, குமுதம் முதலிய உவமைகள்

தாக்கவேத கத்திரும், பாக்கமுற்ற பொன்னென,
நீக்கமற்ற விருண்மல, வீக்கமற்று விட்டதே. 17

நிறையுமன்பெ னுந்நதி, பொறையெனுங் கரைகடந்,
திறைவனின்ன ருட்கடற், றுறையின்வாய் மடுப்பவே. 18

எழுந்திறை யடிக்கணே, அழுந்துநேச மொடுதவக்,
கொழுந்தனார்க ளறுவரும், விழுந்திறைஞ்சி னாரரோ. 19

குமரற்கூட்டு மிளமுலை, உமையொப்பார்கள் சென்னிமேல்,
அமலச்சோதி யங்கையாங், கமலப்போது சூட்டினான். 20

சித்தியெட்டு மங்நலார், புத்தியிற்கொ ளுந்தவே,
கைத்தலத்தில் வைத்ததோர், முத்தெனத்தெ ருட்டுவான். 21

அணிமா மகிமா விலகிமா வரிய கரிமாப் பிராத்திமலப்,
பிணிமா சுடையோர்க் கடைவரிய பிராகா மியமீ சத்துவமெய்,
துணிமா யோகர்க் கெளியவசித் துவமென் றெட்டா மிவையுளக்
கண், மணிமா சறுத்தோர் விளையாட்டின் வகையா மவற்றின்
மரபுரைப்பாம். 22

அறவுஞ் சிறிய வுயிர்தொறுந்தான் பரம காட்டை
யணுவாய்ச்சென், றுறையுஞ் சிறுமை யணிமாவா முவரி ஞால

---

முறையே முகம், கண், கை, பல். வாய் என்ற உவமேயங்களை உணர்த்தி நின்றன ; இஃது உருவக உயர்வு நவிற்சியணியாம்.

17. வேதகம் - வேதிப்பதாகிய மருந்து ; பரிசவேதி ; இங்கே, சிவனது அருட்பார்வை. (பரிசவேதி - இழிந்த லோகங்களைப் பொன்னாக்கும் மருந்து.) இருள்மலம் - ஆணவமலம்.

18. பொறை - பொறுமை. அருள் - திருவருள். மடுத்தல் - கலத்தல்.

19. அழுந்துநேசம் - நிறைந்தபத்தி. அறுவர் - இயக்கமாதர் அறுவர்.

20. குமரன் - முருகக் கடவுள். சென்னிமேல் அங்கையாங் கமலப்போது சூட்டுதல் - சிரசில் கையை வைத்தலாகிய பரிச தீட்சை.

21. சித்தி எட்டு - அட்டமாசித்தி. அந்நலார் - அப்பெண்கள். கொளுந்த - பொருந்த. தெருட்டுதல் - தெளிவித்தல்.

22. இச்செய்யுள் அட்டமாசித்திகளின் பெயர்களைத் தொகுத்துக் கூறுகின்றது. உளக்கண் - மனத்தில். மணி - கருமை. உளக்கண் மணி - ஞானக்கண் மணியுமாம். ஈசத்துவம் ஈசிதை எனவும், வசித்துவம் வசிதை எனவும் பெயர் பெறும்.

முதன்மேலென், றறையுஞ் சிவாந்த மாரூறு முள்ளும் புறனு மகலாதே, நிறையும் பெருமை தனையன்றோ மகிமா வென்னு நிரம்பியநூல். 23

இலகு மேரு பாரம்போ லிருக்கும் யோகி தனையெடுத்தால், இலகு வான பரவணுப்போ லிருப்ப திலகி மாவாகும், இலகு வான பரவணுப்போ லிருக்கும் யோகி தனையெடுத்தால், [1]இலகு மேரு பாரமென விருப்ப தன்றோ கரிமாவாம். 24

பிலத்தி லிருந்தோ னயனுலகிற் புகுதன் மீண்டும் பிலமடைதல், பலத்தின் மிகுந்த பிராத்தியதாம் பரகா யத்தி னண்ணுதல் வான், புலத்தி னியங்க லிச்சித்த போக மனைத்துந் தானிருக்குந், தலத்தி னினைந்த படி வருதல் பிராகா மியமாந் தவக் கொடியீர். 25

விண்ணி லிரவி தன்னுடம்பின் வெயிலா லனைத்தும் விளக்கு தல்போல், மண்ணி லுளவாம் பொருள்பலவுங் கால மூன்றும் வானத்தின், கண்ணி லுளவாம் பொருளுந்தன் காயத் தொளியா லிருந்தறிதல், எண்ணி லிதுவு மறையொருசார் பிராகா மியமென் றியம்புமால். 26

ஈச னெனமுத் தொழிலுந்தன் னிச்சை வழிசெய் தெழுபுரவித், தேசன் முதற்கோள் பணிகேட்பத் திகழ்வ தீசத் துவமாகும், பூச லவுணர் புள்விலங்கு பூத மனிதர் முதலுலகும், வாச வாதி யெண்மருந்தன் வசமாக் கொள்கை வசித்துவமாம். 27

---

23. பரமகாட்டை - (சிறுமையில்) முடிவாகிய பரமாணு. காட்டை - முடிவு. ஞாலமுதல் - பிருதிவிதத்துவமுதல். சிவாந்தம் - சிவ தத்துவம் ஈருகிய.

24. இலகு - விளங்கா நின்ற. பர அணு - மிகச் சிறியது. அன்றோ - அல்லவா.

25. பிலம் - பாதலம். பரகாயம் - வேற்றுடல். வான்புலம் - விண்ணுலகம்.

26. காலம் மூன்றும் - இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்ற முக் காலங்களையும். தன்காயம் - தனது உடல்.

27. முத்தொழில் - படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத் தொழில்கள். தேசன் - ஒளியையுடையவன்; சூரியன். கோள் - கிரகம். வாசவாதி எண்மர் - இந்திரன் முதலிய திக்குப்பாலகர்.

பா-ம்—1 இலகுவான தூலமென விருப்ப. (தூலம் - பஞ்சு.)

எம்மை யுணர்ந்த யோகியர்க ளிவ்வற்றை விரும்பா ரெனினு மவர், தம்மை நிழல்போ லடைந்துலகர்க் கனையார் பெருமை தனையுணர்த்தும், செம்மை யுடைய விவையென்னச் சித்தி யெட்டுந் தெளிவெய்தக், கொம்மை முலையா ரறுவருக்குங் கொளுத்தி னனெண் குணச்செல்வன். 28

தேவதே வுபதே சித்த சித்தியைச் சிலம்பன் செல்வி
பாவனை வலத்தா னன்கு பயின்றுவான் வழிக்கொண் டேகிப்
பூவலர் கதுப்பி னல்லா ரறுவரும் புரமூன் றட்ட
காவலன் [1]விரும்பி வைகுங் கயிலைமால் வரையிற் புக்கார். 29

ஆகச் செய்யுள்—1,788

---

28. நிழல்போல் - தேகச்சாயல்போல். செம்மையுடைய நீதியையுடையன. கொம்மை - திரண்ட.

29. தேவதே - தேவாதி தேவன். சிலம்பன் - பருவத ராஜன். பாவனை - தியானம். வலம் - வன்மை. கதுப்பு - கூந்தல்.

பா-ம்—1 நிரம்பி.

# 34. விடையிலச்சினையிட்ட படலம்

— o —

சந்து சூழ்மல யச்சி லம்பர் தவம் புரிந்த வியக்கிமார்க்
கந்த நாலிரு சித்தி தந்த தறைந்த னந்தன தடிதொழா
வந்து மீள்வள வன்பொ ருட்டு வடார்து வாயி றிறந்தமைத்
திந்து சேகரன் விடையி லச்சினை யிட்ட வாறு விளம்புவாம். 1

தோடு வெட்டி மலைத்து வாள்விதிர் துணைவி யிக்குயி விள முலைக், கோடு வெட்டிய குறிகொண் மேனியர் குடிகொண் மாநகர் கடிகொள்பைங், காடு வெட்டிய கார ணக்குறி காடு வெட்டிய சோழனென், றேடு வெட்டிய வண்டு சூழ்பொழி லெயில்கொள் கச்சி யுளானவன். 2

உத்த மச்சிவ பத்த ரிற்பெரி துத்த மன்பு துவிரைகலன்
மித்தையென்றுவெ ணீறு கண்டிகை யார மென்றணி மெய்யினன்
நித்த வேத புராண மாதி நிகழ்த்தி டும்பொருள் கண்ணுதல்
அத்த னேபர தத்து வப்பொரு ளென்ற னந்தறி கேள்வியான். 3

அங்க மாறொடு வேத நான்கு மறிந்து மெய்ப்பொரு ளாய்ந்துளஞ்
சங்கை கொண்டறு தினம ரன்புகழ் சாற்று சைவ புராண நூல்
பொங்கு மின்சுவை யமுது தன்செவி வாய்தி றந்து [1]புகட்டியுண்
டெங்க ளையக னடியி னைக்க ணிருத்து மன்பு கருத்துளான். 4

மூக்க ளையகன் முப்பு ரத்தை முனிந்த நாயகன் மங்கையோர்
பக்க நாயகன் மிக்க வானவர் பரவு நாயக [2]னரவணிச்

---

1. சந்து - சந்தனமரம். வளவன் - காடுவெட்டிய சோழன். வடாது - வடக்கு. விடையிலச்சினை - இடபக்குறி.

2. மலைத்து - போர்புரிந்து. வாள்விதிர்-வாளையசைத்தால் ஒத்த. குயில் - குயில் போன்ற சொல்லையுடைய உமாதேவியார் : உவமையாகு பெயர். குறி - தழும்பு. ஏடு எட்டிய - பூவிதழ் பொருந்த.

3. புது விரை - புதிய மணமுடைய சந்தனம். மித்தை - பொய். ஆரம் - சந்தனம், முத்து.

4. மெய்ப்பொருள் - உண்மைப்பொருளாகிய சிவபெருமான். சங்கைகொண்டு - சிந்தித்தல் செய்து.

பா-ம்—1 புகட்டவுண். 2 னரவணி.

சொக்க நாயக னாடலுஞ் செவி யான்மு கந்து சுவைதருந்
தக்க பாலொடு தேன்க லந்து தருக்கி யுண்பவ னாயினான். 5

அங்க யற்கண் மடந்தை பாக னடித்த லந்தொழு மாசைமேற்
பொங்கி மிக்கெழு மன்ப னாய்மது ரேசன் மின்னு பொலங்கழற்
பங்க யப்பத மென்று நான்பணி வேனெ னப்பரி வெய்தியே
கங்கு லிற்றுயில் வான்க யற்புரை கண்ணி பங்கனை யுன்னியே. 6

அன்று செம்பியர் கோம கன்கன வின்க ணேயருள் வெள்ளிமா
மன்று ணின்றவர் சித்த ராயெதிர் வந்து மன்னவ நின்னுளத்
தொன்று மஞ்ச லொருத்த னாகி யுருத்தி ரிந்து தனித்துவந்
தின்று வந்தனை செய்து போதி யெனப்பு கன்றன ரேகினார். 7

கேட்டு வேந்தன் விழித்து ணர்ந்து கிளர்ந்த வற்புத னாகியே
ஈட்டு சேனை யமைச்சு ளார்பிறர் யாரு மின்றி வழிக்கொளீஇ
நாட்ட மூன்றவ னாம வாள்கொடு நல்ல ருட்டுணை யாய்வழி
காட்ட வன்பெனு மிவுளி மேல்கொடு கங்குல்வாய்வரு வானரோ.

கல்லு மாரழ லத்த மும்பல கலுழி யுங்குண கனைகடற்
செல்லு மாநதி பலவும் வானிமிர் கன்ன லுஞ்செறி செந்நெலும்
புல்லு மாநில னுங்க ழிந்து புறங்கி டக்க நடந்துபோய்
வல்லு மாமுலை யார்க ணம்பயில் வைகை யந்துறை யெய்தினான்.

குறுகு முன்ன ரதிர்ந்து வைகை கொதித்த கன்கரை குத்திவேர்
பறிய வன்சினை முறிய விண்டொடு பைந்த ருக்களை யுந்தியே

---

5. சொக்கநாயகன் ஆடல் - சொக்கலிங்கப்பெருமானின் திருவிளையாடல் கூறும் நூல்; ஆலாசிய மான்மியம். இது முதல் மூன்று செய்யுட்களில் கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடல் என்ற நான்கும் கூறப்பட்டுள்ளன.

6. என்று - எப்பொழுது. பரிவு - அன்பு, துன்பம். கங்குல் - இரவு. கயல் - கயல்மீன்.

7. செம்பியர் கோமகன் - காடுவெட்டிய சோழன். உருத்திரிந்து - வேற்று வடிவங்கொண்டு. போதி - போவாய்; முன்னிலைவினைமுற்று. போ : பகுதி.

8. ஈட்டு - தொகுக்கப்பட்ட. நாமவாள் கொடு - சிவநாமமாகிய வாள்கொண்டு. அருட்டுணையாய் - திருவருளே துணையாகி. அன்பு எனும் இவுளி - அன்பாகிய குதிரை.

9. அத்தம் - பாலைவனம். கலுழி - காட்டாறு. குணம் - கிழக்கு. வல் - சூதாடு கருவி. கணம் - கூட்டம்.

மறுகி வெள்ள மெடுத்த லைத்தர மன்ன வன்கறை தன்னினின்
றிறுதி யில்லவ னைத்தொ ழுற்கிடை யூறிதென் றஞ ரெய்துவான்.

இழுதொ டுஞ்சுவை யமுது பொற்கல னிட்டு ணுதிரு கண்கணீர்
வழிய வந்து விலக்கு வாரின் வளைந்த தாறு பகற்செயும்
பொழுதெ ழும்பொழு தோம றுக்கம் விளைக்கு மேயிகல் பூழியன்
வழுதி யன்றியும் வைகை யும்பகை யான தென்று [1]வருந்தினான். 11

வெள்ள நோக்கி யழுங்கு செம்பியன் மெலிவு நோக்கி விரைந் தெழீஇக், கள்ள நோக்கி லகப்ப டாதவர் கனவு போலவ னனவில்வந், துள்ள நோக்குடை யன்ப ருக்கரு ளுருவ மாகிய சித்தர்தாம், பள்ள நோக்கி வரும்பெ ரும்புனல் வற்ற நோக்கினர் பார்த்தரோ. 12

வறந்த வாறு கடந்து வந்து வடக்கு வாயிறி றந்துபோய்
நிறைந்த காவல் கடந்து வீதிக ணீந்தி நேரியர் வேந்தனைச்
சிறந்த வாடக புனித பங்கய திப்பி யப்புன லாடுவித்
தறந்த வாதறை [2]சாம கண்டர்த மால யம்புகு வித்தரோ. 13

வெம்மைசெய் [3]கதிர்கால் செம்பொன் விமானசே கரத்தின் மேய
தம்மையும் பணிவித் தெண்ணில் சராசர மனைத்து மீன்ற
அம்மையங் கயற்க ணாள மணங்கையும் பணிவித் துள்ளஞ்
செம்மைசெய் தின்ப வெள்ளத் தழுத்தினார் சித்த சாமி. 14

---

10 அலைதர - அலைக்க. மன்னவன் - சோழன். இறுதியில்லவன் - ஈறில்லா இறைவன். அஞர் - துன்பம்.

11. ஆறு வளைந்தது - ஆறு தடுத்தது. இழுது - நெய். பகல் செய்யும் பொழுது - பகற்காலத்தை உண்டாக்கும் சூரியன். மறுக்கம் - பெருந்துன்பம்.

12. கள்ள நோக்கில் - ஊனக்கண்ணாகிய புறப்பார்வையில், நனவு - சாக்கிரம்: விழிப்பு. உள்ள நோக்கு - ஞானக்கண்ணாகிய அகப்பார்வை.

13. வீதிகள் நீந்தி - வீதிகளைத்தாண்டி. நேரியர் - சோழர். நேரி, இது சோழனுக்குரிய தோர்மலை. திப்பியம் - திவ்வியம்; இனிமை. அறந் தவா தறை சாம கண்டர் - அறத்தினைப் பிறழாது கூறும் சாமகானஞ்செய்யும் இறைவர்.

14. பொன் விமான சேகரம் - பொன்னாற்செய்த விமானங்களுக்குச் சிரத்தானம் போன்ற இந்திரவிமானம். உள்ளம் செம்மை செய்து - சித்தத்தைச் சுத்திசெய்து.

பா-ம்—1 வருந்துவான். 2 காளகண்டர்த. 3 கதிர்காய்.

எண்ணிய வெண்ணி யாங்கே யான்பெற முடித்தாய் போற்றி
பண்ணியன் மறைக டேறுப் பான்மொழி மணாள போற்றி
புண்ணியர் தமக்கு வேதப் பொருளுரை பொருளே போற்றி
விண்ணிழி விமான மேய சுந்தர விடங்க போற்றி. 15

எவ்வுட லெடுத்தேன் மேனு ளெண்ணிலாப் பிறவி தோறும்
அவ்வுட லெல்லாம் பாவ மறம்பொருட் டாக வன்றே
தெவ்வுடல் பொடித்தா யுன்றன் சேவடிக் கடிமை பூண்ட
இவ்வுட லொன்றே யன்றோ வெனக்குட லான தையா. 16

இன்னன பலவு மேத்தி யிறைஞ்சிப்பல் வரமும் வேண்டும்
மின்னகு வேலி னானை வேந்தநீ போந்த வண்ணந்
தென்னவ னறிந்தா லேதஞ் செய்யுமென் றூர்த்தார்க் கண்ணி
மன்னனைச் சித்த சாமி யுத்தர வழிக்கொண் டேகா. 17

மண்ணினை வளர்க்கும் வைகை வடகரை யளவு நண்ணிப்
புண்ணிய நீற்றுக் காப்புப் புண்டர நுதலிற் சாத்தி
உண்ணிறை கருத்துக் கேற்ப வுறுதுணை யுனக்குண் டாகி
நண்ணுக வென்று பொன்னி நாடனை விடுத்து மீண்டு. 18

காப்புச் [1]செய்து கதவில் விடைக்குறி
யாப்புச் செய்தமைத் தீர்ஞ்சடைச் சித்தர்போய்த்
தூப்புக் கைவரை சூழ்வட மேருவிற்
கோப்புச் செய்தபொற் கோயிலின் மேயினார். 19

---

15. புண்ணியர் - கண்ணுவர் முதலிய முனிவர்கள். உரை - (விரித்து) உரைத்தருளிய.

16. அறம் பாவம் - புண்ணிய பாவங்கள். தெவ் - பகை ; இங்குப் பகைவனாகிய மன்மதன்.

17. ஆர் - ஆத்தி. உத்தரவழி - வடக்கு வாசல் வழி. ஏகா - சென்று.

18. மண் - உயிர்கள் : இடவாகுபெயர். புண்ணிய நீறு - புண்ணிய வடிவாகிய விபூதி ; இது பாசத்தைப்போக்கும் பெருங்காப்பு ; முத்தியையளிப்பதுமாம்.

19. காப்புச் செய்து - முன் திறந்த கதவினைச் சாத்தி. விடைக் குறி - இடப முத்திரை. தூப்புக் கைவரை - துளை பொருந்தி துதிக் கையையுடைய யானைகள். தூப்பு - தூம்பு - துளை : வலித்தல். மேருவின் கோப்புச் செய்த - மேருமலைபோல இயற்றிய.

பா-ம்—1 செய்த.

கங்குலின்கருங் கைகுறைப் பானெனச்
செங்கை நீட்டித் தினகரன் றோன்றலும்
எங்க ளுயக னிட்ட குறியறிந்
தங்கண் வாயி றிறப்பவ ரையுறா. 20

மற்றை வாயில்கண் மூன்றினும் வல்லைபோய்
உற்று நோக்கினர் தாநென்ன லொற்றிய
கொற்ற மீனக் குறியிழை யாமைகண்
டெற்றி தாங்கொலென் றேந்தன்மு னெய்தினார். 21

போற்றி மன்னநம் பொன்னங் கயற்குறி
மாற்றி யுத்தர வாயிற் கதவதில்
ஏற்றி லச்சினை யிட்டனர் யாரையென்
றாற்றல் வேந்த வறிகிலம் யாமென்றார். 22

வைகை நாடனும் வந்தது நோக்குறீஇ
ஐய வின்னதோ ரற்புத மாயையைச்
செய்ய வல்லவர் யாரெனத் தேர்கிலான்
ஐய மெய்தி யகன்மனை நண்ணினான். 23

மறுத்த வுண்டியன் மாமலர்ப் பாயலை
வெறுத்த கன்றரை மேற்பள்ளி கொள்ளவும்
பொறுத்த னன்றுயின் றானிருட் போழ்தினிற்
கறுத்த கண்டர் கனவினிற் கூறுவார். 24

மட்ட லம்பிய தாதகி மாலையான்
உட்ட தும்பி யொழுகிய வன்பினாற்
கட்டி லங்கெயிற் கச்சியிற் காடெலாம்
வெட்டி நம்புடை வித்திய பத்தியான். 25

---

20. கங்குலின் கருங்கை - இராக்காலமாகிய பெண்ணின் கருநிறமாகிய கை. செங்கை - சிவந்த கைகள்; கிரணங்கள். தினகரன் - சூரியன்.

21. நென்னல் ஒற்றிய - நேற்று வைத்த. ஏந்தல் - பாண்டியன்.

22. கதவதில் - கதவில்; அது: பகுதிப்பொருள் விகுதி. யாரை, ஐ: சாரியை.

23. நோக்குறீஇ - பார்த்து. ஐய - வியப்பினையுடைய.

24. மலர்ப்பாயல் - பூவணை. பொறுத்தனன் - (துன்பங்களைப்) பொறுத்து; முற்றெச்சம்.

25. தாதகி மாலை - ஆத்தி மாலை. கட்டிலங்கு - காவலாக விளங்கும். காடெலாம் வெட்டிக் கட்டு இலங்கு எயில் என்க.

வந்து நம்மை வழிபட வேண்டினான்
இந்த வாயி றிறந்தழைத் தின்னருள்
தந்து மீள விடுத்துப்பின் றாட்கொளீஇ
நந்த மால்விடை நாம்பொறித் தேமெனா. 26

அருளி னானையந் தேற்றி யகன்றபின்
மருளி னீங்கி மலர்க்கண் விழித்தெழீஇ
வெருளி னான்வெயர்த் தான்விம்மி னான்பல
பொருளி னாற்றுதித் தான்குல பூடணன். 27

வள்ள லன்புக் கெளிவந்த மாண்புகண்
டுள்ள வுள்ளமின் றாற்றெழு மற்புத
வெள்ள மும்பர மானந்த வெள்ளமும்
கொள்ளை கொண்டுதன் கோமனை நீங்கினான். 28

அளிய ருமனத் தன்புடை யன்பருக்
கெளிய ராடலை யார்க்கும் வெளிப்படத்
தெளியு மாறு தெளிவித்துத் தன்னைப்போல்
விளிவி லாவின்ப வெள்ளத் தழுத்தினான். 29

கோடாத செங்கோலும் வெண்குடையுங் கோமுடியும்
ஏடா ரலங்க விராசேந் திரற்களித்துத்
தோடா ரிதழியான் றாட்கமலஞ் சூடிவான்
நாடா ளரசுரிமை பெற்றா னரபதியே. 30

ஆகச் செய்யுள்—1,818

---

26. இந்த வாயில் - இந்த வடக்கு வாயில். தாள் கொளீஇ - தாழிறுக்கி.

27. அருளினான் - அருளையுடைய சோமசுந்தரக் கடவுள், அருளையுடைய பாண்டியன், அருளிச் செய்து என்றலுமாம். மருளினீங்கி - அவ்வையத்தினீங்கி. நித்திரையினீங்கி. வெருளினான் - அச்சத்தையுடையவனாய். விம்மினான் - கண்டம் விம்மி, உடம்பு பூரித்து: முற்றெச்சம். பொருள் - பொருளையுடைய சொற்கள், பாக்கள்.

28. அற்புத வெள்ளம் - அதிசயப்பெருக்கம், சிவஞானப் பெருக்கம். ஆனந்த வெள்ளம் - சிவபோகப் பெருக்கம்.

29. அளி - சாந்தம். இன்பவெள்ளம் - பேரின்ப வெள்ளம்.

30. இதழியான் - கொன்றை மாலையணிந்த சோமசுந்தரக் கடவுள்.

# 35. [1]தண்ணீர்ப்பந்தல் வைத்த படலம்

—o—

சம்பு மதுரைப் பரனிரவு தனியே வந்து தனைப்பணிந்த, வெம்பு கதிரோன் மருமானை விடுத்து மீண்டு தாழிறுக்கி, அம் பொற் கதவின் விடைபொறித்த தறைந்துந் தென்ன னடு படைக்கு, வம்பு மலர்தோய் புனற்பந்தர் வைத்துக் காத்த வகை சொல்வாம். 1

தென்ன னரச புரந்தரன்கோல் செலுத்து நாளிற் காடெ றிந்த, மன்னன் பின்னர் வெளிப்படையாப் போந்து போந்து மது ரேசன், பொன்னங் கமலத் தாள்வணங்கிப் போவான் முன்னிப் பொரும்பொருளைக், கன்னி நாடன் கேண்மைபெற விடுத்தான் வரிசைக் கையுறையே. 2

பொன்னி நாடன் வரவிடுத்த பொலம்பூ ணுடை முதற் பிறவுங், கன்னி நாடன் கைகவர்ந்து தானுங் கலக்குந் தொடர் பினால், உன்னி வேறு கையுறையுய்த் துறவு செய்ய வுவப்பெய் திச், சென்னி காதன் மகட்கொடுப்பா னிசைந்தா னந்தச் செழி யற்கு. 3

செழியன் றனக்கு வரையறுத்த செய்தி கேட்டுச் செம்பியர் கோன், கழியன் புடைய குலமகளைத் தான்போய்க் கொள்வான் கருதிமதி. வழிவந் தவற்குத் தம்பியென வந்த வரச சிங்கமெனும், பழியஞ் சாதான் வஞ்சித்துப் பழனக் காஞ்சிப் பதிபுகுவான். 4

காஞ்சிப் பதிமுன் குறுகுமிளங் காவ லோனைக் கடற்சேனை, தாஞ்சுற் றியவந் தெதிர்கொடுபோய்த் தன்முன் றனக்கென் றிருந்

---

1. கதிரோன் மருமான் - சோழன். வம்பு மலர் தோய் புனல் - வாசனை பொருந்திய கொன்றைப் பூவைத் தோய்ந்த கங்காசலம்.

2. அரச புரந்தரன் - இராசேந்திரன். கையுறை - கைப்பொருள்.

3. பொன்னி - காவிரி. கைகவர்ந்து-ஏற்றுக்கொண்டு. சென்னி - சோழன்.

4. மதிவழி வந்த அவர்க்குத் தம்பி எனப்பிரிக்க. அரச சிங்கம் - இராச சிம்மன்.

பா - ம்—1 தண்ணீர்ப் பந்தர்.

தமகள், ஆஞ்சிற் றிடையை மணம்புணர்த்தி யந்த மருகற் கரசு நிலை, வாஞ்சித் தரச புரந்தரனைப் பிடிக்க மதித்தான் வனமெறிந் தான். 5

மருமகன்ற னுடனெழுந்து மாமனான வளவர்கோன்
பொருமகன்ற சேனையானை புடைநெருங்க மதிவழித்
திருமகன்றன் மேலமர்த் திறங்குறித்து முரசறைந்
துருமகன்ற பல்லியம் மொலிப்பவந்து ளானரோ. 6

திரண்டதிர்ந் தெழுந்துவந்த சென்னிசேனை தன்னகர்க்
கிரண்டுயோ சனைப்புறத் திறுக்குமுன்ன ரொற்றரால்
தெருண்டு தென்னன் மாடநீடு கூடன்மேய சிவனதாள்
சரண்புகுந்து வேண்டுகின்று சார்ந்துதாழ்ந்து கூறுவான். 7

அன்றுபாதி யிரவில்வந்து னடிபணிந்து தமியனைச்
சென்றசென்னி யென்னுமின்ன திருவடிக்க ணன்பினான்
[1]இன்றுமந் நிலையனு யெனக்குவேண்டு வானவிடுத்
தொன்று கேண்மை புரிகுவா னுளத்தி லொன்றை யுன்னினான். 8

அறத்தினுக்கு ளாகியன்று நின்றநீ யவன்செயும்
மறத்தினுக்கு ளாகியின்று வன்மைசெய்வ தேயறப்
புறத்தினார் புரம்பொடித்த புண்ணியா வெனக்கரைந்
துறைத்துவேண்டி னனவேலை யும்பர்நாத னருளினால். 9

மெய்துறந்த வாய்மையொன்று விண்ணினின்று மண்ணவே
இதுநுங்கள் [2]சேனையேனு மாகவத்து நாளைநீ

---

5. தன் - இங்கு இராசசிம்மன். முன் - இங்கு அவன் தமையனாகிய இராசேந்திரன். அரச புரந்தரன் - இராசேந்திர பாண்டியன். வனம் எறிந்தான் - காடு வெட்டிய சோழன்.

6. மதிவழித்திருமகன் - பாண்டியன். உரும் அகன்ற - இடியும் அஞ்சி அகலுதற்கேதுவாகிய.

7. தெருண்டு - அறிந்து. சிவனதாள் - சிவனுடைய திருவடிகள். சார்ந்து - சென்று.

8 அன்று - அன்றொருநாள். தமியனைய் - தனியனைய். சென்னி என்னும் - காடு வெட்டிய சோழன் என்கின்ற.

9. அறப்புறத்தினார் புரம் - அறத்திற்கு வேறாகிய பாவத்தினை யுடையோரது திரிபுரம். உறைத்து - வலிந்து.

பா-ம்—1 என்றுமந். 2 சேனையோடு.

எய்திவந்த தெவ்வரோ டெதிர்ந்துருத்து நின்றுபோர்
செய்திவென்றி நின்னதாதல் செய்துமென் றெழுந்ததால்.

காயவாணி செவிநுழைந்த காலவேந்த ரிந்திரன்
நாயனு ரடிக்கணே நயந்தவன்பு முவகையும்
ஆயவேலை வீழ்ந்துதாழ்ந் தகன்றுதன் னிருக்கைபோய்
மேயினு னிமிர்ந்தகங்குல் விடியுமெல்லை நோக்குவான். 11

கழித்தகங்கு லிறவிசும்பு கண்விழிக்கு முன்னரே
விழித்தெழுந்து சந்தியாதி வினைமுடித்து வானநீர்
சுழித்தலம்பு வேணியண்ண றாயபூசை செய்தெழீஇத்
தெழித்தெழுந்த சேனையோடு செருநிலத்தை நண்ணினுன்.

அலைசிறந்த சலதிமீதொ ராறுசெல்லு மாறுபோல்
மலைசிறந்த நேரிவெற்பன் மள்ளர்சேனை வெள்ளமேற்
கலைசிறந்த மதிநிறைந்த கன்னிநாடு காவலான்
சிலைசிறந்த சிறியசேனை சென்றலைத்து நின்றதே. 13

உருமுவன்ன குரலினு ருலவையன்ன செலவினுர்
வெருவுதீயின் வெகுளியார் வெடித்தவீர நகையினுர்
செருவின்மான வணியினுர் சினைஇமடித்த வாயினுர்
இருவர்சேனை மள்ளரும் மெதிர்ந்துகை கலந்தனர். 14

மன்றலந் தெரியனேரி மலையவன் றமர்க்கெலாந்
தென்றலம் பொருப்பினுன் றிரண்டநான்கு கருவியும்

---

10. மெய்துறந்த வாய்மை - அசரீரி. நும் சேனை ஐது எனும் - உம்முடைய படை அற்பமாயினும். நுங்கள், கள் : அசை. ஆகவம் - போர்க்களம்.

11. காயவாணி - ஆகாயவாணி, அசரீரி; காயம் - ஆகாயம் : முதற்குறை. வேந்தர் இந்திரன் - இராசேந்திரன்.

12. கழித்த கங்குல் - மிக்க இராப்பொழுது. (கழிதல் - மிகுதல்.) கண் (உலகத்திற்குக் கண்போன்றவன்) சூரியன்: உவமையாகுபெயர். வானநீர் - கங்கைநீர். தெழித்து - ஆரவாரித்து.

13. நேரி வெற்பன் - சோழன். கலை - அறுபத்துநான்கு கலை அறிவு. சிலை - வில்.

14. உலவை - காற்று. வெருவு - அச்சம். சினைஇ - கோபித்து.

15. நான்கு கருவியும் - நால்வகைச் சேனைகளும். உருத்து - உருக்கொண்டு.

மின்றயங்கு செய்யவேணி விடையவன்ற னருளினால்
ஒன்றனந்த மாகவந் துருத்தெதிர்ந்து தோன்றுமால். 15

தேரினோதை கந்துகஞ் சிரிக்குமோதை சொரிமதக்
காரினோதை பேரியங் கறங்குமோதை மறவர்தம்
போரினோதை வீரர்தோள் புடைக்குமோதை யோடுமுந்
நீரினோதை யொன்றெனக் கலங்கொதொடுங்கி நின்றதே. 16

சிலைபயின்ற வீரரோடு சிலைபயின்ற வீரரே
கலைபயின்ற வாளரோடு கலைபயின்ற வாளரே
கொலைபயின்ற வேலரோடு கொலைபயின்ற வேலரே
மலைபயின்ற மல்லரோடு மலைபயின்ற மல்லரே. 17

கரியுகைத்த பாகரோடு கரியுகைத்த பாகரே
பரியுகைத்த மறவரோடு பரியுகைத்த மறவரே
கிரியுகைத்த வலவரோடு கிரியுகைத்த வலவரே
எரியுகைத் தெதிர்ந்தகா லெனக்கலந்து மலைவரால். 18

விடுக்கும்வாளி யெதிர்பிழைப்பர் வெய்யவாளி யெய்துபின்
தொடுக்கும்வாளி வில்லொடுந் துணிப்பர்பின் கணிப்பற
மடுக்கும்வாளி மார்புதைப்ப வாங்கிமற்றவ் வாளிகொண்
டடுக்குமேவ லாரையெய் தடர்ப்பர்கிள்ளி மள்ளரே. 19

சோனைமாரி யிற்சரஞ் சொரிந்துநின்று துள்ளுவார்
ஆனவாளி யெதிர்பிழைத் தொதுங்கிநின் றழற்சரங்
கூனல்வாளி சிலையிறத் தொடுத்தெறிந்து கூவுவார்
மீனகேத னத்துவேந்தன் வீரர்சென்னி வீரர்மேல். 20

தறிந்ததா டகர்ந்தசென்னி தரையுருண்ட வரையெனச்
செறிந்ததோள் சரிந்ததேர் சிதைந்தபல் படைக்கலம்

---

16. கந்துகம் - குதிரை. சிரிக்கும் - கனைக்கும். சொரிமதக்கார் - மதஞ்சொரியும் யானைகள். ஒன்றென - அற்பம் என்று சொல்ல.

17. கலை - சாஸ்திர நூல்; ஆயுத சாஸ்திரம். மலை - மற்போர், மல்: பகுதிப் பொருள்.

18. கிரி - மலைபோன்றதேர். எரியுகைத்து - நெருப்பினை மூட்டி. கால் என - பெருங்காற்றைப்போல.

19. கணிப்பு - அளவு. மடுக்கும் - செலுத்தும். மேவலார் பகைவர். கிள்ளி - சோழன்.

20. கூனல் சிலை - வளைந்த வில். மீனகேதனம் - மீனக்கொடி.

முறிந்தயானை கையிரு முழங்கிவீழ்ந்த செம்புனல்
பறிந்தபாறு பாரிடங்கள் பைத்தகூளி மொய்த்தவே. 21

மடலினீடு தாரலங்கன் மன்னர்சேனை யின்னவா
றுடலினீழ லடியகத் தொடுங்கவும்ப ருச்சியிற்
கடலினீடு கதிர்பரப்பு கடவுளெய்து மளவுநின்
றடலினீடி யிடைவிடாம லமருழந்த தாலரோ. 22

அந்தநா ளனைத்தையும் மழிக்கநின்ற வரனுதற்
சிந்துதீ யெனக்கனன் றுருத்துநின்று தெறுதலால்
எந்தயாறு மறவறப்ப விம்பரன்றி யும்பரும்
வெந்துவான யாறும்வற்ற வேனில்வந் திறுத்ததால். 23

மண்பிளந்து பிலநுழைந்து வரைபிளந்து நிரையவாய்
எண்பிளந்து நின்றபொங்க ரிலையுகப் பிளந்துமேல்
விண்பிளந்து பரிதிநீடு வெங்கரங்கள் யாரையுங்
கண்பிளந் தழன்றுவிசு கானலெங்கு மானதே. 24

ஆயிடை யலகைத் தேரு மடைந்தவர் வெயர்வு மன்றித்
தூயநீ ரறந்த வந்தச் சுடுபுலந் தோய்ந்த காலும்
மீயுயர் மதிநி லாவும் வெய்யவாய்ச் சுடுநல் லோருந்
தீயவர் தம்மைச் சேர்ந்தாற் றீயவ ராவ ரன்றே. 25

விளைமதஊற்று மாறி வெகுளியுஞ் செருக்கு மாறித்
துளையுடைக் கைம்மான் றூங்கு நடையவாய்ச் சாம்பிச்சோர்ந்த
உளர்தரு மூழிக் காலி னேடுவாம் புரவி யெய்த்துத்
தளர்நடை யுடைய வாகித் தைவரு தென்றல் போன்ற. 26

---

21. தறிந்த - முறிந்தன. தகர்ந்த - அறுபட்ட. பறிந்த - பரவின, ஓடிய. பாறு - பருந்து. பைத்தகூளி - கரிய பேய்கள்.

22. உடலின் நீழல் அடி அகத்து ஒடுங்க - உச்சிப்போதில் தேக நிழல் காற்கீழ்த்தங்கி நிற்க. கதிர் பரப்பு கடவுள் - சூரியன்.

23. அந்தம்நாள் - முடிவாகும் நாள். அறவறப்ப - முற்றிலும் வற்ற.

24. நிரைய வாய் - ஒழுங்குபட்டனவாய். எண் - அளவு, மணம். பொங்கர் - சோலை. நிரையவாய் நின்ற பொங்கர் என்க. வெங்கரங்கள் - வெம்மையான கிரணங்கள்.

25. அலகைத்தேர் - பேய்த்தேர் - கானல்நீர். புலம் — நிலம்.

26. தூங்குநடை - மந்தநடை. தைவரு தென்றல் - இளந் தென்றல்; தைவரல் - மெத்தென இயங்கல்.

கானலந் தேர்மேற் சூறைக் காலெனும் பாகன் றூண்ட
வேனில்வேந் தேறிச் சீறி வெப்பமாம் படைகள் வீச
மாநிலங் காவல் பூண்ட [1]மன்னவ ரிருவர் தங்கள்
தானையு முடைந்து தண்ணீர் நசைசுடச் சாம்பிற் றன்றே. 27

இரக்கமில் கொடிய செல்வர் மருங்குபோ யிரப்பார் போல
உருப்பமொண் டிறைக்குங் கள்ளி நீழல்புக் கொதுங்கு வாருந்
தருக்கற விரப்பா லெய்த்தோர் தம்மினும் வறியர் பாற்சென்
றிரப்பபோ லிலைதீந் துக்க மரநிழ லெய்து வாரும். 28

கொல்லிபம் பரிமான் றேரின் குறுநிழ லொதுங்கு வாரும்
அல்லிருள் வட்டத் தோல்வெண் கவிகையு ளடங்கு வாருஞ்
செல்லிடம் பிறிது காணார் விரவான் சென்றோர் நின்ற
[2]கல்லுட னிழல்சேர் வாரு மாயினார் களம ரெல்லாம். 29

ஆயதோ ரமையந் தன்னி லளவிலா வுயிர்க்கு மீன்ற
தாயனார் துலைபோல் யார்க்குஞ் சமநிலை யாய கூடல்
நாயனார் செழியன் றானை நனந்தலை வேத நாற்காற்
பாயதோர் தண்ணீர்ப் பந்தர் பரப்பியப் பந்தர் நாப்பண். 30

புண்டர நுதலுங் காதின் புறத்தணி மலரும் பாத
முண்டக மலர்மே லொற்றைக் கிண்கிணி முழக்குங் கச்சியாப்
புண்டதோ லுடையுங் கண்டோ ருள்ளமுங் கண்ணுங் கொள்ளை
கொண்டபுன் னகையு முள்ளக் கருணையின் குறிப்புந் தோன்ற. 31

---

27. சூறைக்கால் - சூறைக்காற்று. மன்னவர் இருவர் - சோழ பாண்டியர். நசை - விருப்பம். சுட - வருத்த.

28. உருப்பம் - வெப்பம். மொண்டு - முகந்து. இரப்பால் எய்த்தோர் - வறுமையால் இளைத்தோர்.

29. நின்றகல் - இறந்தோர்க்கு நிறுத்தப்படும் கல், நடுகல்; இது போர்க்களத்தில் புறங்கொடாது பொருது உயிர் துறந்த வீரரது போர்த்திறத்தை எழுதி அவர் பெயரால் அங்கே நாட்டப்பட்ட கல். களமர் - சேனைவீரர்.

30. நனந்தலை - நடுவில். நாற்கால் பாயது - நான்கு கால்களாக நிலைபெற்ற. பந்தர் - பந்தல்: கடைப்போலி.

31. கச்சு - பொன்னாற்செய்த அரைக்கச்சு. கச்சு+யாப்பு =கச்சியாப்பு. தோல் - புலித்தோல்.

பா-ம்—1 மானவ ரிருவர். (மானம் - பெருமை.) 2 கல்லிடைசேர்.

அருமறை யகத்து ணின்றுங் கருந்தவ ராகி வேணிப்
பொருபுனல் பூரித்.தாங்கோர் புண்ணியச் சிரகந் தாங்கி
ஒருவருக் கொன்றே யாகி யிலக்கருக் கிலக்க மாகித்
தருகுறும் புழையால் வாக்கித் தணித்தனர் தண்ணீர்த் தாகம். 32

சுந்தரப் புத்தேள் வைத்த துறுமலர் வாசத் தெண்ணீர்ப்
பந்தர்புக் கடைந்து நன்னீர் பருகியெய்ப் பகல வாற்றல்
வந்தபின் செழியன் றன்னோர் வளவன்மே லேறிச் சீறி
அந்தமி லனிகஞ் சிந்தித் தும்பைவேய்ந் தடுபோர் செய்தார்.

கடலுடைந் தென்னப் பொன்னி காவலன் றானை சாய
மடலுடை வாகை வேய்ந்து வளவனை மருக னோடும்
மிடலுடைத் தறுகட் சேனை வீரர்வெங் கையாற் பற்றி
அடலுடைக் கன்னி நாடர்க் கரசன்முன் கொண்டு போந்தார். 34

கொடுவந்த வளவன் றன்னைக் கோப்பெருஞ் செழியர் கோமான், வடுவந்த தம்பி யோடு மாடநீள் கூடன் மேய, கடு வந்த மிடற்றார் முன்போய் விடுத்தெந்தை கருத்தியா தென்ன. நடுவந்த நிலையான் கேட்ப நாயக னிகழ்த்து மன்றே. 35

அறவனீ யல்லை யோவுன் னகத்தினுக் கிசைந்த செய்கென், றிறைவன தருளால் வானின் றெழுமொழி கேட்டு வைகைத்,

---

32. புண்ணியச் சிரகம் - பரிசுத்தமான கமண்டலம். ஒருவருக்கு ஒரு தாரையாகவும் இலட்சம் பேருக்கு இலட்சம் தாரையாகவும் நீரைத் தரும் சிறு துவாரம் என்க. இலக்கருக்கு - இலட்சம் பேருக்கு. குறும் புழை - சிறு துவாரம்.

33. நன்னீர் - இனிமையான கங்காசலம். நன்மை - இனிமை. தும்பை - தும்பைமாலை. இது போர்செய்தற்குரிய அடையாள மாலை.

34. வாகை - வாகைமாலை; இது வெற்றி பூண்டோர் அணியும் மாலை. வளவனை மருகனோடும் - சோழனை அவன் மருகனாகிய இராச சிங்கனோடும். மிடல் - வலிமை.

35. வடுவந்த தம்பி - (தம் குடிக்கு) வடுவாகத் தோன்றிய தம்பி. இங்கு வடு என்பது தமையனுக்கு என்று இருந்த பெண்ணை மணந்து கொண்டதும், தமையன்மீது போருக்கு வந்ததுமாகிய குற்றம். கடு வந்த - விஷம் பொருந்திய.

36. அறவன் - தருமநெறியில் தவறாதவன். சோழனை - சோழனுக்கு: உருபுமயக்கம். மால் - பெரிய. வழங்கி விடுத்தது ஐந்து தினத்தின் பின்னர் என்க.

துறைவனு மறத்தி னூற்றுற் சோழனைச் சிலமால் யானை, மற
வயப் பரிபூண் மற்றும் வழங்கினன் விடுத்தான் பின்னர். 36

வள்ளறன் றம்பி யென்னு மன்னவர் சிங்கந் தன்னைத், தள்ள
ருந் தறுக ணண்மைத் தருக்கறத் தானுள் செல்வம், உள்ளன
சிறிது மாற்றி யொதுக்கியெவ் வுயிர்க்குந் தாயாய்ப், பள்ளநீ
ரகலங் காத்துப் பல்வளம் பழுக்க வாழ்ந்தான். 37

ஆகச் செய்யுள்—1,855

---

37. வள்ளல் - இங்கு இராசசேகர பாண்டியன். தானுள் செல்வம் - தான் ஆளும் நிலம் முதலிய பொருள்கள்.

# 36. இரசவாதஞ் செய்தபடலம்

—o—

வரதன் மீனவன் படையிடை வந்துநீர்ப் பந்தர்
விரத னாகிநீ ரருத்திய வினையுரை செய்தும்
பரத நூலிய னாடகப் பாவையா ளொருத்திக்
கிரத வாதஞ்செய் தருளிய வாடலை யிசைப்பாம். 1

பருங்கை மால்வரைப் பூழியன் பைந்தமிழ் நாட்டின்
இரங்கு தெண்டிரைக் கரங்களா லீர்ம்புனல் வைகை
மருங்கி னந்தன மலர்ந்தபன் மலர்கடூஉய்ப் பணியப்
புரங்க டந்தவ னிருப்பது பூவண நகரம். 2

எண்ணி லங்குறை சராசர மிலிங்கமென் றெண்ணி
விண்ணி னாள்களும் கோள்களும் விலங்குவ தியாக்கைக்
கண்ணி னான்கதிர் முதற்பல கடவுளர் பூசை
பண்ணி வேண்டிய நல்வர மடைந்ததப் பதியில். 3

கிளியு ளார்பொழிற் பூவணக் கிழவர்தங் கோயிற்
றளியு ளார்தவப் பேறனா டாதுகு பூந்தார்
அளியு ளார்குழ லணங்கனா ளந்தரத் தவர்க்குங்
களியு [1]ளார்தர மயக்குறூஉங் கடலமு தனையாள். 4

நரம்பி னேழிசை யாழிசைப் பாடலு நடநூல்
விரம்பு மாடலும் பெண்ணல நீர்மையும் பிறவும்

---

1. வரதன் - வேண்டுவகொடுப்போன். நீர்ப்பந்தர் விரதன் - தண்ணீர்ப்பந்தல் வைக்கும் முனிவன். இரசவாதம் - தாழ்ந்த உலோகங்களைப் பொன்னாக்குதல்.

2. பூழியன் - இங்கு இராசேந்திரன். நந்தனம் - நந்தவனம். பூவணம் - பாண்டி நாட்டிலுள்ள ஒரு சிவத்தலம்.

3. சர+அசரம்=சராசரம். சரம்-இயங்கியற்பொருள் ; சங்கமம். அசரம் - நிலையியற் பொருள் ; தாவரம். விலங்குவது - செல்லப்பெறுவது. யாக்கைக்கண்ணினான் - இந்திரன். கதிர் - சூரியன்.

4. கிளியுளார் பொழில் - கிளிகள் உள்ளே நிறைந்து வாழும் சோலை. கோயிற்றளியுளார் - கோயிலிற் பணிபுரியும் உருத்திரகணிகையர். அளி - வண்டு.

பா-ம்—1 ளார்தரப் பயங்குறூஉங் (பயத்தல் - கொடுத்தல்.)

அரம்பை மாதரை யொத்தன ளறனெறி யொழுகும்
வரம்பி னுலவர் தமக்குமே லாயினுண் மன்னோ. 5

ஆய மாதர்பேர் பொன்னனை யாளென்ப வவடன்
நேய வாயமோ டிரவிரு ணீங்குமு னெழுந்து
தூய நீர்குடைந் துயிர்புரை சுடர்மதிக் கண்ணி
நாய னாரடி யருச்சனை நியமமு நடாத்தி. 6

திருத்தர் பூவண வாணரைச் சேவித்துச் சுத்த
நிருத்த மாடிவந் தடியரைப் பொருளென நினையுங்
கருத்த ளாயருச் சித்தவர் களிப்பவின் சுவையூண்
அருத்தி யெஞ்சிய தருந்துவா ளஃதவ ணியமம். 7

மாத ரிந்நெறி வழங்குநாண் மற்றவ ளன்பைப்
பூத லத்திடைத் தெருட்டுவான் பொன்மலை வல்லி
காத னாயகன் றிருவுருக் காணிய வுள்ளத்
தாத ரங்கொடுத் தருளினார் பூவணத் தையர். 8

ஐயர் தந்தபே ரன்புரு வாயினுண் மழுமான்
கையர் தந்திரு வுருவினைக் கருவினாற் கண்டு
மைய கண்ணினாள் வைகலும் வருபொரு ளெல்லாம்
பொய்யி லன்புகொண் டன்பர்தம் பூசையி னேர்வாள். 9

---

5. ஏழிசை - குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன. யாழிசைப்பாடல் - யாழிசை போலுங் கண்டப்பாடல். பிறவும் என்றது அடைந்தார்க்கு இன்பங்கொடுத்தல், இனியன மொழிதல் முதலியன. அரம்பைமாதர் - அரம்பை, ஊர்வசி, மேனகை முதலியோர். அறன் - சிவபுண்ணியம்.

6. நேய ஆயம் - தோழியர் கூட்டம். நீர்குடைந்து - ஸ்நானம் செய்து.

7. திருத்தர் - புனிதமுடையவர். சுத்த நிருத்தம் - சொக்க நடனம்; நிருத்தாங்கங்களாகிய மத்தள முதலியனவின்றிச் செய்யப் படும் நிருத்தமுமாம். பொருள் - பரம்பொருள்.

8. வழங்கும் - ஒழுகும். திருஉருக் காணிய - திருமேனியைச் சமைக்க. ஆதரம் - விருப்பம்.

9. கருவினாற்கண்டு - கருக்கட்டி, மெழுகினால் உருவமைத்து. தாயர் கருவால் பிள்ளை உரு நிரம்புதல்போலக் கம்மியர் கருவால் உலோகவுரு நிரம்புதலின் அதுவும், 'கரு' எனப்பட்டது.

அடியர் பூசனைக் கன்றியெஞ் சாமையா லடிகள்
வடிவு காண்பதெப் படியென்று [1]மடியிலச் செழியற்
கொடிவில் பொற்கிழி நல்கிய வள்ளலை யுன்னிப்
பிடிய னுளிருந் தாளஃ தறிந்தனன் பெருமான். **10**

தூய்ய நீறணி மெய்யினர் கட்டங்கந் தொட்ட
கையர் யோகபட் டத்திடைக் கட்டினர் பூதிப்
பையர் கோவண மிசையசை யுடையினர் பவளச்
செய்ய வேணிய ரங்கொரு சித்தராய் வருவார். **11**

வந்து பொன்னனை யாண்மணி மாளிகை குறுகி
அந்த மின்றிவந் தமுதுசெய் வாரொடு மணுகிச்
சிந்தை வேறுகொண் டடைந்தவர் திருவமு தருந்தா
துந்து மாளிகைப் புறங்கடை யொருசிறை யிருந்தார். **12**

அமுது செய்தருந் தவரெலா மகலவே றிருந்த
அமுத வாரியை யடிபணிந் தடிச்சிய ரைய
அமுது செய்வதற் குள்ளெழுந் தருள்கென வுங்கள்
அமுத னுனையிங் கழைமினென் றருளலு மனையார். **13**

முத்த ராமுகிழ் வாணகை யல்குலாய் முக்கண்
அத்த ரானவர் தமரெலா மமுதுசெய் தகன்றூர்

---

*10.* எஞ்சாமை - மீதிப்படாமை. மடி - பொய், கேடு, சோம்பல். ஒடிவில் பொற்கிழி - குறையாத பொற்கிழி, உலவாக்கிழி.

*11.* கட்டங்கம்-மழு. பூதிப்பையர் - விபூதிப்பையையுடையவர். வேணி - சடை.

*12.* வேறு சிந்தைகொண்டு-மற்றைய அடியார் போலத்திருவமுது செய்யக்கருதாது அதற்கு வேருகிய இரசவாதஞ் செய்யுங் கருத்துக் கொண்டு. உந்தும் - (ஒளி) வீசும். சிறை - பக்கம்.

*13.* வேறு இருந்த - வேறு சிந்தையோடிருந்த, வேருக இருந்த. அடிச்சியர் - தாதியர். அமுதனுனை - அமுதமொத்த இனிய பொன்னனை யாளை.

*14.* சித்தராய்-(மாத்திரைக்கோல் படிக குண்டல முதலியவற்றை யுடைய) சித்தமூர்த்தியாய் (வந்த). தம்பிரான் - தமக்குமேல் பிரான் (தலைவன்) ஒருவரும் இல்லாது தமக்குத்தாமே தலைவனாய் உள்ளவன்; இறைவன். தராதலம் - பூமி.

பா-ம்—1 மடிவிலச்.

சித்த ராயொரு தம்பிரான் சிறுநகை யினராய்
இத்த ராதலத் தரியரா யிருக்கின்று ரென்ருர். 14

நவம ணிக்கலன் பூத்தபூங் கொம்பரி னடந்து
துவரி தழ்க்கனி வாயினுள் சுவாகதங் கிலவென்
றுவமை யற்றவர்க் கருக்கிய மாசன முதவிப்
பவம கற்றிய வடிமலர் முடியுறப் பணிந்தாள். 15

எத்த வஞ்செய்தே னிங்கெழுந் தருளுதற் கென்னுச்
சித்தர் மேனியும் படிவெழிற் செல்வமு நோக்கி
முத்த வாணகை யரும்பசின் றஞ்சலி முகிழ்ப்ப
அத்தர் நோக்கினு ரருட்கணு லருள்வலைப் பட்டாள். 16

[1]ஐய வுள்ளெழுந் தருளுக வடிகணீ ரடியேன்
உய்ய வேண்டிய பணிதிரு வுளத்தினுக் கிசையச்
செய்ய வல்லனென் றஞ்சலி செய்யவுண் ணகையா
மைய னுேக்கியை நோக்கிமீ னுேக்கிதன் மணுளன். 17

வடியை நேர்விழி யாய்பெரு வனப்பினை சிறிதுன்
கொடியை நேரிடை யெனவினைத் தனையெனக் கொன்றை
முடியி னுனடி யாரமென் முகிழ்முலைக் கொடிதாழ்ந்
தடிய னேற்குவே ருயொரு மெலிவிலை யையா. 18

எங்க ளுயகர் திருவுருக் காண்பதற் கிதயந்
தங்கு மாசையாற் கருவுருச் சமைத்தனன் முடிப்பேற்

---

15. சுஆகதங்கில - (தேவரீர் வரவு) நல்வரவல்லவா. பவம் அகற்றிய - அடியார் பிறப்பை நீக்கிய, பொன்னனையார் தமது பிறப்பை நீக்கும்படி.

16. நோக்கினுர் - சட்சுதீட்சை செய்தார். அருள்வலைப்பட்டாள் - பத்திவலையில் சிக்கினுவளாகிய பொன்னனையாள்: வினையாலணையும்பெயர்.

17. ஐய : அசைநிலை. ஐயநீர் அடிகள் அடியேன் - ஐயரே நீர் ஆண்டவர் (யான்) அடிமை என்றலுமாம். உய்ய - (யான்) ஈடேற. வேண்டிய பணி - தேவரீர் விரும்பிய தொண்டு.

18. வடி - மாவடுவின் பிறப்பு. மெலிவு இல்லை - குறையில்லை.

19. முடிப்பேற்கு - முடிக்கக் கருதிய எனக்கு. பூசைக்கே, ஏ : தேற்றம்.

பா-ம்—1 ஐய குள்ளெழுந்.

கிங்கு நாடொறு மென்கையில் வரும்பொரு ளெல்லாம்
உங்கள் பூசைக்கே யல்லதை யொழிந்தில வென்ருள். 19

அருந்து நல்லமு தனையவ ளன்பு[1]தித் திக்கத்
திருந்து தேனென விரங்குசொற் செவிமடுத் தையர்
முருந்து மூரலாய் செல்வமெய் யிளமைநீர் மொக்குள்
இருந்த வெல்லையு நிலையில வென்பது துணிந்தாய். 20

அதிக நல்லற நிற்பதென் றறிந்தனை யறத்துள்
அதிக மாஞ்சிவ புண்ணியஞ் சிவார்ச்சனை யவற்றுள்
அதிக மாஞ்சிவ பூசையு ளடியவர் பூசை
அதிக மென்றறிந் தன்பரை யருச்சனை செய்வாய். 21

உறுதி யெய்தினை யிருமையு முன்பெயர்க் கேற்ப
இறுதி யில்லவன் றிருவுரு வீகையாற் காணப்
பெறுதி யாகநின் மனைக்கிடைப் பித்தளை யீயம்
அறுதி யானபல் கலன்களுங் கொணர்தியென் றறைந்தார்.22

ஈயஞ் செம்பிரும் பிரசித மென்பவும் புணர்ப்பாற்
ருேயும் பித்தளை வெண்கலந் தரா்முதற் ருெடக்கத்
தாயும் பல்வகை யுலோகமுங் கல்லென வலம்பத்
தேயுஞ் சிற்றிடை கொண்டுபோய்ச் சித்தர்முன் வைத்தாள்.

வைத்த வேறுவே றுலோகமு மழுவுழை கரந்த
சித்த சாமிக ணீற்றினைச் சிதறினர் [2]பார்த்தே

---

20. அன்பு - அன்போடு. திருந்து தேன் - பாலொடு கலந்து இனிமையில் திருந்திய தேன். இரங்குசொல் - சொல்லும் சொல்; மனம் இளகுவதற்கேதுவாகிய சொல்லுமாம்; தான் இரங்குதலைப் படுத்தும் சொல்லுமாம். முருந்து - மயிலிறகினடி. மூரல் - பல்.

21. இச்செய்யுள் அடியவர் பூசையைச் சிறப்பிப்பதாகும். அருள் வழி நில்லாது செய்யும் அறம் பசு புண்ணியம்; அருள்வழி நின்று செய்யும் அறம் பதி புண்ணியம்.

22. உன்பெயர்க்கு ஏற்ப - பொன்னனையாள் என்ற பெயருக்குப் பொருந்த. ஈகையால் - பொன்ளுல். மனைக்கிடை - மனையிந் இடைக்கும்.

23. இரசிதம் - வெள்ளி. புணர்ப்பு - ஒன்ருேடொன்று சேர்த்தல்.

24. பார்த்து - பொன்னுகுக என்று சிந்தித்துப்பார்த்து. இத்தை- இவ்வுலோகத்தை. இரா - இரவில். அத்தை - அதனுல்.

பா-ம்—1 சித்திக்கத். 2 பாவித்து.

இத்தை நீயிரா வெரியிலிட் டெடுக்கினன் பொன்னும்
அத்தை நாயகன் றிருவுருக் கொள்கென வறைந்தார். 24

மங்கை பாகரை மடந்தையு மிங்குநீர் வதிந்து
கங்குல் வாயமு தருந்தியிக் காரிய முடித்துப்
பொங்கு காரிருள் புலருமுன் போமெனப் புகன்றாள்
அங்க யற்கணு டனைப்பிரி யாரதற் கிசையார். 25

சிறந்த மாடநீண் மதுரையிற் சித்தர்யா மென்று
மறைந்து போயினர் மறைந்தபின் சித்தராய் வந்தார்
அறைந்த வார்கழ லலம்பிட வெள்ளிமன் றுடி
நிறைந்த பேரொளி யாயுறை நிருத்தரென் றறிந்தாள். 26

மறைந்து போயினு ரெனச்சிறி தயர்ச்சியு மனத்தில்
நிறைந்த தோர்பெருங் கவற்சியை நீக்கினு ரென்னச்
சிறந்த தோர்பெரு மகிழ்ச்சியு முடையளாய்ச் சித்தர்
அறைந்த வாறுதீப் பெய்தன ளுலோகங்க ளனைத்தும். 27

அழல டைந்தபி னிருண்மல வலிதிரிந் தரன்றாள்
நிழல டைந்தவர் காட்சிபோ னீப்பருங் களங்கங்
கழல வாடக மானதா லதுகொண்டு கனிந்த
மழலை யிர்ஞ்சொலாள் கண்டனள் வடிவிலான் வடிவம். 28

மழவிடை யுடையான் மேனி வனப்பினை நோக்கி யச்சோ
அழகிய பிரானே யென்னு வள்ளிமுத் தங்கொண் டன்பிற்
பழகிய பரனை யானுப் பரிவினுற் பதிட்டை செய்து
விழவுதேர் நடாத்திச் சின்னுள் கழிந்தபின் வீடுபெற்றாள். 29

---

25. வாய் அமுது அருந்தி - (அறுசுவை) வாய்ந்த அன்னத்தை உண்டு; வாயிலுள்ள நீரை உண்டு எனினுமாம்: இடக்கரடக்கல்.

26. பேரொளியாய் உறை நிருத்தர் - பெருஞ்சோதியாய் எழுந்தருளிய தாண்டவ மூர்த்தி; சொக்கலிங்கப்பெருமான்.

27. அயர்ச்சி - மயக்கம். கவற்சி - துன்பம்.

28. இருள்மல வலி திரிந்து - ஆணவமல சத்திகெட்டு. அரன் தாள் - சிவனருள். நிழல் - பேரின்பம். காட்சி - சிவமாய் விளங்குதல். நீப்பரும் - நீங்குதலில்லாத.

29. அச்சோ! - வியப்பிடைச்சொல். அழகிய பிரான் - சுந்தர நாதர். பதிட்டை - பிரதிட்டை. விழவு - நித்தியோற்சவம். தேர் என்றது மகோற்சவத்தை. வீடு - பராசத்தியின் சாரூபம்.

நையு நுண் ணிடையி னுளந் நாயகன் கபோலத் திட்ட
கையுகிர்க் குறியுஞ் சொன்ன காரணக் குறியுங் கொண்டு
வெய்யவெங் [1]கதிர்கால் செம்பொன் மேனிவே றாகி நாலாம்
பொய்யுகத் தவர்க்குத் தக்க பொருந்துரு வாகி மன்னும். 30

ஆகச் செய்யுள்—1,885

---

30. கபோலம் - கதுப்பு. வெய்ய வெம் - மிக்க விருப்பம்.
பா-ம்—1 கதிர்காய்.

# 37. சோழனை மடுவில் வீட்டிய படலம்

—o—

மின்னனை யார்பூங் கொன்றை வேணிய ரிரத வாதம்
பொன்னனை யாண்முன்செய்துபோந்தது புகன்றே மார்த்தார்
மன்னனை மடுவில் வீட்டி மலரடிக் கன்ப னான
தென்னனை யமரிற் காத்த திருவிளை யாடல் சொல்வாம். 1

பொன்னெடுந் தேரி ராச புரந்தரன் புரந்த ராதி
பன்னெடுந் தேவ ரேத்தப் பரனுல கடைந்தா னிப்பால்
அந்நெடுந் தகையோன் மைந்த னடலிரா சேச னென்போன்
இந்நெடுந் தகையோன் மைந்த னிராசகம் பீர னென்போன். 2

மற்றிவன் குமரன் பாண்டி வங்கிய தீப னன்னோன்
பொற்றிணி தடந்தோண் மைந்தன் புரந்தர சித்தா மன்னோன்
வெற்றிகொள் குமரன் பாண்டி வங்கிய பதாகன் வீரம்
பற்றிய சுந்த ரேச பாதசே கரன வன்சேய். 3

பலர்புகழ் சுந்த ரேச பாதசே கரனுந் தென்னன்
அலைபுன லுடுத்த கூட லடிகளுக் கன்ப னாகிக்
கொலைபுணர் வேலால்வெங்கோற் குறும்பெனுங் களைக டீர்த்து
மலர்தலை யுலக மென்னும் வான்பயிர் வளர்க்கு நாளில். 4

பத்துமான் றடந்தேர் நூறு பனைக்கைமா நூற்றுப் பத்துத்
தத்துமா னயுத மள்ளர் தானையிவ் வளவே யீட்டி

---

1. இரதவாதம் - இரசவாதம். ஆர் தார் மன்னன் - சோழன். வீட்டி - வீழ்த்தி.

2. இராசபுரந்தரன் - இராசேந்திர பாண்டியன். இராச கம்பீர பாண்டியன், இவன் ஆட்சி புரிகையில் தன் ஆட்சிக்குட்பட்ட இடங்களிலுள்ள வீடுகடோறும் சிவபூசை செய்வித்த சிவபத்தன்.

3. பாண்டி வங்கிய தீபன், இவன் நெடுங்காலம் ஆட்சிபுரிந்து சிவசாயுச்சியம் அடைந்தவன். புரந்தரசித்து, இவன் இந்திரனை வென்று இப்பெயர் பெற்றவன். பாண்டி வங்கிய பதாகன், இவன் தன்னாட்சியில் யாவரையும் சிவபத்தியுடையவராகச் செய்தவன்.

4. வெங்கோல் - கொடுங்கோல். குறும்பு - குறுநில மன்னர். மலர் தலை - பரந்த இடம்.

இத்துணைக் கேற்ப நல்கி யெஞ்சிய பொருள்க ளெல்லாஞ்
சித்துரு வான கூடற் சிவனுக்கே செலுத்து மன்றே. 5

கண்டிகை மகுட மாதிக் கலனிரை குயின்றுந் திங்கள்
மண்டல மிடறுஞ் சென்னிக் கோபுர மாட மாதி
எண்டிசை யிருள்கால் சீப்ப வெரிமணி யிழைத்து வேய்ந்துந்
திண்டிற லுடையா னின்ன திருப்பணி பிறவுஞ் செய்தான். 6

கல்லுமா றகன்ற மார்பன் கருவியின் சிறுமை நோக்கி
மல்லுமா றுத திண்டோள் வளவர்கோ னொருவன் காலிற்
செல்லுமா யிரம்ப ரிக்கோர் சேவக னென்போன் றானே
வெல்லுமா றெண்ணி வஞ்சி வேய்ந்துகொண் டெழுந்து போந்தான். 7

பல்வகைக் கருவி யீட்டப் படையொடும் பரவை சீறிச்
செல்வது போலக் கன்னித் தீம்புன னாடு நோக்கி
மல்வரை யாத தோளான் வரவறிந் தெழுந்து மேருக்
கல்வரி சிலையான் முன்போய்க் கைதவன் றாழ்ந்து கூறும். 8

பொன்னது வனைய வேணிப் புனிதவிப் பூமி நேமி
உன்னது வலத்தி னாலே யுருட்டுமென் வலத்தை நோக்கான்
தன்னது வலத்தி னாலென் றானையின் சிறுமை நோக்கி
என்னது தேயங் கொள்வா னெண்ணினான் போலு மன்றே. 9

காவிரி நாடன் சேனைக் கடலிடை யெரிபோன் மூண்டு
மேவின னென்று கூறி மீனவன் வேண்ட வானிற்

5. நூற்றுப்பத்து - ஆயிரம். தத்து மா - தாண்டிச்செல்லும் குதிரை. மள்ளர் - போர்வீரர். அயுதம் - பதினாயிரம். நல்கி - (பொக்கிஷத்தில் வைக்கும்படி) கட்டளையிட்டு. சித்துருவான - ஞான வடிவான.

6. திண் திறல் உடையான் - சுந்தரேச பாதசேகர பாண்டியன். திருப்பணி - திருப்பணிகளையும். பிறவும் என்றதனால் நித்திய நைமித்திய முதலிய பூசைகளையும், புலவர் அந்தணர் முதலியோர்க்கு அளித்தலையும் கொள்க.

7. கல்லுமாறகன்ற - திண்மையாலும் விசாலத்தாலும் மலைக்கு மாறுபட்டகன்ற. கருவி - இங்குச் சேனைத்திரள். வஞ்சி - வஞ்சிமாலை; இது பகைமேற் செல்வோர் அணியும் அடையாளமாலை.

8. கருவி - ஆயுதப்பொது. பரவை - கடல். கைதவன் - பாண்டியன்.

9. நேமி - ஆக்ஞைசக்கரம். வலம் - பலம், வலிமை.

பூவிரி வாகை நீயே புனையநாம் பொருது மென்று
நாவிரி யாத மாற்ற நாயகன் கூறக் கேட்டான். 10

எல்லியங் கமலச் செவ்வி யெனமுக மலர்ந்து நாதன்
அல்லியங் கமலச் செந்தா ளகந்தழீஇப் புறம்பு போந்து
பல்லியந் துவைப்பத் தானைப் பரவையுட் பரிமா வூர்ந்து
கொல்லியம் பொருப்பன் சேனைக் கடலெதிர் குறுகி னானே. 11

பண்ணுத லிசைவண் டார்க்கும் பசுந்தொடைச் செழியன் றானை, எண்ணுத லிலவாஞ் சென்னி யிரும்படைக் கடனே ராருய், நண்ணுத லெனப்போய்ப் பொன்னி நாடவன் றமர்கட் கெல்லாங், கண்ணுத லருளா லங்கோர் கடலெனத் தோன்றிற் றம்மா. 12

கடலென வருமா வூர்ந்து கைதவன் சேனை முன்போய்
அடலணி மேருக் கோட்டி யாலவாய் நெடுநாண் பூட்டி
மடலவிழ் துழாய்க்கோ லூட்டி வாயெரி புரத்தி லூட்டி
மிடலணி கூடற் கோமான் வேடுரு வாகி நின்றான். 13

கங்குல்வாய்த் திங்கள் போலக் காதணி தந்தத் தோடுங், கங்குல்வாய் முளைத்த மீன்போற் கதிர்முத்த வடமுங் குஞ்சிக், கங்குல்வாய்ச் சிலைபோல் வெட்சிக் கண்ணிசூழ் கலாபச் சூட்டுங், கங்குல்வாய் கிழிக்குந் தந்தக் கடகமு மின்னுக் கால. 14

---

10. எரிபோல் - வடவைத்தீப்போல். மேவினன் - வந்தான். நாவிரியாத மாற்றம் - அசரீரி வாக்கு.

11. எல்லியங்கமலம்-சூரியனைக்கண்ட தாமரை; எல்லி-சூரியன் ; பகலுமாம். அல்லி - அகவிதழ். கொல்லியம் பொருப்பன் - கொல்லி மலையையுடைய சோழன்.

12. பண் நுதல் - பண்ணோடு அமைந்த. சென்னி - சோழன். தமர் என்றது போர்வீரரை.

13. கடலென வரும் மா - கடல் திரைபோலச் செல்லும் குதிரை; கடலென அருமா எனப்பிரித்து, கடல் திரை என்று சொல்லும்படி வேதமாகிய அரிய குதிரை எனக்கொள்ளலுமாம். மேருக் கோட்டி - மேருமலையாகிய வில்லை வளைத்து. ஆலவாய் - வாசுகியாகிய பாம்பு. துழாய்க்கோல் - துழாய்மாலை யணிந்த திருமாலாகிய அம்பு. வாயெரி - நகையாலாகிய நெருப்பு. மிடல் - வெற்றி.

14. குஞ்சிக்கங்குல் - சிகையாகிய இரவில். கலாபச்சூட்டும் - மயிலிறகு அணிந்த உச்சிக்கொண்டையும்.

அண்டத்தா ரமரர் நாம மன்றுதொட் டடையத் தோற்று
கண்டத்தா ரிருளே யெங்குங் கலந்தெனக் கறுத்த மேனி
கொண்டத்தா ராரி ஞற்கோர் கூற்றெனக் கொல்வே லேந்திச்
சண்டத்தீ யென்ன நின்றான் காவிரித் தலைவன் காணு. 15

சீறியா யிரம்ப ரிக்கோர் சேவகன் வந்தே னென்னக்
கூறினு னெதிர்த்தான் வெள்ளிக் குன்றவன் பத்து நூறு
மாறிலாப் பரிக்கு மட்டோர் வயவனீ யன்றோ வெண்ணில்
ஈறிலாப் பரிக்கு மொற்றைச் சேவகன் யானே யென்றான். 16

என்றசொல் லிடியே றென்ன விருசெவி துளைப்பக் கேட்டு
நின்றவ னெதிரே மின்னு நீட்டிச்செல் மேகம் போலச்
சென்றுவேல் வலந்தி ரித்துச் செயிர்த்தன னதிர்த்துச் சீற
வன்றிற னூற்றுப் பத்து வயப்பரிக் கொருவ னஞ்சா. 17

யாமினி யிந்த வேலா லிறப்பதற் கைய மில்லை
யாமென வகன்றான் மாவோ டாயிரம் பரிக்கோர் மள்ளன்
காமனை வெகுண்ட வேடன் மறைந்தனன் கங்குற் சோதி
மாமக னதுகண் டோடும் வளவனைத் துரத்திச் சென்றான். 18

துரந்திடு மளவி லோடுஞ் சோழனுந் திரும்பி நோக்கிக்
கருந்தடங் கண்ணி பாகங் கரந்தவே டுவனைக் காணுன்

---

15. அண்டத்தார் - தேவர்கள். அமரர் நாமம் அடைய - அமரர் என்னும் பெயரைப்பெற. அன்று தொட்டு - விஷம் உண்ட அந்நாள் முதல். இனி, அண்டத்து ஆர் அமரர் - விண்ணுலகத்திலிருக்கும் தேவர். அன்று தொட்டு நாமம் அடைய - விஷம் உண்ட அந்நாள் முதல் அச்சத்தை அடைய. தோற்று கண்டம் - (தேவர்களுடைய பசுத்துவத்தையும் இறைவனின் பதித்துவத்தையும்) தோற்றுவிக்கும் கண்டம். அ தார் ஆரிஞர்க்கு - அந்த ஆத்திமாலையையணிந்த சோழனுக்கு. சண்டத்தீ - வடவாமுகாக்கினி.

16. கூறினன் எதிர்த்தான் - சோழன் கூறி எதிர்த்தான். வயவன் - வீரன்.

17. திரித்துச் செயிர்த்தனன் - சுழற்றிச் சினந்து.

18. கங்குற்சோதி மாமகன் - சந்திரகுலத்தில் தோன்றிய சுந்தரேச பாதசேகர பாண்டியன்.

19. புரந்தரற்புறங்கண்டான்-சுந்தரேச பாதசேகர பாண்டியன்; இங்கு இவனது பாட்டனுகிய புரந்தரசித்து அடைந்த வெற்றி இவன் மேலேற்றிக் கூறப்பட்டுள்ளது.

வருந்துய ரச்சந் தீர்ந்தான் மதுரையி னளவும் பற்றிப்
புரந்தரற் புறங்கண்டானைப் புறங்கண்டு முடுக்கிப் போனான். 19

காலொன்று முடுக்கப் பட்ட கனலொன்று நடந்தா லொத்து
வேலொன்று தடக்கை நேரி வேந்தனுன் முடுக்குண் டோடுஞ்
சேலொன்று கொடியி னுன்றன் செழுநகர் விரைந்து செல்வான்
மாலொன்று களிற்றி னுங்கோர் மதுமலர்க் கிடங்கில் வீழ்ந்தான்.

மீனவன் மதுரை மூதூர் மேற்றிசைக் கிடங்கில் வீழ
மான வெம் புரவி யோடும் வளவனும் வீழ்ந்தான் கூடற்
கோனவ னருளால் வானோர் குரைகடல் கடையத் தோன்றும்
ஆனையி னெழுந்தான் றென்னன் கோழிவேந் தாழ்ந்து போனான்.

பிலத்தள வாழ்ந்த கடிமலர்க் கிடங்கிற் பெருந்தகை யவிந்தவன் றுகில்பூண், கலத்தரும் பேழை படைபரி மான்றேர் கரியெலாங் கவர்ந்துதண் பொருனைத், தலத்தவன் றங்க ளுயக ரணியத் தக்கதா சணிகல னல்கி, நலத்தகை யவர்பே ரருட்கடற் கன்புநதியெனப் பெருகிவீற் றிருந்தான். 22

ஆகச் செய்யுள்—1,907

20. காலொன்று-காற்றென்றினாலே. வேலொன்று - வேற்படை ஏந்திய. மாலொன்று - மதமயக்கமுடைய. கிடங்கு - அகழி ; மடுவு.

21. கடல் கடையத்தோன்றும் ஆனை - வெள்ளானை. கோழி வேந்தன் - சோழன். கோழி - உறையூர்.

22. பெருந்தகை - இங்குப்பாண்டியன். அவிந்தவன் - இறந்த சோழன். தூசு - ஆடை.

# 38. உலவாக்கோட்டை யருளிய படலம்

—○—

மின்ப னிக்கதிர் வேணி வானவன் மீன வன்றனை மானவேல்
முன்ப னிக்க வலந்தி ரித்து முடுக்கி நேரி யடுக்கலான்
பின்ப னிக்கம லத்த டத்திற விட்ட வாறிது பெருமைசால்
அன்ப னுக்குல வாத கோட்டை யளித்த வாறு கிளத்துவாம். 1

பொடியார்க்கு மேனிப் புனிதர்க்குப் புனித வேற்றுக்
கொடியார்க்கு வேதக் குடுமிக்கிணை யான கூடற்
படியார்க்குஞ் சீர்த்திப் பதியேருழ வோரு ணல்லான்
அடியார்க்கு நல்லா னறத்திற்கும் புகழ்க்கு நல்லான். 2

அனையா னறத்திற் கருள்போன்றவ ளான்ற கற்பின்
மனையாண் மரபின் வழுவாத தருமசீலை
எனையாரு நன்கு மதிக்க விருக்கு நீராள்
தனையாள் பதிக்குக் கதிக்குத்தனிச் சார்பு போல்வாள். 3

பல்லே ருழவின் றொழில்பூண்டு பயன்கள் கொள்வான்
வில்லே ருழவன் கடன்கொண்டு மிகுந்த வெல்லாம்
இல்லே ருழத்தி மடைச்செல்வ மியற்றி யேந்த
அல்லேறு கண்ட னடியாரை யருத்து நீரான். 4

---

1. பனிக்க - நடுங்க. நேரியடுக்கலான் - சோழன். உலவாக் கோட்டை - அழியாத அரிசிக்கோட்டை.

2. பொடி - விபூதி. குடுமி - உச்சி. உழவோர் - வேளாளர். நல்லான் - நல்லொழுக்கமுடையவன். அடியார்க்கு நல்லான் - இது சிவபெருமானுக்கு ஒரு பெயர். "கருவூரு ளானிலை - அண்ணலா ரடியார்க்கு நல்லரே" என்பது சம்பந்தர் தேவாரம். இவ்வேளாளரும் அடியார்க்கு நல்லவராய் இருந்த காரணத்தால் இப்பெயர் பெற்றார்.

3. எனையாரும் - ஏனையோரும். தனையாள் பதிக்கு - தன்னைக் கொண்ட கணவன் அடைதற்குரிய. கதிக்குத்தனிச்சார்பு - வீடு எய்து தற்குரிய பற்றுக்கோடு.

4. வில்லேருழவன் கடன் - அரசனுக்குரிய ஆறிலொரு கடமை. இல்லேருழத்தி - மனைக்கிழத்தி, தருமசீலை. மடைச்செல்வம் - அன்ன மாகிய பொருள். அல்லேறு கண்டன் - நீலகண்டன்.

தொகைமாண்ட தொண்டர் சுவையாறு தழீஇய நான்கு
வகைமாண்ட மாறு படுமுண்டி மறுத்த ருந்த
நகைமாண்ட வன்பின் றலையாயவ னல்க நல்கப்
பகைமாண்ட செல்வ மணற்கேணியிற் பல்கு நாளின். 5

இந்நீர வாய வளங்குன்றினு மின்மை [1]கூருத்
தன்னீர்மை குன்றா னெனுந்தன்மை பிறர்க்குத் தேற்ற
நன்னீர் வயலின் விளைவஃகி நலிவு செய்ய
மின்னீர வேணி மதுரேசர் விலக்கி னாரே. 6

குன்றா விருத்திக் கடன்கொண்டுகொண் டன்பர் பூசை
நன்று நடாத்தத் தொடுத்தான்கடன் றானுங் கிட்டா
தொன்றாலுங் கொண்ட விரதத்துக் குறுதி யின்றி
நின்றா னுடம்பை யொறுக்கின்ற நியமம் பூண்டான். 7

கொடுப்பா ரவரே விளைவுங்கடன் கோளு மாற்றித்
தடுப்பா ரெனின்மற் றதையாவர் தடுக்க வல்லார்
அடுப்பார் விழுமங் களைவா ரடி யார்க்கு நல்லூண்
மடுப்பா னியமந் தடைபட்டு வருந்து கின்றான். 8

விண்ணாறு சூடும் விடையான்றமர்க் கூட்டி யன்றி
உண்ணாத வன்றன் [2]னுயிர்க்குத்துணை யாய கற்பிற்
பண்ணார்மொழி தன்னொடும் பட்டினி விட்டு நெஞ்சம்
புண்ணாக வாகம் பசித்தீயிற் புழுங்கப் பட்டான். 9

---

5. தொகைமாண்ட - அளவிறந்த. நான்குவகை உண்டி - நக்கல், பருகல், உண்ணல், தின்னல் என்பன. மறுத்து அருந்தல் - முற்சிகை (கவளம்) நீக்கிப் பிற்சிகையுண்ணுதல். பகைமாண்ட - பகையில்லாத. செல்வம் - தானிய வளம்.

6. தன்னீர்மை - தனது பத்தித்திறம். தேற்ற - விளக்க. அஃகி - குறைந்து.

7. குன்றா விருத்திக்கடன் - அநியாய வட்டிக்கும் வட்டி கொடுக்கும் கடன். உடம்பை யொறுத்தல் - உணவின்றியிருத்தல்.

8. கோளும் - கொள்ளுதலையும். விழுமம் - துன்பம். நல்லூண் மடுப்பான் - அடியார்க்கு நல்லான்.

9. விண்ணாறு சூடும் விடையான் தமர் - சிவனடியார். பட்டினி விடுதல் - பட்டினி மிகுதல்; விடல் மிகுதிப்பொருட்டு; கொள்ளுதலுமாம்.

பா-ம்—1 கூராத். 2 னுயிர்த்துணை.

இறக்கும் முடம்பாற் பெறும்பேறினி யாவ தென்னு
அறக்குன் றனையான் மனையோடு மடைந்திச் செய்தி
நிறக்கின்ற செம்பொற் சிலையார்க்கு நிகழ்த்தி யாவி
துறக்கின் றதுவே துணிவென்று துணிந்து போனான். 10

ஐயன் றிருமுன்ன ரடைந்தடி தாழ்ந்து வானோர்
உய்யும் படிநஞ் சமுதுண்ட வொருவ வுன்றன்
மெய்யன்பர் பூசைக் கிடையூறு விளைய [1]வென்றன்
செய்யும் புலமும் விளைவின்றிச் சிதைந்த வென்னு. 11

விடனல்கு சூலப் படையாய் கடன் வேறு காணேன்
கடனல்க வல்லார் தமைக்காட்டுதி காட்டி லாயேல்
மடனல்கு மிந்த வுடம்பின்சுமை மாற்று வேனென்
றுடனல்கு கற்புக் குரியாளொடும் வேண்டு மெல்லை. 12

பஞ்சாதி வேதப் பொருள்சொன்ன பிரமன் வாக்கொன்
றஞ்சாதி வேளாண் டலைவாவு னகத்தி வின்றோர்
[2]செஞ்சாதி யாய செழுவாலரிக் கோட்டை யுய்த்தேம்
எஞ்சா திருக்கு மெடுக்குந்தொறு மென்று மாதோ. 13

நீநாளும் பூசித் ததில்வேண்டிய கொண்டு நித்தம்
ஆறாத வன்பர்க் கமுதூட்டி யெவர்க்கு மன்ன
தானாதி நாள தருமங்களுஞ் செய்தி வீடு
மேனா ளளிக்கின் றனமென்று விசும்பிற் கூற. 14

---

10. நிறக்கின்ற - விளங்குகின்ற. செம்பொற்சிலையார்க்கு - சிவ பெருமானுக்கு.

11. செய் - நன்செய்; நெல்விளையும் நிலம். புலம் - புன்செய்; தானியம் விளையும் நிலம்.

12. விடன்நல்கு - விஷத்தினையுமிழும். மடன்நல்கும்-அறியாமை பொருந்திய. உடன் நல்கு-தன்னுடன் உறையும். கற்புக்கு உரியாள் - தருமசீலை.

13. பஞ்சாதி - பஞ்சாசது: மரூஉ; அது சந்தைகூட்டி யோது வார் நிறுத்துதற்பொருட்டு வேதத்தில் ஐம்பது பதங்கொண்ட ஒரு முடிவு. அஞ்சாதி - அஞ்சேல். செஞ்சாதியாய-செந்நெல்லாலாய. அரிக்கோட்டை - அரிசிக்கோட்டை.

14. ஆறாத - (சிவநேயம்) குறையாத. எவர்க்கும் - சிவனடியா ரொழிந்த யாவர்க்கும். செய்தி - செய்வாய்.

பா-ம்—1 வின்றென். 2 செஞ்சாலி.

கேட்டின்ப மெய்திக் கிளர்விம்மித னாகி வேதப்
பாட்டின் பயனைப் பணிந்தில்ல மடைந்து பண்டை
ஈட்டுந் தவப்பே றெனக்கண்டனன் றொண்டர்க் கெந்தை
கூட்டுங் கதிபோ லுலவாமற் கொடுத்த கோட்டை. 15

வானாறு சூடி தருகோட்டையை வைக றோறும்
பூநாறு சாந்தம் புகையொண்சுடர் கொண்ட ருச்சித்
தானாத செவ்வி யடிசிற்கு மதற்கு வேண்டும்
நானா கருவி விலைக் கும்மது நல்க வாங்கா. 16

மின்னார் சடையான் றமராய்ந்தவர் வேதச் செல்வர்
தென்னாடர் தெய்வம் விருந்தொக்கல் செறிந்து நட்டோர்
முன்னா மெவர்க்கும் முகில்போல் வரையாம னல்கி
எந்நாளு நோயின் றளகாதிப னென்ன வாழ்ந்தான். 17

அன்பன் னடியார்க் கினியா னனிநா ளளந்தல்கித்
தன்பன் னியொடு மயலார் சுற்றந் தமரோடும்
பின்பந் நிலையே யிமவான் மகளைப் பிரியாத
இன்பன் னுருவாய்ச் சிவமா நகர்சென் றிறைகொண்டான். 18

ஆகச் செய்யுள்—1,925

---

15. வேதப்பாட்டின் பயன் - வேதப்பொருளாகிய சிவபெருமான். கூட்டும் - அடைவிக்கும். கதி - பேரின்பம்.

16. வான் ஆறு சூடி - சிவபெருமான். செவ்வி ஆனாத - பதம் நீங்காத. நானாகருவி - பலவகைக் கறிப்பொருள் முதலிய உபகரணம்

17. ஆய்ந்தவர் - ஆகமச்செல்வர். தென்னாடர் - பிதிரர். விருந்து - புதுமையாய் வந்தோர் : பண்பாகுபெயர். ஒக்கல் - சுற்றத்தார். அளகாபதிபன் - குபேரன்.

18. நனிநாள் அளந்து - நெடுங்காலங் கழித்திருந்து ; நெடுங்காலம் பொருள் கொடுத்திருந்து. அல்கி - ஆயுள்முடிந்து. பன்னி - மனைவி. அயலார் - ஊழியக்காரர்.

# 39. மாமனாகவந்து வழக்குரைத்த படலம்

—o—

தாமநா றிதழி யார்தந் தமர்க்கன்பன் வறுமைப் பட்டோன்
ஆமனா னாலவாக் கோட்டை யருளிய முறையீ தையன்
தேமனாண் முல்லைத் திந்தார்ச் சிறுதகை வணிகற் காக
மாமனாம் படிவங் கொண்டு வழக்குரை வண்ணஞ் சொல்வாம். 1

கன்னிநான் மாடக் கூடற் கடிநகர் வணிக மாக்கள்
தன்னின்மா நிதிக்கோ னன்னான் றனபதி யென்னும் பேரான்
மன்னினா னனையான் கற்பின் மடவரல் சுசீலை யென்பாள்
பொன்னினாண் முளரிச் சேக்கைப் புண்ணியத் திருவி னன்னாள். 2

எனவிவர் தமக்கு மைந்தற் பேறின்றி யிரங்கு நாளிற்
றனபதி மருகன் றன்னைத் தகவுசான் மகவாக் கொண்டு
மனமகிழ் சிறப்பா னல்க மனைவியுந் தொழுது வாங்கிப்
புனைவன புனைந்து போற்றிப் பொலிவுற வளர்த்துக் கொண்டாள்.

தனபதி மகப்பே றற்றா னாயினுந் தணவாக் காதன்
மனைவிமேல் வைத்த வாசை மயக்கினால் வருந்தி யீன்ற
தனையனை மகவாத் தந்த தங்கைமேற் றீராப் பூசல்
வினைவிளைத் தொழுக வோர்நா ளிளையளும் வெகுண்டு சொல்வாள்.

பெருமித முனக்கேன் பிள்ளைப் பேறற்ற பாவி நீயென்
அருமைநன் மகனா லன்றோ விருமையு மடைவா யென்னப்

1. தாம நாறிதழி - மாலைபோலத்தோன்றும் கொன்றைப்பூங் கொத்து; நாறுதல்-தோன்றுதல். நாறு இதழித் தாமமுமாம். தே மன் - தேன் நிலைபெற்ற. சிறுதகை - பிள்ளைப் பருவமுடைய.

2. நிதிக்கோன் - குபேரன். புண்ணியத்திரு-புண்ணிய வடிவான இலக்குமி.

3. மருகன் - இங்குத் தங்கையின் புதல்வன். தகவு சால் - நற் குணமிக்க.

4. தணவா - நீங்காத. பூசல் வினை விளைத்து - சண்டையைத் தீவினையினாலே செய்து. இளையள் - தங்கை.

5. பெருமிதம் - இறுமாப்பு. பேறு - பாக்கியம். இருமை - இம்மை மறுமைப்பயன்.

பெரிதுநா ணடைந்து மேலைக் காயினும் பிள்ளைப் பேறு
தருதவம் புரிவே னென்னுத் தனபதி தவமேற் செல்வான், 5

தன்பெருஞ் செல்வ மெல்லா மருமகன் றனக்கே யாக்கி
அன்புகொண் மனைவி யோடு மருந்தவ நெறியிற் சென்றான்
பின்பவன் வரவு தாழ்ப்ப மருமகன் பெற்ற வெல்லாம்
வன்பினால் வழக்குப் பேசி வௌவினார் தாய மாக்கள். 6

விளைநில னடிமை பைம்பூண் வெறுக்கைநன் பசுக்க ளேனை
வளனுமாற் றவர்கைக் கொள்ள வன்சிறை யிழந்த புட்போற்
றளர்வுறு மகனுந் தாயுஞ் [1]சார்பிலாத் தம்ம னோர்க்கோர்
களைகணா யிருக்குங் கூடற் கடவுளே சரண மென்னா. 7

வந்துவா னகடு போழ்ந்த மணிமுடி விமானக் கோயிற்
சுந்தர நாதன் பாதத் துணைதொழு திறைஞ்சி யார்க்குந்
தந்தையுந் தாயு மாகுந் தம்பிரா னீரே யெங்கட்
கெந்தையுந் தாயு மென்னா விரங்கியின் றினைய சொல்வாள். 8

என்மகன் றன்னை மைந்த னின்மையா லெவருங் காணத்
தன்மக னாகக் கொண்டு தகுதியா லன்றே காணி
பொன்மனை பிறவு நல்கிப் போயினா னென்மு னிப்பால்
வன்மையாற் றாயத்தார்க ளவையெலாம் வௌவிக் கொண்டார். 9

ஒருத்திநா னொருத்திக் கிந்த வொருமக னிவனுந் [2]தேருங்
கருத்திலாச் சிறியன் வேறு களைகணுங் காணே னைய

---

6. புத் என்னும் நகரத்தை நீக்கும் புத்திரப்பேற்றை அடையும் தவம் அரியது ஆதலின், 'அருந்தவம்' என்றார். தவநெறி - வானப் பிரத்த நிலை. தாயமாக்கள் - ஞாதிகள்.

7. வெறுக்கை - திரவியம். சார்பு - துணை. களைகண் - பற்றுக் கோடு.

8. இறைவன் சிவனுஞ் சத்தியுமாய் நின்று உலகத்துக்கெல்லாம் போகத்தைக் கொடுத்தலின். 'தந்தையுந் தாயுமாகுந் தம்பிரான்' என்றார்.

9. தன்மகனாக-தனக்குச் சுவீகார புதல்வனாக. காணி-நிலம். என் முன்-என் தமையன்; தனபதி என்னும் வணிகன். இப்பால் - பின்னர்.

10. தேர்தல் - நன்மை தீமைகளை ஆராய்தல். அருத்திசால் அறவோர் - அன்புநிறைந்த முனிவர்.

பா-ம்—1 சார்பிலார். 2 தேறுங்.

அருத்திசா லறவோர் தேறு மருட்பெருங் கடலே யெங்கும்,
இருத்திநீயறியாய் கொல்லோ வென்றுபார் படிய வீழ்ந்தாள். 10

மாறுகொள் வழக்குத் தீர்க்க வல்லவ ரருளி னாலே
சீறுகொள் வடிவேற் கண்ணாள் சிறுதுயி லடைந்தாள் மெய்யில்
ஊறுகொள் கரண மைந்து முற்றறி கனவிற் கங்கை
யாறுகொள் சடையார் வேதச் செல்வரா யடுத்துச் சொல்வார். 11

புலர்ந்தபின் முயத்தோரைப் புரவல னணை யாற்றல்
வலந்தரு மன்றத் தேற்றி மறித்தனை யிருத்தி யாம்போந்
தலந்தரு மறிவான் மூத்தோ ரனைவரு [1]மிசைய வந்தச்
சலந்தரு வழக்குத் தீர்த்துத் தருகுவம் போதி யென்றார். 12

வேரியங் குவளை யுண்கண் விழித்தனள் வியந்து கெட்டேன்
ஆருமில் லார்க்குத் தெய்வந் துணையென்ப தறிந்தே னென்னாக்
காரிருங் கயலுண் கண்ணாள் கணவனைத் தொழுது வாழ்த்திச்
சீரிளங் குமர னோடுந் தெரிவைதன் மனையிற் சென்றாள். 13

சென்றவள் கங்கு லெல்லை தெரிந்தபி னெழுந்து வெள்ளி
மன்றவன் கோயில் வாயில் வந்துவந் தனைசெய் தம்பொற்
குன்றவ னுரைத்த வாற்றாற் கொடுமைசால் வழக்குப் பூட்டி
வென்றவ ரிருக்கை யெய்தி விளம்புவாள் பலருங் கேட்ப. 14

அட்டில்வாய் நெருப்பி டேலோ ரடியிடே லறத்தா றன்றிப்
பட்டிமை வழக்கால் வென்று போகொட்டேன் பலருங் கேட்க,

---

11. மெய்யில் ஊறுகொள் கரணம் - பரிசம், சத்தம், ரசம், ரூபம், கந்தம் என்னும் பஞ்சேந்திரியங்கள். சொப்பனாவத்தையில் வாயுவாதி இருபத்தைந்து தத்துவங்களும் சீவித்தலின், 'உற்றறி கனவு' என்றார். வேதச்செல்வர் - அந்தணர்.

12. புலர்தல் - விடிதல். மன்றம் - நியாய சபை. அலம் - அமைதி. சலந்தரு வழக்கு - பொய் வழக்கு; இது ஞாதிகளிடம் தோன்றிய மாற்சரியத்தால் உண்டாயது. தீர்த்துத் தருகுவம் - உன் பக்கமாக முடிவுசெய்து பொருளை வாங்கித் தருவோம்.

13. வேரி - தேன். குவளை உண்கண் - குவளை மலரை வென்ற மையுண்ட கண்கள். விழித்தனன் : முற்றெச்சம். கெட்டேன் : வியப்பிடைச் சொல். தெரிவை - இங்குத் தனபதி தங்கை.

14. கொடுமை சால் வழக்குப்பூட்டி வென்றவர் - பொய் வழக்கினைத்தொடுத்து வென்ற ஞாதிகள்.

பா-ம்—1 மறிய.

இட்டன னரச னாணை யறத்தவி சேறி யான்றோர்
ஓட்டிய படிகேட் டெங்க ளுரிப்பொரு டந்து போமின். 15

என்றனள் மறித்த லோடு மிழுக்குரை யாடி வைது
வன்றிறல் வலியார் தள்ளி யடித்தனர் மைந்த னோடுஞ்
சென்றனண் முறையோ வென்னாத் திருந்தறத் தவிசி னோர்முன்
னின்றுரையாடி னாள்கேட் டறிந்தனர் நீதி நூலோர். 16

அறத்தவி சிருப்போ ரேவ லாடவ ரோடும் போந்து
மறித்தவைக் களத்திற் கூட்டி வந்தனள் வந்தவெல்லை
அறக்கொடி பாகர் வெள்ளி யம்பல வாணர் தாமத்
திறத்தன பதியே யென்னத் திருவுருக் கொண்டு செல்வார். 17

பெருவிலைக் குண்டலம் பிடரிற் பத்திபாய்ந்
தெரிகதிர் கவிழ்ப்பவா ளெறிக்கு மங்கதம்
அருவரைத் தோள்கிடந் திமைப்ப வாகமேற்
குருமணிக் கண்டிகை குலாய்ப்பின் கோட்டவே. 18

முரலளி புறவிதழ் மொய்ப்பச் செய்யதா
மரைசிறி தலர்ந்தென மணிசெய் மோதிரக்
கரதலம் வீசியோர் கடுங்க ணேறெனப்
பெருமித நடைகொடு நடக்கும் பெற்றியார். 19

வாடிய முளரிபோன் மாறிட் டாரிடத்
தூடியு மலர்ந்தபோ தொப்ப மைந்தன்மேல்

---

15. அட்டில்வாய் - சமைக்குமிடம். பட்டிமை - வஞ்சனை. அறத்தவிசு - நியாய பீடம். ஒட்டிய படி - ஆராய்ந்து கூறுந் தீர்ப்புப் படி.

16. இழுக்கு உரை - தவறான வார்த்தைகள். வைது – தூஷித்து. வன்திறல் வலியார் - அரசன் ஆணைக்கும் அஞ்சாத கொடியவர். நீதி நூலோர் - மனு நூல் உணர்ந்த நியாயாதிபதிகள்.

17. ஏவலாடவர் - ஏவிய வேலைகளைச் செய்வோர்; வேவுக்காரர். அறக்கொடி - முப்பத்திரண்டறமும் வளர்த்த உமாதேவியார்.

18. பத்தி பாய்ந்து - நிரைபடவிளங்கும். வாள் - கிரணம். குலாய்ப்பின் கோட்ட - விளங்கிப்பின்னே வளைந்து கிடக்கவும்.

19. மணி - நீலமணி. கடுங்கண் - கோபப் பார்வை. ஏறு-காளை. பெருமிதம் - மகிழ்ச்சி.

20. உட்கிடை கூடிய - உள்ளக் கருத்தினைப் புலப்படுத்துவது போலும். வாடியும் நயந்தும் உட்கிடை கூடிய முகத்தினர் என்க.

நாடிய தண்ணளி நயந்து முட்கிடை
கூடிய முகத்தினர் குறுகு வாரவை. 20

அரசனிங் கில்லை கொல்லோ வான்றவ ரில்லை கொல்லோ
குரைகழல் வேந்தன் செங்கோல் கொடியதோ கோதி னூல்கள்
உரைசெயுந் தெய்வந் தானு மில்லைகொ லுறுதி யான
தருமமெங் கொளித்த தேகொ லென்றறத் தவிசிற் சார்வார். 21

தனபதி வரவு நோக்கி வஞ்சனைத் தாயத் தார்கள்
இனைவுறு மனத்த ராகி விம்மித மெய்தி வெல்லும்
மனவலி யிழந்து பண்டு வழக்கலா வழக்கால் வென்ற
வினைநினைந் துள்ள மச்ச நாணினால் விழுங்கப் பட்டார். 22

மாதுல ராகி வந்தோர் மருகனைத் தம்பின் வந்த
தாதுல ராத கோதை தன்னொடுந் தழீஇத்தங் கண்ட
மீதுல ராத சாம வேதமார்ப் பவர்போல் வாய்விட்
டாதுல ரானீ ரந்தோ வையவென் றழுது நைந்தார். 23

குடங்கையி னெடுங்க ணானுங் குமரனும் [1]வணிகர் தாளிற்
றடங்கணீ ராட்ட வீழ்ந்தார் தடக்கையா லெடுத்துப்புல்லி
மடங்கலே [2]றனையார் தாமு மற்றவர் தமைத்தங் கண்ணீர்
நெடுங்கடல்வெள்ளத் தாழ்த்திக் குமரனைநோக்கி [3]நைவார். 24

ஐம்படை மார்பிற் காணேன் சிறுசிலம் படியிற் காணேன்
மொய்ம்பிடை மதாணி காணேன் முகத்தசை சுட்டி காணேன்

---

21. ஆன்றவர் - அறிவால் அமைந்த முதியோர். நூல்கள் - வேதாகமங்கள். தருமம் - அறக்கடவுள்; இது பொறுத்தற்கரிய தீமைகளையும் பொறுத்துப் பின் தண்டிக்குங் கடவுள்.

22. இனைவு - வருத்தம். விம்மிதம் - அதிசயம். வினை - கொடுந் தொழில். அச்சம் - (அரசன் அறியின் தண்டிப்பானே என்ற) பயம். நாண் - (தம் குடிக்குப்பழி விளைக்குமே என்ற) நாணம்.

23. மாதுலராகி வந்தோர் - மாமனாக வடிவுகொண்டு வந்தருளிய சோமசுந்தரக்கடவுள். தம் பின் வந்த கோதை - தங்கை. தாது உலராத கோதை - (வலியார் பூமியில் தள்ளிப்புரட்டி அடித்ததனால்) மண் நீங்காத கூந்தலையுடைய வணிகமாது; தாது - மண்.

24. குடங்கை - உள்ளங்கை. தாளில் - தாளை: உருபுமயக்கம். நோக்கி - பார்த்து. நைவார் - மனம் வருந்துவார்.

பா-ம் — 1 வணிகன் றாளில். 2 றனையான்றானும். 3 நைதவார்.

மின்படு குழைகள் காணேன் வெற்றுடல் கண்டே னப்பா
என்பெறு மென்று பிள்ளைப் பணிகளுங் கவர்ந்தா ரென்னு. 25

அனைவரு மிரங்க வாய்விட் டழுதவ ரிளையா டன்னைத்
தனையனைக் கண்ணீர் மாற்றித் தடக்கையான் முதுகு தைவந்
தினையன்மின் னென்முன் வேறொன் றெண்ணன்மி[1]னெண்ணு வஞ்ச
வினைஞர்வல் வழக்குச் சோர்ந்து விடுவது காண்மி னென்னு. 26

நட்பிடை வஞ்சஞ் செய்து நம்பினார்க் [2]கூன்மா றுட்டத்
துட்படக் கவர்ந்து மேற்றோர்க் கிம்மியு முதவா ராயும்
வட்டியின் மிதப்பக் கூறி வாங்கியுஞ் சிலர்போ லீட்டப்
பட்டதோ வறத்தா றீட்டு நம்பொருள் படுமோ வென்னு. 27

மங்கல மாட மோங்கு மதுரைநா யகனை நோக்கிச்
செங்கரஞ் சிரமேற் கூப்பி மாணிக்கந் தேற்றி விற்கும்
எங்குல வணிக ரேறே யெம்மனோர் வழக்கை யிந்தப்
புங்கவ ரிடனுத் தீர்த்துத் தருகெனப் புலம்பி யார்த்தார். 28

ஆவலித் தழுத கள்வர் வஞ்சரை வெகுண்டு நோக்கிக்
காவலன் செங்கோ லுண்ணூல் கட்டிய தருமத் தட்டில்
நாவெனுந் துலைநா விட்டெம் வழக்கையு நமராய் வந்த
மேவலர் வழக்குந் தூக்கித் தெரிகென விதந்து சொன்னார். 29

---

25. ஐம்படை - பஞ்சாயுதமென்னும் ஓர் ஆபரணம்; இது காக்குங்கடவுளாகிய திருமாலின் சங்கு, சக்கரம், கதை, வாள், வில் என்னும் ஐம்படை வடிவாகச் செய்து சிறுவர்க்குப் பாதுகாவலாக அணியப்படுவது. மொய்ம்பு - தோள். மதாணி - தோளணி.

26. தனையனை - சுவிகார புதல்வனை. தைவந்து - தடவி. இனையல்மின் - வருந்தாதொழியக் கடவீர். வஞ்சவினைஞர் - ஞாதிகள்.

27. நம்பினார்க்கு ஊன் மாருட்டத்துட்படக் கவர்ந்தும் - நம்பிப் பொருளை வைத்தவர்க்கு உயிர் மயங்கும்படி அவரது பொருளைக் கவர்ந்தும். மாருட்டத்துட்படுதல் - மயங்கல். இம்மி - மத்தங்காய்ப் புல்லரிசி; இது சிறுமைக்குக் காட்டுவதோர் அளவை. படுமோ - அழியுமோ.

28. மங்கலம் - விழா (நீங்காத). புங்கவர் - அற மன்றத்தவர்.

29. ஆவலித் தழுதல்-ஆர்த்து வாய் புடைத்து அழுதல். கள்வர் - பொய் வேடம் பூண்ட இறைவர். துலை - துலாக்கோல். விதந்து சொன்னார் - விவரமாகச் சொன்னார்; மேன்மை தோன்றச் சொன்னார்.

பா-ம்—1 னென்னு. 2 கூண்மா.

நரைமுது புலியன் னான்சொற் கேட்டலு நடுங்கிச் சான்றோர்
இருவர்சொல் வழக்கு மேற்கொண் டநுவதித் திரண்டு நோக்கித்
தெரிவழி யிழுக்கு ஞாதி வழக்கெனச் செப்பக் கேட்டு
வெருவினர் தாயத் தார்கள் வலியரின் வேறு சொல்வார். 30

தவலருஞ் சிறப்பி னான்ற தனபதி வணிக ரல்லர்
இவரென வவையங் கேட்ப விருகையும் புடைத்து நக்குக்
கவளமா னுரித்துப் போர்த்த கண்ணுதல் வணிகர் கோமான்
அவரவர் குடிப்பேர் பட்டங் காணிமற் றனைத்துங் கூறும். 31

தந்தைதாய் மாமன் மாமி தாயத்தா[1]ரவரை யீன்றோர்
மைந்தர்க ளுடன்பி றந்தார் மனைவியர் கிளைஞர் மற்றும்
அந்தமில் குணங்கள் செய்கை யாதிய வடையா ளங்கள்
முந்தையின் வழுவா வண்ண முறையினான் மொழிந்தான் முன்னோன்.

அனையது கேட்ட வான்றோ ரனைவரு நோக்கி யந்தத்
தனபதி வணிகர் தாமே யிவரெனச் சாற்ற லோடும்
மனவலித் தாயத் தார்தம் வழக்கிழுக் கடைந்த தீது
நனைவழி வேம்பன் றேறிற் றண்டிக்கு நம்மை யென்னா. 33

இல்லினுக் கேகி மீள்வன் யானென்றுங் குளத்திற் கேகி
ஒல்லையில் வருவே னென்று மொவ்வொரு வார்த்தை யிட்டு
வல்லெழு வனைய தோளா ரனைவரும் வன்கா றள்ளச்
செல்லெழு முகில்போற் கூட்டஞ் சிதைந்தன ரொளித்துப் போனார். 34

அனையவர் போக நின்ற வறனவின் மன்றத் துள்ளோர்
தனபதி வணிகர் தந்த தனமெலாந் தத்த மைந்தற்

---

30. நரைமுது புலி அன்னான் - நரைத்த கிழப்புலியை ஒத்த தனபதி. அநுவதித்து - முற்கூறியதனைப் பின்னும் எடுத்துரைத்து. நோக்கி - சீர்தூக்கி; உள்ளவாறு உணர்ந்து.

31. தவல் - கெடுதல். கவளமான் - கவளமாகிய உணவினையுடைய யானை. குடிப்பேர் - கோத்திரப்பேர்.

32. முந்தையின் - முன்னுள்ளபடியே. முன்னோன் - வணிகராய் வந்த முதல்வர்.

33. ஈது - இதனை. நனை - தேன். தண்டிக்கும் - தண்டனை புரிவான்.

34. வல் எழு அனையதோளார் - வலிய தூண் போன்ற தோள்களையுடைய ஞாதிகள். எழு செல் - எழுந்து சிதறியோடும்.

பா-ம் - 1 ரிவரை.

கெனமனை யெழுதி வாங்கி யீந்தன ரீந்த வெல்லை
மனமொழி கடந்த நாய்கர் மறைந்துதங் கோயில் புக்கார். 35

இம்மெனப் பலருங் காண மறைந்தவ ரிருந்தண் கூடற்
செம்மலென் றறிந்து நாய்கச் சிறுவனுக் குவகை தூங்க
விம்மித மடைந்து வேந்தன் [1]வரிசைகள் வெறுப்ப நல்கிக்
கைம்மறி வணிகர் கோயில் புகுக்கினான் கனகங் கொண்டு. 36

பூத நாயகன் பூரண சுந்தரப் புத்தேள்
பாத சேகரன் வரகுண பாண்டியன் புயத்தில்
ஓத நீருல கின்பொறை சுமக்கவைத் தும்பர்
நாதர் சேவடித் தாமரை நகைநிழ லடைந்தான். 37

ஆகச் செய்யுள்—1,962

---

35. தத்த மைந்தர் - தத்துப் புதல்வன். மனை எழுதி - சாதனம் எழுதி. மன மொழி கடந்த நாய்கர் - சோமசுந்தரக்கடவுள்.

36. இம்மென - விரைவுக்குறிப்பு. நாய்கச் சிறுவன் - வணிகச் சிறுவன். கைம்மறி வணிகர் - கையில் மானேந்தி வணிகராய் வந்த இறைவர்.

37. பூதம் - பஞ்ச பூதங்கள். உம்பர் நாதர் - சிவபுரத்தின் தலைவர் : சிவபெருமான்.

பா-ம்—1 வரிசையுள்.

# 40. வரகுணனுக்குச் சிவலோகங் காட்டிய படலம்

—o—

பண்கொண்ட வேதமுத விடையீறு நாடரிய [1]பரன்மாமனாகியொரு வணிகன், எண்கொண்ட காணிபொருள் கவர்ஞாதி மாதுலரை யெதிரேறி வென்றபடி யிதுவாந், தண்கொண்ட நேமி வரகுணதேவ னெய்துபழி தன்னைத் துடைத்தனைய மனவன், கண்கொண்டு காணவுயர் சிவலோக மதுரைதனில் வருவித்த காதையினி மொழிவாம். 1

இயமான னிந்திரவி யெரிவா னிலஞ்சலில மெறிகா லெனும் பகுதி யிருநான், மயமான சுந்தரனை [2]மனம்வாய்மெய் யன்பினிறை வழிபா டடைந்தவர குணனைச், சயவேளை வென்றவடி வினனீறில் வென்றிபெறு சதவேள்வி யிந்திரனை நிகர்வோன், இயன்மேனி கொண்டவொளி யினிலேழ் பசும்புரவி [3]யினன்றேசு வென்றவர குணனே. 2

மறையாதி கலைபலவு மகமாதி பலவினையும் வழுவாது நிறுவுதலின் மலர்மேல், இறையாகி மலர்வனிதை [4]பிரிவான திருமகளிரிகபோகம் விளையமுறை செயலாற், கறையாழி வளைகளணி கரனாகி யிகல்செய்பொறி கரணாதி பகைகளையு நெறியால், அறை

---

1. எண்கொண்ட - மதிப்பினையுடைய. ஞாதி - தங்குடித்தமர். மாதுலர் - மிக்க பேரொளியுடையோர்; து(ல்)லம் - பேரொளி: தொகுத்தல் விகாரம். மாதுலர் - மாமன்மார் எனப்பொருள் கொள்வாருமுளர். மனவன் - மன்னவன். காதை - திருவிளையாடல்.

2. இயமானன் - ஆன்மா. சலிலம் - நீர். எறிகால் - வீசுகின்ற காற்று. இயமானன்......சுந்தரனை - அட்டமூர்த்த வடிவாகிய சோமசுந்தரக் கடவுளை. வரகுணன்-மேலான குணத்தையுடையவன். சயவேள் - வெற்றி பொருந்திய மன்மதன். சதம் - நூறு. இயல் - இலட்சணம் இனன் - சூரியன்.

3. மலர்மேல் இறை - பிரமன். மலர்வனிதை - இலக்குமி; பிரிவான திருமகளிர்-அவள் கூறுகிய அட்ட இலக்குமிகள். மலர்வனிதை

பா-ம்—1 பரமாம. 2 மனவாய்மெய். 3 யினதேசு. 4 பிறிவான.

வாய்மை யுரையின்முழு துணர்வாலெவ் வுயிருமிறை யரனுகி யுலகுமுறை செயுநாள். 3

வேட்டஞ்செய் காதலொரு நாட்டங்க வேகிவன மேட்டெங்கு மாதடவி யெரியா, நாட்டஞ்செய் காயுழுவை நீட்டுங்கை யானைமுக நாட்டும்ப லேனமிவை முதலா, ஓட்டஞ்செய் தேரிரவி கோட்டின்க ணேறியிரு ளூட்டந்தி மாலைவரு மளவாக், கோட்டஞ்செய் வார்சிலையின் மாட்டம்பி னூறியுயிர் கூட்டுண்டு மாநகரில் வருவான். 4

காலிற் கடும்புரவி மேலிற் கடிந்துவரு காலக் கடந்தனிலொர் மறையோன், மாலுற் றயர்ந்துமுகம் வேர்வைக் குறுந்திவலை வாரக் கிடந்துவிழி துயில்வோன், மேலக் கடும்புரவி கால்வைப்ப வந்தணனும் வீவுற் றவிந்தனன தறியான், கோலிற் செலும்பரியின் மீனத்த னுந்தனது கோயிற் புகுந்தனனவளவே. 5

கனவட்டத் தடியிடறப் பொறிவிட்டுப் புலனவியக் கரணத் துட் பொதியுயிர்விட் டவனுகந், தனையொக்கற் பனவரெடுத் தனர்கிட்டிக் குரிசில்கடைத் தலையிட்டத் திறமொழியத் தமிழ் மாறன், இனைவுற்றுப் பனவர்கையிற் கனகக்குப் பைகணிறைவித் தெமதிக்குற் றவனையெடுத் தெரிமாலை, புனைவித்தக் கடன்முடி

---

பிரிவான திருமகளிர் - இலக்குமி தாமரை மலரைவிட்டுப் பிரிந்து வந்தாற்போன்ற அழகினையுடைய மகளிருமாம்; இலக்குமி பல உருவமாகப்பிரிந்து வந்தாற்போன்ற அழகினையுடைய மகளிருமாம். கறையாழி வளைகள் அணிகரன் - இரத்தக்கறைபடிந்த சக்கரத்தையும் சங்கினையும் ஏந்திய கரங்களையுடைய திருமால். பொறி - பஞ்சேந்திரியம்.

4. மேடு - உயர்ந்த பூமி; மலையுமாம். மா - மிருகங்கள். தடவி - நன்ருகத் தேடிப்பார்த்து. உழுவை - புலி. முகநாட்டும் பல் ஏனம் - முகத்தைப் பூமியில் நிறுவி உழும் பல பன்றிகள்: முகத்தில் நாட்டிய பற்களையுடைய பன்றியுமாம். நாட்டு உம்பல் எனப்பிரித்து ஆண் பன்றி என்றலுமாம். கோடு - அத்தமனகிரி. நூறி - கொன்று. கூட்டுண்டு - கொள்ளை கொண்டு.

5. கடம் - அருநெறி, காடு. குறுந்திவலை - சிறியதுளி. வீவுற்று அவிந்தனன் - இறந்தொழிந்தான். கோலிற் செலும் பரியின் - அம்பு போலச் செல்லுங் குதிரையோடு. மீனத்தன் - பாண்டியன்.

வித் தனன்மற்றப் பழிபடரிற் புதையப்பற் றியதிடைவிட் டகலாதே. 6

பற்றிய பழிக்குத் தீர்வு பழமறைக் கிழவர் சொன்ன
பெற்றியி னைவே றுண்டி நதிக்கரைப் பெருநூற் கேள்வி
முற்றிய மறையோர்க் கீந்து மூவராந் தாரு வேந்தைச்
சுற்றியுந் தூர்வை கொய்து சுரபிகள் சுவைக்க வீந்தும். 7

அகமரு டணத்தா லோம மாற்றியு மானைந் தாவின்
நகைமணிக் கோடு [1]தோய்ந்த நளிர்புனல் குடித்துந் தான
வகைபல கொடுத்து நீங்கா வலியதா யிழுது பெய்த
புகையழ லென்மே விட்டுப் புலப்பட வளைந்த தன்றே. 8

ஏங்கும் பெருமூச் செறியுங்கை யெறியுங் குன்றின்
ஓங்குஞ் சிறகு முடன்றுார்த்திடு முன்னும் பின்னும்
பாங்குந் தொடருஞ் சிரிக்கும் பகுவாயை மெல்லும்
நீங்குங் குறுகும் பழிதாவென நேர்ந்து பற்றும். 9

மாசுண்ட தெய்வ மணிபோற்பணி வாயிற் பட்ட
தேசுண்ட தீந்தண் மதிபோலொளி தேம்பி வண்டு

6. கனவட்டம் - பாண்டியன் குதிரைப்பெயர். ஒக்கல்-சுற்றம். பனவர் - அந்தணர். எமதிக்குற்றவனை - எமலோகம் அடைந்தவனை எரிமாலை புனைவித்து - தகனக்கிரியைகளை முறைப்படி செய்வித்து. மாலை - முறை; இரவுமாம்; அந்திப்போதுமாம். படர் - துன்பம்.

7. தீர்வு - கழுவாய்; பிராயச்சித்தம். பழமறைக்கிழவர் - அந்தணர். ஐவேறு உண்டி - நக்கல், பருகல், உண்ணல், தின்னல், உரிஞ்சல் என்பன. மூவர் ஆம் தாரு வேந்து - மும்மூர்த்திகளின் வடிவமாகிய அரசமரம். அரசமரத்தின் அடிப்பகுதி பிரமவடிவு; நடுப்பகுதி விட்டுணு வடிவு; மேற்பகுதி உருத்திர வடிவு. தூர்வை-அறுகம்புல்.

8. அகமருடணம்-பாவத்தைப்போக்கும் ஒருவகை வேதமந்திரம். ஆன் ஐந்து - பஞ்சகௌவியம். ஆவின் நகை மணிக்கோடு - பசுவின் கொம்பு; கட்கமென்னும் ஒரு புண்ணிய மிருகத்தின் கொம்பு எனப் பொருள் கொள்வாருமுளர்; அதற்குக் கோ என்னும் பரியாயப்பெயர் உடைமைபற்றி 'ஆ' எனக்கொண்டார் என்பர். குடித்தமை கூறவே குளித்தமையும் பெறப்படும்.

9. உடன்று - கோபித்து. பாங்கு - இருமருங்கு. பழிதா - பழிக்குப்பழி கொடு. நேர்ந்து - எதிர்த்து.

பா-ம்—1 தோய்த்த.

மூசுண்ட தான முகமாவுண்ட வெள்ளில் போலக்
காசுண்ட பூணு னறைபோய கருத்த னானன். 10

மறையோர்கள் பின்னும் பழிமேலிடு வண்ண நோக்கி
இறையோ யிதுநான் முகன்சென்னி யிறுத்த கூடல்
அறவே தியனைத் தினமாயிரத் தெண்காற் சூழல்
உறவே [1]யொழிக்கப் படுமின்ன முரைப்பக் கேட்டி. 11

ஆறு விரத நெறியாலிரண் டைந்து வைகல்
வாறு டனையம் முறையால்வலஞ் செய்து வந்தாய்
ஆறு லதற்கு வழிகாட்டுமென் றையர் கூறப்
போனு னரசன் புனிதன்றிருக் கோயில் புக்கான். 12

விழியா யிரத்தோன் பழிதீர்த்தனை வேதி யன்றன்
கழியாத மாபா தகந்தீர்த்தனை கௌவைக் கங்கைச்
சுழியா றலைக்குஞ் சடையாயெனைத் தொட்ட லைக்கும்
பழியா னதுந்தீர்த் தருளென்று பணிந்து வீழ்ந்தான். 13

எண்ணும் படியம் முறையால்வளைந் தேத்த வையன்
விண்ணின் றியம்பு மரசேபரி மேத வேள்வி
நண்ணும் பயனே ரடிவைப்பினி னண்ண வெம்மைப்
பண்ணும் வலத்தான் மகிழ்ந்தேம்பழி யஞ்சன் மன்னே. 14

---

10. பணி - இராகு என்னும் பாம்பு. ஒளிதேம்பி-பொலிவு குன்றி. வண்டு மூசுண்டதான முகமா உண்ட வெள்ளில்-வேழமென்னு நோய் பிடித்தலால் உள்ளீடற்ற விளாங்கனி. அறைபோதல் - அறிவாகிய உள்ளீடு நீங்குதல்.

11. கூடல் அற வேதியன் - சோமசுந்தரக்கடவுள். சூழல்-வலம் வரல்.

12. இரண்டு ஐந்து வைகல் - பத்து நாட்கள். ஐயர் - அந்தணர்கள். புக்கான் - புகுந்தான் ; புகு : பகுதி.

13. இந்திரனும் ஓரந்தணனும் புத்திபூர்வமாகச் செய்த கொலையால் வந்த பிரமகத்தியைப் போக்கிய தேவரீருக்கு, அபுத்திபூர்வமாக அடியேனிடம் அடைந்த பிரமகத்தியைப் போக்கியருளுதல் அரிதன்றே என்பார், "பழி ஆனதும் தீர்த்தருள் என்று பணிந்து வீழ்ந்தான்" என்றார். கௌவை - ஒலி.

14. வளைந்து - வலம் வந்து. பழி அஞ்சல் - பழிக்கு அஞ்சுதல் ஒழிக.

பா-ம்—1 யொழியப்.

பொன்னோடு முத்தங் கொழிக்குந்துறைப் பொன்னி நாடன்
நின்னோ டமராற்ற நினைந்தெழு நீயு நேர்வாய்
அன்னோ னுனக்குப் புறகிட்டகன் றோடு நீயும்
பின்னோடி யெட்டிப் பிடிப்பாரிற் றுரத்து மெல்லை. 15

எமையா மருச்சித் திருக்குந்தலத் தெய்து வாயால்
அமையாத வன்கட் [1]பழியாற்றுது மென்னச் சேற்கண்
உமையாண் மணாள னருள்வாழ்த்தி யுரக னுச்சிச்
சுமையாறு தோளான் றொழுதான்ற னிருக்கை புக்கான். 16

ஆர்த்தார் முடியோன் சிலநாள்கழித் தாற்ற லேற்ற
போர்த்தாவு வேங்கைக் கொடித்தானை புடவி போர்ப்பப்
பேர்த்தார் கலிவந் தெனப்பேரிய மார்ப்பக் கன்னிப்
பார்த்தாம வேன்மீ னவனூஞ்டிற் படர்ந்த வெல்லை. 17

மிடைந்தேறு நேரிப் பொருப்பன்படை வேலை மேற்சென்
றடைந்தேறி மீனக் கொடியோனம ராட வாழி
கடைந்தேறு வெற்பிற் கலங்கிற்றெனக் கிள்ளி சேனை
உடைந்தேக வெந்நிட் டுடைந்தோடின னுள்ளம் வெள்கா. 18

சுறவக் கொடியண் ணறுரந்துபின் பற்றிச் செல்வோன்
புறவக் கடிமுல் லையுந்தாமரைப் போது மேந்தி
நறவக் கழிநெய் தலங்கானலின் ஞாங்கர் மொய்த்த
இறவப் புலவு கழுவீர்ந்துறைப் பொன்னி சேர்ந்தான். 19

[2]பூசத் துறையிற் புகுந்தாடியப் பொன்னித் தென்சார்
வாசத் திடைமா மருதைப்பணி தற்கு வைகைத்

---

15. நேர்வாய் - (அவனோடு போர் செய்ய) எதிர்ப்பாய். புற கிட்டு - புறங்காட்டி. பிடிப்பாரில் - பிடிப்பவரைப்போல.

16. எமையாம் அருச்சித் திருக்குந் தலம் - திருவிடைமருதூர்; இவ்வரலாற்றின் விரிவை அத்தலபுராணத்துட் காண்க. உரகன்...... தோளான் - வரகுணபாண்டியன்.

17. ஆற்றலேற்ற - வலிமை மிக்க. புடவி - பூமி. கன்னிப்பார் - பாண்டிநாடு. எல்லை - காலம்.

18. ஆழி கடைந்தேறு வெற்பு - மந்தரமலை. கிள்ளி - சோழன். வெள்கா - நாணி.

19. புறவம் - முல்லைநிலம். ஞாங்கர் - பக்கம். இறவு - இருல் மீன். புலவு - புலால் நாற்றம்.

பா-ம்—1 பழிமாற்றுது. 2 பூசற்றுறையிற்.

தேசத் தவன்கீழ்த் திசைவாயில் கடந்து செல்லப்
பாசத் தளையும் பழியும்புற நின்ற வன்றே. 20

சுருதிச் சுரும்பு புறஞ்சூழ்ந்து குழறத் தெய்வ
மருதிற் சிறந்த பெருந்தேனைக்கண் வாயங் காந்து
பருகிப் படிந்து தழல்வாய்வெண்ணெய்ப் பாவை யொப்ப
உருகிச் செயலற் றுரையற்றுணர் வாகி நின்றான். 21

நிராமய பரமா னந்த நிருத்தநான் மாடக் கூடற்
பராபர விமையா முக்கட் பகவ பார்ப்பதி மணாள
புராதன வகில நாத புண்ணிய மருத வாண
அராவணி சடையா வென்றென் றளவிலாத் துதிகள் செய்தான். 22

சொற்பதங் கடந்த சோதி துதித்தடி பணிந்த வேந்தை
மற்பெருந் தோளாய் கீழை வாயிலிற் பிரமச் சாயை
நிற்பதந் நெறியாற் செல்லே னிமுன்மதி யுரிஞ்சு மேலைப்
பொற்பெரு வாயி னீங்கிப் போதிநம் மதுரைக் கென்றான். 23

வரகுண னதுகேட் டையன் மருதினை வலஞ்து நீங்கற்
கருமையால் வாயி றோறு மடிக்கடி வீழ்ந்து வீழ்ந்து
வரைதுளைத் தன்ன மேலை வாயிலாற் போவா னன்ன
திருமணிக் கோபு ரந்தன் பெயரினாற் செய்து சின்னாள். 24

---

20 பூசத்துறை – தைமாதத்தில் பூசநட்சத்திரத்தில் யாவரும் ஸ்நானஞ் செய்யுந் திருவிடை மருதூர்க் காவிரித்துறை. மாமருதை - பெருமை பொருந்திய திருவிடைமருதூரில் எழுந்தருளிய இறைவனை. பழி - பிரமகத்தி.

21 சிவபெருமான், தாம் திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிருக்குந் தலங்களை உமாதேவியாருக்குக் காட்டிக்கொண்டு திருவிடை மருதூர்க்கு நேரே வரும்போது திருக்கயிலை அவரது பிரிவாற்றுமல் மருதவிருட்சமாக வந்து அங்கு நின்றமையால் மருதமரம், 'தெய்வ மருது " எனப்பட்டது.

22. நிராமயன் - நோயில்லாதவன். பகவன் - ஐசுவரியம் முதலிய ஆறு குணங்களையுடையவன். மருதவாண - மருதமரத்தின் நீழலில் வசிப்பவனே.

23. சொற்பதம் - சொற்பிரபஞ்சம் பொருட் பிரபஞ்சம். நிற்பது- நிற்கின்றது.

24. வரை - மலை : இருமடியாகுபெயர். அன்ன திருமணிக் கோபுரம் - மேலைக்கோபுரம்.

திருப்பணி பலவுஞ் செய்து தென்றிசை வழிக்கொண் டேகிச்
சுருப்பணி நெடுநாண் பூட்டுஞ் சுவைத்தண்டச் சிலையாற் காய்ந்த
மருப்பணி சடையான் கோயில் வழிதொறுந் தொழுது போற்றிப்
பொருப்பணி மாடக் கூடற் பொன்னக ரடைந்தான் மன்னோ. 25

தொடுபழி தொலைவித் தாண்ட சுந்தரத் தோன்றல் பாதக்
கடிமல ரடைந்து நாளுங் கைதொழு துலக மெல்லாம்
வடுவறு செங்கோ லோச்சும் வரகுண னறவோர் நாவால்
அடுசுவை யமுத மன்ன வரன்புகழ் செவிம டுப்பான். 26

வேதமா கமம்பு ராண மிருதிகண் முதலா நூலும்
ஓதுவ துலகின் மிக்க துருத்திர வுலக மென்னும்
போதம தகங்கொண் டந்தப் பொற்பதி காண வேண்டுங்
காதல்செல் வழியே யீசன் கங்குலிற் கோயி லெய்தா. 27

மாழை மான்மட நோக்கிதன் மணாளனை வணங்கிப்
பீழை யேழ்பவங் கடந்துநின் னடிநிழல் பெற்றோர்
சூழ நீசிவ புரத்தில்வீற் றிருப்பது தொழுதற்
கேழை யேற்கொரு கருத்துவந் தெய்திய தெந்தாய். 28

என்ற காவல னன்பினுக் கெளியராய் வெள்ளி
மன்ற வாணரவ் வுலகையிவ் வுலகிடை வருவித்
தின்று காட்டுது மிவற்கெனத் திருவுளத் தெண்ணம்
ஒன்றி னாரஃ துணர்ந்ததா லுருத்திர வுலகம். 29

கோடி மாமதிக் கடவுளர் குருஉச்சுடர் பரப்பி
நீடி யோரிடத் துதித்தென மின்மினி நிகர்த்து

25. சுருப்பு - சுரும்பு - வண்டு. சுவைத்தண்டச் சிலையான் - கரும்பு வில்லையுடைய மன்மதன். மருப்பு - பன்றிக்கொம்பு.

26. வடு அறு - குற்றமற்ற, அறவோர் - அந்தணர்.

27. உலகில் - பிரமன் உலகு முதலிய உலகங்களுக்கு. உருத்திர வுலகம் என்னும்-உருத்திரவுலகமே என்று சொல்லும். ஈசன் கங்குல்-சிவராத்திரி.

28. மாழை - பொன்; இளமை எனினுமாம். பவம் - பிறவி. பீழை - துன்பம். வீற்றிருப்பது - எழுந்தருளியிருத்தல்.

29. அன்பினுக் கெளியராய் - பத்திவலையிற் படுவோராய். உணர்ந்தது அச்சிவபுரத்திற்கு அதிதெய்வம் என்க.

30. குருஉ - நிறம். இருசுடர் - சந்திரசூரியர். தேடினார்க்கு - தேடிய பிரம விஷ்ணுக்களுக்கு.

வாடி வானிரு சுடரொளி மழுங்கவா னிழிந்து
தேடி னார்க்கரி யானுறை சிவபுரந் தோன்ற. 30

ஆண்ட நாயக னந்தியை யழைத்தெமக் கன்பு
மாண்ட காதலான் வரகுண வழுதிநம் முலகங்
காண்டல் வேண்டினன் காட்டெனக் கருணையா னேவல்
பூண்ட வேத்திரப் படையினான் றெழுதனன் போந்தான். 31

வருதி யாலெனப் பணிந்தெழு வரகுணற் கொடுபோய்க்
கருதி யாயிரம் பெயருடைக் கடவுளான் முகத்தோன்
சுருதி யாதியீ றளப்பருஞ் சொயம்பிர காசப்
பரிதி யான்சிவ புரமிது பாரெனப் பணித்தான். 32

கருப்பு ரங்கமழ்ந் துளர்பசுங் கால்களா லுதையுண்
டருப்பி னஞ்சிதைந் தாயிரப் பத்தியோ சனைபோய்
மருக்க மழ்ந்துநா றுயிரம் வாலிதழ்க் கமலம்
இருக்கு மோடைகள் புடைதொறுந் தழுவிய யாறும். 33

வரம்பின் மாதரார் மதுரவாய் திறந்துதேன் [1]வாக்கும்
நரம்பி னேழிசை யாழிசை நகைமலர்த் தருவின்
சுரும்பி னேரிசை [2]நாரத தும்புரு விசைக்கும்
இரும்பு நீர்மெழு காக்கிய வின்னிசை யெங்கும். 34

---

31. ஆண்ட நாயகன் - (நம்மை) அடிமையாகக் கொண்டு அருளும் சோமசுந்தரக்கடவுள், மாண்ட - மாட்சிமைப்பட்ட. காண்டல் - தரிசிக்க. வேத்திரப்படை - பிரம்பாகிய ஆயுதம். வேத்திரப் படையினான் - திருநந்தி தேவர்.

32. ஆயிரம் பெயருடைக் கடவுள் - இங்குத் திருமால். உலகத்துப் பொருள்களை விளக்குஞ் சூரியன் முதலிய சோதிகட்கும் தாமே ஒளிகொடுத்து அவற்றை விளக்கியும் தம்மை அவ்வாறு விளக்குவார் பிறரின்றி இயற்கை ஒளியாய்த் தாமே விளங்கியும், நிற்றலின், சிவபிரான், "சொயம்பிரகாசப் பரிதி" எனப்பட்டார் என்க.

33. பசுங்கால் - இளந்தென்றல். அருப்பு - அரும்பு : வலித்தல் விகாரம். ஆயிரப்பத்து - பதினாயிரம். வால் இதழ் - வெண்மையாகிய இதழ்களையுடைய.

34. மாதரார் - தெய்வப்பெண்கள். நேர் இசை - ஒத்த இசை. இரும்பை மெழுகு நீர்மைத் தாக்கும்; நீர் - நீர்மை : ஈறு கெட்டு நின்றது.

பா-ம்—1 வார்க்கும். 2 நாரதர்.

அமுத வாவியும் பொன்மல ரம்புயத் தடமுங்
குமுத வாயர மாதராங் குயிலினம் பயிலும்
நிமிர வாள்விடு மரகத நெடியபைங் காவுந்
திமிர மாசறக் கழுவிய தேவர்வாழ் பதமும். 35

[1]அலங்கு பாற்கடல் போற்புறத் தமுதநீ ரகழும்
பொலஞ்செய் ஞாயில்சூழ் புரிசையும் பொன்செய்கோ புரமும்
நலங்கொள் பூவியல் வீதியு நவமணி குயின்ற
துலங்கு மாளிகைப் பந்தியுஞ் சூளிகை நிரையும். 36

ஐம்பு லங்களும் வைகலும் [2]விருந்ததா வருந்த
வெம்பு நால்வகை யுண்டியும் வீணையுஞ் சாந்துஞ்
செம்பொ னாரமு மாடலின் செல்வமுந் தெய்வப்
பைம்பொன் மேகலை யோவியப் பாவையொப் பாரும். 37

படர்ந்த வார்சடை யுருத்திரர் பணைத்திறு மாந்த
வடங்கொள் பூண்முலை யுருத்திர மகளிரொ டமரும்
இடங்கொண் மாளிகைப் பந்தியு மிகல்வினை துன்பங்
கடந்த செல்வமுங் கவலையில் போகமுங் காட்டி. 38

முண்ட காசனன் பதமிது மூவுல களந்த
தண்டு ழாயவன் புரமிது தனிமுதல் வடிவங்
கொண்டு வீறுசா லுருத்திரர் கோப்பதி யின்ன
எண்டி சாமுகங் காவல ருறைவிட மிவைகாண். 39

---

35. நிமிர வாள்விடும் - மிக்க ஒளி வீசும். திமிரம் - இருள். தேவர் வாழ்பதம் - இது சிவபுரத்தின் வடதிசைக்கண் உள்ளது.

36. அலங்குதல் - அசைதல். ஞாயில் - மதிலுறுப்பு; மதின்மேல் மண்டபம். மாளிகை - இங்குத் தேவர் கோயில். சூளிகை - மாடம்.

37. மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளும் முறையே ஓவியப்பாவை யொப்பார், நால்வகையுண்டி, செம்பொன் ஆரம் ஆடலின் செல்வம் முதலியன, சாந்து, வீணை ஆகிய நுகர்ச்சிப் பொருள்களை ஏற்ற பெற்றி நுகர என்க. வெம்பு - சுடுகின்ற, விரும்புகின்ற.

38. பணைத்து - பருத்து. இறுமாந்த-நிமிர்ந்த. இகல்-பகைமை. வினை - (பிறரால்) உண்டாகும்.

39. முண்டகாசனன் - பிரமன். தனிமுதல் - சிவபெருமான். திசாமுகம் - திசை.

பா-ம்—1 அலம்பு. (அலம்புதல் - ஒலித்தல்.) 2 விருந்தவா.

புலரு முன்புன லாடிநீ றூடிநம் புனிதன்
இலகு மாலயம் விளக்கிநந் தனப்பணி யியற்றி
மலர்கொய் தாய்ந்தனர் தொடுத்தரன் புகழ்செவி மடுத்திவ்
வுலக வாண ராய்ப் போகமுற் றுறைகுந ரிவர்காண். 40

தூய ராகியைஞ் சுத்திசெய் தகம்புற மிரண்டின்
நேய ராய்விதி நெறியினுன் முகமனீ ரெட்டாற்
காயம் வாய்மன வொருமையா லர்ச்சித்துக் கடவுள்
நாய னாருரு குறைபத நண்ணினு ரிவர்காண். 41

கிளர்ந்த காலினு லங்கியை நிமிர்த்துமேற் கிடைத்து
வளர்ந்த பிங்கலை யிடைநடு வழியுகு மதியின்
விளைந்த வின்னமு துண்டுநம் விடையவன் வடிவங்
குளந்த னிற்குறித் தவனுருக் கொண்டவ ரிவர்காண். 42

மூக்க ணுயகன் பொருட்டென வேள்விகண் முடித்துத்
தொக்க வேதிய ரிவர்புனற் சாலையித் தொடக்கத்
தக்க பேரறம் புகழ்பயன் றமைநன்கு மதிக்கும்
பொக்க மாறிய நிராசையாற் புரிந்தவ ரிவர்காண். 43

மறையி னுற்றினுற் றந்திர மரபினுன் மெய்யின்
நிறையு நீற்றினர் நிராமய னிருத்தனைந் தெழுத்தும்

---

40. இச்செய்யுள் தாதமார்க்கமாகிய சரியையின் வழி நின்றோர் பேற்றையுணர்த்துகின்றது. புலர்தல் - விடிதல். நந்தனம் - நந்தவனம். வாணர் - வசிப்பவர்; வாழ்+நர்=வாணர்.

41. இச்செய்யுள் புத்திரமார்க்கமாகிய கிரியையின் வழி நின்றோர் பேற்றையுணர்த்துகின்றது. ஐஞ்சுத்தி - தானசுத்தி, ஆன்மசுத்தி, திரவிசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி என்பன. முகமன் ஈரெட்டு-சோடசோபசாரம்.

42. இச்செய்யுள் சகமார்க்கமாகிய யோகத்தின் வழி நின்றோர் பேற்றையுணர்த்துகின்றது. கால் - பிராணவாயு. அங்கி-மூலாக்கினி, உடல மத்தியத்துள்ள அக்கினி மண்டலத்து அக்கினி. நிமிர்த்தல் - வன்னி பீச மந்திரோச்சாரணத்தால் அவ்வக்கினியைச் சொலிப்பித்தல். மேற்கிடைத்தல் - பிரமரந்திரம் வரை செல்லுதல், புருவமத்தியம் வரை செல்லுதல். மதியின் - சந்திர மண்டலத்தில். குளம் - புருவமத்தி.

43. புனற்சாலை - தண்ணீர்ப்பந்தல். பொக்கம் - பொய். புகழையும் பயனையும் கருதிச்செய்யும் புண்ணியம் ஆடம்பரத் தன்மையது ஆதலால், 'பொக்கமாறிய' என்றார். நிராசை - சிவப்பிரீதி.

அறையு நாவினர் பத்தரா யரன்புகழ் கேட்கும்
முறையி னுலிவர் வினைவலி முருக்கினேர் கண்டாய். 44

மறைக ளின்சத வுருத்திர மந்திர நவின்ரேர்
நிறைகொள் கண்டிகை நீறணி நீரரியா ரேனுங்
குறிகு ணங்குலன் குறித்திடா தன்பரைச் சிவனென்
றறியு மன்பினுற் பிறவிவே ரறுத்தவ ரிவர்காண். 45

ஆனஞ் சாடிய பரஞ்சுட ரிறைசிவ ஞான
தானஞ் செய்தவர் தருப்பணஞ் செய்தவர் சாம
கானஞ் செய்தவற் காலயங் கண்டுதா பித்தோர்
ஊனஞ் சேர்பிறப் பறுத்துவா ழுத்தம ரிவர்காண். 46

சிவனை யர்ச்சனை செய்பவர்க் கிசைவன செய்தோர்
அவனெ னக்குறித் தடியரைப் பூசைசெய் தாறு
சுவைய வின்னமு தருத்தினேர் தொண்டர்தம் பணியே
தவமெ னப்புரிந் துயர்ச்சியைச் சார்ந்தவ ரிவர்காண். 47

ஆதி சுந்தரக் கடவுளுக் காலயம் பிறவும்
நீதி யாலருச் சனைபிற பணிகளு நிரப்பிப்
பூதி சாதன வழிநிலம் புரந்திவ ணடைந்த
கோதி லாதநின் குடிவழிக் கொற்றவ ரிவர்காண். 48

என்று வேத்திரங் கொடுகுறித் தெம்மிறை நந்தி
கொன்றை வேணிய னடியர்தங் குழாத்தினைத் தேற்றி

---

44. தந்திர மரபு - சிவாகமவிதி. அறையும் - (முறைப்படி) உச்சரிக்கும். முருக்கினேர் - கெடுத்தவர்.

45. சதவுருத்திர மந்திரம் - இது வேத மந்திரங்களில் ஒன்று; சிறந்த சித்தி யளிக்க வல்லது. நீரர் - தன்மையுடையவர். குறி - பெயர்.

46. சிவஞானம் - இது பரஞானம், அபரஞானம் என இருவகைப் படும். சிவஞானதானம் - சிவாகமத்தின் உண்மைப் பொருளைப் பக்கு வான் மாக்களுக்கு உபதேசித்தலும், சிவாகமம் முதலியன கொடுத் தலும், அவற்றை எழுதும்படி செய்தலுமாம். தருப்பணம் - சிவப் பிரீதியாக அளித்தல்.

47. இசைவன - இயன்ற உதவிகள். அவன் என - அச்சிவ பெருமானே என்று கருதி.

48. பிறவும் - நிலம் முதலிய பிற பொருள்களும். இவண் - இவ் விடம்; சிவலோகம்.

நின்று வீழ்ந்துவீழ்ந் தஞ்சலி முகிழ்த்திட நெறியே
சென்று வானவர் நாயகன் றிருமுன்பு விடுத்தான். 49

மறைக ளாகமம் வடிவெடுத் திருபுடை வாழ்த்த
நறைகொள் யாழ்தழீஇத் தும்புரு நாரதர் பாட
அறைகொள் வண்டிமிர் கொம்பரி னரம்பைய ராடக்
குறைகொள் வானவர் பதங்கிடை யாதிறை கொள்ள. 50

மதங்க விழ்க்குமால் வரைமுக மைந்தனுஞ் சூரன்
கதங்க விழ்த்தவேற் கந்தனுங் கருதலன் வேள்வி
விதங்க விழ்த்தவாள் வீரனும் வெயின்முடித் தார்தேன்
பதங்க விழ்ப்பவீழ்ந் தேயின பணிவழி நிற்ப. 51

தூங்கு தானையை யொதுக்கிவாய் துணைக்கரம் பொத்தி
ஓங்கு மாலயன் றங்குறை யொதுங்கிநின் றுரைப்ப
வாங்கு வான்சிலை யிந்திரன் முதற்றிசை வாணர்
தாங்க டாம்புரி காரியக் குறைநின்று சாற்ற. 52

எழுவி னோடுதண் டேந்திவாய் மென்றெயி றதுக்கிக்
குழுமு பாரிடத் தலைவருங் கோடிகூற் றொதுங்கி
விழும மூழ்கிமெய் பணித்திட விதிர்க்குமுக் குடுமிக்
கழுமு ளேந்திய கணத்தவர் கடைதொறுங் காப்ப. 53

சித்தர் வானவர் தானவர் சாரணர் திணிதோள்
வைத்த யாழினர் கின்னரர் மாதவ ரியக்கர்

---

49. குறித்து - சுட்டிக்காட்டி. தேற்றி - விளக்கி. பிரமன் முதல் பாண்டியர் இறுதியாக அங்கு வசிப்பவர்கள் சிவனடியார்கள் ஆதலால், "அடியர் தங்குழாத்தினைத் தேற்றி" என்றார்.

50. நறைகொள் - இசை யமைந்த. பதம் - காலம். இறைகொளல் - தங்குதல்.

51. மதங் கவிழ்க்கும் மால்வரை முக மைந்தன் - விநாயகக் கடவுள். கதம் - சினம். கருதலன் - பகைவனாகிய தக்கன். வாள் வீரன் - வீரபத்திரக் கடவுள்.

52. தூங்குதானை - தொங்குகின்ற வஸ்திரம். திசைவாணர் - திக்குப்பாலகர்.

53. எழு - வளைதடி. விழுமம் - துன்பம். முக்குடுமிக் கழுமுள் - சூலாயுதம்.

54. தானவர் - அசுரர். யாழினர் - விஞ்சையர். பாதல வாணர் - நாகலோக வாசிகள்.

பைத்த பாரிடர் காருடர் பாதல வாணர்
சுத்த யோகியர் முதற்கணத் தொகையெலாம் பரவ. 54

இனிவ ரும்பிறப் பறுத்தெமைக் காத்தியா லெனத்தங்
கனிவ ரும்பிய வன்பெழு கருணையா ரமுதைப்
பனிவ ருந்தடங் கண்களாற் பருகிமெய் பனிப்ப
முனிவர் சங்கர சிவசிவ வெனமுறை முழங்க. 55

வரந்த வாதன யாவர்க்கும் வரன்முறை வழங்கி
முருந்த [1]வாநகை மலைக்கொடி முகிழ்நகை யரும்பத்
திருந்த வாயிரங் கதிர்விடு சிங்கமெல் லணைமேல்
இருந்த நாயக னிருக்கைகண் டிறைஞ்சினு னிறைவன். 56

உரைக ளுந்தடு மாறமெய் யுரோமமுஞ் சிலிர்ப்பக்
கரையி றந்தவின் னருட்பெருங் கடலிலன் பென்னுந்
திரையி றந்தவா ரீர்த்திட மிதந்துபோய்ச் செப்பின்
வரையி றந்தவா னந்தவா ரமுதைவாய் மடுத்தான். 57

ஐன்பு லன்களுங் கரணமுந் தன்னவே யாக்கி
அன்பு டம்புகொண் டவனெதி ரருட்சிவ லோகம்
பின்பு பண்டுபோன் மதுரையாப் பிராட்டியுந் தானும்
முன்பி ருந்தவா றிருந்தனன் சுந்தர மூர்த்தி. 58

வேந்தர் சேகரன் வரகுணன் விண்ணிழி கோயில்
ஏந்தல் சேவடி யிறைஞ்சிநின் றிறையருட் பெருமை
ஆய்ந்த வாவுதன் னகம்புக வின்பமோ டன்பு
தோய்ந்து தாரைநீர் துளும்பநாக் குழறிடத் துதிப்பான். 59

---

55. அன்பு - அன்பாகிய வெள்ளத்தில். அமுது - சிவமாகிய அமுதினை. கண்களால் - கண்களாகிய வாயினால். பனிவரும்-ஆனந்த பாஷ்பம் சிந்தும். பனிப்ப - நடுங்க.

56. முருந்து அவாம் நகை - மயிலிறகின் அடிக்குருத்தும் விரும்புகின்ற பற்கள்.

57. உரைகள் - (தான்) பேசுஞ் சொற்கள். செப்பின் வரை - சொல்லளவு, விதந்து சொல்லும் இனிய அளவில்லாத ஆனந்தமுமாம்.

58. தன்னவே ஆக்கி - தன்வசத்தனவே யாகச் செய்து. அன்பு உடம்புகொண்டவன் - வரகுணபாண்டியன்.

59. ஏந்தல் - இங்குச் சோமசுந்தரக்கடவுள். சேவடி - சிவந்த பதம் : செம்மை+அடி. தாரை - கண்.

பா-ம்—1 வாணகை.

[1]நாயினேன் றன்னை நடுக்கும் பழியகற்றித்
தாயினே ராகித் தலையளித்தாய் தாள்சரணஞ்
சேயினேன் காணச் சிவலோகங் காட்டிப்பின்
கோயினேர் நின்றவருட் குன்றேநின் றாள்சரணம். 60

மாழாந்து செய்யும் வினைவழிபோய் வன்னரகிற்
றாழா தடியனேற் கன்புதந்தாய் தாள்சரணம்
ஏழாகி நான்கு வகையா யெழுபிறப்பும்
பாழாக வென்னைப் பணிகொண்டாய் தாள்சரணம். 61

வெங்கட் பழியின் வினையேனை வேருக்கித்
திங்கட் குலக்களங்கந் தீர்த்தாய்நின் றாள்சரணம்
அங்கட் சிவபுரமுண் டன்புடையார்க் கென்பதைநின்
றெங்கட்குக் காட்டி யிசைவித்தாய் தாள்சரணம். 62

என்ன வேத்தியின் னருண்முகந் திறிலா வன்பாற்
பின்னர் வேறுபல் பூசையும் பிறக்குவித் திருந்தான்
மன்ன ரேறடை யார்க்கொரு மடங்கலே றடல்வேற்
றென்ன ரேறெனத் தோன்றிய வரகுண தேவன். 63

என்ற தென்மலை முனிவனை யிருடிக ணோக்கி
அன்று வாசவன் பழிகரி சாபமந் தணனைக்

---

60. சேயினேன் - (காண்டற்குத்) தூரத்தினனாகிய யான்; சேய் - சேய்மை, தூரம்.

61. மாழாந்து - மயங்கி. வினை - தீச்செய்கை. நான்கு வகையாய் ஏழு ஆகி எழு பிறப்பு - அண்டசம், சுவேதசம், உற்பிச்சம், சராயுசம் என்னும் நால்வகைத் தோற்றத்தனவாய்த் தேவர், மனிதர், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்னும் ஏழு பிரிவினவாகி எழுகின்ற பிறவிகள்.

62. வெங்கண் பழியின் - கொடிய பழியினின்று நீக்கிய. அங்கண் - அவ்விடம். சிவபுரம் உண்டு என்பது ஆகமவளவை. காட்டி இசைவித்தாய் என்பது காட்சியளவை.

63. பிறக்குவித்து - பிறங்குவித்து - விளங்கச்செய்வித்து : வலித்தல் விகாரம்.

64. தென்மலை முனிவன் - அகத்தியர். பிறதலங்களிற்செய்த கொடும்பழிகளைத் தீர்த்தருளுவது இத்தலம் என்பது இச்செய்யுளால் பெறப்பட்டது.

பா-ம்—1 நாயினே னென்னை.

கொன்று தாயொடுங் கூடிய கொடுவினை முதலாத்
துன்று பாவமு மதுரையிற் றொலைத்தன னன்றோ. 64

பரம னெண்குணன் பசுபதி வரகுணற் பற்றும்
பிரம வன்பழி யிடைமரு திடைவிட்டுப் பெயர
வரம ளித்தவா றென்னைகொல் வள்ளலே யிதனைத்
திரமு றப்புக லெமக்கென முனிவர்கோன் செப்பும். 65

பூத நாயகன் சுந்தரன் புண்ணிய மூர்த்தி
யாத லாலன்ன தலத்துறை யடியவ ரஞ்சிப்
பாத கஞ்செயா தொழுகுறா உம் படிநினைந் தினைய
தீது றாஉம்பழி தனையிடை மருதினிற் றீர்த்தான். 66

என்ற கத்திய முனியிறை யிறைகொடுத் தியம்ப
நன்றெ னச்சிரம் [1]பணிந்துமெய்ஞ் ஞானவா னந்தந்
துன்றி நற்றவர் சுந்தரச் சோதிசே வடிக்கீழ்
ஒன்று மற்புத வானந்த வுததியுட் [2]குளித்தார். 67

அன்னதனித் தொன்மதுரை யன்றுதொடுத் தின்றெல்லை
தன்னனைய நாயகில தலங்கள்சிகா மணியாகிப்
பொன்னகரின் வளஞ்சிறந்து பூவுலகிற் சிவலோகம்
என்னவிசை படப்பொலிந்த தேழிரண்டு புவனத்தும். 68

ஆகச் செய்யுள்—2,030

---

65. பரமன் - மேலானவன்; விடுதருபவன். பிரம வன்பழி கொடிய பிரமகத்தி.

66. பூத நாயகன் - பஞ்ச பூதங்களுக்குத் தலைவன்; பூதகணங் களுக்குத் தலைவனுமாம். அ, இ என்னுஞ் சுட்டுகள் திரிந்து அன்ன, இனைய என்றாயின.

67. முனியிறை - முனிசிரேஷ்டர். இறை-விடை. சிரம் பணித்து-சிரமசைத்து. துன்றி - தோய்ந்து.

68. இச்செய்யுளில் மதுரை பூலோக சிவலோகம் எனப் பெயர் பெறக் காரணம் கூறப்பட்டுள்ளது.

பா-ம்—1 பனித்துமெய்ஞ். 2 களித்தார்.

# 41. விறகுவிற்ற படலம்

—o—

நெடியவன் பிரமன் றேட நீண்டவன் றென்னற் கேழின்
முடியதாஞ் சிவலோ கத்தைக் காட்டிய முறையீ தையன்
படியிசை நடந்து பாடிப் பாணன்றன் விறகா ளாகி
அடிமையென் றடிமை கொண்ட வருட்டிற மெடுத்துச் சொல்வாம். 1

மன்றலந் தெரியன் மார்பன் வரகுணன் செங்கோ லோச்சிப்
பொன்றலங் காவ லானிற் பொலியுநா ளேம நாதன்
என்றொரு விறல்யாழ்ப் பாணன் வடபுலத் திருந்தும் போந்து
வென்றிகொள் விருதி னோடும் விஞ்சைசூழ் மதுரை சார்ந்தான். 2

பூழியர் பெருமான் கோயில் புகுந்துவேத் தவையத் தெய்திச்
சூழிமால் யானை யானைத் தொழுதுபல் புகழ்கொண் டாடி
ஏழிசை மழலை வீணா யிடந்தழீஇச் சுருதி கூட்டி
வாழியின் னிசைத்தேன் மன்ன னஞ்செவி வழியப் பெய்தான். 3

முகையுடைந் தவிழ்ந்த மாலை முடித்தலை துளக்கித் தூசு
பகலவிர் மணிப்பூ ணல்கிப் பல்லுணாக் கருவி நல்கி
அகன்மனை வேறு காட்டி யரசர்கோன் வரிசை செய்ய
இகலறு களிப்பி னோடு மிசைவல்லா னில்லிற் புக்கான். 4

மீனவன் வரிசை பெற்ற செருக்கினும் விருதி னானும்
மானமேல் கொண்டு தன்னோ டின்னிசை பாட வல்ல
தானயாழ்ப் புலவர் வேறிங் கில்லெனத் தருக்குஞ் செய்தி
கோனறிந் துழையர்க் கூவிப் பத்திரற் கொணர்தி றென்றான். 5

---

1. ஏழின் முடியதாம் சிவலோகம் -ஏழுலகத்திற்குஞ் சிரம்போன்ற சிவலோகம். அருட்டிறம் - திருவருளின் திறம்.

2. பொன்தலங் காவலானில்-சொர்க்கலோகத்தைப் பரிபாலிக்கும் இந்திரனைப்போல. விறல் - வெற்றி. விஞ்சை - கல்வி.

3. பூழியர் பெருமான் - வரகுண பாண்டியன். வேத்து அவை - இராச சபை, வேத்து - வேந்து. சூழி - முகபடாம். மழலை - மழலைச் சொல்போல.

4. தூசு - ஆடை. பல் உணா - பலவகைப்பட்ட உணவுகள். இசைவல்லான் - ஏமநாதன்.

5. தானம் - ஏழு சுரங்களும் எழுமிடம். கோன்-வரகுண பாண்டியன். உழையர் - ஏவலாளர். பத்திரன் - பாணபத்திரன்.

உமையரால் விடுக்கப் பட்ட பத்திர னுவரி [1]வென்றோன்
கழல்பணிந் தருகு நிற்பக் கௌரிய னோக்கிப் பாணி
பழகிசை வல்லா னோடும் பாடுதி கொல்லோ வென்ன
மழலையா ழிடந்தோ ளிட்ட பாணர்கோன் வணங்கிச் சொல்வான். 6

தென்னவர் பெரும யானுன் றிருவுள வலனுங் கூடல்
முன்னவ னருளு மூட்டு முயற்சியான் முயன்று பாடி
அன்னவன் விருது வாங்கி யவனைவி றழிப்ப னென்றான்
மன்னவ னனைப் பாடு போகென வரைந்து சொன்னான். 7

இற்கண்ணே யிசைவல் லான்போ யிருந்துழி யனையான் [2]பாங்கர்க்
கற்கும்பாண் மக்கண் மல்ல லாவணங் கவலை மன்றம்
பொற்குன்ற மனைய மாட மறுகெங்கும் போகிப் போகிச்
சொற்குன்று வகையாற் பாடித் திரிந்தனர் வீறு தோன்ற. 8

இவ்விசை கேட்டு நன்றென் றதிசயித் திசைவல் லான்பால்
வவ்விசை மைந்தர் பாடும் வண்ணமீ தென்னை கெட்டேன்
அவ்விசை வல்லான் பாடு முறையெற்றோ வவனை நாளைச்
[3]செவ்விசை பாடி வெல்வ தெவனெனத் திவவுக் கோலான். 9

மையணி மிடற்றி னானை மதுரைநா யகனை வந்தித்
தையனே யடியேற் கின்று னருட்டுணை செய்யல் வேண்டும்
மெய்யனே யென்று போற்றி வேண்டுகொண் டன்பு தோய்ந்த
பொய்யறு மனத்தா னில்லம் புக்கினி திருந்தா னிப்பால். 10

---

6. உவரி (கடல்) வென்றோன் வழித்தோன்றலாகிய வரகுணனை உவரிவென்றோன் என்றது உபசாரம். கௌரியன் - பாண்டியன். பாணி - இசை, பாட்டு, தாளம்.

7. மூட்டல் - ஏவுதல், பொருத்துதல். அன்னவன் - அந்த ஏமநாதன். வீறு - செருக்கு. வரைந்து - கால வரையறை செய்து.

8. பாங்கர் - பக்கலில். ஆவணம் - கடைவீதி. கவலை - கவர் வழி; முத்தெருக்கூடுமிடம். மன்றம் - ஊருக்கு நடுவே எல்லாரும் இருக்கும் மரத்தடி.

9. மைந்தர் - மாணவர்கள். திவவுக்கோலான் - நரம்பின் கட்டமைந்த வீணையில் வல்ல பாணபத்திரன். திவவு - யாழ் வலிக்கட்டு. கோல் - நரம்பு.

10. மை-கறுப்பு; விஷம். பொய்யறு மனத்தான்-பாணபத்திரன்.

பா-ம்—1 வென்றான். 2 பாங்கர். 3 தெவ்விசை (எவரும் கைக் கொள்ளும் இசை; பகைத்து இசைபாடி என்றலுமாம்.)

வருத்த னாகிவந் திரந்தவ னிசைப்பகை மாற்ற
விருத்த னும்விற காளென விண்ணிழி விமானத்
தொருத்த னூரறி வாகிய வுண்மையா னந்தத்
திருத்த னார்தம திச்சையாற் றிருவுருக் கொள்வார். 11

அழுக்கு மூழ்கிய சிதரசைத் தவிர்சடை யமுதம்
ஒழுக்கு [1]வான்மதி வாங்கியே செருகிய தொப்ப
மழுக்கு கூனல்வெள் வாய்க்குயம் வலம்படச் செருகி
இழுக்கு தேய்செருப் பருமறை கடந்ததா ளேற்றி. 12

பழைய தோர்பொல்லம் பொத்திய பத்தர்யாழ்க் கோரூன்
உழைய தாகவிட் டெருத்தலைத் தூசலா டியவொண்
குழைய காதினிற் [2]களவிணர்க் குறியகாய் தூக்கித்
தழையும் வார்சிகை சரிந்திடச் சுமையடை தாங்கி. 13

தறிந்த விந்தனந் தினந்தொறுந் தாங்கிநீள் பங்கி
பறிந்து தேய்ந்தழுந் தியதலை யுடையராய்ப் பரிந்து
மறிந்த கங்கையும் பங்குறை மங்கையுங் காணு
தெறிந்த விந்தனச் சுமைதிரு முடியின்மே லேற்றி. 14

என்பு தோன்றியூ னின்றியே யிளைத்தயாக் கையராய்
அன்பு தோன்றியே கண்டவ ரகங்கனிந் திரங்க
வன்பு தோன்றிய மனமொழி கடந்ததாண் மலர்பார்
முன்பு தோன்றிய தவத்தினன் [3]முடிமிசைச் சூட. 15

---

11. உண்மை அறிவு ஆனந்தம் ஆகிய திருத்தனார் - சச்சிதானந்த வடிவாகிய சோமசுந்தரக்கடவுள்.

12. சிதர் - கிழிந்த துணி; கந்தை. குயம் - அரிவாள். இழுக்கு தேய் - இழுத்துத் தேய்ந்த. மழுக்கு - மழுங்கு.

13. பொல்லம் - தைத்தல். பத்தர்-வீணைதண்டத்தின் கோட்டின் புறத்திலுள்ள சுரைக் குடுக்கை; அது வீணையின் உறுப்புகளுள் ஒன்று. எருத்து - பிடர். களஇணர் - களாவின் பூங்கொத்து. சுமையடை - சும்மாடு.

14. இந்தனம் - விறகு. நீள்பங்கி - நீண்ட மயிர். பறிந்து - வெளிப்பட்டு. மறிந்த - மடங்கிய. பங்கு உறை - இடப்பாகத்தில் எழுந்தருளியிருக்கும்.

15. ஊன் இன்றியே -சிறிதும் தசை இல்லாத. வன்பு தோன்றிய- இளகுதல் இல்லாத.

பா-ம்—1 வெண்மதி. 2 களவினற், களாவிற். 3 முடி மிசை.

திருமு கத்துவேர் வரும்பவாய் [1]குவிந்தொலி செய்ய
வருவர் கற்சுமை தாங்கிமேற் சார்த்துவர் மடுநீர்
பருகு வாரெடுப் பார்தலை வெம்மைவேர் பறிய
இருகை யாலடிக் கடியெடுத் தேந்தியூர் புகுவார். 16

நடந்து கொள்ளுநர்க் கருவிலை பகர்ந்துநான் மாடம்
மிடைந்த வீதியுங் கவலையு முடுக்கரு மிடைந்து
தொடர்ந்த வேதமும் பிரமன்மால் சூழ்ச்சியும் பகலுங்
கடந்து போகியவ் விசைவலான் கடைத்தலைச் செல்வார். 17

வரவு நேர்ந்தழைப் பவரென வாம்பல்வாய் மலர
இரவு கான்றுவெண் மதிநகைத் தெழவுயிர்த் துணைவன்
பிரிவு நோக்கினு ரெனக்கணீர் பில்குதா மரையின்
நிரைகள் கூம்பிடக் கதிரவன் [2]குடகட லிந்த. 18

பறவை வாயடைத் தருகணை பார்ப்பொடும் பெடையைச்
சிறக ராலணைத் திரும்பொழிற் குடம்பையுட் செறிய
நறவ வாய்ப்பெடை யுண்டதே னக்கிவண் டோடைப்
பொறைகொ டாமரைப் பள்ளியுட் புகுந்துகண் படுக்க. 19

புல்லெ னீணிலைக் குரங்கினம் பொதும்பர்புக் குறங்க
முல்லை யாய்மகா ருய்த்தரக் கன்றுள்ளி முந்திக்
கொல்லை யானிரை மனைதொறுங் குறுகிடச் சிறுபுன்
கல்வி மாணவச் சிறார்பயில் கணக்கொலி யடங்க. 20

---

16. கல் சுமை தாங்கி - கல்லாகிய சுமை தாங்கி. வேர் பறிய - வேர்வை கழிய.

17. அரு விலை - முடிவு பெறுதவிலை; அளவுக்கு மேற்பட்டவிலை. முடுக்கர் - மிக நெருங்கிய சிறு சந்திகள். பகலும்-பகற் பொழுதையும். கடைத்தலை - கடைவாயில்.

18 வரவு நேர்ந்து - (சந்திரன்) வருகையை நோக்கி. க(ண்)ணீர் - கண் நீர்; கள்ளாகிய நீர்.

19. பார்ப்பு - குஞ்சுகள். பெடை - பெண்வண்டு. குடம்பை - கூண்டு. பொறைகொள் தாமரை - (வண்டுகளாகிய தம்மைச்) சுமத்தலைக்கொண்ட தாமரை. பள்ளி - படுக்கை.

20. புல்லென் - விரைந்து. ஆய் மகார் - ஆயர் குலச்சிறுவர்கள். உய்த்தர - செலுத்த. சிறுபுன் கல்வி - ஆரம்பக்கல்வி. கணக்கு - தமிழ் நெடுங் கணக்கு.

பா-ம்—1 குவித்தொலி. 2 குரைகட லிந்த.

புனைந்த வாழ்கடற் கரும்படா முடம்பெலாம் போர்த்து
வனைந்த பூண்முலை நிலமக டுயில்வது மானக்
கனைந்த காரிருண் மெல்லெனக் கவிதரப் பிரிவால்
இனைந்த காதலர் நெஞ்சில்வே ளொரிகணை நாட்ட. 21

திங்கள் வாணுதன் முயற்கறைத் திலகமுஞ் சிவந்த
மங்கு லாடையு மயங்கிரு ளோதியும் வான்மீன்
பொங்கு மாரமும் பொலிந்துதன் கொண்கனைப் [1]பொருப்பன்
மங்கை தேடிவந் தாளென வந்தது மாலை. 22

எடுத்த விந்தன மொருபுறத் திறக்கியிட் டூன்றி
அடுத்த வன்புறந் திண்ணைமீ தமர்ந்திளைப் பாறித்
தொடுத்த வின்னிசை சிறிதெழீஇப் பாடினார் சுருதி
மடுத்தி யாரவன் பாடுவா னென்றிசை வல்லான். 23

வண்டறை கொன்றை யான்முன் வந்துநீ யாரை யென்றான்
பண்டரு [2]விபஞ்சி பாண பத்திர னடிமை யென்றான்
முண்டக மலரோன் மாயோன் புரந்தரன் முதன்மற் றேனை
அண்டருந் தன்குற் றேவ லடிமையாக் கொண்ட வம்மான். 24

கனியிசைக் கிழவன் றன்கீழ்க் கற்பவ ரனேகர் தம்முள்
நனியிசைக் கிழமை வேட்டு நானுமவ் வினைஞ னானேன்

---

21. புனைந்த - முன்னர்த் தன் மருங்கில் அணிந்த. படாம் - இங்கே, போர்வை வஸ்திரம். முலை - மலைகளாகிய முலைகள்.

22. முயற்கறை - முயற்களங்கம்: இரு பெயரொட்டு. சிவந்த மங்குல் - செவ்வானம். மயங்கிருள் - இறுதிப் பகலொடு கலந்த இருள், மனம் மயங்குதற் கேதுவாகிய இருண்ட. பொருப்பன் மங்கை - உமாதேவியார்.

23. அடுத்தவன் - வந்த ஏமநாதன். சுருதி மடுத்து - சுதி கூட்டி. அவன் - அந்த ஏமநாதன். இசைபாடுவான் வல்லான் யார் என்று - இசை பாடுதலில் வல்லவன் யார் என்று தன்னுட் கருதி; இசை வல்லான் அவன் பாடுவான் யார் என்று கொண்டு, இசை வல்லவனாகிய அந்த ஏமநாதன் பாடுபவன் யார் என்று கருதி எனப் பொருள் கொள்ளுதலுமாம்.

24. விபஞ்சி - யாழ்வல்லோன் (ஆகிய), யாழுமாம். முண்டக மலரோன் - பிரமன்.

25. கனி இசைக்கிழவன் - பாணபத்திரன். கிழமை - உரிமை. மூத்தாய் - விருத்தனாய்.

பா-ம்—1 பொருப்பின். 2 விபஞ்சிப் பாணன்.

தனியிசைக் கிழவ னோக்கித் தசையெலா மொடுங்க மூத்தாய்
இனியிசைக் கிழமைக் காகா யென்றெனைத் தள்ளி விட்டான். 25

வெவ்விற கெறிந்து கட்டி விலைபகர்ந் தேனு மைய
இவ்வயி றோம்பு கேனென் றித்தொழில் பூண்டே னென்ன
நைவளந் தெரிந்த வேம நாதனும் விறகு மள்ளா
அவ்விசை யொருகா லின்னும் பாடென வையன் பாடும். 26

குண்டுநீர் வறந்திட் டன்ன நெடுங்கொடிக் குறுங்காய்ப் பத்தர்த்
தண்டுநீ ணிறத்த நல்யா ழிடந்தழீஇத் தெறித்துத் தாக்கிக்
கண்டுமா டகந்தி ரித்துக் கௌவிய திவவிற் பாவ
விண்டுதே னொழுகிற் றென்ன வீக்கிமென் சுருதி கூட்டி. 27

விசையொடு தானந் தோறும் விரனடந் தூச லாட
இசைமுத லேழிற் பல்வே றின்னிசை யெழுஞ்சா தாரி
அசையொடு வீதிப் போக்கு முடுகிய லராகம் யார்க்கும்
நசைதரு நரம்பு கண்ட மொற்றுமை நயங்கொண் டார்ப்ப. 28

வயிறது குழிய வாங்க லழுமுகங் காட்டல் வாங்குஞ்
செயிரறு புருவ மேறல் சிரநடுக் குறல்கண் ணுடல்

---

26. வெவ்விறகு - உலர்ந்த விறகு. நைவளம் - நட்டபாடை என்னும் பண் ; இசை நாலுமாம். மள்ளன் - திண்ணியன்.

27. குண்டு - நிலைறந்த உள்ளீடு ; திரட்சியுமாம். நெடுங்கொடிக்குறுங்காய் - சுரைக்காய். நிறத்த நல்யாழ் - நிறம் ஐந்தும் அமைந்த யாழ்; அவற்றை, "மாத்திரைக ளொன்பானுந் தானங்க ளெட்டாறு, மேத்துங் கிரியையென் றிரைந்துங்-கோத்துப், பதின்மூன்றெழுத்தாற் றொழிலைந்தும் பண்ணின், மதியோன் கலைந்து நிறமாம் " என்னும் இசைமரபுடையார் கூறிய செய்யுளால் அறிக. கண்டு - (பண்ணை எழுப்பிப்)பார்த்து. மாடகம் - முறுக்காணி. திவவு - கட்டு. பாவ - பரவ. விண்டு - (இருல் கூட்டினின்று) நீங்கி.

28. தானம் - இடம். நடந்து ஊசலாட - சென்று போக்கு வரவு செய்ய. இசை முதல் ஏழ் - குரல் முதலிய ஏழிசைகள். சாதாரி - முல்லைப்பண் ; இதனை வடநூலார், 'தேவகாந்தாரம்' என்பர். அசை - ஒரு மாத்திரை யளவுபடத் தாக்கியெழுந் தாளம். அது கொட்டு, அசை, தூக்கு, அளவு என்னும் தாளம் நான்கனுள் ஒன்று. வீதிப் போக்கு - நகர முதலிய நாலெழுத்துக்கள் நேராய்ச் செல்லுதல். முடுகியல் - பெருவண்ணம், இடைவண்ணம், வனப்பு வண்ணம் என்பன. அராகம் - பாலையாழ்த்திறம்.

[1]பயிரரு மிடறு வீங்கல் பையென வாயங் காத்தல்
எயிறது காட்ட லின்ன உடற்றொழிற் குற்ற மென்ப. 29

வெள்ளைகா குளிகீ ழோசை வெடிகுர னாசி யின்ன
எள்ளிய வெழாலின் குற்ற மெறிந்துநின் றிரட்ட லெல்லை
தள்ளிய கழிபோக் கோசை யிசைத்தனெட் டுயிர்ப்புத் தள்ளித்
துள்ளலென் றின்ன பாடற் றொழிற்குற்றம் பிறவுந் தீர்ந்தே. 30

எழுதுசித் திரம்போன் மன்னி யிழுமெனு மருவி யோதை
முழவொலி கஞ்ச நாதம் வலம்புரி முரலு மோசை
கொழுதிசை வண்டின் றாரி யெனவிசைக் குணனும் வேரல்
விழுமிலை சிரன்மீன் மேல்வீழ் வீழ்ச்சிபோற் பாடற் பண்பும். 31

பொருந்தமந் தரத்தி னோடு மத்திமந் தாரம் போக்கித்
திருந்திய துள்ள றாங்கன் மெலிவது சிறப்பச் செய்து
மருந்தன செய்யு ளோசை யிசையோசை வழாமல் யார்க்கும்
விருந்தெனச் செவியின் மாந்தப் பாடினார் வேதகீதர். 32

---

29. பயிர் அருமிடறு-பாடுகின்ற அரிய கண்டம் இச்செய்யுளில் கூறியவை பாடுவார்க்காகா என நூலால் விலக்கப்பட்ட உடற் குற்றங்களாம்.

30. வெள்ளோசை - (வெடித்த குரலாகிய) நிறமில்லாத வெள்ளோசை. காகுளி - பேய் கத்தினாற்போலுள்ள இன்னாவோசை. கீழோசை - நிறமும் தானமும் குறைபடும் : கட்டோசை. நாசி-நாசிப் பாட்டு ; அஃது ஒரு தானத்தே பாட ஒரு தானத்தே நழுவுதல். எள்ளிய எழாலின் குற்றம் - (இசைநூலார்) விலக்கிய மிடற்றொலி (சாரீரவோசை)யின் குற்றம். எறிந்து நின்றிரட்டல் - ஒரு பண்ணைப்பாட வேறொரு பண்ணிலே விலங்கி நின்று ஒலித்தல். கழிபோக்கு-ஓர் ஓசையான தன்மை நீங்கிப் பல ஓசையாய் வருதல். ஓசையிசைத்தல் - காகம் கத்தினாற்போல் கத்துதல். தள்ளித்துள்ளல் - பாடுந்திறத்தை ஒதுக்கிப்பாடுதல். இச்செய்யுளில் கூறியவை பாடுந்தொழிற்குற்றங்களாம்.

31. கஞ்சநாதம் - வெண்கலத்தாற் செய்த தாளமுதலிய கஞ்சக் கருவிகளின் ஓசை. தாரி - ஒலி. வேரல் - மூங்கில். சிரல் - மீன் கொத்திப்பறவை.

32. மந்தரம் - கீழ் இசை, படுத்தல். மத்திமம் - சமனிசை, நலிதல். தாரம் - உச்சவிசை, எடுத்தல். வேத கீதர் - சாமவேதகீதராகிய சிவபெருமான்.

பா-ம்—1 பயிரறு, பயிறரு.

விரைசார் மலரோ னறியா விகிர்தன்
அரசாய் மதுரை யமர்ந்தா னென்னே
அரசாய் மதுரை யமர்ந்தா னவனென்
புரைசார் மனனும் புகுந்தா னென்னே.　　　33

பாடன் மறையுந் தெளியாப் பரமன்
கூடல் கோயில் கொண்டா னென்னே
கூடல் போலக் கொடியே னகமும்
ஆட லரங்கா வமர்ந்தா னென்னே.　　　34

நீல வண்ணன் றேரு நிமலன்
ஆல வாயி லமர்ந்தா னென்னே
ஆல வாயா னலரில் வாசம்
போலென் னுளமும் புகுந்தா னென்னே.　　　35

பாணர்தம் பிரானைக் காப்பான் பருந்தொடு நிழல்போக் கென்ன
யாணரம் பிசைபின் செல்ல விசைத்தவின் னிசைத்தே னண்ட
வாணர்தஞ் செவிக்கா லோடி மயிர்த்துளை வழியத் தேக்கி
யாணரின் னமுத யாக்கை யிசைமய மாக்கிற் றன்றே.　　　36

தருக்களுஞ் சலியா முந்நீர்ச் சலதியுங் கலியா நீண்ட
பொருப்பிழி யருவிக் காலு நதிகளும் புரண்டு துள்ளா
அருட்கடல் விளைத்த கீத வின்னிசை யமுத மாந்தி
மருட்கெட வறிவன் றீட்டி வைத்தசித் திரமே யொத்த.　　　37

---

33. விரைசார் - மணம்பொருந்திய. விகிர்தன் - வேறுபாடுடையவன், இறைவன். புரை - களங்கம்; குற்றம்.

34. பாடல் மறை-பாடல் அமைந்த வேதங்கள். கூடல்-மதுரை.

35. நீல வண்ணன் - கரிய நிறத்தையுடைய திருமால். ஆலவாய் - மதுரை.

36. யாணரம்பு - யாழ்நரம்பு. அண்டவாணர் - ஆகாயவாசிகள். யாணர் - அழகிய. பருந்தொடு நிழல்போக்கு என்ன - பருந்து பறக்குமிடத்து முறையே உயர்ந்தும் பின்னும் அம்முறையே தாழ்ந்தும் பறத்தலையும் அவ்வாறு பறக்குங்கால் அதன் நிழல் அதனோடு செல்லுதல் போல. இங்கு, மிடற்றிசைக்குப் பருந்தினியக்கமும், அம்மிடற்றிசையை யாழிசை தொடர்ந்து சொல்லவேண்டுதலின் அதற்குப் பருந்தின் நிழல் இயக்கமும் உவமையாயின.

37. சலித்தல் - அசைதல். கலி - ஓசை. அருட்கடல் - கிருபா சமுத்திரமாகிய சிவபெருமான். அறிவன் - சிற்பநூற்புலவன்.

வீணைகை வழுக்கிச் சோர்வார் சிலர்சிலர் விரன டாத்தும்
யாணரம் பெழாலுங் கண்டத் தெழாலும்வே றுக [1]வேர்ப்பார்
நாணமோ டுவகை தள்ள [2]நாத்தலை நடுங்கித் தங்கள்
மாணிழை யவர்மேல் வீழ்வார் விஞ்சையர் மயங்கிச் சில்லோர். 38

போதுளான் பரமன் பாதப் போதுளா னுளன் வேலை
மீதுளான் பரமா னந்த வேலைமீ துள்ளா னுளன்
தாதுளாங் கமலக் கண்போற் சதமக னுடல மெல்லாங்
காதுளா னல்லே னென்றான் கண்ணுளான் கானங் கேட்டு. 39

முனிவருந் தவத்த ராதி முத்தர்மா சித்த [3]ரன்பன்
துனிவரும் பழங்கண் டீர்ப்பான் சுந்தரத் தோன்றல் கீதங்
கனிவருங் கருணை யென்னுங் கடலிலன் பென்னு மாற்றிற்
பனிவருங் கண்ணீர் வெள்ளம் பாய்ந்திட வின்பத் தாழ்ந்தார். 40

ஊடிவே றொதுங்கித் துன்ப வுவரியுட் குளித்தார் தம்மிற்
கூடிவே றற்ற வின்பக் குளிர்கடல் வெள்ளத் தாழ்ந்தார்
நாடிவே றிடைப்பி ரிந்தார் மேன்மன நடாத்தி மேனி
வாடிவே ளலைப்பச் சோர்ந்து மம்மர்நோ யுழந்தார் மண்ணோர்.41

பைத்தலை விடவாய் நாகம் பல்பொறி மஞ்ஞை நால்வாய்
மத்தமா னரிமான் புல்வாய் வல்லிய மருட்கை யெய்தித்

---

38. எழால் - இன்னோசை. மாண் இழையவர் - மாட்சிமைப்பட்ட ஆபரணமணிந்த விஞ்சையர் மனைவிமார்கள், விஞ்சையர்-வித்தியாதரர்

39. பிரமனும் திருமாலும் இசையின்பத்தால் விழுங்கப்பட்டு. அதனோடு அபேதமாயிருக்குஞ் சார்பு பற்றி அவர்களை முறையே, 'பரமன் பாதப்போதுளான்' எனவும், பரமானந்த வேலை மீதுள்ளான் எனவும் கூறினார்.

40. முனிவு அரும்-வெறுப்பு இல்லாத. தவத்தரும் ஆதிமுத்தரும் மா சித்தரும் என உம்மை விரிக்க. ஆதிமுத்தர் - பிறப்பு முதற் சீவன் முத்தராயவர்; சிவனையடைந்த சீவன் முத்தருமாம். ஆதி - முதல், சிவன். அன்பன் துனிவரும் பழங்கண் - அன்பனாகிய பாணபத்திரனது துன்பத்தையும் அதனால் வந்த மெலிவையும்; தீர்ப்பானாகிய சுந்தரத் தோன்றலது கீதம் என்க.

41. நாடி - (பொருள், கல்வி முதலியவற்றை) விரும்பி. மம்மர் நோய் - மயக்கத்தைத் தருங் காமத்துன்பம்.

பா-ம்—1 வோர்ப்பார். 2 நாத்தல. 3 ரன்பின். (அன்பின் பாணபத்திரன்து அன்பினால்.)

தத்தமா றறியா வாகித் தலைத்தலை மயங்கிச் சோர
இத்தகை மாவும் புள்ளு மிசைவலைப் பட்ட வம்மா. 42

வன்றரை கிழிய வீழ்போய் வான்சினை கரிந்து நின்ற
ஒன்றறி மரங்க ளெல்லாஞ் செவியறி வுடைய வாகி
மென்றளி ரீன்று போது விரிந்துகண் ணீருஞ் சோர
நன்றறி மாந்தர் போல நகைமுக மலர்ந்த மாதோ. 43

வாழிய வுலகின் வானோர் மனிதர்புள் விலங்கு மற்றும்
ஆழிய கரண மெல்லா மசைவற வடங்க வையன்
ஏழிசை மயமே யாகி யிருந்தன வுணர்ந்தோ ருள்ளம்
ஊழியி லொருவன் றாள்புக் கொடுங்கிய தன்மை யொத்த. 44

கண்ணிறை நுதலோன் சாம கண்டத்தி னெழுந்த முல்லைப்
பண்ணிறை தேவ கீதஞ் சராசர வுயிரும் பாரும்
விண்ணிறை திசைக ளெட்டும் விழுங்கித்தன் மயமே யாக்கி
உண்ணிறை யுயிரு மெய்யு முருக்கிய திசைவல் லானை. 45

சிந்தை தோயுமைம் பொறிகளுஞ் செவிகளாப் புலன்கள்
ஐந்து மோசையா விசைவலா னிருந்தன னாகப்

---

42 பைத்தலை - படம் பொருந்திய தலை. நால்வாய் - தொங்கு கின்றவாய். மத்த மான் - யானை. புல்வாய் - மான். வல்லியம்-புலி. மருட்கை - இசை மயக்கம். ஆறு - செல்லும்வழி. தலைத்தலை - இடங்கள் தோறும். மயங்கல்-கலத்தல். சோர-சோர்ந்து. இத்தகை என்றது மருட்கை, மயக்கம், சோர்வாகிய இத்தன்மைகளை.

43. வீழ்போய் - விழுது வீழ்த்தி. ஒன்று அறி மரங்கள் - ஊறு என்னும் ஒரே அறிவுடைய மரங்கள். கண்ணீர் - கள்ளாகிய நீர்; கண்ணீர். நன்றறி மாந்தர்-நன்மை தீமைகளைப் பகுத்தறியும் ஆறறிவு யிர்களாகிய மனிதர்.

44. ஆழிய கரணம் - இசையிற்பதிந்த மனம் முதலிய அந்தக் கரணங்கள். உணர்ந்தோர் - இங்குச் சிவஞானி. ஒடுங்கிய தன்மை - ஒடுங்கியதால் உண்டாகிய தன்மை; அது சிவமாந்தன்மை: அது போலக் கரணங்கள் எல்லாம் இசையில் அடங்கலால் அது மயமா யிருந்தார் என்க.

45. முல்லைப்பண்ணிறை தேவகீதம் - சாதாரியாகிய இசையிலக் கணமுற்றும் நிறைந்த தேவகாந்தாரி. இசைவல்லான் - ஏமநாதன்.

46. இச்செய்யுளின் முதலிரண்டடியும், "ஐந்துபேர் அறிவும் கண்களே கொள்ள அளப்பரும் கரணங்கள் நான்குஞ், சிந்தையே

பந்த நான்மறை நாவினுற் பத்திர னுளாய்
வந்து பாடினு ளிந்தனச் சுமையொடு மறைந்தார். 46

யான றிந்தசா தாரியன் றிம்பரு ளிதனை
நான றிந்ததென் றொருவரு நவின்றிலர் தேவ
கான மீதிவற் குணர்த்தினேன் கடவுளே யன்றி
ஏனை மானுடர் வல்லரோ விதுவியப் பென்னு. 47

இழுக்கி விட்டவிக் கிழமக னிசையிதே லந்த
வழுக்கில் பத்திரன் பாடலெற் றேவென மதியா
அழுக்க முற்றெழுந் திசைவலா னடுத்ததன் பண்டர்
குழுக்க ளுங்குலை குலைந்திட விருள்வழிக் கொண்டான். 48

மடக்கு பல்கலைப் பேழையு மணிக்கலம் பிறவும்
அடக்கு பேழையுங் கருவியாழ்க் கோலுமாங் காங்கே
கிடக்க மானமு மச்சமுங் கிளர்ந்துமுன் னீர்த்து
நடக்க வுத்தர திசைக்கணே நாடினு னடந்தான். 49

சிவிகை யோர்வழி விறலிய ரோர்வழி செல்லக்
கவிகை யோர்வழி கற்பவ ரோர்வழி கடுகக்
குவிகை யேவல ரொருவழி கூடநா ணுள்ளத்
தவிகை யோவரு மொருவழி யகன்றிட வகன்றான். 50

அன்று பத்திரன் கனவில்வந் தாடலேற் றழகர்
இன்று பத்திர விசைவலா னிடைவிற காளாய்ச்

---

ஆக '' என்னும் பெரிய புராண அடிகளைத் தழுவி நின்றன. பந்த நான்மறை - பந்தம், நிறை, பாழி, பஞ்சாதி, அநுவாகம் முதலிய உறுப்புக்களையுடைய நான்கு வேதங்கள்.

47. இம்பருள் - இவ்வுலகத்தில். இதனை - இந்தச் சாதாரிப்பண்ணை. இச்சாதாரிப்பண் நிலவுலகில் வழங்கினும் இது தேவகானமே ஆகும் என்க. இவற்கு - இவ்விறகாளுக்கு.

48. இழுக்கிவிட்ட - நீக்கிவிட்ட. இதேல் - இதுவாயின். அழுக்கம் - கவலை, துக்கம். பண்டர் - பாடற்றொழிற் கிழ்மக்கள்.

49. மடக்குப்பல்கலை - பல்வகை யாடைகளை மடித்து வைக்கும். பேழை - பெட்டி. உத்தரதிசை - வடதிசை. நாடினுன் நடந்தான் - நாடிச்சென்றுன்.

50. விறலியர் - பாடும் பெண்கள். ஏவலர் - குற்றேவல் செய்யும் பணிமக்கள். உள்ளத்து நாண் அவிகை ஒவர் - உள்ளத்தின் கண்ணே நாணம் ஒழிந்த பாண்மக்கள்.

சென்று பத்திர னடிமையா மென்றுபாண் செய்து
வென்று பத்திரஞ் செய்துநின் வேண்டுகோ ளென்றார். 51

குஞ்சி நாண்மலர்க் கொன்றையா ரங்ஙனங் கூறும்
நெஞ்சி னுனினைப் பரியசொற் கேட்டலு நெஞ்சம்
அஞ்சி னுனிது செய்யவோ வடியனேன் மறைகட்
கெஞ்சி னுரையின் றிரந்தவா றென்றுகண் விழித்தான். 52

கண்ம லர்ந்தெழு பத்திரன் கரையிலா வுவகை
உண்ம லர்ந்தெழு மன்புகொண் டுக்கவெங் கதிரோன்
விண்ம லர்ந்தெழு முன்புபோய் விசும்பிழி கோயிற்
பண்ம லர்ந்தநான் மறைப்பொரு ளடித்தலம் பணிந்தான். 53

கடிய கானகம் புகுதவோ கட்டிய விறகை
முடியி லேற்றவோ முண்டகத் தாள்கணொந் திடவந்
தடிய னேன்பொருட் டடாதசொற் பகரவோ வஞ்சக்
கொடிய னேன்குறை யிரந்தவா விளைந்ததே குற்றம். 54

நெடிய னேமுதல் வானவர் நெஞ்சமுஞ் சுருதி
முடிய னேகமுங் கடந்தநின் முண்டகப் பாதஞ்
செடிய னேன்பொருட் டாகவிச் சேணிலந் தோய்ந்த
அடிய னேற்கெளி தாயதோ வையநின் பெருமை.

நாத வந்தமுங் கடந்தமெய்ஞ் ஞானவா னந்த
போத மென்பரஃ தின்றொரு புடவிமா னுடமாய்

---

51. ஆடல் - வெற்றி. பாண்செய்து - இசைபாடி; சாதாரிபாடி. பத்திரம் செய்தும் - நின்னைக் காத்தனம். வென்று உபத்திரம் செய்து எனப்பிரித்து (இசை பாடி) வென்று ஏமநாதனுக்குத் துன்பம் செய்தோம் எனப்பொருள் கொள்ளலுமாம்.

52. குஞ்சி - சிகை; துனி. மறைகட்கு எஞ்சினுரை - வேதங்களுக்கும் எட்டாது நின்ற எம்பெருமானை.

53. கண் மலர்ந்து - துயில் உணர்ந்து. பண் மலர்ந்த - இசை நிறைந்த. நான்மறைப்பொருள் - சோமசுந்தரக் கடவுள்.

54. கடிய - அமைந்த. அடாத சொல் - பாணபத்திரன் அடிமை என்ற சொல்.

55. நெடியன் - திருமால். செடியனேன் - பாவியேன். இச்சேணிலம் - இப்பெரிய பூமியில்.

56. நாத அந்தம் - குடிலை. ஆதபம் தெற - வெய்யில் சுட்டு வருத்த. நின் உருவம் - தேவரீரின் நின்மல சொரூபம்.

[1]ஆத பந்தெற வெறிந்தவிந் தனஞ்சுமந் தடியேன்
பேதை யன்பள வாயதோ பெருமநின் னுருவம். 56

மறிந்த தெண்டிரை கிடந்தவ னுந்தியில் வந்தோன்
அறிந்த தன்றரும் பொருள்வரம் பகன்றெழு விசும்புஞ்
செறிந்த வண்டமுங் கடந்தது சிறியனேன் [2]பொருட்டாத்
தறிந்த விந்தனஞ் சுமந்ததோ [3]தம்பிரான் முடியே. 57

என்ன வந்தனை செய்துநின் றேத்தியங் கயற்கண்
மின்ன மர்ந்தபங் கொருவனை வலங்கொடு மீண்டு
மன்னர் தம்பிரா னாகிய வரகுண தேவன்
றன்னை வந்தடி பணிந்தனன் றந்திரிக் கிழவோன். 58

வந்த வேழிசைத் தலைமகன் வரவறிந் தரசன்
அந்த வேழிசைக் கிழவனை யழையென வுழையோர்
பந்த யாழ்மக னிருக்கைபோய்ப் பார்த்தனர் காணார்
சிந்தை யாகுல மடைந்தவன் போனவா [4]தெரியார். 59

எங்கு ளானெனத் தேடுவா ரிவரெதி ரயல்வாய்
அங்கு ளார்சில ரறிந்தவா றறைகுவா ரவனேற்
றிங்கு ளான்விற கெடுத்தொரு முதுமக னிவன்பாற்
பொங்கு மேழிசைப் பத்திர னடிமையாய்ப் போந்தான். 60

பாடி னான்பின்பு பட்டது தெரிகிலேம் பாணன்
ஓடி னானெனக் கேட்டலு மொற்றர்போய்க் கொற்றஞ்

---

57. தெண்டிரை கிடந்தவன் - திருமால். அரும்பொருள் - கண்ணுக்குப் புலப்படலரிய வஸ்து; அஃது அணு. வரம்பு அகலல்- அதன் அளவை நீங்குதல்; எனவே, அணுவுக்கு அணுவாதல் என்பது கருத்து. எழு விசும்பும் செறிந்த அண்டமுங் கடத்தல் - மகத்துக்கு மகத்தாதல் என்றபடி. எழுவிசும்பு - பரந்த ஆகாயம்.

58. மன்னர் தம்பிரான் - அரசர்களுக்குத் தலைவன். தந்திரிக் கிழவன் - யாழுக்குரியோன்: பாணபத்திரன்; தந்திரி - நரம்பு: இனையாகு பெயராய் யாழையுணர்த்திற்று.

59. பந்தம் - யாழ் வலிக்கட்டு. ஆகுலம் - துன்பம். போனவா- போன விதம்.

60. தேடுவார் - தேடுகின்ற வேவுக்காரர். முதுமகன் - கிழவன். இவன்பால் - இந்த ஏமநாதனிடத்தில்.

பா-ம்— 1 ஆதபந்தெறத் தறிந்த. 2 பொருட்டா - எறிந்த. 3 எம்பிரான். 4 தெளியார்.

கூடி னுனவை யடைந்தவர் சொல்லிய வாறே
ஆடி னார்வியப் படைந்தனு மானமுற் றரசன். 61

தன்ன டைந்தவத் தந்திரித் தலைவனை நோக்கி
என்ன வாறவன் போனவா றிங்கினும் போன
பின்னை யாதுநீ செய்தனை யெனவிசைப் பெருமான்
தென்னர் கோனடி தொழுதுதன் செய்தியை மொழிவான்.

நென்னல் வாயடி யேனின தாணிழ னீங்கிப்
பின்னல் வார்சடை மௌலியெம் பிரானடி பணிந்தேன்
இன்ன லார்குறை யிரந்துமீண் டிருக்கைபுக் கிருந்தேன்
கன்ன லார்மொழி பங்கரென் கனவில்வந் தருளி. 63

ஓடி யுன்பொருட் டாகநாம் விறகெடுத் துழன்று
வாடி நின்பகைப் புறங்கடை வந்துசா தாரி
பாடி வென்றுநின் பகைவனைத் துரந்தன மெனச்சொல்
லாடி னார்விழித் தேனிது நிகழ்ந்ததென் றறைந்தான். 64

ஏவன் மைந்தர்போய் விளங்கிவந் திசைத்ததும் வீணைக்
காவ லன்கனு நிகழ்ச்சியு மொத்தலிற் கைக்கும்
பூவ லங்கலா னிஃதுநம் பொன்னகர்க் கூடற்
றேவர் தம்பிரான் றிருவிளை யாட்டெனத் தெளிந்தான். 65

இகழ்ந்த கூற்றெறி சேவடிக் கிடையறு நேயந்
திகழ்ந்த பத்திர னன்பையுந் தேவரைக் காப்பான்
அகழ்ந்த வாழிநஞ் சுண்டவ னருளையும் வியந்து
புகழ்ந்து போய்மது ராபுரிப் புனிதனைப் பணியா. 66

---

61. பட்டது - நிகழ்ந்தது. ஆடினர் - சொன்னர். அனுமானம் - ஐயமுற்று.

62. இங்கினும் - இவ்விடத்தினின்றும்; இன்: ஐந்தாம் வேற்றுமை நீக்கற்பொருள். தென்னர்கோன் - இங்கு வரகுணபாண்டியன்.

63. நென்னல்வாய் - நேற்றைப்போது. இன்னல் ஆர் - துன்பமிக்க. கன்னல் - கரும்பு.

64. பகைப்புறங்கடை - பகைவனாகிய ஏமநாதனது தலைவாயில். துரந்தனம் - ஓட்டிவிட்டோம்.

65. விளங்கி வந்து - தெரிந்து வந்து. கைக்கும் பூ அலங்கலான் - வேப்பமலர் மாலையை அணிந்த பாண்டியன்.

66. இகழ்ந்த - அவமதித்த. கூற்று - எமன். தேவர் - பிரமன் முதலிய தேவர்.

பத்தர் யாழிசைக் கிழவனைப் பணைக்கைமா னெருத்தில்
வைத்து மாடநீ ணகர்வலஞ் செய்வித்து மலர்ந்த
சித்த மாழ்ந்திட வரிசைகண் மிதப்புறச் செய்து
தத்து மான்றொடைத் தேரினுன் றன்மனை புகுவான். 67

தேவ ருந்தவ முனிவருந் தேவரிற் சிறந்தோர்
யாவ ருந்தமக் காட்செய விருப்பவ ரிருதாள்
நோவ வந்துமக் காட்செய்து நுங்குறை முடித்தார்
ஆவ ரேனுமக் கனைவரு மேவல ரன்றோ. 68

ஆத லாலெனக் குடையர்நீ ருமக்குநா னடியேன்
ஈத லா[1]லெனக் கும்மொடு வழக்குவே றிலைநான்
ஓத லாவதோர் குறையுள தின்றுதொட் டுமக்கு
வேத நாதனைப் பாடலே கடனென விடுத்தான். 69

அரச னல்கிய வெறுக்கைபூ ணுடைகள் பிறவும்
பரசு நாவலர் மாணவர் யாவர்க்கும் பகிர்ந்து
வரிசை யாலிசைக் கிளையொடு மனையில்வந் தெய்திக்
கரைசெ யாமகிழ் சிறந்திசைக் காவல னிருந்தான். 70

ஆகச் செய்யுள்—2,100

---

67. சித்தம் ஆழ்ந்திட - மனம் உவகைக் கடலில் அமிழ்ந்த, சிவ பத்திக்கடலில் அமிழ்ந்த. தத்துமான் - தாவும் குதிரை. தொடை - பூட்டிய.

68. தேவரில் சிறந்தோர் - பிரமன் முதலியோர். குறை முடித்தா ராவரேல் - குறைபாட்டை ஒழித்தருளுவாராயின்.

69. எனக்கு உடையார் - என்னை உடையராகிய தலைவர். குறை - இன்றியமையாத காரியம்.

70. வரிசையால் - அரசன் கொடுத்த வரிசையோடு. வரிசை - மேம்பாடு. இசைக்கிளை - பாடற்றொழிற் கேண்மக்கள் முதலிய சுற்றத்தார்.

பா-ம்—1 லெமக்கும்மொடும்.

# 42. திருமுகங்கொடுத்த படலம்

—o—

முன்னவன் மதுரை மூதூர் முழுமுத லிசைவ லானை
இன்னிசை பாடி வென்ற [1]தின்றுரை [2]செய்தே மந்தத்
தென்னவன் சேரன் மாடே திருமுகங் கொடுத்துப் பாணர்
மன்னவன் றனக்குச் செம்பொன் வழங்கிய வழக்கஞ் சொல்வாம்.

இனிமதி யெமக்கீ தென்று யாழ்வல்லோ னன்று தொட்டுப்
பனிமதி மருமான் கோயிற் பாணிசைக் கிழமை நீத்துக்
குனிமதி மிலைந்த நாதன் கோயின்முப் போது மெய்திக்
கனிமதி யன்பிற் பாடுங் கடப்படு நியமம் பூண்டான். 2

இத்தொழி லன்றி வேறு தொழிலிவற் கின்மை யாலே
பத்திர னிலம்பா டெய்தப் பொறுப்பரோ பழனக் கூடற்
சித்தவெம் மடிகள் வேந்தன் பொன்னறைச் செல்வம் வெளவிப்
பத்தர்யா ழிடத்தோ ளேந்திப் பாடுவான் காண வைப்பார். 3

சிலபொலங் காசு சின்னாண் மணிக்கலன் சின்னாள் செம்பொற்
கலைவகை சின்னா ளம்பொற் சாமரைக் காம்பு சின்னாள்
அலர்கதி ரரிமான் சேக்கை யாடகத் தகடு சின்னாள்
குலமணி வருக்கஞ் சின்னாள் கொடுத்திடக் கொண்டு போவான். 4

கைவரும் பொருளைத் தந்த கள்வருந் தானு மன்றி
எவ்வெவர் தமக்குந் தோற்ற தெரியிவிட் டழித்துஞ் சின்னஞ்

---

1. இசைவலானை - இங்கு ஏமநாதனை. தென்னவன் - இங்கு இறைவன். மாடு - இடம். கொடுத்து - கொடுப்பித்து: பிறவினை விகுதி தொக்கது.

2. பாண் இசை - இசைப்பாடல். கடப்படு நியமம்-கடமையாகிய நியதி. நியமம் - உறுதியுமாம்.

3. இலம்பாடு - வறுமை. பொன் அறை - பொக்கிஷம். வெளவி- (ஒருவரும் உணராவண்ணம்) கவர்ந்து.

4. பொலங்காசு - பொற்காசு. பொற்கலை - பீதாம்பரம். அரிமான் சேக்கை - சிங்காதனம். ஆடகம் - பொன். குலமணி வருக்கம்- பலசாதி இரத்தினக்கூட்டம்.

பா-ம்—1 இன்னுரை, தென்னுரை. 2 செய்கே ணந்தத்.

செய்வன செய்துந் தன்னைச் சேர்ந்தவ ரிரந்தோர் கைபார்த்
துய்பவர் பிறர்க்கு மாறா துதவியுட் கவலை தீர்ப்பான். 5

வைகலுங் கொடுப்போர் பின்னுண் மறுத்தன ராகப் போய்ப்போய்க்
கைதொழு திறைஞ்சி வாளா வருமவன் கலியின் மூழ்கி
உய்வகை வேறு காணு தொக்கலு மொக்க வாடிக்
கையற வடைய நோனு துறங்கினன் கனவி னெல்லை. 6

சித்தவெம் பெருமான் வந்து செப்புவா ரப்பா நிம்பத்
தொத்தவன் கோசந் தன்னிற் றும்பியுண் கனியின் வெளவி
இத்தன மின்று காறு மீந்தன மெம்பா லன்பு
வைத்தவ னறிந்தாற் சங்கை மனத்தனாய் விகற்பங் கொள்வான். 7

மயலறக் கற்புக் காக்கு மகளிர்போற் றுறவு காக்க
முயலும்யோ கரிலுட் காப்பு முரசெறி புறஞ்சூழ் காப்புங்
கயலிலச் சினையு நிற்கக் கவர்ந்ததற் புதயிக் கள்வன்
உயிர்தொறு [1]மொளித்து நின்ற வொருவனே வறியே னென்பான்.

கோமக னினைய செய்தி யறியுமேற் கோசங் காப்போர்க்
[2]காமுறு தண்ட நின்போ லன்பகத் தெம்மை வைத்த
தேமரு போந்தின் கண்ணிச் சேரமான் றனக்கிப் பேர்து
நாமொரு முடங்க றீட்டி நல்குவம் போதி யென்று. 9

---

5. எரியிலிட்டழித்து - உருவு அழித்து. சின்னஞ்செய்து - முன்னையுருத் தோன்றுதபடி மாற்றி. கைபார்த்து உய்பவர் - கைப் பொருள் வரவைக்கண்டு சீவிப்போர்.

6. கலியில் - வறுமையில். கையறவு - துன்பம், செயலொழிதல்; கை - செயல். நோனுது - பொறுக்கலாற்றுது.

7. நிம்பத்தொத்தவன் - வேப்ப மலர்மாலையை யுடைய பாண்டியன். கோசம்-பொக்கிஷம். தும்பி உண் கனியின் - யானையுண்ட விளாங் கனியில் உள்ளீடு இன்மைபோல. விகற்பம் - வேறுபாடு, தடுமாற்றம்.

8. மயலறக் கற்புக்காக்கும் - வேறு ஆண்மகனிடத்து ஆசை யில்லையாகக் கற்பினைக் காக்கும்; மயல் அற - (பிறரிடம்) காம மயக்கம் அற்ற.

9. உறு தண்டம் ஆம் - மிக்க தண்டனை உண்டாகும். போந்தின் கண்ணி - பனம்பூமாலை. சேரமான் தனக்கு-சேரமான் பெருமானுயனு ராகிய கழறிற்றறிவார் நாயனுருக்கு. முடங்கல் - திருமுகம். தீட்டி - எழுதி. போதி - போவாய்.

பா-ம்—1 மொளித்த கள்வனெருவனே. 2 காமுறுந்.

மறைக்குரை செய்த வாக்கான் ' மதிமலி புரிசை ' யென்னுஞ்
சிறப்பியற் சீர்சால் செய்யுட் பாசுரஞ் செப்பித் திட்டிப்
பிறைச்சடைப் பெருமா னல்கி மறைந்தனன் பெரும்பாண் செல்வன்
உறக்கநீத் தாடிப் பாடி யுவகைமா கடலி லாழ்ந்தான். 10

வாங்கிய திருமுக மணிப்பட் டாடையிட்
டாங்கிறை யடிபணிந் தகன்று பத்திரன்
ஓங்கிய கோயிலை வலங்கொண் டொல்லென
நீங்கிமேல் வரைப்புல நெறிக்கொண் டேகுவான். 11

கொல்லையுங் குறிஞ்சியுங் கொதிக்கும் வெம்பரற்
கல்லத ரத்தமுங் கடந்து முட்புறப்
பல்சுளைக் கனியடி யிடறப் பைப்பைய
நல்வளங் கெழுமலை நாடு நண்ணினன். 12

அலைகட னெடுந்துகி லந்த நாடெனுந்
தலைமக டனக்குவான் றடவு குன்றுபூண்
முலையென விளங்கின முகத்திற் றீட்டிய
திலகமே யானது திருவஞ் சைக்களம். 13

---

10. 'மதிமலிபுரிசை என்னும்......பாசுரம்-இது திருமுகப்பாசுரம் ஆகும்; அது : "மதிமலி புரிசை மாடக் கூடற், பதிமிசை நிலவும் பானிற வரிச்சிறை, அன்னம் பயில்பொழி லால வாயின், மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம், பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க், குரிமையி னுரிமையி னுதவி யொளிதிகழ், குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச், செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க, பண்பால் யாழ்வல பாண பத்திரன், றன்போ லென்பா லன்பன் றன்பாற், காண்பது கருதிப் போந்தனன், மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே" என்பது ஆகும். சிறப்பு - சொற்சிறப்பு. இயல் - இலக்கணம். சீர் - பொருட்சிறப்பு. இனி, சிறப்பியல் - சிறப்பிலக்கணமாம். சீர் - சொற் சிறப்பும் பொருட் சிறப்புமாம்.

11. ஒல்லென - விரைந்து. மேல் வரைப்புலம் - மேற்றிசையி லுள்ள மலைநாடு ; மேன்மை பொருந்திய மலை நாடுமாம்.

12. கொல்லை - முல்லை நிலம் ; அது காடும் காடு சார்ந்த இடமு மாகும். வெம்பரல் - கொடிய பருக்கைக் கற்கள். கல் அதர் அத்தம்- பாலை நிலம். முட்புறப் பல் சுளைக் கனி - பலாக் கனி. பைப்பைய - பையப்பைய. நல் வளம் - தேடி வருந்தாமல் தானே வந்தடையுஞ் செல்வம்.

13. திருவஞ்சைக் களம் - மலை நாட்டகத்தோர் சிவன் திருப்பதி.

அறமக ளாக்கமு மலரின் மேயசெந்
திறமக ளாக்கமு நீதி சான்றபோர்
மறமக ளாக்கமும் வடசொற் றென்கலைத்
திறமக ளாக்கமுஞ் [1]சிறந்த தந்நகர். 14

மண்புக ழந்நகர் மறுகின் மாடொரு
தண்புனற் சாலையிற் சார்ந்து ளானிப்பால்
விண்புகழ் நீதியவ் வேந்தற் கன்றிராக்
கண்புனை நுதலினர் கனவிற் றோன்றினர். 15

தென்னவன் மதுரையி லிருக்குஞ் சித்தர்யாம்
நின்னிடை வந்துளே நின்னைக் கண்டுதான்
நன்னிதி வேண்டநம் மோலை கொண்டுநம்
இன்னிசைப் பாணபத் திரனிங் கெய்தினன். 16

மற்றவற் கருநிதி கொடுத்து மன்னநீ
தெற்றெனை வரவிடு கென்று சித்தர்தாஞ்
சொற்றனர் போயினர் சுரக்குந் தண்ணளி
ஒற்றைவெண் குடையின னுறக்க நீங்கினன். 17

கங்குல்வாய்க் கண்டவக் கனாவைப் பெண்ணையந்
தொங்கலான் றமரொடு சொல்லிச் சேற்கணாள்
பங்கினன் றிருமுகங் கொணர்ந்த பத்திரன்
எங்குளான் கொல்லெனத் தேட வெண்ணுவான். 18

மற்றவர் தமைத்துரீஇ வருக தில்லெனக்
கொற்றவ னேவலோர் குறுகி மாடமுந்

14. அறமகள் ஆக்கம் - தருமச் செல்வம். அலரின் மேய செந்திற மகள் ஆக்கம் - பொருட் செல்வம். மறமகள் ஆக்கம் - வீரச் செல்வம். வட சொல் தென்கலைத் திற மகள் ஆக்கம்-கல்விச் செல்வம்.

15. தண் புனல் சாலை - தண்ணீர்ப் பந்தல். கண் புனை நுதலினர் - சிவபெருமான்.

16. நல் நிதி வேண்ட - மிக்க பொருளைப் பெற. ஓலை - திருமுகம்.

17. அரு நிதி - பெறுதற்கரிய பொருள். தெற்றென - விரைந்து. வர - (என்பால்) வர. அளி - கருணை.

18. பெண்ணையந் தொங்கல் - அழகிய பனம் பூமாலை. தமர் - இங்கே அமைச்சர்.

பா-ம்—1 சிறந்த வந்நகர்.

தெற்றியு [1]நியமமு மன்றுஞ் சென்றுசென்
றெற்றிகழ் மணிநக ரெங்குந் தேடுவார். 19

தருமநீர்ப் பந்தரி லிருக்குந் தந்திரி
வருமிசைக் கிழவனைக் கண்டு வல்லைபோய்த்
திருமகற் குணர்த்தினர் சேனையோ டெழீஇப்
பெருமகன் பாணர்தம் பிரானை நண்ணினான். 20

கண்டனன் முகிழ்த்தகைக் கமலஞ் சென்னிமேற்
கொண்டனன் பாடினன் கூத்து மாடினன்
தண்டெனை வீழ்ந்தன னன்பிற் றண்ணரு
வண்டெனை மகிழ்ந்தனன் மன்னர் மன்னனே. 21

வாங்கினன் றிருமுக மலர்க்க ணொற்றினன்
தாங்கினன் முடிமிசைத் தாமம் போன்மகிழ்
தூங்கினன் றடங்கணீர் துளிப்ப மெய்யெலாம்
வீங்கினன் பொடிப்பெழ வேந்தர் வேந்தனே. 22

மின்னவிருஞ் செம்பொன்மணி மாடக் கூடன் மேயசிவன் யாமெழுதி விடுக்கு மாற்றம், நன்னர்முகி லெனப்புலவர்க் குதவுஞ் சேர நரபாலன் காண்கதன்போ னம்பா லன்பன், இன்னிசை யாழ்ப் பத்திரன்றன் மாடே போந்தா னிருநிதியங் கொடுத்துவர விடுப்ப தென்னத், தென்னர்பிரான் றிருமுகத்தின் செய்தி நோக்கிச் சேரர்பிரான் களிப்பெல்லை தெரியா னாகி. 23

---

19. துரீஇ - துருவி - தேடி. இல் : கால விரைவுப் பொருளை யுணர்த்தும் இடைச்சொல் ; விழைவுப் பொருளை யுணர்த்தும் இடைச் சொல்லுமாம். தெற்றி - திண்ணை. நியமம் - வீதி, கடைவீதி.

20. தந்திரி வரும் - யாழ் கைவந்த. திருமகன் - பொருட் செல்வம் படைத்தவன் ; சேரமான் பெருமாணாயனார். பாணர் தம் பிரானை - பாணராகிய தமது தலைவரை ; தம் என்றது அரசனை ; பாணராகிய தம்பிரானை ; பாணர்களுடைய தலைவரை.

21. முகிழ்ந்த - கூப்பிய. தண்ணரு வண்டு - குளிர்ந்த தேனைக் கண்ட வண்டு.

22. மலர்க்கண் - மலர் போன்ற கண்களில். தாமம் - மலர்மாலை.

23. நன்னர்முகில் - (உலகத்திற்கு) நன்மை பயக்கும் மேகம். தின் என்னும் இரண்டும் தன் என்றுயது : இடவழுவமைதி. சேரநர பாலன் : அண்மை விளி.

[1] பா-ம்—1 நிகமமு.

பொன்னின் றளிகை மிசைவைத்துப் புழைக்கை மதமான் றலையேற்றி, மன்னுங் கொளையாழ்ப் புலவனைமுன் வைத்துப் பின்னே தானிருந்து, மின்னுங் கதிர்கா லிலைக்கவரி வீசிப் பலவே றியங்கலிப்பத், தென்னென் றளியா ரிசைத்தாரான் றிருமா நகரை வலஞ்செய்யா. 24

பஞ்சு தடவுஞ் சீறடியார் பலமங் கலங்கொண் டெதிர்போத, மஞ்சு தடவு நீள்குடுமி மாட மனையிற் கொடுபோகி, நஞ்சு தடவு மணிகண்ட [1]னன்பன் றனைநன் னீராட்டி, அஞ்சு தடவி யோவியஞ்செய் தமைத்த மணிமண் டபத்தேற்றி. 25

அம்பொற் றவிசிட் டருச்சனைசெய் தாறு சுவையின் னமு தருத்திச், செம்பொற் கலவை நறுஞ்சாந்தந் தீம்பூ வாதி முக வாசம், பைம்பொற் கலத்து வெள்ளிலைதீம் பழுக்காய் பிறவு முறைநல்கி, உம்பர்க் கிறைவன் றிருமுகத்தி லுய்ப்ப தெனலா லுய்த்துமென. 26

செம்பொ னறையைத் திறந்தழைத்துக் காட்டி யினைய திரு வெல்லாம், உம்பர் பெருமா னடியீர்நீ ருடையீர் கவர்ந்து கொண் மினென, இம்பர் கிழற்றும் வெண்குடையா னிசைப்ப வெதிர் தாழ்ந் திசைக்கிழவன், நம்ப னருளுக் குரியீர்நீர் நல்கிற் றமையு மெனக்கென்ன. 27

மன்னன் றுனெண் ணியவாற்றுல் வழங்க வழங்க மறுத்துமறுத் தின்ன றிரு மிசைக்கிழவ னிலங்கும் பொலம்பூ ணிருநிதியம்

---

24. பொன்னின் தளிகை - பொற்பீடம், அழகிய பீடம். கொளை - சாமரப்பாட்டு, இசை. தென் - ஓரிசைப்பண். இங்கு, "தேசிகர் தம் மைச் சிவநேசர் தம்மையும் - ஈசனென வேயுளத்து ளெண்" எனவரும் சைவசமய நெறித்திருக்குறள் சிந்திக்கற்பாலது.

25. சீறடி - சிற்றடி. பலமங்கலம் - அட்டமங்கலம்; அவை, கண்ணாடி, இடபம், விளக்கு, சீவற்சம், கவரி, சங்கு, சுவத்திகம், நிறைகுடம் என்பன. மஞ்சு - மேகம். அஞ்சு - பஞ்சவர்ணங்கள்.

26. முகவாசம் - தூபம். வெள்ளிலை - வெற்றிலை. பழுக்காய் - பாக்கு.

27. திரு எல்லாம் - செல்வங்களையெல்லாம். கவர்தல் - கைக் கொள்ளுதல். இம்பர் - இவ்வுலகம். இசைப்ப - கூற. நல்கிற்று - தந்தது.

பா-ம்—1 னன்பன்.

பொன்னஞ் சிவிகை கரிபரிமான் பொற்பட் டாடை பலபிறவுந்
[1]தன்னவென்னு மளவாற்றாற் றானே கொள்ளத் தார்வேந்தன். 28

பின்னே முடியோ சேட்சென்று பெருமை சான்ற வரிசையி
னூற், றன்னே ரிசையாற் றனைவிடுத்து மீண்டா னகத் தமிழ்
மதுரை, மின்னேர் சடையா ரிசைத்தொண்டன் றானு மீண்டு
வெயில்விரிக்கும், பொன்னேர் மௌலி நிதிக்கிழவன் போல
மதுரை நகர்புக்கான். 29

வந்து மதுரைப் பெருமானை வணங்கிக் கொணர்ந்த நிதியெல்
லாம், இந்து மருமா னகருள்ளார் யாரு மறிய யாவர்க்கும்,
முந்தை வேத முதல்வர்க்கும் புலவோர் தமக்கு முறைநல்கிச்,
சந்த யாழி னிசைப்பாணர் தரும மனையான் வைகினான். 30

ஆகச் செய்யுள்—2,130

---

28. தான் எண்ணிய வாற்றால் வழங்கல் - பொக்கிஷத்திலுள்ள செல்வங்களை எல்லாம் பாணபத்திரர்க்கு உரியன என்று தான் கருதிய படி அவற்றையெல்லாம் கொடுத்தல்.

29. பின் ஏழுடியோ - பின்பு ஏழடி தூரமோ (சென்றது). நிதிக் கிழவன் - குபேரன்.

30. இந்து மருமான் - இங்கு, வரகுணபாண்டியன். முந்தை - முற்பட்ட. சந்தம் - சந்தப் பாட்டு.

பா—1 தன்னமென்னு; தன்னதென்ன. (தன்னம் - சிறிது).

# 43. பலகையிட்ட படலம்

—o—

கருந்துழாய் முகிலொருபாற் [1]கலந்தவர்பத் திரற்குநிதி
திருந்துதா ருதியனிடைத் திருமுகமீந் தளித்ததிது
வருந்தியா ழுவனிசைப்ப மழைதூங்கு நள்ளிரவில்
இருந்துபா டெனப்பலகை யிட்டதூஉ மினிப்பகர்வாம். **1**

முன்புடைய நாயகனை முப்போதும் புகுந்திறைஞ்சி
இன்புறுமே ழிசைக்கிழவ னிருநிதிய மருளியபின்
அன்புசிறந் தரையிரவு மடைந்துபணிந் தடல்விடையின்
பின்புறநின் றேழிசையும் பாடிவரும் பேறுடைவான். **2**

தொழுந்தகையன் பருந்தேவர் தொகுதிகளுந் தொழத்திங்கட்
கொழுந்தலைய நதியலையக் குனிக்கின்ற தனிக்கடவுள்
செழுந்தரளச் சிவிகையின்மேற் றேவிதிருப் பள்ளியறைக்
கெழுந்தருளும் போதுபணிந் தேத்துவா னோரிரவில். **3**

இன்னிசையாழ்ப் பெரும்பாண னெவ்விடையூ றடுத்தாலுந்
தன்னியம நெறியொழுக்கந் தவானென்ப துலகறியப்
பொன்னியலுஞ் சடைமௌலிப் புராணர்திரு விளையாட்டால்
[2]அன்னிலையிற் கருங்கொண்மூ வார்த்தெழுந்த திசையெல்லாம். **4**

நடித்துநிரை புடைபரப்பித் தடுமாறித் திசைமயங்கத்
துடித்துவிட வாயரவுஞ் சோர்ந்துசுருண் [3]டலையொதுங்க

---

1. கருந்துழாய் முகில்-திருமால். உதியன்-சேரமான் பெருமாள். தூங்குதல் - சொரிதல். நள்ளிரவு - நடு இரவு.

2. முன்புடைய நாயகன் - சர்வ வல்லமையையுடைய பசுபதி; தம்மை முன்னமே ஆளாகவுடைய தலைவருமாம். ஏழிசைக் கிழவன் - பாணபத்திரன். அரையிரவு - நடு இரவு

3. குனிக்கின்ற-(வெள்ளியம்பலத்தில்) திருநடனம் செய்தருளும். தரளச் சிவிகை - முத்துப்பல்லக்கு.

4. தவான் - தவறான். சடைமௌலிப் புராணர் - சடாமகுடத்தையுடைய சோமசுந்தரக் கடவுள். அன் நிலையில் - இராப்போதில். கொண்மூ - மேகம்.

பா-ம்—1 கரந்தவர்பத். 2 அந்நிலையிற். (அந்நிலை - அவ்விடம்). 3 டலையொதுங்க (அலைந்து ஒதுங்க.)

இடித்துடுவின் கணம்புதைப்ப விருள்கான்று சலபதிமுன்
முடித்திடுவான் [1]வரவிடுத்த முகிலேழும் [2]வளைந்தவென. 5

கருங்கடலை விசும்பெடுத்துக் கவிழ்ப்பதென வெண்டாரை
நெருங்கிருளி னிருப்புக்கோ னிரைத்ததென நிறங்கருக
ஒருங்குசொரிந் துள்ளுணரா ருள்ளம்போ லுட்புறம்பு
மருங்கொடுகீழ் மேலென்று தெரியாத மயங்கிருள்வாய். 6

மாமாரி யிடைநனைந்து வருவானம் மாரிதனைப்
பூமாரி யெனநினைந்து திருக்கோயில் புகுந்தெய்திக்
காமாரி தனைப்பணிந்து கருணைமா ரியினனைந்து
தேமாரி பொழிவதெனத் தெள்விளியாழ் வாசிப்பான். 7

விடைக்கடவுள் பின்னின்று வீணையிடத் தோள்கிடத்திப்
புடைத்துநரம் பெறிந்துமிடற் றொலிபோக்கிப் பொலங்கொன்றைச்
சடைக்கடவுள் செவிவழிபோ யருட்பைங்கூழ் தலையெடுப்பத்
தொடைத்தமிழி னிசைப்பாணிச் சுவையமுத மடைதிறந்து. 8

நரம்புநனைந் திசைமழுங்க நனைந்துடலம் பனிப்பவிசை
வரம்பொழுகு விரல்மிறைத்து வலிவாங்க [3]மயிர்சிலிர்ப்ப

---

5. தடித்துநிரை - மின் வரிசைகள். அளை - புற்று. உடு-நட்சத்திரம். சலபதி - சமுத்திரராசன்.

6. வெண்டாரை - வெள்ளிய மழை. வெண்டாரை இருளினாலே நிறங் கருக என்க. உள் உணரார் - ஆன்மாவாகிய தம்மையும் தலைவனாகிய சிவத்தையும் அறியாதவர்; உள்ளம் என்பது அம் கெட்டு 'உள்' என நின்றது. உள்ளம்-ஆன்மா; 'தன்னையறியார் தலைவனையும் அறியார்' என்பது ஆன்றோர் வாக்கு. ஆதலால், அதுவும் உடன் கூறப்பட்டது.

7. காமாரி - காமனை எரித்தவர்; பரமசிவம். தெள்விளி-இசைப்பாட்டு; ஒரு பண்.

8. விடைக்கடவுள் - நந்திதேவர். நரம்பு புடைத்து எறிந்து - நரம்பை அமுக்கித்தெறித்து. போக்கி - எழுப்பி. தொடை: செய்யுளுறுப்பு; தொடையையுடைய பாணி என்க. பைங்கூழ் - பயிர். பாணி - பாட்டு.

9. மிறைத்து - விறைத்து. வலிவாங்க - வலிகொள்ள, வலித்தலால் வளைய. இசையாய் அரும்புதல்போல் - இசைமயமாய் வெளிப்படுதல்போல.

பா-ம்—1 வரவழைத்த. 2 வளைந்ததென. 3 மயிர் சிலும்ப.

நிரம்பியசே றடிபுதைப்ப நின்றுநிறை யன்பிசையாய்
அரும்புதல்போ லென்புருக்கு மமுதவிசை பாடுமால். 9

மாதர் நகையாய் மதுரேச ருண்பலிக்கெம் மனைவாய் வந்து
காதன் முகத்தரும்பிக் காட்டியென் சிந்தை கவர்ந்தார் போலுங்
காதன் முகத்தரும்பக் கையறவு தீரக் கலப்பேன் பாதி
பேதையுரு வாயிருந்தார் நாணிவிழித் தாவி பிழைத்தேன் போலும்.

ஒண்ணுதலாய் வெண்டலைகொண் டுண்பலிக்கு நம்மனையி னூடே கூடற், கண்ணுதலா ருள்ளாளக் கானமிசைத் தென்னுள்ளங் கவர்ந்தார் போலுங், கண்ணுதலார் பாடு மவிநயங்கண் டாகங் கலப்பேன் பாதி, பெண்ணுருவ மாயிருந்தார் வெள்கி விழித் தாவி பெற்றேன் போலும். 11

ஐயரியுண் கண்ணாய் திருவால வாயுடையா ரையங் கொள்வான், மையனகை செய்தென் வனமுலையின் மேற்செங்கை வைத்தார் போலும், மையனகை செய்தென் வனமுலைமேற் கைவைப்ப மாழ்கிச் சோர்வேன், தையலிடங் கண்டு நடுநடுங்கி விழித்தாவி தரித்தேன் போலும். 12

பாடுவா ரிருவர்க் கன்று பரிசிலாக் கொடுத்த சங்கத்
தோடுவார் செவியி லாட்டுந் தொண்டுகண் டிதன்மே னின்று

10. மாதர் - அழகு. காதல் - புணர்ச்சிக்குறிப்பு. கையறவு - இங்கே காமநோய். இச்செய்யுள் முதல் மூன்றும் அகப்பொருட் சுவையுடையன ; கனவு நிலையுரைத்தல் என்னும் துறை ; தலைவி கூற்று. இங்கு, 'பதியே தலைவனும் பசுவே தலைவியும் திருவருளே உயிர்த்தோழியுமாகக்கொண்ட குறிப்பின் மேலது.

11. வெண்டலை - பிரம கபாலம். உள்ளாளக்கானம் - தேவகாந்தருவம். பாடும் அவிநயம் - இன்பச்சுவை அவிநயம்.

12. ஐ அரி - அழகிய செவ்வரி : பஞ்சரேகையுமாம். மையல் நகை - ஆசையைப் புலப்படுத்தும் சிரிப்பு ; மையல்-காம மயக்குமாம். வனம் - சந்தனக்கோலம், அழகு.

13. இருவர் - ஆகா, ஊகூ என்னும் இரு கந்தருவர்கள் ; இவர்கள் பாட்டிற்குப் பரிசிலாக என்றும் சங்கத்தோட்டின் வடிவாக இருந்து பாடும்படி சிவபெருமான் தமது திருச்செவியைக் காணியாட்சியாக அளித்தருளினார். இதனை, 'கந்தருவரையிரு காதிற்சேர்த்தனை' எனவரும் அடியால் அறியலாகும். இருவர், தும்புரு, நாரதர் என்பாருமுளர்.

பாடுவா யுனக்கே யிந்தப் பலகையென் றுழ்ந்த வன்பின்
நாடுவார் விசும்பிற் கூறி நகைமணிப் பலகை யிட்டார். 13

இறையரு ளாணை யஞ்சி யிட்டபொற் பலகை யேறி
[1]நறைகெழு மதுர கீதம் பாடிநான் மறைகள் சூடும்
அறைகழ லகத்துட் கொண்டு பலகையு மங்கை கொண்டு
மறைவழி யாழ்வல் லோன்றன் மனைவயிற் செல்லு மெல்லை.

மின்னுமா மேக நீங்கி விசும்புவாய் விளங்கித் [2]தென்றல்
மன்னுமா [3]மலய மேய மாதவன் குடித்த வைகற்
பொன்னுமா மணியு முத்தும் புலப்படக் கிடந்த வேலை
என்னமீன் விளங்கித் தோன்ற வேகியில் புகுந்தா னிப்பால்.

பாயிருட் படலங் கீண்டு பரிதிகண் விழித்துச் செங்கை
ஆயிரம் பரப்பி முந்நீ ரலைகட னீந்து மெல்லை
மாயிரு ஞாலங் காக்கும் வரகுண னிரவு தங்கள்
நாயகன் பாடற் கீந்த நல்லருட் பரிசில் கேட்டான். 16

இன்னிசைக் கரசை யிட்ட பலகைமீ திருத்தி மன்னர்
மன்னவ னிவனே யெங்கண் மதுரைநா யகனென் றுன்னி
மின்னிவர் மணிப்பூ ணல்கி விலையில மிகவு நல்கி
நன்னிதி வெறுப்ப நல்கி [4]வரிசையா னடத்தி வந்தான். 17

இறையருள் வரிசை பெற்றபத் திரனு மேறுயர்த் தவரைநாற் போதும், முறையினல் வழிபட் டொழுகுவா னாக முடிகெழு

---

14. பொற்பலகை - பொன்னாலாகிய பலகை. நறை - தேன். 'நான்மறைப் பயனும் ஏழிசை' என்றமையால், 'மறைவழியாழ்' என்றார்; எனவே, மறையின்வழியது காந்தருவ வேதம்.

15. தென்றல் மன்னும் மாமலயம்-பொதியமலை. மாதவன் குடித்த வைகல் - அகத்தியன் (கடலைப்) பருகிய காலையில். மீன்-நட்சத்திரம். விளங்கல் - பிரகாசித்தல், புலப்படல். இங்கு விசும்பு கடலாகவும் நட்சத்திரங்கள் பொன், இரத்தினம் முத்துக்களாகவும் கூறியதாகும்.

16. பாய் இருள் - பரவிய இருள். இரவு - இங்கு, நடு இராத்திரி. பரிசில் - உபகாரம், அது பொற்பலகை.

17. இன்னிசைக்கு அரசு - பாணபத்திரன். இட்ட - (இறைவன்) கொடுத்தருளிய. உன்னி - நினைத்து.

பா-ம்—1 நறைவழி. 2 தோன்ற. 3 மலையின் மாதவன. 4 வரிசையா நடத்தி.

வரகுண வேந்து, மறைமுத லடிகள் வந்துவந் தனையால் வழுத்து வான் சில்பகல் கழிய, நிறைபெருஞ் சுடரோன் றிருவுரு வடைந்து நெறியினாற் சிவபுர மடைந்தான். 18

ஆகச் செய்யுள்—2,148

---

18. நாற்போது - காலை, நண்பகல், மாலை, நடு இரவு என்பன. திருவுரு - சாரூபம். நெறியினால் - சரியை கிரியை யோகங்களாகிய சோபான மார்க்கங்களால்.

# 44. இசைவாது வென்ற படலம்

—o—

கூடலம்பதியி லாடக மேருக் கொடிய விற்குரிசி லடியவ னுக்குப், பாட லின்பரிசி லாகிய செம்பொற் பலகை யிட்டபடி பாடின மன்னன், வீட ரும்பொருவில் கற்புடை யாளோர் விறலி யைப்பரம னிறையருள் பற்றி, மாட கஞ்செறியும் யாழ்வழி பாடி வாது வென்றவர லாறு மிசைப்பாம். 1

வரகு ணன்கதி யடைந்தபி னம்பொன் மௌலி சூடிய விராச விராசப், புரவ லன்புவி மடந்தையை வேட்டுப் புயந்த ழீஇக்கொடு நயந்தரு நாளிற், பரவு மன்பதை புரந்தொழு கந்தப் பஞ்ச வற்குரிய ரஞ்சன வுண்கண், மரபின் வந்தமட வார்பல ரேனை மையல் செய்யுமட வார்பலர் மாதோ. 2

அன்ன போகமட வாரு ளொருத்தி யரச னுக்கமுது மாவியு மாகும், மின்ன ளுண்மதுர கீத மிசைக்கும் விஞ்சை யின்றுறைவ லாளவ ளுக்கும், பன்ன காபரண னின்னிசை பாடும் பத்தி ரன்பொருவில் கற்புடை யாட்கும், மன்னு கீதவினை யாலிகன் மூளவு ழுதி காதன்மட மாது பொருளாய். 3

பாடி னிக்கெதிரொர் பாடினி தன்னைப் பாட விட்டிவள் படைத்த செருக்கை, ஈட ழிப்பலென வெண்ணி யெழீஇத்தன் னிறைம கற்கஃ திசைத்தலு மந்தத், தோடி றப்பொரு கயற்கணி னுடான் சொன்ன வாறொழுகு மன்னவர் மன்னன், நாடி யத்தகைய விறலியை யீழ நாட்டி னும்வர வழைத்து விடுத்தான். 4

---

1. வீடரும் - அழிதலில்லாத. விறலி - பாடினி; இவ்விறலியாரை ஒரு சமயம் பாண்டியன் விரும்பி அழைத்தபோது அவள் தன் கற்பு நெறியைப் பாதுகாத்தவள் என்பார் 'வீடரும் பொருவில் கற்புடையாள்' என்றார்.

2. நயம் - இன்பம். மையல் செய்யும் மடவார் - ஆசையை யுண்டாக்கும் பெண்கள் ; காமக்கிழத்தியர்.

3. விஞ்சையின்துறை - கல்வித்துறை. பன்னகம் - பாம்பு. கீதவினையால் - சங்கீதத் தொழிலால்.

4. ஈடழிப்பல் - அடியோடு அழிப்பேன். கயற்கணினுள் - இங்குக் காமக்கிழத்தி. ஈழ நாடு - யாழ்ப்பாணம்.

பந்த யாழ்முதுகு தைவர விட்டுப் பாட லாயமிரு பக்கமு மொய்ப்ப, வந்த பாடினி மடந்தையு மன்னர் மன்ன னைத் தொழுதெதார் கின்னர மாதிற், சந்த வேழிசை மிழற்றின ணின்று டன்னை நோக்கியொரு மின்னிடை யாண்மேற், சிந்தை போக்கி வரு தீப்பழி நோக்காத் தென்ன ருக்கரச னின்னது செப்பும். 5

பத்தி ரன்மனைவி தன்னையெம் முன்னர்ப் பாடு தற்கழை யதற் கவ ளாற்று, துத்த ரஞ்சொலினும் யாமவள் சார்பா யுனைவி லக் கினும் விடாது தொடர்ந்தே, சித்த நாணமுற வஞ்சின மிட்டுச் செல்ல னில்லென வளைந்துகொ ளென்று, எய்த்த நுண்ணிடையி னனை யிருக்கைக் கேகி நாளைவரு கென்று விடுத்தான். 6

பின்ன ரின்னிசைப் பத்திரன் பெருந்தகை விறலி
தன்னை யங்கழைத் துளத்தொன் றுபுறத்தொன் று சாற்றும்
என்னொ டின்னிசை பாடுவா ருளர்கொலோ விங்கென்
றுன்னி வந்திருக் கின்றன ளிசைவலா ளொருத்தி. 7

ஆட மைத்தடந் தோளினு யவளொடுங் கூடப்
பாட வல்லையோ பகரெனப் பாடினி பகர்வாள்
கோட ருந்தகைக் கற்புமிக் கூடலெம் பெருமான்
வீட ருங்கரு ணையுமெனக் கிருக்கையால் வேந்தே. 8

பாடி வெல்வதே யன்றிநான் பரிபவ முழந்து
வாடு வேனலே னென்றுரை வழங்கலு மதுக்கால்
ஏடு வார்குழ லவளையு மிருக்கையுய்த் திருந்தான்
நீடு வார்திரைப் பொருனையந் தண்டுறை நிருபன். 9

---

5. பந்தம் - கட்டு அமைந்த. ஆயம் - பாடற்றொழிற் கேழ்ப் பெண்கள் கூட்டம், சேர்ந்துபாடும் தோழிப்பெண்கள் கூட்டமுமாம். கின்னர மாதில் - கின்னரப் பெண்ணைப்போல.

6. ஆற்றாது - (உன்னோடு பாட) வலியின்றி. உத்தரம் - பதில். வஞ்சினம் - சபதம். செல்லல் - போகாதே.

7. சாற்றும் - கூறுகின்றான். பெருந்தகை - இங்குக் கற்பு. இங்கு - இச்சபையில்.

8. கோள்தரும் தகைக் கற்பு - மழைக்கோளைக் கொண்டு மழையைப் பெய்விக்கும் பெருமையுடைய கற்பு. கோட அரும் தகைக்கற்பு எனப்பிரித்து, பிறமகளிர் கொள்ளுதற்குரிய அறக்கற்பு என்றலுமாம்.

9. பரிபவம் உழந்து - தோல்வியால் வருந்தி; பரிபவம் - அவமானமுமாம்.

மற்றை வைகலவ் விருவரைப் பஞ்சவன் மதுரைக்
கொற்ற வன்றன தவையிடை யழைத்துநேர் கூட்டிக்
கற்ற வேழிசை கேட்குமுன் கலத்தினும் போந்த
வெற்றி வேன்மதர் நெடுங்கணாள் விறலியை வைதாள். 10

குற்ற மெத்தனை யெத்தனை குணங்கள்யாழ்க் கோலுக்
குற்ற [1]தெய்வமே திசைப்பதெவ் வுயிருடம் புயிர்மெய்
பெற்ற வோசையெவ் வளவவைக் குத்தரம் பேசி
மற்றெ ஞேடுபா டில்லையேல் வசையுனக் கென்றாள். 11

இருமை யும்பெறு கற்பிஞ ளியம்புவாள் கலத்தின்
வரும ரும்பெறற் கல்வியும் வாதின்மே லூக்கப்
பெருமை யும்பலர் விரும்புறு பெண்மையின் செருக்குந்
திரும கன்சபை யறியவாய் திறக்கவேண் டாவோ. 12

நெய்யுண் பூங்குழன் மடவரா ளின்னொடும் வாது
செய்யும் பூசலுக் கெதிரலாற் றீயவாய் திறந்து
வையும் பூசலுக் கெதிரலேன் மானம்விற் றுன்போல்
உய்யும் பாவைய ரேயதற் கெதிரென வுரைத்தாள். 13

வென்றி மீனவன் விலக்குவான் போலெதிர் விலக்கித்
துன்று தார்க்குழன் மடந்தைமீர் பாடுமின் றோற்றோர்
வென்ற மாதரார்க் கடிமையாய் விடுவதே சபதம்
என்று மானமுண் டாக்கலு மீழநாட் டரிவை. 14

முந்தி யாழிடந் தழீஇக்குரல் வழிமுகிழ் விரல்போய்
உந்த வேபெரு மிதநகை யுட்கிடந் தரும்பச்

10. பஞ்சவன் - பாண்டியன். கலத்தினும் போந்த - (ஈழநாட்டி லிருந்து) மரக்கலத்தினின்றும் வந்த. விறலியை - பாணபத்திரன் மனைவியை.

11. யாழ்க்கோல் - வீணைத்தண்டு. குற்றம் - மரக்குற்றத்தால் வரும் செம்பகை, ஆர்ப்பு, கூடம், அதிர்வு என்பன. ஓசை - நரம் பொலி மாத்திரை; எழுத்தொலி மாத்திரையுமாம்.

12. கலத்தின் வருமரும்பெறற் கல்வி - ஈழப்பாடினி: மரக்கலம் ஏறி வந்தது கற்ற கல்வியால் ஆதலால், இங்கு உடையான் தொழில் உடைமை மேலேற்றிக் கூறப்பட்டுள்ளது.

13. நெய் உண் பூங்குழல் - நெய் பூசிய அழகிய கூந்தல். பூசல்- போர்.

பா-ம்—1 தெய்வம்யா திசைப்பதெவ்.

சந்த வேழிசை யிறைமகன் ருழ்செவிக் கன்பு
வந்த காதலாண் மழலையி னமுதென வார்த்தாள். 15

வீணை வாங்கினண் மாடக முறுக்கினள் விசித்து
வாண ரம்பெறிந் திருசெவி மடுத்தன ரியக்கர்
நாண மெல்விர னடைவழி நாவிளை யமுதம்
பாணர் கோமகன் விறலியும் பலர்செவி நிறைத்தாள். 16

அரச னுட்கிடை யறிந்தில ரவைக்களத் துள்ளார்
விரைசெய் வார்குழற் பாடினி பாடலை வியந்தார்
புரைசை மாணிரைப் பூழிய னிலங்கையிற் போந்த
வரைசெய் குங்குமக் கொங்கையாள் பாடலை மகிழ்ந்தான். 17

தென்னவ னுட்கோ ளெல்லை தெரிந்தன ரவையத் துள்ளார்
அன்னவன் புகழ்ந்த வாறே புகழ்ந்தன ரவளைத் தானே
முன்னவ னருளைப் பெற்று மும்மையுந் துறந்தோ ரேனும்
மன்னவன் சொன்ன வாறே சொல்வது வழக்கா றன்றே. 18

பொன்றளி ரனையாண் மையற் புதுமது நுகர்ந்து தீது
நன்றறி யாத.கன்னி நாடவ னவையை நோக்கி
இன்றொரு நாளிற் றேரத் தக்கதோ விதுவென் றந்த
வென்றடு வேற்க ளுரைப் போமென விடுத்தான் மன்னே. 19

மருவிய வாய மேத்த விருந்தினண் மனைவந் தெய்திப்
புரவலன் றனது பாட்டைப் புகழ்ந்ததே புகழ்ந்த தாகப்

---

15. குரல் - இஃது எழுவகை நரம்புள் ஒன்று. அன்பு வந்த காதலாள் - பாண்டியன் காமக்கிழத்தி; அன்பு வளர்தற்கேதுவாகிய காதலைச் செய்விப்பவள் என்க.

16. விசித்து - கட்டமைத்து. விரல் நடைவழி - விரல் செல்லும் மார்க்கம்; என்றது நரம்பை; அது பின்பு இசையை உணர்த்தும்.

17. உட்கிடை - மனக்கருத்து. புரைசைமாணிரை - கழுத்துக் கயிற்றினையுடைய யானைக் கூட்டங்கள். புரைசை - புரசை: போலி. போந்த - வந்த.

18. முன்னவன் - சிவபெருமான். மும்மை - காமம், வெகுளி, மயக்கம்; அல்லது மண், பொன், பெண்; மனம் வாக்குக் காயம் இவைகளால் வரும் பாவங்களுமாம். ''மன்னவன் சொன்னவாறே சொல்வது வழக்காறன்றே'' என்பது ஒரு பழமொழி.

19. மையல் புது மது - காமமாகிய புத்தம் புதிய தேன். விடுத்தான் - விடை கொடுத்தான்; விடுத்தல் - விடை.

பெருமிதந் தலைக்கொண் டானைப் பெருங்களிப் படைந்து மஞ்சத்
திருமல ரணைமே லார்வந் திளைத்தினி திருந்தா ளிப்பால். 20

வணங்குறு மருங்கிற் கற்பின் மடவரன் மதங்கி தானும்
அணங்கிறை கொண்ட நெஞ்ச ளங்கயற் கண்ணி பாகக்
குணங்குறி கடந்த சோதி குரைகழ லடிக்கீ ழெய்தி
உணங்கினள் கலுழ்கண் ணீர வொதுங்கிநின் றிதனைச் சொன்னாள்.

தென்னவ னாகி வையஞ் செய்யகோல் செலுத்திக் காத்த
மன்னவ வழுதி வார வழிவழக் குரைப்ப தானான்
அன்னவன் கருத்துக் கேற்ப வவையரு மனைய ரானார்
பின்னடு நிலைமை தூக்கிப் பேசுவார் யாவ ரையா. 22

உன்னருட் டுணைசெய் தென்பா லுறுகணோய் துடைப்ப தென்ன
பின்னனாய் நீயே நாளை வெல்லுமா செய்து மஞ்சேல்
என்னவா காய வாணி யீறிலா னருளாற் கேட்டு
மன்னருங் கற்பி னாடன் மனைபுகுந் திருந்தாள் மன்னோ. 23

அன்றுபோன் மற்றை ஞான்று மழைத்தனன் பாடல் கேட்டுக்
குன்றுபோற் புயத்தா னென்னற் கூறிய வாறே கூற
மன்றுளார் பலரு மன்ன வண்ணமே சொன்னார் கேட்டு
நின்றபாண் மடந்தை பாண்டி நிருபனை நோக்கிச் சொல்வாள். 24

தென்னரே றனையாய் ஞால மனுவழிச் செங்கோ லோச்சும்
மன்னரே றனையாய் வார வழக்கினை யாத லானீ
சொன்னவா றவையுஞ் சொல்லத் துணிந்தது துலைநா வன்ன
பன்னகா பரணர் முன்போய்ப் பாடுகேம் பாடு மெல்லை. 25

---

20. விருந்தினாள் - புதிதாக வந்த ஈழப்பாடினி. பெருமிதம் - இறுமாப்பு. மஞ்சம் - கட்டில்.

21. மதங்கி - பாடும் பெண்; பாடினி. அணங்கு இறை கொண்ட - துன்பங் குடிகொண்ட.

22. வாரவழி - அன்பு சென்றவழி; பட்சபாதம். தூக்கி - ஆராய்ந்து.

23. உறுகண் - துன்பம். துடைப்பது - ஒழிக்கக் கடவாய்: வியங்கோள் வினைமுற்று.

24. மற்றைஞான்று - மறுநாள். பாண்மடந்தை-பாண பத்திரன் மனைவி.

25. வாரவழக்கு-நடுநிலைமை இழந்த வழக்கு. பன்னகாபரணர்-சிவபெருமான்.

இருவரேம் பாட்டுங் கேட்டுத் துணிந்திவள் வென்ருளென்று
ஒருவர்சந் நிதியிற் சொன்னுற் போதுமென் றுரைத்தான் பாண்டித்
திருமக னனைய வாறே செய்மினீர் செய்மி னென்ன
மருவளர் குழலி னுர்த மனைபுகுந் திருந்தார் பின்னுள். 26

தென்ற னுடனு மந்திரச் செல்வரும்
நன்று தீதுணர் நால்வகைக் கேள்வியோர்
ஒன்ற வேகி யொளிவிடு வெள்ளிமா
மன்ற வாணர்மா மண்டபத் தெய்தினுர். 27

எய்தி யம்மட மாதரை யிங்குறச்
செய்தி ரென்னத் திருமக னேவலோர்
நொய்தி னேடி நொடித்தழைத் தாரொடு
மைதி கழ்ந்த விழியார் வருவரால். 28

படிமை யார்தவப் பாடினி வந்தெனக்
கடிமை யாவளின் றையமின் ருலெனக்
கொடுமை யார்மனக் கோட்டச் செருக்கொடுங்
கடுமை யாகவந் தாள்கலத் தின்வந்தாள். 29

[1]கற்பின் மிக்கெழு கற்புங் கருத்தினிற்
சிற்ப ரஞ்சுடர் சேவடி மேல்வைத்த
அற்பு மிக்கெழ மெல்லவந் தாளரோ
[2]பொற்பின் மிக்குள பத்திரன் பொன்னுள். 30

---

26. இருவரேம் - எங்கள் இருவருடைய. செய்மின் செய்மின் : துணிவுபற்றிய அடுக்குத்தொடர்.

27. நன்று தீது - இருவகை இசைக் குற்றங்கள். நால்வகைக் கேள்வி - கீதஞானம், இலயஞானம், சுருதிஞானம், தாளஞானம் என்பன.

28. நொய்தின் ஓடி நொடித்து-விரைந்து ஓடி மன்னன் கட்டளையைக் கூறி; நொடித்தல் - சொல்லுதல்.

29. தவப்படிமை - தவவேடம் ; அது விபூதி உருத்திராக்கங்களை அணிதல். கொடுமையார் - பாண்டியன் ; கொடுமை-நல்லதைத் தீது என்றும், தீயதை நன்று என்றும் கூறுதல் ; ஆர், விகுதி ; இஃது இழித்தற் கண் வந்தது. கோட்டம் - அழுக்காறு. கடுமை - விரைவு.

30. கற்பின் மிக்கெழு கற்பும் - கல்வியறிவால் மேம்பட்டெழுந்த நிறையும், கற்பைப்போல மேம்பட்டெழுந்த கல்வியுமாம்.

பா-ம்—1 கற்பு. 2 பொற்பு.

அலங்கு மாரமோ டங்கத மாதிபல்
கலன்க டாங்கிக் கலைஞர் குழாத்திடை
இலங்கு மாட மதுரைக் கிறைவரும்
புலங்கொ ளுவலர் போல்வந்து வைகினர். 31

அந்த வேத்தவை தன்னி லருங்கலம்
வந்த வேய்த்தடந் தோளிசை மாதராள்
முந்த வேத்திசை பாடினள் முந்தையோர்
சிந்தை வேட்டொன்றுஞ் செப்பின ரில்லையால். 32

வீணை தோளிட னேந்திய வெண்மலர்
வாணி பாட விருக்கையின் வைகியே
யாண ரம்பெறிந் தின்னிசை யோர்ந்தெழீஇப்
பாணர் கோமகன் பன்னியும் பாடுமால். 33

குடங்கை நீரும் பச்சிலையு மிடுவார்க் கிமையாக் குஞ்சரமும்
படங்கொள் பாயும் பூவணையுந் தருவாய் மதுரைப் பரமேட்டி
படங்கொள் பாயும் பூவணையுந் தருவாய் கையிற் படுதலைகொண்
டிடங்க டோறு மிரப்பாயென் றேசு வார்க்கென் பேசுவனே. 34

தேனூர் மொழியார் விழிவழியே செல்லா தவர்க்கே வீடென்று
நானு வேதப் பொருளுரைத்தாய் நீயே மதுரை நம்பரனே
நானு வேதப் பொருளுரைத்தாய் நீயே பாதி நாரியுரு
ஆனு யென்று பிறர்பழித்தா லடியேன் விடையே தறைவேனே. 35

வரத ளுகி யெவ்வுயிர்க்கு மாயா விருத்தி வலியடக்கிச்
சரத மான வீட்டின்பந் தருவாய் மதுரைத் தனிமுதலே

---

31. ஆரம் - முத்துமாலை. அங்கதம் - தோளணி. கலைஞர் - இசைப்புலவர். இறைவர் - சோமசுந்தரக் கடவுள்.

32. கலம் - மரக்கலம். ஏத்திசை - நால்வகை வருணத்தாரை வாழ்த்துதல்: வேத்திசை எனக்கொண்டு அரசர்க்குரிய வாழ்த்து என்றலுமாம்.

33. வாணி பாடு அ இருக்கை - கலைமகள் பாடும்போது இருக்கும் அந்தப் பதுமாசனம்; (பது மாசனம் - காலடிகளை மாற்றிக் குதி மேலாகக் கொண்டிருத்தல்.) யாழ் + நரம்பு = யாணரம்பு.

34. குடங்கை - உள்ளங்கை. இமையாக்குஞ்சரம் - ஐராவதம்; (என்றது இந்திர பதவி). படங்கொள்பாய் - அனந்தசயனம்; (என்றது திருமால் பதவி). பூவணை - தாமரைப் பீடம்; (என்றது பிரமன் பதவி). ஏசுவார் - இகழும் புறச்சமயிகள்.

35. தேனூர் மொழியார் - பெண்கள். விழி - கட்பார்வை.

சரத மான வீட்டின்பந் தருவாய் வீடு பெறுவார்போல்
விரத யோக நிலையடைந்தா யென்பார்க் கென்னுன் விளம்புவனே.

கண்ணுதன் மதுரைப் பிரானையிவ் வாறு கருதிய பாணியாற் கனிந்து, பண்ணுதல் பரிவட் டணைமுத லிசைநூல் பகர்முதற் றொழிலிரு நான்கும், எண்ணுறு வார்தல் வடித்திடன் முதலா மெட்டிசைக் கரணமும் பயப்ப, மண்ணவர் செவிக்கோ வானவர் செவிக்கும் வாக்கினு னுவிளை யமுதம். 37

இடையிரோ டேணைப் பிங்கலை யியக்க மிகந்துமூ லந்தொடுத் தியக்கி, நடுவுறு தொழிலாற் பிரமரந் திராந்த நடைபெற விசைக்கு முள்ளாளம், மிடறுவீங் காள்கண் ணிமைத்திடா ளெயிறு வெளிப்படாள் புருவமே னிமிராள், கொடிறது துடியாள் பாடலு மதுகேட் டனைவருங் குதூகல மடைந்தார். 38

கன்னிநா டுடையான் கைதவ னெனும்பேர்க் காரணந் தேற் றுவா னெனத்தான், இன்னிசை யறிஞ னாகியு முன்போ லியம் புவா னொருப்படு கின்ருன், முன்னவ னருளாற் றன்மனக் கோட்ட முரண்கெடப் பொதுமையா னோக்கி, இன்னவ டானே வென்றன ளென்று னினையவா றனைவரு மொழிந்தார். 39

கரியுரை மொழிந்த கைதவ னிலங்கைக் கைதவப் பாடினி கழுத்திற், புரிகுழன் மாதை யிருத்தென விருத்தும் போதுமை யிடங்கரந் திருந்த, அரியநா வலரீ தற்புத மீதற் புதமென

---

36. வரதன் - அருட்கொடையையுடையவன். மாயா விருத்தி வலி - மாயாமலத்தின் தொழில் வலி. சரதம் - நிலையான.

37. பாணி - இசைப்பாட்டு; இங்குப் பெருந்தேவபாணி. முதற் றொழில் இருநான்கு - பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, கையூழ், விளையாட்டு, குறும்போக்கு என்பன. இசைக்கரணம் எட்டு-வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், எள்ளல். பட்டடை என்பன. வாக்கினாள் - வார்த்தாள்.

38. இடை - இடைகலை. நடுவுறு தொழில் - சுழுமுனை மார்க்கத்தில் வாயுவை இயக்கிச்செய்யும் கிரியை. கொடிறு - கபோலம். உள்ளாளம் இச்செய்யுளிற் கூறிய இலக்கணத்தோடு கந்தருவரால் பாடப்படுவதாகும்.

39. கன்னிநாடுடையான் - இங்கு இராசராச பாண்டியன். கைதவன் - பாண்டியன்; வஞ்சகன் என்று மற்றொரு பொருள். பொதுமையால் நோக்கல் - நடுநின்று பார்த்தல்.

வறைந்தவை காண, விரிகதிர் மின்போன் மறைந்தனர் யாரும் வியந்தனர் பயந்தனன் வேந்தன். 40

செங்கணே றழக ராடலீ தென்றே யாவருந் தெளிந்தன ரேத்தி, அங்கணு யகர்தங் கருணையின் றிறனு மடியவ ரன்பை யுந் தூக்கித், தங்கணு ரருவி பெருகவா னந்தத் தனிப்பெருஞ் சலதியி லாழ்ந்தார், வங்கமேல் வந்தாள் பிடர்மிசை யிருந்த மாணிழை விறலியை மன்னன். 41

இறக்குவித் தவட்கு முந்தமுத் தார மெரிமணிக் கலன்றுகில் வரிசை, பெறக்கொடுத் தேனை யவட்குமுண் மகிழ்ச்சி பெறச்சில வரிசைதந் தவையிற், சிறக்கவந் தொருங்கு வைகிவா னிழிந்த தெய்வதக் கோயில்புக் கிருந்த, அறக்கொடி யிடஞ்சேர் பெரும் புல வோர்க்கு மருங்கல னுதிக னல்கா. 42

மன்னவர் வலிக ளெல்லாந் தெய்வத்தின் வலிமுன் னில்லா
அன்னமா தெய்வஞ் செய்யும் வலியெலா மரண்மூன் றட்ட
முன்னவன் வலிமுன் னில்லா வெனப்பலர் மொழிவ தெல்லாம்
இன்னபாண் மகளிற் காணப் பட்டதென் றிறும்பூ தெய்தா. 43

மின்னியல் சடையி னுனை விடைகொடு வலஞ்செய் தேகி
இன்னிய மியக்கஞ் செய்ய வெழில்கொடன் கோயி லெய்தித்
தொன்னிதி பெற்றான் போலச் சுகுணபாண் டியனைப் பெற்று
மன்னிய மகிழ்ச்சி வீங்க வைகினன் இராச ராசன். 44

ஆகச் செய்யுள்—2,192

---

40. கரியுரை - சான்று மொழி. கைதவன் - இங்கு, ஒழுக்கமான தவத்தையுடையவன் ; தவங் கைவரப் பெற்றவன்.

41. ஆடல் - திருவிளையாடல். தனிப்பெருஞ் சலதியில் - பேரின்பக் கடலில். வங்கம் - மரக்கலம்.

42. இறக்குவித்தவட்கு - ஈழப்பாடினி கழுத்தினின்று மிறங்கச் செய்த பத்திரன் மனைவிக்கு. அறக்கொடி - உமாதேவியார்.

43. அரண் மூன்று அட்ட முன்னவன் - சிவபெருமான். இறும்பூது - ஆச்சரியம்.

44. இன் இயம் - இனிய வாத்தியம். இயக்கம் செய்ய - ஒலிக்க. தொன்னிதி - சேமநிதி ; சங்கநிதி பதுமநிதி என்பாருமுளர்.

# 45. பன்றிக்குட்டிக்கு முலை கொடுத்த படலம்

—o—

இருளைக்கந் தரத்தில் வைத்தோன் றன்னிடத் தென்று மன்பின்
தெருளைத்தந் தவட்கு மாறுந் தெரிவையை யிசையால் வெல்ல
அருளைத்தந் தளித்த வண்ண மறைந்தனந் தாயாய்ப் பன்றிக்
குருளைக்கு முலைதந் தாவி கொடுத்தவா றெடுத்துச் சொல்வாம். 1

முறையென விமையோர் வேண்ட முளைத்தநஞ் சயின்று சான்றாய்
உறையென மிடற்றில் வைத்த வும்பரான் மதுரைக் காரந்
திறையென வெறிநீர் வைகைத் தெற்கது குருவி ருந்த
துறையென வுளதோர் செல்வத் தொன்மணி மாட மூதூர். 2

தருநாத னாதி வானோர் தங்குரு விருந்து நோற்பக்
குருநாத னெனப்பேர் பெற்றுக் கோதிலா வரந்தந் தேற்றில்
வருநாதன் சித்தி ரத்தேர் வலவனா ருடனே கஞ்சத்
திருநாதன் பரவ வைகி யிருக்குமச் சிறந்த வூரில். 3

சுகலனென் றொருவே ளாள னவன்மனை சுகலை யென்பாள்
இகலருங் கற்பி னாள்பன் னிருமகப் பெற்றாள் செல்வப்
புகலருஞ் செருக்கா லன்ன புதல்வரைக் கடியா ராகி
அகலருங் களிப்பு மீதா ரன்பினால் வளர்க்கு நாளில். 4

தந்தையுந் தாயு மாயத் தறுகண்மிக் குடைய ராகி
மைந்தரும் வேட ரோடு கூடிவெங் கானில் வந்து

---

1. இருள் – கறுப்பு, விஷம். கந்தரம்-கழுத்து. அன்பின் தெருள்- தெளிந்த அன்பு, உண்மை அன்பு. மாறும் - பகையாயுள்ள. குருளை- விலங்கின் குட்டி.

2. திறை - இறைப்பொருள். தெற்கது - தென்பாலுள்ளது. குருவிருந்த துறை - குருதீர்த்தம்.

3. தருநாதன் - இந்திரன். தரு - ஐந்தரு. குரு - வியாழன். சித்திரத்தேர் வலவன் - சித்திரரதன் என்னும் பெயரிய திருமால்; சித்திரரதன் என்னும் கந்தருவன் என்பாருமுளர். கஞ்சத்திருநாதன்— பிரமா; திருமால் என்பாருமுளர்: கஞ்சத்திரு - இலக்குமி.

4. இகல் அருங்கற்பு - வலிய அரிய கற்பு, மாறுபடாத கற்பு. கடியார் ஆகி - (குற்றங்கண்ட வழி) தண்டிக்காதவராகி.

வெந்தொழில் வேட்டஞ் செய்வார் வெயில்புகாப் புதற்கீ ழெய்தி
ஐந்தவித் திருந்து நோற்குங் குரவனை யங்குக் கண்டார். 5

கைத்தலம் புடைத்து நக்குக் கல்லும்வெம் பரலும் வாரி
மெய்த்தவன் மெய்யிற் றுக்க வீசினார் வினையை வெல்லும்
உத்தமன் [1]வீக்கஞ் செய்தார் தவத்தினுக் குவரென் றுன்னிச்
சித்தநொந் தினைய வஞ்சத் தியரைச் செயிர்த்து நோக்கா. 6

தொழுந்தொழின் மறந்து வேடத் தொழிலுழந் துழல்வீர் நீர்மண்
உழுந்தொழி லுடைய நீராற் பன்றியி னுதரத் தெய்திக்
கொழுந்தழ லனைய வேனக் குருளையாய்த் தந்தை தாயை
இழந்தல முறுமி னென்னா விட்டனன் கடிய சாபம். 7

பாவத்தை யனைய மைந்தர் பன்னிரு பேரு மஞ்சிச்
சாவத்தை யேற்றெப் போது தணிவதிச் சாப மென்ன
ஆவத்தை யகற்று மீச னருட்கழ லினைந்து வந்த
கோவத்தை முனிவு செய்தக் கடவுளர் குரவன் கூறும். 8

என்னையா ளுடைய கூட லேகநா யகனே யுங்கட்
கன்னையாய் முலைதந் தாவி யளித்துமே லமைச்ச ராக்கிப்
பின்னையா னந்த வீடு தருமெனப் பெண்ணோர் பாகன்
றன்னையா தரித்தோன் சொன்னான் பன்னிரு தனயர் தாமும். 9

தொன்மைசால் குருவி ருந்த துறையதன் புறந்த வான
பன்மைசால் கான வாழ்க்கைப் பன்றிகட் கரசாய் வைகும்

---

5. மாய - இறக்க. தறுகண் - கொடுந்தொழில். ஐந்து அவித்து - ஐம்புலன்களையும் வென்று. குரவன் - வியாழன்.

6. பரல் - பருக்கைக்கல். வீக்கம் - அழிவு. உவர் - இவர்கள். இனைய - இத்தகைய.

7. பெரியோரைக் கண்டால் உபசரித்து வணங்குதல் உங்கள் வேளாளர் குலத்திற்குரிய தொழில் என்பார், "தொழு தொழில்" என்றார். நீரால் - தன்மையால். ஏனக்குருளை - பன்றிக்குட்டி. அல முறுமின் - வருந்துங்கள்.

8. சாவம் - சாபம். ஆவத்தை - ஆபத்தை, இடையூற்றை. கோவம் - கோபம். சாபத்தை, ஆபத்தை, கோபத்தை என்பன எதுகை நோக்கி வகரம் பெற்றன.

9. பின்னை ஆனந்த வீடும் - பிறகு சிவகதியும். தனயர் - மைந்தர். ஆதரித்தோன் - முதல்வன் என்று பற்றிய பிரகஸ்பதி.

பா-ம்—1 விக்கம். (விக்கம்-விக்கினம்).

தன்மைசா றனியே யனத்தின் றன்பெடை வயிற்றிற் சென்று
வன்மைசால் குருளை யாகிப் பிறந்தனர் வழக்கான் மன்னோ. 10

ஆனநா ளொருநா ளெல்லை யரசருக் கரச னான
மீனவன் மதுரை நீங்கி மேற்றிசைக் கான நோக்கி
மானமா வேட்டஞ் செய்வான் மத்தமா வுகைத்துத் [1]தண்டாச்
சேனைதன் புறம்பே மொய்ப்பச் செல்கின்றான் செல்லு மெல்லை. 11

மாவழுங் கிடங்க டேர வல்லதோல் வன்கா லொற்றர்
பாவடிச் சுவடு பற்றிப் படர்ந்துநா றழல்பு லால்வாய்த்
தீவிழி யுழுவை யேனந் திரிமருப் பிரலை புல்வாய்
மேவிட னறிந்து வல்லே விரைந்துவந் தெதிரே சொன்னார். 12

மறத்துறை வேட்ட மாக்கள் வல்லைபோ யொடியெ றிந்து
புறத்துவார் வலைகள் போக்கி நாயதன் புறம்பு போர்ப்ப
நிறைத்துமா வொதுக்கி [2]நீட்டும் படைஞராய்ச் [3]சூழ்ந்து நிற்ப
அறத்துறை மாறுக் கோலா னானைமேற் கொண்டு நிற்ப. 13

சில்லரித் துடிகோ டெங்குஞ் செவிடுறச் சிலையா நிற்பப்
பல்வகைப் பார்வை காட்டிப் பயில்விளி யிசையா [4]நிற்பர்
வல்லிய மிரலை மையன் மானினம் வெருளா நிற்ப
வில்லிற வலித்து வாங்கி மீளிவெங் கணைக டூர்த்தார். 14

---

10. பன்மை சால் - பலவகைப்பட்ட. கானம் வாழ்க்கை பன்மை சால் பன்றிகட்கு என்க. வழக்கால் - சாபநெறியால்.

11. மானம் மா-பெரியமிருகம். தண்டா - நீங்காத.

12. தோல்வன்கால் -தொடுதோல் (பாதரட்சை) மாட்டிய முரட்டுக்கால்கள். நாறு அழல் - தோன்றும் சினத்தீ. உழுவை - புலி. திரி மருப்பு இரலை-திருகிய கொம்புகளையுடைய கலைமான். புல்வாய்-மான்.

13. ஒடியெறிந்து - காடுவெட்டிச் சரித்து. போர்ப்ப - சூழ்ந்து நிற்க. நீட்டும் - (அவற்றின்மேல்) விடும். அறம் - தருமநூல்.

14. சில்லரித்துடி -சிலவாகிய பரல்கள் செறிந்த உடுக்கைகள், சில்லென அரித்தெழும் ஓசையையுடைய உடுக்கைகள். சில்லரி - ஒலிக்கும் ஒருவகைப் பறவை என்பாருமுளர். சிலையா நிற்ப - ஒலிக்க. பார்வை - ஒரு மிருகத்தைப் பிடித்தற்கு வளர்க்கப்பட்ட அதன் இனமாகிய மிருகம். பயில் விளி - (பார்வை மிருகம்) பயின்ற அழைப்பொலி. இசையா நிற்பர் - அவ்வழைப்பொலியைத் தாம் செய்வர். மீளி - வலிய.

பா-ம்—1 தண்டார்ச். 2 ஈண்டும், ஈட்டும். 3 நிரைசூழ். 4 நிற்ப.

செறிந்தமான் முறிந்ததாள் சிதைந்தசென்னி செம்புனற்
பறிந்தவாறு வெண்ணிணம் பரிந்துவீசு கையிரு
மறிந்தவே ழுயர்ந்தவேழ மாண்டவெண்கு வல்லியம்
பிறிந்தவாவி யோடும்வாய் பிளந்தவாய் விழுந்ததே. 15

தொட்டபுற் கிழங்குவாடை தொடவிரைந்து கண்ணியுட்
பட்டவும் பொறித்துவைத்த பார்வைவீழ்ந் தடுத்தவுங்
கட்டியிட்ட வலைபிழைத்து ஞமலிகௌவ நின்றவும்
மட்டிலாத வொட்டிநின்ற மள்ளர்வேலின் மாய்ந்தவே. 16

பட்டமா வொழிந்துநின்ற மறவிலங்கு பல்சில
வட்டமா வளைந்துடுத்த வலையினுந்தி யப்புறத்
தெட்டிநின்ற கொலைஞர்மே லெதிர்ந்துமீள்வ வெயில்வளைந்
தொட்டினரை மலையுமாப் பொறிக்கணங்க ளொத்தவே. 17

வல்லியந் துளைத்தகன்று மான்றுளைத் தகன்றுவெங்
கல்லியங்கு மெண்கினைத் துளைத்தகன்று கயவுவாய்
வெல்லிபந் துளைத்துமள்ளர் விட்டவாளி யிங்ஙனஞ்
சொல்லினுங் கடிந்துபோய்த் துணித்தமா வளப்பில. 18

மடுத்தவாளி யிற்பிழைத்து வலையைமுட்டி யப்புறத்
தடுத்தமானை வெளவிநா யலைத்துநின்ற வாதிநாள்
உடுத்த [1]பாச வினையினின்று முய்குவாரை யொய்யெனத்
தடுத்தவா விளைத்துநின்ற தையலாரை யொத்தவே. 19

மதியைநேர் வகிர்ந்துகௌவி யனையவான் மருப்புவெங்
கதியவேழ மீதுதாது காலுநீல [2]முகையினீள்

---

15. எழுயர்ந்த வேழம் - எழு முழம் உயர்ந்த யானை. எண்கு - கரடி. பிரிந்த என்பது எதுகை நோக்கிப் பிறிந்த எனப்பட்டது.

16. தொடுதல் - தோண்டுதல். புற்கிழங்கு - புல்லும் கிழங்கும். வாடை - அவற்றின் மணம். பொறித்து - எழுதி. ஞமலி - நாய்

17. மறவிலங்கு - கொடிய விலங்கு. வட்டமா வளைந்து உடுத்த - வட்டமாக வளைந்து சூழ்ந்த. எயில் - மதில். ஒட்டல் - கிட்டல், எதிர்த்தல். மாப்பொறி - விலங்குப்பொறி.

18. கல் இயங்கும்-மலைகளில் வசிக்கும். கயவு - பெருமை, கயவு வாய் - பெரியவாய். சொல்லினும்-(முனிவர் இடும்) சாபமொழியினும்.

19. ஆதிநாள் உடுத்தபாசம் வினை - ஆணவமலம்.

பா-ம்—1 பாச வலையினின்று. (பாசவலை - ஆணவமாகிய வலை). 2 முகையினின்.

நுதியவே னுழைந்தசெம்பு ணூழில்வீழு முதிரநீர்
முதியகான வரையின்மீது மொய்த்ததீயை யொத்தவே. 20

மள்ளரோசை துடியினோசை வயிரினோசை வாளிபோய்த்
தள்ளவீழ் விலங்கினோசை தப்பியோடு மானின்மேற்
றுள்ளுநாய் குரைக்குமோசை கானமூடு தொக்குவான்
உள்ளுலா யுடன்செருவிக்கு முருமினோசை புரையுமால். 21

இன்னவேறு பல்விலங் கெலாமலைத் திலங்குவேல்
மன்னரேறு தென்னர்கோ மகன்குடக்கி னேகுவான்
அன்னபோதொ ரேனமேன வரசிருக்கு மடவிவாய்
முன்னரோடி வந்துநின்று வந்தசெய்தி மொழியுமால். 22

எங்களுக் கரசே கேட்டி யிங்குள விருக மெல்லாந்
திங்களுக் கரசன் கொன்று வருகின்றா னென்று செப்ப
வெங்களிப் படைந்து பன்றி வேந்தனு மடுபோ ராற்றச்
சங்கையுற் றெழுந்து போவான் றன்னுயிர்ப் பெடையை நோக்கா.

இன்றுபாண் டியனை நேரிட் டிருஞ்சம ராடி வென்று
வன்றிறல் வாகை யோடு வருகுவ னேயோ வன்றிப்
பொன்றுவ னேயோ நீயுன் புதல்வரைப் பாது காத்து
நன்றிவ ணிருத்தி யென்ன நங்கைப்பே டின்ன கூறும். 24

ஆவியங் கேக விந்த வாகமிங் கிருப்ப தேயிப்
பாவியோ மேனு ளிந்தப் பறழினை வருத்த தெய்வம்
மாவம ராடி வென்று வருதியேல் வருவே னன்றி
நீவிளிந் திடத்து மாய்வே னிழலுக்குஞ் செயல்வே றுண்டோ. 25

---

20. தாது - மகரந்தம். காலும் - சிந்தும். முகை - அரும்பு. நீல முகையினின் நுதிய வேல் - நீலோற்பல அரும்புபோல விடம் பூசிய நீண்ட நுனியையுடைய வேல். நூழில் - (காயமாகிய) தொளை. யானையுமாம்.

21. வயிர் - ஊது கொம்பு. தள்ளவீழ் - தைத்தலால் விழுகின்ற.

22. குடக்கு - மேற்கு. அன்னபோது - அப்போது. ஏன அரசு - பன்றிராசன். அடவி - காடு.

23. விருகம் - மிருகம். திங்களுக்கரசன் - பாண்டியன். சங்கையுற்று - எண்ணங்கொண்டு.

24. நேரிட்டு - எதிர்த்து. நங்கைபேடு - சிறந்த பெண் பன்றி.

25. ஆவி - (எனது) பிராணன். ஆகம் - உடல். பறழ் - குட்டி. தெய்வம்-பிரமா, ஊழ். வருத்தது என்பது வருத்த என ஈறுதொக்கது.

போதுக மெழுக வென்னுப் பொருக்கென வெழுந்து நீலத்
தாதுற ழேனப் பாட்டி தன்புடை தழுவிச் செல்லும்
பேதுறு பறழை நூக்கிப் பின்ருெடர்ந் தணைந்து செல்லக்
காதெயிற் றெறுழி வேந்தன் காலென நடந்தா னன்றே. 26

பல்வகைச் சாதி யுள்ள பன்றியின் கணங்க ளெல்லாம்
வெல்படைத் தறுகட் சேனை வீரராய் முன்பு செல்லச்
செல்லெனத் தெழித்துச் செங்கட் டீயுக மான மென்னும்
மல்லல்வாம் புரவி மேல்கொண் டெழுந்தனன் வராக வீரன். 27

மூற்படு தூசி யாக நடக்கின்ற முரட்காற் பன்றி
மற்படு சேனை நேரே வருகின்ற மன்னர் மன்னன்
வெற்படு தடந்தோள் வன்ருள் வீரர்மேற் சீறிச் செல்லப்
பிற்பட வொதுங்கி வீரர் பெய்தன ரப்பு மாரி. 28

சொரிந்தன சோரி வெள்ளஞ் சொரிந்தன வீழ்ந்த யாக்கை
சரிந்தன குடர்க ளென்பு தகர்ந்தன வழும்பு மூளை
பரிந்தன சேனங் காகம் படர்ந்தன வுயிரு மெய்யும்
பிரிந்தன வேன நின்ற பிறைமருப் பேன வீரர். 29

பதைத்தன ரெரியிற் சீறிப் பஞ்சவன் படைமேற் பாய்ந்து
சிதைத்தனர் சிலரைத் தள்ளிச் செம்புனல் வாயிற் சோர
உதைத்தனர் சிலரை வீட்டி யுரம்புதை படக்கோ டூன்றி
வதைத்தனர் சிலரை நேரே வகிர்ந்தனர் சிலரை மாதோ. 30

தாள்சிதைந் தாருஞ் சில்லோர் தலைசிதைந் தாருஞ் சில்லோர்
தோள்சிதைந் தாருஞ் சில்லோர் தொண்டைசிதைந் தாருஞ்சில்லோர்

---

26. நீலத்தாது - இரும்பு, நீலமலர்த்தாது. பாட்டி ஏனம்-பெண் பன்றி. பேதுறல் - மயங்கல். நூக்கி - தள்ளி. காதெயிற்று - கொல்லு கின்ற பற்களையுடைய. எறுழிவேந்தன் - பன்றியரசன். கால்-காலன், வாயு.

27. செல் எனத் தெழித்து-மேகம்போல உறுமிக்கொண்டு, வராக வீரன் - பன்றி அரசன்.

28. முற்படுதூசி - முன்னே செல்லும் படை. அப்பு - அம்பு: வலித்தல் விகாரம்.

29. சொரிந்தன சோரி வெள்ளம் சொரிந்தன-மழை சொரிந்தாற் போல இரத்த வெள்ளங்கள் சொரிந்தன. பரிந்தன - அற்றன. சேனம் - பருந்து. பிறைமருப்பு - வக்கிர தந்தம்.

30. செம்புனல் - இரத்தம். உரம் - மார்பு.

வாள்சிதைந் தாருஞ் சில்லோர் வரையறுத் தலரோன் நீட்டும்
நாள்சிதைந் தாருஞ் சில்லோர் நராதிபன் சேனை வீரர். 31

கண்டனர் கன்னி நாடு காவல னமைச்சர் சீற்றங்
கொண்டனர் முசல நேமி கூற்றென வீசி யார்த்தார்
விண்டனர் மாண்டார் சேனை வீரரு மனைய வெல்லைப்
புண்டவ ழெயிற்று வேந்தைப் புடைநின்ற பேடை நோக்கா. 32

ஏவிய சேனை யெல்லா மிறந்தன வினிநாஞ் செய்ய
லாவதென் வாளா நாமு மழிவதிங் கென்னை தப்பிப்
போவதே கரும மென்று புகன்றதத் துணையை நோக்கிச்
சாவதை யஞ்சா வேனத் தனியர சொன்று சாற்றும். 33

நுண்ணறி வுடைய ராகி நூலொடு பழகி னாலும்
பெண்ணறி வென்ப தெல்லாம் பேதைமைத் தாத லாலுன்
கண்ணறி வுடைமைக் கேற்ற காரிய முரைத்தாய் மானம்
எண்ணறி வுடையோர்க் கெல்லா மிழுக்குடைத் தன்றோ வீதல். 34

தூங்கிருள் வறுவாய்ச் சிங்க மிரண்டுறை துறையின் மாடோர்
வாங்கிரு மருப்புக் கேழல் வந்துநீர் பருகி மீளும்
வீங்கிரு ளுடற்கா ரேன மொன்றுறை துறையில் வீரந்
தாங்கிரு மடங்க லீர்க்குத் தலைப்பட வஞ்சு மன்றே. 35

அத்திட மரபின் வந்து பிறந்துளே னாத லாலே
கைத்திடு தாரான் வீரங் கவர்ந்திசை திசையும் வானும்
வைத்திட வல்லே னன்றி மடிந்திட வல்லே னாகிற்
பொய்த்திடு முடம்பே யன்றிப் புகழுடம் பழிவ துண்டோ.

---

31. வாள் - வாளேந்திய கை ; விடாத ஆகுபெயர். அலரோன் - பிரமன். நாள் - ஆயுள் நாள்.

32. முசலம் - இருப்புலக்கை. புண்தவழ் - (பகைவர்) தசை பொருந்திய.

33. வாளா - பயனின்றி. துணை - இங்குப் பெண்பன்றி.

34. "நுண்ணறி வுடையராய் நூலொடு பழகினும், பெண்ணறி வென்பது பெரும்பே தமைத்தே" என்பது ஆன்றோர் மொழி. உன் கண் - உன்னிடம். எண் - (பெரும்பயனாகக்) கருதும்.

35. தூங்கிருள் - தங்கிய இருள். வறுவாய் - (ஈரம்) உலர்ந்த வாயையுடைய. கேழல் - பன்றி.

36. திடம் - வீரம், உறுதி. கைத்திடு தாரான் - வேப்ப மலர் மாலையை அணிந்த பாண்டியன்.

நீநில் லெனத்தன் பெடைதன்னை நிறுத்தி நீத்தென்
கானில் லெனவாழ் கருமாவின் கணங்க ளெல்லாம்
ஊனில் லுயிருண் டனமென்றினி யோடல் கூடற்
கோனில் லெனவார்ப் பவன்போலக் கொதித்து நேர்ந்தான். 37

நிலத்தைக் கிளைத்துப் பிலங்காட்டி நிமிர்ந்த தூள்வான்
தலத்தைப் புதைப்பத் தனியேன வரவு நோக்கி
வலத்தைப் புகழ்ந்தான் வியந்தான் சிலைவாங்கி வாளிக்
குலத்தைச் சொரிந்தான் பொருனைத்துறைக் கொற்கை வேந்தன்.

குறித்துச் செழியன் விடுவாளியைக் கோல வேந்தன்
பறித்துச் சிலவாளியை வாய்கொடு பைம்பு லென்னக்
கறித்துச் சிலவாளியைக் கால்கொடு தேய்த்துத் தேய்த்து
முறித்துச் சிலவாளியை வாலின் முறித்து நின்றான். 39

மானம் பொருது மதியின்வழி வந்த வேந்தன்
தானம் பொருது கவிழ்க்கும்புகர்த் தந்தி கையில்
ஊனம் பொருத முசலங்கொடுத் தேறி யுய்த்தான்
ஏனம் பொருதார்த் திடியேற்றி னெழுந்த தன்றே. 40

தந்திப் பொருப்பைத் துணிக்கென்று தழன்று சீற்றம்
உந்திக் கதலிக் கொழுந்தண்டென வூசற் கையைச்
சிந்திப் பிறைவா ளெயிறேற்சிச் சிதைத்து வீட்ட
முந்திக் கடுந்தேர் மிசைப்பாய்ந்தனன் மூரித் தாரான். 41

திண்டேர் மிசைநின் றடனேமி திரித்து விட்டான்
கண்டேன வேந்தன் விலக்கிக் கடுங்காலிற் பாய்ந்து
தண்டே ருடையத் தகர்த்தான்பரி தன்னிற் பாய்ந்து
வண்டேறு தாரான் விடவேலை வலந்தி ரித்தான். 42

---

37. நீத்து - பிரிந்து. கருமா - பன்றி. ஓடல் - ஓடாதே.
38. பிலம் - பாதலம். கொற்கை - பாண்டி நாட்டகத்தோரூர், வைகைத்துறையுமாம்.
39. கோலம் - பன்றி. பைம்புல் - பசும்புல். கறித்து - கடித்து.
40. தானம் - மதம். புகர் - புள்ளி. ஊனம் பொருத - குற்றமில்லாத.
41. துணிக்கு - துணிப்பேன். தழன்று - கொதித்து. சீற்றம் உந்தி - கோபங்கொண்டு. கதலி - வாழை. ஊசல் கை - ஊசல்போல ஆடும் துதிக்கை.
42. காலில் - காற்றைப்போல. பரி - குதிரை.

சத்திப் படைமேல் விடுமுன்னர்த் தறுகண் வீரன்
பத்திச் சுடர்மா மணித்தார்ப்பரி மாவின் பின்போய்
மொத்திக் குடர்செம் புனல்சோர முடுகிக் கோட்டாற்
குத்திச் செகுத்தான் பொறுத்தானலன் கூடல் வேந்தன். 43

மண்ணிற் குதித்து வலிகண்டு வராக வேந்தை
எண்ணித் தலையிற் புடைத்தான்கை யிருப்புத் தண்டாற்
புண்ணிற் படுசெம் புனலாறு புடவி போர்ப்ப
விண்ணிற் புகுந்தான் சுடர்கீறி விமான மேலால். 44

வேனிற் கிழவோனில் விளங்கி வியந்து வானோர்
தேனிற் பொழிபூ மழைபெய்ய நனைந்து [1]தெய்வக்
கானத் தமுதுண் [2]டிருகாது களித்து வீர
வானத் தமுதுண் டரமங்கையர் கொங்கை சேர்ந்தான். 45

பின்றுணை யாய பெடைத்தனி யேனம்
என்றுணை மாய விருப்பது கற்போ
வென்றில னேனும் விசும்படை வேனால்
என்றிகல் வேந்தை யெதிர்த்த துருத்தே. 46

விறனவில் பேட்டை விளிப்பது வேந்தர்க்
கறனல வென்றவ ளாள்வினை மள்ளர்க்
கிறைமக னான சருச்சர னென்றோர்
மறமக னோர்ந்தம ராட வணைந்தான். 47

நனிபொழு தாடம ராடின னஞ்சிற்
கனிசின வன்பெடை காய்சின வேடத்

---

43 சத்திப்படை - வேற்படை. மணித்தார் - கிண்கிணிமாலை. மொத்தி - தாக்கி. குடர் - குடல்.

44. எண்ணி - மதித்து. விண் - வீர சுவர்க்கம். சுடர்கீறி - சூரிய மண்டலத்தைக் கிழித்து. போரிற் புறங்கொடாது பொருது நின்று உயிர் துறந்தோர் சூரிய மண்டலத்தைக் கிழித்துக்கொண்டு வீரசுவர்க்கம் அடைதல் மரபு என்க.

45. வேனிற்கிழவோனில் - மன்மதன்போல. வீரவானம் - வீர சுவர்க்கம்.

46. என்றுணை - என்னுடைய கணவன். உருத்து - கோபித்து.

47. விறல் - வீரம். விளிப்பது - கொல்வது. ஆள்வினை - போர்த் தொழில். மறமகன் - வேடன்.

பா-ம்— 1தெய்வ. 2 டிருகாதும்.

தனிமக னைத்தரை வீட்டின தாற்றல்
இனியிலை யென்ன விளைத்துயிர் சோர்வான். 48

இரும்புசெய் தண்டினை யிம்மென [1]வோங்கிப்
பொரும்பெடை சென்னி புடைத்து விளிந்தான்
விருந்தின ராயிரு வோரும் விமானத்
தருந்திறல் வான மடைந்தன ரன்றே. 49

வன்றிறன் மன்னவர் மன்னவ னுந்தன்
பொன்றிகழ் மாநகர் புக்கன னிப்பாற்
பன்றி விழுந்து பருப்பத மாகா
நின்றது பன்றி நெடுங்கிரி யென்ன. 50

அன்று தொடுத்தத னுக்கது பேராய்
இன்றும் வழங்குவ திம்பரி னந்தக்
குன்றி லருந்தவர் விஞ்சையர் கோபம்
வென்றவ ரெண்ணிலர் வீடுற நோற்பார். 51

என்று கூறிய வருந்தமிழ்க் கிறைவனை நோக்கித்
துன்று மாதவ ரறிவிலாச் சூகர வுருவக்
குன்றின் [2]மீதிருந் தவரெலாங் கோதற நோற்று
நின்ற காரணம் யாதெனக் [3]குறுமுனி நிகழ்த்தும். 52

வேனில் வேளென விளங்குவிச் சாதர னென்னுந்
தான யாழ்மகன் புலத்தியன் றவத்தினுக் கிடையூ
றான பாண்செயப் பன்றியாச் சபித்தன னறவோன்
ஏன மாகுவே னுய்வதென் றெனக்கென முனிவன். 53

---

48. ஆடமர் - வெற்றியைத் தரும்போர். நஞ்சிற்கனி சினம்வன் பெடை - நஞ்சைப்போல முதிர்ந்த கோபத்தையுடைய வலிய பெண் பன்றி.

49. விளிந்தான் - (தானும்) இறந்தான். அருந்திறல் வானம் - வீரசுவர்க்கம்.

50. பருப்பதம் - மலை. பன்றி நெடுங்கிரி - வராகமலை.

51. இம்பர் - இவ்வுலகு. கோபம் வென்றவர் - யோகிகள்.

52. அருந்தமிழ்க் கிறைவன் - அகத்தியன். சூகர வுருவம்-பன்றி வடிவு.

53. வேள் - மன்மதன். தானயாழ் மகன் - தானங்கள் அமைந்த யாழில் வல்ல ஒரு யட்சன். பாண் - இசைப்பாடல்.

பா-ம்—1 வோச்சிப். 2 மீதருந். 3 குடமுனி.

மன்னர் மன்னனுந் தென்னவன் வந்துமின் வனத்திற்
றுன்னு பல்வகை விலங்கெலாந் தொலைத்துணை மாய்க்கும்
பின்ன ரிவ்வுருப் பெறுகெனப் பணித்தன னியக்கன்
அன்ன வாறுவந் திறந்துபின் பழவுரு வடைந்தான். 54

ஆய புண்ணிய விஞ்சைய னுகமாய்க் கிடந்த
தூய நீரதா லவ்வரை மீமிசைத் துறந்த
பாய கேள்விய ரிறைகொளப் பட்டதெவ் வுயிர்க்கும்
நாய னார்மது ரேசரு நயந்தவ ணுறைவார். 55

என்ற கத்தியன் விடைகொடுத் தியம்பின னிப்பாற்
பன்றி யேற்றையும் பாட்டியும் பைம்புனத் திட்டுச்
சென்ற விந்தபின் பன்னிரு குருளையுந் திகைப்புற்
றன்ற லக்கணே யுழந்தமை யாரளந் துரைப்பார். 56

ஓடு கின்றன தெருமர லுறுவன நிழலைத்
தேடு கின்றன தாய்முலைத் தீயபால் வேட்டு
வாடு கின்றன தாகவெம் பசிநனி வருத்த
வீடு கின்றன வெயில்சுட வெதும்புகின் றனவால். 57

இன்ன வாறிவை யணங்குறு மெல்லைவேல் வல்ல
தென்ன ராகிய தேவர்க டேவரங் கயற்கண்
மின்ன னொளொடு மின்னவிர் விமானமீ தேறி
அன்ன கானகத் திச்சையா லாடல்செய் திருந்தார். 58

ஏன மென்பற மூறுகளேய்க் கிரங்கின ரிச்சை
ஆன வன்புதந் தத்துய ரகற்றுவா [1]னின்ற

---

54. வந்து - வேட்டையாடும் நிமித்தம் வந்து. பணித்தனன் - இங்கு அருள் செய்தனன் என்னும் பொருளது.

55. ஆகம்ஆய் - உடலாய். பாய கேள்வியர் - பரந்த நூற்கேள்வி யுடையவர். இறைகொளல் - தங்குதல்.

56. ஏறு - விலங்கின் ஆண். பாட்டி - விலங்கின்பெண். பன்றி யைப் பாட்டியோடுங் கூட்டுக. பன்னிரு குருளை - பன்னிரண்டு (பன்றிக்) குட்டிகளும். அலக்கண் நோய் - துன்பநோய்.

57. தெருமரல் - சுழலல். தீய பால் வேட்டு - இனிய பாலை விரும்பி. விடுகின்றன - (உயிர்) சோர்ந்து.

58. அணங்குறும் எல்லை - வருந்துங்காலையில். இச்சை - இச்சா சத்தி.

பா-ம்—1 னின்ற. (நின்ற - நிலைபெற்ற.)

மான வன்புடைப் பேடையின் வடிவெடுத் தயருங்
கான வன்பறழ் கலங்கஞர் கலங்கநேர் வந்தார். 59

கிட்டு கின்றதந் தாயெதிர் குட்டியுங் கிட்டி
முட்டு கின்றன [1]மோப்பன முதுகுறத் தாவி
எட்டு கின்றன கால்விசைத் தெறிவன நிலத்தை
வெட்டு கின்றன குதிப்பன வோடுவ மீள்வ. 60

ஏன மின்னமுங் காண்பரி தாகிய வேனம்
ஆன மெய்ம்மயிர் முகிழ்த்திடத் தழுவிமோந் தருளின்
மான மென்முலை யருத்திமா வலனும்வன் றிறனும்
ஞான மும்பெருந் தகையுநற் குணங்களு நல்கா. 61

துங்க மாமுக மொன்றுமே சூகர முகமா
அங்கம் யாவையு மானுட யாக்கைய வாக்கிக்
கங்கை நாயகன் கடவுளர் நாயகன் கயற்கண்
மங்கை நாயகன் கருணையாந் திருவுரு மறைந்தான். 62

இம்மை யிப்பவத் தன்னையா யினிவரு பவமுஞ்
செம்மை செய்தசே தனத்தையுஞ் சேதனஞ் செய்தார்
எம்மை யெப்பவத் தாயினு மெனைப்பல வுயிர்க்கும்
அம்மை யப்பராய்க் காப்பவ ரவரலா லெவரே. 63

ஆகச் செய்யுள்—2,255

---

59. உறுகண் - துன்பம். நோய் - பசிநோய். இச்சையான அன்பு தந்து - விருப்பத்தால் உண்டாகிய அன்பை வைத்து. மானம் - மிகுதி. அஞர் கலங்க - பசித்துன்பங்கெட.

61. ஏனம் - முன்னையது திருமாலாகிய பன்றி. மா வலன்-சிறந்த வெற்றி. வல் திறன் - மிக்க சதுரப்பாடு.

62. துங்கமா முகம் - உயர்ந்த பெரிய முகம். சூகரம் - பன்றி.

63. செம்மை - சுத்தம். அசேதனத்தையும் சேதனஞ்செய்தார் - பகுத்தறிவில்லாத பன்றிக்குட்டிகளையும் பகுத்தறிவுடைய மக்களாகச் செய்தார்.

பா-ம்—1 மொய்ப்பன.

## 46. பன்றிக்குட்டிகளை மந்திரிகளாக்கிய படலம்

—o—

தந்தை தாயிழந் தலமரு குருளையைத் தாயாய்
வந்து நாயகன் முலைகொடுத் தருளிய வகையீ
தந்த வாறிரு மைந்தரு மந்திர ராகி
எந்தை யார்சிவ புரம்புகுந் திருந்தவா றிசைப்பாம். 1

ஆதி நாயகன் றிருவுரு மறைந்தபி னனைய
கோதி லாறிரண் டேனமாக் குமரருங் காலைச்
சோதி யாறிரண் டருக்கர்போற் றோன்றியப் பொருப்பில்
ஓதி யாய்ந்தபல் கலைஞரா யொருங்குவீற் றிருந்தார். 2

அனைய ராயவர் வைகுநா ளறைபுனற் கூடற்
புனித நாயக னருட்டிற முயிர்க்கெலாம் பொதுவாய்
இனிய வாவன வென்பதை யாவருந் தேற
வனிதை பான்மொழி மங்கைதன் மணாளனை வினவும். 3

வெவ்வி லங்கினும் [1]வெய்யவா யசேதன விலங்காம்
இவ்வி லங்கெயிற் றேனமென் குருளைகட் கிரங்கிக்
கைவி லங்கினை யெய்தநீ கருணையாய் முலைதந்
திவ்வி லங்கறி வகற்றிய தியாதென விறைவன். 4

அகில வேதமு மாகம பேதமு நம்மைச்
சகல சீவத யாபர னென்றுரை சால்பால்

---

1. தந்தை என்றது முற்பிறப்பில் 'ரிங்கி' என்னும் பெயரை யுடைய வித்தியாதரனாகிய பன்றியரசை. குருளையை - பன்றிக்குட்டிகளுக்கு. மந்திரர் - அமைச்சர்.

2. அருக்கர் - சூரியர். தோன்றி - ஒளி வாய்ந்து.

3. இனிய ஆவன - இன்பந்தருவன. பால்மொழி வனிதை மங்கை - (சத்தியாகிய) அங்கயற்கண்ணியம்மையார்.

4. இ இலங்கு - இந்த விளங்கும். கை விலங்கு - (சமணர் ஏவிய) யானை. கருணை ஆய் முலை தந்து - கிருபையினாலே தாய்ப்பன்றிபோல முலைப்பால் கொடுத்து.

5. அகிலம் - அழிவில்லாதது, எல்லாம். ஆகமபேதம் - எல்லாச் சிவாகமங்கள். பொதுமைய - ஒரு தன்மையன.

பா-ம்—1 வெய்யதா.

இகலில் சேதன மசேதன மாகிய விரண்டும்
புகலில் வேறல வெமக்கவை பொதுமைய வதனால். 5

தாயிழந்துவெம் பசித்தழ லகஞ்சுடத் தழன்று
காயு மாதபம் புறஞ்சுடக் கானிடைக் கிடந்து
தீயு மேனமென் குருளைக டெருமர விரங்கி
ஆயு மாய்முலை யளித்துயி ரளித்தன மதனால். 6

அளவி லாற்றலுந் திறனுநல் லரும்பெறற் கல்வி
விளைவு ஞானமுங் கிடைத்தனர் மீனவற் கினிமேல்
வளைவி லாதகோ லமைச்சராய் வளம்பல பெருக்கிக்
களைவில் பாசனீத் தெம்பெருங் கணத்தவ ராவார். 7

என்று நாயக னுயகிக் கிறைகொடுத் தியம்பி
அன்று மீனவன் கனவில்வந் தரசகேள் பன்றிக்
குன்றி லேனமா முகத்தராய்ப் பன்னிரு குமரர்
வென்றி வீரராய் வைகுநர் மிக்கறி வுடையார். 8

அவரை நின்கடைக் கமைச்சராக் கோடியென் றளவில்
சிவப ரஞ்சுட ரருள்செயச் செழியர்கோ வேந்தன்
கவல ருங்களிப் புடையனுய்க் கண்மலர்ந் தெழுமான்
தவழ்நெ டுந்திரைக் கருங்கட றத்திநீந் தெல்லை. 9

மாண்ட கேள்விசான் மந்திரர்க் குணர்த்தியம் மலைமேற்
காண்ட கேனமா வீரரைக் கொணர்கெனக் கருணை
பூண்ட காவல னமைச்சரும் போயவர்க் கண்டு
வேண்ட வீரரு மீண்டினர் மீனவன் றிருமுன். 10

---

6. ஆதபம் - வெயில். தீயும் - வெதும்பும். தெருமர - வருந்திய தனால். ஆயும் ஆய் - தாயுமாகி.

7. கிடைத்தனர் - அடைந்தார்கள். களைவில் பாசம் - இதுகாறும் நீக்குதலில்லாத ஆணவம்.

8. இறைகொடுத்து - விடைகொடுத்தருளி. பன்றிக்குன்று - வராகமலை.

9. நின்கடைக்கு - உனது திருவாயிலுக்கு. கவல் அரும் - கவற்சி சிறிதும் இல்லாத. கண்மலர்ந்து - துயிலுணர்ந்து. எழுமான் (சூரியன் தேரிற் பூட்டிய) ஏழு குதிரைகளும். எல்லை - இங்கு, விடியற்காலை.

10. மாண்ட - மாட்சிமைப்பட்ட. காண்தகு - அழகுபொருந்திய. கருணை பூண்ட - குடிகளிடத்து அருளுடைமை பூண்ட. ஈண்டினர் - வந்தார்கள்.

வந்தி றைஞ்சிய வராகமா மைந்தரை நேர்கண்
டந்த மில்களிப் படைந்துவேந் தமைச்சியற் கிழமை
தந்து வேறுபல் வரிசையுந் தக்கவா நல்கிக்
கந்து சீறிய கடகரிக் கைதவன் பின்னர். 11

பழைய மந்திரக் கிழார்மடப் பாவைபோல் வாரை
விழவு சால்கடி [1]மங்கலம் விதியினுற் புணர்த்தி
அழகி தாமென நடத்தினு னனையரும் வீரக்
கழலி னுற்கொரு கவயமுங் கண்ணுமாய் நடப்பார். 12

உடம்பா றிரண்டிற் குயிரொன்றென வொன்றி யைவாய்
விடம்பா யரவம் விழுங்குமிரை யொத்து நெஞ்சந்
திடம்பாடு கொள்ள வினைவாங்கிச் செழியன் கல்வி
இடம்பாடு நல்கும் பயன்போன்மகிழ் வெய்த நின்றார். 13

நல்லாவின் பாலி னறுந்தேன்கலந் தென்னப் பன்னூல்
வல்லாரு மாகி மதிநுட்பரு மாகிச் சோர்வில்
சொல்லா லடையார் மனமுங்கவி தூங்கச் சொல்லிப்
பல்லார் பிறர்சொற் பயனுய்ந்து கவர வல்லார். 14

---

11. அமைச்சு இயல் கிழமை-மந்திரிப் பதவியின் உரிமை. கந்து சீறிய கடகரி-கட்டுத்தறியைச் சினந்த (முறிக்கின்ற) மதமிக்க யானைப் படையையுடைய.

12. சால்கடி - சிறப்பு மிக்க. விழவுமங்கலம்-திருமணம். கவயம்-கவசம்.

13. ஐவாய் - ஐந்து தலை. திடம் - உறுதி. இடம்பாடு-செல்வம். கல்வி நல்கு இடம்பாடுபயன் எனக்கூட்டுக; இங்கு, "ஒருமைக்கட் டான் கற்ற கல்வி யொருவற், கெழுமையு மேமாப் புடைத்து" என்ற திருக்குறள் சிந்திக்கற்பாலது.

14. இச்செய்யுள், "மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம், யாவுள முன்னிற் பவை", "ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற், காத் தோம்பல் சொல்லின்கட் சோர்வு", கேட்டார்ப் பிணிக்குந் தகைய வாய்க் கேளாரும், வேட்ப மொழிவதாஞ் சொல்", "வேட்பத்தாஞ் சொல்லிப் பிறர்சொற் பயன்கோடல், மாட்சியின் மாசற்றார் கோள்" என்னும் திருக்குறட்பாக்களைத் தழுவி நின்றது. பிறர் பல்லார் எனக் கூட்டுக. பல்லார் - எல்லாரும்: முற்றும்மை தொக்கது. கவர்தல் - சொற்குற்றமொழித்துப் பொருளைக்கோடல்.

பா-ம்—1 மங்கல விதியினுல்.

பழையே [1]மிறையுட் கொளப்பட்டமென் றேமாப் பெய்தார்
உழையேவல் செய்யுஞ் சிறுர்போல வொதுங்கி வேந்தன்
விழைவே ததனை விடம்போல வெறுத்து வெஃகார்
அழல்போ லணுகா ரகலார்நிழ லன்ன நீரார். **15**

மறுக்குஞ் செயனீத்து நடக்கையின் வையத் தோரை
ஒறுக்கும் பொருளும் பணிகேட்கையி னுன்ன லாரைச்
செறுக்கும் பொருளுங் கவராரவினை செல்வ மாக்கள்
இறுக்கும் பொருளே யிறைவர்க்கிவ ரீட்டுஞ் செல்வம். **16**

[2]மறத்தாம வேலான் மனக்கொள்கைதந் நெஞ்சுள் வான
நிறத்தாடி நீழ லெனத்தோற்ற நிறுத்து மற்ற
தறத்தா றெனிலாற்றுவ ரன்றெனி லாக்க மாவி
இறத்தான் வரினு மனத்தானு மிழைக்க வெண்ணுர். **17**

இன்னவா றொழுகும் பன்னிரு வோரு மீகையுந் தருமமும் புகழுந், தென்னர்கோ மகற்கு வைகலும் பெருகத் திசையெலாம் விசயமுண் டாக்கிப், பன்னகா பரணன் சிவபுர மடைந்து பரன்கண நாதருட் கலந்து, மன்னிவீற் றிருந்தார் மன்னர்மன் னவனும் வான்பத மடைந்துவீற் றிருந்தான். **18**

ஆகச் செய்யுள்—2,273

---

15. இறை உட்கொளப்பட்டம் - அரசனுல் நன்கு மதிக்கப்பட்டேம். ஏமாப்பு - இறுமாப்பு. விழைவு - விருப்பம். வெஃகல் - விரும்பல்.

16. மறுக்கஞ்செயல் - அரசனது ஆணையைக் கடக்குஞ்செய்கை; அது தீக்கொளுத்தல், நஞ்சிடுதல், கருவியால் கொல்லுதல், திருடுதல், வழிப்பறித்தல், சூறையாடல், பிறர் மனைவியை விரும்புதல் முதலிய செயலாம்.

17. தாமம் - ஒளி, மாலை. வான நிறத்தாடி - ஆகாயத்தைப் போலப் புகை நிறம் வாய்ந்த கண்ணாடி. இழைத்தல் - செய்தல்.

18. வைகலும் - நாடோறும். மன்னர் மன்னன் - இராசராச பாண்டியன். வான்பதம் - இந்திரபதம்.

பா-ம்—1 மிறையூழ். (ஊழ்-முறை). 2 மறத்தான. (தானம் - வலிமை.)

# 47. கரிக்குருவிக் குபதேசஞ்செய்த படலம்

—o—

வரிக்குருகிப் பத்திரற்குப் பலகையிட்ட மணிகண்டன்
அரிக்குருளை வடிவான வடல்வீரர்க் கரசன்பார்
பரிக்குமமைச் சியலளித்த பரிசுரைத்தாம் பசுபதியாற்
கரிக்குருவி குருமொழிகேட் டருளடைந்த கதைபகர்வாம். 1

மன்னவ னிராச ராசன் வானவர்க் கரச னான
பின்னவன் குமர னான பெருவலி மடங்க லன்னான்
துன்னல ரடுபோர் சாய்க்குஞ் சுகுணபாண் டியனீர் ஞாலம்
இன்னறீர்த் தறக்கோ லோச்சி யீர்ங்குடை நிழற்று நாளில். 2

ஆற்றல்சா லொருவன் மேனா ளாற்றவு மறனே யாற்றி
மாற்றமில் சிறிது பாவஞ் [1]செய்ததன் வலத்தால் வந்து
தேற்றமில் கயவா யாகிச் செனித்தலாற் காக மாதி
கூற்றென ஆற்றஞ் செய்யக் குருதிசோர் தலைய தாகி. 3

புட்கெலா மெளிதா யூறு பாடஞ்சிப் [2]புரத்துள் வைகி
உட்கிநீள் வனத்துட் போகி வழிமருங் கொருசார் நிற்குங்
கட்கவிழ்ந் தொழுகப் பூத்த கவிழிணர் மரமேல் வைகி
வெட்கமீ தூரச் சாம்பி வெய்துயிர்த் திருக்கு மெல்லை. 4

விடையவ னீறு பூசு மெய்யவன் பூண்ட கண்டித்
தொடையவன் புறம்பு முள்ளுந் தூயவன் குடையுங் கையில்

---

1. வரி - இசைப்பாட்டு. பத்திரற்கு - பாணபத்திரற்கு. அரி - பன்றி. பார் பரிக்கும் - நாட்டினை ஓம்பும்.

2. வானவர்க்கு அரசனானபின் - இந்திரபதம் அடைந்த பின்பு. ஈர்ங்குடை - குளிர்ந்த வெண்குடை. இன்னல் - இங்குத் தன்னாலும் தன்பரிசனத்தாலும், பகைவராலும், கள்வராலும், விலங்குகளாலும் குடிகட்கு வரும் துன்பம்.

3. மேனாள் - முற்பிறப்பு. கயவாய் - கரிக்குருவி ; வலியான்.

4. உட்கல் - வருந்தல். கவிழ்இணர் மரம் - தேனைச்சொரியும் பூங்கொத்துக்களையுடைய மரம் ; மாமரம் என்பாருமுளர். சாம்பி - சோர்ந்து.

பா-ம்—1 செய்தந்த. 2 புறத்துள். (புறம் - ஊர்ப்புறம்).

உடையவன் றரும தீர்த்த யாத்திரை யொழுக்கம் பூண்ட
நடையவ னொருவ னந்த நறுந்தரு நிழலிற் சார்ந்தான். 5

இருந்தவன் சிலரை நோக்கி யியம்புவா னெவர்க்கும் பேறு
தருந்தலந் தீர்த்த மூர்த்தித் தன்மையிற் சிறந்த வன்பு
வருந்தமிழ் மதுரை பொற்றா மரைத்தடஞ் சுந்த ரேசப்
பெருந்தகை யென்று சான்றோர் பேசுவ ராத லாலே. 6

ஓரிடத் [1]தினைய மூன்று விழுப்பமு முள்ள தாகப்
பாரிடத் தில்லை யேனைப் பதியிடத் தொன்றே யென்றுஞ்
சீருடைத் தாகுங் கூடற் செழுநக ரிடத்தம் மூன்றும்
பேருடைத் தாகு மென்றாற் பிறிதொரு பதியா தென்றான். 7

இம்மது ரேசன் சேவித் தேத்துவோர்க் கெளிய னாகிக்
கைம்மலர் நெல்லி போலக் கருதிய வரங்க ளெல்லாம்
இம்மையி னுடனே நல்கு மேனைய தலத்து வானோர்
அம்மையி னன்றி நல்கா ராதலா லதிக [2]னென்றான். 8

மற்றது கேட்டுக் கொம்பர் வைகிய கயவாய் ஞானம்
பெற்றது பறவை யாகிப் பிறந்ததும் பிறவுந் தேற்றம்
உற்றது நாமிச் சன்ம மொழிப்பதற் கறவோ னிங்ஙன்
சொற்றதே யுறுதி யென்று துணிவுகொண் டெழுந்த தன்றே. 9

ஆய்மலர்க் கான நீங்கி யாடக மாடக் கூடற்
போய்மலர்க் கனக கஞ்சப் புண்ணியப் புனறோய்ந் தாம்பல்

---

5. கண்டி - உருத்திராட்சம். தூயவன் - ஒழுக்கமுள்ளவன். தரும தீர்த்த யாத்திரை - புண்ணிய தீர்த்த யாத்திரை.

6. அன்பு வருந்தமிழ் - தன்னிடத்து முச்சங்கத்துப்புலவர்க்கும் பற்றுவளரப்பெற்ற தமிழ், வருதல் - வளருதல்.

7. விழுப்பம் - மேன்மை. சீர் - திருவிழாச்சிறப்பு, மிகுபுகழ், செல்வம், சிறப்பு.

8. கைம்மலர் நெல்லிபோல - உள்ளங்கையில் ஏந்திய நெல்லிப் பழம்போல.

9. கொம்பர் - மரக்கிளை : கடைப்போலி. ஞானம் - (முக்காலங் கள, உணரும் ஞானம். பெற்றது - பெற்றதனால்.

10. ஆய் - (வண்டுகள்) ஆராயும். ஆடகம் - பொன். மலர் கனக கஞ்சம் புண்ணியப்புனல்-பொற்றாமரைத் தீர்த்தம். அகத்தினால் தொழுதர்ச்சித்தல் - வணக்கம், பூசனை என்னும் இவற்றைப் பாவனை யாகச் செய்தல்.

பா-ம்—1 தனைய. 2 மென்றான்.

வாய்மலர்க் கயலுண் கண்ணுண் மணாளனை வலஞ்செய் தன்பிற்
ரேய்மலர்க் கழலி ஞனை யகத்திருற் ருெழுதர்ச் சித்தே. 10

இன்னண மூன்று வைகல் கழிந்தபி னெம்பி ராட்டி
தன்னமர் காத லாளைத் தாழ்ந்தெதிர் நோக்கி யைய
என்னையிக் கயவாய் செய்யுஞ் செயலிதன் வரவியா தென்ன
முன்னவ னதன்றன் செய்தி வரவெலா முறையாற் கூரு. 11

பத்திமை நியமம் பூண்ட பறவைமேற் கருணை நாட்டம்
வைத்திமை யாத முக்கண் மறைமுத லொருசேய்க் கன்று
நித்திய நிலைமை நல்கி நேர்ந்தவெங் கூற்றைக் காய்ந்த
சத்திய ஞான [1]மிர்த்திஞ் சயத்தினை யுபதே சித்தான். 12

உவமை யற்றவ னுரைத்த மந்திரஞ்
செவிம டுத்தலுஞ் சிற்று ணர்ச்சிபோய்ப்
பவம கற்றிடப் படுக ரிக்குரீஇ
கவலை விட்டரன் கழல்வ ழுத்துமால். 13

எண்ணி லாவுயிர்க் கிறைவ போற்றிவான்
றண்ணி லாமதிச் சடில போற்றியென்
புண்ணி யப்பயன் போற்றி யங்கயற்
கண்ணி நாதநின் கருணை போற்றியால். 14

தெளித லின்றியே செய்த தீமையால்
விளியு மென்னையு மாளல் வேண்டுமோ
எளிய ரெங்குளா ரென்று தேர்ந்துதேர்ந்
தளியை யாவதுன் னருளின் வண்ணமே. 15

---

11. இன்னணம் - இவ்வாறு. வைகல் - நாள். வரவு+யாது = வரவியாது. கூரு - கூறி.

12. சேய்-மார்க்கண்டேய முனிவர். மிர்த்திஞ்சயம் -மூன்றெழுத்தால் முடிவதோர் வேதமந்திரம்; இது மரணத்தைப் போக்க வல்லது.

13. உவமை அற்றவன் - தனக்கு வேறு ஒன்றும் ஒப்புமை இல்லாதவன்; எம்பெருமான். பவம் - பாவம், பிறப்பு. வழுத்தும் - துதிக்கும்.

14. சடில-சடாமகுடத்தையுடையவனே. என் புண்ணியப் பயன்-எனது சிவ புண்ணியத்தின் பயனுயுள்ளவனே.

15. தெளிதல் இன்றியே - (குணங்குற்றங்களால் வரும்பயன்) தெளியாது. வண்ணம் - திறம்.

பா-ம்—1 மித்திஞ்.

உம்மை நல்லற முடைய நீர்மையால்
இம்மை யிம்மனு வியம்பி னுயிது
அம்மை நன்னெறிக் கேது வாதலான்
மும்மை யுநல முடைய மொய்ம்பினேன். 16

ஆயி னும்மெனக் கைய வோர்குறை
தீய புள்ளெலா மூறு செய்தெனைக்
காயு மானமுங் கழியக் கண்டபேர்
ஏயெ னும்படிக் கெளிய னுயினேன். 17

என்ன வக்குரீஇ யியம்ப வெம்பிரான்
அன்ன புட்கெலாம் வலியை யாகெனப்
பின்னு மக்குரீஇ தாழ்ந்து பேதையேற்
கின்னு மோர்வரந் தருதி யென்றதால். 18

வலியை யென்பதென் மரபி னுக்கெலாம்
பொலிய வேண்டுமெப் போது நீசொன
ஒலிய மந்திர மோதி யோதிநாங்
கலியை வெல்லவுங் கருணை செய்கென. 19

ஆவ தாகவென் றமரர் நாயகன்
மூவெ ழுத்தினுன் முடிந்த வம்மனு
தாவி றெய்வத மிருடி சந்தமோ
டோவி லோசைமூன் றுடுமெ ருட்டினுன். 20

குருமொழி பயின்று முள்வாய்க் குருவிதன் குலனுந் தன்போல்
அருமறை முதல்வ னிந்த வாற்றலாற் பறவைக் கெல்லாம்

---

16. உம்மை - முற்பிறப்பு. நல்லறம் - சிவ புண்ணியப்பேறு. இம்மை - இப்பிறப்பு. அம்மை - வருபிறப்பு. நன்னெறி - சிவகதி. மொய்ம்பினேன் - வலியனுயினேன்.

17. ஏ : இங்கே இகழ்ச்சிக் குறிப்பை உணர்த்துவதோர் இடைச்சொல்.

18. அக்குரீஇ - அந்தக்கரிக்குருவி. வலியை ஆக - வலியானுகக் கடவாய்.

19. பொலியவேண்டும் - விளங்க வேண்டும். ஒலிய - ஒலியையுடைய. கலியை - துன்பத்தை.

20. மூன்றெழுத்தினுல் முடிந்த அம்மனு - திரியம்பகம் என்று சொல்லப்படும் திருமந்திரம். சந்தம் - சந்தஸ். ஓசை மூன்று - உதாத்தம், அநுதாத்தம், சொரிதம் என்பன.

பெருமைசால் வலியா னென்னும் பெயரவா யுலகின் மன்னக்
கருமணி கண்டன் செம்பொற் கனைகழ லடிசேர்ந் தன்றே. **21**

இக்கரிக் குருவி தானோற் றெய்திய வரத்தைத் தன்போல்
ஒக்கலு மெளிதா வெய்தப் பெற்றதா லுலகின் [1]மேன்மை
தக்கவ னொருவன் வாழத் தன்கிளை வாழ்வ தென்ன
மிக்கவ ரெடுத்துக் கூறும் பழமொழி விளக்கிற் றன்றே. **22**

ஈச னடிக்கன் பில்லார்போ லெளியா ரில்லை யாவர்க்கும்
ஈச னடிக்கன் புடையார்போல் வலியா ரில்லை யாவர்க்கும்
ஈச னடிக்கன் பின்மையினா லெளிதாய்த் திரிந்த விக்கயவாய்
ஈச னடிக்கன் புடைமையினால் வலிதா யிற்றே யெவ்வுயிர்க்கும். **23**

ஆகச் செய்யுள்—2,296

---

*21. குருமொழி - குரு உபதேசம். முள்வாய் - முள்போலக் கூரிய வாயையுடைய.*

*22. நோற்று - தவஞ் செய்து. ஒக்கல் - தன் சாதிப்பறவைகள். மிக்கவர் - ஆன்றோர்.*

*23. எளிதாய் - (எப்பறவைகளுள்ளும்) எளிதாக. எவ்வுயிர்க்கும் என்றது இங்கே பறவை யுயிர்கள் எல்லாவற்றையும் என்க.*

*பா-ம் – 1 மேன்மைத்.*

# 48. நாரைக்கு முத்தி கொடுத்த படலம்

—o—

அத்தி தந்த விமான [1]வழகியார்
பத்தி தந்த பறவைக்கு மந்திர
சித்தி தந்த திறனிது நாரைக்கு
முத்தி தந்த கருணை மொழிகுவாம். 1

தேக்கு நீர்வைகை நாட்டொரு தென்புலத்
தாக்கு மாடவைப் பொன்றுள தவ்வயின்
வீக்கு யாழ்செயும் வண்டுக்கு வீழ்நற
வாக்கு தாமரை வாவியொன் றுள்ளதால். 2

ஆழ மிக்க கயந்தலை யத்தலை
வாழு மீன மனைத்தையும் வாய்ப்பெய்து
சூழ நந்துமுத் தீனுந் துறைக்கணே
தாழ்வ தோர்செய்ய தாண்மட நாரையே. 3

சிறிய நாண்மழை யின்றியச் சேயிதழ்
வெறிய தாமரை யோடை வியன்கரை
இறைகொ ளுரை யிருவினைப் பௌவமும்
வறிய தாகி வறப்ப வறந்ததால். 4

---

1. அத்தி தந்த - எட்டு யானைகளாற் சுமக்கப்பெற்ற. பறவை - இங்குக் கரிக்குருவி.

2. ஆக்கும் மாடவைப்பு - நிருமிக்கப்பெற்ற மாடங்களையுடைய ஒரு நகரம். நறவு ஆக்கு தாமரை ஆவி எனவும், நறவாக்கு தாமரை வாவி என்னும் பிரிக்கலாம். ஆவி - குளம்.

3. கயந்தலை - தடாகம், தலை : சாரியையுமாம். நந்து - சங்கு. தாழ்வது - தங்கா நின்றது. மடநாரை வாய்ப்பெய்து துறைக்கணே தாழ்வது என்க.

4. நல்வினையும் தீவினையும் பந்த முறுத்தற்கண் பொன் விலங்கும் இருப்பு விலங்கும் போலத் தம்முள் ஒப்பனவாதலால், "இருவினைப் பௌவமும் வறியதாகி வறப்ப" என்றார். வறியதாகி வறத்தல் - பயனற்றதாய்அழிதல்.

பா-ம்—1 மழகியார்.

நுரைசெ றித்தன்ன நோன்சிறை நாரையும்
இரைவி ரும்பியவ் வாவி யிகந்தொரீஇ
விரைய வந்தொரு கானிடை வீழ்ந்ததாற்
புரையி லோர்க்கிட னகுமப் பொங்கர்வாய். 5

மூத்த ரான முனிவர் குழாத்தொடுஞ்
சுத்த வானந்த வாரியுட் டோய்ந்துதன்
சித்த மாசு கழீஇச்சிவ மாகிய
சத்தி யத்தவ மாமுனி தங்குமால். 6

கூப்பி டெல்லை குணித்துச் சதுரமா
யாப்ப மைந்துசுற் றெங்கும் படித்துறைக்
கோப்ப மைந்து குளிர்சந்தி யாமடங்
காப்ப மைந்தோர் கயந்தலை யுள்ளதால். 7

விரைசெய் சண்பகம் பாதிரி வேங்கைதேன்
இரைசெய் வஞ்சி யிலஞ்சி குராமரா
வரைசெய் கிஞ்சுக நீண்மரு தாதியா
உரைசெய் பன்மர மும்புறத் துள்ளவால். 8

அந்த வாவியின் [1] பேரச்சோ தீர்த்தமென்
றிந்த ஞால மியம்புவ தாலிரை
[2] உந்த வாவுகொ டூக்க வெழுந்துமுன்
வந்த நாரை யதன்கரை வைகுமால். 9

ஆய்ந்த மாதவ ரப்புனி தத்தடந்
தோய்ந்து தோய்ந்தங் கெழுந்தொறுந் தோட்புறஞ்

5. நோன்சிறை - வலிய சிறகுகள். புரையிலோர் - முனிவர்கள். புரை - குற்றம், ஒப்பு.

6. சுத்த ஆனந்த வாரி - பரஞானத்தால் வந்த சிவானந்த வெள்ளம். சித்த மாசு - மனத்தழுக்கு.

7. குணித்தல் - வரையறுத்தல். கோப்பு - கோவை. சந்தியா மடம் - சந்திக்கடன் செய்தற்குரிய மடம்.

8. இலஞ்சி - புன்குமரம், மகிழமரம். குரா - ஒருமரம். மரா — வெண்கடம்பு. கிஞ்சுகம் - முண்முருக்கு.

9. இரைஉந்து அவாவுகொடு ஊக்க-உணவில் மேம்பட்ட ஆசையானது தன்னைப்பற்றிச் செலுத்த.

பா-ம்—1 பேரதோ. 2 மூந்தவாவு முடுக்க.

சாய்ந்த வார்சடைக் கற்றையிற் றத்துமீன்
பாய்ந்து பாய்ந்து புரள்வன பார்த்தரோ. 10

ஈண்டை யித்தவத் தோர்திரு மேனியைத்
தீண்ட வெத்தவஞ் செய்தன வேகொலென்
றுண்டை மீனமக் காகா வெனவிரை
வேண்டு நாரை வெறுத்தங் [1]கிறுத்ததால். 11

றுன்னிகர் தவத்தோர் யாருந் தடம்படிந் தேறி நித்த
மன்னிய கரும முற்றிச் சந்தியா மடத்தில் வைகி
மின்னிய மகுடஞ் சூடி வேந்தனு யுலகங் காத்த
[2]பொன்னியல் சடையான் கூடற் புராண நூ லோது கின்றார். 12

அண்ணலெம் பெருமான் செய்த வருள்விளை யாட்டு மாதிப்
பண்ணவன் சிறப்புங் கூடற் பழம்பதிச் சிறப்புந் தீர்த்தத்
தெண்ணருஞ் சிறப்புஞ் சேர்ந்தோர்க் கெளிவருமிறைவ னென்னும்
வண்ணமு மெடுத்துக் கூறக் கேட்டங்கு வதியு நாரை. 13

மடம்படு மறிவு நீங்கி வல்வினைப் பாசம் வீசித்
திடம்படு மறிவு கூர்ந்து சிவபரஞ் சோதி பாதத்
திடம்படு மன்பு வாவென் றீர்த்தெழ வெழுந்து நாரை
தடம்படு மாடக் கூடற் றனிநக ரடைந்து மாதோ. 14

---

10. அப் புனிதத் தடம் - அந்த அச்சோத தீர்த்தம். தோட்புறம்-பிடர். அங்கு; அசைநிலை.

11. ஈண்டு - இவ்விடம்; ஐ: சாரியை. ஆண்டு - அவ்விடம். நமக்கு ஆகா என - நமக்கு இரையாகா என்று கருதி. இறுத்தல் - தங்குதல்.

12. நித்த மன்னிய கருமம்-அனுட்டானம், சிவபூசை, பாராயணம் முதலிய நித்திய கருமங்கள். கூடற்புராணம் - திருவாலவாய் மான்மிய நூல்.

13. ஆதிப்பண்ணவன் - முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம் பொருளாகிய சோமசுந்தரக் கடவுள்: தீர்த்தம் - பொற்றாமரைத் தீர்த்தம். சேர்தல் - இடைவிடாது தியானித்தல்.

14. மடம்படும் அறிவு - அறியாமையோடு பொருந்திய அறிவு; சிற்றறிவு. வல்வினை - ஆகாமியவினை. திடம்படும் அறிவு - உறுதியுண்டாதற்கேதுவாகிய அறிவு; மெய்யறிவு. (மெய்யறிவு-சிவஞானம், திருவடிஞானம்.)

பா-ம்—1 கிருந்ததால். 2 பொன்னியற்.

வாங்கிய திரைசூழ் பொற்றா மரைபடிந் திமையா வேழந்
தாங்கிய விமான மேய தலைவனைத் தாழ்ந்து சூழ்ந்து
தேங்கிய வருட்க ணோக்கத் தெரிசித்துத் திருமுன் வைகி
ஓங்கிய கருணை மேனி யுள்ளுறத் தியானஞ் செய்து. 15

இந்நிலை நியம மூவைந் தெல்லைஞான் றியன்று பின்னாள்
அந்நிலை யொழுகு நாரை யாடக கமலந் தோய்வான்
வன்னிலை மதில்சூழ் ஞாங்கர் வந்துழிப் பசியால் வெந்து
மின்னிலை வேல்போற் றுள்ளு மீன்கவர்ந் துண்கு மென்னா. 16

சிறிதுளத் துள்ளி நாதன் றிருவருள் வலத்தாற் பின்னர்
அறிவுவந் தச்சோ விந்த வறப்பெருந் தீர்த்தத் துள்ளே
எறியுமீ னருந்த வாசை யெழுந்ததே யெனக்கிப் போதிப்
பிறவியென் றொழிவ தென்னாப் பேரஞ ரடைந்து பின்னும். 17

சுந்தரச் செம்மல் பாதத் துணைமல ரன்பிற் றோய்ந்து
சிந்தைவைத் திருக்கு மெல்லை தேவரு மறையுஞ் செய்யும்
வந்தனைக் கரியா னாரை மனநினை வடிவாய்த் தோன்றி
எந்தமக் கினியாய் வேண்டும் வரமென்கொ லியம்பு கென்றான். 18

செய்ய கான்மட நாரையுஞ் சென்றுதாழ்ந்
தைய னேயிப் பிறவி யறுத்துநின்
மெய்யர் வாழ்சிவ லோகத்தின் மேவிநான்
உய்ய வேண்டுமொன் றின்னமு முண்டரோ. 19

---

15. வாங்கல் - வளைதல். தேங்கிய - தன்மேல் தேக்கிய. அருட்கண் நோக்க -(இறைவன்) ஞானக்கண்ணால் பார்த்தருள. தெரிசித்து - (அவனது கருணைத் திருமேனியைத்) தரிசித்து ; தரிசித்தவடிவே தியானித்து என்றபடி,

16. மூவைந்து ஞான்று எல்லை - பதினைந்து நாள் வரை. ஞான்று - நாள். எல்லை - அளவு. ஆடக கமலம் தோய்வான் - பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராட.

17. அறிவு - சிவஞானம். அச்சோ - ஐயோ : இரக்கக் குறிப்பு. பேர் அஞர் - பெருந் துன்பம்.

18. அன்பில் தோய்ந்து - அன்பில் படிந்து. அரியான் - அணுகொணாதவராகிய சோமசுந்தரக் கடவுள். மனம் நினை வடிவு ஆய் - மனதில் கருதிய திருவுருவோடு. ,

19. செய்ய கால் - சிவந்த கால்களையுடைய. மெய்யர் - மெய்யன்பர் ; சிவனடியார்.

வள்ள லென்மர புள்ளவு மற்றைய
புள்ளு மிந்தப் புனித மலர்த்தடத்
துள்ள மீனுயி ருண்ணினெனக் காலமுந்
தள்ளொ ணாத பழிவந்து [1]சாருமே. 20

என்று மித்தட மீனில வாகநீ
நன்று சால்வர நல்கென வெள்ளிமா
மன்று ளானும் வரந்தந்து போயினான்
சென்று நாரை சிவலோகஞ் சேர்ந்ததால். 21

இயங்க ளைந்து மியம்ப விமானமேற்
புயங்க ணான்குமுக் கண்களும் பொற்பவான்
வியங்கொள் பூமழை வெள்ளத்து ளாழ்ந்துபோய்
வயங்கொ ணந்தி கணத்துள் வதிந்ததே. 22

அன்று தொட்டின் றளவும்பொற் றாமரை
என்று ரைக்கு மெழின்மல ரோடையிற்
சென்று கைத்துத் திரிகின்ற மீனலால்
ஒன்று மற்றன நீர்வா ழுயிர்களும். 23

தன்கிளை யன்றி வேற்றுப் பறவைக டாமுந் தன்போல்
நன்கதி யடைய வேண்டிற் றேகொலிந் நாரை செய்த
அன்பினில் வியப்போ வீச னருளினில் வியப்போ வன்பர்க்
கின்புரு வான [2]வீச னன்பருக் கெளிதே தைய. 24

---

20. வள்ளல் - வரையாது அளிக்கும் கருணை வடிவே : விளி. தள்ளொணாத - ஒழித்தற்கரிய.

21. நன்று சால் - நன்மை மிக்க. வெள்ளிமா மன்றுளான் - சோமசுந்தரக் கடவுள்.

22. புயங்கள் நான்கும் முக்கண்களும் என்றது சாரூப வடிவை. வான் - தேவர்கள். வியம் - பெருமை. வயம் - வெற்றி.

23. அன்று தொட்டு - நாரை இறைவனிடம் வரம்பெற்ற கால முதல். அ(ல்)லால் - அன்றியும்.

24. 'அடியார்க் கெளியன் சிற்றம்பலவன்' எனச் சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளினமையின், அவர் அருளினும் அடியவர் அன்பே வியப்பு என்பது கருத்து; அன்பால் திருவருள் கிடைக்கும் என்பது முடிவு. எளிதே, ஏ : தேற்றம். தைய : அசைநிலை.

பா-ம்—1 சாருமால். 2 வீச னருளன்பர்க் கெளிதே யைய. (ஐய : வியப்பிடைச்சொல்.)

மறக்கு றும்பு களைகட்டு மண்ணின்மேல்
அறப்பெ ரும்பயி ராக்கிய தன்பயன்
சிறக்க நல்கிட வுண்டு செருக்குவான்
துறக்க மெய்தி யிருந்தான் சுகுண னும். 25

ஆகச் செய்யுள்—2,321

கூடற் காண்டம்

முற்றிற்று

---

25. மறக் குறும்புகளை கட்டு - பாவமாகிய சிறிய களையைக் களைந்து. குறும்பு - சிறுமை. சுகுணன் - சுகுண பாண்டியன்.

உ
செந்திலாண்டவன் துணை
திருச்சிற்றம்பலம்

# 3. திருவாலவாய்க் காண்டம்

## 49. திருவாலவாயான படலம்

**சோமசுந்தரக் கடவுள்**

பாயுடையார் விடுத்தபழி யழல்வழுதி யுடல்குளிப்பப் பதிக மோதும், சேயுடையா ரணந்திளைக்குஞ் செவியுடையா ரளவி றந்த திசைக ளெட்டுந், தோயுடையார் பொன்னிதழித் தொடை யுடையார் விடவரவஞ் சுற்று மால, வாயுடையார் புகழ்பாடப் பெறுவேமேல் வேண்டுவதெம் மனித யாக்கை. 1

**அங்கயற்கண்ணம்மையார்**

வேதனெடு மாலாதி விண்ணுடர் மண்ணுடர் விரத யோகர், மாதவர்யா வருங்காண மணிமுறுவல் சிறிதரும்பி மாடக் கூடல், நாதனிரு திருக்கரந்தொட் டம்மியின்மேல் வைத்தகய ஞூட்டச் செல்வி, பாதமல ரெழுபிறவிக் கடனீந்தும் புணையென்பர் பற்றி லாதோர், 2

ஓலவாய் மறைக டேறு வொருவன்றன் னுலகந் தன்னைச்
சேலவா யுழலு நாரைக் கருளிய செயலீ தம்ம

---

1. பாயுடையார் - பாயை ஆடையாகவுடைய சமணர். பழி யழல் - அபிசாரயாகாக்கினி. உடல் குளிப்ப - உடலிற் சென்று பற்று மாறு. சேயுடை ஆரணம் - திருஞான சம்பந்தப் பிள்ளையார் அருளிச் செய்த தேவாரமாகிய தமிழ் வேதம். தோயுடையார் - பொருந்திய ஆடையாக வுடையார்.

2. விரதயோகர் - சிவயோகமே விரதநிலையாக வுடையவர். பிறவிக்கடல் - பிறவியாகிய கடல் : உருவகம். புணை - மரக்கலம்.

3. ஓலம் - ஒலி ; அஃது அநுதாத்தம், உதாத்தம், சொரிதம் என் னும் ஒலி வேறுபாடு. நீலம் வாய் மணி-நீல ரத்தினம். ஓலம், நீலம் : ஈறு கெட்டு நின்றன.

நீலவாய் மணிநேர் கண்ட னெடியநான் மாடக் கூடல்
ஆலவா யாகச் செய்த வருட்டிற மெடுத்துச் சொல்வாம். 3

சித்திர மேரு வென்ற திரண்டதோட் சுகுணன் பின்பு
சித்திர விரதன் சித்ர பூடணன் றிண்டேர் வல்ல
சித்திர துவசன் வென்றிச் சித்திர வருமன் வன்றேட்
சித்திர சேனன் சீர்சால் சித்ரவிக் கிரம னென்போன். 4

மணிகெழுதேரி ராச மார்த்தாண்ட னிராச சூடா
மணியணி முடியி ராச சார்த்தூல வழுதி சிந்தா
மணிநிகர் துவிச ராச குலோத்தமன் மடங்கா வென்றி
மணிதிகழ் பொலம்பூ ணாயோ தனப்பிர வீணன் மன்னோ. 5

இயம்பருந் திறலி ராச குஞ்சரன் பரவி ராச
பயங்கரன் கைக்கும் பைந்தா ருக்கிர சேனன் பாரைச்
சயங்கெழு தோண்மே லேந்து சத்துருஞ் சயன்வீ மத்தேர்
வயங்கெழு மன்னன் வீம பராக்ரம வழுதி மாதோ. 6

பெய்வளை விந்தை சேர்ந்த பிரதாப மார்த்தாண் டப்பேர்த்
தெவ்வடு சிலையான் றேர்விக் கிரமகஞ் சுகன்றே ரார்போர்
வெளவிய சமர கோலா கலனெனும் வாகை வேலான்
அவ்விய மவித்த சிந்தை யதுலவிக் கிரம னென்போன். 7

எழில்புனை யதுல கீர்த்தி யெனவிரு பத்தி ரண்டு
வழிவழி மைந்த ராகி வையகங் காத்த வேந்தர்
பழிதவி ரதுல கீர்த்தி பாண்டியன் றன்பா லின்பம்
பொழிதர வுதித்த கீர்த்தி பூடணன் புரக்கு நாளில். 8

கருங்கட லெழுங் காவற் கரைகடந் தார்த்துப் பொங்கி
ஒருங்கெழுந் துருத்துச் சீறி யும்பரோ டிம்ப ரெட்டுப்

---

4. சித்திரம் - அழகு. சித்திர ரதன் என்பது இகரம் பெற்றுச் சித்திரவிரதன் என்றாயது.

5. சிந்தாமணி - நினைத்தது கொடுக்கின்றதொரு தெய்வமணி. ஆயோதனம் - போர். பிரவீணன் - வல்லவன்.

6. வீமத்தேர் வயங்கெழு மன்னன் - வெற்றிபொருந்திய வீமரத பாண்டியன்.

7. விந்தை - விசயலட்சுமி. தெவ் - பகை. தேரார் - பகைவர்.

8. ஆலாசியமான்மியத்தில் உக்கிரசேனனுக்குப் பின் மகாசேனன் என்ற ஒருவனைக் கூட்டி இருபத்துமூன்று அரசர் பரம்பரை எனக் கூறப்பட்டுளது.

பொருங்கட கரியு மெட்டுப் பொன்னெடுங் கிரியு நேமிப்
பெருங்கடி வரையும் பேரப் பிரளயங் [1]கோத்த தன்றே. 9

அப்பெருஞ் சலதி வெள்ளத் தழிந்தன வழிவி லாத
எப்பெரும் பொழிலு மேழு தீபமு மிவற்றுட் டங்கி
நிற்பன செல்வ வான திணைகளு நீண்ட சென்னிப்
பர்ப்பத வகையு மீறு பட்டன வாக வங்கண். 10

தேனிழி குதலைத் தீஞ்சொற் சேயெனெடுங் கண்ணி கோயில்
வானிழி விமானம் பொற்று மரைவிளை யாட்டின் வந்த
கானிழி யிடபக் குன்றங் கரிவரை நாகக் குன்றம்
ஆனிழி வரைவ ராக வரைமுத லழிவி லாத. 11

வெள்ளநீர் வறப்ப வாதி வேதியன் ஞால முன்போல்
உள்ளவா றுதிப்ப நல்கி யும்பரோ டிம்ப ரேனைப்
புள்ளொடு விலங்கு நல்கிக் கதிருடற் புத்தேண் மூவர்
தள்ளரு மரபின் முன்போற் றமிழ்வேந்தர் தமையுந் தந்தான்.

அங்கியை மதிமர பென்று மாழியுட்
டங்கிய கலையெனுன் கிரட்டி தன்னொடும்
பொங்கிய நிலாமதி போலத் தோன்றினன்
வங்கிய சேகர வழுதி மன்னனே. 13

---

9. கடி - அச்சம். நேமிவரை - சக்கரவாளகிரி.

10. பெரும் பொழில் - பெரிய பூமி; அது கீழ் விதேகம், மேல் விதேகம், வட விதேகம், தென் விதேகம், வட விரேபதம், தென்னிரே பதம், வட பரதம், தென் பரதம், மத்திம கண்டம் என்னும் நவ கண்டங்கள். ஏழு தீபம் - நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், புட்கரம், தெங்கு, கமுகு என்னும் ஏழு தீவுகள். நிற்பன செல்வ வான திணை - சரம் அசரம் என்னும் பொருள்கள். ஈறுபட்டன - அழிந்தன.

11. குதலை - மழலைச் சொல். கான் - மணம். ஆன் இழி வரை - பசு உருத்திரிந்த மலை, பசுமலை.

12. ஆதி வேதியன் - சிவபெருமான்; ஆதியும் வேதியனும் என உம்மைத் தொகையாகக்கொண்டு சிவபிரானும் பிரமாவும் எனப் பொருள் கொள்ளலு மொன்று. கதிர் உடற் புத்தேள் மூவர் - சோம சூரியாக்கினிகள். தமிழ் வேந்தர் - சேர சோழ பாண்டியர். இங்குச் சூரியன் மரபில் சோழரும், சந்திரன் மரபில் பாண்டியரும், அக்கினி மரபில் சேரரும் வந்தனர் எனக் கொள்க.

13. ஆழியுள் - பாற் கடலில். வங்கிய சேகரன் - வம்ச சேகரன்.

பா-ம்—1 கோத்தவன்றே.

தாளணி கழலினான் றங்க ணாயகன்
கோளணி புரிசைசூழ் கோயில் சூழ்வோர்
வாளணி கடிநகர் சிறிது வைகவைத்
தாளரி யேறென வவனி காக்குநாள். 14

செய்யகோன் மனுவழி செலுத்து நீர்மையாற்
பொய்கெழு கலிப்பகை புறந்தந் தோடத்தன்
வையகம் பல்வளஞ் சுரப்ப வைகலும்
மெய்கெழு மன்பதை மிக்க வாலரோ. 15

பல்குறு மானுடப் பரப்பெ லாமொருங்
கல்குற விடங்குறை வாக வாய்மதுப்
பில்குறு தாரினான் பிறைமு டித்தவன்
மல்குறு கோயிலின் மருங்க ரெய்தினான். 16

கறையணி கண்டனைத் தாழ்ந்து கைதொழு
திறையவ நின்னருள் வலியி னிந்நிலப்
பொறையது வாற்றுவேற் கீண்டிப் போதொரு
குறையதுண் டாயின தென்று கூறுவான். 17

இத்தனை மாக்களு மிருக்கத் தக்கதாப்
பத்தனங் காணவிப் பதிக்க ணாதியே
வைத்தறை செய்திடும் வரம்பு காண்கிலேன்
அத்தமற் றதனையின் றறியக் காட்டென்றான். 18

நுண்ணிய பொருளினு நுண்ணி தாயவர்
விண்ணிழி விமானநின் றெழுந்து மீனவன்

---

14. கோள் - சூரியன் முதலிய நவக்கிரகங்கள், வலிமை. வைக வைத்து - பொருந்த வைத்து. ஆளரி - சிங்கம்.

15. மனுவழி - மனுநூல்வழி. கலிப்பகை - கலி (துன்பம், வறுமை) என்னும் பகைவன். மன்பதை - மக்கட்கூட்டம்.

16. பல்குறும் - பல்கிய. அல்குற - தங்குவதற்கு. மல்குறு - எழுந்தருளிய.

17. கறை - விஷம். பொறையது, குறையது, அது : பகுதிப் பொருள் விகுதி.

18. பத்தனம் - பட்டணம், நகரம். அறை செய்தல் - வரையறை செய்துவைத்தல். அத்த - இறைவனே : விளி.

19. நுண்ணிய பொருளினும் நுண்ணியதாயவர் - அணுவினுக்கு அணுவாக விளங்கும் சோமசுந்தரக்கடவுள். திண்ணிய - நிறைந்த.

திண்ணிய வன்பினுக் கெளிய சித்தராய்ப்
புண்ணிய வருட்கட லாகிப் போதுவார். 19

பாம்பி னுற்கடி சூத்திரங் கோவணம் பசுந்தாட்
பாம்பி னுற்புரி நூல்சன்ன வீரம்வெம் பகுவாய்ப்
பாம்பி னுற்குழை குண்டலம் பாதகிண் கிணிநாண்
பாம்பி னுற்கர கங்கணம் பரித்தனர் வந்தார். 20

வந்த யோகர்மா மண்டப மருங்குசென் றங்கைப்
பந்த வாலவா யரவினைப் பார்த்துநீ யிவனுக்
கிந்த மாநக ரெல்லையை யளந்துகாட் டென்றார்
அந்த வாளரா வடிபணிந் தடிகளை வேண்டும். 21

பெரும விந்நக ரடியனேன் பெயரினால் விளங்கக்
கருணை செய்தியென் றிரந்திடக் கருணையங் கடலும்
அருண யந்துநேர்ந் தனையதே யாகெனப் பணித்தான்
[1]உருகெ ழுஞ்சின வுரகமு மொல்லெனச் செல்லா. 22

கீட்டி சைத்தலைச் சென்றுதன் கேழ்கிளர் வாலை
நீட்டி மாநகர் வலம்பட நிலம்படிந் துடலைக்
கோட்டி வாலைவாய் வைத்துவேற் கொற்றவற் கெல்லை
காட்டி மீண்டரன் கங்கண மானது கரத்தில். 23

சித்தர் தஞ்சின கரத்தெழுந் தருளினார் செழியன்
பைத்த வாலவாய் கோலிய படி[2]சுவ ரெடுத்துச்
சுத்த நேமிமால் வரையினைத் தொட்டகழ்ந் தெடுத்து
வைத்த தாமென வகுத்தனன் மஞ்சுசூ ழிஞ்சி. 24

---

20. கடி சூத்திரம் - அரைஞாண். பசுந்தாள் - இல்லாத கால். பசுமை-இன்மை மேற்று; இதனை; "பச்சைத் தாளர வாட்டி" என்னும் தமிழ்மறையானும் அறியலாம். சன்னவீரம் - இது முத்தினாலும் ஏனைமணிகளாலுந் தொடுக்கப்பட்டு மார்பினும் முதுகினும் மாறியணிவது; வெற்றிமாலை என்பாருமுளர்.

21. பந்த-கட்டிய. ஆலவாய்-விஷம் பொருந்திய வாயையுடைய.

22. உரு - அச்சம். உரகம் - மார்பால் செல்வது; பாம்பு.

23. கேழ்கிளர் - ஒளி விளங்கும். கோட்டி - வளைத்து. கொற்றவன் - வங்கிய சேகரபாண்டியன்.

24. சினகரம்-திருக்கோயில். பைத்த - படமுடைய. ஆலவாய்-இங்குப் பாம்பு. இஞ்சி - மதில்.

பா-ம் — 1 உருகெழுஞ்செல வுரகமு. 2 சுவடெடுத்துச்.

தென்றி சைப்பரங் குன்றமும் வடதிசை யிடபக்
குன்ற முங்குடக் கேடக நகரமுங் குணபாற்
பொன்ற லங்கிழித் தெழுபொழிற் பூவண நகரும்
என்று நாற்பெரு வாயில்கட் கெல்லையா வகுத்தான். 25

அனைய நீண்மதி லாலவாய் மதிலென வறைவர்
நனைய வார்பொழி னகரமு மாலவாய் நாமம்
புனைய லாயதெப் போதுமப் பொன்னகர் தன்னைக்
கனைய வார்கழற் காலினன் பண்டுபோற் கண்டான். 26

[1]கொடிக ணீண்மதின் மண்டபங் கோபுரம் வீதி
கடிகொள் பூம்பொழி லின்னவும் புதியவாக் கண்டு
நெடிய கோளகை கிரீடம்வா ணிழன்மணி யாற்செய்
தடிகள் சாத்திய கலன்களும் வேறுவே றமைத்தான். 27

பல்வ கைப்பெருங் [2]குடிகளின் பரப்பெலா நிரப்பிச்
செல்வ [3]வானவன் புரந்தரன் புரத்தினுஞ் சிறப்ப
மல்லன் மாநகர் பெருவளந் துளும்பிட வளர்த்தான்
தொல்லை நாட்குல சேகரன் போல்வரு தோன்றல். 28

ஆகச் செய்யுள்—2,349

---

25. பரங்குன்றம் - திருப்பரங்குன்றம். பொன் தலம் - தேவலோகம்.

26. நனை - தேன். பண்டுபோல் கண்டான் - பிரளயகாலத்திற்கு முன் இருந்ததுபோல வகுத்தான்.

27. கோளகை - வட்டம்; இங்குத் தலைப்பாகை; கவசம் என்பாருமுளர். அடிகள் சாத்திய - சோமசுந்தரக்கடவுளுக்கு அணியும்படி; சாத்திய : வினையெச்சம்.

28. செல்வ வானவன் - குபேரன். பெருவளம் - மலைவளம், காட்டுவளம், நாட்டுவளம், கடல்வளம் முதலிய பெரியவளங்கள் :

பா-ம்—1 கொடிகொ. 2 குடிகளும். 3 வானவர்.

# 50. [1]சுந்தரப் பேரம்பெய்த படலம்

—o—

அங்கண ருரக மணிந்தருள் வடிவ மடைந்தர சகமகிழக்
கங்கண விடவர வங்கொடு கடிநகர் கண்டருண் முறையிதுவாஞ்
சங்கணி குழையினர் பஞ்சவன் வழிபடு தம்பெய ரெழுதியகூர்
வெங்கணை கொடுவள வன்படை முடுகிய வென்றியை யினிமொழிவாம்.

வெங்கய னிள்கொடி வங்கிய சேகரன் வெண்குடை நீழலின்வாய்
வங்கமு லாவிய தெண்கடன் ஞால மடைந்தைய மாசறுசீர்ச்
செங்கம லாலய மங்கையும் வாலிய திண்பது மாலயமேல்
நங்கையு மோவற மங்கல மான [2]நயம்பெற வாழ்வுறுநாள். 2

வேழ மறப்படை சூழ வெதிர்த்தவர் வீறு கெடுத்தடியிற்
றூழ வடர்த்திகல் வாகை தொடுத்தலர் தார்புனை விக்கிரமச்
சோழன் மதிக்குல நாயக னைப்பொரு சூள்கரு தித்தொலையா
ஆழ்கட லுக்கிணை யாமணி கத்தொடு மாடம ருக்கெழுவான். 3

கயபதி காய்சின நரபதி பாய்துர கதபதி யேமுதலா
வயமிகு தோள்வட திசையின ராதியர் வலிகெழு சேனையினோ
டியமிடி யேறிமி ழிசையென வாய்விட விரதம தேறிநடாஅய்ப்
பயன்மலி காவிரி நதியரு கேயுறை பதிகொடு மேயினனால். 4

சிலைத்தெழு செம்பியன் வெம்படை மள்ளர் செயிர்த்து மதிக்கடவுட்
குலத்தவ [3]னாட்டினி ருந்தெழி லானிரை கொண்டு குறும்புசெய்து

---

1. வளவன் படை முடுகிய வென்றியை-விக்கிரம சோழன் படையைத் துரத்திய திருவிளையாடலை.

2. வங்கம் - மரக்கலம். செங்கமல ஆலய மங்கை - இலக்குமி. வாலிய - வெண்மையான. வாலியதிண் பதுமாலயமேல் நங்கை - சரசுவதி. ஓவு - ஒழிவு.

3. அடர்த்து - வென்று. மதிக்குலநாயகன் - வங்கிய சேகரன். பொருள் சூள் - போர் செய்தற்குக் காரணமான சபதம்.

4. கயபதி - யானைப்படையின் தலைவன், துரகபதி - குதிரைப் படையின் தலைவன். நடாஅய் - நடத்தி.

பா-ம்—1 சுந்தரப் பெயரம் பெய்த படலம். 2 நயம்பெறு. 3 னாட்டு மிருந்தெழி.

மலர்த்தட மேரி யுடைத்து நகர்க்கு வரும்பல பண்டமுமா
றலைத்து முடுக்கி நடுக்கம் விளைத்து மமர்க்கடி யிட்டனரால். 5

மாற னறிந்தினி யென்செய்து நேரியன் வன்படை யோவளவின்
றேறி யெதிர்ந்[1]தம ராட லெனக்கரி திக்குறை யைப்பிறையோ
டாறணி பூரண சுந்தர னெந்தை யடித்தல முன்குறுகாக்
கூறியி ரந்து வரம்பெறு கென்றிறை கோயி லடைந்தனனால். 6

அடைந்து பணிந்தரு ளையக னேயடி யேனொடு விக்கிரமன்
தொடர்ந்தம ராட வயற்புலமன்னவர்தொகையொடு பாசறைவாய்ப்
படர்ந்திறை கொண்டன னேபொர வொத்த பதாதி யெனக்கிலையே
மிடைந்து வரும்படை மிக்க விடத்தரண் வேறுள தோவிறைவா.

என்னை யினிச்செயு மாறென மாற னிரந்து மொழிந்திடலும்
முன்னவன் வானிடை நின்றச ரீரி மொழிந்தருள் வான்முதனீ
அன்னவ னோடம ராடுபி னூழ மடைந்துத வித்துணையாய்
நின்னது வாகை யெனப்பொரு கின்றன நீயினி யஞ்சலென. 8

சிந்தை களித்திரு கண்க டுளித்திரு செங்கை குவித்திறைவன்
அந்தி மதிச்சடை யந்தண னைத்தொழு தன்று புறப்படமுன்
வந்தன னொற்றுவ னந்தி வரைக்கயல் வந்தது விக்கிரமன்
வெந்நறு கட்படை யென்றர சற்கு விளம்பின னப்பொழுதே. 9

அரச னியம்பல வதிர வலம்புரி யலற வலங்குளைமான்
இரத மணைந்திட விசைகொடு சிந்தையி னிடவல வன்கடவப்
புரசை நெடுங்கரி திரையெறியுங்கடல்பொருபரி விண்டொடுதேர்
விரைசெய் நறுந்தொடை விருதர்க ணம்புடை விரவ நடந்தனனால்.

---

5. சிலைத்தல் - ஆரவாரித்தல். ஆன்நிரை - பசுக்கூட்டங்கள். குறும்பு - போர், தீமை. ஆறலைத்தல் - வழிப்பறித்தல். அடியிடல் - தொடங்குதல்.

6. ஏறி - மேற்சென்று. அரிது - (வெல்லுதல்) அரிதாகும்.

7. பாசறை - பகைமேற் சென்றோர் உறைவிடம். பதாதி - சேனை. அரண் - (உம்மையன்றி) அடைக்கலம்

8. முன்னவன் - சோமசுந்தரக்கடவுள். நின்னது வாகை - உன்னுடையது வெற்றி.

9. இறைவன் - பாண்டியன். ஒற்றுவன் - ஒற்றன்; வேவுபார்ப்போன். நந்திவரை - இடபமலை.

10. உளை - தலையாட்டம்; பிடரிமயிருமாம். விருதர் - வீரர்.

பா-ம்—1 தமராடி னெனக்கரி.

அளந்து சூழ்திரு வால வாய்மதி லின்பு றத்தக மூழிபோல்
வளைந்த சோழ னெடும்ப டைக்கெதிர் வஞ்சிவேய்ந்தெழு பஞ்சவன்
கிளர்ந்த சேனை யதிர்ந்து கிட்டின கிட்டி யவ்விரு படைஞருங்
களஞ்சி றந்திட வஞ்சி னங்கொடு கைவ குத்தமர் செய்வரால். 11

சைய மொத்தெழு தேரி னூரொடு சைய மொத்தெழு தேரரும்
மையன் மைக்கரி வீர ரோடெதிர் மையன் மைக்கரி வீரருங்
கொய்யு ளைப்பரி வயவ ரோடிகல் கொய்யு ளைப்பரி வயவருங்
கைய முற்படை வீசி மின்விடு காரெ னப்பொரு வாரரோ. 12

முடங்கு வெஞ்சிலை வில்ல ரோடு முடங்கு வெஞ்சிலை வில்லரும்
விடங்க லுழ்ந்திடு வேல ரோடு விடங்க லுழ்ந்திடு வேலரும்
இடங்கை தோல்வல வாள ரோடு மிடங்கை தோல்வல வாளரும்
மடங்க லேறு மடங்க லேறு மலைப்ப தென்ன மலைப்பரால். 13

அரவி னன்னில மம்பு யம்பொறை யாற்று மீனவ னூற்றல்கூர்
புரவி யின்னிரை வைய மேல்கொடு போந்த நேரியர் வேந்தனேர்
விரவி மின்னிய முரசி யம்ப மிடைந்து வெஞ்சம ராடுமா
றிரவி தன்னொடு மதிய வன்பொர வேகி னூனிக ராகுமால். 14

துள்ளு மாவொலி தான யாறு துளும்பு மாவொலி தூண்டுதேர்
தள்ளு மாவொலி படையொ டும்படை தாக்கு மாவொலி பொருநரார்த்
தெள்ளு மாவொலி மள்ளர் பைங்கழ லேங்கு மாவொலி வீங்கியந்
தெள்ளு மாவொலி வேறு பாடு திரிந்து கல்லென லாயதே. 15

துடித்த வாளர வென்ன வீசிய தூங்கு கையின வீங்குநீர்
குடித்த காரொடு கார்ம லைந்திடு கொள்கை போல வுடன்றுடன்
றிடித்த வாயின வசனி யேறி னிருப்பு லக்கை யெடுத்தெறிந்
தடித்த சோரியொ டாவி சோர விழுந்த வெஞ்சின வானையே. 16

---

11. வஞ்சி - பகைமேற்செல்வோர் அணியும் மாலை. கைவகுத்து - படைவகுத்து.

12. சையம் - மலை. மையல் - மதமயக்கம். வயவர் - வீரர்.

13. முடங்கு - வளைந்த. கலுழ்ந்திடும் - சிந்தும். தோல் - கேடகம்.

14. வெஞ்சமர் ஆடும் ஆறு - கொடிய போர் புரியுந்தன்மை. மதியவன் - சந்திரன்.

15. துள்ளு மா, தேர் தள்ளு மா-குதிரைகள். தள்ளுதல் - இங்கு இழுத்தல். விங்கு இயம் தெள்ளும் - மிக்க வாச்சியங்கள் ஒலிக்கும்.

16. தூங்குகை - தொங்குந் துதிக்கை. அசனியேறு - இடியேறு.

எய்த வாளி விலக்கு வார்பிறி தெய்யும் வாளித [1]மார்புதோள்
செய்த போதவ ராண்மை கண்டு சிரித்து வென்றி வியப்பரால்
வைத வாவடி வேலெ றிந்திட வருவ தைக்குறி வழியினற்
கொய்த தார்மற வாளெ றிந்து குறைத்து வேறு படுத்துவார். 17

பின்னி டாதிரு படையு மொத்தம ராடு மெல்லை பெரும்படைச்
சென்னி தன்றுணை யான வுத்தர தேய மன்னவர் படையொடுந்
துன்னி ஞால முடிக்கு நாளெழு சூறை தள்ள வதிர்ந்தெழும்
வன்னி யென்ன வுடன்றெ திர்ந்தனன் வழுதி சேனை யுடைந்ததே. 18

[2]மின்ன லங்கிலை வாளொ டுஞ்சிலை வில்லி முந்தனர் வீரரே
பன்ன லம்புனை தேரொ டுங்கரி பரியி முந்தனர் பாகரே
தென்ன வன்பொரு வலியி ழந்தன னென்று செம்பியன் வாகையுந்
தன்ன தென்று தருக்கு மேல்கொடு சங்கெ டுத்து முழக்கினன். 19

அந்த வேலையின் முன்ன ருந்தம தருளெ னக்குளிர் கடிபுனற்
பந்தர் நீழ லளித்து மோடை படுத்தி யும்பகை சாயவே
வந்த வேடர வண்ண மேயொரு மான வேடர சாய்வலஞ்
சிந்த வாகுல மூழ்கு [3]மீனவன் சேனை காவல ராயினர். 20

குன்றவில் வேடன் சாபங் குழைவித்துச் சுந்த ரேசன்
என்றதன் னாமந் தீட்டி யிட்டகூர்ங் கணைக டூண்டி
வென்றன மென்று வாகை மிலைந்துவெண் சங்க மார்த்து
நின்றவன் சேனை மீது நெறிப்படச் செலுத்தா நின்றான். 21

அம்முனை வாளி யொவ்வொன் றடல்புனை [4]நூற்று நூறு
தெம்முனை வீரர் தம்மைச் செகுத்துயி ருண்ண நோக்கி

---

17. தோள்-துளைத்தல் : முதனிலைத் தொழிற்பெயர். வை தவா - கூர்மை நீங்காத.

18. உத்தரதேயம் - வடநாடு. ஞால முடிக்கு நாள் - ஊழிக் காலம். சூறை - ஊழிக்காற்று. வன்னி - ஊழித்தீ.

19. இலை - தகட்டுவடிவாகிய. தருக்குமேல் கொடு - இறுமாந்து. சங்கு - (வெற்றிச்) சங்கு.

20. ஓடை படுத்தியும் - அகழியில் வீழ்த்தியும். மானவேட ராய் - பெருமையுடைய வேடமன்னராய்.

21. சாபங் குழைவித்து - வில்லை வளைத்து. தூண்டி - செலுத்தி.

22. நூற்று நூறு - பதினாயிரம். அனுமானம் என்பது புகையைக் கண்டு நெருப்பு உண்டு என அறிதல் போல்வது.

பா-ம்—1 மார்பு போழ். 2 மின்னி. 3 மீனவர். 4 நூறுநூறு.

இம்முனை வாளி யொன்றுக் கித்துணை வலியா தென்று
வெம்முனை மறவேற் சென்னி வியந்தனு மான மெய்தா. 22

அன்னகூர் வாளி தன்னைக் கொணர்கென வதனை வாசித்
தின்னது சுந்த ரேச னெனவரைந் திருப்ப தீது
தென்னவற் கால வாயான் றுணைசெய்த செயலென் றஞ்சிப்
பொன்னிநா டுடையான் மீண்டு போகுவான் போகு வானை. 23

செருத்துணை யாகி வந்த வுத்தர தேயத் துள்ளார்
துருக்கரொட் டியர்வே றுள்ளார் யாவருஞ் சூழ்ந்து நில்லென்
றுருத்தனர் வைது நீபோர்க் குடைந்தனை போதி யீதுன்
கருத்தெனி னுண்மை யாவர் கண்ணதுன் மான மென்னும். 24

செல்லலை வருதி யென்னுச் செயிர்த்தெழுந் திடியி னார்த்துக்
கல்லெழு வனைய திண்டோட் கௌரியன் படைமேற் சென்று
வில்லிற வலித்து வாங்கி வேறுவே றாகி நின்று
சொல்லினுங் கடிய வாளி தொடுத்தனர் விடுத்தார் தூர்த்தார். 25

வடுத்தவா மருமச் செம்புண் மறமக னாகி நின்ற
கடுத்தவா மிடற்று முக்கட் கண்ணுதற் சாமி தான்முன்
எடுத்தவா டகவி [1]லென்ன விருஞ்சிலை வாளி யொன்று
தொடுத்தவா டவர்தாம் விட்ட சுடுசரந் தொலைத்துப் பின்னும். 26

பத்தம்பு தொடுத்து நூற்றுப் பத்துமான் றேரைச் சாய்த்தான்
பத்தம்பு தொடுத்து நூற்றுப் பத்துவெங் களிற்றை மாய்த்தான்
பத்தம்பு தொடுத்து நூற்றுப் பத்துவாம் பரியைக் கொன்றான்
பத்தம்பு தொடுத்து நூற்றுப் பத்துமா னுடரை வென்றான். 27

---

23. ஆலவாயான் - சோமசுந்தரக்கடவுள். பொன்னி நாடுடையான் - விக்கிரம சோழன். மீண்டு - புறங்காட்டி.

24. செருத்துணை ஆகி - போர் செய்தற்குத் துணையாக. உருத்தனர் - கோபித்து : முற்றெச்சம், என் ஆம் - யாது பயன்படும்.

25. செல்லலை - (போருக்குப் பயந்து) போகாதே. வலித்து - இழுத்து. சொல்லினும் கடிய - (முனிவரிடும்) சாபமொழியைக் காட்டிலும் விரைந்து செல்லும்.

26. தவா - நீங்காத. மருமம் - மார்பு. ஆடக வில் - மேருவில்.

27. நூற்றுப்பத்து மான் தேர் - குதிரை பூட்டிய ஆயிரம் தேர் வீரர்கள். களிறு - இங்கு யானைப்படைவீரர்கள். வாம் - தாவுகின்ற. பரி - இங்குக் குதிரைப்படை வீரர்கள்.

பா-ம்—1 லன்ன.

நூறம்பு தொடுத்து [1]நூற்று நூறுவெம் பரிமே லெய்தான்
நூறம்பு தொடுத்து [1]நூற்று நூறுவெங் கரிமேற் பெய்தான்
நூறம்பு தொடுத்து [1]நூற்று நூறுதேர் சிதைய விட்டான்
நூறம்பு தொடுத்து [1]நூற்று நூறுசே வகரை யட்டான். 28

ஆயிரம் வாளி யானூ றுயிரம் பரியைக் கொன்றுன்
ஆயிரம் வாளி யானூ றுயிரங் கரியை வென்றுன்
ஆயிரம் வாளி யானூ றுயிரந் தேரைச் சாய்த்தான்
ஆயிரம் வாளி யானூ றுயிரம் பேரைத் தேய்த்தான். 29

தடிந்தன தோளுந் தாளுந் தகர்ந்தன சென்னி மண்ணிற்
படிந்தன மடிந்தோர் யாக்கை பரிந்தன தும்பைத் தாமம்
மடிந்தன மையல் யானை மாண்டன தாண்டும் பாய்மான்
ஒடிந்தன கொடிஞ்சி மான்றே ரொதுங்கின வொழிந்த சேனை. 30

ஆவிமுன் னேகத் தாமு மருக்கமண் டலத்தா றேகத்
தாவுவ வென்ன வாடுந் தலைபல [2]சிலைவாள் பட்டுக்
கூவிளி யெடுத்து வீழுங் குறைத்தலை யாடப் பாதிச்
சாவுட னின்று கைகள் கொட்டுவ தாள மென்ன. 31

தறைவிழத் தனது சென்னி வீட்டினூர் தம்மை நின்ற
குறையுடல் கைவேல் குத்தி நூக்குவ குரவை பாடி
எறிபடு தலைகள் வாய்மென் றெயிறது கறித்து வீழ்ந்து
கறுவின மார்பந் தட்டி நிற்பன கவந்த யாக்கை. 32

ஒருவழிப் பட்டு வீழு மிருதலை யொன்றற் கொன்று
மருவிய [3]கேண்மை யாகி வாலெயி றிலங்க நக்குப்
பிரிவற வந்தாய் நீயு மென்றெதிர் பேசிப் பேசிப்
பரிவுற மொழிந்து மோந்து பாடிநின் றுடல் செய்த. 33

---

28. சேவகர் - காலாட்படை. அட்டான் - அழித்தான்.

30. தும்பைத் தாமம் பரிந்தன - தும்பை மாலை அழிந்தன. கொடிஞ்சி - தேரின் மொட்டு. ஒழிந்த சேனை ஒதுங்கின - எஞ்சிய வில்வாட் சேனைகள் ஓடின. ஒதுங்கல் - நடத்தல்;

31. குறைதலை - கவந்தம். பாதிச் சாவுடல் - குற்றுயிரோடுகூடிய உடம்பு.

32. தறை - தரை - பூமி. நூக்குவ - தள்ளுவன. குரவை - குரவைப்பாட்டு - கை கோத்தாடும்போது பாடும் பாட்டு. கறித்து - கடித்து.

33. ஒருவழிப்பட்டு - ஓரிடத்தில் அறுபட்டு. கேண்மை - நட்பு.

பா-ம்—1 நூறு நூறு. 2 சிலைவாள். 3 கேண்மைத்தாகி.

மாகவா றியங்கு சேனம் வல்லிருட் குவையி னன்ன
காகம்வன் கழுகு வெம்போர்க் களனிடை யவிந்து வீழ்ந்தோர்
ஆகமேற் சிறக டிக்கொண் டசைவன வேவை நீக்கப்
பாகரின் ருல வட்டம் [1]பணிப்பன போன்ற வன்றே. 34

வெள்ளமாச் சோரி யீர்ப்ப மிதக்கின்ற தேர்கள் வெம்பேய்ப்
பிள்ளைகண் மூழ்கிக் கீழ்போய் மறித்தெனப் பெயர்ந்து வீழ்வ
தெள்ளுநீர்க் கடலின் மீதூர் சிதைக்கல நிரையுந் தாக்கித்
துள்ளிமற் றவற்றைச் சாய்க்குஞ் சுறவமும் போன்ற வன்றே. 35

சுத்திரின் ஞெருபா லீர்ப்பக் கருங்கொடி சேனந் துண்டங்
கொத்திநின் ஞெருபா லீர்ப்பக் குடவயிற் றழல்கட் பூதப்
பத்தியின் ஞெருபா லீர்ப்பப் பட்டவ ராகங் கூளி
பொத்தினின் ஞெருபா லீர்ப்ப வைம்பொறி போல மன்னோ. 36

துடுவைவான் முறங்கா றள்ளுந் துணைச்செவி யரிசி கோட்டின்
உடுவைநேர் மணியின் குப்பை யுரலடி யுலக்கை திண்கோ
டடுகலங் கடந்திச் சோரி மத்தக மடுப்பென் றியானைப்
படுகளம் விசயத் செல்வி யடுமடைப் பள்ளி மானும். 37

பிணத்தினைக் கோலிப் புண்ணீ ராற்றினைப் பெருக்கி யுண்பேய்க்
கணத்தினை யுதைத்து நூக்கிக் கரையுடைத் தொருவன் பூதம்
நிணத்தொடும் வருமந் நீத்த நேர்பட விருந்து கையால்
அணைத்துவாய் மடுக்கும் வைகை யருந்திய பூத மென்ன. 38

---

34. மாகம் - ஆகாயம். அடிக்கொண்டு - அடித்துக்கொண்டு. வேவை - வெப்பம். பணித்தல் - அலைசத்தல்.

35. பேய்ப்பிள்ளை - பேயின் பிள்ளைகள். மறித்தென - மறிக்க: செய்தெனவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். இங்கு, தேரை மரக் கலமாகவும், பேயின் பிள்ளைகள் மறித்தலைச் சுரு மீன் சாய்த்தலாகவும் உவமிக்கப்பட்டுள்ளது.

36. கருங்கொடி - கரிய காக்கை. துண்டம் - மூக்கு. குடவயிறு - குடம் போன்ற வயிறு. கூளி - பேய்.

37. துடுவை - துடுப்பு, அகப்பை. உடு - நட்சத்திரம். மணி - முத்து. கடம் அடுகலம் - கதுப்பைச் சமைக்கும் பாத்திரமாகவும், படு களம் - போர்க்களம்.

38. கோலி - அரித்து. புண்ணீர் - இரத்தம். நூக்கி - தள்ளி. வல்பூதம் - வலியபூதம்.

பா-ம்—1 பனிப்பன.

புரத்தினு ளுயர்ந்த கூடற் புண்ணிய னெழுதி யெய்த
சரத்தினி லவிந்தார் சென்னிக் குற்றுழிச் சார்வாய் வந்த
அரத்தினை யறுக்கும் வைவே லயற்புல வேந்தர் நச்சு
மரத்தினை யடுத்த சந்துங் கதமெரி மடுத்த தென்ன. 39

மாசறு காட்சி யான்றன் வாளியா லவிந்தோர் தம்மை
மூசுவண் டென்னச் சூழ்ந்து மொய்த்தன பைத்த கூளி
காய்சினச் சேனங் காகங் கழுகினம் பற்றி யீர்த்துப்
பூசலிட் டொன்றோ டொன்று போர்செய்வான் றொடங்கிற் றம்ம.

வெஞ்சின மறக்கோ னம்பி விடுகணை வெள்ளத் தாழ்ந்து
வஞ்சின முறுதன் சேனை மடிந்தது கண்டு மாழாந்
தெஞ்சின படையுஞ் சூழ வேதிலார் நகையுஞ் சூழத்
துஞ்சின மறமுஞ் சூழச் சோழனு முடைந்து போனான். 41

வில்லொடு மேக மன்ன வெஞ்சிலை வேட வேந்தன்
மல்லொடு பயின்ற தென்னன் மலர்முகச் செவ்வி நோக்கி
அல்லொடு மதிவந் தென்ன வருணகை சிறிது பூத்துச்
செல்லொடு பகைபோற் கொண்ட திருவுரு மறைந்து போனான். 42

பாடுவா யளிதே னூட்டும் பைந்தொடைச் செழியன் வென்றிக்
கோடுவாய் வைத்திட் டார்த்துக் குஞ்சர முகட்டி லேறித்
தோடுவாய் கிழிக்குங் கண்ணார் மங்கலந் துவன்றி யேந்த
நீடுவார் திரைநீர் வேலி நீண்மதி ணகரிற் புக்கான். 43

சிலைவிற்சே வகஞ்செய்து வாகை வாங்கித் திருவளித்த சேவகற்குச் சிறந்த பூசை, நிலைவித்தாய் மணிப்பொலம்பூ ணிறு

---

39. புரத்தினுள் - (காசி, அயோத்தி, மதுரை, மாயை, காஞ்சி, அவந்தி, துவாரகை என்னும் முத்தி) நகரங்கள் ஏழனுள்: நச்சு மரம் - எட்டிமரம். சந்து - சந்தனமரம்.

40. மூசு - (மலரில்) மொய்க்கும். பூசல் இட்டு - பெருங் கூச்சலிட்டு.

41. மாழாந்து - மயங்கி. துஞ்சின மறம் - வன்மையின்மை, தோல்வி.

42. வில் - இங்கு, இந்திர தனுசு. செவ்வி - பொலிவு. செல் - மேகம். கரிய திருவுருவோடு வந்து புன்னகை செய்தமையை, 'அல் லொடு மதிவந்தென்ன' என்றார்.

43. வெற்றிக்கோடு - வெற்றிச்சங்கு. குஞ்சரம் - யானை. முகடு - இங்கு, மத்தகம்.

விச் சாத்தி நிழல்விரிக்கும் வெயின்மணியா னெடிய மேரு, மலை விற்ரு னென்னவரிச் சிலையு நாமம் வரைந்தகடுங் கூர்ங்கணையும் வணைந்து சாத்தி, அலைவித்தாழ் கடலுலகுக் ககலச் செங்கோ லறம்பெருக்கும் வங்கியசே கரனு மண்ணல். 44

ஆகச் செய்யுள்—2,393

---

44. சிலை வில் - சிலையாகிய வில்; மேருமலைபோன்ற வில்லுமாம்; (சிலைத்தல் - ஒலித்தல்.) சேவகம் - போர். வாகை வாங்கி - வெற்றி பெற்று. நிலைவித்து - நிலைபெறச்செய்து. அலைவு - துன்பம். அகலச் செங்கோல் - எங்கும் பரந்த ஆட்சி.

# 51. [1]சங்கப்பலகை கொடுத்த படலம்

—o—

வேடுரு வாகி மேரு வில்லிதன் னாமக் கோலெய்
தாடம ராடித் தென்ன னடுபகை துரந்த வண்ணம்
பாடினஞ் சங்கத் தார்க்குப் பலகைதந் தவரோ டொப்பக்
கூடிமுத் தமிழின் செல்வம் விளக்கிய கொள்கை சொல்வாம். 1

வங்கிய சேக ரன்கோல் வாழுநாண் மேலோர் வைகற்
கங்கையந் துறைசூழ் கன்னிக் கடிமதிற் காசி தன்னிற்
பங்கய முளரிப் புத்தேள் பத்துவாம் பரிமா வேள்வி
புங்கவர் மகிழ்ச்சி தூங்க மறைவழி போற்றிச் செய்தான். 2

நிரப்பிய வழிநா ணன்னீ ராடுவா னீண்ட வீணை
நரப்பிசை வாணி சாவித் திரியெனு நங்கை வேத
வரப்பிசை மநுவாங் காயத் திரியெனு மடவா ரோடும்
பரப்பிசைக் கங்கை நோக்கிப் படருவான் படரு மெல்லை. 3

நானவார் குழலி னாரம் [2]மூவரு ளிசையின் செல்வி
வானவா றியங்கும் விஞ்சை மாதரா ளொருத்தி பாடுங்
கானவா றுள்ளம் போக்கி நின்றனள் கமல யோனி
யானவா லறிவ னேகி யந்நதிக் கரையைச் சேர்ந்தான். 4

நாமகள் வரவு தாழ்ப்ப நங்கைய ரிருவ ரோடுந்
தாமரைக் கிழவன் மூழ்கித் தடங்கரை யேறு மெல்லைப்

---

1. நாமக்கோல் - திருப்பெயர் எழுதிய அம்பு; சுந்தரப்பேரம்பு. முத்தமிழ் - இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழ்.

2. கோல் வாழு நாள் - செங்கோல் செல்லுங் காலை. கன்னி - அழிவின்மை. பரிமா வேள்வி - அசுவமேத யாகம்.

3. வழிநாள் - பின்னாள். வீணை - இது பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ் என நான்கு வகையாகும். நரப்பு - நரம்பு. வரப்பு - வரம்பு; எல்லை.

4. நானம் - இங்கு, இயற்கை மணம். கானம் ஆறு. இசையின் வழியே. கமலயோனி - திருமாலின் உந்திக் கமலத்துதித்த பிரமன்.

பா-ம் — 1 சங்கப்பலகை தந்த படலம் 2 மூவரி னுவின்.

பாமகள் குறுகி யென்னை யன்றிநீ படிந்த வாறென்
றுமென வெகுண்டாள் கேட்ட வம்புயத் தண்ணல் சொல்வான். 5

குற்றநின் மேல தாக நம்மைநீ கோபங் கொள்வ
தெற்றென வினைய திங்கை யெண்ணறு மாக்க டோற்றம்
உற்றனை யொழித்தி யென்னு வுரைத்தனன் சாப மேற்கும்
பொற்றொடி மடந்தை யஞ்சிப் புலம்புகொண் டவலம் பூண்டாள். 6

ஊனிட ரகன்றே யுன்னு ருயிர்த்துணை யாவே ணிந்த
மானிட யோனிப் பட்டு மயங்குகோ வென்ன வண்டு
தேனிடை யழுந்தி வேதஞ் செப்பும்வெண் கமலச் செல்வி
தானிட ரகல நோக்கிச் சதுர்முகத் தலைவன் சாற்றும். 7

முகிழ்தரு முலைநின் மெய்யா முதலெழுத் தைம்பத் தொன்றிற்
றிகழ்தரும் ஆகா ராதி ஹாகார மீறச் செப்பிப்
புகழ்தரு நாற்பத் தெட்டு நாற்பத்தெண் புலவ ராகி
அகழ்தரு கடல்சூழ் ஞாலத் தவதரித் திடுவ வாக. 8

அத்தகு வருண மெல்லா மேறிநின் றவற்ற வற்றின்
மெய்த்தகு தன்மை யெய்தி வேறுவே றியக்கந் தோன்ற
உய்த்திடும் அகாரத் திற்கு முதன்மையா யொழுகு நாதர்
முத்தமி ழால வாயெம் முதல்வரம் முறையான் மன்னே. 9

நாமொரு புலவ ராகித் திருவுருத் தரித்துச் சங்க
மாமணிப் பீடத் தேறி வைகியே நாற்பத் தொன்ப

---

5. நங்கையர் இருவர் - சாவித்திரி, காயத்திரி என்ற இரண்டு மாதர். பாமகள் - சரசுவதி

6. எண் ஆறு - அளவிறந்த எண்ணிக்கையையுடைய. மாக்கள் தோற்றம் - மானுடப்பிறவி. உரைத்தனன் - இங்கு, சபித்தனன்.

7. ஊன் இடர் - உடம்பு எடுத்தலாலுளதாகிய துன்பம், பிறவித் துன்பம்; ஊன் : ஆகுபெயர். மயங்குகோ - மயங்குவேனோ.

8. முகிழ்தரும் - அரும்புபோலும். முதலெழுத்து - உயிரும் மெய்யும் ஆகிய முதலெழுத்து. நாற்பத்தெட்டு - வடமொழி ஆகாரமுதலிய பதினைந்தும், சகர முதலிய முப்பத்து மூன்றும் ஆகிய நாற்பத்தெட்டு.

9. வருணம் - எழுத்து. அகரம் தனித்தும் மெய்களோடு கலந்து வடிவு தோன்றாமலும் நிற்பதுபோல, இறைவன் தனித்தும் பல உயிர்களோடு கலந்து தன் வடிவு தோன்றாமலும் நிற்றலால், "அகாரத்திற்கு முதன்மையாய் ஒழுகுநாதர்" என்றார். "அகர வுயிர்போ லறிவாகி யெங்கும் - நிகரிலிறை நிற்கும் நிறைந்து" என்பது திருவருட்பயன்.

தாமவ ராகி யுண்ணின் றவரவர்க் கறிவு தோற்றி
ஏமுறப் புலமை காப்பா ரென்றனன் கமலப் புத்தேள். 10

அக்கர நாற்பத் தெட்டு மவ்வழி வேறு வேறு
மக்களாய்ப் பிறந்து பன்மாண் கலைகளின் வகைமை தேர்ந்து
தொக்கவா ரியமு மேனைச் சொற்பதி னெட்டு மாய்ந்து
தக்கதென் கலைநுண் டேர்ச்சிப் புலமையிற் றலைமை சார்ந்தார். 11

கழுமணி வயிரம் வேய்ந்த கலன்பல வன்றிக் கண்டிக்
கொழுமணிக் கலனும் பூணுங் குளிர்நிலா நீற்று மெய்யர்
வழுவறத் தெரிந்த செஞ்சொன் மாலையா லன்றி யாய்ந்த
செழுமலர் மாலை யானுஞ் சிவார்ச்சனை செய்யு நீரார். 12

புலந்தொறும் போகிப் போகிப் புலமையால் வென்று வென்று
மலர்ந்ததண் பொருனை நீத்த வளங்கெழு நாட்டில் வந்து
நிலந்தரு திருவி னுன்ற நிறைநிதிச் செழியன் செங்கோல்
நிலந்தரு மதுரை நோக்கி நண்ணுவார் நண்ணு மெல்லை. 13

பற்பல கலைமாண் டேர்ச்சிப் பனுவலின் பயனாய் நின்ற
அற்புத மூர்த்தி யெந்தை யாலவா யடிக ளங்கோர்
கற்பமை கேள்வி சான்ற கல்வியின் செல்வ ராகிச்
சொற்பதங் கடந்த பாத மிருநிலந் தோய வந்தார். 14

---

10. தாம் - இங்குச் சோமசுந்தரக்கடவுள். தாம் ஒரு புலவர் - இறையனார். உள் நின்று - (புறத்தில் நின்றருளியது போலவே) அகத்தும் நின்று. ஏமுற - அரணாக.

11. பன்மாண் கலைகளின் வகைமை-பலவகைப்பட்ட அறுபத்து நான்கு கலைகளின் பேதம். ஆரியம் - வடமொழி. ஏனைச்சொல் பதினெட்டு - அங்கம், அருணம், கலிங்கம், கௌசிகம், காம்போசம், கொங்கணம், கோசலம், சாவகம், சிங்களம், சிந்து, சீனம், சோனகம், திராவிடம், துளுவம், பப்பரம், மகதம், மராடம், வங்கம் என்னும் பதினெண் பாஷை.

12. கழுமணி - சாணைபிடித்த மாணிக்கம். வேய்ந்த - புனைந்த. செஞ்சொல் மாலை - பாமாலை.

13. நிலந்தரு திரு - மாற்றாது நிலத்தைத் தனக்கு நல்கும் போர்த்திரு.

14. கற்பு அமை - பயிற்சி அமைந்த. பனுவல் - நூல்; வேதம். சொற்பதங்கடந்த - சொற்கும் பொருட்கும் எட்டாத; பதம்-பொருள்; ஆகமவளவைக் கெட்டாத என்றலுமாம்.

அவ்விடை வருகின் றுரை நோக்கிநீ ராரை நீவிர்
எவ்விடை நின்றும் போது கின்றனி ரென்ன வன்னுர்
வெவ்விடை யனையீர் யாங்கள் விஞ்சைய ரடைந்தோர் பாவம்
வெளவிடு பொருளை நாட்டின் வருகின்றே மென்ன லோடும். 15

தனிவரு புலவர் நீவிர் தண்டமி ழால் வாயெங்
கனிவரு கருணை மூர்த்தி கனைகழ லிறைஞ்சல் வேண்டும்
இனிவரு கென்ன நீரே யெங்களுக் களவில் கோடி
துனிவரு வினைக டீர்க்குஞ் சுந்தரக் கடவு ளென்றுர். 16

மறையினு றொழுகும் பன்மாண் கலைகள்போன் மாண்ட கேள்வித்
துறையினு றொழுகுஞ் சான்றோர் சூழமீண் டேகிக் கூடற்
கறையினுர் கண்டத் தாரைப் பணிவித்துக் கரந்தா ரொற்றைப்
பிறையினுர் மகுடந் தோற்று தறிஞராய் வந்த பெம்மான். 17

விம்மித மடைந்து சான்றோர் விண்ணிழி விமான மேய
செம்மலை வேறு வேறு செய்யுளாற் பரவி யேத்திக்
கைம்மலை யுரியி னுர்தங் காறொழு திறைஞ்சி மீண்டு
கொய்ம்மலர் வாகைச் செவ்வேற் செழியனைக் குறுகிக் கண்டார்.

மறமலி நேமிச் செங்கோன் மன்னவன் வந்த சான்றோர்
அறமலி கேள்வி நோக்கி யவைக்களக் கிழமை நோக்கித்

---

15. வெவ்விடை அனையீர் - மிகவலிமை வாய்ந்த காளையை ஒத்த புலவீர். விஞ்சையர் - புலவர்கள்.

16. தனிவரும் புலவர் - சோமசுந்தரக் கடவுள். துனிவரும் வினைகள் - துன்பத்தைத் தரும் இருவினைகள்.

17. மறையின் ஆறு ஒழுகும் பன்மாண்கலைகள் - அறுபத்து நான்கு கலைஞானங்கள்; சிட்சை, வியாகரணம், சந்தம், நிருத்தம், சோதிடம், கற்பம் என்னும் ஆறு சாஸ்திரங்களுமாம்.

18. சான்றோர் - அறிவால் நிறைந்த நாற்பத்தெண்மர். கைம்மலை - யானை. வாகை மலர் - வெற்றிமாலை.

19. அவைக்களக்கிழமை - நல்லவை, நிறையவை என்னும் கல்விச் சபைக்குரிய உரிமைத்திறம்; இவற்றை, "புகழுந் தருமநெறி நின்றோர்பொய் காமம், இகழுஞ் சினஞ்செற்றம் இல்லோர் - நிகழ் கலைகள், எல்லா முணர்ந்தோர் இருந்த விடமன்றோ, நல்லார் அவைக்கு நலம்" எனவும், "நலனடக்கஞ் செம்மை நடுவுநிலை ஞானம், குலனென் றிவையுடையோர் கோதில்-புலனில்லோர், சென்று மொழிந்தனவுங் கேட்போர் செறிந்தவிடம், அன்றே நிறைந்த அவை" எனவும் வரும் வச்சணந்திமாலை யாலுணர்க.

திறமலி யொழுக்க நோக்கிச் சீரியர் போலு மென்று
நிறைமலி யுவகை பூத்த நெஞ்சின னிதனைச் செய்தான். 19

திங்களங் கண்ணி வேய்ந்த செக்கரஞ் சடில நாதன்
மங்கலம் பெருகு கோயில் வடகுட புலத்தின் மாடோர்
சங்கமண் டபமுண் டாக்கித் தகைமைசால் சிறப்பு நல்கி
அங்கமர்ந் திருத்தி ரென்ன விருத்தின னறிஞர் தம்மை. 20

வண்டமிழ் நாவி னோர்க்கு மன்னவன் வரிசை நல்கக்
கண்டுளம் புழுங்கி முன்னைப் புலவரக் கழகத் தோரை
மண்டினர் மூண்டு மூண்டு வாதுசெய் தாற்றன் முட்டிப்
பண்டைய புலனுந் தோற்றுப் படருழந் தெய்த்துப் போனார். 21

இனையர்போல் வந்து வந்து மறுபுலத் திருக்குங் கேள்வி
வினைஞரு மதமேற் கொண்டு விளைய்விளைய் வாதஞ் செய்து
மனவலி யிளைப்ப வென்று வைகுவோ ரொன்றை வேண்டிப்
புனையிழை பாக நீங்காப் புலவர்மு னண்ணி னாரே. 22

முந்துநூன் மொழிந்தார் தம்மை முறைமையால் வணங்கியெம்மை
வந்துவந் தெவரும் வாதஞ் செய்கின்றார் வரிசை யாக
அந்தமில் புலமை தூக்கி [1]யளப்பதா வெம்ம னோர்க்குத்
தந்தருள் செய்தி சங்கப் பலகையொன் றென்று தாழ்ந்தார். 23

பாடிய பாணற் கன்று வலியவே பலகை யிட்டார்
பாடிய புலவர் வேண்டிற் பலகைதந் தருளார் கொல்லோ
பாடிய புலவ ராகும் படியொரு படிவங் கொண்டு
பாடிய புலவர் காணத் தோன்றினார் பலகை யோடும். 24

சதுரமா யளவி ரண்டு சாணதிப் பலகை யம்ம
மதியினும் வாலி தாகு மந்திர வலிய தாகும்

---

20. வடகுடபுலம் - வடமேற்குத்திசை. சிறப்பு - வரிசைகள். அமர்ந்து - விரும்பி.

21. முன்னைப்புலவர் - பழைய புலவர்கள். மூண்டு மூண்டு - சென்று சென்று. ஆற்றல் முட்டி - வலிமை குறைந்து.

22. இனையர்போல் - இந்நாட்டுப் புலவர்கள்போல. மதமேற்கோடல் - தங்கொள்கை விடாமை. ஒன்று - ஒரு பொருள்; அது புலவரைச் சீர்தூக்கும் கருவியாகிய சங்கப்பலகை.

23. முந்து நூல் - முதனூல். தூக்கி - ஆராய்ந்து.

24. பாணற்கு-பாணபத்திரனுக்கு. வேண்டில்-விரும்புவாராயில்.

பா-ம்—1 யளப்பதா யெம்ம.

முதியநும் போல்வார்க் கெல்லா முழம்வளர்ந் திருக்கை நல்கும்
இதுநுமக் களவு கோலா யிருக்குமென் றியம்பி யீந்தார். 25

நாமக ளுருவாய் வந்த நாவலர் தமக்கு வெள்ளைத்
தாமரை யமளி தன்னைப் பலகையாத் தருவ தென்னக்
காமனை முனிந்தார் நல்கக் கைக்கொடு களிறு தாங்கும்
மாமணிக் கோயி றன்னை வலந்துதங் கழகம் புக்கார். 26

நாறுபூந் தாம நாற்றி நறும்பனி தோய்ந்த சாந்தச்
சேறு[1]வெண் மலர்வெண் டூசு செழும்புகை தீப மாதி
வேறுபல் வகையாற் பூசை வினைமுடித் திறைஞ்சிக் கீரன்
ஏறினன் கபில னோடு பரணனு மேறி னானே. 27

இருங்கலை வல்லோ ரெல்லா மிம்முறை யேறி யேறி
ஒருங்கினி திருந்தார் யார்க்கு மொத்திடங் கொடுத்து நாதன்
தருஞ்சிறு பலகை யொன்றே தன்னுரை செய்வோர்க் கெல்லாஞ்
சுருங்கிநின் றகலங் காட்டித் தோன்றுநூல் போன்ற தன்றே. 28

மேதகு சான்றோர் நூலின் வினைபொருள் விளங்கத் தம்மில்
ஏதுவு மெடுத்துக் காட்டு மெழுவகை மதமுங் கூறும்
போதவை தெளிந்த கிள்ளை பூவையே புறம்பு போந்து
வாதுசெய் வார்கள் வந்தான் மறுத்துநேர் நிறுத்து மன்னோ. 29

ஆய வாறெண் புலவரு மாய்ந்துணர்
பாய கேள்விப் பயன்பெற மாட்சியாற்

---

25. வாலிது ஆகும் - வெள்ளியதாகும்; புனிதமாகும். இறைவன் அருளால் மெய்ப்புலவர் இருத்தற்கு அவ்வப்போது தன்னினின்று முழம் வளர்ந்திடங்கொடுத்தலால், 'மந்திரவலியது' என்றார்.

26 நாவலர் - சங்கப் புலவர்கள். வெள்ளைத்தாமரை அமளி - வெண்டாமரையாசனம்.

27. பூந்தாமம் - பூமாலை. நாற்றி - தொங்கவிட்டு. கீரன் - நக்கீரன்.

28. அகலங்காட்டல் - பொருள் விரிந்து காட்டல்.

29. வினை பொருள் - அமைந்தபொருள். ஏது - காரணம். எடுத்துக்காட்டு - உதாரணம். எழுவகை மதம் - உடன்படல், மறுத்தல், பிறர் தம் மதம்மேற்கொண்டு களைதல், தான் நாட்டித் தனாது நிறுப்பு, இருவர் மாறுகோள் ஒரு தலை துணிதல், பிறர் நூற்குற்றங் காட்டல், பிறிதொடுபடான் தன் மதங்கொள்ளல் என்பன.

பா-ம்—1 வண் மலர் வண் டூசு.

றாய பாட றொடங்கினர் செய்துகொண்
டேய வாறிருந் தாரந்த வெல்லைவாய். 30

பலருஞ் செய்த பனுவலு மாண்பொருண்
மலருஞ் செல்வமுஞ் சொல்லின் வளமையுங்
குலவுஞ் செய்யுட் குறிப்புமொத் தொன்றியே
தலைம யங்கிக் கிடந்தவத் தன்மையால். 31

வேறு பாடறி யாது வியந்துநீர்
கூறு பாட லிதுவென் றுங் கோதிலென்
றேறு பாட லிதுவென் றுஞ் [1]செஞ்சேவே
மாறு பாடுகொண் டார்சங்க வாணரே. 32

மருளு மாறு மயக்கற வான்பொருள்
தெருளு மாறுஞ் செயவல்ல கள்வர்சொற்
பொருளு மாமது ரேசர் புலவர்முன்
அருளு நாவல ராய்வந்து தோன்றினர். 33

வந்த நாவலர் வந்திக்கு நாவலர்
சிந்தை யாகுலஞ் செய்ய மயக்குறும்
பந்த யாப்பைக் கொணர்கெனப் பாவலர்
எந்தை யீங்கிவை யென்றுமுன் னிட்டனர். 34

தூய [2]சொல்லும் பொருளின் றொடர்ச்சியும்
ஆய நாவல ரவ்வவர் தம்முது

---

30. ஆறு எண் புலவர் - நாற்பத்தெட்டுப் புலவர்கள். ஏயவாறு-தம்மிச்சை வழியே.

31. பலர்-இங்கு, நாற்பத்தெண்மர். குறிப்பு-குறிப்பிற்றோன்றும் பொருள்; இஃது உத்தம காப்பியத்தின் இலக்கணம் ஆகும். தலைமயங்கி -(பாகுபாடு தெரியாமல்) கலந்து.

32. சங்க வாணர் - சங்கப்புலவர்கள். வாழ் + நர் = வாணர். நர் : பெயர் விகுதி. செஞ்சேவே - செவ்வையாக, நேரே.

33. பளிங்குக் கண்ணாடிபோலத் தனது சத்தியின் பேதமெல்லாம் தானாய் நிற்கும் சோமசுந்தரக் கடவுளாதலால், 'சொற்பொருளுமாம் மதுரேசர்' என்றார். சொல்லின் வடிவு-சத்தி. பொருளின் வடிவு-சிவம்.

34. வந்த நாவலர் - இங்குச் சோமசுந்தரக் கடவுள். ஆகுலம் - வருத்தம். பந்த யாப்பு - தளையமைந்த செய்யுள்.

பா-ம்—1 செஞ்சவே. 2 சொல்லின்.

வாய பாடல் வகைதெரிந் தவ்வவர்க்
கேய வேயெடுத் தீந்தன ரென்பவே. 35

வாங்கு சங்கப் புலவர் மனங்களித்
தீங்கு நீரெம ரோடு மொருத்தராய்
ஓங்கி வாழ்திரென் றருள்லெனத் தங்களைத்
தாங்கு செம்பொற் றவிசி லிருத்தினர். 36

பொன்னின் பீடிகை யென்னும்பொன் னூரமேல்
துன்னு நாவலர் சூழ்மணி யாகவே
மன்னி னார்நடு நாயக மாமணி
என்ன வீற்றிருந் தார்மது ரேசரே. 37

நதிய ணிந்தவர் தம்மொடு நாற்பத்தொன்
பதின்ம ரென்னப் படும்புல வோரெலாம்
முதிய வான்றமிழ் பின்னு முறைமுறை
மதிவி ளங்கத் தொடுத்தவண் வாழுநாள். 38

வங்கிய சேகரன் வங்கிய சூடா மணிதன்னைப்
பொங்கிய தேசார் முடிபுனை வித்துப் புவிநல்கி
இங்கியல் பாச வினைப்பகை சாய விருந்தாங்கே
சங்கியல் வார்குழை யானடி யொன்றிய சார்புற்றான். 39

ஆகச் செய்யுள்—2,432

---

35. முது ஆய பாடல் வகை - பொருள் முதிர்ச்சி வாய்ந்த பாடல்களின் பாகுபாடுகள்.

36. எமரோடும் - எம்மவரோடும். ஓங்கி - சிறந்து.

37. பொன்னின் பீடிகை - பொற்பலகை. நடுநாயகம்-தலைமை.

38. வான் தமிழ் - பெரிய முத்தமிழ். தொடுத்து - நூல்கள் செய்து.

39. வம்சசேகரன், வம்சசூடாமணி என்பன வங்கிய சேகரன், வங்கிய சூடாமணி என்று ஆயின. சார்பு - வீடுபேறு.

# 52. தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்

—o—

சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுபீடம்
அற்குவை கண்டத் தண்ணல ளித்த தறைந்தேமால்
தற்குவை தந்தா னுய்குவ லென்னுந் தருமிக்குப்
பொற்குவை நல்கும் வண்ணமெ டுத்துப் புகல்கிற்பாம். 1

மன்னவர் மன்னன் வங்கிய சூடா மணிமாறன்
தென்னவ ராகித் திகிரியு ருட்டுந் தென்கூடல்
முன்னவ ரன்னங் கண்டறி யாத [1]முடிக்கேற்றப்
பன்மலர் நல்கு நந்தனம் வைக்கும் பணிபூண்டான். 2

மாதவி பாதிரி தாதகி கூவிள மந்தாரந்
தாதவிழ் மல்லிகை முல்லையி லஞ்சி தடங்கோங்கம்
வீதவழ் கொன்றை கரந்தைசெ ழுங்கர வீரந்தண்
போதவிழ் நந்தி செருந்திகு ருந்தம் புன்னாகம். 3

மூண்டக மென்கடி நீலமு தற்பல முப்போதும்
எண்டிசை யுங்கம ழும்படி நந்தன மெங்குந்தேன்
உண்டிசை வண்டு படிந்துமு ரன்றிட வுண்டாக்கி
வண்டிமிர் சண்பக நந்தன முந்தனி வைத்தானால். 4

பொய்த்திடு நுண்ணிடை மங்கல மங்கையர் பொன்பூண்டார்
ஒத்தெழு சண்பக மொய்த்தவ ரும்ப ருடைந்தெங்கும்

---

1. சொல்குவை - சொற்களின் வகைகள். தொகு பீடம் - தொக்கிருக்கும் பீடம், சங்கப்பலகை; தொகுதி-சங்கம் : சுருகெட்டதுமாம். தற்கு - தனக்கு. உவை - அந்தப்பொற்கிழி.

2. அன்னம் - பிரமனுகிய அன்னப்பறவை. நந்தனம் - நந்தவனம். பணி - திருத்தொண்டு.

3. தாதகி - ஆத்தி கூவிளம்-வில்வம். இலஞ்சி தடம் கோங்கம்- மகிழும் பெரிய கோங்கும். வீ - வண்டு. கரவீரம் - அலரி. நந்தி - நந்தியாவட்டம்.

4. முரன்றிட - பாட. வண்டிமிர் சண்பகம் - வண்டுகள் தேனையுண்ணவீழாமல் சுற்றி ஒலிக்கின்ற சண்பகமலர். இதற்கு வண்டுறை மலர் எனவும் ஒரு பெயர் உண்டு.

பா-ம்—1 முடிக்கேற்ப ; முடிக்கேற.

வைத்திடு நந்தன வாசம்வி மூங்கி மணங்கான்று
பைத்து மலர்ந்தன கண்டும கிழ்ந்து பரித்தேரான். 5

செருக்கிய வண்டு விழாமலர் கொய்து தெரிந்தாய்ந்து
நெருக்கிய விண்டை நிரைத்தொடை தொங்க னெடுந்தாமம்
மருக்கிளர் கண்ணி தொடுத்தணி வித்து வணங்காரூர்
கருக்கிய கண்ணுத லார்திரு மேனி கவின்செய்தான். 6

அன்னவி யன்பொழின் மாமது ரேச ரடித்தாழ்வோன்
பொன்னவிர் சண்பக மாலைபு னைந்த புதுக்கோலந்
தன்னைவி யந்திவர் சண்பக சுந்தரர் தாமென்று]
முன்னரி றைஞ்சினி னிம்பம ணிந்த முடித்தென்னன். 7

அன்னதொர் நாமம் பெற்றன ரின்று மணிக்கூடன்
முன்னவ ரந்தத் தாமம வர்க்கு முடிக்கேற்றும்
இன்னதொர் நிராற் சண்பக மாற னென்றேபேர்
மன்னிவி ளங்கினன் வங்கிய சூடா மணிதானும். 8

சண்பக மாறன் சண்பக சுந்தரர் தம்மாடே
நண்பக மாரு நன்பணி செய்யு நன்னாளிற்
பண்பகர் சொல்லார் தம்புடை மாரன் படுபோர்மூண்
டெண்பக வெய்வா னாகிய வந்தன் றிளவேனில். 9

---

5. எழு - எழுந்தோங்கிய. அரும்பர் - அரும்புகள். பைத்து - பசந்து.

6. வண்டுவிழாமலர் - வண்டுமோவாத பூ; சண்பகம். இண்டை - தண்டுபோலக் கட்டப்பட்டமாலை. தொடை-சரமாகத் தொடுத்தமாலை. தாமம் - கோத்தமாலை. கண்ணி - முடிமாலை: இது வட்டவடிவமாகத் தொடுக்கப்படுவது. வணங்கார் ஊர் - பகைவர் ஊர், திரிபுரம்.

7. பொன் அவிர் - பொன்னிறம்போல் விளங்கும். புதுக்கோலம் - புதிய திருக்கோலம். நிம்பம் - வேப்ப மலர்மாலை. சண்பகசுந்தரர் - சோமசுந்தரக்கடவுள்: காரணப்பெயர்.

8. மணி - பொலிவு, அழகு. சண்பக மாறன் - வங்கிய சூடாமணி பாண்டியன்: காரணப்பெயர்.

9. நண்பு - அன்பு. பண்பகர் சொல்லார் - பண்ணும் புகழும் சொல்லார் - பண்ணும் புகழும் சொல்லினையுடைய மகளிர்; (பகர்தல் - புகழ்தல்). எண்பக - நெஞ்சம் பிளக்க; வலிமைகெட என்றனுமாம்; அளவு கடந்த என்பாருமுளர். ஆகிய - ஆக. வந்தன்று - வந்தது: ஒரு சொல்.

மனிதர்வெங் கோடை தீர்க்கும் வசந்தமென் காலும் வேறு
துனிதவி ரிளங்கால் வேண்டுஞ் சோலையுஞ் சோலை வேண்டும்
புனிதநீர்த் தடமும் வேறு புதுமல ரோடை வேண்டும்
பனிதரு மதியும் வேறு பான்மதி வேண்டுங் காலம். 10

அண்டவான் றருமேற் சிறிச் சிவந்தெழுந் தாங்குத் தேமாத்
தண்டளி ரீன்று வானந் தைவர நிவந்த காசு
கொண்டிடை யழுத்திச் செய்த குழையணி மகளிர் போல
வண்டிறை கொள்ளப் பூத்து மலர்ந்தன செருந்தி யெல்லாம். 11

செங்கதிர் மேனி யான்போ லவிழ்ந்தன செழும்ப லாசம்
மங்குலூர் செல்வன் போல மலர்ந்தன காஞ்சி திங்கட்
புங்கவன் போலப் பூத்த பூஞ்சினை மரவஞ் செங்கை
அங்கதி ராழி யான்போ லலர்ந்தன விரிந்த காயா. 12

தரைகிழித் தெழுநீர் வைகைத் தடங்கரை யெக்க ரல்குல்
அரவமே கலைசூழ்ந் தென்ன வலர்ந்துதா துகுப்ப ஞாழல்
மரகதந் தழைத்து வெண்முத் தரும்பிப்பொன் மலர்ந்து வாங்குந்
திரைகடற் பவளக் காடு செய்வன கன்னிப் புன்னை. 13

ஊடினார் போல வெம்பி யிலையுதிர்ந் துயிரன் னாரைக்
கூடினார் போல வெங்குங் குழைவரத் தழைத்து நீங்கி
வாடினார் போலக் கண்ணீர் வாரமெய் பசந்து மையல்
நீடினா ரலர்போற் பூத்து நெருங்கின மரங்க ளெல்லாம். 14

---

10. வசந்த மென்கால் - வெப்பை யாற்றும் சிறுதென்றல். இளங்கால் - தென்றல். இது முதல் வேனிற்கால வருணனை ஆகும்.

11. தரு - பஞ்ச தருக்கள். தேமா - மாமரங்கள். வானம் தைவர - வானுலகையளாவ. காசு - நீலமணி.

12. செங்கதிர்மேனியான் - சூரியன் பொருந்திய திருமேனியை உடைய சிவபெருமான்; செவ்வொளி பொருந்திய மேனி எனக் கொண்டு சிவபெருமான், சுப்பிரமணியக் கடவுள், சூரியன் என்றனுமாம். பலாசம் - முண்முருக்கு. மங்குலூர் செல்வன் - மேகநாதன், இந்திரன். மரவம் - குங்கும மரம். காயா - காயாஞ்செடி.

13. எக்கர் - மணல்மேடு. அரவம் - ஒலி. ஞாழல்-குங்கும மரம். மரகதம் - பசிய இலைகள். கன்னிப்புன்னை - இளம் புன்னை மரங்கள்.

14. குழை வரத் தழைத்து - குழையாக வளரும்படி தழை கொண்டு, சரீரம் குழையப் பூரித்து. கண்ணீர் - கண்களினின்று பெருகுநீர், தேனுகிய நீர். அலர் - பழிச்சொல், பலர் அறிந்து பழி தூற்றல்.

விழைதரு காத லார்தா மெலிவுற மெலிந்து நெஞ்சங்
குழைவுறக் குழைந்து நிற்குங் கோதிலாக் கற்பி னார்போல்
[1]மழையறுங் கோடை தீப்ப மரந்தலை வாட வாடித்
தழைவுறத் தழைத்து நின்ற தழீஇயபைங் கொடிக ளெல்லாம். 15

சேட்டிகைத் தென்கா றள்ளத் தெண்மதுச் சிதறத் தும்பி
நீட்டிசை முரலச் சாயா நின்றுபூங் கொம்ப ராடல்
நாட்டியப் புலவ னூட்ட நகைமுகம் வெயர்வை சிந்தப்
பாட்டிசைத் தாடா நின்ற பாவைமார் போன்ற வன்றே. 16

மலர்ந்தசெவ் வந்திப் போதும் வகுளமு முதிர்ந்து வாடி
உலர்ந்துமொய்த் தளிதே னக்கக் கிடப்பன வுள்ள மிக்க
குலந்தரு நல்லோர் செல்வங் குன்றினுந் தம்பா லில்லென்
றலந்தவர்க் குயிரை மாறி யாயினுங் கொடுப்ப ரன்றே. 17

நாறிய தண்ணந் தேமா நறுந்தளிர் கோதிக் கூவி
ஊறிய காமப் பேட்டை யுருக்குவ குயின்மென் சேவல்
வீறிய செங்கோல் வேந்தன் வெளிப்படத் தேயங் காவல்
மாறிய வேந்தன் போல வொடுங்கின மயில்க ளெல்லாம். 18

பொங்கரி னுழைந்து வாவி புகுந்துபங் கயந்து ழாவிப்
பைங்கடி மயிலை முல்லை மல்லிகைப் பந்தர் தாவிக்
கொங்கலர் மணங்கூட் டுண்டு குளிர்ந்துமெல் லென்று தென்றல்
அங்கங்கே கலைக டேரு மறிவன்போ லியங்கு மன்றே. 19

தாமரை களாஞ்சி தாங்கத் தண்குயின் முழவ மேங்க
மாமரு தமருங் கிள்ளை மங்கல மியம்பத் தும்பி

---

15. இங்கு, மரத்திற்குக் கணவரும், பசியகொடிகளுக்குக் கற்புடைய மகளிரும் உவமையாக வந்தன.

16. சேண் - நெடிய. தென் திசை - தென்திசை. நீட்டிசை - உச்சவிசை, தொடர்ந்த இராகம்.

17. வகுளம் - மகிழமரம். உள்ளமிக்க - (கொடுத்தற்கண்) மனக் கிளர்ச்சியையுடைய; மிகுந்த நல்லெண்ணமுடைய. அலந்தவர் - வருத்தமுற்றோர்.

18. நாறிய - தோற்றிய. பேடு - இங்குப் பெண் குயில். சேவல் குயில்-ஆண் குயில். தேயங்காவல் மாறிய வேந்தன்-குறுநிலமன்னன்.

19. பொங்கர் - சோலை. மயிலை - இருவாட்சி. கலைகள் - நூற்பொருள்கள். அறிவன் - மாணவன்.

பா-ம்—1 மழைவறுங்.

காமர மிசைப்ப [1]முள்வாய்க் கைதைவா ளெடுப்ப வேனிற்
கோமகன் மகுடஞ் சூடி யிருப்பதக் குளிர்பூஞ் சோலை. 20

கலையினு னிறைந்த விந்து காந்த[2]மண் டபத்துஞ் செய்த
மலையினு மெழுது மாட மருங்கினு நெருங்கு சோலைத்
தலையினுங் கமல வாவித் தடத்தினுந் தண்முத் தார
முலையினு மன்றிக் கோடை முடிவிடங் காணார் [3]மைந்தர். 21

நிலந்தரு திருவி [4]ஞன்ற னிழன்மணி மாடக் கூடல்
வலந்தரு தடந்தோண் மைந்தர் வானமும் வீழும் போக
நலந்தரு மகளி ரோடு நாகநா டவர்தஞ் செல்வப்
பொலந்தரு வனைய காட்சிப் பூம்பொழி னுகர்வான் போவார். 22

மாத்தாண் மதமா னெருத்தின் மடங்க லெனச்செல் வாரும்
பூத்தா ரொலிவாம் பரிமேற் புகர்மா வெனப்போ வாரும்
[5]பாத்தார் பரிதி யெனவாம் பரித்தே ருகைத்தூர் வாருந்
தேத்தா ருளர்வண் டலம்பச் சிலம்பி னடக்கின் றாரும். 23

நீலப் பிடிமேற் பிடிபோ னெறிக்கொள் வாருந் தரள
மாலைச் சிவிகை மிசைவெண் மலரா னெனச்செல் வாரும்
ஆலைக் கரும்பன் றுணைபோ லணித்தார்ப் பரியூர் வாருங்
கோலத் தடக்கை பற்றிக் கொழுந ருடன்போ வாரும். 24

சுருப்புக் கமழ்தேங் கண்ணித் தொடுபைங் கழலா டவருங்
கருப்புச் சிலைமன் னவனாற் கருவிப் படையன் னவரும்

---

20. கிள்ளை - கிளி. காமரம் - இசைப் பாட்டு. முள்வாய்க் கைதை - முட்களையுடைய தாழை. வேனிற் கோமகன் - வேனிற் காலமாகிய பேரரசன்.

21. இந்து காந்த மண்டபம் - சந்திரகாந்த மண்டபம். செய்த மலை - செய்குன்று. எழுதும் மாடம் - சித்திர மண்டபம்.

22. நிலந்தரு திருவினுன் - மரக்கலத்தாலுமன்றி நிலவுலகுந் தருஞ் செல்வமுடையவன், வங்கிய சூடாமணி மாறன். வானமும் வீழும் போக நலம் - விண்ணவரும் விரும்பும் இன்ப நலம். பொலந்தரு - பொன் மயமாகிய கற்பகம். பூம்பொழில் நுகர்தல் என்பது பெருங் காப்பியத்தின் ஒருறுப்பு ஆகும்.

23. மதமான், புகர்மா - யானை. பாத்தார் பருதி - (பன்னிரண்டாகப்) பகுக்கப்பட்டு நிறைந்த சூரியர்கள். சிலம்பின் - மலைபோல.

24. நீலப்பிடி - கரிய பெண் யானை. கரும்பன் - மன்மதன். கரும்பன் துணை - இரதி தேவி.

பா-ம்—1 மூள்வாய். 2 மண்டபத்தின். 3 மாந்தர். 4 ஞன்றன் நிழல் மணி. 5 பார்த்தார்.

விருப்புற் றெறிநீர் வைகை வெள்ளைத் தரளந் தெள்ளிப்
பொருப்பிற் குவிக்கும் புளினம் புறஞ்சூழ் சோலை புகுவார். 25

கூந்தற் பிடியும் பரியு மூர்வார் கொழுநர் தடந்தோள்
ஏந்தச் சயமா தென்னத் தழுவா விழிந்து பொழில்வாய்ப்
பூந்தொத் தலர்பொற் கொடிதா துகுமா றென்னப் புனைந்த
சாந்தக் கலவை யுகப்போய் வனமங் கையர்போற் சார்ந்தார். 26

ஏமா சலமென் முலையார் நடையோ வியமே யென்னப்
பூமா தவிசேர் வாரும் புன்னை நிழல்சேர் வாருந்
தேமா நிழல்சேர் வாருஞ் செருந்தி நிழல்சேர் வாருங்
காமா யுதசா லைகள்போற் கைதை நிழல்சேர் வாரும். 27

கோடும் பிறைவா ணுதலார் குழலைக் கருவிக் காரென்
றோடுந் தோகை யவர்கண் ணோக்கிக் கணையென் றஞ்சி
ஓடுங் கொடியி னன்று ருருமாந் தளிரென் றயில்வான்
நாடுங் குயிலன் னவர்பண் ணிசைகேட் டொதுங்கி நாணும். 28

நீடுந் தரங்க மிரங்கு நிறைநீர் நிலையே யன்றிப்
பாடுஞ் சுரும்புண் கழுநீர் பைந்தாட் குமுதம் பதுமங்
கோடும் பூத்த வென்னக் கொடியே ரிடையார் குழையுந்
தோடுங் கிடந்த வதனத் தொகையாற் பொலிவ சோலை. 29

பிடிக ளென்ன நடந்தா ருடன்போய்க் கொழுநர் பெருந்தண்
கொடிகண் மிடைந்த வில்லி லியக்கர் போலக் குறுகிக்

---

25. கருப்புச்சிலை மன்னவன் நாற்கருவிப் படையன்னவர் - மன்மதனின் நால்வகைச் சேனையை ஒத்த பெண்கள். தெள்ளி-கொழித்து. புளினம் - மணற்குன்று.

26 கூந்தற்பிடி - புறமயிரினையுடைய பெண் யானை. தொத்து - கொத்து. வனமங்கையர் - வனத்தில் வாழும் தெய்வ மகளிர்.

27. ஏமாசலம் - பொன்மலை. பூ மாதவி - பூக்கள் நிறைந்த குருக்கத்தி. காமன் – மன்மதன். காம+ஆயுதம்=காமாயுதம்.

28. கருவிக் கார்-மின் இடி முதலியவற்றின் தொகுதியையுடைய மேகம் ; சூன்முதிர்ந்த மேகமுமாம்.

29. தரங்கம் - அலைகள். இரங்கும் - ஒலிக்கின்ற. சுரும்பு - வண்டு. கோடு - பூங்கொம்பு.

30. இல்லில் - வீடுகளில். வேடை - வெப்பம். கன்றும் (நடத்தலால்) கன்றிய. சேடியவர் - தோழியர்.

கடிகொள் பனிநீர் தெளித்து வேடை தணித்துங் கன்றும்
அடிகள் பிடித்துஞ் சேடி யவர்கைக் குதவி யாவார். 30

மைவார் தடங்கண் மடவார் வளைப்பார் கொம்பின் மலரைக்
கொய்வார் குமிழ்மோந் துயிர்ப்பார் குழையுஞ் செவியுங் குழலும்
பெய்வார் மகிழ்ச்சி செய்வார் பேரா மையல் கூர
எய்வார் கணைபோற் றைப்பக் கொழுநர் மார்பத் தெறிவார். 31

மூத்தேர் நகையார் வளைப்ப முகைவிண் டலர்பூங் கொம்பர்ப்
புத்தேள் வண்டும் பெடையும் புலம்பிக் குழலிற் புகுந்து
தெத்தே யெனப்பாண் செய்து தீந்தே னருந்துந் துணையோ
டொத்தே ழிசைபா டிக்க ளுண்ணும் பாண ரொத்தே. 32

இம்பர்வீ டளிக்குந் தெய்வ மகளிரே யென்பார் கூற்றம்
வம்பல மெய்யே போலும் வளைக்கையார் வளைப்பத் தாழ்ந்து
கம்பமுற் றடிப்பூச் சிந்தி மலர்முகங் கண்ணீர் சோரக்
கொம்பரும் பணிந்த தென்று லுலகியல் கூறற் பாற்றே. 33

மைக்கணு ளொருத்தி யெட்டா நிமிர்கொம்பைவளைக்குந்தோறுங்
கைக்குநேர் படாமை வாடுங் கடிமலர்க் கொடிபோ னிற்பத்
தைக்கும்பூங் கணைவே ளன்ன னொருமகன் றலைப்பட் டென்னை
எய்க்கின்றாய் தோண்மே லேறிப் பறியென வேந்தி நின்றான். 34

தையலா ளொருத்தி யெட்டா மலர்க்கொம்பைத் தளிர்க்கைநீட்டி
ஐயநுண் மருங்கு னோவ வருந்தலு மாற்றாக் கேள்வன்

---

31. குமிழ் மோந்து - குமிழம்பூப்போன்ற மூக்கினால் மோந்து. பெய்வார் - சூடுவார்கள். இங்கு, மலர் சூடுதலும் எறிதலும் கலவிக் குறிப்பை உணர்த்தின.

32. புத்தேள் வண்டு - புதிய வண்டு. புலம்பி - (நிலை குலைந்து) ஆரவாரஞ்செய்து.

33. இம்பர் வீடளிக்குந் தெய்வ மகளிரேயென்பார் - இவர் உலகாயதர்; இதனை, "இம்மையின் முத்திக், கதியருள்கிற்பது காமரு லோகாயதம்" என்பதனாலும் உணர்க. கூற்றம் - உரை. கம்பம் - நடுக்கம்.

34. வேள் அன்னான் - மன்மதனையொத்த ஒரு ஆண்மகன். தலைப்பட்டு - எதிர்ப்பட்டு. எய்க்கின்றாய் - இளைத்திருக்கின்றாய். இங்கு வரைவின் மகளிர் செயல் கூறப்பட்டுள்ளது.

35. ஐயம் - (காண்போர்க்கு உண்டோ இல்லையோ என்னும்) சந்தேகத்தை (விளைக்கும்). முத்தம் கொழிப்ப - முத்துப்போல நீர் உகும்படி.

ஒய்யென விதுவு மென்னை யூடிய மகளி ரேயோ
கொய்யென வளைத்து நின்றான் கண்முத்தங் கொழிப்ப நின்றான். 35

மைக்குழ லொருத்தி காதில் வட்டப்பொன் னோலை யூடே
திக்கய மனையான் கொய்த செருந்திப்பூச் செருகி நோக்கி
இக்குழை யழகி தென்றா னிடு[1]மெங்கைக் கிடுதி யென்னா
அக்குழை யோடும் விசி யன்பனுக் கலக்கண் செய்தாள். 36

மயிலிளம் பெடையன் னாளோர் மாதர்மாங் குடம்பை செல்லுங்
குயிலிளம் பெடைதன் னாவிச் சேவலைக் கூவ நோக்கி
அயிலிளங் களிறன் னானைக் கடைக்கணித் தளியுந் தேனும்
பயிலிளஞ் சோலை மாடோர் மாதவிப் பந்தர் சேர்ந்தாள். 37

பாசிழை யொருத்தி யாற்றாப் புலவியாள் பைந்தா ரான்முன்
பூசகில் வாசங் காலிற் போக்கியும் புனைபூண் காஞ்சி
ஓசையைச் செவியி லுய்த்துங் கலவியி னுருவந் தீட்டுந்
தூசினை யுடுத்தும் போர்த்துந் தூதுவிட் டவள்போ னின்றாள். 38

வாய்ந்தநாண் மலர்கொய் திவான் மெய்யிலம் மலர்த்தேந் தாது
சாந்தமான் மதம்போற் சிந்திக் கிடப்பவோர் [2]தையல் யாரைத்
தோய்ந்தசாந் தென்றா னுள்ளத் துன்னையுஞ் சுமந்து கொய்த
ஆய்ந்தசண் பகத்தா தென்றா னெய்சொரி யழலி னின்றாள். 39

பிணியவிழ் கோதை யாளோர் பேதைதன் பதிதன் னூடல்
தணியவந் தடியில் வீழத் தன்னிழ லனையான் சென்னி

---

36. திக்கயம் அனையான் - திக்கு யானையையொத்த ஒரு ஆடவன். எங்கை - என்தங்கை பரத்தை. அலக்கண் - துன்பம்.

37. மாங்குடம்பை - மாமரத்திலுள்ள கூடு. கடைக்கணித்து - கடைக்கண்ணால் சமிக்கை செய்து. அளி - ஆண் வண்டு. தேன் - பெண் வண்டு.

38. புலவி - சிறு பிணக்கு, ஊடல். இங்குத்தலைவி தன் கணவனிடத்துச் சிறிதும் தவறில்லாதிருக்க இன்பங் காரணமாக ஊடல் கொண்டாள் என்பதாம்.

39. ஈவான் - கொடுக்கும் ஒரு ஆடவன். உன்னையும் என்னும் உம்மை தலைவன் கருத்தில் உயர்வு சிறப்பும், தலைவி கருத்தில் இறந்தது தழீஇய எச்சமும் தோன்ற நின்றது.

40. பிணி - கட்டு. சென்னிமணியிடை - தலையில் அணிந்த சூடாமணியில். கண்டு - (பெண்ணின் வடிவம் தோன்றுதலைப்) பார்த்து. பரிவு - துன்பம்.

பா-ம்—1 வெங்கைக். 2 தையலரரை.

மணியிடைக் கண்டு கங்கை மணாளனை யொப்பீ ரெம்மைப்
பணிவதென் னென்று நக்குப் பரிவுமேற் பரிவு செய்தாள். 40

மதுகைவா ளொருவ னங்கோர் மங்கைதன் வடிவை நோக்கிப்
பதுமமே யடிகை காந்தள் பயோதரங் கோங்கு காவிப்
புதுமலர் விழிவா யாம்பற் போதுநும் மூர லெப்போ
ததனைவாய் திறந்து காட்டிப் போமினென் றடுத்து நின்றான். 41

விடைத்தனி யேறன் னானோர் விடலையோர் வேற்க ணாண்முன்
கிடைத்துநும் மிடத்தெ னெஞ்சங் கெட்டுவந் தொளித்த தல்குற்
றடத்திடை யொளித்த தேயோ தனத்திடை யொளித்த தோபூம்
படத்தினைத் திறந்து காட்டிப் போகெனப் பற்றிச் சென்றான். 42

மாந்தளி ரடியார் சாய்ப்ப வளைந்தபூஞ் சினைவண் டன்னார்
கூந்தலிற் கிடந்த செம்மற் கோதைமேல் வீழ்ந்த கற்பின்
ஏந்திழை யவரை நீத்துப் பலர்நுகர்ந் தெச்சி லாக்கும்
பூந்தொடி யவரைத் துய்க்கும் பேதையர் போன்ற தன்றே. 43

புல்லி மைந்தர் பொருள்கவர்ந் தாரென
வல்லி யன்ன மடந்தையர் கொய்தலின்
அல்லி நாண்மல ரற்றபின் கைப்பொருள்
இல்லி யென்ன விளைத்தன காவெலாம். 44

மையுண் கண்ணியர் மைந்தரொ டம்மலர்
கொய்யுஞ் செல்வ நுகர்ந்து கொழுங்கணும்
மெய்யுந் தோயிற் கொழுநரின் வேற்றுமை
செய்யும் பொய்கை திளைப்பச்சென் றாரரோ. 45

அன்ன மன்னவ ராடுங் கயந்தலை
நன்னர் நீல நளினங் குமுதமென்

---

41. மதுகை - வலிமை. ஓர் மங்கை - இங்குப் பரத்தை. பயோதரம் - கொங்கை. மூரல் - பல்.

42. தனிவிடை ஏறு - ஒப்பற்ற காளை. கிடைத்து-எதிர்சென்று. பூம் படம் - அழகிய ஆடை.

43. செம்மல் கோதை - பழம்பூமாலை, பழம்பூச் செறிந்த கூந்தல். பூந்தொடியவர் - இங்கு விலை மாதர். பேதையர் - அறிவினர்.

•44. பொருள் கவர்ந்தார் என - பொருளைக் கவர்ந்த விலை மாதரைப்போல. அல்லி - அகவிதழ். நாள் மலர் - அன்றலர்ந்த மலர். இல்லி - கைப்பொருள் இல்லாதவன், வறியன்.

45. செல்வம் - இங்கு இன்பம். கொழுநரின் - கணவனைப்போல.

றின்ன வன்றி யெழின்முல்லை சண்பகம்
பொன்னங் கோங்கமும் பூத்தது போன்றதே. 46

குரவ வோதியர் கயந்தலை குறுகுமுன் கயலும்
[1]அரவு மாமையு மலவனு மன்னமு மகன்ற
பருவ ரால்களு மிரிந்தன பகைஞர்மே விட்டு
வருவ ரேயெதிர் நிற்பரோ வலியிழந் தவரே. 47

பண்ணெ னுஞ்சொலார் குடைதொறும் பன்மலர் வீழ்ந்த
தண்ணெ னுந்திரை யலைதொறு நிரைநிரை தாக்கல்
கண்ணு நீலமு முகங்களுங் கமலமும் வாயும்
வண்ண வாம்பலுந் தத்தமின் மலைவன வனைய. 48

கூழை பாசியின் விரிந்திட [2]மகிழ்ந்துநீர் குடையும்
மாழை யுண்கணார் கொங்கையு முகங்களு மருங்கர்
சூழ ரும்பொடு மலர்ந்தசெந் தாமரைத் தொகுதி
ஆழ்த ரங்கநீ ரிடைக்கிடந் தலைவன வனைய. 49

தூய நீர்குடைந் தேறுந்தன் றுணைவியைத் துணைவன்
வாயுங் கண்களும் வேறுற்ற வண்ணங்கண் டென்கண்
ஏய வின்னுயி ரனையவ ளெங்குளா ளென்றான்
காயும் வேற்கணாள் முலைகுளிப் பாட்டினாள் கண்ணீர். 50

---

46. கயந்தலை - பொய்கை. நன்னர் - இனிமை. நளினம் - தாமரை. இங்கு, முல்லை, சண்பகம், கோங்கு என்பன, நீர் விளையாடும் பெண்களது பல், மேனி, தனம் என்பனவற்றை உணர்த்தி நின்றன : உவமையாகுபெயர், இலக்கணையுமாம்.

47. அலவன் - நண்டு. கயல் கண்ணுக்கும், பாம்பு இடைக்கும், ஆமை அல்குலுக்கும், நண்டு முழந்தாளுக்கும், வரால்கள் முழங்கால்களுக்கும் முன்னரே தோற்று நீர்நிலையை அடைந்தமையால், ‘அகன்ற’, ‘இரிந்தன’ என்றார்.

48. குடைதொறும் -(நீரில்) மூழ்குந்தோறும். தத்தமில் - தங்கள் தங்களுக்குள்ளே. மலைதல் - போர் செய்தல்.

49. கூழை - கூந்தல். மாழை - மாவடுவின் பிளவு.

50. வாயும் கண்களும் வேறுபடுதலாவது, நீரில் மூழ்கியதால் செந்நிறமான வாய் வெண்ணிறமாகவும், வெண்ணிறமான கண்கள் செந்நிறமாகவும் மாறுதலாம்.

பா-ம்—1 அரவும் யாமையு. 2 மலர்ந்து நீர்.

மங்கை நல்லவ ளொருத்திநீ ராடுவான் மகிழ்நன்
அங்கை பற்றின ளேகுவா ளவன்குடைந் தேறும்
பங்க யக்கணு ளொருத்தியைப் [1]பார்த்தலுஞ் சீசீ
எங்கை யெச்சினீ ராடலே னெனக்கரை நின்றாள். 51

வனைந்த பைங்கழ லான்புன லாடலின் மார்பின்
நனைந்த குங்குமத் தலையெறி நளினமொட் டழுந்தப்
புனைந்த கொங்கையால் வடுப்படப் பொறித்தவள் யாரென்
றினைந்த ழுங்கினு ணெய்சொரி யெரியென வொருத்தி. 52

வீழ்ந்த காதலன் செய்ததீங் காகிய வேலாற்
போழ்ந்த நெஞ்சினுள் புலவிநோய் பொருளவன் காண
ஆழ்ந்த நீரிடை [2]யமிழ்த்துவாள் போன்றயர்ந் தயலே
தாழ்ந்த வன்னத்தை நோக்கிக்கை தாவென விரந்தாள். 53

கரும்பு போன்மொழி யாளொரு காரிகை வதனஞ்
சுரும்பு சூழ்கம லங்களுட் கமலமாய்த் தோன்ற
விரும்பு காதல னையுற்று மெலிந்தனன் மெல்ல
அரும்பு முல்லைகண் டையத்தி னீங்கிச்சென் றணைந்தான். 54

களித்த காதலன் மொக்குள்வாய்த் தன்னிழல் கண்டு
தெளித்து வாணகை செய்யமாற் றாளென்று சீறித்
தளிர்க்கை நீட்டினள் கண்டில டடவினள் சலத்துள்
ஒளித்தி யோவெனு வுதைத்தனள் பேதைமா தொருத்தி. 55

நாறு சுண்ணமென் கலவையு நானமுந் தம்மின்
மாறி வீசிநின் றாடுவார் மாலைதா ழகலத்

51. நீராடுவான்-நீராடும் பொருட்டு. மகிழ்நன்-கணவன். பார்த்தலும் - (உவந்து) பார்த்தபோது.

52. இச்செய்யுள் பெண்கள் மடமையைக் கூறுவதாகும். வனைந்த - அணிந்த. மொட்டு - அரும்பு. இனைந்து (கோபித்து) நொந்து.

53. வீழ்தல் - விரும்புதல். கை தா - உதவிசெய், கைகொடு.

54. காரிகை - பெண். முல்லை - பல்: உவமையாகு பெயர். புன்னகை செய்தமையாற் பற்கள் தோன்றின என்க.

55. மொக்குள் - நீர்க்குமிழி. தெளித்து - தெழித்து, உரப்பி. சலத்துளொளித்தியோ-கோபத்தால் உள்ளே மறைந்தனையோ, நீருள் மறைந்தனையோ. (சலம் - கோபம், நீர்.)

பா-ம்—1 பார்த்தனன் சீசீ.

தூறு பாடற வந்தரத் தளிகவர்ந் துண்ப
ஆறு செல்பவர் பொருள்வெளவு மரட்டரே போல. 56

கொய்யு நீலமுங் கமலமுங் கொண்டுகொண் டனங்கன்
எய்யும் வாளியி னெறிவரா லெறிந்திடு மலரைக்
கையி னூற்புடைத் தெறிந்தவர் கதிர்முகம் படக்கண்
டைது வாணகை செய்தக மகிழ்ச்சியு ளாழ்வார். 57

வாச மென்பனி நீரொடு சுண்ணமும் வாரி
வீசு வாரிளம் பிடியொடு வேழமா நிரைபோற்
காசு லாந்தொடி [1]வில்லிடக் கைகளா லள்ளிப்
பூசு சாந்தவை யழிந்திடப் புனிதநீ ரிறைப்பார். 58

அப்பெ ரும்புனற் றடங்குடைந் தாடுவா ராயத்
தொப்ப ருந்தனி யொருமக ளொருவன்றன் முகத்துத்
துப்பை வென்றசெந் துவரிதழ்ச் செய்யவாய்த் தூநீர்
கொப்ப ளித்தன ளாம்பலந் தேனெனக் குடித்தான். 59

ஆழ மவ்விடைச் செல்லலை நில்லென வடுத்தோர்
வேழ மன்னவன் விலக்குவான் போலொரு வேற்கண்
ஏழை தன்னைக்கை யால்வளைத் தேந்திவண் டறைதார்
சூழு மார்பனைத் திரதிதோ டோய்ந்தவ னெந்தான். 60

மாசி னூனமுஞ் சூடிய மாலையு மெய்யிற்
பூசு சாந்தமு மாரமும் பொய்கைக்குக் கொடுத்து

---

56. ஊறுபாடு - கவலை, இடையூறு. அந்தரம் - ஆகாயம், கூட்டம். அரட்டர் - குறும்பர்; இங்கு, ஆறலைப்போர்.

57. எறிவார் - (ஆடவரும் மகளிரும்) எறிவர். புடைத்து - தகைத்து. ஐது - அழகியது.

58. இளம்பிடியொடு வேழமா நிரைபோல - இளம் பெண் யானையுடன் ஆண் யானையின் கூட்டங்கள் (நீரையள்ளி வீசி விளையாடுதல்) போல. வில் - ஒளி.

59. ஆயம் - பெண்கள் கூட்டம். துப்பு - பவளம்.

60. அவ்விடை (இறங்கும்) அந்நீர்நிலை. செல்லலை - (அங்குச்) செல்லற்க.

61. அம்புயம் வாசமும் மயங்க - ஆம்பல் முதலிய மலரின் வாசமுமே அன்றித் தாமரை மலரின் வாசமும் கலந்து மயங்க. வாசமும், உம்: இறந்தது தழீஇய எச்சம். மைந்தர் - இங்குக், கணவர்.

பா-ம்—1 வில்விடக்.

வாச மெய்யினி லம்புய வாசமு மயங்க
ஆசை மைந்தரோ டிளையவ ரகன்கரை யடைவார். 61

தைய லார்சிலர் நனைந்தநுண் டானையுட் பொதிந்த
மெய்யெ லாம்வெளிப் படக்கரை யேறுவான் வெள்கி
ஐய தாபொலந் துகிலென வன்பரைக் கூய்க்கண்
செய்ய மாயனைக் கேட்குமாய்ச் சிறுமிய ரொத்தார். 62

உலத்தை வென்றதோ ளாடவ ருச்சிமேற் பொறித்த
அலத்த கத்தொடு குங்கும மளைந்துசெம் புனலாய்
மலர்த்த டங்குடைந் தவர்க்கு[1]நீ ராஞ்சன வட்டக்
கலத்தை யொத்தன [2]சுற்றிநின் றுறொத்த [3]கடிக்கா. 63

பட்டும் பன்னிறக் கலிங்கமும் பன்மணிக் கலனுங்
கொட்டுஞ் சாந்தமு நானமுங் குங்குமச் சேறுங்
கட்டுந் தாமமுந் தமதுகட் டழகெலாங் கவர
மட்டுண் கோதைய ராடவர் மனமெலாங் கவர்ந்தார். 64

காவியுங் கமலப் போதுங் கள்ளொழு காம்பற் போதும்
ஆவியுட் பூத்த போல வாடியுட் பூப்ப நோக்கி
ஏவிரண் டன்ன கண்ணு லனங்களை யேவல் கொள்ளும்
பூவிரி பொலங்கொம் பன்னார் புதுமது நுகரப் புக்கார். 65

பொன்னினும் வெள்ளி [4]யானும் பளிங்கினும் புலவன் செய்த
நன்னிறக் கலத்திற் கூர்வா ணட்டென வாக்கிச் சேடி

---

62. தா - கொடு. பொலந்துகில் - பீதாம்பரம், அழகிய ஆடையுமாம். மாயன் - கிருஷ்ணன். ஆயச்சிறுமியர் - கோபிகாஸ்திரீகள்.

63. உளம் - திரண்டகல். அலத்தகம் - செம்பஞ்சுக் குழம்பு. நீராஞ்சனம் - ஆலத்தி.

64. கலிங்கம் - பருத்தி ஆடை : இடவாகு பெயர். கட்டழகு - பேரழகு. ஆடவர் - இங்கு, (தம்தம்) கணவர்.

65. காவி - நீலோற்பலம். ஆவியுள் - தடாகத்துள். ஏ-அம்பு. புக்கார் - புகுந்தார்கள்.

66. புலவன் - சிற்ப நூலில் வல்லோன், கம்மியன். வாக்கி - வார்த்து. தொண்டை அம் கனி - கோவைப் பழம். கள்ளுண்போர் மதுவினை விரலால் தொட்டுத் தெறித்துப் பின்னர் உண்ணுதல் மரபு என்க.

பா-ம்—1 நீராசனம். 2 சுற்றநின். 3 கடிகா. 4 யாலும்.

மின்னனா ரளித்த தேறற் சிறுதுளி விரலிற் றெள்ளித்
துன்னிவீழ் களிவண் டோச்சித் தொண்டையங் கனிவாய் வைப்பார். 66

வள்ளத்து வாள்போல் வாக்கு மதுக்குடந் தன்பாற் பெய்த
கொள்ளைத்[1] தேன் மதுவைக் கொள்ளை கொளவந்த வள்ள மீதென்
றுள்ளத்து வெகுண்டு வைவா ருன்றிமார் பிடப்ப தொத்த
கள்ளைச்சூழ் காளை வண்டு செருச்செயல் காண்ப வொத்த. 67

தணியலுண் டுள்ளஞ் சோரு மொருமக டணிய லுண்பான்
பிணியவிழ் கோதை யாளோர் பெண்மகள் கலத்தில் வாக்குந்
துணிமதுத் தாரை தன்னை வாளெனத் துணிந்து பேதாய்
திணிகதிர் வாளால் வள்ளஞ் சிதைத்தியோ வென்று நக்காள். 68

மலர்தொறுஞ் சிறுதே னக்கித் திரிவண்டு மடவார் தங்கைத்
தலனெடுத் தோச்ச வோடா தழீஇத்தடஞ் சாடி மொய்ப்ப
இலமெனப் பல்லோர் மாட்டு மிரந்திரந் தின்மை நீங்கா
தலமரும் வறியோர் வைத்த நிதிகண்டா லகல்வ ரேயோ. 69

உண்டவ ளொருத்தி கள்வா யுதிக்குந்தன் முகமுங் கண்ணுங்
கண்டுதா மரைகள் வேலை முளைத்ததக் கள்ளை யார
மொண்டுணும் பேதைத் தும்பி யம்மது முளரி வார்தேன்
நுண்டுளி செறிவ தென்று நொடித்துக்கை புடைத்து நக்காள். 70

மங்கையா ளொருத்தி தானுண் டெஞ்சிய மதுவுட் டோன்றுந்
திங்களை நோக்கி யென்னைப் பிரிவின்கட் டீயாச் சுட்டாய்
இங்குவந் தகப்பட் டாயே யினிவிடேன் கிடத்தி யென்று
அங்கொரு வள்ளங் கொண்டு சேமித்தா ளருந்தல் செய்யாள். 71

---

67. தேன் - வாசனை. இடப்பது - பிளப்பது. காண்ப - காண்போர்.

68. தணியல் - கள். துணிமது - தெளிந்த கள். வள்ளம் - கிண்ணம். நக்காள் - சிரித்தாள்.

69. தேன் நக்கித் திரி வண்டு - மதுத்துளியை நக்கி (வயிறு நிரம்பாமல்) திரிகின்ற வண்டு. தடஞ்சாடி - பெரிய மதுச்சாடி. வைத்த நிதி - சேமித்து வைத்த செல்வம்.

70. கள்வாய் உதிக்கும் - கள்ளின்கண் தோன்றும். கள் வேலை - மதுக்கடல். நொடித்தல் - சொல்லுதல்.

71. தோன்றும் - பிரதிபலிக்கும். பிரிவின்கண் - தலைவனைப் பிரிந்து நின்ற காலையில். சேமித்தல் - காவல் செய்தல்; மூடி வைத்தல்.

பா-ம்—1 தெண்மது. (தென் - தெளிவு).

வெவ்விய நறவ முண்ட விளங்கிழை யொருத்தி கையிற்
கௌவிய வாடி தன்னிற் கருங்கய னெடுங்கட் சேப்புங்
கொவ்வைவாய் விளர்ப்பு நோக்கி யென்னலங் கூட்டுண் டேகும்
ஔவிய மனத்தான் யாரென் றயர்கின்றா ளயலா ரெள்ள. 72

ஒருத்திகள் ளுண்கின் றாடன் னுருவமந் நறவுட் டோன்ற
ஒருத்தியென் னுடன்வந் துண்பாள் காணென வுண்ட தோழி
ஒருத்திவந் தென்செய் வாடன் னுருவமு நோக்கிப் பேதாய்
ஒருத்தியோ விருவ ரென்றா ளெச்சிலென் றுகுத்து நக்காள். 73

சாடியு ணறவ முண்டா டன்னுரு வேறு பாட்டை
ஆடியு ணோக்கி நானோ வல்லனோ வெனைத்தான் கைக்கொண்
டோடினர் பிறரு முண்டோ வுயிரன்னான் வந்திங் கென்னைத்
தேடினன் செய்கே னென்னைத் தேடித்தா சேடி யென்றாள். 74

களித்தவ ளொருத்தி நின்ற வாடியுட் கணவன் றன்பின்
ஒளித்தவ னுருவுந் தானு நேர்பட வுருத்து நோக்கித்
துளித்தகண் ணீர ளாகி யேதிலா டோடோய்ந் தின்பங்
குளித்தனை யிருத்தி யோவென் றுதைத்தனள் கோப மூண்டாள். 75

இளம்புளிந் தயிர்வி ராய வின்சுவை பொதிந்த சோறு
வளம்பட விருந்தி னோடு மருந்துவார் வசந்த வீணை
களம்படு மெழாலி னோடு கைவிர னடாத்திக் காமன்
உளம்புகுந் தலைப்ப வெண்ணெய்ப் பாவைபோ லுருகிச் சோர்வார்.

---

72. சேப்பு - செந்நிறம். விளர்ப்பு - வெண்ணிறம். கூட்டுணல் - கொள்ளைகொள்ளல்.

73. நறவு - கள். உண்ட தோழி - முன்னரே மதுவுண்டு மயங்கிய தோழி. முன்னர்க் கூறியது மடமையாலும் பின்னர்க் கூறியது மயக்காலும் எனக்கொள்க.

74. ஆடி - நிலைக்கண்ணாடி. செய்கேன் - செய்வேன் : எதிர்கால வினைமுற்று.

75. களித்தவள் - கள்ளுண்டு மகிழ்ந்தவள். உருத்து - கோபித்து.

76. வசந்த வீணை - வசந்த காலத்திற்குரிய வீணை ; வசந்தம் - சித்திரை மாதம் : ஓரிராகமுமாம். கைவிரல் நடாத்தல் - வாசித்தல். வசந்தவீணை கைவிரல் நடாத்தி எனக் கூட்டுக. களம்படுமெழால் - சாரீரவோசை.

77. கைவினை வல்லோன் - சிற்பத்தொழிலில் வல்லவன். காந்தம் - சந்திரகாந்தம்.

இவ்விள வேனிற் காலத் தின்னுயிர்த் துணைவி யோடும்
செவ்விய செங்கோ னேமிச் செண்பக மாற னோர்நாள்
கைவினை வல்லோன் செய்த கதிர்விடு காந்தக் குன்றில்
வெவ்விய வேடை நீப்பா னிருந்தனன் வேறு வைகி. 77

மாந்தளி ரீன்று கோங்கு வண்டளா வரும்பித் தண்டேங்
காந்தள்செங் கமல மாம்பல் [1]சண்பகங் கழுநீர் பூத்துச்
சாய்ந்தமென் கொடியுந் தானுந் தனியிடத் திருப்பா னேரே
[2]வாய்ந்ததோர் நாற்றந் தோன்ற வசைந்தது வசந்தத் தென்றல்.

வெவ்விய வேலான் வீசும் [3]வாசமோந் தீது வேறு
திவ்விய வாச மாக விருந்தது தென்றல் காவில்
வெளவிய வாச மன்று காலுக்கும் வாச மில்லை
எவ்வியல் வாச மேயோ விதுவென வெண்ணங் கொள்வான். 79

திரும்பித்தன் றேவி தன்னை நோக்கினான் றேவி யைம்பால்
இரும்பித்தை வாச மாகி யிருந்தது கண்டிவ் வாசஞ்
சுரும்பிற்குந் தெரியா தென்னாச் சூழ்ந்திறும் பூது கொண்டு
தரும்பித்தைக் கியல்போ செய்கை யோவென வையங் கொண்டான். 80

ஐயுறு கருத்தை [4]யாவ ராயினு மறிந்து பாடல்
செய்யுந ரவர்க்கே யின்ன வாயிரஞ் செம்பொ னென்றக்
கையுறை வேலா னீந்த பொற்கிழி கைக்கொண் டேகி
மெய்யுணர் புலவர் முன்னாத் தூக்கினார் வினைசெய் மாக்கள். 81

---

78. தளவு - முல்லை. ஈன்று அரும்பிப் பூத்துச் சாய்ந்த கொடி ஒன்றுளதேல் அதுபோன்ற பட்டத்து அரசி என்க.

79. திவ்விய - சுவர்க்கத்திற் பிறப்பது; (திவ் - சுவர்க்கம்; ய - பிறப்பது) தெய்வத்தன்மையுடைய.

80. ஐம்பால் இரும்பித்தை - ஐந்து பகுப்பாக முடிக்கப்படும் பெருமை வாய்ந்த கூந்தல். ஐம்பால் - முடி, கொண்டை, சுருள், குழல், பனிச்சை என்ற ஐந்து பகுப்பு; (முடி - மயிரை உச்சியில் முடிவது; கொண்டை - பக்கத்தில் முடிவது; சுருள் - பின்னே செருகுவது. குழல் - சுருட்டி முடிவது; பனிச்சை - பின்னிவிடுவது.) பித்தை - கூந்தல்.

81. ஐயுறு கருத்து - சந்தேகங் கொண்ட கருத்து. பொற்கிழி - பொன் முடிப்பு.

பா-ம்—1 மல்லிகை. 2 ஆய்ந்ததோர். 3 வாச மோர்ந்து. 4 யாரை யாயினும்.

வங்கத்தார் பொருள்போல் வேறு வகையமை கேள்வி நோக்கிச்
சங்கத்தா ரெல்லாந் தம்மிற் றனித்தனி தேர்ந்து தேர்ந்து
துங்கத்தார் வேம்ப னுள்ளஞ் சூழ்பொரு டுழாவி யுற்ற
பங்கத்தா ராகி யெய்த்துப் படருறு மனத்த ரானார். 82

அந்த வேலையி லாதி சைவரில்
வந்த மாணவன் மணஞ்செய் வேட்கையான்
முந்தை யாச்சிம முயலும் பெற்றியான்
தந்தை தாயிலான் றருமி யென்றுளான். 83

ஒருவ னான்முகத் தொருவன் மார்புறை
திருவ னாடருந் தேவ னாலுரு
அருவ நாலகன் றானைத் தன்கலி
வெருவ நாடிமுன் வீழ்ந்து வேண்டுவான். 84

தந்தை தாயிலேன் றனிய னாகிய
மைந்த னேன்புது வதுவை வேட்கையேன்
சிந்தை நோய்செயுஞ் செல்ல றீர்ப்பதற்
கெந்தை யேயிது பதமென் றேத்தியே. 85

நெடிய வேதநூ னிறைய வாகமம்
முடிய வோதிய முறையி [1]னிற்கெனும்

82. பங்கத்தாராகி - சிறுமையுற்றவராகி; இது பாண்டியன் கருத்துப் புலப்படப்பாடியும் பொற்கிழி பெறாததனால் ஏற்பட்டது. படர் - துன்பம்.

83. ஆதி சைவர் - சிவப்பிராமணர். மாணவன் - பிரமசாரி; இவன் வேதம் ஓதுதலும் விரதங்காத்தலுமாகிய ஒழுக்கநெறியில் நிற்போன். தருமி - தருமத்தையுடையவன்; தருமம் - ஒழுக்கம். முந்தை யாச்சிமம் - பிரமசரியம். ஆச்சிரமம் ஆச்சிமம் என்றாயது. முயலும் - வழுவாது ஒழுகும்.

84. ஒருவன் - தனக்கோர் ஒப்புயர் விகந்து நின்ற சிவபெருமான். திருவன் - இலக்குமியையுடையவன்; திருமால். நாடு அருந்தேவன் - காண்டற்கரிய தேவன், சிவபெருமான். நால்உரு - பிரமன், திருமால், உருத்திரன், மகேசன். நால் அருவம் - விந்து, நாதம், சத்தி, சிவம். கலி - துன்பம்.

85. புது வதுவை - புதிய கலியாணம். செல்லல் - வறுமை, துக்கம். பதம் - சமயம்.

பா-ம்—1 நிற்பினும், நிற்கினும்.

[1]வடிவி லில்லற வாழ்க்கை யின்றிநின்
அடிய ருச்சனைக் கருக னுவனே. 86

ஐய யாவையு மறிதி யேகொலாம்
வையை நாடவன் மனக்க ருத்துணர்ந்
துய்ய வோர்கவி யுரைத்தெ னக்கருள்
செய்ய வேண்டுமென் றிரந்து செப்பினான். 87

தென்ன வன்குல தெய்வ மாகிய
மன்னர் "கொங்குதேர் வாழ்க்கை" யின்றமிழ்
சொன்ன லம்பெறச் சொல்லி நல்கினார்
இன்ன [2]தீர்ந்தவ னிறைஞ்சி வாங்கினான். 88

பொற்ற [3]னிச்சடைப் புவன நாயகன்
சொற்ற பாடல்கைக் கொண்டு தொன்னிதி
பெற்றெ டுத்தவன் போன்று பீடுறக்
கற்ற நாவலர் கழக நண்ணினான். 89

கல்வி யாளர்தங் கையி னீட்டினான்
வல்லை யாவரும் வாங்கி வாசியாச்
சொல்லின் செல்வமும் பொருளுந் தூக்கியே
நல்ல நல்லவென் றுவகை நண்ணினார். 90

---

86. நிற்கெனும் - நிற்பேனாயினும். வடிவில்-நினது திருவுருவில் பாதபூசை செய்வதற்கு.

87. யாவையும் அறிதியே - இது முற்று முணர்தல் என்ற குணம்.

88. கொங்குதேர் வாழ்க்கை யின் தமிழ் - "கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி - காமஞ் செப்பாது கண்டது மொழிமோ - பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற் - செறியெயிற் றரிவை கூந்தலின் - நறியவு முளவோநீ யறியும் பூவே" என்பது. தமிழ் - இங்குச் செய்யுள்.

89. இறைவன் அருளிய பாசுரத்தால் அன்றே பொன்முடி பெற்றவன் ஒத்தான் என்பார், "தொன்னிதி பெற்றெடுத்தவன் போன்று' என்றார். நாவலர் கழகம் - புலவர்கள் விளங்கும் தமிழ்ச் சங்கம்.

90. சொல்லின் செல்வமும் பொருளும்-சொற்சுவையும் பொருட் சுவையும்.

பா-ம்—1 வடுவி. 2 தீர்பவ. 3 னிர்ச்சடைப்.

அளக்கில் கேள்வியா ரரசன் முன்புபோய்
விளக்கி யக்கவி விளம்பி னூர்கடன்
உளக்க ருத்துநே ரொத்த லாற்சிரந்
துளக்கி மீனவன் மகிழ்ச்சி தூங்கினான். 91

உணர்ந்த கேள்வியா ரிவரொ டொல்லைபோய்ப்
புணர்ந்த வாயிரம் பொன்னு மின்றமிழ்
கொணர்ந்த வேதியன் கொள்க வின்றெனா
மணந்த தாரினான் மகிழ்ந்து நல்கினான். 92

வேந்த னேவலால் விபுதர் தம்மொடும்
போந்து மீண்டவைப் புறம்பு தூங்கிய
ஆய்ந்த பொற்கிழி யறுக்கு நம்பியை
நேர்ந்து கீரனில் லெனவி லக்கினான். 93

குற்ற மிக்கவிக் கென்று கூறலுங்
கற்றி லானெடுங் காலம் வெம்பசி
உற்ற வன்கலத் துண்ணு மெல்லைகைப்
பற்ற வாடினான் பண்பு பற்றினான். 94

உலர்ந்த நெஞ்சுகொண் டொதுங்கி நாயகன்
நலந்த ருங்கழ னண்ணி னானவன்
மலர்ந்த பாடல்கொண் டறிஞர் வைகிடத்
தலர்ந்த சிந்தைகொண் டடைந்த மைந்தனே. 95

செய்யுள் கொண்டுபோய்த் திருமுன் வைத்துளப்
பையுள் கொண்டவப் பனவ னென்னைநீ

---

91. அளக்கில் - அளவில்லாத. அளக்கு: தொழிற்பெயர். கேள்வியார் - நூற் கேள்வியையுடைய சங்கப்புலவர்கள்.

92. இன்றமிழ் கொணர்ந்த வேதியன் - தருமி என்னும் சிவப் பிராமணன். தமிழ் - தமிழ்ச் செய்யுள்.

93. விபுதர் - சங்கப்புலவர். அவை - தமிழ்ச் சங்கம். நம்பி - ஆண்மகனில் சிறந்தவன்; தருமி. நேர்ந்து - எதிர்த்து.

94. கற்றிலான் - பொருளிலக்கணங் கற்றுணராத தருமி.

95. அவன் - சோமசுந்தரக் கடவுள். அலர்ந்த சிந்தை - பேரானந்தம்.

96. பையுள் - கவலை. பனவன் - (சிவப்) பிராமணன்; தருமி, மை - கருமை, மேகம். வழுவு பாடல் - குற்றமுள்ள பாடல்.

[1]மையுண் கண்டவிவ் வழுவு பாடலைக்
கையு ணல்கினுய் கதியி லேற்கெனு. 96

வறுமைநோய் பிணிப்பப் பன்னுள் வழிபடு மடியே னின்பாற்
பெறுபொரு ளிழந்தே னென்று பேசிலேன் யார்க்கு மேலாங்
கறைகெழு மிடற்ருேய் நின்றன் கவிக்குற்றஞ் சில்வாழ் நாட்சிற்
றறிவுடைப் புலவர் சொன்னு லாருனை மதிக்க வல்லார். 97

எந்தையிவ் விகழ்ச்சி நின்ன தல்லதை யெனக்கியா தென்னுச்
சிந்தைநோ யுழந்து சைவச் சிறுவனின் றிரங்க யார்க்கும்
பந்தமும் வீடும் வேதப் பனுவலும் பயனு மான
சுந்தர விடங்க னங்கோர் புலவனுய்த் தோற்றஞ் செய்தான். 98

கண்டிகை மதாணி யாழி கதிர்முடி வயிரம் வேய்ந்த
குண்டலங் குடிகொண் டாகத் தழகெலாங் கொள்ளை கொள்ளத்
தண்டமிழ் மூன்றும் வல்லோன் ருனெனக் குறியிட் டாங்கே
புண்டர நுதலிற் பூத்துப் பொய்யிருள் கிழித்துத் தள்ள. 99

விரிகதிர்ப் படாத்திற் போர்த்த மெய்ப்பையு ளடங்கிப் பக்கத்
தெரிமணிக் கடகத் திண்டோ ளிளையவ ரடைப்பை யோடுங்
குருமணிக் களாஞ்சி யம்பொற் கோடிகந் தாங்க முத்தாற்
புரிமதிக் குடைக்கீழ்ப் பொற்காற் கவரிபால் புரண்டு துள்ள. 100

சொல்வரம் பிகந்த பாத மென்பது தோன்ற வேதம்
நல்லபா துகையாய்ச் சூட நவின்றன கற்றுப் பாட

---

97. பிணிப்ப - கட்டி வருத்த. பேசிலேன் - குறைகூறிற்றிலேன். சில் - சில.

98. சைவச் சிறுவன்-ஆதிசைவப் பிரமசாரியாகிய தருமி. பயன்-வேதத்தின் பயன்.

99. புண்டரம் - திரிபுண்டரம். பொய்யிருள் - நிலையில்லாத அஞ்ஞான விருள், பொய்க்குக் காரணமாகிய ஆணவம், மாயை, கன்மம் என்றலுமாம். மும்மல நீக்கத்துக்கும் சிவத்துவ விளக்கத்துக்கும் அறிகுறியாகவே திரிபுண்டரம் அணிதல் ஆகும்.

100. மெய்ப்பை - நிலையங்கி. இளையவர் - வாலிபர். கோடிகம்-பூந்தட்டு.

101. வேதம் சொல்வடிவம் நீங்கிப் பாதுகை வடிவமாய் வந்த படியால் சூடப்பெற்றது ; இன்றேல் அணுகுதற்கும் அரிது என்பார், "சொல்வரம்பிகந்த பாதம்......பாதுகையாய்ச் சூட" என்ருர். மறை

பா-ம்—1 மையுள் (உன்னுதல் - கருதுதல்)

வல்லவர் மறையி னாறு மனுமுதற் கலைபோற் பின்பு
செல்லநூ லாய்ந்தோர் வைகுந் திருந்தவைக் களத்தைச் சேர்ந்தான்.

ஆரவை குறுகி நேர்நின் றங்கிருந் தவரை நோக்கி
யாரைநங் கவிக்குக் குற்ற மியம்பினா ரென்னா முன்னங்
கீரனஞ் சாது நானே யினத்தினே னென்றா னின்ற
சீரணி புலவன் குற்றம் யாதெனத் தேராக் கீரன். 102

சொற்குற்ற மின்று வேறு பொருட்குற்ற மென்றான் றூய
பொற்குற்ற வேணி யண்ணல் பொருட்குற்ற மென்னை யென்றான்
தற்குற்றம் வருவ தோரான் புனைமலர்ச் சார்பா லன்றி
அற்குற்ற குழற்கு நாற்ற மில்லையே யென்றா னையன். 103

பங்கய முகமென் கொங்கைப் பதுமினி குழலோ வென்ன
அங்கது மனைத்தே யென்றா னலவா யுடையான் றெய்வ
மங்கையார் குழலோ வென்ன வன்னது மந்தா ரத்தின்
கொங்கல ரளைந்து நாறுங் கொள்கையாற் செய்கைத் தென்றான். 104

பரவினீ வழிபட் டேத்தும் பரஞ்சுடர் திருக்கா ளத்தி
அரவுநீர்ச் சடையார் பாகத் தமர்ந்தஞா னப்பூங் கோதை

---

யினாறு மனுமுதற்கலை போல் - வேதத்தின் வழியே மனுஸ்மிருதி முதலிய பதினெட்டு ஸ்மிருதிகளும் தொடர்ந்து சொல்லுதல்போல. மறையின் ஆறு - வேதத்தின் அங்கங்களாகிய சிட்சை முதலிய ஆறும் எனப் பொருள் கொள்வாருமுளர். கற்றுப்பாட வல்லவர் கண்ணுதற் புலவர் பின்பு செல்ல என்க.

102. ஆரவை - அருமையான சபை, நிறைந்த சபை. சீரணி - புகழ் வாய்ந்த. பொருளிலக்கணம் உணராதவன் என்பார், 'தேராக் கீரன்' என்றார்

103. பொன்குற்றவேணி - பொன்னின் அழகைப் பறித்த சடை. குற்றல் - பறித்தல். பொன்குற்றவேணி - பொன்னையொத்த என்றலுமாம். அல்குற்ற - இருளைப்பறித்த. இருளையொத்த என்றலுமாம்.

104. பதுமினி - இவள் உத்தம சாதிப்பெண். தெய்வமங்கையர் - இந்திராணி முதலிய தெய்வமகளிர். மந்தாரம் - பஞ்ச தருக்களில் ஒன்று. செய்கைத்து - செயற்கைமணமுடையது.

105. சலம் - பொய். இது வாக்குச்சலம், சாமானிய சலம், உபசாரசலம் என மூவகைப்படும். இங்குக் கூறியது வாக்குச் சலமே ஆகும். ஒரு பொருள் கருதிச் சொல்லியதற்கு வேறு பொருள் கற்பித்துக்கொண்டு தூடணஞ்செய்தல் வாக்குச்சலம் ஆகும்; இங்கே, கூந்தற்கு இயற்கை மணம் உண்டெனக் கருதிச்சொல்லிய பாடலை

இரவினீர்ங் குழலு மற்றே வெனவஃது மற்றே யென்று
வெருவிலான் சலமே முற்றச் சாதித்தான் விளைவு நோக்கான். 105

கூற்றைவார் சடையா னெற்றிக் கண்ணினைச் சிறிதே காட்டப்
பற்றுவா னின்னு மஞ்சா னும்பரார் பதிபோ லாகம்
முற்றுநீர் கண்ணு ளுலு மொழிந்தநும் பாடல் குற்றங்
குற்றமே யென்றான் றன்பா லாகிய குற்றந் தேரான். 106

தேய்ந்த நாண்மதிக் கண்ணியா னுதல்விழிச் செந்தீப்
பாய்ந்த வெம்மையிற் பொறுதுபொற் பங்கயத் தடத்துள்
ஆய்ந்த நாவலன் போய்விழுந் தாழ்ந்தன னவனைக்
காய்ந்த நாவல னிம்மெனத் திருவுருக் கரந்தான். 107

ஆகச் செய்யுள்—2,539

---

மறுத்து, கூந்தற்குப் பூ முதலியவற்றின் செயற்கை மணமே உண்டென வேறு பொருள் கற்பித்துத் தூடணஞ் செய்தமையாகும்.

106. கருணாமூர்த்தி ஆதலால், "கண்ணினைச் சிறிதே காட்ட" என்றார். பற்றுவான் - (தீயினால்) பற்றப்படுவோனாகிய நக்கீரன். உம்பரார் பதி - இந்திரன்.

107. தேய்ந்த நாண் மதி - இளம்பிறைச்சந்திரன். ஆய்ந்த நாவலன் - பல நூல்களை ஆராய்ந்துணர்ந்த நக்கீரன்.

# 53. கீரனைக் கரையேற்றிய படலம்

—o—

மாரனைப்பொடி கண்டவ னந்தண மைந்தனுக்
கார நற்கன கக்கிழி யீந்த தறைந்தனம்
ஏர னத்திரள் சூழ்மல ரோடை யிடத்தினுங்
கீரனைக்கரை யேற்றிய வாறு கிளத்துவாம். 1

தாழ்ந்த வேணிய னெற்றி முளைத்த தழற்கணாற்
போழ்ந்த நாவல னாடக பங்கயப் பொய்கைவாய்
வீழ்ந்த ரும்படர் வேலையில் வீழ்ந்தனன் விம்முறச்
சூழ்ந்த நாவலர் கண்டு பொறாது துளங்குவார். 2

ஏன்ற வேந்த னிலாக்குடி யீட்டமு மின்கதிர்
கான்ற நாயக மாமணி போகிய கண்டியும்
ஆன்ற ஞான மிலாதவர் கல்வியு மானதே
சான்ற கீர னிலாதவை கூடிய சங்கமே. 3

ஐய சொற்பொரு டன்வடி வானவ ராலவாய்
மைத ழைத்த மிடற்றினர் தம்மொடும் வாதுதான்
செய்த விப்பிழை யோபெரி தெப்படி தீருமோ
உய்வ தற்புத மேயென யாவரு முன்னினார். 4

எய்தி வெள்ளி மலைபெயர்த் தானு மிறுத்ததன்
கையில் வீணைதொட் டின்னிசை பாடக் கனிந்தவன்

---

1. பொடிகண்டவன் - நீறாக்கிய இறைவன். அந்தண மைந்தன் - சிவப்பிராமணனாகிய தருமி. ஏர் - அழகு.

2. போழ்ந்த - பிளக்கப்பட்ட. அரும்படர் வேலை - சொல்லுதற்கரிய துன்பக்கடல்.

3. ஏன்ற - (தமக்கு) ஏற்ற. நாயகம் - நடுநாயகம். ஆன்ற - நிறைந்த.

4. சொல் பொருள் தன் வடிவானவர் - சொல்லும் பொருளும் தன் வடிவாகவேயுள்ளவர். அற்புதம் - அரிது.

5. வெள்ளிமலை எய்திப் பெயர்த்தான் - இராவணன். வாள் - சந்திரவாள். தேரோடு வாளும் என்றதனால், இன்னும் மூன்றரைக் கோடி ஆயுளுங் கொள்க.

செய்த தீங்கு பொறுத்தது மன்றித்திண் டேரொடும்
மொய்கொள் வாளுங் கொடுத்தனன் புண்ணிய மூர்த்தியே. 5

யாவ ராலு மகற்றரி திப்பிழை யாவர்க்குந்
தேவ ராமவ ரேதிரு வுள்ளந் திரும்பினுற்
போவ தேயிது வேதுணி பென்று புகன்றுபோய்ப்
பாவ லோர்பரன் முணிமு லிற்பணிந் தேத்துவார். 6

திருத்த னேசர ணஞ்சர ணம்மறைச் சென்னிமேல்
இருத்த னேசர ணஞ்சர ணங்கிறை வேதநூல்
அருத்த னேசர ணஞ்சர ணந்திரு வாலவாய்
ஒருத்த னேசர ணஞ்சர ணங்க ளுனக்குநாம். 7

பாயு மால்விடை மேல்வரு வோய்பல் லுயிர்க்கெலாந்
தாயுந் தந்தையு மாகுநின் றண்ணளி தாமரைக்
கேயு மாதவன் போனல்ல தீய வியற்றினுர்க்
காயு மின்பமுந் துன்பமு மாக்குவ தாதலால். 8

அத்த கற்ற செருக்கி னறிவழி கீரனின்
வித்த கக்கவி யைப்பழு தென்ற விதண்டையான்
மத்த கக்கண் விழித்து வெதுப்பின் மலர்ந்தபொன்
முத்த கக்கம லத்திடை வீழ முடுக்கினாய். 9

இருணி றைந்த மிடற்றடி கேளினி யிப்பிழை
கருணை செய்து பொறுத்தரு ளென்று கபிலனும்
பரண னும்முத லாகிய பாவலர் யாவருஞ்
சரண மென்று விழுந்திரந் தாரடி சாரவே. 10

---

6. இப்பிழை - இத்தவறு ; இது சிவ அபராதம் ஆகும். பாவலோர் - கபிலர், பரணர் முதலிய தெய்வப்புலவர்கள்.

7. திருத்தன் - ஆன்மாக்களைப் பக்குவப் படுத்தித் திருத்துவோன்; தீர்த்தன் என்பது எதுகைநோக்கித் திருத்தன் என்று ஆயது எனக் கொண்டு தூயவுடம்பினன் என்றலுமாம்.

8. மால்விடை - பெரிய இடபம் ; திருமாலாகிய இடபமுமாம். ஆதவன் - சூரியன். நல்ல - நல்வினை. தீய - தீவினை.

9. விதண்டை - வாதத்தில் வெல்லத் தமது பக்கத்தைத் தாபித்த லின்றிப் பிறர்பக்கத்தை இகழ்தல் மாத்திரமான கதை.

10. இருள்நிறைந்த - கருமைமிக்க. மிடறு - கண்டம். இரந்தார் - குறையிரந்தார்கள்.

அக்கீர வேலை யால மயின்றவெங் கருணை வள்ளல்
இக்கீர மழலைத் தீஞ்சொ லிறைவியோ டெழுந்து போந்து
நக்கீரன் கிடந்த செம்பொ னளினப்பூந் தடத்து ஞாங்கர்ப்
புக்கீர மதுரத் தீஞ்சொற் புலவர்தங் குழாத்து ணின்றான். 11

அனற்கணு ேநாக்கி னான்பின் னருட்கணு னோக்க வாழ்ந்த
புனற்கணே கிடந்த கீரன் பொறிபுலன் கரண மெல்லாங்
கனற்கணார் தமவே யாகக் கருணைமா கடலி லாழ்ந்து
வினைக்கணே யெடுத்த யாக்கை வேறிலன் புருவ மானான். 12

போதையா ருலக மீன்ற புனிதையார் பரஞா னப்பூங்
கோதையார் குழற்குத் தீங்கு கூறிய கொடிய நாவின்
றீதையார் [1]பொறுப்ப ரேயோ வவரன்றித் திருக்கா ளத்திக்
காதையார் குழையி னாரைக் காளத்தி கயிலை யென்னு. 13

எடுத்தசொன் மாறி மாறி யுசையநே ரிசைவெண் பாவாற்
றொடுத்தவந் தாதி சாத்தத் துணைச்செவி மடுத்து நேர்வந்
தடுத்தவன் கையைப் பற்றி யகன்கரை யேற்றி னார்தாள்
கொடுத்தெழு பிறவி வேலைக் கொடுங்கரை யேற்ற வல்லார். 14

கைதந்து கரையே றிட்ட கருணையங் கடலைத் தாழ்ந்து
மைதந்த கயற்க ணாளை வந்தித்துத் தீங்கு நன்கு

---

11. அக்கீரவேலை - அந்தப்பாற்கடல்; கீரம் - பால்; இது க்ஷீரம் என்பதன் திரிபு. நக்கீரன் - சிறந்த சொல்லையுடையவன்; (சொற்கள்-செஞ்சொல், ஆக்கச்சொல், குறிப்புச்சொல் என மூவகைப்படும்.)

12. கருணைமா கடல்-திருவருளாகிய பெரிய கடல். வினைக்கண்-இருவினையால்: உருபுமயக்கம்.

13. போதையார் - ஞானவடிவினர்: "போதையார் பொற்கிண்ணத்தடிசில்" என்பது திருக்கழுமலம்-திருஞானசம்பந்தர் தேவாரம். காதையார் - காதிற்பொருந்திய.

14. எடுத்தசொல் - சோமசுந்தரக்கடவுள் வியந்து கூறியருளிய கயிலை, காளத்தி என்னும் சொற்கள். மாறி மாறி என்றது ஒரு பாசுரத்தில் கயிலையையும் மற்றொரு பாசுரத்தில் காளத்தியையும் அமைத்தமையை; அந்தாதி - இது 'கயிலைபாதி காளத்தி பாதி அந்தாதி' ஆகும்.

15. கைதந்து - திருக்கைகொடுத்து. ஏறிட்ட - ஏற்றிட்ட. செய்தந்தோர்க்கு - செய்தோர்க்கு. இகலும் அன்பும் - கோபமும்

[1] பா-ம்—1 பொறுப்பா.

செய்தந்தோர்க் கிகலு மன்புஞ் செய்தமை பொருளாச் செய்யுட்
பெய்தந்து பாடு கின்றான் பிரானருள் நாடு கின்றான். 15

அறனிலா னிழைத்த வேள்வி யழித்தபே ராண்மை போற்றி
மறனிலாச் சண்டிக் கீந்த மாண்பெருங் கருணை போற்றி
கறுவிவீழ் கூற்றைக் காய்ந்த கனைகழற் கமலம் போற்றி
சிறுவனுக் கழியா வாழ்நா ளளித்தருள் செய்தி போற்றி. 16

சலந்தர னுடலங் கீண்ட சக்கரப் படையாய் போற்றி
வலந்தரு மதனை மாயோன் வழிபடக் கொடுத்தாய் போற்றி
அலர்ந்தசெங் கமலப் புத்தே ணடுச்சிர மரிந்தாய் போற்றி
சிலந்தியை மகுடஞ் சூட்டி யரசருள் செல்வம் போற்றி. 17

[1]திரிபுரம் பொரிய நக்க சேவகம் போற்றி மூவர்க்
கருளிய தலைமை போற்றி யனங்கனை யாகந் தீய
எரியிடு நயனம் போற்றி யிரதிவந் திரப்ப மீளக்
கரியவன் மகனுக் காவி யுதவிய கருணை போற்றி. 18

[2]நகைத்தட வந்த வந்த நகுசிரந் திருகி வாங்கிச்
சிகைத்திரு முடிமேல் வைத்த திண்டிறல் போற்றி கோயில்
அகத்தவி சுடரைத் தூண்டு மெலிக்கர சாள மூன்று
சகத்தையு மளித்த தேவர் தம்பிரான் சரணம் போற்றி. 19

பொருப்பகழ்ந் தெடுத்தோன் சென்னி புயமிற மிதித்தாய் போற்றி
இருக்கிசைத் தவனே பாட விரங்கிவாள் கொடுத்தாய் போற்றி

---

கருணையும். செய்யுட் பெய்தந்து - செய்யுளில் பெய்து. பாடுகின்றான்- (கரையேறித் "தவறுபெரி துடைத்தே" என்று தொடங்கும் 'கோபப் பிரசாதம்' என்னும் நூலைப்) பாடுகின்றான்.

16. அறனிலான் - தக்கன். சண்டி-சண்டேசுர நாயனார். கறுவி- கோபித்து. சிறுவன் - இங்கு, மார்க்கண்டேயன்.

17. நடுச்சிரம் - (ஐந்து சிரங்களில்) நடுநிற்கும் சிரம். சிலந்தியை - சிலந்திக்கு (அதாவது முற் பிறவியில் சிலந்தியாக இருந்து அடுத்த பிறவியில் கோச்செங்கட் சோழனாக வந்தவனுக்கு.)

18. மூவர் - தாரகாக்கன், கமலாக்கன், வித்துன்மாலி என்னும் மூன்று அசுரர். கரியவன் - திருமால்.

19. நகுசிரம் - வெண்டலை. எலிக்கு - எலியினுக்கு (அதாவது முற் பிறவியில் எலியாக இருந்து அடுத்த பிறவியில் மாவலிச் சக்கிர வர்த்தியாக வந்தவனுக்கு.)

பாடம்—1 திரிபுர மெரிய. 2 நகைத்திட.

தருக்கொடு மிருவர் தேடத் தழற்பிழம் பானாய் போற்றி
செருக்குவிட் டவரே பூசை செய்யநேர் நின்றாய் போற்றி. 20

பருங்கைமால் யானை யேனம் பாய்புலி யரிமான் மீனம்
இருங்குறள் யாமை கொண்ட விகல்வலி கடந்தாய் போற்றி
குரங்குபாம் பெறும்பு நாரை கோழியா னலவன் றேரை
கருங்குரீஇ கழுகி னன்புக் கிரங்கிய கருணை போற்றி. 21

சாலநா னிழைத்த தீங்குக் கென்னையுந் தண்டஞ் செய்த
கோலமே போற்றி [1]பொல்லாக் கொடியனே னெடுத்த புன்சொன்
மாலைகேட் டென்னை யாண்ட மலைமகண் மணாள போற்றி
ஆலவா யடிகள் போற்றி யம்மைநின் னடிகள் போற்றி. 22

ஆவ லந்தனே னடியனேற் கருளரு ளென்னாக்
கோவ மும்பிர சாதமுங் குறித்துரை பனுவற்
பாவ லங்கலாற் பரனையும் பங்கிலங் கயற்கட்
பூவை தன்னையு முறைமுறை [2]போற்றியென் றேத்தா. 23

தேவ தேவனைப் பின்பெருந் தேவபா ணியொடுந்
தாவி லேழிசை யேழுகூற் றிருக்கையுஞ் சாத்திப்
பூவர் சேவடி சென்னிமேற் பூப்பவீழ்ந் தெழுந்தான்
பாவ லோர்களுந் தனித்தனி துதித்தனர் பணிந்தார். 24

துதித்த கீரனுக் கின்னருள் சுரந்துநீ முன்போன்
மதித்த நாவலர் குழாத்திடை வதியென மறைநூல்

---

20. பொருப்பகழ்ந்து எடுத்தோன் - இராவணன். இருவர் - பிரம விஷ்ணுக்கள். அவரே - அப்பிரம விஷ்ணுக்களே.

21. ஏனம் - (பன்றி), மீன், குறள், யாமை இவைகள் திருமால் கொண்ட வராகாவதாரம், மச்சாவதாரம், வாமனாவதாரம், கூர்மாவதாரங்களைக்குறிக்கும்.

22. சால - மிகவும். மாலை - இங்கு, கயிலை பாதி காளத்தி பாதி அந்தாதி என்னும் பாமாலை.

23. ஆ - ஐயோ. அலந்தனேன் - வருந்தினேன். பிரசாதம் - அருள். பனுவல் - கோபப்பிரசாதம்.

24. ஏழிசை - குரல், துத்தம் முதலிய ஏழிசையமைந்த, ஏழிசை என ஒரு பிரபந்தம் உண்டென்பாரும் உளர். ஏழு கூற்றிருக்கை - இருவெழு கூற்றிருக்கை என்னும் பிரபந்தம். பூவர் - சுந்தரர்; பூ - சுந்தரம்; புலவராய்த் தோன்றியவருமாம்; பூ - தோற்றம்.

பா-ம்—1 வஞ்சிக். 2 போற்றிநின்.

*உதித்த நாவினுர் கருணைசெய் துருக்கரந் தயன்சேய்*
*விதித்த கோயில்புக் கமர்ந்தனர் விளங்கிழை யோடும்.* **25**

*சுற்ற கீரனுங் கலைஞருங் கழகமண் டபத்தில்*
*உற்ற வாடகக் கிழியறுத் தந்தணற் குதவிக்*
*கொற்ற வேந்தனும் வரிசைகள் சிலசெயக் கொடுப்பித்*
*தற்ற நீங்கிய கல்வியின் செல்வரா யமர்ந்தார்.* **26**

*சம்பக மாற னென்னுந் தமிழ்நர்தம் பெருமான் கூடல்*
*அம்பக நுதலி ஞனை யங்கயற் கண்ணி ஞளை*
*வம்பக நிறைந்த செந்தா மரையடி வந்து தாழ்ந்து*
*நம்பக நிறைந்த வன்பாற் பல்பணி நடாத்தி வைகும்.* **27**

*ஆகச் செய்யுள்—2,566*

---

25. அயன் சேய் - பிரமன் புதல்வனுகிய தேவதச்சன். புக்கு - போய்.

26. கலைஞரும் - கபிலர் முதலிய புலவர்களும். ஆடகக்கிழி - பொற்கிழி. வேந்தன் - சண்பக பாண்டியன். அற்றம் - குற்றம், செருக்கு.

27. அம்பகம் - கண். வம்பு - வாசனை. பல்பணி - பல திருப்பணி கள்.

# 54. கீரனுக்கு இலக்கணமுபதேசித்த படலம்

—o—

கொன்றையந் தெரியல் வேய்ந்த கூடலெம் பெருமான் செம்பொன்
மன்றலங் கமலத் தாழ்ந்து வழிபடு நாவ லோனை
அன்றகன் கரையே றிட்ட வருளுரை செய்தே மிப்பாற்
றென்றமி ழனையான் றேறத் தெருட்டிய திறனுஞ் சொல்வாம். 1

முன்புநான் மாடக் கூடன் முழுமுத லாணை யாற்போய்
இன்புற வறிஞ ரீட்டத் தெய்தியாங் குறையுங் கீரன்
வன்புறு கோட்டந் தீர்ந்து மதுரையெம் பெருமான் ருளில்
அன்புறு மனத்த னாகி யாய்ந்துமற் றிதனைச் செய்வான். 2

கட்டவிழ் கடுக்கை யண்ணல் கண்ணினு லவிந்த காளை
மட்டவிழ் மலரோ னாலு மாயவ னாலுங் காக்கப்
பட்டவ னல்ல னன்னா னுதல்விழிப் படுதீ நம்மைச்
சுட்டபோ துருப்பந் தீர்த்துக் காத்ததிச் சுவண கஞ்சம். 3

இப்பெருந் தடமே யெம்மை யெம்மையுங் காப்ப தென்னாக்
கப்பிலா மனத்தான் மூன்று காலமு மூழ்கி மூழ்கி
அப்பனை யால வாயெம் மடிகளை யடியார் சேம
வைப்பினை யிறைஞ்சி நித்தம் வழிபடு நியமம் பூண்டான். 4

மையறு மனத்தான் வந்து வழிபடு நியம நோக்கிப்
பையர வாரம் பூண்ட பரஞ்சுடர் மாடக் கூடல்
ஐயனு மணிய னாகி யகமகிழ்ந் தவனுக் கொன்று
செய்யநன் கருணை பூத்துத் திருவுளத் திதனைத் தேர்வான். 5

---

1. தென் தமிழனையான் - நக்கீரன். தென் தமிழ் - இயற்றமிழ். தேற - (இலக்கணம்) தெளிந்துய்ய. தெருட்டிய - (அகத்திய முனிவரால்) தேற்றிய.

2. ஆணை - கட்டளை. கோட்டம் - மாறுபாடு.

3. அண்ணல் கண்ணினால் அவிந்த காளை - மன்மதன். உருப்பம் - வெப்பம். சுவண கஞ்சம் - பொற்றாமரைத் தீர்த்தம்.

4. கப்பிலா மனம் - பிளவுபடாத மனம்; எனவே, ஒன்றுபட்ட மனம் என்பது பொருள்.

5. இறைவன் சூரியன், சந்திரன், அக்கினி இவர்களுக்கு ஒளி தரும் பேரொளியாதலால், அவனைப் 'பரஞ்சுடர்' என்றார்.

இலக்கண மிவனுக் கின்னுந் தெளிகில விதனு லாய்ந்த
நலத்தசொல் வழூஉச்சொ லென்ப தறிகில னவைதீர் கேள்விப்
புலத்தவர் யாரைக் கொண்டு போதித்து மிவனுக் கென்று
மலைத்தனு வளைத்த முக்கண் மன்னவ னுன்னு மெல்லை. 6

பங்கயச் செங்கை கூப்பிப் பாவினேர் மொழியாள் சொல்வாள்
அங்கணு வங்கை நெல்லிக் கனியென வனைத்துங் கண்ட
புங்கவா நினது சங்கைக் குத்தரம் புகல வல்லார்
எங்குளா ரேனு மென்னெஞ் சுதிப்பதொன் றிசைப்பே னையா. 7

பண்டொரு [1]வைகல் வெள்ளிப் பனிவரை யிடத்துன் பாங்கர்ப்
புண்டவழ் குலிசக் கோமான் பூமகன் மாயப் புத்தேள்
அண்டருஞ் சனக னாதி யருந்தவர் பிறரு மீண்டிக்
கொண்டன ரிருந்தா ரிந்தக் குவலயம் பொருது மாதோ. 8

தாழ்ந்தது வடகீ ழெல்லை யுயர்ந்தது தென்மேற் கெல்லை
சூழ்ந்தது கண்டு வானோர் தொழுதுனைப் பரவி யைய
ஊழ்ந்திடு மரவம் பூண்டோ யொருவனின் றனைப்பா னங்கே
வாழ்ந்திட விடுத்தா லிந்த வையநேர் நிற்கு மென்றார். 9

பைத்தலை புரட்டு முந்நீர்ப் பெளவமுண் டவனே யெம்மை
ஒத்தவ னனையான் வாழ்க்கைக் குரியளா கியவு லோபா
முத்திரை யிமவான் பெற்ற முகிழ்முலைக் கொடியொப் பாளென்
றத்திரு முனியை நோக்கி யாயிடை விடுத்தா யன்றே. 10

விடைகொடு போவா னென்றை வேண்டினு னேகுந் தேயந்
தொடைபெறு தமிழ்நா டென்று சொல்லுப வந்த நாட்டின்

---

6. நலத்த சொல் - குணமுள்ள சொல். வழூஉச்சொல் - குற்றமுள்ள சொல் முக்கண் மன்னவன் - சோமசுந்தரக்கடவுள்.

7. சங்கை - திருவுள்ள நிகழ்ச்சி. உத்தரம் - விடை. ஏனும் - ஆயினும்.

8. பண்டொரு வைகல் - திருக்கலியாண காலத்தின்போது. குலிசக்கோமான்-இந்திரன். பிறர்-இங்கு, வித்தியாதரர் முதலியோர்.

9. அதுகண்டு சூழ்ந்து - அதனைக்கண்டு ஆலோசித்து. ஊழ்ந்திடும் - ஊருகின்ற.

10. பைத்து - பரந்து. முந்நீர்ப்பெளவம் உண்டவன்-அகத்திய முனிவன். ஆயிடை - அத்தென்மேற்கெல்லைக்கு.

பா-ம்—1 போது.

இடைபயின் மனித்த ரெல்லா மின்றமி ழாய்ந்து கேள்வி
உடையவ ரென்ப கேட்டார்க் குத்தர முரைத்தல் வேண்டும். 11

சித்தமா சகல வந்தச் செந்தமி ழியனூ றன்னை
அத்தனே யருளிச் செய்தி யென்றன னனையான் றேற
வைத்தனை முதனூ றன்னை மற்றது தெளிந்த பின்னும்
நித்தனே யடியே னென்று நின்னடி காண்பே னென்றான். 12

கடம்பமா வனத்தி லெம்மைக் கண்டனை யிறைஞ்சி யுள்ளத்
திடம்பெற யாது வேட்டா யவையெலா மெம்பாற் பெற்றுத்
திடம்பெற மலயத் தெய்தி யிருக்கென விடுத்தாய் சென்று
குடம்பெறு முனியு மங்கே யிருக்கின்றான் கொடியி னோடும். 13

இனையதுன் றிருவுள் ளத்துக் கிசைந்ததே லிவற்குக் கேள்வி
அனையமா தவனைக் கூவி யுணர்த்தென வணங்கு கூற
[1]இனையநா ணிகழ்ச்சி யெல்லா மறந்திடா தின்று சொன்னாய்
அனையதே செய்து மென்னு வறிவனை நினைந்தா னையன். 14

உடைய நாயகன் றிருவுள முணர்ந்தனன் முடிமேல்
அடைய வஞ்சலி முகிழ்த்தன னருந்தவ விமானத்
திடைபு குந்தனன் பன்னியோ டெழுந்தன னகல்வான்
நடைய னுகிவந் தடைந்தன னற்றமிழ் முனிவன். 15

இயங்கு மாதவத் தேரினும் பன்னியோ டிழிந்து
புயங்க னாலயம் புகுந்துநாற் புயம்புடை கிளைத்துத்

---

11. தொடைபெறு தமிழ்-மோனை முதலிய தொடை விகற்பங்கள் அமைந்த தமிழ்.

12. சித்தம் மாசு - அறியாமையாகிய மனக்குற்றம். இயல் நூல்-இலக்கண நூல்.

13. கண்டனை - கண்டு. மலயம் - பொதியமலை. குடம் பெறு முனி - அகத்திய முனிவன். கொடி-உலோபா முத்திரை : உவமையாகு பெயர்.

14. இவற்கு - இந்த நக்கீரனுக்கு. கேள்வி - நூற்கேள்வியினை. அறிவன் - இங்கு அகத்திய முனிவன்.

15. முடிமேல் அஞ்சலி அடைய முகிழ்த்தனன் - சிரசின்மீது பொருந்த அஞ்சலியாகக் கைகளைக் குவித்து. அஞ்சலி - கும்பிடுதல். முகிழ்த்தல் - குவித்தல்.

பா-ம்—1 எனையநா.

தயங்கு செம்பவ ளாசலந் தன்னையு மதன்பால்
வயங்கு மிந்திர நீலமால் வரையையும் பணியா. 16

பெருகு மன்புளந் துளும்பமெய் யானந்தம் பெருக
அருகி ருந்தன னுவயிற் கீர னு மம்பொன்
முருக விழ்ந்ததா மரைபடிந் திறைவனை முன்போல்
உருகு மன்பினு லிறைஞ்சுவா னெல்லைவந் தடைந்தான். 17

இருந்த மாதவச் செல்வனை யெதிர்வர நோக்கி
அருந்த வாவிவற் கியற்றமி ழுமைந்தில வெம்பாற்
றெரிந்த நீயதை யரிறபத் தெருட்டெனப் பிணியும்
மருந்து மாகிய பெருந்தகை செய்யவாய் மலர்ந்தான். 18

வெள்ளை மாமதிப் பிளவணி வேணியங் கருணை
வள்ள லார்பணி சிரத்தினு மனத்தினுந் தாங்கிப்
பள்ள மேழையும் பருகினோன் பணியுநக் கீரன்
உள்ள மாசற வியாகர ணத்தினை [1]யுரைக்கும். 19

இருவ கைப்புற வுரைதழீஇ யெழுமத மொடுநாற்
பொருளொ டும்புணர்ந் தையிரு குற்றமும் போக்கி

---

16. மாதவத்தேரினும் - பெரிய தவமாகிய தேரினின்றும். புயங்கன் - சிவபெருமான். புயங்கம் - பாம்பு. பவளாசலம் நீலமால் வரை என்றது சிவபெருமானையும் உமாதேவியாரையும்.

17. ஆவயின் - அவ்விடத்தில். அருளால் அன்பு விளைதலும் அந்த அன்பால் ஆனந்தமேலிடுதலும் ஆகும் என்க.

18. அரிறப = அரில்+தப - குற்றம் நீங்க. இறைவன் தமதாணையாகிய வேதாகமவழி நில்லாத ஆன்மாக்களுக்குத் தண்டனை புரிந்தும் நிற்போர்க்குத் திருவருள் புரிந்தும் நிற்றலால் "பிணியு மருந்துமாகிய பெருந்தகை" என்றார்.

19. பள்ளம் - கடல். வியாகரணம் - இலக்கணம்.

20. இருவகைப் புறவுரை – பொதுப்பாயிரம், சிறப்புப்பாயிரம்: புறவுரை - நூல் கருதிய பொருளல்லாதவை; நூலின் புறத்தே சேர்க்கப்படுவது என்றலுமொன்று. நாற்பொருள் - அறம், பொருள், இன்பம், வீடு. ஒருவில் - நீங்குதலில்லாத. ஆதிநூல் - முதனூல், முதல்வன் அருளிச்செய்த நூல். இங்குக் கூறிய எழுமதம், ஐயிருகுற்றம், ஐயிரண்டழகு, உத்தி எண்ணான்கு இவைகளை நன்னூல் பொதுப்பாயிரத்துள் காண்க.

[1] பா-ம்—1 உணர்த்தும்.

ஒருவி லையிரண் டுழகொடு முத்தியெண் ணான்கும்
மருவு மாதிநூ லினைத்தொகை வகைவிரி முறையால். 20

கருத்துக் கண்ணழி வாதிய காண்டிகை யானும்
விருத்தி யானுநூற் கிடைப்பொரு டுளக்கற விளக்கித்
தெரித்து ரைத்தன னுரைத்திடு திறங்கண்டு நூலின்
அருத்த மேவடி வாகிய வாதியா சிரியன். 21

தருக்கு மின்பமுங் கருணையுந் [1]தழையமா தவனைத்
திருக்க ரங்களான் மகிழ்ச்சியுட் டிளைத்திடத் [2]தடவிப்
பெருக்க வேண்டிய பேறெலாம் பீடுற நல்கி
இருக்கை யிற்செல விடுத்தன னலவா யிறைவன். 22

பொன்ன னாளொடுங் குறுமுனி விடைகொடு போன
பின்னை யாருயிர்க் கிழத்திதன் பிரானைநேர் நோக்கி
என்னை நீயிவற் குணர்த்திடா தித்தவப் பொதியின்
மன்ன னுணர்த் தியதென மதுரைநா யகனும். 23

தன்னை நித்தலும் வழிபடுந் தகுதியோர் சாலப்
பொன்ன ளிப்பவர் தொடுத்தமற் சரமிலாப் புனிதர்
சொன்ன சொற்கட வாதவர் துகடவிர் நெஞ்சத்
தின்ன வர்க்குநூல் கொளுத்துவ தறனென விசைப்ப. 24

இவனெ டுத்தமற் சரத்தினால் யாமுணர்த் தாதத்
தவனை விட்டுணர்த் தினமெனச் சாற்றினான் கேட்டுக்

---

21. கண்ணழி - பதச்சேதம். காண்டிகை - கருத்துரை, பதவுரை, உதாரணம், வினா, விடை என்னும் ஐந்துங்கொண்டது. விருத்தி - பாடம், கருத்து, சொல்வகை, சொற்பொருள், தொகுத்துரை, உதாரணம், வினா, விடை. விசேடம், விரிவு, அதிகாரம், துணிவு, பயன், ஆசிரியவசனம் என்னும் பதினான்குங்கொண்டது. துளக்கம்-சந்தேகம்.

22, தருக்கும் - களிப்பும். மாது மகிழ்ச்சியுட் டிளைப்ப அவனைத் தடவி எனப் பொருள் கொள்ளுதலும் உண்டு.

23. பொன்னனாள் என்றது உலோபாமுத்திரையை. பொன் - இலக்குமி.

24. இச்செய்யுள் நூல் கேட்பதற்கு இன்னார் உரியர் என்பதைக் கூறுகிறது. மற்சரம் - அழுக்காறு. கொளுத்துவது-போதிப்பது.

25. கவலை - இங்கு நமது தலைவன் முற்றுமுணர்ந்தவனாக இருக்க அகத்திய முனியைக் கொண்டு போதித்தது யாது என நிகழ்ந்த ஐயம்.

பா-ம்—1 தழைப்பமா. 2 தழுவிப்.

கவலை விட்டக மகிழ்ச்சிகொண் டிருந்தனள் கதிர்கால்
நவம ணிக்கலம் பூத்ததோர் கொடிபுரை நங்கை. 25

கற்ற கீரனும் பின்புதான் முன்செய்த கவிகண்
முற்று மாய்ந்துசொல் வழுக்களும் வழாநிலை முடிபும்
உற்று நோக்கினு னறிவின்றி முழுதொருங் குணர்ந்தோன்
சொற்ற பாடலிற் பொருள்வழுச் சொல்லினே னென்னு. 26

மறையி னந்தமுந் தொடாததா ணிலந்தொட வந்த
நிறைப ரஞ்சுடர் நிராமய நிருத்தற்குப் பிழைத்தேன்
சிறிய கேள்வியோர் கழியவுஞ் செருக்குடை யோரென்
றறிஞர் கூறிய பழஞ்சொலென் னளவிற்றே யம்ம. 27

அட்ட மூர்த்திதன் றிருவடிக் கடியனேன் பிழைக்கப்
பட்ட தீங்கினு லெனையவ னுதல்விழிப் படுதீச்
சுட்ட தன்றியென் னெஞ்சமுஞ் சுடுவதே யென்றென்
றுட்ட தும்பிய விழுமநோ யுவரியு ளாழ்ந்தான். 28

மகவை யீன்றதாய் கைத்திடு மருந்துவாய் மடுத்துப்
பகைப டும்பிணி யகற்றிடும் பான்மைபோ லென்னை
இகலி ழைத்தறி [1]வுறுத்தினுற் கேழையேன் செய்யத்
தகுவ தியாதென வரம்பிலா மகிழ்ச்சியுட் டாழ்ந்தான். 29

மாத வன்றனக் காலவாய் மன்னவ னருளாற்
போத கஞ்செய்த நூலினைப் புலவரே னோர்க்கும்
ஆத ரஞ்செயக் கொளுத்தியிட் டிருந்தன னமலன்
பாத பங்கய மூழ்கிய பத்திமைக் கீரன். 30

ஆகச் செய்யுள்—2,596

---

26. கற்ற (அகத்திய முனிவர்பால்) கற்றுணர்ந்த. உற்று - சிந்தித்து.
27. மறையின் அந்தம் - உபநிடதம். பிழைத்தேன் - தவறு செய்தேன்.
28. உள் ததும்பிய விழுமநோய் - (தன்) மனத்தில் பொங்கியெழுந்த கவலையாகிய வருத்தம் (என்கின்ற).
29. கைத்திடும் - கசக்கும். பகைபடும் பிணி - மூரணி வருத்தும் நோய்.
30. நூல் - பொருளிலக்கண நூல். பத்திமை - அன்புடைமை.
பா-ம்—1 உறுத்தினுய்க்.

# 55. சங்கத்தார் கலகந்தீர்த்த படலம்

—o—

காமனைப் பொடியாக் கண்ட கண்ணுத [1]றென்னூல் கீர
நாமநற் புலவற் கீந்த நலமிது பொலம்பூங் கொன்றைத்
தாமனச் சங்கத் துள்ளார் தலைதடு மாற்றந் தேற
ஊமனைக் கொண்டு பாட லுணர்த்திய வொழுக்கஞ் சொல்வாம். 1

அந்தமில் கேள்வி யோரெண் ணறுவரும் வேறு வேறு
செந்தமிழ் செய்து தம்மிற் செருக்குறு பெருமை கூறித்
தந்தமின் மாருய்த் தத்தந் தராதர மளக்க வல்ல
முந்தைநூன் மொழிந்த வாசான் முன்னர்வந் தெய்தி னாரே. 2

தொழுதன ரடிகள் யாங்க டொடுத்தவிப் பாட றம்முள்
விழுமிதுந் தீதுந் தூக்கி வேறுபா டளந்து காட்டிப்
பழுதறுத் தையந் தீரப் பணிக்கெனப் பணிந்தார் கேட்டு
முழுதொருங் குணர்ந்த வேத முதல்வனா முக்கண் மூர்த்தி. 3

இருவருந் துருவ நீண்ட வெரியழற் றாணிற் றோன்றும்
உருவென வறிவா னந்த வுண்மையா யுலகுக் கெல்லாங்
கருவென முளைத்த மூல விலிங்கத்து ணின்றுங் காண்டற்
கரியதோர் புலவ னாகித் தோன்றியொன் றருளிச் செய்வான். 4

இம்மாநக ருள்ளானொரு வணிகன்றன பதியென்
றம்மாநிதிக் கிழவோன்மனை குணசாலினி யனையார்

---

1. தென் நூல் - அழகிய பொருளிலக்கண நூல். ஊமன் - ஊமைப் பிள்ளை.

2. கேள்வியோர் எண்ணறுவர் - சங்கப்புலவர் நாற்பத்தெண்மர். தராதரம் - பெருமை சிறுமை. ஆசான் என்றது சோமசுந்தரக்கடவுளை.

3. யாங்கள் தொடுத்த இப்பாடல் தம்முள் - நாங்கள் பாடிய இப் பிரபந்தத்துள்.

4. துருவ - தேட. உலகுக்கெல்லாம் கரு - உலகத்தோற்ற வொடுக்கங்கட்கெல்லாம் காரணம், உலகத்துச் சிவலிங்கங்கட்குப் பிறப்பிடம்.

5. வெளிற்றறிவு - இங்கே, மந்தபுத்தி. பொய்ம்மாசு - நிலையில்லாத அஞ்ஞானம். இனன் - சூரியன். ஒரு புத்தேள் - ஒப்பற்ற முருகக் கடவுள்.

பா-ம்—1 றென்னூல். (தொன்னூல் - முதனூல்.)

தம்மாதவப் பொருட்டால்வெளிற் றறிவாளரைத் தழுவும்
பொய்ம்மாசற வினன்போலவ தரித்தானொரு புத்தேள். 5

ஓயாவிறன் மதனுக்கிணை யொப்பானவ னூமச்
சேயாமவ னிடைநீருரை செய்யுட்கவி யெல்லாம்
போயாடுமி னனையானது புந்திக்கிசைந் தானன்
றுயாவரு மதிக்குந்தமி ழதுவேயென வறைந்தான். 6

வன்றுண்மழ விடையாயவன் மணிவாணிக னூமன்
என்றாலவன் கேட்டெங்ஙன மிப்பாடலிற் கிடக்கும்
நன்றானவுந் தீதானவு நயந்தாய்ந்ததன் றன்மை
குன்றாவகை யறைவானென மன்றாடிய கூத்தன். 7

மல்லார்தடம் புயவாணிக மைந்தன்றனக் கிசையச்
சொல்லாழமும் பொருளாழமுங் கண்டான்முடி துளக்காக்
கல்லார்புயம் புளகித்துளங் களிதூங்குவன் கலகம்
எல்லாமகன் றிடுமுங்களுக் கென்றாலயஞ் சென்றான். 8

பின்பாவல ரெல்லாம்பெரு வணிகக்குல மணியை
அன்பாலழைத் தேகித்தம தவையத்திடை யிருத்தா
நன்பான்மலர் நறுஞ்சாந்துகொண் டருச்சித்தனர் நயந்தே
முன்பாலிருந் தருந்தீந்தமிழ் மொழிந்தாரவை கேளா. 9

மகிழ்ந்தான்சிலர் சொல்லாழ்ச்சியை ;மகிழ்ந்தான்சிலர் பொருளை, இகழ்ந்தான்சிலர் சொல்வைப்பினை யிகழ்ந்தான்சிலர்

---

6. விறல் - வெற்றி. ஊமச்சேய் - ஊமைப்பிள்ளை. ஆடுமின் - சொல்லுங்கள்.

7. மணி வாணிகன் - இரத்தின வியாபாரி. எங்ஙன் அறைவான் என்க.

8. மல் - மற்போர்; வளமுமாம். சொல்லாழம் - நுண்ணிய பல பொருள்களைச் செறிந்து நிற்றல். பொருளாழம் - இறைச்சி, உள்ளுறை முதலியவற்றால் பல் பொருள்பட நிற்றல். கல்லார் புயம்- மலைபோன்ற தோள்.

9. தமது அவை என்றது தமிழ்ச்சங்கத்தை. இருத்தா-இருத்தி. பால் - பகுப்பு.

10. சொல் இன்பம்-சிறந்த கருத்தினைக் கண்டபோது உண்டாகும் இன்பம். பொருள் இன்பம் - கருத்தினைப் புலப்படுத்தும் செஞ் சொல்லைக் கண்டபோது உண்டாகும் இன்பம். திண்மை - ஆற்றல்.

பொருளைப், புகழ்ந்தான்சிலர் சொல்லின்பமும் பொருளின்பமு மொருங்கே, திகழ்ந்தான்சிலர் சொற்றிண்மையும் பொருட்டிண் மையுந் தேர்ந்தே. 10

இத்தன்மைய ருகிக்கலை வல்லோர்தமி ழெல்லாஞ்
சித்தங்கொடு தெருட்டுஞ்சிறு வணிகன்றெருள் கீரன்
முத்தண்டமிழ் கபிலன்றமிழ் பரணன்றமிழ் மூன்றும்
அத்தன்மைய னறியுந்தொறு மறியுந்தொறு மெல்லாம். 11

நுழைந்தான்பொரு டொறுஞ்சொற்றொறு நுண்டீஞ்சுவையுண்டே
தழைந்தானுடல் புலனைந்தினுந் தனித்தான்சிரம் பனித்தான்
குழைந்தான்விழி வழிவேலையுட் குளித்தான்றனை யளித்தான்
விழைந்தான்புரி தவப்பேற்றினை விளைத்தான்களி திளைத்தான். 12

பல்காசொடு கட்டிற்படு பவளஞ்சுடர் தரளம்
எல்லாநிறுத் தளப்பானென வியல்வாணிகக் குமரன்
சொல்லாழமும் பொருளாழமுந் துலைநாவெனத் தூக்க
நல்லாறறி புலவோர்களு நட்டாரிகல் விட்டார். 13

உலகினுட் பெருகி யந்த வொண்டமிழ் மூன்றும் பாடற்
றிலகமாய்ச் சிறந்த வாய்ந்த தெய்வநா வலருந் தங்கள்
கலகமா நவையிற் றீர்ந்து காசறு பனுவ லாய்ந்து
புலமிகு கோட்டி செய்து பொலிந்தன ரிருந்தார் போலும். 14

ஆகச் செய்யுள்—2,610

---

11. சித்தம் கொடு தெருட்டும் - மனத்தால் குணங்குற்றங்களைப் புலப்படுத்திய.

12. பொருட் சுவை - காமம், கருணை, நகை, வீரம், உருத்திரம், அச்சம், குறிப்பு, வியப்பு, சாந்தம் என்னும் ஒன்பதுமாம். சொற் சுவை - குணம், அலங்காரம் என்னும் இரண்டுமாம். பனித்தான் - அசைத்தான்.

13. காசு - இரத்தினம். துலைநா - நாவே துலையாக.

14. மூன்று தமிழும் - (நக்கீரர், கபிலர், பரணர் மூவரும் அருளிச் செய்த) மூன்று நூல்களும். தெய்வ நாவலர் - கடவுள் தன்மை வாய்ந்த புலவர், கடவுளால் கருதப்பட்ட புலவர், கடவுளால் அங்கீ கரிக்கப்பட்ட புலவர், கடவுளாற் புகழப்பட்ட புலவர். கோட்டி செய்து - கூடி அளவளாவி.

# 56. இடைக்காடன் பிணக்குத்தீர்த்த படலம்

—o—

குடைக்காடன் பசிக்கன்னக் குழியருத்தி வேட்கையறக் கொடுத்த கங்கைச், சடைக்காடன் புலவரிக றணிவித்த முறை யிதுமேற் றன்னைப் பாடுந், தொடைக்காடன் பகன்றி கழ்ந்த தென்னவனை முனிந்துதன்னைத் தொழுது போன, இடைக்காட னுடன்போய்ப்பின் பெழுந்தருளிப் பிணக்கறுத்த வியல்பு சொல் வாம். 1

இந்திரன்றன் பழிதுரத்தி யரசளித்துப் பின்புகதி யின்ப மீந்த, சுந்தரன்பொன் னடிக்கன்பு தொடுத்துறுஞ் சண்பகத்தார் தொடுத்துச் சாத்தி, வந்தனைசெய் திருத்தொண்டின் வழிக்கேற் பச் சண்பகப்பூ மாற வேந்தன், அந்தரசூ டாமணியாஞ் சிவபு ரத்து ணிறைசெல்வ மடைந்தா னிப்பால். 2

ஆற்றன்மிகு பிரதாப சூரியன்வங் கிசத்துவச னளவில் சீர்த்தி, சாற்றரிய விரிபுமருத் தனன்சோழ வங்கிசாந் தகன்றன் வென்றி, மாற்றரிய புகழ்ச்சேர வங்கிசாந் தகன்பாண்டி வங்கி சேசன், தோற்றமுறு பரித்தேர்வங் கிசசிரோ மணிபாண்டீச் சுரன்றன் மன்னே. 3

துணிவுடைய குலத்துவசன் வங்கிசபூ டணமாறன் சோம சூடா, மணிகுலசூ டாமணியே யிராசசூ டாமணியே மாற்றார் போற்றிப், பணியவரும் பூபசூ டாமணியே குலேசபாண் டியனே

---

1. குடைக்காடன் - குடைபிடிக்கும் இடத்தையுடையவன்; (காடு - இடம்.) குடைக்கு ஆள் எனப் பிரித்துக் குடையெடுத்தற்கு ஆளாகிய குண்டோதரன் என்றலுமாம். தொடைக்கு ஆடு அன்பு அகன்று - பாடலுக்குப் புகழப்படும் அன்பு நீக்கி. (ஆடல் - இங்கே புகழ்தல்.) தென்னவன் - இங்கே, குலேச பாண்டியன்.

2. அந்தர சூடாமணியாம் சிவபுரம் - மேலேழுலகங்களுக்கும் முடிவாயுள்ள சூளாமணி போலும் மேன்மைவாய்ந்த சிவலோகம்; (அந்தரம் - முடிவு).

3. இரிபு மருத்தனன் - பகைவரைக் கொல்லுபவன். வங்கிச + அந்தகன் = வங்கி சாந்தகன். வங்கிசம் - வமிசம்.

யென்னக், கணிதமுறு பதினைவர் வழிவழிவந் துதித்துநிலங் காவல் பூண்டோர். 4

அத்தகைய பாண்டியருட் குலேசபாண் டியனென்னு மரசன் ரேண்மேல், வைத்தவனி தலம்புரப்போ னிலக்கணமு மிலக் கியமும் வரம்பு கண்டோன், எத்தகைய பெருநூலு மெல்லை கண்டோ ளுதலினு லிவனுக் கேற, முத்தமிழோர் பயில்சங்க மிடங்கொடுத்த தனையமணி முழவுத் தோளான். 5

கழிந்தபெருங் கேள்வியினு னெனக்கேட்டு முழுதுணர்ந்த கபிலன் றன்பாற், பொழிந்தபெருங் காதன்மிகு கேண்மையினு னிடைக்காட்டுப் புலவன் றென்சொன், மொழிந்தரசன் றனைக் காண்டு மெனத்தொடுத்த பனுவலொடு மூரித் திங்தேன், வழிந் தொழுகு தாரானைக் கண்டுதொடுத் துரைப்பனுவல் வாசித் தானுல். 6

வழுக்காத சொற்சுவையும் பொருட்சுவையும் பகிர்ந்தருந்த வல்லோ னுள்ளத், தழுக்காற்ருற் சிரந்துளக்கா னகமகிழ்ச்சி சிறிதுமுகத் தலர்ந்து காட்டான், எழுக்காயுந் திணிதோளா னென்றுமுரை யான்வாளா விருந்தா னுய்ந்த, குழுக்காத னண் புடையான் றனைமானம் புறந்தள்ளக் கோயில் புக்கான். 7

சந்நிதியில் வீழ்ந்தெழுந்து தமிழறியும் பெருமானே தன் னைச் சேர்ந்தோர், நன்னிதியே திருவால வாயுடைய நாயகனே நகுதார் வேம்பன், பொன்னிதிபோ லளவிறந்த கல்வியுமிக் குள னென்று புகலக் கேட்டுச், சொன்னிறையுங் கவிதொடுத்தே னவமதித்தான் சிறிதுமுடி துளக்கா னுகி. 8

பரிவாயின் மொழிதொடுத்து வருணித்தோர்க் ககமகிழ்ந் தோர் பயனு நல்கா, விரிவாய தடங்கடலே நெடுங்கழியே யடுங்

---

4. வழி வழி வந்து - (சண்பக பாண்டியன்) கால்வழியே வந்து.

5. பெருநூல் - முதனூல்; அறுபத்து நான்கு கலைகளுமாம். முழவு - மத்தளம் (போன்ற).

6. தென் சொல் மொழிந்து - ஒரு பிரபந்தம் செய்து. காண்டும்- காண்போம். மூரி - முதிர்ந்த.

7. எழுக்காயும் - தூணை வென்ற. ஆய்ந்த குழு-புலவர் கூட்டம். ஆய்தல் - நூல்களை ஆராய்தல்; அறிவின் நுணுக்கமுமாம்.

8. நகு - விளங்கும். சொல் நிறையும் கவி - சொற்சுவை நிறைந்த பாடல். துளக்குதல் - அசைத்தல்.

கான விலங்கே புள்ளே, பொரிவாய பராரைமர நிரையேவான்
றெருடுகுடுமிப் பொருப்பே வெம்பும், எரிவாய கொடுஞ்சுரமே
யெனவிவற்றோ ரஃறிணையொத் திருந்தா னெந்தாய். 9

என்னையிகழ்ந் தனனேசொல் வடிவாய்நின் னிடம்பிரியா
விமையப் பாவை, தன்னையுஞ்சொற் பொருளான வுன்னையுமே
யிகழ்ந்தனனென் றனக்கியா தென்று, முன்னைமொழிந் திடைக்
காடன் றணியாத முனிவீர்ப்ப முந்திச் சென்றான், அன்னவுரை
திருச்செவியி னூறுபா டெனவுறைப்ப வருளின் மூர்த்தி. 10

போனவிடைக் காடனுக்குங் கபிலனுக்கு மகத்துவகை
பொலியு மாற்றான், ஞானமய மாகியதன் னிலிங்கவுரு மறைத்து
மையா நங்கை யோடும், வானவர்தம் பிரானெழுந்து புறம்
போய்த்தன் கோயிலினேர் வடபால் வைகை, ஆனநதித் தென்
பாலோ ராலயங்கண் டங்கணினி தமர்ந்தான் மன்னோ. 11

சங்கவான் றமிழ்த்தெய்வப் புலவோரு முடனெழுந்து சைல
வேந்தன், மங்கைநா யகன்போன வழிபோயங் கிருந்தாரவ் வழி
நாள் வைகற், கங்குல்வாய் புலரவரும் வைகறையிற் பள்ளியுணர்
காலத் தெய்தி, அங்கணா யகனடியார் சேவிப்பா ரிலிங்கவுரு
வங்குக் காணார். 12

என்னவதி சயமோவீ தென்றயிர்த்தா ரிரங்கினா ரிதனை
யோடி, மன்னவனுக் கறிவிப்பான் வேண்டுமெனப் புறப்பட்டு
வருவா ராவி, அன்னவரைப் பிரிந்துறையு மணங்கனையா ரென
வுமல ரணங்கு நீத்த, பொன்னவிர்தா மரையெனவும் புலம்
படைந்து பொலிவழிந்த புரமுங் கண்டார். 13

---

9. பரிவு ஆய் - அன்பாய். கழி - உப்பங்கழி. பொரிவாய - பொருக்கு வாய்ந்த. பராரை - பருத்த அடிமரத்தையுடைய. சுரம் - பாலை நிலம்.

10. என் தனக்கு யாது - எனக்கு அவமதிப்பு யாது. முன்னை மொழிந்து - முன்னின்று கூறி. ஊறுபாடு - வேலாயுதம்.

11. புறம்போய் - (திருக்கோயிலினின்று) வெளியே சென்று. கண்டு - சமைப்பித்து.

12. சைலம் - இங்கு, இமயமலை. பள்ளியுணர் காலத்து - திருப் பள்ளியெழுச்சிக்காலத்தில்.

13. அயிர்த்தல் - சந்தேகித்தல். அணங்கு - இலக்குமி. புலம்பு அடைந்து - வறுமை மிகுந்து. புரம் - (மதுரைமா) நகரம்.

அரசனிடைப் புகுந்துள்ள நடுநடுங்கி நாவுணங்கி யரசே யாமொன், றுரைசெயவஞ் சுதுமுங்க ளுயகளைத் திருப்பள்ளி யுணர்ச்சி நோக்கி, மரைமலர்ச்சே வடிபணியப் புகுந்தனமின் றுங்கவன்றன் வடிவங் காணேம், புரமுநனி புலம்படைந்த தென் றழல்வே லெனச்செவியிற் புகுத்த லோடும். 14

வழுதியரி யணையிலிருந் தடியிறவீழ் பழுமரம்போன் மண் மேல் யாக்கை, பழுதுறவீழ்ந் துயிரொடுங்க வறிவொடுங்கி மட் பாவை படிந்தாங் கொல்லைப், பொழுதுகிடந் தறிவுசிறி தியங்க வெழுந் தஞ்சலிக்கைப் போது கூப்பி, அழுதிருகண் ணீர்வெள்ளத் தாழ்ந்தடியே னென்பிழைத்தே னண்ணு லண்ணல். 15

கொலையினையோ ரவுணர்புர நொடிவரையிற் பொடியாகக் குனித்த மேருச், சிலையினையோ பழையசிவ புரத்தினையோ வருவிமணி தெறிக்கும் வெள்ளி, மலையினையோ தம்மைமறந் துனை நினைப்பார் மனத்தினையோ வாழ்த்தும் வேதத், தலையினையோ வெங்குற்ற யெங்குற்ற யென்றென்று தளரு மெல்லை. 16

சிலர்வந்து மன்னவோ ரதிசயங்கண் டனம்வைகைத் தென்சா ராக, அலர்வந்தோன் படைத்தநாண் முதலொருகா லமுங்கண்ட தன்று கேள்வித், தலைவந்த புலவரொடு மாலவா யுடையபிரான் றுனே செம்பொன், மலைவந்த வல்லியொடும் வந்திறைகொண் டிறைகின்றுன் [1]மாதோ வென்றுர். 17

அவ்வுரைதன் செவிநுழைந்து புகுந்தீர்ப்ப வெழுந்தரச னச் சத் தாழ்ந்து, தெவ்வர்முடித் தொகையிடறுங் கழற்காலா னடங்

---

14. நாஉணங்கி - நாப்புலர்ந்து. திருப்பள்ளி உணர்ச்சி - திருப் பள்ளியெழுச்சி.

15. பழுமரம் - ஆலமரம். படிந்தாங்கு - கிடந்ததுபோல. ஒல்லைப்பொழுது - சிறிது நேரம்.

16. ஓர் - சேர்ந்த. குனித்த - வளைத்த. தம்மை மறந்து உனை நினைப்பார் - தற்போதம் அழிந்த சிவனடியார்.

17. அலர்வந்தோன் - பிரமன். இறைகொண்டு - நிலைபெற்று எழுந்தருளி.

18. தெவ்வர் - பகைவர். கௌவை - ஒலி. தூஉய் - தூவி. மௌவல் - முல்லை.

பா-ம்—1 யாதோ.

தேகிச் செழுநீர் வைகை, கௌவைநெடுந் திரைக்கரத்தாற் கடி மலர்தூஉய்ப் பணியத்தென் கரைமேல் வந்து, மௌவலிள முகைமூரன் மாதினொடு மிருக்கின்ற மணியைக் கண்டான். 18

படர்ந்துபணிந் [1]தன்புகுக்குங் கண்ணீர்சோர்ந் தானந்தப் பௌவத் தாழ்ந்து, கிடந்தெழுந்து நாக்குழறித் தடுமாறி நின்றி தனைக் கிளக்கும் வேதந், தொடர்ந்தறியா வடிசிவப்ப நகர்புல ம்ப வுலகீன்ற தோகை யோடிங், கடைந்தருளுங் காரணமென் னடியேனாற் பிழையுளதோ வையா வையா. 19

அல்லதையென் றமராலென் பகைஞராற் கள்வரா லரிய கானத், தெல்லைவிலங் காதிகளா லிடையூறின் றமிழ்நாட்டி லெய்திற் றுலோ, தொல்லைமறை யவரொழுக்கங் குன்றினரோ தவந்தருமஞ் சுருங்கிற் றுலோ, இல்லறனுந் துறவறனும் பிழைத் தனவோ யானறியே னெந்தா யெந்தாய். 20

கள்ளேறு கடுக்கைநறுஞ் சடையானே போற்றிபெருங் கருணை போற்றி, வெள்ளேறு கொடியுயர்த்த விடையானே போற்றியருள் விகிர்தா போற்றி, புள்ளேறு கொடியுயர்த்த புனிதனயன் றேறுத புனிதா போற்றி, வள்ளேறு சிறுகுழவி மதிநுதலங் கயற்கண்ணி மணாள போற்றி. 21

பாதமல ரிணைபோற்றி பன்னிரண்டு கையானைப் பயந்தாய் போற்றி, வேதமுடி கடந்தபர ஞானத்தி லானந்த விளைவே போற்றி, போதவடி வாய்நால்வர்க் கசைவிறந்து நிறைந்தபரம் பொருளே போற்றி, மாதவள நீறணிந்த மன்னுவங் கயற்கண்ணி மணாள போற்றி. 22

---

19. உகுக்கும் - சொரியும். உலகீன்ற தோகை - உமாதேவியார்.-

20. இன் தமிழ் நாடு - பாண்டி நாடு. இல்லறன் - இல்லறம். துறவறன் - துறவறம்.

21. விகிர்தம் - வேறுபாடு; இஃது அடைந்தவரிடம் கருணையும் அடையாரிடம் சினமும் உடைமை. புள் - இங்கு, கருடன். வள் - கூர்மை.

22. பன்னிரண்டு கையான் - சண்முகக்கடவுள். பரஞானம் திருவருள் ஞானம். போதவடிவாய் - உபதேச மூர்த்தியாய். நால்வர்- சனகர் முதலிய நால்வர்.

பா-ம்—1 தன்புகுக்குங்.

பொக்கமுடை யார்செய்யும் பூசைதவங் கண்டுநகும் புராண போற்றி, தக்கன்மகம் பொடியாகத் திருப்புருவ நெரித்த கொடுந் தழலே போற்றி, செக்கமலக் கண்ணிடந்த கண்ணனுக்குத் திகி ரியருள் செல்வா போற்றி, மைக்குவளை யனையமணி கண்டாவங் கயற்கண்ணி மணாள போற்றி. 23

தென்னவ னின்ன வண்ண மேத்தினன் செம்பொற் கூடன்
மன்னவன் கேட்டா காய வாணியால் வைகை நாட
உன்னது சோத்த நாங்கேட் டுவந்தன மினிய தாயிற்
றின்னமொன் றுளது கேட்டி யென்றன னருளிச் செய்வான். 24

இயம்பரும் பதிக டம்மு ளாலவா யேற்ற மீங்குச்
சயம்புவா யனந்த முள்ள தானவ ரியக்கர் சித்தர்
வயம்புரி யரக்கர் வானோர் முனிவரர் மனித ருள்ளார்
நயம்பெற விதியாற் கண்ட நங்குறி யனந்த முண்டால். 25

அக்குறி களின்மேம் பட்ட குறியறு பத்து நான்காம்
இக்குறி களின்மேம் பட்ட குறிகளெட் டினைய வெட்டுத்
திக்குறை வானோர் பூசை செய்தன விவற்றியாம் வந்து
புக்குறை குறிநந் தோழன் பூசித்த குறிய தாகும். 26

அறைந்தவித் தெய்வத் தான மனைத்துமோ ரூழிக் காலத்
திறந்தநந் தோழன் கண்ட விலிங்கமா மதனு ளிங்கே
உறைந்தன முறைத லாலே யுத்தர வால வாயாய்ச்
சிறந்திடத் தகுவ தின்று முதலிந்தத் தெய்வத் தானம். 27

ஓங்குதண் பணைசூழ் நீப வனத்தைநீத் தொருபோ தேனும்
நீங்குவ மல்லேங் கண்டா யாயினு நீயும் வேறு

---

23. பொக்கம் - பொய் நெறி. செக்கமலம் - செங்கமலம் : வலித்தல் விகாரம்.

24. சோத்தம் - (இழிந்தார் செய்யும்) அஞ்சலி ; இங்குத்தோத்திரத்தின் மேற்று.

25. ஏற்றம் - உயர்வு : மேன்மை. நயம் - பெரும்பேறு. விதி - சிவாகம விதி. குறி - அருட்குறி ; சிவலிங்கம்.

26. திக்குறை வானோர் - இந்திரன் முதலிய திக்குப்பாலகர். தோழன் - குபேரன். குறியது, அது : பகுதிப்பொருள் விகுதி.

27. கண்ட - தாபித்த. உத்தர ஆலவாய் - வடமதுரை.

28. பணை - வயல். நீபவனம் - கடம்பவனம் ; மதுரை. காடன் - இடைக்காடன். கண்டாய், ஆங்கு : அசைநிலைகள்.

திங்குளை யல்லை காடன் செய்யுளை யிகழ்ந்த லாலே
ஆங்கவ னிடத்தியாம் வைத்த வருளினால் வந்தே மென்னா. 28

பெண்ணினைப் பாகங் கொண்ட பெருந்தகைப் பரம யோகி
விண்ணிடை மொழிந்த மாற்ற மீனவன் கேட்டு வானோர்
புண்ணிய சிறியோர் குற்றம் பொறுப்பது பெருமை யன்றோ
எண்ணிய பெரியோர்க் கென்னா வேத்தினா னிறைஞ்சி னானே. 29

அடிபணிந் தேத்தி னானை யருள்சுரந் தசையு மின்னுக்
கொடியணி மனையிற் போக்கிக் கோமள வல்லி யோடும்
உடனுறை புலவ ரோடு மொல்லைதன் கோயில் புக்கான்
வடதிரு வால வாயில் வந்துவீற் றிருந்த வள்ளல். 30

மின்மதிச் சடையி னான்பி னடந்துபோய் விடைகொண் டேகும்
மன்னவன் றன்னைப் பாடி வந்தவன் றன்னை மாட்சித்
தன்மைசால் சங்க வாணர் தம்மொடுங் கொடுபோ யென்றும்
பொன்மகள் காணி கொண்ட புரிசைசூழ் கோயில் புக்கான். 31

விதிமுறை கதலி பூகங் கவரிவால் விதானந் தீபம்
புதியதார் நிறைநீர்க் கும்பங் கதலிகை புனைந்த மன்றற்
கதிர்மணி மாடத் தம்பொற் சேக்கைமேற் கற்றோர் சூழ
மதிபுனை காடன் றன்னை மங்கல வணிசெய் தேற்றி. 32

சிங்கமான் சுமந்த பொன்னஞ் சேக்கைமே லிருந்து வெள்ளைக்
கொங்கவிழ் தாமந் தூசு குளிர்மணி யாரந் தாங்கி
மங்கல முழவ மார்ப்ப மறையவ ராக்கங் கூற
நங்கையர் பல்லாண் டேத்த நன்மொழிப் பனுவல் கேட்டு. 33

அறிவுடைக் காட னுக்கு மருமைமாண் புலமை யோர்க்கும்
முறைமையா லாரந் தூசு முகிழ்முலைக் கொடியி னன்னார்

---

29. பெருந்தகை - பெருந்தன்மை. பரமயோகி - மேலான யோகி யாகிய சோமசுந்தரக் கடவுள்.

30. ஏத்தினானை - துதித்தவனாகிய குலேச பாண்டியர்க்கு.

31. தன்னை - தன்மீது. காணி - ஆட்சி.

32. விதானம் - மேற்கட்டி. கதலிகை - கொடி. சேக்கை - ஆதனம்.

33. பாட்டுடைத்தலைவன் வெண்மலர் மாலையும், வெள்ளாடையும், வெள்ளணியும் அணிந்து கேட்டல் மரபு என்பார், "வெள்ளைக், கொங்கவிழ் தாமந் தூசு குளிர்மணி யாரந் தாங்கி" என்றார்.

நிறைநிதி வேழம் பாய்மான் விளைநில நிரம்ப நல்கி
அறைகழற் காலிற் பின்னே முடிநடந் திதனை வேண்டும். 34

புண்ணியப் புலவீர் யானிப் போழ்திடைக் காட னார்க்குப்
பண்ணிய குற்ற மெல்லாம் பொறுக்கெனப் பரவித் தாழ்ந்தான்
நுண்ணிய கேள்வி யோரு மன்னநீ நுவன்ற சொல்லாந்
தண்ணிய வமுதா லெங்கள் கோபத்தீத் தணிந்த தென்றார். 35

இன்னமு மால வாயெம் மிறையவன் கருணை நோக்காற்
பன்னரும் புகழ்மை குன்றாப் பாக்கிய முனக்குண் டாக
என்னநல் லாக்கங் கூறி யேகினா ராக வந்தத்
தென்னவன் குலேசன் செய்த தவமுருத் திரிந்தா லென்ன. 36

எரிமருத் தவனி முன்றா மெண்வகை மூர்த்தி யன்பு
புரிமருத் துவனைச் சூழ்ந்த பொருபழி துடைத்தோன் சோதி
விரிமருத் துடல்வான் றிங்கண் மிலைந்தவ னருளின் வந்தான்
அரிமருத் தனனாந் தென்ன னடலரிக் குருளை யன்னான். 37

பரிசிலைப் புலவருக் கருள்குலே சன்பல பகல்பூ இத்
திரிமருப் பிரலைவெம் மழுவெடுத் தவன்மதிச் சென்னிமேல்
வரிசிலைப் படைபொறித் தவனெனப் பெறுவர மைந்தனும்
அரிமருத் தனனிடத் தவனிவைத் தரனடி யெய்தினான். 38

ஆகச் செய்யுள்—2,648

---

34. முறைமையால் - வரிசைப்படி. கொடியின் அன்னார்-பணிப் பெண்கள். மான் - குதிரை.

35. சொல்லாந் தண்ணிய வமுது - சொல்லாகிய குளிர்ந்த நீர், சொல்லாகிய குளிர்ந்த அமிர்தம்; இது செம்மொழிச்சிலேடைப் பொருள்.

36. நல் ஆக்கம் - நல்ல ஆசிவசனம். தவம் உருத் திரிந்தால் என்ன - தவம் திரிந்து மகப்பேறாக உதித்தாற்போல.

37. எரி - நெருப்பு. மருத்து - காற்று. மருத்துவன் - இந்திரன். மருத்துடல் - அமிர்தம் நிறைந்த உடல். அரிமருத்தனன் ஆம் தென்னவன் - அரிமருத்தன பாண்டியன்.

38. பரிசில் - பேறு. இரலை - மான். படைபொறித்தவன் - அருச்சுனன்; அவன் போலச் சிவபெருமான் திருமேனியில் வேந்திரப்படை பொறித்து வரம்பெறு மைந்தன் என்க; பகைவரை அழிக்கும் திறத்தால் அருச்சுனனே என்று சொல்லப்பெற்ற வலிமையுடையோனுமாம். மைந்தன் - வலிமையுடையோன்; புதல்வனுமாம்.

# 57. வலை வீசின படலம்

—o—

மின்றிரித் தன்ன வேணி வேதிய னிடைக்கா டன்பின்
சென்றுமீண் டனையான் கொண்ட பிணக்கினைத் தீர்த்த வண்ணம்
இன்றுரை செய்து முந்நீ ரெறிவலை வீசி ஞாழன்
மன்றலங் குழலி னாளை மணந்துமீள் வண்ணஞ் சொல்வாம். 1

அந்தமி லழகன் கூட லாலவா யமர்ந்த நீல
கந்தர னுலக மீன்ற கன்னியங் கயற்க ணாளாங்
கொந்தவி ழலங்கற் கூந்தற் கொடிக்குவே றிடத்து வைகி
மந்தண மான வேத மறைப்பொரு ளுணர்த்து மாதோ. 2

நாதனின் னருளாற் கூறு நான்மறைப் பொருளை யெல்லாம்
யாதுகா ரணத்தான் மன்னோ வறிகிலே மெம்பி ராட்டி
காதர மடைந்தாள் போலக் கவலையுஞ் சிறிது தோன்ற
ஆதர மிலளாய்க் கேட்டா ளஃதறிந் தமலச் சோதி. 3

அராமுக மனைய வல்கு லணங்கினை நோக்கி யேனை
இராமுக மனைய வுள்ளத் தேழைமார் போல வெம்பாற்
பராமுகை யாகி வேதப் பயனொருப் படாது கேட்டாய்
குராமுகை யவிழ்ந்த கோதா யுற்றவிக் குற்றந் தன்னால். 4

விரதமு மறனு மின்றி மீன்படுத் திழிஞ ரான
பரதவர் மகளா கென்று பணித்தனன் பணித்த லோடும்
அரதன வாரந் தாழ்ந்த வாரமென் முலையா ளஞ்சி
வரதநிற் பிரிந்து வாழ வல்லனோ வென்று தாழ்ந்தாள். 5

---

1. ஞாழல் - புலிநகக்கொன்றை, குங்கும மரமுமாம். குழலினாள் - இங்கு உமாதேவியார்.

2. நீல கந்தரன் - நீலகண்டன். மந்தணம் - இரகசியம். மறைப் பொருள் - சிவஞானம்.

3. காதரம் - அச்சம். ஆதரம் - விருப்பம். மன், ஓ : அசைநிலைகள்.

4. அராமுகம் - பாம்பின் படம். இராமுகம் அனைய உள்ளம் - இருள் நிறைந்த இடம்போல அஞ்ஞானம் நிறைந்த மனம். ஏழைமார் - பெண்கள்.

5. அறன் - தருமம்: போலி. பரதவர் - வலைஞர்.

வீங்குநீர்ச் சடையா னீங்கு மெல்லியல் பரிவு நோக்கி
வாங்குநீர்க் கானல் வாழ்க்கை வலைஞர்கோன் மகளாய் வைகி
ஆங்குநீ வளர்நாள் யாம்போந் தருங்கடி முடித்து மென்னுத்
தேங்குநீ ரமுதன் னுளைச் செலவிடுத் திருந்தா னிப்பால். 6

அன்னது தெரிந்து நால்வா யைங்கரக் கடவு டாதை
முன்னர்வந் திதனு லன்றே [1]மூண்டதிச் செய்தி யெல்லாம்
என்னவீர்ங் கவளம் போலாங் கிருந்தபுத் தகங்க ளெல்லாந்
தன்னெடுங் கரத்தால் வாரி யெறிந்தனன் சலதி மீதால். 7

வரைபக வெறிந்த கூர்வேன் மைந்தனுந் தந்தை கையில்
உரைபெறு போத நூலை யொல்லெனப் பறித்து வல்லே
திரைபுக வெறிந்தா னுகச் செல்வநான் மாடக் கூடல்
நரைவிடை யுடைய நாத னந்தியை வெகுண்டு நோக்கா. 8

அடுத்துநா மிருக்குஞ் செவ்வி யறிந்திடா திவரை வாயில்
விடுத்துநீ யிருந்தாய் தீங்கு விளைந்ததுன் றனக்கு மிந்தத்
தொடுத்ததீங் கொழிய வின்றோர் சுறவுரு வாகி வையம்
உடுத்தகா ரோத நீர்புக் குழல்கெனப் பணித்தான் மன்னோ. 9

வெருவரு செலவின் வேழ முகத்தனை விதித்த [2]சாபப்
பெருவலி தன்னைச் சாரும் பெற்றியாற் சாபங் கூறுன்
அருவரை நெஞ்சு போழ்ந்த வள்ளிலை வடிவேற் செங்கை
முருகனை வணிகர் தம்மின் மூங்கையா கென்று னிப்பால். 10

நாயக னேவ லாலே நாயகி வலைஞர் மாதர்
ஆயது நந்திப் புத்தே ளடுசுற வாகி முந்நீர்

---

6. கானல் - கடற்கரைச்சோலை. வலைஞர் கோன் - இவன்பெயர் சுதருமன்.

7. நால்வாய் - தொங்குகின்ற வாய். ஐங்கரக் கடவுள்-விநாயகக் கடவுள். சலதி - கடல்.

8. வரை - இங்குக் கிரௌஞ்சமலை. உரை - புகழ். போதநூல்-சிவஞான போதநூல். நந்தி - திருநந்திதேவர்.

9. செவ்வி - அமையம். சுறவு - மகரமீன்.

10. முருகன் சிவபெருமான் கரத்திருந்த புத்தகத்தைப் பறித்துக் கடலில் வீசியது பெருங்குற்றம் ஆதலால் முருகன் சாபம் பெற்றுன் என்க. மூங்கை - மூங்கைப் பிள்ளை; இவர் உருத்திரசன்மர் எனப்படுவார்.

பா-ம்—1 மூண்டவிச். 2 சாபம்.

மேயதுங் கருணை வள்ளன் மீன்படுத் தணங்கை வேட்டுப்
போயது மவட்குக் கேள்வி புகன்றது முறையிற் சொல்வாம். 11

சூழும் வார்திரை வைகையந் துறைகெழு நாட்டுட்
கீழை யார்கலி முகத்தது நெய்தலங் கீழ்நீர்
ஆழ நீள்கருங் கழியகழ் வளைந்து[1]கா ரளைந்த
தாழை மூதெயி லுடுத்ததோர் தண்டுறைப் பாக்கம். 12

மூடங்கு முள்ளிலை யாற்புதைந் தெதிரெதிர் மொய்த்து
நுடங்கு கைதைபோ தொடுவளி நூக்கலின் றசைவி
மடங்கு மெய்யராய்க் கையிருங் கேடக வட்டத்
தடங்கி வாள்பனித் தாடம ராற்றுவா ரனைய. 13

புலவு மீனுணக் கோசையும் புட்களோப் பிசையும்
விலைப கர்ந்திடு மமலையு மீன்கொள்கம் பலையும்
வலையெ றிந்திடு மரவமும் வாங்குமா ரவமும்
அலையெ றிந்திடு பரவைவா யடைப்பன மாதோ. 14

வாட்டு நுண்ணிடை நுளைச்சியர் வண்டலம் பாவைக்
கூட்டு கின்றசோ றருகிருந் துடைந்தபூங் கைதை
பூட்டு கின்றன நித்திலம் பொருகடற் றரங்கஞ்
சூட்டு கின்றன கடிமலர் சூழல்சூழ் ஞாழல். 15

நிறைந்த தெண்கட லாடிநீ ணெறியிடைச் செல்வோர்க்
கறந்தெ ரிந்தபோற் பொதிந்தசோ றவிழ்ப்பன தாழை

---

11. நாயகி - உமாதேவியார். வேட்டு - திருமணஞ் செய்து. கேள்வி புகன்றதும் - (உத்தரகோச மங்கையில்) உபதேசம் செய்தருளியதையும்.

12. நெய்தலங்கீழ்நீர்-கழிநிலத்துள்ள துரவு, கேணி முதலியன ; கழி - உப்பாறு ; இது மேல் நீர். பாக்கம் - நெய்தல் நிலத்தூர்.

13. வளி - காற்று. இங்குத் தாழையைப் போர் வீரராகவும் முள்ளிலைகளைக் கேடயமாகவும், மலரை வாளாகவும் உவமை கூறப்பட்டுள்ளது.

14. உணக்கல் - காயச்செய்தல். ஓப்பல் - ஓட்டுதல். அமலை - ஆரவாரம். அரவம், ஆரவம் - ஒலி.

15. வாட்டு நுண்ணிடை - தனங்கள் வருத்துகின்ற சிற்றிடை. வண்டலம் பாவை - மகளிர் விளையாட்டுக்குரிய பாவை. சோறு - மகரந்தம், அன்னம்.

பா-ம்—1 காரளைந்து, தாதளைந்து.

சிறந்த முத்தொடு பசும்பொனும் பவளமுந் திரட்டிப்
புறந்தெ ரிந்திடக் கொடுப்பன மலர்ந்தபூம் புன்னை. 16

கொன்று மீன்பகர் பரதவர் குரம்பைக டோறுஞ்
சென்று தாவிமேற் படர்வன [1]திரைபடு பவளம்
மன்றல் வார்குழ னுளைச்சியர் மனையின்மீ னுணக்கும்
முன்றில் சீப்பன கடலிடு முழுமணிக் குப்பை. 17

கூற்றம் போன்றகண் ணுளைச்சியர் குமுதவாய் திறந்து
மாற்றம் போக்கினர் பகர்தருங் கயற்குநேர் மாறுந்
தோற்றம் போக்குவ வவர்விழித் துணைகளக் கயன்மீன்
நாற்றம் போக்குவ தவர்குழ [2]னறுமலர்க் கைதை. 18

அலர்ந்த வெண்டிரைக் கருங்கழிக் கிடங்கரி னரும்பர்
குலைந்த விழ்ந்துதேன் றுளும்பிய குமுதமே யல்ல
கலந்த ருங்கட லெறிகருங் காற்பனங் கள்வாய்
மலர்ந்த ருந்திய குமுதமு மொய்ப்பன வண்டு. 19

ஆய பட்டினத் தொருவன்மே லாற்றிய தவத்தாற்
றாய வானவர் தம்மினுந் தூயனுய்ச் சிறிது
தீய திவினைச் செய்தியாற் றிண்டிமில் வாணர்
மேய சாதியிற் பிறந்துளான் மேம்படு மனையான்.. 20

செடிய காருடற் பரதவர் திண்டிமி னடத்தா
நெடிய வாழியிற் படுத்தமீன் றிறைகொடு நிறைக்குந்

---

16. பொதி சோறு - கட்டமுது ; மகரந்தம். இங்கு முத்து, பொன், பவளம் முறையே அரும்பு, மலர், பழம் என்க.

17. பகர்தல் - விற்றல். குரம்பை - சிறுகுடில். உணக்கல் - உலர்த்தல். சீப்பன-சிதைப்பன. மணிக்குப்பை முன்றிலைச் சிதைப்பன என்க. மனைமுன்றில் உணக்கும் மீனைச் சீப்பன என்றலுமாம்.

18. மாற்றம் போக்குதல் - விலை கூறுதல். மாறு - உவமை. தோற்றம் - வலிமை, காட்சி.

19. கருங்கழிக் கிடங்கர் - பெரிய உப்பங்கழியாகிய கிடங்கர். குமுதம், பின்னையது செவ்வல்லிபோன்ற பெண்களது வாய்.

20. பட்டினம்-கடற்கரை ஊர். திமில் வாணர்-தோணி வருவாய் கொண்டு வாழ்பவர் ; பரதவர்.

21. செடிய உடல் - நாற்றமுடைய உடம்பு. செடிய பரதவர் எனக் கூட்டிக் கொலைப்பாவத்தையுடைய பரதவர் என்றலுமாம்.

பா-ம்—1 திரைப்படு. 2 னகைமலர்க்.

கடிய வாயிலோ னவர்க்கெலாங் காவலோ னேற்றுக்
கொடிய வானவ னடிக்குமெய் யன்புசால் குணத்தோன். 21

மகவி லாமையா லாற்றநாண் மறுமையோ டிம்மைப்
புகலி லானென வருந்துவா னொருபகற் போது
தகவு சால்பெருங் கிளையொடுஞ் சலதிமீன் படுப்பான்
அகல வார்கலிக் கேகுவா னதன்கரை யொருசார். 22

தக்க மேருமா மலைமக ளோடையிற் றவத்தான்
மிக்க மீனவன் வேள்வியில் விரும்பிய மகவாய்ப்
புக்க நாயகி தன்பதி யாணையாற் புலவு
தொக்க மீன்விலை வலைஞன்மேற் றவப்பயன் [1]றுரப்ப. 23

இச்சை யாலவ னன்பினுக் கிரங்குவாள் போலச்
செச்சை வாய்திறந் தழுதொரு திருமக வாகி
நெய்ச்ச பாசிலைப் புன்னைநன் னீழலிற் கிடந்தாள்
மைச்ச காருடற் கொடுந்தொழில் வலைஞர்கோன் கண்டான். 24

கார்கொ ணீர்த்திரு மாதுகொல் கரந்துநீ ருறையும்
வார்கொள் பூண்முலை மடந்தைகொல் வனத்துறை வாழ்க்கைத்
தார்கொள் பூங்குழ லணங்குகொ றடங்கணு மிமைப்ப
ஆர்கொ லோமக வாகியீண் [2]டிருந்தன ளென்னா. 25

பிள்ளை யின்மையேற் கிரங்கியெம் பிரான்றமிழ்க் கூடல்
வள்ள னல்கிய மகவிது வேயென வலத்தோள்

---

22. ஆற்றநாள் - அனேக நாள். சலதி, ஆர் கலி - கடல்...

23. மேரு - இமயமலை. ஓடை - இது பத்மை எனப்பெயர் பெறும் மலர்த்தடாகம். மேற்றவம் - முற்பிறவியிற் செய்த தவம்; மேலாகிய தவம். மலைமகள் தவத்தால் ஓடையில், மீனவன் தவத்தால் வேள்வியில் எனக் கூட்டுக.

24. செச்சை - செந்நிறம்; நெய்ச்ச - நெய்த்த - நெய்ப்பினையுடைய. மைச்ச - மைத்த - கரிய. முதனூலில், உமாதேவியார் வலம்புரிச்சங்கு வடிவாய்க் கடனு ளிருக்க, வலைஞர் எடுத்துப் பரதவராசன் கையிற் கொடுக்க, அவன் பரிசித்தவுடன் பெண்மகவாயினர் என்று கூறப்பட்டுள்ளது.

25. நீருறையும் மடந்தைகொல்-நீரரமகளிரோ. இமைப்ப-இமை கொட்டா நின்றன.

பா-ம்—1 றுரப்ப. 2 டிருந்தவ.

துள்ள வன்புகூர்ந் தெடுத்திரு தோளுறப் புல்லித்
தள்ள ருந்தகைக் கற்பினா டனதுகைக் கொடுத்தான். 26

பிறவி யந்தகன் றெரிந்துகண் பெற்றெனக் கழிந்த
வறிய னீணிதி பெற்றென வாங்கினாள் வலைஞர்
எறியும் வேலையி னார்த்தனர் கையெறிந் திரட்டிக்
குறிய வாணகை வலைச்சியர் குழறினார் குரவை. 27

பிழையில் கற்புடை மனைவியும் பெறாதுபெற் றெடுத்த
குழவி யைத்தடங் கொங்கையுங் கண்களுங் குளிரத்
தழுவி முத்தமிட் டுச்சிமோந் தன்புளந் ததும்ப
அழகி தாகிய மணிவிளக் காமென வளர்ப்பாள். 28

புலவு மீன்விலைப் பசும்பொனாற் செய்தபல் பூணும்
இலகு மாரமும் பாசியுங் காசிடை யிட்டுக்
குலவு கோவையுஞ் சங்கமுங் குலத்தினுக் கிசைய
அலகி லாதபே ரழகினுக் கழகுசெய் தணிந்தாள். 29

தொண்டை வாய்வலைச் சிறுமியர் தொகையொடுந் துறைபோய்
வண்ட லாடியு நித்தில மாமணி கொழித்துங்
கண்டன் ஞாழல்சூழ் கானலங் கடிமலர் கொய்துங்
கொண்ட லோதிபின் றாழ்தரக் குரைகடல் குளித்தும். 30

தளர்ந்த பைங்கொடி மருங்குலுந் தன்னுயிர்த் தலைவன்
அளந்த வைகலுங் குறைபட வவனிடத் தார்வங்
கிளர்ந்த வன்புமொண் கொங்கையுங் கிளரநாட் சிறிதில்
வளர்ந்து வைகினாள் வைகலு முயிரெலாம் வளர்ப்பாள். 31

---

26. முதனூலில், புத்திரப் பேறில்லாத என் பொருட்டு உமாதேவியார் தந்தருளிய புத்திரியாகும் என்று பரதவராசன் மனைவி கூறியதாக உள்ளது.

27. கையெறிந்திரட்டி - கையை ஒன்றோடொன்று தட்டி விசி; இரட்டல் - விசல்.

28. பெற்று எடுத்த - (தவமுதிர்ச்சியால்) பெற்றெடுத்த.

29. பாசி - பலகறை. காசு - மணி. சங்கு - அக்குமணி. அலகு - எல்லை.

30. தொண்டை - கோவைக்கனி. வண்டல் - சிற்றிலிழைத்துச் சிறுமியர் விளையாடல். கொழித்தும் - (முச்சிலால்) கொழித்தும். கண்டல் - தாழை.

31. அளந்த வைகல் - வரையறுத்த நாள்; இங்கு வாழ்நாள். சிறிது நாள் - சில நாள்.

ஆல வாயுடை நாயக னேவிய வாறே
மாலை தாழிள மதிச்சடை மகுடமுங் கரங்கள்
நாலு மாகிய வடிவுடை நந்தியுஞ் சுறவக்
கோல மாகிவெண் டிரைக்கடல் குளித்தினி திருந்தான். 32

குன்றெ றிந்தவேற் குழகனுங் கரிமுகக் கோவும்
அன்றெ றிந்ததந் திரமெலாஞ் சிரமிசை யடக்காக்
கன்றெ றிந்தவ னறிவருங் கழன்மனத் தடக்கா
நின்றெ றிந்த[1]கன் மத்தென வுழக்கிடா நிற்கும். 33

கிட்டுந் தோணியைப் [2]படகினைக் கிழிபட விசைபோய்த்
தட்டுஞ் சோங்கினை மேலிடு சரக்கொடுங் கவிழ
முட்டுஞ் சீறிமேல் வரும்பல சுறவெலா முடுக்கி
வெட்டுங் கோடுகோத் தேனைய மீனெலாம் வீசும். 34

தரங்க வாரிநீர் கலக்கலாற் றந்திரங் கொடுமேல்
இரங்கு வான்புல வோர்க்கமு தீகையா லெண்ணூர்
புரங்கண் மூன்றையும் பொடித்தவ னாணையாற் புனலிற்
கரங்க ளுன்கையுங் கரந்தமீன் மந்தரங் கடுக்கும். 35

தள்ளு நீர்த்திரை போய்நுளைச் சேரிகள் [3]சாய்ப்பத்
துள்ளு நீர்குடித் தெழுமழை சூலிறப் பாயும்
முள்ளு நீண்மருப் புடையமீன் மொய்கல மந்தத்
தெள்ளு நீர்த்துறை நடையற வின்னணந் திரியும். 36

எற்றி தாவெனத் துறைமகன் யாமிது பிடிக்கும்
பெற்றி யாதெனக் கிளையொடும் பெருவலைப் பாசம்

---

32. மாலைதாழ் - மாலைபோலத் தாழ்ந்து அசையும். சுறவம் - சுறுமீன்.

33. தந்திரம் - நூல். கன்று - அசுரனாகிய பசுக்கன்று. எறிந்தவன் - (அக்கன்றை உயிர் நீங்கும்படி விளாமரத்தின்மேல்) வீசியெறிந்த கண்ணனாகிய திருமால். கல் மத்து-மந்தரமலையாகிய மத்து.

34. தோணி, படகு, சோங்கு என்பன மரக்கல விசேடம்.

35. இச்செய்யுள் சுறவுக்கும் மந்தரமலைக்கும் சிலேடை. தந்திரம் - நூல். தந் திரம் - தனது வலிமை. மேல்-சிரசின்மேல், மேன்மை. இரங்கல் - மனமுருகுதல், அழுதல். வான் - மேன்மை, சுவர்க்கம். புலவோர் - அறிஞர், தேவர். அமுது - ஞானமிர்தம், தேவாமிர்தம்.

36. நுளையர் சேரிகள் - வலையர் சேரிகள். சூல் - கரு.

பா-ம்—1 வன் மத்தென. 2 படவினைக். 3 சாய.

பற்றி யாழியூர் [1]படகுகைத் தெறிந்தனன் படகைச்
சுற்றி வாய்கிழித் தெயிற்றிறப் பாய்ந்தது சுறவம். 37

படவு டைப்பவோர் தோணிமேற் பாய்ந்துமத் தோணி
விடவு றத்தெறித் தெறிந்திட விசைத்தொரு சோங்கின்
இடைபு குந்துநீள் வலையெறிந் திங்ஙனம் வெவ்வே
றுடல்பு குந்துழ லுயிரெனப் பரதனு முழல்வான். 38

முன்னர் வீசினுற் பின்னுற முளைத்தெழு முயன்று
பின்னர் வீசினன் முன்னுறைப் பெயர்ந்தெழும் வலத்தில்
உன்னி வீசினு லிடம்பட வுருத்தெழு மிடத்தின்
மன்னி வீசினுல் வலத்தெழு மகரவே றதுதான். 39

எறிவ லைப்படு மகமலர்ந் தீர்ப்பவ னுள்ளம்
மறுத லைப்பட வலையினும் வழீஇப்பொரு ளாசை
நெறிம லர்க்குழ னல்லவர் நினைவென நினைவுற்
றறிப வர்க்கரி தாம்பரம் பொருளென வகலும். 40

ஏவ லாளரோ டின்னவா றின்னமீன் படுத்தற்
காவ தாந்தொழி லியற்றவு மகப்படா தாக
யாவ ரேயிது படுப்பவ ரென்றிருங் கானற்
காவ லாளனும் பரதருங் கலங்கரு ருழந்தார். 41

சங்க லம்புதண் டுறைகெழு நாடனிச் சலதித்
துங்க மந்தர மெனக்கிடந் தலமருஞ் சுறவை

---

37. துறைமகன் - துறைவன், நெய்தனிலத்தலைமகன். பாசம் - கயிறு.

38. படவு - படகு. விடவுற - பிளவுபடுமாறு.

39. மகரவேறு-சுறுமீன்; "கடல்வாழ் சுறவு மேறெனப் படுமே என்பது தொல்காப்பியம் ஆதலால், 'மகரவேறு' என்றார்.

40. அகமலர்தல் - பெருமகிழ்ச்சி. மறுதலைப்படுதல் - பெருந்துன்பமடைதல். நல்லவர் - இங்கு, விலைமாதர். பரம்பொருள் நினையாமல் நினைபவர்க்கன்றி, "நினைவுற்று அறிபவர்க்கு எட்டார் என்பதாம். இதுபற்றியே சிவஞான சித்தியாரும், "தன்னறிவதனாற் காணுந் தன்மையன் அல்லன் ஈசன்" என்றார்.

41. ஆவதாந்தொழில் - பிடித்தற்குக் கூடிய தொழில்.

42. கிழான் - உரியவன். மனம் வலித்திருந்தான் - உறுதி செய்திருந்தான்.

பா-ம்—1 படவுகைத் தெறிந்தனன் படவைச்.

[1]இங்க ணைந்தெவன் பிடிப்பவ னவனியா ளீன்ற
மங்கை மங்கலக் கிழானென மனம்வலித் திருந்தான். 42

நந்தி நாதனு மிணையணு யங்கய னாட்டத்
திந்து வாணுத லாளுமங் கணையளா யிருப்பத்
தந்தி நாலிரண் டேந்திய தபனிய விமானத்
துந்து நீர்ச்சடை யார்மண முன்னினார் மன்றே. 43

உயர்ந்த சாதியுந் தம்மினு மிழிந்தவென் றுன்னிக்
கயந்த நெஞ்சுடை வலைக்குலக் கன்னியை வேட்பான்
வியந்து கேட்பதெவ் வாறவர் வெறுக்குமுன் னவருக்
கியைந்த மீன்வலை யுருவெடுத் தேகுது மென்னா. 44

கருகிருண் முகந்தா லன்ன கச்சினன் கச்சோ டார்த்த
சுரிகையன் றோண்மே லிட்ட துகிலினன் [2]குஞ்சி சூட்டும்
முருகு[3]கொப் பளிக்கு நெய்தற் கண்ணியன் மூத்த வானோர்
இருவரு மறையுந் தேடி யிளைப்பவோர் வலைஞ னானான். 45

முழுதுல கீன்ற சேற்கண் முதல்வியை யருளி லார்போல்
இழிதொழில் வலைமா தாகச் சபித்தவா றென்னே யென்றும்
பழிபடு சாப மேறார் பரதராய் வரவும் வேண்டிற்
றழகிது நன்று நன்றெம் மாலவா யடிகள் செய்கை. 46

தன்பெருங் கணத்து ளானோர் தலைவனுஞ் சலதி வாணன்
என்பது தோன்ற வேட மெடுத்தெறி வலைதோ ளிட்டு
வென்புற மலைப்பக் காவி மீனிடு குடம்பை தாங்கிப்
பின்புற நடந்து செல்லப் பெருந்துறைப் பாக்கம் புக்கான். 47

---

43. அங்கயல் நாட்டத்து இந்து வாணுதலாள் - உமாதேவியார். தந்தி - யானை. தபனியம் - பொன்.

44. கயந்த - கசந்த - வெறுத்த; கயந்த - பெருமையமைந்த எனினுமாம். வலையுரு - வலைஞன் உருவம்.

45. கருகு இருள் - மிக்க கருநிறம் பொருந்திய இருள். முருகு - தேன்.

46. என்றும் பழிபடு சாபம் ஏறார் - எந்நாளும் பழிமிக்க சாபங் கோட்படாத எம்பெருமான்.

47. சலதி வாணன்-நெய்தல் நில வாழ்க்கையுடையவன். வென்- முதுகு. காவி - காவடிபோல் தொடுத்து. குடம்பை - கூடு.

பா-ம்—1 அங்க ணைந்தெவன். 2 குஞ்சிச். 3 கொப்பி ளிக்கும், கொப்புளிக்கும்.

கழித்தலைக் கண்டற் காடுங் கைதையங் கானு நெய்தற்
[1]சுழித்தலைக் கிடங்கு நீத்துச் சுஃறெனுந் தோட்டுப் பெண்ணை
வழித்தலை சுமந்து வார்கள் வார்ப்பவா யங்காந் தாம்பல்
குழித்தலை மலர்பூங் கானற் கொடுவலைச் சேரி [2]சேர்ந்தான். 48

பெருந்தகை யமுதன் னாளைப் பெருதுபெற் றெடுப்பா னேற்ற
அருந்தவ வலைஞர் வேந்த னதிசய மகத்துட் டோன்ற
வருந்தகை யுடைய காளை வலைமகன் வரவு நோக்கித்
திருந்தழ குடைய நம்பி யாரைநீ செப்பு கென்றான். 49

சந்தநான் மறைக டேருத தனியொரு வடிவாய்த் தோன்றி
வந்தமீன் கொலைஞன் கூறு மதுரையில் வலைஞர்க் கெல்லாந்
தந்தைபோற் சிறந்து ளானோர் தனிவலை யுழவ னல்ல
மைந்தன்யான் படைத்துக் காத்துத் துடைக்கவும்வல்ல னுவேன்.50

அல்லது வான்மீ னெல்லா மகப்பட வலைகொண் டோச்ச
வல்லவ னுவே னென்ன மற்றிவன் வலைஞன் கோலம்
புல்லிய மகன்கொ ன்முன்னம் புகன்றசொல் லொன்றிப் போது
சொல்லிய தொன்றி ரண்டுஞ் சோதனை காண்டு மென்னு. 51

தொண்டுறை மனத்துக் கானற் றுறைமக னஃதே லிந்தத்
தண்டுறை யிடத்தோர் வன்மீன் றழலெனக் கரந்து சீற்றங்
கொண்டுறை கின்ற தைய குறித்தது பிடித்தி யேலென்
வண்டுறை கோதை மாதை மணஞ்செய்து தருவே னென்றான்.52

---

48. சுஃறெனல் - ஒலிக்குறிப்பு. தோடு - மடல். பெண்ணை - பனை. கண்டல் - கடல் முள்ளி. கைதை - வெண்தாழை.

49. நம்பி - ஆணிற் சிறந்தவன்.

50. சந்தம் - சந்தஸ் - உக்தை முதலிய சந்தோபேதங்களுக்கு அட்சரசங்கியை கற்பிப்பது. படைத்துக் காத்துத் துடைக்கவும் வல்லன் என்றது, தமது இயற்கைக் குணமும், கடல் வாணராய் வந்த உமையின் கடலிற்குரிய முத்தொழிற் குணமும் தமக்குளவென்பது தோன்ற நின்றது.

51. வான்மீன் - பெரிய மீன், நட்சத்திரம். காண்டும் - காண்போம்.

52. பிடிப்பீது அரிதுஎன்பது தோன்றக் 'குறித்தது பிடித்தியேல்' என்றார்.

பாடபேதம்—1 கழித்தலை கிடங்கு. 2 சார்ந்தான்.

சிங்கவே றனையான் காலிற் சென்னடைப் படகிற் பாய்ந்து
சங்கெறி தரங்கந் தட்பத் தடங்கடல் கிழித்துப் போகிக்
கிங்கர னான காளை வரையெனக் கிளைத்த தோண்மேற்
றுங்கலிற் கிடந்து ஞான்ற தொகுமணி வலையை வாங்கி. 53

செவ்விதி னோக்கி யாகந் திருகநின் றெறிந்தான் பக்கங்
கௌவிய மணிவில் வீச விசையொலி கறங்கிப் பாயப்
பைவிரித் துயிர்த்து நாகம் விழுங்கவாய்ப் பட்ட மீன்போல்
வெவ்வினைச் சுறவே றையன் விடுவலைப் பட்ட தன்றே. 54

மாசறு கேளி ரன்பின் வலைப்படும் வலைஞர் [1]கோன்றாய்
வீசிய வலையிற் பட்ட மீனினைச் சுருக்கி வாங்கிக்
காசெறி தரங்க முந்நீர்க் கரையிடை யிட்டான் கள்வாய்
மூசுதே னென்ன வார்த்து மொய்த்தன பரதச் சாதி. 55

கிளையுநங் கோனும் வீசு வலைஞராய்க் கிளர்தோ ளாற்றல்
விளைவொடு முயன்று பன்னாள் வினைசெயப் படாத மீனிவ்
விளையவ னொருவன் றானே யொருவிசை யெறிந்தா னீர்த்தான்
அளியநங் குலத்தோர் தெய்வ மகனிவ னாகு மென்றார். 56

கைதைசூழ் துறைவ னோகை கைமிகப் பம்பை யேங்க
நொய்தெனு நுசுப்பிற் கள்வாய் நுளைச்சியர் குரவை தூங்கப்
பைதழை பகுவாய்க் கச்சைப் பரதவற் கலங்கன் [2]ஞாழல்
செய்தபூங் கோதை மாதைத் திருமணம் புணர்த்தி னானே. 57

அந்நிலை வசுவைக் கோல மாயின மருக னாரும்
மின்னிலை வேற்க ணாளும் விண்ணிடை விடைமேற் கொண்டு
தந்நிலை வடிவாய்த் [3]தோன்றத் தடங்கரை மீனந் தானும்
நன்னிலை வடிவே போன்று நந்தியாய் முந்தித் தோன்ற. 58

---

53. கிங்கரன் - பணிசெய்வோன். மணி - நயமணி.

54. ஒலி கறங்கி - ஒலிஒலித்து. வெவ்வினைச் சுறவேறு - கொடுந் தொழிலையுடைய மகரமீன்.

55. கேளிர் - அடியார். அன்பின் வலை - பத்திவலை. தாய் தாவி.

56. அளிய-அருளையுடைய. மகன் இவன் தெய்வமாகும் என்றார் என்க.

57. பம்பை - நெய்தனிலப்பறை. பகுவாய் - பாம்பு.

58. தன்னிலை வடிவம் - தமக்குரிய அருளுருவம்.

பா-ம்—1 கோன்றான். 2 ஞாழற் - செய்தெழுங். 3 தோன்

கொற்றவெள் விடைமேற் காட்சி கொடுத்தவர் கருணை நாட்டம்
பெற்றலின் மேலைச் சார்பாற் பிணித்தவிப் பிறவி [1]யாக்கைச்
சிற்றறி வொழிந்து முந்நீர்ச் சேர்ப்பனல் லறிவு தோன்றப்
பொற்றனு மேரு வீரன் பூங்கழ லடிக் [2]கீழ்த் தாழ்த்தான். 59

இரக்கமி லிழிந்த யாக்கை யெடுத்துழ லேழை யேனைப்
புரக்கவின் றென்போல் வந்த புண்ணிய வடிவம் போற்றி
அரக்கெறி பவளச் செவ்வா யணங்கினை மணந்தென் பாசங்
கரக்கவெள் விடைமே னின்ற கருணையே போற்றி யென்றான். 60

அகவிலான் பரவி நின்ற வன்பனை நோக்கிப் பன்னாள்
மகவிலா [3]வருத்த நோக்கி யுமையைநா மகளாத் தந்து
தகவினுன் மணந்தே நீயித் தரணியிற் றனத னென்ன
நகவிலாப் போக மூழ்கி நம்முல கடைவா யென்ன. 61

பெண்ணினை வதுவைக் கீந்த பெருந்துறைச் சேர்ப்பற் கன்று
தண்ணளி சுரந்து நல்கித் தருமமால் விடைமேற் றோன்றி
விண்ணிடை நின்றான் சென்றான் வேத்திரப் படையா னோடும்
உண்ணிறை யன்ப ரோடு முத்தர கோச மங்கை. 62

அங்கிருந் தநாதி மூர்த்தி யாதிநான் மறைக ளேத்துங்
கொங்கிருங் கமலச் செவ்விக் குரைகழல் வணங்கிக் கேட்பப்
பங்கிருந் தவட்கு வேதப் பயனெலாந் திரட்டி முந்நீர்ப்
பொங்கிருஞ் சுதைபோ லட்டிப் புகட்டினான் செவிக ளார. 63

---

59. முந்நீர்ச் சேர்ப்பன் - வலைஞர் தலைவன். பொன் மேரு தனு வீரன் - சிவபெருமான்; வீரம் - வரம்பிலாற்றலுடைமை.

60. ஏழையேன் - அறிவில்லாதவன். அரக்கு - செந்நிறம்.

61. அகவிலான் - மேருமலையாகிய வில்லையுடையவர் (அகம் - மலை); அடியார் மனமே கோயிலாகக் கொண்ட இறைவன். தகவினுல் - சாதி தருமத்தோடு. தகவு - தன்மை. தனதன் - குபேரன். முதனூலில், சாருபங்கொடுத்து உடனே விமானத்திலேற்றிக் கயிலாய மலைக்கு அனுப்பினார் எனக் கூறப்பட்டுள்ளது.

62. தண் அளி - தண்ணிய திருவருள். தருமம் - தரும வடிவு; இது வெண்மை வடிவு.

63. சுதை - அமிர்தம். அட்டி - சொரிந்து. புகட்டல் - உட்புகுத்தல்.

பா-ம்—1 வாழ்க்கைச். 2 கீட்டாழ்த்தான். 3 வறுமை.

அவ்வலை யன்புடையா ரறுபதினு யிரவர்க்கு மளித்துப் பாச, வெவ்வலை கடப்பித்து வீடாத பரானந்த வீடு நல்கி, மைவ்வலை யனையவிழி யங்கயற்க ணங்கையொடு மதுரை சார்ந் தான், இவ்வலை நிலம்புரக்க முடிகவித்துப் பாண்டியனென் றிருந்த மூர்த்தி. 64

ஆகச் செய்யுள்—2,712

---

64. அறுபதினுயிரவர் - திருவுத்தரகோச மங்கையில் இருந்த சிவனடியார்களும் சிவயோகிகளும்; இது முதனூலிற் கண்டது; ஞானோபதேசம் பெறக் காத்திருந்த கௌதமர் முதலியோர் எனக் கூறு வாருமுளர்.

# 58. வாதவூரடிகளுக்கு உபதேசித்த படலம்

—o—

கலைவீசு மதிச்சடையோன் கடற்றுறைவன் றலைச்சென்று
வலைவீசி யவன்பாச வலைவீசும் பரிசிதுமேல்
அலைவீசும் புனல்வாத வூரரைவந் தவிச்சைவலி
நிலைவீசிப் பணிகொண்ட நெறியறிந்த படிமொழிவாம். 1

தொடுத்தவறு மையும்பயனுந் தூக்கிவழுங் குநர்போல
அடுத்தவயல் குளநிரப்பி யறம்பெருக்கி யவனியெலாம்
உடுத்தகட லொருவர்க்கு முதவாத வுவரியென
மடுத்தறியாப் புனல்வைகைக் கரையுளது வாதவூர். 2

விழவருங நகரெங்கும் விருந்தருங மனையெங்கும்
மழவருங மகிழ்வெங்கு மறையருங கிடையெங்கும்
முழவருங வரங்கெங்கு முகிலருங பொழிலெங்கும்
உழவருங வயலெங்கு முடம்பருங வுயிரென்ன. 3

ஆயவளம் பதியதனி னமாத்தியரி லருமறையின்
றாயசிவா கமநெறியின் றுறைவிளங்க வஞ்சனையாள்
மாயனிடும் புத்தவிரு ளுடைந்தோட வந்தொருவர்
சேயவிளம் பரிதியெனச் சிவனருளா லவதரித்தார். 4

---

1. கலைவீசுமதி - கலைகளை இழந்த சந்திரன். பாச வலை வீசும் - பாசமாகிய வலையினை அறுத்தருளிய. அவிச்சை வலி நிலை வீசி - ஆணவமல சக்தியைக் கெடுத்து.

2. தொடுத்த - (ஒருவனைச்) சூழ்ந்த. இச்செய்யுள் வைகை நதி கடலோடு கலவாதது என்பதை அறிவிக்கின்றது.

3. மழவு - குழந்தைகள். கிடை - பாடசாலைகள்.

4. ஆமாத்தியர் - மறையோரில் அமைச்சுத் தொழில் பூண்டு வரும் ஒரு குடியினர். முதனூலில், இவர் சுந்தரநாதர் என்ற ஆதிசைவர்க்குப் புதல்வராக அவதரித்தவர் எனக்கூறும். கைலாசமான்மியம் மாணிக்கவாசகரைத் திருநந்திதேவர் அவதாரம் எனக் கூறுகின்றது: "குடமுழ நந்தீசனை வாசகனாகக் கொண்டார்" என்ற அப்பர் தேவாரம் அதனை வலியுறுத்தும். பிற புராணங்கள் இவரைக் கணநாதர் எனவும், உத்தரகோசமங்கைப் புராணம் ஆயிரம் முனிவருள் ஒருவர் எனவும் கூறுகின்றன.

பேர்வாத வூரரெனப் பெற்றுத்தம் பிறங்குமறைச்
சார்வாய நூல்வழியாற் சடங்கெல்லா நிறைவெய்தி
நீர்வாய விளமதிபோ னிரம்புவார் வேதமுதற்
பார்வாயெண் ணெண்கலையும் பதினுருண் டினிற்பயின்ருர். 5

இத்தகையோர் நிகழ்செய்தி யறிந்தவர்சென் றியம்பவரி
மர்த்தனபாண் டியன்கேட்டு வரவழைத்து மற்றவரைச்
சித்தமகிழ் [1]வரிசையினுற் சிறப்பளித்துத் தன்கோயில்
வித்தகநன் மதியமைச்சின் ருெழில்பூட்டி மேம்படுத்தான். 6

செற்றமிகுங் கருவிகளின் றிறநூலு மனுவேந்தன்
சொற்றபெருந் தொன்னூலுந் துளக்கமற விளக்கமுறக்
கற்றறிந்தோ ராதலினுற் காவலற்குக் கண்போன்ற
முற்றுணர்ந்த வமைச்சரினு முதலமைச்ச ராய்நிகழ்வார். 7

புல்லாதார் முரணடக்கிப் பொருள்கவர்வா ரென்பதெவன்
செல்லாத பல்வேறு தீபத்துச் செங்கோன்மை
வல்லாருந் தத்தமதேத் தரியபொருள் வரவிடுத்து
நல்லாரா யொப்புரவு நட்படைய நடக்கின்ருர். 8

அண்ணலரி மருத்தனனுக் கடல்வாத வூரமைச்சர்
கண்ணுமிடு கவசமும்போற் காரியஞ்செய் தொழுகுவார்
தண்ணளிசெய் தவனியெலாந் தங்கிளைபோற் குளிர்தூங்க
வண்ணமதிக் குடைநிழற்றி முறைசெய்து வாழுநாள். 9

மெய்ம்மை யாம்பொருள் விவேகமும் வேறுபா டாய
பொய்ம்மை யாம்பொருள் விவேகமும் புந்தியுட் டோன்ற

---

5. மறைச்சார்வாய வழிநூல் - சிட்சை முதலிய வேதாங்கங்கள். நீர்வாய - குளிர்ந்த தன்மை வாய்ந்த.

6. சிறப்பு-சிறப்புப்பெயர் ; அது 'தென்னவன் பிரமராயன்' என்பது ; இனி, அரசர்க்குரிய மேம்பாடுமாம்.

7. கருவி - சேனை. கருவிகளின் திறநூல் - அத்திரசத்திரப் பயிற்சிக்கும், யானை குதிரை தேர் ஊர்தற் பயிற்சிக்கும் உரிய நூல்கள். தொன்னூல் - மனு நூல் முதலியன.

8. புல்லாதார் - பகைவர். தீபத்து - தீவுகளில்.

9. அரசனிடத்துத் தீயவொழுக்கங் காணில் இடித்துரைத்து நல்வழியில் செலுத்துதலால் 'கண்' எனவும், தெய்வம், மக்கள் இவர்களால் நேர்ந்த இன்னல்களைச் சாந்தியாலும் சாமம் முதலிய உபாயங்களாலும் போக்குதலால், 'கவசம்' எனவும் கூறினர்.

பா-ம்—1 வரிசையிறைச்.

இம்மை யாசையு மறுமையி லாசையு மிகந்து
செம்மை யாகிய கருத்தராய்ப் பரகதி தேர்வார். **10**

புத்த ராதியோர் புறவுரை நெறிகளும் பொய்யா
நித்த வேதநூ றழுவிய வகவுரை நெறியுஞ்
சித்த மாசறுத் தரனருட் டெளிவியா வதனான்
மித்தை யர்ணவத் தொடக்கறு தில்லையாம் வீடும். **11**

பத்தி செய்தர னருள்பெறும் பத்தருக் கன்றி
முத்தி யெய்தரி தெனமறை மொழிவதப் பொதுநூற்
சத்தி யப்பொருட் டெளிவெலாஞ் சத்திநி பாதர்க்
குய்த்து ணர்த்துவ தாகம மென்பர்மெய் யுணர்ந்தோர். **12**

வேத வாகமச் சென்னியில் விளைபொரு ளபேதம்
பேத மாகிய பிணக்கறுத் திருட்பிணி யவிழ்த்து
நாத னாகிய தன்னையு மென்னையு நல்கும்
போத னாகிய குருபரன் வருவதெப் பொழுதால். **13**

கரவி லாதபே ரன்பினுக் கெளிவருங் கருணைக்
குரவ னாரரு ளன்றியிக் கொடியவெம் பாசம்

---

*10.* மெய்ம்மையாம் பொருள் விவேகம் - தனக்கோர் ஆக்கக் கேடுகளின்றிச் சுட்டறிவிற்கெட்டாது நின்ற சத்துப்பொருளை அறிதல். வேறுபாடாய பொய்ம்மையாம் பொருள் விவேகம் - ஆக்கக்கேடுகளுடைத்தாய்க் காலதேய முதலியவற்றால் ஏகதேசப்படுதலும், பலவேறு வகைப்படுதலுமுடைத்தாய்ச் சுட்டறிவிற் கெட்டி நிற்கும் அசத்துப்பொருளை அறிதல். இவற்றை வட நூலார் 'நித்தியாநித்திய வஸ்து விவேகம்' என்பர்.

*11.* புற உரை நெறிகள் - வேதாகமங்களுக்குப் புறம்பாகச் சொல்லப்படும் மார்க்கங்கள் : அவை புறப்புறச் சமயம், புறச்சமயம் என்பன. அகவுரை நெறி - வேதாகமங்களுக்கு அகமாகச் சொல்லப்படும் மார்க்கங்கள் ; அவை அகப்புறச் சமயம், அகச்சமயம் என்பன. மித்தை - பொய்.

*12.* பொது நூல் - பல பொருள்படத் தோன்றுந் தன்மையதாய வேதம். சத்திநி பாதம் - சிவசத்தி பதிதல்; இது மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என்ற நால் வகைப்படும்.

*13.* வேதவாகமச்சென்னி - சைவசித்தாந்தம். அபேதம் - (பொன்னினிடத்துப்பல ஆபரணங்கள் ஆனாற்போல இறைவனிடத்துப் பிரபஞ்சம் உண்டு என்பதே) அபேத சித்தாந்தம். பேதம் - (இருளும் வெளியும்போல இறைவனும் பிரபஞ்சமும் தம்மில் வேறு என்பதே) பேத சித்தாந்தம். இருட்பிணி - ஆணவமலக்கட்டு.

புரையில் கேள்வியாற் [1]கடப்பது புணையினா லன்றி
உரவு நீர்க்கடல் கரங்கொடு [2]நீந்துவ தொக்கும். 14

[3]என்றவ் வாதவூர் மறையவ ரின்பவீ டெய்தத்
துன்று மாசையாற் றொடக்குண்டு சுருதியா கம நூல்
ஒன்று கேள்வியோர் வருந்தொறு முணர்ந்தவ ரிடைத்தாஞ்
சென்று காண்டொறு மளவளாய்த் தேர்குவா ரானார். 15

எண்ணி லாரிடத் தளந்தளந் தறிபொரு ளெல்லாம்
உண்ணு நீர்விடாய்க் குவரிநீ ருண்டவ ரொப்ப
அண்ண லாரகத் தமைவுறா தரசனுக் குயிருங்
கண்ணு மாயமைச் சுரிமையுங் கைவிடா தியல்வார். 16

கள்ளக் காதல னிடத்தன்பு கலந்துவைத் தொழுகும்
உள்ளக் காரிகை மடந்தைபோ லும்பரைக் காப்பான்
பள்ளக் காரியுண் டவனிடத் துள்ளன்பு பதிந்து
கொள்ளக் காவல னிடைப்புறத் தொழிலுமுட் கொண்டார்.

இன்ன செய்கையி னொழுகுவா ரொருபொழு தேகித்
தென்னர் தம்பிரா னவையிடைச் சென்றெதிர் நின்றார்
அன்ன போதடு பரிநிரை காப்பவ ரரசன்
முன்னர் வந்துதாழ்ந் தொருசிறை நின்றிது மொழிவார். 18

மறந்த வாதவேல் வலவநம் வயப்பரி வெள்ளத்
திறந்த வாம்பரி போகநின் றெஞ்சிய வெல்லாம்

---

14. கரவு - கள்ளம், வஞ்சனை. கரவிலாத பேரன்பு - மெய்யன்பு. அருள் - திருவருளாகிய மரக்கலம். பாசம் - பாசமாகிய கடல். புணை - மரக்கலம்.

15. தொடக்குண்டு-கட்டுண்டு. சுருதி-இங்கு, வேதாந்தம். ஆகமம் - இங்குச் சித்தாந்தம். உணர்ந்து - (பதி, பசு, பாச விலக்கணங்களை) அறிந்து.

16. எண் - அளவு. கேட்டல், சிந்தித்தல், தெளிதல் இம்மூன்றும் பசு ஞானமே தவிரப் பதிஞானம் தாராது என்பது தோன்ற, "அறிபொருளெலாம்......உவரிநீர் உண்டவரொப்ப" என்றார். பதிஞானம் பெற எதிர்நோக்கி நின்றார் என்பது தோன்ற, "அகத்து அமைவுறாது" என்றார்.

17. பள்ளக்காரி - கடலின் நெஞ்சு. அன்பு - தலையன்பு. புறத்தொழில் - அமைச்சியலாகிய புறத்தொழில்.

பா-ம்—1 கழிப்பது. 2 நீங்குவ. 3 4 என்றிவ்.

நிறைந்த நோயவு நெடிதுழப் புடையவு மன்றிச்
சிறந்த வாம்பரி யொன்றிலை தேர்ந்திடி னென்றார். 19

மன்றல் வேம்பனும் வாதவூர் வள்ளலை நோக்கி
இன்று நீரெம தறைதிறந் திருநிதி யெடுத்துச்
சென்று வேலையந் துறையில்வந் திறங்குவ தெரிந்து
வென்றி வாம்பரி கொடுவரப் போமென்று விடுத்தான். 20

உள்ளம் வேறுபட் டமைச்சிய னெறியினின்றொழுகும்
வள்ள லார்நிதி யறைதிறந் தரும்பெறல் வயமான்
கொள்ள வேண்டிய பொருளெலாங் கொண்டுதா ழிறுக்கி
வெள்ளை மாமதி வேந்தனை விடைகொடு போவார். 21

எடுத்த பொற்சுமை யொட்டகத் திட்டுமுன் னேக
விடுத்து விண்டொடு [1]திண்டிமில் விடையவன் கோயில்
அடுத்த விழ்ந்தபொன் னம்புயத் தடம்படிந் தனைய
மடித்த டங்கரைச் சித்தியைங் கரத்தனை வணங்கா. 22

கருணை நாயகி யங்கயற் கண்ணியெம் பிராட்டி
அருணை நாண்மலர்ச் செய்ய[2]சீ றடித்தல மிறைஞ்சி
வருண ஞர்பெரு வயிற்றுநோய் வலிகெடுத் தாண்ட
தருண நாண்மதிச் சடையுடை யடிகண்முன் றுழா. 23

ஒன்று வேண்டுமிப் பொருளெலா முனக்குமைம் பொறியும்
வென்று வேண்டுநின் னன்பர்க்கு மாக்குக வெள்ளி

---

18. தம்பிரான் - தலைவன். ஒரு சிறை - ஒருபக்கம். இன்ன அன்ன : இகர அகரச்சுட்டின் திரிபுகள்.

19. மறம் - வெற்றி. வலவ - வல்லவனே. எஞ்சிய - மிஞ்சிய குதிரைகள்.

20. வேம்பன் - அரிமருத்தன பாண்டியன். அறை - நிதிச்சாலை.

21. வாதவூரர் தாமரையிலைத் தண்ணீர்போல் நிற்றலால், 'உள்ளம் வேறுபட்டு' என்றார். ஒழுகும் - வழுவாது நடக்கும்.

22. திண்டிமில் - வலிமை மிகுந்த கொண்டை. சித்தி ஐங்கரத்தன் - சித்திவிநாயகக் கடவுள்.

23. அருண - சிவந்த. தருணம் - இளமை.

24. ஒன்றுவேண்டும்- (அடியேனுக்கு) ஒரு குறையுளது அதுவே வேண்டும். சிவனடியார்க்கு உபகரிக்கில் பாசத்தை ஒழித்துச் சிவ

பா-ம்—1 திண்டிறல். (திண்டிறல் - மிக்க வலிமை.) 2 சீரடித்தல.

மன்று வேண்டிநின் முடிய வள்ளலென் குறையீ
தென்று வேண்டிநின் றேத்துவார்க் கிறைவனின் னருள்போல்.

ஆதி சைவனு மருச்சக னொருவனே ரணைந்து
பூதி யீந்தன னமக்கிது போலிலை நிமித்தம்
ஈது நன்னெறிக் கேதுவென் றிருகையேற் றணிந்து
வேத நாதனை யிறைஞ்சினர் விடைகொடு மீண்டார். 25

இன்னிய மதிர்ந்தன வெழுந்தன பதாதி
துன்னிய விணைக்கவரி துள்ளின துகிர்க்காற்
பொன்னியன் மதிக்குடை [1]நிழன்றன பொலங்கொண்
மின்னிய மணிச்சிவிகை மேற்கொடு நடந்தார். 26

மற்றிவர் வழிப்படுமுன் மாறிநட மாடும்
வெற்றிவிடை யாரிவர் வினைத்தொகையி னொப்பும்
பற்றிய விருட்டுமல பக்குவமு நோக்கா
உற்றடிமை கொண்டுபணி கொண்டருள வுன்னு. 27

சந்தமறை தீண்டரிய தங்கருணை யாலோர்
அந்தணர் குலக்குரவ னாகியடி நீங்கா
மைந்தர்பலர் தம்மொடு பெருந்துறையில் வந்தோர்
கொந்தலர் நெருங்கிய குருந்தடி யிருந்தார். 28

---

ஞானம் அளித்துச் சிவனடிக் கீழ் வைக்கும் என்பார், "நின்னன்பர்க்கும் ஆக்குக" என்றார்.

25. பூதி - விபூதி. வேதநாதன் - சோமசுந்தரக்கடவுள்.

26. பதாதி - கொடிகள். இணை - இரண்டு. துகிர் - பவளம். மதிக்குடை - முத்துக்களால் அமைந்த குடை.

27. வினைத்தொகை-நல்வினை தீவினை என்னும் இருவினை. வினைத்தொகையின் ஒப்பு - இருவினையொப்பு - சிவபுண்ணிய முதிர்ச்சியால் சுக துக்கங்களைத் தருதற்குக் காரணமாகிய கன்மமலம் ஒன்றற்கொன்று ஏறாது துலைபோலத் தம்முள் ஒத்தல்; விருப்பும் வெறுப்பும் அற்று நிற்கும் நிலை. இருட்டு மலபக்குவம் - ஆணவமல பரிபாகம்.

28. அடி நீங்கா மைந்தர் - திருவடியை இடைவிடாது தியானிக்கும் பத்தி வலிமையுடைய சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நாற்பாதமும் தெரிந்துணர்ந்த மாணாக்கர். நீங்கா - சேர்ந்த. சேர்தல்- இடைவிடாது தியானித்தல். மைந்தர் - பத்தி வலிமையுடையோர். பெருந்துறை - திருப்பெருந்துறை என்னும் தலம்: இதனை முதனூலார் 'மகாதீர்த்தம்' என்பர். குருந்து - குருந்தமரம்.

பா-ம்—1 நிழற்றின.

பொருங்கட லனீகமொடு போய்ப்புற வடுத்த
இருங்கட மளப்பில கடந்தெழு பிறப்பாங்
கருங்கடல் கடக்கவரு வார்கருணை வெள்ளப்
பெருங்கட னிறைந்துறை பெருந்துறை யடைந்தார். 29

அடுத்திட வடுத்திட வகத்துவகை வெள்ளம்
மடுத்திட முகிழ்த்தகைம் மலர்க்கமல முச்சி
தொடுத்திட விழிப்புன றுளித்திட விணைக்கே
விடுத்திடு மனத்தருள் விளைந்திட நடந்தார். 30

பித்திது வெனப்பிறர் நகைக்கவரு நாலாஞ்
சத்திபதி யத்தமது சத்தறிவு தன்னைப்
பொத்திய மலத்தினும் வெரீஇச்சுமை பொறுத்தோன்
ஒத்திழி பிணிப்புறு மொருத்தனையு மொத்தார். 31

நெருப்பிலிடு வெண்ணெயென நெஞ்சுருக வென்னை
உருக்குமித னுலெனை யொளித்தமல வாற்றல்
கருக்குமவ னுகியெனை யாள்கருணை வெள்ளம்
இருக்குமிட னேயிதென வெண்ணிநகர் புக்கார். 32

காயிலை யடைந்தகழு முட்படை வலத்தார்
கோயிலை யடைந்துகுளிர் வான்புனல் குடைந்து
வாயிலை யடைந்துடல மண்ணுற விழுந்து
வேயிலை யடைந்தவரை மெய்ப்புகழ் வழுத்தா. 33

---

29. அனீகம் - சேனை. புறவு - முல்லைநிலம். இருங்கடம்-பெரிய பாலை நிலம்.

30. முகிழ்த்த - கூப்பிய. விணைக்கே விடுத்திடும் மனம்-சிவனுக்கும் சிவனடியார்க்கும் தொண்டு செய்வதற்கே தம்மைச்செலுத்துகின்ற மனம்.

31. நாலாஞ் சத்தி பதிதல் - தீவிரதர சத்திநிபாதம். சத்தறிவு - மெய்யுணர்வு. மலம் - மும்மலம்.

32. ஆற்றல் - வன்மை. இடன் - இடம்: போலி. கருக்குமவன், அவன்: பகுதிப்பொருள் விகுதி. "நெருப்பிலிடு......உருக்குமிதனுல் - இது தலையன்பின் செயல்.

33. காய்தல் - வருத்துதல். கழுமுள் - சூலம். வேய் இ(ல்)லை அடைந்தவர் - மூங்கிலாகிய கோயிலை அடைந்தவர்; இறைவன் திருநெல்வேலியில் மூங்கில் முத்தாய்த் தோன்றியவர் ஆதலின் இங்ஙனம் கூறினுர்.

ஆலய மருங்குவல மாகவரு வார்முன்
மூலமறை யோதிமுடி யாதபொரு டன்னைச்
சீலமுனி வோர்தெளிய மோனவழி தேற்றுங்
கோலமுறை கின்றதொர் குருந்தையெதிர் கண்டார். 34

வேத நூலொரு மருங்கினு மெய்வழிச் சைவப்
போத நூலொரு மருங்கினும் புராணத்துட் கிடந்த
கீத நூலொரு மருங்கினுங் கிளைகெழு சமய
பேத நூலொரு மருங்கினும் வாய்விட்டுப் பிறங்க. 35

சுருதி கூறிய வறமுத னான்குமத் தொன்னூற்
கரிய தாங்கதிக் கேதுவென் றுகமங் காட்டுஞ்
சரியை யாதிநாற் பாதமுந் தலைதெரிந் துணர்ந்த
பெரிய மாணவர் கழகமும் வினாவிடை பேச. 36

சரியை வல்லமெய்த் தொண்டருஞ் சம்புவுக் கினிய
கிரியை செய்யுநன் மைந்தருங் கிளர்சிவ யோகந்

---

34. மூலமறையோதி முடியாத பொருள் தன்னை - முதனூலாகிய வேதத்தைப் படித்தும் அறிய முடியாத பரம்பொருளாகிய தம்மை. முனிவோர் - சனகாதிகள். மோனவழி தேற்றல் - திருவாய் மலர்ந்தருளாது சின்முத்திரைக் கையனாய் இருந்து தெளிவித்தல். கோலம் - ஆசிரியத் திருக்கோலம்.

35. சைவப் போத நூல் - சிவாகமமாகிய ஞான நூல். கீதநூல் - காந்தருவ வேதம்.

36. அறம் முதல் நான்கு - அறம், பொருள், இன்பம், வீடு என்பன. சரியையாதி நாற்பாதம் - சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. தலைதெரிந்து - பாகுபாடு செய்து. கழகம் - இங்குக்கூட்டம்.

37. இதுமுதல் மூன்று செய்யுட்கள் ஞானிகளின் இலக்கணம் கூறப்படுகின்றன. சரியை - புறத்தொழில் ஒன்றால் உருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு. சரியை வல்ல மெய்த்தொண்டர் - தாத மார்க்கத்தார். கிரியை - புறத்தொழில் அகத்தொழில் இரண்டாலும் அருவுருவத்திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு. கிரியைசெய் நன்மைந்தர் - புத்திரமார்க்கத்தார். யோகம் - அகத்தொழில் ஒன்றால் அருவுருவத் திருமேனியை நோக்கிச்செய்யும் வழிபாடு. சிவயோகந் தெரியுஞ் சாதகக் கேளிர் - சகமார்க்கத்தார். தேசிகத்தன்மைபுரியும் போதகச் செல்வர் - சன்மார்க்கத்தார். இவர் ஞானாசாரியராய்ப் பக்குவர்களுக்கு ஞானத்தை அறிவுறுத்தும் அருட் செல்வர்.

தெரியுஞ் சாதகக் கேளிருந் தேசிகத் தன்மை
புரியும் போதகச் செல்வரு மளவிலர் பொலிய. 37

ஒழித்த நோன்பின ராடலர் பாடல ருலகம்
பழித்த செய்கைய ரழுகையர் நகையினர் பாசங்
கழித்த கண்ணினு லரனுருக் கண்டுகொண் டுலகில்
விழித்த கண்குரு டாத்திரி வீரரும் பலரால். 38

கரவி லுள்ளமாம் விசும்பிடைக் காசற விளங்கும்
பரசி லாச்சுடர்க் குதயமீ றின்மையாற் பகலும்
இரவு நேர்படக் கண்டில ரியன்றுசெய் நித்த
விரத மாதிநோன் பிழந்துறை விஞ்ஞையர் பலரால். 39

உடையுங் கோவண முண்டியுங் கைப்பலி யுறவென்
றடையுங் கேளிரு மரனடி யார்கண்டி கலன்கண்
படையும் பாரிட மாயினும் பகலிரா முதலீ
றிடையின் றுயிடத் துறங்குவ திஃதவர் வாழ்க்கை. 40

---

38. ஒழித்த நோன்பு - விதிவிலக்குக் கடந்த தவம்; பசுகரணம் பதிகரணமாக நிகழப்பெற்றுத் தற்செயலிழப்பினின்று செய்வன யாவும் அவர்க்குத் தவமே என்பார், "ஒழித்த நோன்பு" என்றார். பாசங் கழித்த கண் - மலத்தை நீக்கிய கண், ஞானக்கண். உலகில் விழித்த கண் - உலகப்பொருளைப் பார்த்த கண், ஊனக்கண்.

39. கரவில் உள்ளம் - மலமறைப்பில்லாத ஆன்மா; அஞ்ஞான மறைப்பில்லாத மனமுமாம். காசற விளக்கல் - இடையீடுபடாது தோன்றுதல். பரசிலாச்சுடர் - நிட்கள சிவம், (பரசு - மழு). உதயம் ஈறு இன்மை - தோற்றக்கேடுகள் இன்றி நிற்றல். பகலும் இரவும் - இங்கே, சகல கேவலம். நேர்படல் - முற்படல். சகலகேவலம் நேர்படக் காணாத நிலை-சுத்த நிலையாகிய சாக்கிராதீதம். நித்த விரதமாதி நோன்பு - நித்திய கன்ம முதலிய தவம். விஞ்ஞையர் - ஞானியர். உறங்கினவன் கையிலுள்ள பாக்குத் தானே நழுவுதல்போல, ஞான நிட்டை மேலீட்டால் நித்திய கன்ம முதலிய தவங்கள் தாமே விலகப் பெற்றவர் என்பார், "நித்த விரதமாதி நோன்பு இழந்துறை விஞ்ஞையர்" என்றார்.

40. பலி - பிச்சை. கேளிர் - சுற்றத்தார். கண்படை - துயிலிடம். பாரிடம் - பூமி. முதல் இடை ஈறு - படைத்தல், காத்தல், அழித்தல்; இறப்பு, நிகழ்வு, எதிர்வு. தன்மை, முன்னிலை, படர்க்கை; முதல், இடை கடை. மெய்ஞ்ஞானிகள் சாக்கிரத்தே அதீதத்தைப் புரிவர் என்பார், பகலிரா......துறங்குவ திஃதவர் வாழ்க்கை" என்றார்.

இத்த கைப்பல தொண்டர்தங் குழாத்திடை யாலம்
ஒத்த பைங்குருந் தடியினில் யோகவா சனத்திற்
புத்த கத்தெழு தியசிவ ஞானமெய்ப் போதங்
கைத்த லந்தரித் திருப்பதோர் கருணையைக் கண்டார். 41

மன்று ளாடிய வானந்த வடிவமும் வடவால்
ஒன்றி நால்வருக் கசைவற வுணர்த்திய வுருவும்
இன்று நாயினேற் கெளிவந்த விவ்வுரு வென்ற
அன்று நாயகன் குறிப்புளத் துணர்த்திட வறிந்தார். 42

முன்ப ணிந்தன ரணிந்தன ரஞ்சலி முடிமேல்
என்பு நெக்கிட வுருகின ரினியரா யெளிவந்
தன்பெ னும்வலைப் பட்டவ ரருள்[1]வலைப் பட்டார்
துன்ப வெம்பவ வலையறுத் திடவந்த தொண்டர். 43

கால முங்கனுக் காட்சியு நிமித்தமுங் [2]கடிந்தார்
சீல மாணவர் செவ்விதேர் தேசிக னென்ன
மூல வாகம மோதினன் முறுக்கவிழ் கமழ்நீர்
மாலை சாந்தணிந் தடியின்மேல் வன்கமல் வீக்கி. 44

அண்ணல் வேதிய ரொழுக்கமு மன்புங்கண் டியாக்கை
உண்ணி லாவுயிர் பொருள்புன லுடன்கவர்ந் துள்ளக்

---

41. ஆலம் - கல்லால விருட்சம். சிவஞான மெய்ப்போதம் - உண்மைப்பொருளைக்கூறும் சிவஞானபோதம் என்னும் நூல்.

42. நால்வர்-சனகாதி நால்வர். உருவு-தட்சிணாமூர்த்தி வடிவம்.

43. துன்ப வெம் பவ வலை - கொடிய பிறவித்துன்பமாகிய வலை.

44. காலம் - தீட்சைக்கு விதித்தகாலம். கனாக்காட்சி - (தீட்சை பெறுவதற்கு முன்னாள் இரவில் காணும்) நல்ல கனாத்தோற்றம் ; தீய கனாவாயின் பிராயச்சித்தம் செய்தல் வேண்டும் எனச்சிவாகமங் கூறும். நிமித்தம்-பல்லி முதலியவற்றினா லுணர்த்தப்படும் நற்சகுனம். சீலம்-ஞானவொழுக்கம். செவ்வி - பக்குவம். தேர் - தேரும் (தகுதிவாய்ந்த).

45. அண்ணல் வேதியர் - சிவப்பிராமணராகிய வாதவூரர். அண்ணல் - இங்கு (காசிபர் முதலிய பஞ்ச ரிஷிகளின் கோத்திரப்) பெருமை. அண் நல் வேதியர் எனப்பிரித்துத், தம்மை மற்கட சம்பந்தமாக) அடைந்த அதிதீவிரபக்குவம் வாய்ந்த வேதியர் என்றலுமாம். உள்ளக் கண்ணினால் - சாம்பவி தீட்சையால். பத கமலஞ் சூட்டல் - சத்தி தீட்சை ; திருவடி தலையிற் சூட்டலாகிய திருவடி தீட்சையுமாம்.

பா-ம்—1 வலைப்பட்டவன். 2 கருதார்.

கண்ணி னான்மலங் கழீஇப்பத கமலமுஞ் சூட்டி
வண்ண மாமலர்ச் செங்கரஞ் சென்னிமேல் வையா. 45

சூக்க மாகுமைந் தெழுத்தினிற் சுற்றிய பாச
வீக்க நீக்கிமெய் யானந்தம் விளைநிலத் துய்த்துப்
போக்கு மீட்சியுட் புறம்பிலாப் பூரண வடிவம்
ஆக்கி னானொரு தீபகம் போல்வரு மண்ணல். 46

பார்த்த பார்வையா லிரும்புண்ட நீரெனப் பருகுந்
தீர்த்தன் றன்னையுங் குருமொழி செய்ததுந் தம்மைப்
போர்த்த பாசமுந் தம்மையு மறந்துமெய்ப் போத
மூர்த்தி யாயொன்று மறிந்திலர் வாதவூர் முனிவர். 47

தேனும் பாலுந்தீங் கன்னலு மமுதுமாய்த் தித்தித்
தூனு முள்ளமு முருக்கவுள் ளொளியுணர்ந் தின்பம்
ஆன வாறு[1]தேக் கிப்புறங் கசிவதொத் தழியா
ஞான வாணிவந் திறுத்தன ளென்பர்தந் நாவில். 48

தொழுத கையினர் துளங்கிய முடியினர் துளும்ப
அழுத கண்ணினர் பொடிப்புறு மியாக்கையர் நாக்குத்
தழுத முத்தவன் புரையினர் தமையிழந் தழல்வாய்
இழுதை யன்னமெய் யினர்பணிந் தேத்துவா ரானார். 49

---

செங்கரஞ் சென்னிமேல் வைத்தல் - அஸ்தமத்தக சையோகமாகிய பரிசதீட்சை.

46. சூக்கம் ஆகும் ஐந்தெழுத்து - சூக்கும பஞ்சாட்சரம்; இதனை, "நானேயோ தவஞ் செய்தேன் சிவாயநம வெனப்பெற்றேன்" என வரும் வாதவூரர் திருவாக்கால் அறியலாம். பாசவீக்கம் - பந்தித்த பாசக்கட்டு. ஆனந்தம் விளைநிலம் - சிவம். உட்புறம்பு - அகம் புறம். பூரணவடிவம் - வியாபக சொரூபம், சிவசொரூபம். தீபகம் - ப்ரர்வை மிருகம்.

47. தீர்த்தன் - பரிசுத்தன்; மெய்ப்போத மூர்த்தி - மெய்ஞ்ஞான சொரூபி.

48. ஊன் - உடல். உள்ளொளி - அறிவுக்கறிவாய் விளங்கும் சிவம்; தம்மால் நினைக்கப்படுகின்ற ஒளியுமாம். ஞானவாணி-ஞானக் கலைமகள்.

49. துளங்கிய - வணங்கிய. தமை - தற்போதம். இழுதை - வெண்ணெய்.

பா-ம்—1 தேக்கிய புறம்.

பழுதி லாதசொன் மணியினைப் பத்திசெய் தன்பு
முழுது மாகிய வடத்திஞன் முறைதொடுத் தலங்கல்
அழுந் சாத்துமெய் யன்பருக் ககமகிழ்ந் தையர்
வழுவி லாதபேர் மாணிக்க வாசகன் என்றூர். 50

பாட்டிற் கின்புறு குருபரன் பாதமேற் கண்ணீர்
ஆட்டிச் சொன்மல ரணிந்துதற் போதவின் னமுதை
ஊட்டித் தற்பர ஞானமா மோமவெங் கனலை
மூட்டிச் சம்புவின் பூசைமேன் முயற்சிய ராஞர். 51

ஆசை வெம்பவ வாசனை யற்றுமா ணிக்க
வாச கப்பிரான் றேசிகன் மாணவ ரோதும்
ஓசை யாகம வுபநிடப் பொருளெலாங் கேட்டு
நேச மங்குவைத் திருந்தன ரதுகண்டு நிருத்தன். 52

நித்திக்கு மணிவார்த்தை யின்னஞ் சின்ஞட் டிருச்செவியி லருந்தவுங்கைச் செம்பொ னெல்லாம், பத்திப்பே ரன்பளித்துக் கவர்ந்து வேண்டும் பணிகொடுபாண் டியனையிவர் பண்பு தேற்றி, முத்திக்கே விடுத்திடவும் புத்தை வாது முடித்திடவுந் திருவுள்ள முன்ன மெய்தி, எத்தித்தொண் டடைக்கருமஞ் சிறிதுண் டிங்கே யிருத்தியென வுருக்கரந்தா னடிய ரோடும். 53

கனவில்வருங் காட்சியெனக் கருணை மூர்த்தி காட்டிமறைத் தலுமன்பர் கலக்கத் தாழ்ந்து, நனவுகொல்லோ கனவு கொல்லோ வின்று நாதன் ஞமலிக்குத் தவிசிட்ட நலம்போ லென்னை, நினைவரிய திருமேனி காட்டி யாண்டு நீத்ததையென்

---

50. மெய்யன்பர் - வாதவூரர். ஐயர் - குருமூர்த்தி. மாணிக்க வாசகர் - இது வாதவூரருக்குரிய தீட்சாநாமம் ஆகும்; இப்பெயர் அவர் செயலுக்கேற்ப அமைந்ததாகும்.

51. தற்போதம் - சிவபோதம். தற்பரஞானம் - பரஞானம். சம்புவின் பூசை - ஞானபூசை.

52. ஆசையும் வெம்பவ வாசனையும் நீங்கி என்க; பவவாசனை - பிறவி வாசனை; பிறவிக்கேதுவாகிய மலவாசனையுமாம்.

53. பாண்டியனை - அரிமருத்தன பாண்டியனுக்கு. புத்து-புத்தர்: இஃது அமண், சமண்போல நின்ற குழூஉப்பெயர். எத்தி - ஏமாற்றி; விரகு செய்து. தொண்டரை - வாதவூரடிகளுக்கு.

54. ஞமலி - நாய். தவிசு - ஆசனம். நலம் - தகைமை.

றையுற்று நெஞ்சந் தேறி, இனவடியா ருடன்கூட்டா தேகி
ஞயோ வென்னையுமென் வினையையுமிங் கிருத்தி யெந்தாய். 54

வஞ்சவினைக் கொள்கலனு முடலைத் திவாய் மடுக்கிலேன்
வரையுருண்டு மாய்ப்பே னல்லேன், நஞ்சொழுகு வாளாலுங்
குறைப்பே னல்லே ஞதனே யதுவுநின துடைமை யென்றே.
அஞ்சினேன் ருனேயு மழியா தாவி யையனே நினைப்பிரிந்து
மாற்ற கில்லேன், என்செய்கோ வெந்தாயோ வெந்தா யோ
வென் றிரங்கினர் புரண்டழுதா ரினைய சொல்வார். 55

[1]வறியவனு மொருபிறவிக் குருடன் கையில் வந்தபெரு விலை
மணிபோன் மழலை தேருச், [2]சிறியவனு மொருமதலை கையிற்
கொண்ட செம்பொன்மணி வள்ளம்போற் றேவர் யார்க்கும், அறி
வரியாய் சிறியேனை யெளிவந் தாண்ட வருமையறி யேன்றுன்
யத் தழுவத் தாழப், பிறிவறியா வன்பரொடு மகன்ருய் கல்லாப்
பேதையேன் குறையலதெம் பிரானு லென்னே. 56

மண்ணுதி யாருறு மனந்துழாவித் தடுமாறிப்
புண்ணுகி யெனைக்காணு துழல்கின்றேனைப் போதவருட்
கண்ணு லவைமுழுதுங் கரையநோக்கி யான்யானென்
றெண்ணு வெனைத்தந்தா யெங்குற்ருயோ வெந்தாயே. 57

---

55. கொள்கலன் - பாண்டம். கலன் - கலம்: போலி. கலம்-மரக்கலமுமாம்.

56. மழலை - இளஞ்சொல். மதலை - குழந்தை. வள்ளம் - கிண்ணம் துன்பத்து அழுவத்து, அத்து: சாரியை; துன்பமாகிய கடல். அழுவம் - பரப்பு; கடல்.

57. மண்ணுதி ஆருறு - பிருதிவி முதல் நாதம் இறுதியாகிய முப்பத்தாறு தத்துவங்கள். துழாவுதல்-இங்குச் சுழலுதல், ஆராய்தல், அனுபவித்தல். தடுமாறல் - கலங்கல். புண்ணுதல் - வருந்தல். எனைக்காணுது - ஆன்மாவாகிய என்னை மலமறைப்பினுற் காணுமல். போதவருள் - பேரருள்; போதமாகிய அருள் எனினுமாம். அவை - அத்தத்துவங்கள், அத்தத்துவ வத்துவா; இன்னும் மந்திரம், பதம், வன்னம், புவனம், கலை ஆகிய அத்துவாக்களையுங்கொள்க. கரைதல் - உருச்சிதைதல். யான் யான் என்று எண்ணு - (அவற்றை) யான் யான் என்று கருதாமல். எனைத்தந்தாய் - என்னை இவற்றிற்கு வேருகக் காட்டியருளினுய்.

பா-ம்—1 வறியனு. 2 சிறியனு.

வானாதி யைந்துமுதல் வகுத்தவோசை முதலைந்தும்
ஆனாதி யங்குமன மாதிநான்கும் வழியடைப்பத்
தேனாதி யறுசுவையுங் கழியவூறுந் தெள்ளமுதம்
யானார நல்கினையா லெங்குற்றாயோ வெந்தாயே. 58

மாசாய் மறைக்குமல வலியும்நானும் வேறின்றி
ஆசா [1]விகாரமல மாயினேனைப் பொருட்படுத்திப்
பேசாத [2]வின்புருவி னின்றொடென்னைப் பின்வைத்த
ஈசா வெனையிங்கிட் டெங்குற்றாயோ வெந்தாயே. 59

என்று வாய்திறந் தரற்றினா ரிரங்கினார் புனிற்றுக்
கன்று நீங்கிய வானெனக் கரைந்தநெஞ் சினராய்ச்
சென்று கோபுர வாயிலின் புறம்புபோய்த் திரண்டு
நின்ற காவலன் றமர்களை நேர்ந்தனர் நோக்கா. 60

துங்க வாரியிற் கடும்பரித் தொகையெலா மாடித்
திங்க ளின்றலை வருமென முன்புபோய்த் தென்னர்
புங்க வன்றனக் குணர்த்துமின் போமென விடுத்தார்
அங்க ணயகன் பெருந்துறை நாயக னன்பர். 61

புரசை மாவயப் புரவிதேர்ப் பொருநர்போய்ப் பொறிவண்
டிரைசெய் தார்முடி வேந்தன்மு னிறைஞ்சினா ருள்ள

---

58. வானாதி ஐந்து - ஆகாய முதலிய ஐம்பூதங்கள். முதல் வகுத்த ஓசை முதல் ஐந்து - அப்பூதங்கட்குக் காரணமாக வகைப் படுத்திக்கூறப்பட்ட சத்த முதலிய தன்மாத்திரைகள் ஐந்து. இன்னும் ஞானேந்திரியம், கன்மேந்திரியங்களுங்கொள்க. ஆனாது - (இவற்றி னின்று) நீங்காது. மனமாதி - மனமுதலிய அந்தக் கரணங்கள். வழியடைப்ப - பிறவி இல்லையாக. தேனாதி அறுசுவை - தேன், பால், சருக்கரை, கனி, சீனி, கற்கண்டு என்பன. தெள்ளமுதம்-சிவானந்தம்.

59. ஆசா விகாரம் - மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை முதலிய பலதிறப்பட்ட ஆசைகள்; ஆசை காரணமாக வரும் தனு, கரணம், புவனம், போகம் எனினுமாம்.

60. புனிற்றுக்கன்று - இளங்கன்று. ஆன் என-பசுவைப்போல. காவலன் தமர் - அரசன் ஏவலாளர்.

61. துங்க வாரியில் - பரந்த கடல் கரை புரண்டு வருதல் போல. ஆடித்திங்கள் - ஆடி மாதம்; இது சௌரமானத்தில் வருவது, சாந் திரமானத்திற்கு ஆவணி மாதமாகும் என்க.

பா-ம்—1 விகாரமய. 2 வன்புருவி.

துரைசெய் தாரது கேட்டொன்று முரைத்தில னிருந்தான்
நிரைசெய் தார்ப்பரி வரவினை நோக்கிய நிருபன். 62

வள்ளல் வாதவூர் முனிகளு மன்னவன் பரிமாக்
கொள்ள நல்கிய பொருளெலாங் குருந்தில்வந் தாண்ட
பிள்ளை வாண்மதிச் சடைமுடிப் பெருந்துறை மறையோர்க்
குள்ள வாதரம் பெருகமுன் வேண்டியாங் குய்ப்பார். 63

சிறந்த பூசைக்குந் திருவிழாச் சிறப்புக்குஞ் செல்வம்
நிறைந்த வாலயத் திருப்பணித் திறத்துக்கு நிரப்பி
அறந்த வாதபே ரன்பர்க்குஞ் செலுத்தியத் தலத்தே
உறைந்த வாவற வின்னண மொழுகுநாள் கழிப்பார். 64

எல்லை கூறிய குளிர்மதி யடுக்கவுந் தெய்த
மல்லல் யானையா னின்னமும் வயப்பரி வந்த
தில்லை யாலிது வென்னென வோலையு மெழுதிச்
செல்ல வுய்த்தனன் வாதவூ ரமைச்சர்தந் திருமுன். 65

மன்ன வன்றிரு முகங்கண்டு முறைமையால் வாங்கி
அன்ன வாசகந் தெரிந்துகொண் டாதியீ றில்லா
முன்ன வன்றிரு வருட்கடன் மூழ்கிய முனிவர்
என்னை வேறினிச் செய்யுமா றென்றுநின் றயர்வார். 66

சிந்தை யாகிய செறுவினுட் சிவமுத லோங்கப்
பந்த பாசம்வே ரறக்களைந் தருட்புனல் பாய்ச்சி

---

62. புரசைமா - யானை ; புரசை - கழுத்திடுகயிறு. தார் - கிண்கிணி மாலை.

63. குருந்து இல் - குருந்த மரத்தின்கீழ். மறையோர் - இங்கு, ஆதி சைவராகிய அந்தணர்.

64. அறம் தவாத பேர் அன்பர் - சிவபுண்ணியத்தினின்றும் நீங்காத மெய்யன்பர்.

65. குளிர்மதி - கற்கடக ரவியாகிய ஆடிமாதம். குளிர்-ஞெண்டு இங்கும், 61வது செய்யுளில் ஆடித் திங்கட்குக் கூறியவாறு கொள்க.

66. திருவருட் கடல் - திருவருளாகிய கடல். முனிவர் - இங்கு, வாதவூரடிகள்.

67. செறு-விளைநிலம். சிவ முதல்-சிவமாகிய விதை, அன்பாகிய விதை: "அன்பே சிவமாவ தாரு மறிகிலார்" என்பது திருமந்திரம். பந்தம் - ஆணவமலம். பாசம் - மாயை முதலிய மலங்கள். பந்த பாசம் - பந்தமாகிய பாசம் : பந்தித்த பாசம். எனவுமாம்.

அந்த மாதியின் ருகிய வானந்த போகந்
தந்த தேசிக வுழுவன்றன் கோயிலைச் சார்ந்தார் 67

என்று யகனே பொன்றுட ரேறே யேறு கொடியுயர்ந்த, மன்று தென்று பெருந்துறையெம் மணியே வழுதி பொருளெல் லாம், நின்று லயத்து நின்னடியா ரிடத்துஞ் செலுத்து நெறி யளித்தாய், பின்று னவனுக் கென்கொண்டு பரிமாச் செலுத்தப் பெறுமாறே. 68

என்று விறைஞ்சி யெழுந்தேத்தி யிரந்தா ரெதிரே பெருந் துறையின், மின்றூர் சடைமேற் பிறைமுடித்தோன் விசும்பி னிறைந்த திருவாக்கான், மன்று னவற்குப் பரியெல்லாம் வரு மென் ரேலை விடுதியெனச், சொன்று னதுகேட் டகத்துவகை துளும்பி வரைந்து சுருள் விடுத்தார். 69

அந்த வோலைப் பாசுரமு மறையக் கேட்டு நின்றுங்கோர், சிந்தை யாறு மகிழ்சிறப்ப விருந்தான் புரவித் தேரோடும், வந்த வாதிச் செங்கதிரோன் மறைந்தா னவனுல் வையமெலாம், வெந்த வேடை தணிப்பான்போன் முளைத்தா [1]றுதி வெண் கதிரோன். 70

அன்று துயிலும் வாதவூ ரடிகள் கனவிற் சுடர்வெள்ளி
மன்று கிழவர் குருந்தடியில் வடிவங் காட்டி யெழுந்தருளி
வென்றி வேந்தன் மனங்கவரும் விசயப் பரிகொண் டணைகின்றேம்
இன்று நீமுன் னேகுதியென் றருளிச் செய்ய வெழுந்திருந்தார். 71

---

68. ஏறு கொடி - இடபக்கொடி. நெறி-சிவபுண்ணிய மார்க்கம்.

69. இறைஞ்சி - அட்டாங்க நமஸ்காரமாக வணங்கி. மன் - அரசன். துளும்பி - நிரம்பி, சுருள் - ஓலை.

70. ஆங்கோர் - ஒர் ஆங்கு, அறிந்தபொழுது. ஆதி - முதல். சூரிய சந்திரர்கள் செல்லுகின்ற மேடவீதி, இடபவீதி, மிதுனவீதி என்னும் மூன்றனுள், கடகமாதம் (ஆடிமாதம்) மேடவீதியாகிய முதல் வீதியிற் செல்லுதலின், அது குறிப்பித்தற்கு, "ஆதிச்செங்கதிரோன்", "ஆதி வெண்கதிரோன்" என்றூர்.

71. இங்கு, இறைவன் வாதவூரடிகளை இன்று மந்திரிக் கோலத்துடன் அரசனிடம் முன்னர் செல்லுக என்று கூறி, அரசனுக்குக் கையுறையாக ஓர் மாணிக்கத்தையும் அளித்துச் செல்ல விடை தந்தார் என்று வாதவூரடிகள் புராணம் கூறும்.

பா-ம்—1 றுழி.

கனவி னிடத்துந் தேவர்க்குங் காண்டற் கரிய கருணையுரு
நனவி னிடத்துங் கனவிடத்து மெளிதே யன்றோ நமக்கென்ன
நினைவி னிடைக்கொண் டிருக்கின்றார் நிருத்தா னந்தச் சுடருள்ளத்
தினவி ருளைத்தின் றெழுவதென வெழுந்தா னிரவி யிரவொதுங்க.

எழுந்தா ருடைய பெருந்துறையா ரிருதாள் பணிந்தா ரினிப் பிறப்பில், அழுந்தார் வழிக்கொண் டாரடைந்தா ரகன்றார் நெறிக ளவிர் திங்கட், கொழுந்தார் சடையார் விடையார்தென் கூட லணைந்தார் பாடலிவண், டுழுந்தார் வேந்தன் பொற்கோயி லுற்றார் காணப் பெற்றாரால். 73

மன்னர் பெருமா னெதிர்வந்த மறையோர் பெருமான் வழி பாடு, முன்னர் முறையாற் செய்தொழுகி முன்னே நிற்ப முக நோக்கித், தென்னர் பெருமா னெவ்வளவு செம்பொன் கொடு போ யெவ்வளவு, நன்ன ரிவுளி கொண்டதெனக் கேட்டான் கேட்ட நான்மறையோர். 74

பொன்னு மளவோ விலைகொண்ட புரவித் தொகையு மணைத்த வைதாம், பின்னர் வரக்கண் டருளுதியெம் பெருமா னிதனுற் றுரங்கபதி, என்னு நாமம் பெறுதிமதி யென்று றென்ற மந்திரர்க் குத், தென்னன் சிறந்த வரிசைவளஞ் செய்து விடுப்பச் செல் கின்றார். 75

பொன்னங் கமலத் தடம்படிந்து புழைக்கை மதமா முகக்கடவுள்
தன்னங் கமலச் சரணிறைஞ்சித் தனியேமுளைத்த சிவக்கொழுந்தை
மின்னங் கயற்கட் கொடிமருங்கில் விளைந்த தேனை முகந்துண்டு
முன்னங் கருத்து மொழியுடம்பு மூன்று மன்பாய்த் தோன்றினார்.

---

72. நிருத்தானந்தச்சுடர் - ஆனந்த நடனத்தையுடைய இறைவன். இன இருள் - செறிந்த இருள் ; ஆணவம்.

73. பிறப்பில் அழுந்தார் - பிறவியில் அழுந்தாத வாதவூரடிகள். தென்கூடல் - மதுரை மாநகர். பாடு - இசைபாடும்.

74. மறையோர் பெருமான் - வாதவூரடிகள். இவுளி - குதிரை.

75. துரங்கபதி - அளவற்ற குதிரைகளையுடைய தலைவன். பெறுதிமதி - பெறுவாய் ; மதி : முன்னிலையசை.

76. புழைக்கை மதமாமுகக் கடவுள் - சித்திவிநாயகக் கடவுள். தனியே முளைத்த சிவக்கொழுந்து - சுயம்புலிங்கமாகிய சொக்கலிங்க மூர்த்தி. முன்னம் - திருமுன்னே.

மன்னே யென்னை யாட்கொண்ட மணியே வெள்ளி மன்றாடும்
அன்னே யடியேன் வேண்டியவா றரச னீந்த நிதியெல்லாம்
முன்னே கொண்டென் பணிகொண்டாய் முனியா தரச னனிமகிழ
என்னே புரவி வரும்வண்ண மென்று வேண்டி நின்றிடலும். 77

மெய்யன் புடையா யஞ்சலைநீ வேட்ட வண்ணம் விண்ணிரவி
வையம் பரிக்கும் பரியனைய வயமாக் கொண்டு வருதுமென
ஐயன் றிருவாக் ககல்விசும்பா றெழுந்த தாக வதுகேட்டுப்
பொய்யன் பகன்றார் சிவன்கருணை போற்றி மனையிற் போயினார்.

குடிமனை யடைந்த வெல்லை வாதவூர்க் காவ லோரை
மடிமையில் சுற்றத் தோருங் கேளிரு மாண்ட காதல்
அடிமையு ளாரு மேதி லாளரும் பிறரு மீண்டி
இடிமழை வாய்விட் டென்னப் புந்திக ளினைய சொல்வார்.

மந்திரக் கிழமை பூண்டு மன்னவர் கருமஞ் செய்வ
தந்தணர்க் கறனே யல்ல வமைச்சிய லறத்து நின்றால்
வெந்திற லரசர்க் கேற்ற செய்வதே வேண்டு மென்னத்
தந்திர மனுநூல் வல்லோர் சாற்றுவா ரன்றோ வையா. 80

அரைசிய லமைச்சு நீதி யாய்ந்தநுங் கட்கு நாங்கள்
உரைசெய்வ தெவனீர் செய்வ தொன்றுநன் றாவ தில்லை
விரைசெறி தாராற் கின்று வெம்பரி வருவ தாக
வரையறை செய்தீர் நாளை யென்சொல வல்லீ ரையா. 81

தழுவிய கிளைஞர் நட்டோர் சார்வுளோர் தக்க சான்றோர்
குழுவினைக் காக்க வேண்டுங் குறிப்பிலீர் போலு நீவிர்

---

77. முனியாது - கோபிக்காமல். நனிமகிழ - மிகமகிழ. என்னே - எவ்வாறு.

78. விண் - வானில். வையம் - தேர். வயமா - வெற்றியுடைய குதிரைகள். பொய் அன்பு அகன்றார் - மெய்யன்பராகிய வாதவூரடிகள்.

79. காவலோர் - அமைச்சர். மடிமை - சோர்வு. ஏதிலார் - அயலார். வாய்விடுதல் - ஒலித்தல்.

80. மந்திரக்கிழமை - அமைச்சியல் உரிமை. தந்திரம்-நீதிநூல்: தந்திரமாகிய மனுநூலுமாம்.

81. அரைசு - அரசு: இடைப்போலி. எவன்-என்ன பயன்படும்.

82. சார்வுளோர் - அடுத்திருப்பவர். குறிப்பிலீர் போலும்-குறிப்பொழிந்தீர்போலும்; போலும்: ஒப்பில்போலி.

ஒழுகுறு செயலினாலே யுஞ்செய லுமக்கே சால
அழகிது போலு மென்னக் கழறினா ரதுகேட் டையன். 82

சுற்றமுந் தொடர்பு நீத்தேந் துன்பமு மின்பு மற்றேம், வெற்றுடன் மானந் தீர்ந்தேம் வெறுக்கைமேல் வெறுக்கை வைத்தேஞ், செற்றமுஞ் செருக்குங் காய்ந்தேந் தீவினை யிரண்டுந் தீர்ந்தேங், கற்றைவார் சடையான் கோலங் காட்டியாட் கொண்ட வன்றே. 83

தந்தைதாய் குரவ னாசான் சங்கர னிராசை பெண்டிர்
மைந்தர்பல் லுயிருஞ் சுற்ற மாசிலா வீச னன்பர்
அந்தமில் பிறவி யேழு மடுபகை யென்ப தோர்ந்தேம்
எந்தையார் கருணை காட்டி யெம்மையாட் கொண்ட வன்றே. 84

ஊரெலா மட்ட சோறு நம்மதே யுவரி சூழ்ந்த
பாரெலாம் பாய றுன்னற் கோவணம் பரிக்கு மாடை
சீரெலாஞ் சிறந்த சாந்தந் தெய்வநீ றணிபூண் கண்டி
நீரெலாஞ் சுமந்த வேணி நிருத்தனாட் கொண்ட வன்றே. 85

இறக்கினு மின்றே யிறக்குக வென்று மிருக்கினு மிருக்குக வேந்தன், ஒறுக்கினு மொறுக்க வுவகையு முடனே யூட்டினு மூட்டுக வானிற், சிறக்கினுஞ் சிறக்க கொடியதீ நரகஞ் சேரினுஞ் சேருக சிவனை, மறக்கிலம் பண்டைப் பழவினை விளைந்தான் மாற்றுவார் யாரென மறுத்தார். 86

ஆகச் செய்யுள்—2,798

---

83. தொடர்பும் - பொருட் சார்பாகிய எனது என்பதனையும். வெற்று உடல் மானம் - பயனற்ற தேகாபிமானம். வெறுக்கை - செல்வம்; வெறுப்பு.

84. குரவன் - போதகாசிரியன். ஆசான் - ஞானாசிரியன். சங்கரன் - சிவபெருமானே. நிராசை - ஆசையின்மையே. ஈசன் அன்பர் - சிவனடியாரே. அடுபகை - வருத்தும்பகையே.

85. அட்ட - சமைத்த. பாயல் - படுக்கையே. துன்னம் - தைத்தல்.

86. இறக்குக - சாகக்கடவேன். வானில் சிறக்கினும் - சுவர்க்கத்தில் இந்திர பதவி கிடைத்துச் சிறப்புற்றிருக்கினும். பண்டைப் பழவினை - பிராரத்த வினைப்பயன். இச்செய்யுள் "யானேதும் பிறப்பஞ்சேன்" என்று தொடங்கும் திருவாசகச் செய்யுளின் கருத்தை உட்கொண்டது.

# 59. நரிபரியாக்கிய படலம்

—o—

அரிகணை தொடுத்து வேழ மட்டவன் செழியன் வாயிற்
றெரிகலை யமைச்ச ரேற்றைத் தேசிக வடிவத் தீண்டி
வரிகழல் சூட்டி யாண்ட வண்ணமிவ் வண்ண மையன்
நரிகளைப் பரிக ளாக்கி நடத்திய வாறுஞ் சொல்வாம். **1**

சுற்றமாம் பாச நீவித் துகளறுத் திருந்தார் தம்மை
மற்றைநா ளழைத்து வேந்தன் வந்தில போலு மின்னங்
கொற்றவாம் பரிக ளென்னக் குறுமதி முடித்தா னன்பர்
இற்றைநாண் முதனுண் மூன்றி லீண்டுவ விறைவ வென்று. **2**

சிந்துர நுதன்மால் யானைச் செல்வவப் பரிக்கு வேறு
மந்துரை [1]யகன்ற வாக வகுக்கசூழ் தண்ணீ ரூட்ட
நந்துறை தடங்கள் வேறு [2]தொடுகநீ ணகர மெங்கும்
இந்துறை மாட மெல்லா மழகுசெய் [3]திடுக வென்றார். **3**

காவலன் கருமஞ் செய்வோர் கந்துகப் பந்தி யாற்றி
ஓவற நகர மெங்கு மொளிபெற வழகு செய்யத்
தாவுதெண் கடலேழ் கண்ட சகரர்போல் வைகன் மூன்றில்
வாவியுங் குளனுந் தொட்டார் மண்டொடு கருவி மாக்கள். **4**

வரையறை செய்த மூன்று வைகலுங் கழிந்த பின்னுட்
கரையறு பரிமா வீண்டக் கண்டில மின்ன மென்று

---

1. அரிகணை - நாரசிங்க பாணம்; இஃது எதுகையை நோக்கி இயல்பாயிற்று.

2. சுற்றத்தவரும் பாசம்போல முத்தி எய்தாமல் தடை செய்து நிற்றலின், 'சுற்றமாம் பாசம்' என்றார். சுற்றம்ஆம் பாசம் - உயிர்ச் சார்பாகிய பாசம் என்பாருமுளர். துகள் - ஆணவமலம்.

3. மந்துரை - குதிரைகள் கட்டுமிடம். நந்துஉறை - சங்குகள் வசிக்கும்.

4. கந்துகப்பந்தி - குதிரைலாயம். குளன் - குளம்: போலி. தொட்டார் - தோண்டினார்கள்.

பா-ம்—1 யகலி தாக வகுப்பது. 2 தொடுவது நகரமெங்கும். 3 திடுவ தென்றார்.

விரையறை வண்டார் தண்டார் வேம்பனும் விளித்து வந்த
உரையறை நாவி னுரை யொறுப்பவ னெத்துச் சீறு. 5

என்னிவன் பரிமாக் கொண்ட தென்றவை வருவ [1]தென்னாத்
தன்னெதிர் நின்ற வஞ்சத் தறுகணர் சிலரை நோக்கிக்
கொன்னுமிக் கள்வன் றன்னைக் கொண்டுபோய்த் தண்டஞ் செய்தெம்
பொன்னெலா மறுவு கொண்டு வாங்குமின் போமி னென்றான். 6

கற்றிணி தோளான் சீற்றங் கண்டெதிர் நில்லா தஞ்சிச்
சுற்றிய பாசம் போலத் தொடர்ந்துகொண் டேகி மள்ளர்
எற்றினி வகைதான் பொன்னுக் கியம்புமென் [2]றதிர்த்துச் சீறிச்
செற்றமில் சிந்தை யார்மேற் செறிந்தகல் லேற்றி னாரே. 7

பொன்னெடுஞ் சயிலங் கோட்டிப் புரம்பொடி படுத்த வீரர்
சொன்னெடுந் தாளை யுள்கி நின்றனர் சுமந்த பாரம்
அந்நெடுந் தகையார் தாங்கி யாற்றினா ரடைந்த வன்பர்
தந்நெடும் பார மெல்லாந் தாங்குவா ரவரே யன்றோ. 8

சிலையது பொறைதோற் றாது சிவனடி நிழலி னின்றார்
நிலையது நோக்கி மாய நெறியிது போலு மென்னாக்
கொலையது வஞ்சா வஞ்சர் கொடுஞ்சினந் திருகி வேதத்
தலையது தெரிந்தார் கையுந் தாள்களுங் கிட்டி யார்த்தார். 9

அக்கொடுந் தொழிலு மஞ்சா திருந்தன ரரனை யுள்கி
இக்கொடுந் தொழிலி னார்தா மினிநனி யொறுப்ப ரென்னாப்

---

5. கரை அறு - எல்லையற்ற. விரை - வாசனை. சண்ட - வர. உரையறை நாவினர் - வாதவூரர். சீறு - சினந்து.

6. என் - எவன் : இகழ்ச்சிக்குறிப்பின்மேல் நின்ற வினா. தறுகணர் - கொடுந்துன்பஞ் செய்யுந் தண்டலாளர். கொன்னும் - அச்சத்தைத் தரும். அறுவுகொண்டு - அறிதி செய்து ; இம்மியளவுங் குறையாமல்.

7. மள்ளர் - தண்டஞ் செய்வோர். எற்று - யாது. செற்றம் - முகக் கடுப்பு ; சினமுமாம்.

8. கோட்டி - வளைத்து. சொல் - புகழ் (வாய்ந்த). ஆற்றினார் - (அவர்) இளைப்பாற்றினார்.

9. சிலை - கல். வேதத்தலை - உபநிடதம்.

10. இரவிப்புத்தேள் - சூரியன். கடல் அழுவம் - கடலாகிய அழுவம். அழுவம் - கடல் ; பரப்பு என்றலுமாம்.

பா-ம்—1 வென்றோ. 2 றெதிர்த்துச்.

புக்கது காண்டற் குள்ளம் பொருனென விரவிப் புத்தேள்
மிக்கதன் ஞெளிகண் மாழ்கி விரிகட லழுவத் தாழ்ந்தான். 10

சுந்தர விடங்க ரன்பர் சூழ்துய ரகற்ற நேரே
வந்தெழு காட்சி போல வந்தது செக்கர் வானம்
இந்தவர் மார்பந் தூங்கு மேனவெண் கோடு போன்ற
தந்தர வுடுக்க ளெல்லா மயன்றலை மாலை யொத்த. 11

சூழிபடு பிறவித் துன்பத் தொடுகட லழுவத் தாழ்ந்து
கழிபடு தனையுங் காப்பான் கண்ணுதன் மூர்த்தி பாதம்
வழிபடு மவரைத் [1]தேரான் வன்சிறைப் படுத்த தென்னன்
பழிபடு புகழ்போ லெங்கும் பரந்தது கங்கு லீட்டம். 12

கங்குல்வந் திறுத்த லோடுங் கருஞ்சிறை யறையிற் போக்கிச்
சங்கிலி நிகளம் பூட்டித் தவத்தினைச் சிறையிட் டென்னச்
செங்கனல் சிதற நோக்குஞ் சினங்கெழு காவ லாளர்
மங்குலி னிருண்ட கண்டர் தொண்டரை மறுக்கஞ் செய்தார். 13

மிடைந்தவர் தண்டஞ் செய்ய வெஞ்சிறை வெள்ளத் தாழ்ந்து
கிடந்தவர் கிடந்தோன் பூமே லிருந்தவன் றேடக் கீழ்மேல்
நடந்தவர் செம்பொற் பாத நகைமலர் புணையாப் பற்றிக்
கடந்தனர் துன்ப வேலை புலர்ந்தது கங்குல் வேலை. 14

அந்தமி லழகன் றன்னை யங்கயற் கண்ணி யோடுஞ்
சுந்தர வமளிப் பள்ளி யுணர்த்துவான் றொண்டர் சூழ
வந்தனை செய்யு மார்ப்பு மங்கல சங்க வார்ப்பும்
பந்தநான் மறையி னார்ப்பும் பருகினர் செவிக ளார. 15

---

11. இங்குச் செக்கர் வானம் சிவபெருமானாகவும், பிறைச்சந்திரன் பன்றிக்கொம்பாகவும், நட்சத்திரங்கள் பிரமன் தலைகளாகவும் உருவகம் செய்யப்பட்டுள்ளது. இது மாலைக்கால வருணனை ஆகும்.

12. கழிபடு - கலங்கி வருந்தும். காப்பான் - காக்க. பழிபடு புகழ் - பழி பொருந்திய புகழ். கங்குல் - இருள்.

13. கருஞ்சிறை அறை - பெரிய சிறைச்சாலை. சங்கிலி நிகளம் - சங்கிலியாகிய விலங்கு. மங்குலின் - மேகத்தைப்போல. மறுக்கம் - துன்பம்.

14. கிடந்தோன் - இங்குத் திருமால். நடந்தவர் - புலப்படாது உலவிய இறைவர். கங்குல்வேலை - இராக்காலம். வேலை - காலம்.

15. அமளிப்பள்ளி - படுக்கை; திருப்பள்ளியெழுச்சி.

பா-ம்—1 தேருன்.

போதவா நந்தச் சோதி புனிதமெய்த் தொண்டர்க் காக
நாதமா முரச மார்ப்ப நரிப்பரி வயவர் சூழ
வேதவாம் பரிமேற் கொண்டு வீதியில் வரவு காணுங்
காதலான் போலத் தேர்மேற் கதிரவ னுதயஞ் செய்தான். 16

கயனெடுங் கண்ணி யோடுங் கட்டவிழ் கடிப்பூஞ் சேக்கைத்
துயிலுணர்ந் திருந்த சோம சுந்தரக் கருணை வெள்ளம்
பயினெடுஞ் சிகர நோக்கிப் பங்கயச் செங்கை கூப்பி
நயனபங் கயநீர் சோர நாதனைப் பாட லுற்றார். 17

எந்தா யனைத்துலகு மீன்றாயெத் தேவர்க்குந்
தந்தாய் செழுங்குவளைத் தாராய் பெருந்துறையில்
வந்தாய் மதுரைத் திருவால வாயுறையுஞ்
சிந்தா மணியே சிறியேற் கிரங்காயோ. 18

மூவா முதலாய் முதுமறையா யம்மறையுந்
தாவாத சோதித் தனிஞான பூரணமாய்த்
தேவாதி தேவாய்த் திருவால வாயுறையும்
ஆவார் கொடியா யடியேற் கிரங்காயோ. 19

முன்னை முதுபொருட்கு முன்னை முதுபொருளாய்ப்
பின்னும் புதுமைக்கும் பின்னுகும் பேரொளியாய்த்
தென்னை மதுரைத் திருவால வாயுறையும்
என்னை யகனே யெளியேற் கிரங்காயோ. 20

மண்ணாய்ப் புனலாய்க் கனலாய் வளியாகி
விண்ணா யிருசுடரா யித்தனையும் வேறாகிப்

---

16. போதம் - அறிவு. நாதம் - நாத தத்துவம். நரிப்பரி - நரியாகிய குதிரை. வயவர் - குதிரை வீரர்.

17. பூஞ்சேக்கை - மலர்ப்பள்ளி. துயிலுணர்தல் - நித்திரை விட்டெழுதல். நயனம் - கண்.

18. வந்தாய் - ஞானாசிரியனாக வந்தவனே.

19. மூவா - என்றும் மூத்தல் இல்லாத; நிலைத்த இளமையான. ஆ ஆர் கொடி - இடபம் பொருந்திய கொடி; ஆ வார் கொடி எனப் பிரித்து நீண்ட இடபக்கொடி என்றலுமாம்.

20. இச்செய்யுளின் முதல் இரண்டடிகள், ''முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம் பொருளே பின்னைப் புதுமைக்கும் பேர்த்து மப்பெற்றியனே'' என்ற திருவாசக அடிகளைத் தழுவி நிற்றல் காண்க.

பண்ணு மிசையாய்ப் பனுவலா யெங்கண்ணுங்
கண்ணுறு மென்னுறுகண் காணுவா றென்கொலோ. 21

பொங்குஞ் சினமடங்கல் போன்றுருத்து வெங்கூற்றம்
அங்கும் புரியா வருந்துன்பத் தாழ்ந்துநான்
மங்கும் படியறிந்தும் வந்தஞ்ச லென்கிலையால்
எங்குஞ் செவியுடையாய் கேளாயோ வென்னுரையே. 22

பூட்டியருட் பாசமிரு பாதம் பொறித்துடலிற்
கூட்டி யடியாரு ளகப்படுத்தாட் கொண்டருமை
காட்டியவோ வின்றென்னைக் கைவிட்டாய் வெய்யரெனை
ஆட்டி யொறுக்குமிடத் தாரேன்று கொள்வாரே. 23

ஊரா ருனைச்சிரிப்ப தோராயென் றுன்னடிமைக்
காரா யடியே னயர்வே னஃதறிந்தும்
வாரா யரசன் றமரிழைக்கும் வன்கண்ணோய்
பாரா யுன்றன்மை யிதுவோ பரமேட்டி. 24

என்றி ரங்குவோ ரிரங்கொலி யிளஞ்சிறு ரழுகை
சென்று தாயர்தஞ் செவித்துளை நுழைந்தெனச் செல்லக்
குன்றி ருஞ்சிலை கோட்டிய கூடலு யகன்கேட்
டன்று வன்சிறை நீக்குவான் றிருவுளத் தமைத்தான். 25

நந்தி யாதியாம் பெருங்கண நாதரை விளித்தான்
வந்தி யாவரும் பணிந்தனர் மன்னவற் கின்று

---

21. மண்ணாய்ப் புனலாய்க் கனலாய் வளியாகி, விண்ணாய் இருசுடராய் - இது விசுவரூப வடிவு.

22. மடங்கல் - சிங்கம். அங்கும் - நரகத்தும்.

23. உடலில் - இங்குத் தலையில். வெய்யர் - கொடியவர்கள். ஆட்டி - தங்கள் வழிப்படுத்தி. ஏன்று கொள்வார் - அஞ்சேல் என்று அருள் செய்வார்.

24. அடிமைக்கு ஆர் ஆய் - அடியவருள் எவராய். வன்கண் நோய் - கடுந்துன்பம்.

25. இரங்கொலி - கேட்டார் இரங்குதற்கேதுவாகிய ஒலி; முறையிட்டொலி.

26. ஆதி என்றதனால் பிருங்கி, மாகாளர், கும்போதரர் திகும்பன், சங்குகன்னன், அனந்தன் என்ற இத்தொடக்கத்தோரையுங் கொள்க. செலுத்துவான் - செலுத்துதல். ஆவணி மாதத்தில் வரும்

முந்தி யாவணி மூலநாள் வந்தது முனிவு
சிந்தி யாமுனம் பரியெலாஞ் செலுத்துவான் வேண்டும். 26

யாவ ரும்புனத் தியங்குறு நரியெலா மீட்டித்
தாவ ரும்பரி யாக்கியத் தாம்பரி நடாத்துஞ்
சேவ கஞ்செய்வோ ராகிமுன் செல்லுமின் யாமும்
பாவ கம்பட வருதுமப் படியெனப் பணித்தான். 27

ஏக நாயக னணைபூண் டெழுகணத் தவரும்
நாக நாடரும் வியப்புற நரியெலாந் திரட்டி
வேக வாம்பரி யாக்கியவ் வெம்பரி நடாத்தும்
பாக ராயின ரவர்வரும் பரிசது பகர்வாம். 28

தூக்கி யார்த்தசெம் பட்டினர் சுரிகையர் தொடுதோல்
வீக்கு காலின ரிருப்புடற் காப்பினர் வெருளின்
நோக்கு பார்வையர் புண்டர நுதலின ரிடியிற்
றாக்கி யார்ப்பெழு நகையினர் தழன்றெழு சினத்தோர். 29

வட்டத் தோல்வரி புறங்கிடந் தசையவை வடிவாள்
தொட்ட கையினர் சிலர்நெடுந் தோமரஞ் சுழல
விட்ட கையினர் சிலர்வெரி நிடைநெடு விசிகப்
புட்டில் வீக்கிவிற் றாக்கிய புயத்தினர் சிலரால். 30

செம்ப டாஞ்செய்த போர்வையர் [1]சிலர்பசும் படத்தான்
மொய்ம்பு வீக்கிய கவயத்தர் சிலர்கரு முகில்போல்
அம்பு யம்புதை காப்பினர் சிலர்சில ரவிரும்
பைம்பொன் வாணிறப் படாஞ்செய்குப் பாயத்தர் சிலரால்.

---

மூலநட்சத்திரம் ஆடிமாதத்தினிறுதியில் வந்தமையால், 'ஆவணி மூல நாள் வந்தது' என்றார்.

27. தாவும் என்பது தாம் என விகாரமாயிற்று. பாவகம் பட - (பார்ப்போருக்குக் குதிரைச் சேவகர் என்னும்) கருத்துண்டாக.

28. எழு - எழுகின்ற; ஏழுமாம். வாம் - தாவும்.

29. சுரிகை - உடைவாள். தொடுதோல் - பாதரட்சை. இருப்புடற்காப்பு - இரும்புச்சட்டை.

30. வட்டத்தோல் - வட்டமாகிய பரிசை, கேடகம். வெரிந் - முதுகு. விசிகப்புட்டில் - அம்பறாத்தூணி; விசிகம் - அம்பு.

31. மொய்ம்பு - தோள். கவயம்-கவசம். புதை-அம்பறாத்தூணி. குப்பாயம் - கவசம், சட்டை.

பா-ம்—1 சிலர் சிலர்.

பிச்ச வொண்குடை யார்பலர் கவரிவால் பிறங்கத்
தைச்ச தண்குடை யார்பலர் சல்லிசூழ் நாற்றி
வைச்ச வண்குடை யார்பலர் வாணிலா முத்தம்
மொய்ச்ச வெண்குடை யார்பலர் மொய்ம்பின ரிவருள். 32

தரும மாதிநாற் பொருளெனுந் தாளது ஞான
கரும காண்டமாஞ் செவியது காட்சியைக் கடந்த
ஒருமை யாம்பர மபரமா முணர்வெனுங் கண்ண
தருமை யாம்விதி முகத்தது நிடேதவா லதுவால். 33

தந்தி ரங்களாற் புறவணி தரித்தது விரித்த
மந்தி ரங்களாற் சதங்கைதார் மணிச்சிலம் பணிந்த
தந்த ரஞ்சுழல் சோமனு மருக்கனு மிதிக்குஞ்
சுந்த ரப்பதம் பொறைகொளத் தூங்கிரு புடைத்தால். 34

மாண்ட தாரகப் பிரமமாங் கலினம்வாய் கிழியப்
பூண்ட தாற்புறச் சமயமாம் பொருபடை முரிய
மூண்டு போரெதிர் வினைத்திகன் முடிப்பது முளரி
ஆண்ட கோமுக மந்துரை யாகமே வியதால். 35

அண்ட கோடிக ளனைத்துமோர் பிண்டமா வடுக்கி
உண்ட நீரதா முதுகின்மே லுபநிடக் கலனை
கொண்ட வாலிய வைதிகப் புரவிமேற் கொண்டான்
தொண்டர் பாசவன் றொடரவிழ்த் திடவருஞ் சோதி. 36

ஆன மந்திரக் கிழார்பொருட் டன்றியும் வென்றி
மீன வன்பிறப் பறுக்கவும் வார்கழல் வீக்கி

---

32. பிச்சவொண்குடை - பீலிக்குஞ்சக்குடை. மொய்ம்பினர் - வலியினையுடையவர்.

33. தருமமாதி நாற்பொருள் - அறம், பொருள், இன்பம், வீடு என்பன. பரம் அபரம் ஆம் உணர்வு - பரஞானம் அபரஞானம்; பர ஞானம் - திருவருள் ஞானம்; அபர ஞானம் - ஆகம ஞானம். நிடேதம் - விலக்கு.

34. தந்திரம் - சிவாகமம். புற அணி - புறத்தில் அணியும் ஆபரணங்கள். சோம சூரியர்களாகிய அங்கவடிகள் தூங்குகின்ற இரு மருங்கினையுடைத்து என்க.

35. தாரகப்பிரமம் - பிரணவ மந்திரம். முளரி ஆண்ட கோ - பிரமன்.

36. க(ல்)லனை - குதிரைமேற்றவிசு. வாலிய - பரிசுத்தமாகிய.

வான நாயக னேந்திய மறையுறை கழித்த
ஞான வாள்புற விருளையு நக்கிவா ளெறிப்ப. 37

சாய்ந்த கொண்டையுந் திருமுடிச் சாத்தும்வாள் வைரம்
வேய்ந்த கண்டியுந் தொடிகளுங் குழைகளும் வினையைக்
காய்ந்த புண்டர நுதலும்வெண் கலிங்கமுங் காப்பும்
ஆய்ந்த தொண்டர்த மகம்பிரி யாதழ கெறிப்ப. 38

பிறக்கு மாசையோர் மறந்துமிங் கணுகன்மின் பிறப்பை
மறக்கு மாசையோ ரிம்மென வம்மினன் பரைவேந்
தொறுக்கு நோய்களை வாளென வொருவனும் பிறவி
அறுக்க வந்தன னென்பபோற் பரிச்சிலம் பலம்ப. 39

கங்கை யைச்சடை முடியின்மேற் கரந்தனை யவள்போல்
எங்க டம்மையுங் கரந்திடென் றிரந்துகா வேரி
துங்க பத்திரை யாதியா நதிகளுஞ் சூழப்
பொங்கி வீழ்வபோ லொலியலுங் கவரியும் புரள. 40

வாவி நாறிய வாலிதழ்த் தாமரை மலரோன்
நாவி நாளுமை நாயக னுன்மறை பரியா
மேவி னானெனத் தானொரு வெண்குடை யாகிப்
பாவி னானெனை முடியின்மேற் பானிலாக் கால. 41

முறையி னோதிய புராணமூ வாறுநா மொழியும்
இறைவ னுமிவன் படைத்தளித் தழிப்பவ னிவனே
மறையெ லாமுறை யிடுபரம் பொருளென வாய்விட்
டறையு மாறுபோ லியங்களி ரொன்பது மார்ப்ப. 42

மிடைந்த மாயவாம் பரித்திரண் மேற்றிசை நோக்கி
நடந்த நாயக னுன்மறைப் புரவியு நாப்பண்

---

37. மந்திரக்கிழவர்-அமைச்சு உரிமை பூண்ட வாதவூரர். மீனவன் - அரிமருத்தன பாண்டியன். நக்கி - போக்கி.

38. திருமுடிச்சாத்து - தலைப்பாகை. வினை - நல்வினை, தீவினை. வெண்கலிங்கம் - வெள்ளை வஸ்திரம்.

39. ஒருவன் - ஒப்பற்ற இறைவன். பரி - வேதக்குதிரை.

40. ஒலியல் - மேலாடை, ஈயோட்டுங் கருவியாகிய ஈச்சோப்பியுமாம்.

41. நாறல் - தோன்றல், கமழுதல். பாவினால் என - நிழல் தருதல் போல்.

42. முறையின் ஓதிய - முறைப்பட வகுத்த. இயம் - வாத்தியம்.

அடைந்த தாலெழுந் தூளிக ளண்டமுந் திசையும்
படர்ந்த போம்வழி யாதென மயங்கினுன் பரிதி. 43

பள்ள மாக்குவ திடரினைப் பள்ளத்தை மேடு
கொள்ள வாக்குவ பாரெலாம் விலாழிகொப் பளித்து
வெள்ள மாக்குவ தூளியால் வெள்ளத்தை வெறிதாய்
உள்ள தாக்குவ புள்ளுரு வுருக்கொண்ட பரிமா. 44

கொய்யு ளைப்பரி யெழுந்ததூள் கோப்பவான் கங்கை
வையை யொத்ததேழ் பசும்பரி செம்பரி மாவாச்
செய்த தொத்தது சிந்துரந் திசைக்கய முகத்துப்
பெய்த தொத்தா லொத்தது பெரும்பகன் மாலை. 45

விளம்பு கின்றவச் சம்புவெம் பரித்திரண் மிதிக்குங்
குளம்பு கிண்டிய வெழுந்ததூள் குன்றிற கரிந்தோன்
வளம்பு குந்தடை வார்குர வழிபுரி வேள்விக்
களம்பு கைந்தெழு தோற்றமே யல்லது கடாதால். 46

மட்பு லந்திசை வான்புதை பூழியுண் மறைந்து
கொட்பு றும்பரி சதங்கைதா ரொலியினுங் குளிர்வான்
பெட்பு றுங்குர லொலியினுஞ் செவியினிற் பிறிது
கட்பு லங்களாற் கண்டிலர் வழிவரக் கண்டோர். 47

தரங்கமெறி முத்திவை விலாழியல தார்மா
இரங்குமொலி யல்லதிரை யோங்குமொலி [1]யின்ன

---

43. மாயம் - வஞ்சம், மாயை. திசை - எட்டுத்திசைகள்.

44. விலாழி - குதிரைவாய் நுரை. புள்ளுரு வுரு - வஞ்சகவடிவம்.

45. உளை - புறமயிர். தூள் - தூசி. பெரும்பகல் - நடுப்பகல்.

46. சம்பு - நரி, சிவபெருமான் : சிலேடை. வளம் - பதவி, சுவர்க்கபதவி. புகுந்தடைவார் - சென்றடையும் கருத்துடையார். குரம் வழி புரி வேள்வி-குதிரை கால் வைத்த இடத்திற் செய்யும் யாகம். குரம் - குளம்பு ; இஃது ஆகுபெயராய்க் காலையுணர்த்திற்று. வழி - இடம். கடாது - ஒப்பாகாது ; கடுத்தல் - ஒத்தல்.

47. பூழி - புழுதி. கொட்புறல் - கொள்ளிவட்டம்போல் சுழனுதல். வான் - மேகம். பெட்புறும் - விரும்பும்.

48. தரங்கம் - கடல் அலைகள். தார் - கிண்கிணிமாலை. மா, துரங்கம் - குதிரை. சுரர்க்கரசன் - இந்திரன். புணரி - கடல்.

பா-ம்—1 யின்னும்.

துரங்கமல மற்றிவை சுரர்க்கரச னின்றும்
புரங்கொல விடுத்திட வரும்புணரி யென்பார். 48

இம்பருல குள்ளவல பண்டினைய பாய்மா
உம்பருல காளிபரி யேகொலது வொன்றே
வெம்பரிதி வெம்பரிகொ லேழவைக ளேழும்
பைம்பரிகள் யாவினைய பாய்பரிக ளென்பார். 49

வெம்பணிக ளப்பொர வெகுண்டெழுவ தேயோ
பைம்புன லுடுத்தமுது பார்முதுகு கீறும்
உம்பருல கைப்பொர வுருத்தெழுவ தேயோ
அம்பர முகட்டள வடிக்குர மழுத்தும். 50

உத்தர திசைப்புரவி தெற்கடையு மாறும்
அத்தகைய தெற்குள வடக்கடையு மாறும்
[1]அத்தகை குடக்கொடு குணக்கடையு மாறுஞ்
சித்தர்விளை யாடலின் வெளிப்படுதல் செய்யா. 51

மறைமரபு சாலவரும் வன்னியிவை பொன்னித்
துறைவனுள முஞ்சுடு மிரும்பனை தொடுக்கும்
அறவனுள முஞ்சுடு மமைச்சரை யொறுக்கும்
இறைவழுதி யுள்ளமு மினிச்சுடுவ தென்பார். 52

முந்தையொரு மந்திரி பொருட்டரசன் முன்னூ
அந்தமி லனீகமொ டரும்பரியில் வந்தாங்
கிந்தமறை மந்திரி யிடும்பைதணி விப்பான்
வந்தனர்கொ லிப்பரி வரும்பொருந ரென்பார். 53

---

49. பைம்பரிகள் - பச்சைக்குதிரைகள். யா - எவை ; பலவின் பாலில் வந்த வினு.

50. பணிகள் - (பாதலத்தில் வசிக்கும் ஆதிசேடன் முதலிய) பாம்புகள். அம்பரம் - ஆகாயம். முகடு - உச்சி. அடிக்குரம்-அடிக் குளம்பு.

51. உத்தரதிசை - வடக்குத்திசை. குடக்கு - மேற்கு.

52. மறைமரபு - வேதமுறை, அசுவசாத்திரமுறை. வன்னி - அக்கினி, குதிரை.

53. முந்தை ஒரு தந்திரி - முதலிலுள்ள ஒரு சேனைத் தலைவராகிய சௌந்தர சாமந்தன். அரசன் - இங்குக் குலபூடண பாண்டியன். அனிகம் - சேனை. பொருநர் - வீரர்.

பா-ம்—1 இத்தகை.

காமனிவ னேகொலறு காலுழு கடப்பந்
தாமனிவ னேகொல்பொரு தாரகனை வென்றோன்
மாமனிவ னேகொன்மலை வன்சிற கரிந்த
நாமனிவ னேகொலென நாரிய ரயிர்த்தார். 54

அடுத்திடுவர் கண்ணிறைய வண்ணலழ கெல்லாம்
மடுத்திடுவர் கைவளையை மாலைவிலை யென்னக்
கொடுத்திடுவர் மாலைகள் கொடுத்திடுதி யன்றேல்
எடுத்திடுதி யெங்கள்வளை யெங்கள்கையி லென்பார். 55

ஏந்தன்முடி மாலைமலர் சிந்தினவெ டுத்துக்
கூந்தலின்மி லைந்துமதன் வாகைமலர் கொள்வார்
சாந்தனைய சிந்தின தனந்தடவி யண்ணற்
றேய்ந்தளவி லாமகிழ் துளும்பினவ ராவார். 56

பொட்டழகன் மார்பிலிடு போர்வைகவ சப்பேர்
இட்டதுமெய் நம்முயிர்த டுத்தமையி னென்பார்
கட்டழகன் மாலையது கண்ணியென வோதப்
பட்டதுமெய் நம்முயிர் படுத்தமையி னென்பார். 57

இச்சை யால்வடி வெடுப்பவ னிந்திர சால
விச்சை காட்டுவா னெனப்பரி வீரனி வுலகைப்
பிச்ச தேற்றிட மயக்கியுங் காமனிற் பெரிது
[1]நச்சு மாதரை மயக்கியு மிங்ஙன நடந்தான். 58

தாவு கந்துக மிந்திய மொத்தன சயமா
வாவு திண்கண மள்ளர்கண் மனங்களை யொத்தார்

---

54. அறுகால் - வண்டு. கடப்பந்தாமன் - முருகன். தாரகனை வென்றோன் மாமன் - தாரகாசுரனை அழித்த முருகக்கடவுளின் மாமனாகிய திருமால். மலை வன் சிறகு அரிந்த நாமன் - இந்திரன். நாரியர் - பெண்கள்.

55. மாலை விலை என்ன - மாலைக்கு விலையாக. எடுத்திடுதி - எடுத்திடுவாய்.

56. ஏந்தல் - இறைவர். மிலைந்து - சூடி. மதன் - மன்மதன்.

57. கட்டழகன் - பேரழகன்; இறைவன். மாலை - திருமுடிமாலை, கண்ணி - திருமுடிமாலை; பறவைகளைப் பிடிக்கும் வலை.

58. விச்சை - வித்தை. பிச்சு - பித்து - மயக்கம்; அது : பகுதிப் பொருள் விகுதி.

பா-ம்—1 நச்ச.

மேவி யம்மனந் தொறுமிடை விடாதுநின் றியக்கும்
ஆவி யொத்தது நடுவரு மருமறைப் பரியே. 59

துன்னு மின்னிய முழக்கமுந் துரகத வொலியும்
அன்ன வீரர்வா யரவமுந் திசைசெவி டடைப்பக்
கன்னி மாமதில் சூழ்கடி நகர்க்கரைக் காதம்
என்ன வெய்தினன் மறைப்பரிப் பாகனவ் வெல்லை. 60

கண்டவர் கடிதோடிக் கடிநகர் குறுகிக்கார்
விண்டவழ் மணிமாடத் தடுசிறை மிடைகின்ற
கொண்டலி னனையார்முன் குறுகினர் மலர்செவ்வி
முண்டக வதனத்தார் முகிழ்நகை யினர்சொல்வார். 61

மன்னவ னெறிகோடா மந்திர ரடலேறே
பன்னிற வெழுமுந்நீர்ப் பரவைகள் வருமாபோற்
றுன்னின வருகின்ற துரகத முளவெல்லாம்
பொன்னெயின் மணிவாயில் புகுவன விதுபோதில். 62

ஒல்லையி லதுமன்னற் குரையுமி னெனமேரு
வில்லவ னருள்பெற்ற வேதியர் பெருமான்போய்ச்
செல்லது தளையிட்ட திருமக னருகெய்தி
மல்லணி திணிதோளாய் வருவன பரியென்றார். 63

மருத்தென வருகின்ற மாக்கட லெனமன்னன்
திருத்தணி கடகப்பூண் டெறித்திட [1]வுடல்விங்கிப்

---

59. கந்துகம், சயமா - குதிரைகள். இந்தியம் - ஐம்பொறிகள்.

60. துன்னும் - நெருங்கிய. கன்னி மாமதில் - அழிவில்லாத பெரிய மதில்.

61. மேகம் கைம்மாறு கருதாது உலகிற்கு இன்பம் தரும் நன்னீர் மழை பொழிதல்போல, மாணிக்கவாசகர் என்ற மேகமும் கைம்மாறு கருதாது உலகினர்க்குப் பேரின்பந்தரும் அருமைத் திருவாசக மழை பொழிந்தருளுவதால், 'கொண்டலின் அனையார்' என்றார்.

62. மந்திரர் - அமைச்சர். அடல் - வெற்றி. எழு முந்நீர்ப் பரவைகள் - ஏழு கடல்; (முந்நீர் - ஆற்றுநீர், ஊற்று நீர், மேல்நீர், என்னும் மூன்று நீர்களையுடைய).

63. வேதியர் பெருமான் - வாதவூரடிகள். செல் - மேகம். திருமகன் - பாண்டியன்.

பா-ம்—1 வுடல்வீங்கப்.

பெருத்தெழு மகிழ்தூங்கிப் பெருவிலை மணியாரம்
அருத்திகொள் கலைநல்கி யமைச்சரை மகிழ்வித்தான். 64

ஏந்தரி யணைநீங்கி யெழுதிய தலைவாயிற்
போந்தரு கொளிர்மாடம் புகுந்தரி யணைமேவிக்
காந்தளின் விரனல்லார் கவரிகள் புடைவீச
ஆய்ந்தவர் புறஞ்சூழ வடுபரி வரவேற்பான். 65

பரனருள் விளையாடல் காட்டிய பரிவெள்ளம்
வருவன சிறுகாலந் தாழ்த்தலு மதிவேந்தர்
புரவலன் மனம்வெள்கிப் பொய்யிது வெனவுள்கி
அருகணை யுழையோரைக் குறித்தன னழல்கண்ணன். 66

மன்னவ னினைவாற்றான் மந்திரர் பெருமானைத்
துன்னினர் கொடுபோயத் தோள்வலி மறமள்ளர்
உன்னரி தெனவஞ்சா தொறுத்தன ருரவோர்தந்
தென்னவர் தமையுள்கிச் சேவடி துதிசெய்வார். 67

பூவார் முளரிப் புத்தே ளறியா நெறிதந்தாய்
பாவார் தென்சொற் பனுவன் மாலைப் பணிகொண்டாய்
தேவா தேவர்க் கரசே சிறியே னுறுதுன்பம்
ஆவா வென்னு [1]யஞ்சே லென்னு யறனேயோ. 68

நெஞ்சே யுரையே [2]செயலே யெல்லா மினவென்றாய்
வஞ்சே போலு மஃதே லின்று வாராயோ
பஞ்சே ரடியாள் பாகா கூடற் பரமேட்டீ
அஞ்சே லென்னு [3]யிதுவோ வருளுக் கழகையா. 69

---

64. மருத்து - காற்று. திருத்தணி-பிற அணிகளைத் திருத்துதற்கு ஏதுவாகிய அணி.

65. ஆய்ந்தவர் - அமைச்சர், சேனாதிபதி, புரோகிதர் முதலாயினோர்.

66. உழையோர் - இங்குத் தண்டலாளர்.

67. உரவோர் - இங்குச் சிவஞானமுடையோர், பத்தி வலியுடையோர். தென்னவர் - இங்குச் சௌந்தர பாண்டியராகி அரசுபுரிந்த சோமசுந்தரக்கடவுள்.

68. நெறி - சன்மார்க்கம், திருவடிஞானம்.

69. நெஞ்சே உரையே செயலே எல்லாம் - மனவாக்குக் காயங்களெல்லாம். வஞ்சம் - பொய். இது வஞ்சு எனக் கடைக்குறைந்து நின்றது.

பா-ம்—1 வஞ்சே. 2 செய்வதெல்லா. 3 விதுவோ.

காவி நேருங் கண்டா நாயிற் கடையான
பாவி யேனைப் பொருளாக் கொண்டென் பணிகொண்டாய்
ஆவி யோடிவ் வுடலு நினதே யன்றோவின்
றோவி வாளா [1] திருந்தால் யாரென் னுடையானே. 70

என்றிரந் திரங்கு மன்ப ரிருசெவி யூடே யேங்குங்
கன்றிளஞ் செவியி னல்லான் கனைகுர லோசை போல
ஒன்றிய சின்னங் காளங் காகள மொலிக்கு மோசை
வென்றிகொள் புரவிச் செந்தூ டிசையெலாம் விழுங்கக் கண்டார்.

வழுதியு மறிந்து வாத வூரரை விளித்து வந்த
தொழுகுல வமைச்சர் தம்பாற் றுகடவி ரன்பு கூர்ந்தெம்
பழுதறு கரும நும்போற் பரிக்குநர் யாரை யென்னு
எழுதரு மகிழ்ச்சி மேற்கொண் டளவளா யிருக்கு மெல்லை. 72

பாயிருட் படலங் கீறிப் பல்கதிர் பரப்பித் தோன்றுஞ்
சேயிளம் பரிதி வானோ ரனையராய்ச் சிறந்த காட்சி
மேயின பாக ரோடும் விலாழியாற் பரவை செய்யும்
வாயின வாகி வந்த மாயவாம் பரிக ளெல்லாம். 73

வண்டுமு தாரி னுன்றன் மரபின்மன் னவரு முன்னாட்
கண்டறி யாத காட்சிக் கவனவாம் பரியை நோக்கி
அண்டர்நா யகன்போ னூறு மாயிரங் கண்பெற் றாலும்
உண்டமை யாவென் றுள்ளக் குறிப்பொடு முவகை பூத்தான். 74

தானென மகிழ்ச்சி யென்னத் தலைதடு மாறி வேந்தன்
மானவெம் பரிமேல் வந்த வயவரை வியந்து மிக்கார்

---

70. காவி - நீலோற்பலம்; இங்கு, நீல நிறம். ஓவி - கைவிட்டு.

71. காளம் - சிறிய சின்னம். காகளம் - பெரிய சின்னம், எக்காளம். செவியூடு ஒலிக்கும் ஓசை ஒன்றிய என்க.

72. தொழுகுலம் - மறையவர் குலம். துகள் தவிர் அன்பு - குற்றமற்ற தலையன்பு. அளவளாய் - மனங்கலந்து.

73. சேயிளம் பருதிவானோர் - பன்னிரு சூரியர். மாய - மாயையால் வடிவெடுத்து வந்த; (குதிரை லாயத்தில் முன்னுள்ள குதிரைகள்) மாயும் வண்ணம் வந்த எனினுமாம்.

74. கவனம்-விரைந்துசெல்லல். அண்டர் நாயகன்-இந்திரன்.

75. மானம் - பெருமை; இஃது அளவிடுதற்கரிய பெருமை பொருந்திய வேகத்தின்மேல் இருந்ததாகும். வயவர் - குதிரை வீரர்.

பா-ம்—1 விருந்தால்.

ஆனவ ரிவருள் யாரென் றமைச்சரை வினவ வையா
யானது வறியே னென்றார் [1]யாவையு மறிய வல்லார். 75

அண்டமெலா மாதார [2]மாகத் தாங்கு மானந்தத் தனிச்சோதி யண்டந் தாங்குஞ், சண்டமறைப் பரிதனக்கா தார மாகித் தரிக்கவொரு காலத்து மசைவி லாத, புண்டரிகத் [3]தாளசையப் பாச நீக்கும் புனைகரத்தாற் பரிபூண்ட பாசம் பற்றிக், கொண் டரச னெதிர்போந்து மன்னு வெங்கள் குதிரையேற் றஞ்சிறிது காண்டி யென்றார். 76

இசைத்தவைங் கதியுஞ் சாரி யொன்பதிற் றிரட்டி [4]யான
விசித்திர விகற்புந் தோன்ற வேந்தனு மவையு மன்றித்
திசைப்புலத் தவரு மேலைத் தேவரு மருள மேற்கொண்
டசைத்தன ரசைவற் றெல்லா வுலகமு மசைக்க வல்லார். 77

ஆண்டகை யவர்போ னின்ற வடுகணத் தவருந் தத்தங்
காண்டகு புரவி யெல்லா நடத்தினர் காட்டக் கண்டு
பாண்டிய னவரை நோக்கி நுங்களிற் பதியாந் தன்மை
பூண்டவர் யாவ ரென்று னிவரென்றார் புரவி வீரர். 78

---

76. அண்டந் தாங்கும் சண்ட மறைப்பரி - அண்டத்தால் தாங்கப் படும் வேகமுள்ள வேதப்பரி; அண்டத்தைக் கொண்டிருக்கும் வலிமை பொருந்திய வேதப்பரியுமாம். அண்டம் - உலகம். சண்டம் - வலிமை, வேகம். அண்டந்தாங்கும் சண்ட மறைப்பரி என்பதை, இலக்குமி சாபத்தால் கோட்டான் வடிவமைந்த பிரமன் இட்ட முட்டையி னின்றும் தோன்றிய குதிரை என்பாரு முளர். இது பஞ்சகல்யாணி என்ற குதிரை ஆகும். அண்டம் - முட்டை. குதிரை ஏற்றம்-ஐங்கதி, இருவகைச் சாரி, நாகபந்தம், வட்டம், வீதி முதலிய விசித்திர வேறு பாடுகள்.

77. ஐங்கதி - மல்லகதி, மயூரகதி, வானரகதி, வல்லியகதி, சரகதி என்பன. இவற்றுள், திவாகரர் வல்லியகதியினை நீக்கிச் சசகதி கொள்வர்; பிங்கலர் சரகதியினை நீக்கி விடைக்கதி கொள்வர். சாரி - வலசாரி, இடசாரிகள். அசைத்தனர் - நடத்திக் காண்பித்தனர்.

78. நடத்தினர் காட்ட - (தவுரிதம், ஆக்கிரந்திதம், வல்கிதம், இரேசிதம், புலிதம் என்ற ஐவகை நடையினை) நடத்திக்காட்ட. தவுரிதம் - மெல்ல நடத்தல். ஆக்கிரந்திதம் - விரைந்து நடத்தல். வல்கிதம் - இருகால் தூக்கி ஆடி நடத்தல். இரேசிதம்-சுற்றியோடல். புலிதம் - முழுவோட்டம்.

பா-ம்—1 யாரையு. 2 மாகித். 3 தாளசைத்துப். 4 யாதி.

சுட்டுதற் கரிய சோதி சுருதிவாம் புரவி யோடு
மட்டவிழ் தாரி னான்முன் வருதலுங் கருணை நாட்டம்
பட்டுள மயங்கித் தன்னை மறந்தெழீஇப் பாண்டி வேந்தன்
தட்டவிழ் கமலச் செங்கை தலைமிசைக் கூப்பி நின்றான். 79

பின்னவ னாணை யாலே மறைப்புண்ட பெருநீர்க் கூடன்
மன்னவ னறிவு தோன்ற வின்றொரு வயமா வீரன்
தன்னைநாங் கண்டெழுந்து தடங்கரங் கூப்பி நின்ற
தென்னெனத் தவிசின் மீள விருந்திட நாணி நின்றான். 80

நிற்கின்றான் முகத்தை நோக்கி நேர்நின்ற [1]மறைமா வீரர்
பொற்குன்றாம் புயத்தா யுன்றன்பொருளெலாங் கொண்டு போந்துன்
சொற்குன்றா வமைச்சன் றானே நமக்குநஞ் சூழ னீங்கா
மற்குன்றா நமர்க்கு மார வழங்கினான் வழங்க லாலே. 81

வானவர் தமக்கே யன்றி மனிதருக் கிசையத் தக்க
வானவன் றறிஞ ரிட்ட விலைவரம் பகன்ற நூலின்
மானமுள் ளனவாய் நல்ல வாசிக ளுனக்கு வந்த
ஊனமில் பரிமா விற்கும் வாணிக முரைப்பக் கேட்டி. 82

இன்னவாம் பரிக ளென்பா லின்றுநீ கயிறு மாறி
நின்னவாக் கொள்ளு நீரா னின்னவாம் பரியே நாளை

---

79. சுட்டுதற்கரிய சோதி - "இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்" என்று சுட்டிக் கூறுதற்கு எட்டாத சுயஞ்சோதி.

80. அவன் - இறைவன். மறைப்புண்ட - (ஆணவமலத்தால்) மூடப்பட்ட.

81. மறை மா வீரர் - வேதப்பரியையுடைய இறைவர். சூழல் - பக்கம்.

82. அறிஞர் - அசுவசாத்திரத்தில் வல்லோர். நூலின் மானம் - அசுவ நூலிற் கூறப்பட்ட பெருமை, அளவு என்பன; பெருமை - இங்கு, இலக்கணப்பெருமை; அளவு - உயர நீளங்களின் அளவுகள். ஊனம் - குற்றங்கள்; அவை கொம்புபோல், நீண்ட காதுகள், முறுக்கிய காதுகள், மூன்று கால் வெளுத்து ஒரு கால் கறுத்ததாகிய நஞ்சபாதம், மூன்றுகால் கறுத்து ஒரு கால் வெளுத்ததாகிய கொள்ளிக்கால், வெளுத்த கண், ஈனி குறையாமை, நீலக் கழுத்து, பீச மில்லாமை, பெரிய பீசம், அசைவில்லாமை, முகம், வால் நாற்கால் இவைகளில் சுழியில்லாமை என்பன. வாசி - குதிரைகள்.

பா-ம்—1 வயமா.

என்னவா யிருந்த வேனு மெனக்குமுன் றனக்குங் கொண்டு
மன்னவா கரும மில்லை பரிவிலை வழக்கீ தென்றார். 83

அப்பொழு தரசன் றானு மகமகிழ்ந் ததற்கு நேர்ந்தெம்
மெய்ப்புக ழமைச்சர் தம்மின் மேம்படு வாத வூரர்
ஒப்பருந் திறத்த ராகி யும்மிடை நட்பான் மிக்க
துப்புர வுடைய ராகு ரெனநனி சொல்லி னானே. 84

உரகத வாரந் தோற்று துயர்மறைப் பரிமேல் வந்தார்
மரகத நிறத்து நிம்ப மாலைதாழ் மார்பி னாற்குக்
குரகதங் கயிறு மாறிக் கொடுப்பவர் [1]பொதுமை யாய
துரகத விலக்க ணங்கள் சொல்லுவான் றொடங்கி னாரே. 85

காயும்வேன் மன்ன வோரிக் கடும்பரி யமையம் வந்தான்
ஞாயிலுந் தாண்டிச் செல்லு நாட்டமு நுழையாச் சால
வாயிலு நுழையுங் கண்ட வெளியெலாம் வழியாச் செல்லுந்
தீயவெம் பசிவந் துற்றாற் றின்னாத வெனினுந் தின்னும். 86

பொருவில்சீ ரிலக்கணப் புரவி யொன்றுதான்
ஒருவன திடைவதிந் துறையி னெல்லென
மருவுறுந் திருமகண் மல்லற் செல்வமும்
பெருகுறுங் கீர்த்திகள் பல்கும் பெற்றியால். 87

நெய்த்திடு மாந்தளிர் நிறத்த நாவின
வைத்திடு குளம்புக ளுயர்ந்த வார்ந்துநேர்

---

83. கொண்டு - இதுபற்றி. பரிவிலை வழக்கு - குதிரை வியாபார முறைமை.

84. துப்புரவு - சுத்தம், ஒழுங்கு, ஐம்புல உணர்ச்சியுமாம்.

85. உரகதம் - பாம்பு. குரகதம் - குதிரை. நிம்பம் - வேம்பு.

86. மன்ன: விளி. ஓரிக்கடும் பரி என்பதை ஓர் இ கடும்பரி எனப் பிரித்து, இந்த வேகம் பொருந்திய குதிரை எனவும், ஓரிக்கடும் பரி எனப்பிரித்து, நரியாகிய கொடிய விலங்கு எனவும் இரு பொருள் கொள்க. அமையம் - போர் செய்தற்குரிய சமயம், ஓடுதற்குரிய சமயம். ஞாயிலும் - மதிலுறுப்பையும் நாயைப் பார்க்கிலும். சாலவாயில் - பலகணிவாயில். தின்னாத - தின்னாதபொருள்கள்; அவை, குதிரையைக்குறிக்குங்கால் வைக்கோல், தழை, சருகு முதலியன; நரியைக்குறிக்குங்கால் பிணம், நண்டு, நத்தை முதலியன.

87. மல்லல் செல்வம்-வளமிக்க செல்வம். மருவுறும்-வசிப்பாள்.

பா-ம் – 1 பொதுமைத்தாய.

ஒத்திடு மெயிற்றின வுரமுங் கண்டமும்
பைத்திடு மராப்படம் போன்ற பாடலம். 88

அகலிய நுதலின வாய்ந்த குஞ்சிபோல்
நிகரறு கொய்யுளை நிறமொன் றுயின
புகரறு கோணமூன் றுகிப் பொற்புறு
முகமுடை யனவய மொய்கொள் கோடகம். 89

மூட்டிய சமரிடை முகத்தில் வாளினால்
வெட்டினு மெதிர்ப்பதாய்க் குரங்கு வேங்கைதோல்
பட்டிமை நரியரி சரபம் பாய்முயல்
எட்டிய கதியின விவுளி யென்பவே. 90

உன்னத நீளமுண் டாகிச் சங்குவெண்
கன்னலின் வாலிய விலாழி கால்வதாய்ப்
பின்னமா கியதனி வன்னம் பெற்றுமை
வன்னமு முடையது வன்னி யாவதே. 91

திணிதரு கழுத்தினிற் சிறந்த தெய்வத
மணியுள தாகியெண் மங்க லத்ததாய்

---

88. இச்செய்யுள் பாடலம் என்னும் குதிரையின் இலக்கணம் கூறுகிறது. நெய்த்திடு - பசையினையுடைய. வைத்திடு - நிலத்தின் வைத்திடும்.

89. இச்செய்யுள் கோடகம் என்னும் குதிரையின் இலக்கணம் கூறுகிறது. அகலிய - அகன்ற.

90. இச்செய்யுள் இவுளி என்னும் குதிரையின் இலக்கணம் கூறுகிறது. தோல் - யானை. பட்டி - இடபம். மை - மேகம். இங்கே, முதனூலிற் கூறிய பத்துக்கதிகளுள் மான், பாணம், வாயு, மனம் நான்கும் நீக்கினர்; இடபம், மேகம், நரி மூன்றும் வேறு கொண்டனர்.

91. இச்செய்யுள் வன்னி என்னுங் குதிரையின் இலக்கணங் கூறுகிறது. உன்னதம் - உயரம். வெண் கன்னல் - வெள்ளைச் சர்க்கரை. பின்னமாகிய வன்னம் - பிங்கல நிறம்; பொன்னிறம்.

92. தெய்வத மணி - கழுத்தில் வலமாகச் சுழிந்திருக்கும் சுழி. சந்திரச்சுழி, அண்டாவர்த்தச் சுழி, கௌவகச்சுழி, காகாவர்த்தச் சுழி, மூன் வளையச்சுழி, கேதாரிச்சுழி, கேசாவர்த்தச்சுழி, பட்டடைச் சுழி என்னும் எட்டுச் சுழிகளும் குற்றமுடைய சுழிகளாம்; ஆதலான், 'சிறந்த' என்றார். எண் மங்கலம் - முகம், மார்பு, தலை, வால், நான்கு கால் என்னும் எட்டுறுப்புக்களினும் வெண்மை கலந்திருத்தல். பஞ்ச கல்யாணம் - முகம், நான்கு கால் என்னும் ஐந்துறுப்புக்களினும் வெண்மை கலந்திருத்தல்.

அணிதரு பஞ்சகல் யாண முள்ளதாய்க்
குணிதரு நீரது குதிரை யாவதே. 92

குங்குமங் கருப்புரங் கொழுந்திண் காரகிற்
பங்கமான் மதமெனக் கமழும் பாலதாய்ச்
சங்கமு மேகமுஞ் சரப முங்கொடுஞ்
சிங்கமும் போலொலி செய்வ தாம்பரி. 93

நாலுகால் கஞுங்கடைந் தெடுத்து நாட்டினுற்
போல்வதாய்க் கொட்புறும் போது சுற்றுதிக்
கோலையொப் பாகிமேற் கொண்ட சேவகன்
காலினு ளடங்குவ தாகுங் கந்துகம். 94

அரணமுந் துருக்கமு மாறுந் தாண்டிடும்
[1]முரணது வாகியிம் முற்றி லக்கணப்
புரணமெல் லாநிறை புரவி போந்தன
இரணவே லாய்வய தெட்டுச் சென்றவால். 95

பகைத்திற முருக்குமிப் பரிகண் மன்னநீ
உகைத்திடத் தக்கவென் றோதி வேதநூற்
சிகைத்தனிச் சேவகர் திரும்பித் தம்மனோர்
முகத்தினை நோக்கினார் மொய்த்த வீரரும். 96

வாம்பரி மறைக்கெலாம் வரம்பு காட்டுவ
தாம்படி கண்டவ ரறிவும் பிற்படப்

---

93. இச்செய்யுள் பரி என்னுங் குதிரையின் இலங்கணங் கூறுகிறது. அகிற்பங்கம்-அகிற்குழம்பு. இங்கு, நரி, பூனை, காக்கை, பேய், ஓரி, நாய், பன்றி இவைகளைப்போன்ற குரல் ஒலி இல்லாமையும் வேண்டும்.

94. இச்செய்யுள் கந்துகம் என்னுங் குதிரையின் இலக்கணங் கூறுகிறது. கொட்புறும் - சுற்றிவரும். சுற்றுதிக்கோல் - கொள்ளிவட்டம்.

95. அரணம் - மதில். துருக்கம் - மலைமேற்கோட்டை, ஒடுக்கவழி, காடு. புரணம் - அசைதல்: இங்கே, அசைவுண்டாகும்படி செல்லுதல். புரணம் - ஒளியுமாம். இரணவேலாய் - பகைவர்களைப் புண்படுத்தும் வேற்படையுடையோனே.

96. உபநிடதத்தின் உட்பொருள் சிவனே என்பார், "வேதநூற் சிகைத்தனிச் சேவகர்" என்றார்.

பா-ம்—1 முரணின.

போம்படி முடுக்கினூர் புரவி யாவையும்
வேம்பணி தோளினூன் [1]வியப்பு மெய்தியே. 97

ஆத்தராய் மருங்குறை யமைச்சர் யாரையும்
பார்த்தசை யாமுடி யசைத்துப் பைப்பயப்
பூத்தவா ணகையொடு மகிழ்ச்சி பொங்கினூன்
தீர்த்தனு நடத்தினூன் றெய்வ மாவினை. 98

இருவகைச் சாரியு மெதிர்ந்து வட்டமாய்
வருவழி ஞெகிழிபோன் மறுகெ லாமொரு
துரகத மேனிலை நின்ற தோற்றமொத்
தொருவற நடத்தினூன் றொருக ணத்தினே. 99

இந்நிலை யலமரு மிவுளி மேலொரு
மின்னிலை வேலினூன் வினவத் தங்கையின்
மன்னிய கங்கணம் விடுத்து மாநகர்
தன்னிலை காட்டிய தன்மை யொத்தது. 100

பன்னிற முடையவாம் பரியும் வீதியுட்
பின்னிய வாவெனப் பின்னி வட்டமாய்த்
தன்னிகர் மதுரையாந் தையல் கையணி
துன்னிய பன்மணித் தொடியும் போன்றவே. 101

இந்திய னுதலினூ ரிடித்த பொற்சுணஞ்
சிந்திய மறுகிடை நடக்குந் திண்பரிப்
பந்தியி னெழுந்ததூள் சுவணப் பாரின்மா
உந்திய வெழுந்தபொற் பூழி யொத்ததே. 102

---

97. பரிமறை - அசுவ நூல். பிற்பட - பின்னிட்டு.

98. ஆத்தர் - உயிர்போன்றவர். தீர்த்தன் - சிவபெருமான். தெய்வமா - வேதவடிவான குதிரை.

99. ஞெகிழி - கொள்ளிவட்டம். ஒருவு அற - (ஒன்றன்பின் ஒன்று) தொடர்பு நீங்காமல்.

100. மேல் - முன்னூளில். மின்னிலை வேலினூன் - வங்கிய சேகர பாண்டியன்.

101. பின்னிய ஆ(று) என-பின்னிநின்ற வகைபோல. தையல்-பெண்.

102. இந்து இயல் - பிறைச் சந்திரனையொத்த. சுவணப்பாரின் மா - சுவர்க்கலோகத்திலுள்ள உச்சைச் சிரவம் என்னும் குதிரை. பூழி - புழுதி.

பா-ம்—1 வியப்ப மெய்தினூன், வியப்ப மெய்தியே.

தேவரு மனிதருந் திருந்து கூடலார்
யாவரு முவப்புற விவுளி விட்டுமண்
காவலன் முன்குறீஇக் கருணை மாக்கடல்
மாவருந் திறனெலாம் வகுத்துத் தேற்றுமால். 103

வளங்கொள் காம்போச மிப்பரி யிம்மா மந்தர மிந்தவாம் புரவி, விளங்கு காந்தார மிக்குரங் குளைவான் மீகமிக் கந்துகஞ் சிந்து, துளங்கில் பாஞ்சால மிக்கன வட்டந் துளுவமிக் குதிரை யித் துரகங், களங்கமி லிமயம் பருப்பத மிந்தக் கற்கியிம் மண் டிலங் கலிங்கம். 104

ஆரிய மிந்தப் பாடல மிந்த வச்சுவங் [1]கூர்ச்சர மிந்தச், சீரிய துரங்கங் கேகய மிந்தத் திறலுறு கொய்யுளை யவனம், வேரியம் பணைசூழ் மக்கமிக் கொக்கு விரிபொழில் வனயுச மிந்தப், போரிய லிவுளி பல்லவ மிந்தப் பொலம்புனை தார்நெடும் பாய்மா. 105

கற்றவர் புகழ்சவ் வீரமிக் கோரங் கன்னிமா ராட்டமிவ் வன்னி, கொற்றவர் பயில்வா சந்திக மிந்தக் கோடகங் காடகங் கன்னல், உற்றகான் மீர மிவ்வய மிந்த வுத்தம கோணமா ளவமிப், வெற்றிசேர் குந்தங் கந்தர மிந்த விறல்புனை யரிசவு ராட்டம். 106

விரிபொழிற் சாலி வேய்மிகு கிள்ளை வேறுதீ வாந்தர மிந்தத், துரகத மிந்தக் குரகதங் கொண்டல் சூழ்குருக் கேத்திர மின்ன, பரவுபல் வேறு தேயமு முள்ள பரியெலா மிவன்றரு

103. இவுளி விட்டு - குதிரையினின்று இறங்கி.

104. குரங்கு உளை - வளைந்த பிடர்மயிர். குரங்கல் - அசைதலு மாம். கற்கி, மண்டிலம் - குதிரை.

105. பாடலம், கொக்கு - குதிரை. யவனம் - கிரீஸ்தேசம்.

106. கன்னி - அழிவில்லாதது. கோரம், வன்னி, கோடகம், அயம், கோணம், குந்தம், அரி-இவை குதிரையின் பரியாய நாமங்கள். மாராட்டம் - மகராஷ்டிரம். கான்மீரம் - காஷ்மீரம். சவுராட்டம் - சௌராஷ்டிரம்.

107. சாலி - சாலி நாடு. வேய்மிகு கிள்ளை - ஒப்புமை மிக்க இக்குதிரை.

பா-ம்—1 குரிர்ச்சரம்.

பொருளின், விரவிய நசையாற் கொணர்ந்திவர் வந்தார் வேந் தகே ளிந்தவாம் பரியுள். 107

வெண்ணிறஞ் சிவப்புப் பொன்னிறங் கறுப்பு வேறற விரவிய நான்கு, வண்ணமுள் ளனவும் வேறுவே றாய மரபுமை வண்ணமும் வந்த, எண்ணிய விவற்றின் சிறப்பிலக் கணத்தை யியம்புதுங் கேளென விகல்காய், அண்ணலங் களிற்றாற் கருமறைப் பரிமே லழகியா ரடைவுற விரிப்பார். 108

வெள்ளிநித் திலம்பால் சந்திரன் சங்கு வெண்பனி போல்வது வெள்ளைத், துள்ளிய புரவி மாதுளம் போது சுகிர்ந்தசெம் பஞ்சியின் குழம்பிற், றெள்ளிய நிறத்த செம்பரி மாமை சிறைக்குயில் வண்டுகார் முகில்போல், ஒள்ளிய கரிய பரியெரி யழலா னுரோசனை நிறத்தபொற் பரியே. 109

தெரிதர வகுத்த விந்நிற நான்குஞ் செறிந்தது மிச்சிர[1]மெனப் பேர், உரைசெய்வர் முகமார் புச்சிவால் காலென் றுரைத்தவெட் டுறுப்பினும் வெண்மை, விரவிய தட்ட மங்கலந் தலைவால் வியனுர மென்றவிம் மூன்றும், ஒருவிய வுறுப்போ ரைந்திலும் வெள்ளை யுள்ளது பஞ்சகல் யாணி. 110

அணிகிளர் கழுத்தில் வலஞ்சுழித் திருந்தா லறிந்தவ ரதனையே தெய்வ, மணியென விசைப்பர் முகந்தலை நாசி மார்பமிந் நான்குமிவ் விரண்டு, பணிதரு சுழியு நுதனடுப் [2]பின்னைப் பக்கமு மொவ்வொரு சுழியுந், துணிதர விருப்ப திலக்கண முளதிச் சுழியில திலக்கண வாழவே. 111

பிரிவுற வுரத்தி லைஞ்சுழி யுளது பேர்சிரீ வற்சமா நுதலில், இருசுழி யாதன் முச்சுழி யாத லிருக்கினு நன்றது வன்றேல், ஒருவற நான்கு சுழிவலம் புரியா வுள்ளது நல்லது வன்றி,

---

108. ஐ வண்ணம் - ஐந்து நிறங்கள். இகல் - பகைவர். காய்தல் - கோபித்தல். பரிமேலழகியார் - சிவபெருமான்.

109. சுகிர்தல்-சீவுதல். மாமை-மிகக்கரிய. ஆன் உரோசனை-கோரோசனை.

110. மிச்சிரம் - கலவை. உறுப்பு ஓர் ஐந்து - தலையும் நான்கு கால்களும்.

111. பணிதரு - நலம் என்று கூறப்படும். துணிதர - ஐயமற.

பா-ம்—1 மிதன்பேர். 2 பின்பு.

இருசுழி முன்னங் கால்களின் மூலத் திருக்கினும் நல்லதென் றிசைப்பார். 112

களநடு விரட்டைச் சுழியுடைப் பரிதன் கருத்தனுக் கறமிடி காட்டும், அளவறு துன்ப மரணமுண் டாக்கு மவைகளைக் கீழுள வாகில், உளபயந் துன்ப நிகளபந் தனமே லுதடுமுற் காலடி கபோலம், வளர்முழந் தாளிந் நான்கினுஞ் சுழிகண் மன்னினுந் தலைவனை வதைக்கும். 113

இச்சுழி யுடைய புரவிபந் தியில்யாத் திருக்கினும் பழுதிவை கிடக்க, அச்சமில் பரிக்குப் பிராயநா லெட்டா மவத்தைபத் தாகுமொவ் வொன்றில், வைச்சது மூன்று வருடமு மிரண்டு மதியமும் பன்னிரு நாளும், நிச்சயித் தளந்தா ரின்னமு மொருசார் நிகழ்த்திடு மிலக்கண மதுகேள். 114

எவ்வண்ண பேதமிகுந் திருந்தாலும் வெள்ளைகலந் திருந்த தாலல், அவ்வண்ணப் பரிநன்று கரும்புரவிக் ககடேனு மகன் மார் பேனுஞ், செவ்வண்ண மிருக்கினது சயமுளதப் படிவெண்மை சேர்ந்தா லந்த, மைவண்ணப் பரியின்பேர் வாருணமாஞ் சயங்கொடுக்கு மாற்றார் போரில். 115

மகவளிக்கும் பிடர்வெளுப்பு மகிழ்வளிக்கு முர்வெளுப்பு மணித்தார்க் கண்டத், தகவெளுப்புப் பொருள்கொடுக்கு முகவெளுப்புச் சயங்கொடுக்கு மதன்பின் பக்கத், தகவெளுப்புச் சுகம் பயக்கு மிடவெளுப்புச் சந்தானந் தழைக்குஞ் செல்வம், மிகவளர்க்குந் தனம்பலதா னியநல்கும் வலப்புறத்து வெள்ளை மாதோ. 116

---

112. உரம் - மார்பு. நெற்றியில் இரண்டு சுழியேனும் மூன்று சுழியேனும் நேரே இருப்பதை, 'சிரீவிருட்சம்' என்பர்.

113. களநடு - கண்டத்தின் நடு. அறமிடி - மிக்க வறுமை. அவை - அவ்விரட்டைச்சுழிகள். நிகளபந்தனம் - விலங்கு பூணுதல்.

114. யாத்தல் - கட்டுதல். பிராயம்-வயது. அவத்தை-பருவம். மதியம் - மாதம்.

115. அகடு - வயிறு. வாருணம்-வயிற்றிலேனும் மார்பிலேனும் வெண்மை கலந்த கருங்குதிரை.

116. மகவு - புத்திரப்பேறு. மணித் தார் - இரத்தினமாலை அணிந்த. இடம் – இடப்பாகம்.

நற்புறம்வான் முகமூன்றும் வெளுத்தபரி [1]வென்றிதரு நாபி தொட்டு, முற்புறமெ லாம்பரிதி யெனச்சிவந்து மதியெனப்பின் முழுதும்வெள்கும், பொற்புடைய வயப்பரிக்குப் பகல்விசய மதி யெனமுற் புறம்பு வெள்கிப், பிற்புறமெல் லாங்கதிர்போற் சிவந் தபரிக் கிராவிசயம் [2]பெருகு மன்றே. 117

வந்தனவா லிவ்விரண்டு வகைப்பரியும் புரவியடி வைத்தா லொத்த, பந்தெனவு நின்றேலா மலையெனவு மொலித்தாலோ பகடு சீறும், வெந்தறுக ணரியெனவும் வேகத்தாற் காற்றெனவு மிதிக்குங் கூத்தாற், சந்தநட மகனெனவு நடக்கிலரி களிறெனவுந் தகைய [3]தாகி. 118

குலமகள்போற் கவிழ்முகமுங் கருநெய்த லெனக்கண்ணுங் கொண்டு கார்போல், நிலவியசீர் வண்ணமுங்கார் நெய்தலெனக் கடிமணமு நிறைந்து நாற்ற, மலரகில்சந் தெரிமணிப்பூ ணலங் கரிக்கி லானுத மகிழ்ச்சி யெய்தி, இலகுவதுத் தமவாசி யென்று ரைப்பர் பரிவேத மெல்லை கண்டோர். 119

நாறுவிர லுத்தமவாம் பரிக்குயர்வீ ரெட்டுவிர லூறு நீக் கிக், கூறுவிரன் மத்திமவாம் பரிக்கறுபத் தொன்றதமக் குதிரைக் கென்ப, ஈறில்[4]புக ழாய்பொருந ரிப்பரியைப் பூசனஞ்செய் திறைஞ்சிப் பாசம், மாறுவரா லெனமணித்தார் சதங்கைசிலம் பணிவித்து மதிக்கோ மாறன். 120

கொத்தவிழ்தார் நறுஞ்சாந்தங் கொண்டுசெழும் புகைதீபங் கொடுத்துப் பூசை, பத்திமையாற் செய்திறைஞ்சி யெதிர்நிற்ப

---

117. புறம் - முதுகு. கதிர் - சூரியன். பெருகும் - (பல செல்வங் கள்) செழிக்கும்.

118. இவ்விரண்டு வகைப்பரி-பகல் விசயம், இரா விசயம் என்ற இந்த இரண்டு வகையுள்ள குதிரைகள். ஒலித்தால் - கனைத்தால். பகடு - யானை. அரி - சிங்கம். நடமகன் - நாட்டியப் புலவன்.

119. கடிமணம் - மிக்க மணம். இலகுவது - விளங்கும் குதிரை யினை : வினையாலணையும் பெயர். பரிவேதம் - அசுவ நூல்.

120. ஈரெட்டு விரல் நூறு நீக்கிக் கூறு விரல் - எண்பத்து நான்கு விரலளவு. பூசனம் - பூசை. பொரு நரிப்பரியை எனவும், பொருநர் இப்பரியை எனவும் பிரித்து இருபொருள் கொள்க. பொருநர்-அரசர்.

பா-ம்—1 நன்றிதரும். 2 பெருக்கு. 3 வாகி. 4 புகழாயொருந. (ஒருநர் - வாங்குவோர்).

வாலவாய்ப் பரனை நோக்கிக், கைத்தலந்தன் சிரமுகிழ்த்து வாழி
யெனப் பரிகொடுத்தான் கயிறு மாறி, முத்தொழிலின் மூவராய்
மூவர்க்குந் தெரியாத முக்கண் மூர்த்தி. 121

உவதிடக் கலனை வாசி யொன்றலா னின்ற மாயக்
கவனவாம் புரவி யெல்லாங் கொடுத்திடக் கவர்ந்து வீறு
தவனனில் விளங்குந் தென்னன் றன்பெருங் கோயி லுய்ப்பப்
பவனமுங் கடலும் போலக் கொண்டுபோய்ப் பந்தி சேர்த்தார்.

வாசிவா ணிகர்க்குத் தென்னன் வெண்டுகில் வரிசை யாக
வீசினான் பாணற் கேவல் செய்தவர் வெள்கு வாரோ
கூசிலா நேசர்க் காப்பான் குதிரையி னிழிந்தேற் றந்தத்
தூசினை யிரண்டாங் கங்கை யெனமுடி சூடி நின்றார். 123

இனையதூ சிவன்பா லூர்தி யிழிந்துநின் றேற்றுச் சென்னி
புனைவதென் னிவர்கை யோடும் புனைந்ததிக் குடையும் பூண்ட
கனலராப் பூணு மன்னன் கவருமோ வென்று தம்மின்
வினவினர் வெகுண்டு சொன்னார் கணத்தனி வீர ரெல்லாம். 124

அறந்தரு கோலான் வெவ்வே றடுபரி வயவர் யார்க்கும்
நிறந்தரு கலிங்க மீந்தா னேர்ந்தவை வாங்கி யன்பிற்
சிறந்தருள் வடிவாய் வந்தார் செழுமறைப் புரவி யோடு
மறைந்தனர் மறைந்தா ரோக்க மாயவாம் பரிமேல் வந்தார். 125

இருமைக்குந் துணையாய் நின்ற விருபிறப் பாளர்க் கேற்ப
அருமைத்தாஞ் சிறப்பு நல்கி யவரிடத் தவரை யுய்த்துப்

---

121. பத்திமை - அன்பு. மூவர் - பிரமன், திருமால், உருத்திரன் என்ற மூவர்.

122. உவதிடக் கலனை - மறை முடிவாகிய சேணம். தவனன் - சூரியன். பவனம் - காற்று.

123. வாசி வாணிபர் - குதிரை வியாபாரியாய் வந்த இறைவர். கூசிலாது - (சிறிதும்) நாணாது. நேசர் - இங்கு, வாதவூரர். தூசு - ஆடை.

124. கனல் - விஷம். ஊர்தி இழிந்து தூசு வாங்கா தொழியின் மன்னன் கை ஒடு முதலியவற்றைக் கவருவான் என்க. வெகுண்டு - (பாண்டியனைக்) கோபித்து; பரிமேலழகியார் நிற்குமிடத்துக் கொணர்ந்து கொடாமையின் கோபமுண்டாயிற்று என்க.

125. அறம் - மனுநீதி. வாங்கி - வாங்க : எச்சத்திரிபு.

பருமத்த யானை வேந்தன் பகற்கதிர் வானத் துச்சி
வருமப்போ தெழுந்து செம்பொன் மாடநீள் கோயில் புக்கான்.

ஏனைமந் திரருந் தத்த மில்புகப் புரவி பார்த்த
மாநக ராருந் தத்த மனைபுகப் பரியின் பாக
ரானவர் தாமுங் கோயி லடைந்துதம் விளையாட் டெல்லாம்
மீனெடுங் கண்ணி னாட்கு விளம்பின ரிருந்தா ரன்றே. **127**

ஆகச் செய்யுள்—**2,925**

---

*126. இருபிறப்பாளர் - இங்கு வாதவூரர். பருமம் - யானைமேற் றவிசு. பரு மத்த யானை எனப்பிரித்துப் பெரிய மதமயக்கத்தையுடைய யானை என்றலுமாம்.*

*127. ஏனை மந்திரர் - மற்றைய அமைச்சர் முதலியோர். நெடு மீன் கண்ணினாட்கு - மீனாட்சியம்மையாருக்கு.*

# 60. [1]பரி நரியாக்கிய படலம்

—o—

ஞான நாயக னுணையா னரிபரி வெள்ளம்
ஆன வாறுரை செய்துமீண் டப்பரி நரியாய்ப்
போன வாறுகண் டமைச்சரைப் புரவலன் கறுப்ப
வான வாறுபோல் வைகைநீர் வந்தவா றுரைப்பாம். 1

நெருங்கு தூரிய முழக்கமுந் தானையு நிமிர
மருங்கி லாதவர் வந்தெதிர் மங்கல மேந்த
அரங்கொல் வேலினு னருளிய வரிசையோ டணைந்து
புரங்கொல் வேதியர்க் கன்பர்தந் திருமனை புகுந்தார். 2

உடுத்த சுற்றமுங் கழகமு மொட்டிய நட்பும்
அடுத்த கேண்மையால் வினவுவா ரவரவர்க் கிசைய
எடுத்த வாய்மையான் முகமனு மகிழ்ச்சியு மீந்து
விடுத்த வாதவூ ராளிகள் வேறிடத் திருந்து. 3

கரந்தை சூடிய வாலவாய்க் கண்ணுத னுமன்
றிரந்த வண்ணமே யாங்கொடு போகிய வெல்லாம்
பரந்த வன்பருந் தானுங்கொண் டெம்மையும் பணிகொண்
டரந்தை தீர்த்தன னன்றியு மரசனுக் கிசைய. 4

நல்ல வாம்பரி செலுத்தின னமக்கினிக் கவலை
இல்ல வாம்படி யாக்கின னின்னமொன் றுலகை

---

1. ஞான நாயகன் - சோமசுந்தரக்கடவுள். கறுப்ப - கடுங் கோபங்கொள்ள.

2. தூரியம் - வாத்தியம். தானையு நிமிர - சேனைகளின் ஆரவாரமும் ஓங்க. அரங்கொல் வேல் - அரத்தை மழுக்கும் வைர வேல்.

3. உடுத்துள்ள - சூழ்ந்துள்ள. கழகம் - ஒரு சாலை மாணவர். அடுத்த கேண்மை - இறுகப்பிணித்த நட்பு.

4. கரந்தை - ஒருவகை மலர். அரந்தை - பிறவித்துன்பம்.

5. உலகு - இங்கே, அவன், அவள், அது என்று சுட்டப்படும் உலகம். வெல்ல ஆம்படி - வெல்லத்தக்க வண்ணம். புல்ல ஆம்படி - பொருந்தத் தக்க வண்ணம். பூட்டுவான் - பூட்டுதல்.

பா-ம்—1 பரி நரியாக்கி வைகை யழைத்த படலம்.

வெல்ல வாம்படி தன்னருள் விளக்குமா னந்தம்
புல்ல வாம்படி யெமைத்தவம் பூட்டுவான் வேண்டும். 5

என்ற வாதரந் தலைக்கொள விகபரத் தாசை
ஒன்று மின்றியே யுணர்வினுக் குள்ளுணர் வாகத்
துன்று பூரண மாகிய சுந்தரச் சோதி
மன்று ளாடிய சேவடி மனம்புதைத் திருந்தார். 6

நாளை யுந்திரு வாலவாய் நாயகன் றமரை
ஆள மண்சுமந் தருளுமென் றதனையுங் காண்பான்
ஊளை [1]வெம்பரிப் பூழிபோர்ப் புண்டமெய் கழுவி
மீள வேண்டுவான் போற்கடல் குளித்தனன் வெய்யோன். 7

ஈச னுடல்வெம் பரிக்குழாத் தெழுந்தசெந் தூளான்
மாசு சூழ்கிய வண்டத்தை வானிலா வென்னுந்
தூசி னுலறத் துடைப்பவ னெனமணித் தொகுதி
வீசு மாழியுண் முளைத்தனன் வெண்மதிக் கடவுள். 8

சேய தாரகை வருணமாத் தீட்டிய வானம்
ஆய வேட்டினை யிருளெனு மஞ்சனந் தடவித்
தூய வாணிலா வென்னும்வெண் டூசினாற் றுடைப்பான்
பாய வேலையின் முளைத்தனன் பனிமதிக் கடவுள். 9

கள்ளொ ழுக்குதார் மீனவன் கடிமனை புகுந்த
புள்ளு வப்பரி நள்ளிருட் போதுவந் தெய்தப்
பிள்ளை யாகிய மதிமுடிப் பிரான்விளை யாட்டால்
உள்ள வாறுதம் வடிவெடுத் தொன்றொடொன் றுசாவும். 10

சங்கி னோசையும் பிணப்பறை யோசையுஞ் சரிந்த
மங்கு லோதிய ரழுகுர லோசையும் மடந்தாழ்

---

6. ஆதரம் - விருப்பம். பூரணம் - நிறைவு.

7. இச்செய்யுள் சூரியாத்தமன வருணனை ஆகும். திருவாலவாய் நாயகன் தமர் - இங்கு, வாதவூரடிகள்.

8. இது முதல் இரண்டு செய்யுட்கள் சந்திரோதய வருணனை ஆகும். தூசு - வஸ்திரம். மணி - முத்துக்கள்.

9. தாரகை - நட்சத்திரம். வருணம் - எழுத்து. அஞ்சனம் - மை. வெண் தூசு - வெள்ளாடை.

10. புள்ளுவப்பரி - வஞ்சகவுருக்கொண்ட குதிரைகள்.

பா-ம்—1 வெம் பரித்தூளி.

கொங்கை சேப்புறக் கையெறி யோசையுங் [1]குளிர
எங்கு நாஞ்செவி பருகுவ மின்னமு தென்ன. 11

வாம்ப ரித்திர ளாகிநா மனித்தரைச் சுமந்து
தாம்பு சங்கிலி தொடக்குண்டு மத்திகை தாக்க
ஏம்ப லுற்றனம் பகலெலா மிப்பொழு தீண்டு
நாம்ப டைத்தன நம்முரு நம்விதி வலத்தால். 12

கான கந்தனி லொழுகுநாண் முதலிந்தக் கவலை
யான துன்பநா மறிந்தில மின்னமு மார்த்த
மான வன்றொடர் வடுக்களு மத்திகைத் தழும்பும்
போன வன்றினிப் புலருமுன் போவதே கருமம். 13

உள்ள மாரநாந் தின்பதற் கூன்சரிந் தொழுகும்
நொள்ளை நாகில நந்தில நுழைந்தளை யொதுங்கும்
கள்ள நீள்கவைக் கான்ஞெண்டு மிலவினிக் கடலை
கொள்ளி னேடுபைம் பயறுபுற் [2]கொள்வதை யடாதால். 14

நாடிக் காவலன் றமருளார் நகருளார் கண்டாற்
சாடிக் காய்வரே புலருமுன் சங்கிலித் தொடர்நீத்
தோடிப் போவதே சூழ்ச்சியென் றூக்கமுற் றொருங்கே
கூடிப் பேசின வூளைவாய்க் குறுநரிக் குழாங்கள். 15

வெறுத்த காணமுங் கடலையும் விரும்பின கோழூன்
துறுத்த நாகுநந் தலவனைச் சங்கிலித் தொடரை

---

11. மங்குல் - மேகம். சேப்புற - செந்நிறமடைய. எறிதல் - அறைதல்.

12. மனித்தர் - மனிதர். மத்திகை - குதிரைச் சம்மட்டி. ஏம்பல் - வருத்தம். விதி - ஊழ்.

13. ஆர்த்தமான வன்றொடர் வடு - கட்டிய பெரிய வலிய சங்கிலித் தழும்பு. புலருமுன் - விடியுமுன்.

14. நொள்ளை - குருடு. நாகு - நத்தை. அளை - வளை. கவை - பிளவுபட்ட.

15. சாடிக்காய்வர் - அடித்துக்கொல்லுவர். ஊக்கம் - ஒரு தொழிலின்மேல் மனமெழுதல்.

16. காணம் - கொள். கோழ் ஊன் - கொழுத்த மாமிசம். துறுத்த - துறுத்திய, நிறைந்த. அலவன் - நண்டு.

பா-ம்—1 குளிற. 2 கொள்வகை.

முறித்த கால்களிற் கட்டிய கயிற்றொடு முளையைப்
பறித்த வூளையிட் டெழுந்தன போம்வழி பார்ப்ப. 16

நின்ற [1]நீணிலைப் பந்தியு ணெருங்குமா நிரையைச்
சென்று தாவிவா ளெயிறுறச் சிதைபடக் கடித்து
மென்று சோரியைக் குடிப்பன வீக்கிய முளையோ
டொன்ற வோடவே யண்டத்தி லூறுசெய் வனவால். 17

ஊளை யோசைகேட் டிம்மென வுறக்கநீத் தெழுந்து
காளை வீரராம் மந்துரை காப்பவர் நெருநல்
ஆளி போல்வரு பரியெலா நரிகளாய் மற்றை
ஒளி மாநிரை குடர்பறித் துண்பன கண்டார். 18

காண்ட லுஞ்சில வலியுள கடியமுள் ளரணந்
தாண்டி யோடின சிலநரி சாளர முழையைத்
தூண்டி யோடின சிலநரி சுருங்கையின் வழியால்
ஈண்டி யோடின நுழில்புக் கேகின சிலவே. 19

முடங்கு காலுடைச் சம்புவு மூப்படைந் தாற்றல்
அடங்கு மோரியுங் கண்குரு டாகிய நரியும்
[2]ஒடுங்கி நோயுழந் தலமரு மிகலனு மோடும்
இடங்கள் கண்டில பந்தியிற் கிடந்தன வேங்கி. 20

கிட்டி யோடினர் வெருட்டுவோர் கிழ்விழக் கடித்துத்
தட்டி யோடுவ சிலவெதிர் தடுப்பவ ரடிக்கீழ்
ஒட்டி யோடுவ சிலகிடந் தூளையிட் டிரங்குங்
குட்டி யோடணைத் தெயிலிறக் குதிப்பன சிலவே. 21

மறம்பு னைந்தவேன் மீனவன் மாளிகை தள்ளிப்
புறம்ப படைந்தவிந் நரியெலாம் பொய்கையும் யானம்

---

17. பந்தி - இலாயம். அண்டம் - (அம்முளைகள்) பீஜத்தில்.
18. நெருநல் - நேற்றைப்பொழுது. ஒளி - வரிசை. நிரை இங்குக்கூட்டம்.
19. கடிய முள் அரணம்-இருப்புமுள் தலையிற்செறித்து வைக்கப்பட்ட மதில். சாளரம் - பலகணி. தூண்டுதல் - தள்ளுதல். சுருங்கை - நுழைவாயில். நுழில் - சுரந்துறை வழி.
20. சம்பு, இகலன் - நரி. ஓரி - கிழநரி.
21. வெருட்டுவோர் - பயமுறுத்துவோர். இற - சிதைபட.
பா-ம்—1 நீணிரைப். 2 ஒடுங்கு.

அறம்ப யின்றநீண் மனைமறு காலயங் கவலைத்
திறம்ப டர்ந்தபன் மாடநீ ணகரெலாஞ் செறிந்த. 22

மன்றுஞ் சித்திர கூடமு மாடமு மணிசெய்
குன்றுந் தெற்றியு முற்றமு நாளொடு கோள்வந்
தென்றுஞ் சுற்றிய பொங்கரு மெங்கணு நிரம்பி
ஒன்றுஞ் சுற்றமோ டூளையிட் டுழல்வன நரிகள். 23

கரியி னோசையும் பல்லிய வோசையுங் கடுந்தேர்ப்
பரியி னோசையு மின்றமி ழோசையும் பாணர்
வரியி னோசையு நிரம்பிய மணிநக ரெங்கும்
நரியி னோசையாய்க் கிடந்தது விழித்தது நகரம். 24

விழித்த ஞாளிகள் விழித்தன கேகயம் வெருவி
விழித்த கோழிகள் விழித்தன மதுகரம் வெருண்டு
விழித்த வோதிமம் விழித்தன குருகினம் விரைய
விழித்த வாரணம் விழித்தன கருங்கொடி வெள்ளம். 25

அட்டில் புக்கன நிணத்தினை யழற்பசி யுருக்கப்
பட்ட டுக்கிய கருங்கல முருட்டுவ பாகு
சுட்ட சோறுபல் லுணவுவாய் மடுப்பன சூழ்ந்த
குட்டி யுண்ணவுங் கொடுப்பன கூவிளி கொள்வ. 26

புறவு பூவைபைங் கிள்ளைகள் பூத்தலைச் சேவல்
பிறவும் வாருவ வுறங்கிய பிள்ளையைக் கொடுபோய்

---

22. மறம் - இங்கு, வெற்றி. உய்யானம் - பூந்தோட்டம். அறம் பயின்ற நீள்மனை - தருமசத்திரம். கவலை - கவர் வழி; முத்தெருக் கூடுமிடம்.

23. மன்று - ஊர்க்கு நடுவில் எல்லாரும் இருக்கும் மரத்தடி. தெற்றி - திண்ணை. முற்றம் - முன்றில். நாள் - நட்சத்திரம். கோள்- கிரகம். பொங்கர் – சோலை.

24. பல்லியம் - பல வாச்சியங்கள். வரி - இசைப்பாட்டு. நகரம்- நகரமக்கள் : இடவாகுபெயர்.

25. ஞாளிகள் - நாய்கள். கேகயம் - மயில். மதுகரம்-வண்டு. வாரணம் - யானை. கருங்கொடி - காகம்.

26. அட்டில் - சமையல் அறை. கருங்கலம் - பழைய மண் பாண்டங்கள். பாகு - குழம்பு. கூவிளி - பேரொலி; கூக்குரல்.

27. புறவு - புறா. பூவை - நாகணவாய்ப்புள்; மைனா. பூத்தலை- முருக்கம் பூப்போலும் சூட்டுப்பொருந்திய தலை. ஊறு-கொலை, தீமை.

நறவு நாறிய குமுதவாய் நகையெழ நக்கி
உறவு போல்விளை யாடுவ வூறுசெய் யாவால். **27**

பறிப்ப வேரொடு முன்றில்வாய்ப் படர்பசுங் கொடியைக்
கறிப்ப நாகிளங் காயெலாங் கரும்புதேன் கவிழ
முறிப்ப வாயிட்டுக் குதட்டுவ வண்டுவாய் மொய்ப்பத்
தெறிப்ப வூளையிட் டாடுவ திரிவன பலவே. **28**

ஆயி ரம்பொரி திரிமருப் படல்கெழு மேடம்
ஆயி ரங்கருந் தாதுநே ராக்கைய வேனம்
ஆயி ரங்கவி ரணையசூட் டவிர்தலைக் கோழி
ஆயி ரங்குறும் பார்ப்பொடு மாருயிர் செகுப்ப. **29**

பின்றொ டர்ந்துநாய் குரைப்பொடு துரந்திடப் பெயர்ந்து
முன்றொ டர்ந்துயிர் செகுப்பன வெஞ்சின மூட்டி
வன்ற டம்புய மள்ளர்போய் வலிசெயப் பொருது
கன்றி வந்துசெம் புனலுகக் கடிப்பன வனந்தம். **30**

பன்றி வாய்விடு மிரக்கமும் பல்பொறி முள்வாய்
வென்றி வாரணச் சும்மையு மேழகத் தொலியும்
அன்றி நாய்குரைப் போசையு மாடவ ரார்ப்பும்
ஒன்றி யூளைவாய் நரிக்குரற் கொப்பதுண் டொருசார். **31**

சுங்கு லெல்லைகா ணியநகர் கண்விழித் தாங்கு
மங்கு ரேய்பெரு வாயில்க டிறத்தலு மாறு
தெங்கு மீண்டிய நரியெலா மிம்மென வோடிப்
பொங்கு காரிருட் டுணியெனப் போயின கானம். **32**

ஈறி லாச்சிவ பரஞ்சுட ரிரவிவந் தெறிப்பத்
தேறு வாரிடைத் தோன்றிய சிறுதெய்வம் போல

---

28. கறிப்ப-கடிக்கா நின்றன. நாகு இளம் காய்-மிக இளங்காய். குதட்டுவ - மெல்லா நின்றன.

29. பொரி திரிமருப்பு-பொருக்குப் பொருந்திய முறுக்கியகொம்பு. மேடம் - ஆட்டுக்கிடாய். கருந்தாது - இரும்பு. ஏனம் - பன்றி. கவிர் - முண்முருக்கு மலர். சூட்டு - உச்சிக்கொண்டை. பார்ப்பு - குஞ்சுகள்.

30. கன்றிவந்து - சினந்துவந்து. செம்புனல் - இரத்தம்.
31. இரக்கம் - ஒலி. வாரணம் - சேவற்கோழி. மேழகம்-ஆடு.
32. விழித்தாங்கு - விழித்தாற்போல. துணி - துண்டங்கள்.

மாறி லாதபன் செங்கதிர் மலர்ந்துவா ளெறிப்ப
வீறு போயொளி மழுங்கின மீன்கண மெல்லாம். 33

அண்ட ருக்கரி தாகிய மறைப்பொரு ளழுகைத்
தொண்ட ருக்கெளி தாகிமண் சுமந்தருள் வருத்தங்
கண்ட ருட்கழல் வருடுவான் கைகளா யிரமுங்
கொண்ட ருக்கவெங் கடவுளுங் குணகட லுதித்தான். 34

கவன வெம்பரி செலுத்திமேற் கவலைதீர்ந் துள்ளே
சிவமு ணர்ந்தவர் சிந்தைபோன் மலர்ந்தசெங் கமலம்
உவமை யில்பரம் பொருளுணர்ந் துரையிறந் திருந்தோர்
மவுன வாயென வடங்கின மலர்ந்தபைங் குமுதம். 35

பந்தி யாளர்கள் யாதெனப் பகர்துமென் றச்சஞ்
சிந்தி யாவெழுந் தொல்லைபோய்த் திரண்மதங் கவிழ்க்குந்
தந்தி யானர சிறைகொளு மிருக்கையைச் சார்ந்து
வந்தி யாவுடல் பனிப்புற வந்தது மொழிவார். 36

காற்றி னுங்கடுங் கதியவாய்க் [1]கண்களுக் கினிதாய்
நேற்று வந்தவாம் பரியெலா நின்றவாம் பரிக்குக்

---

33. எறிப்ப - அருட்கிரணத்தை வீச. தேறுவார்-பதியிலக்கணத்தை அநுபூதியில் தெளிந்த ஞானிகள். தோன்றிய சிறு தெய்வம் போல - சிவசூரியன் உதிக்குமுன் தத்துவங்கள்தோறும் அந்த ஞானிகட்குந் தோன்றிநின்ற சிறு தெய்வங்கள் வீறுபோய் ஒளி மழுங்குமாறு போல.

34. கைகளாயிரம் - (சூரியனின்) அவிறந்த கிரணங்கள்.

35. பரி செலுத்தி - பரியைச் செலுத்துதலால். மேற்கவலை தீர்ந்து - ஆகாமியவினை தீர்ந்து; இங்குக் கவலையாகிய காரணம் தன் காரியமாகிய ஆகாமியத்தை உணர்த்தி நின்றது. உள்ளே சிவம் உணர்ந்தவர் - உயிரிடத்து விரவிய சிவத்தை மெய்யுணர்ச்சியால் உள்ளவாறு உணர்ந்த வாதவூரடிகள். பரம்பொருளை உணர்ந்து ஓதுதல் ஒழிந்திருக்கும் அவ்வாதவூரடிகள் மௌனம்பொருந்திய திருவாய் மூடியிருத்தல்போலக் குமுதங்கள் வாய் மூடின என்க. சிவ முணர்ந்தோர் யோகி எனவும், உரையிறந்து இருந்தோர் ஞானி எனவும் கூறுவாருமுளர்.

36. பந்தியாளர்கள் - குதிரைலாயக் காவலர்கள். அரசிறைகொள்ளு மிருக்கை - அத்தாணி மண்டபம்.

37. கண்களுக்கு இனிது ஆய் - கண்களுக்கு மகிழ்ச்சியுண்டாக. பா-ம்—1 கட்கினி யனவாய்.

கூற்றெ றனும்படி நரிகளாய் நகரெலாங் குழுமி
ஊற்றஞ் செய்துபோய்க் காட்டகத் தோடிய வென்றார். 37

கருத்து ருதவிச் சொல்லெனுங் கடியகால் செவியாந்
துருத்தி யூடுபோய்க் கோபமாஞ் சுடுதழன் மூட்டி
எரித்த தீப்பொறி சிதறிடக் கண்சிவந் திறைவன்
உருத்த வாறுகண் டமைச்சரும் வெருவினு ரொதுங்கி. 38

அமுத முண்டவ னஞ்சமுண் டாலென முதனுட்
சமர வெம்பரி மகிழ்ச்சியுட் டாழ்ந்தவ னவையே
திமிர வெங்குறு நரிகளாய்ச் சென்றவே யென்னு
அமர ரஞ்சிய வாணையா னுரனு ராழ்ந்தான். 39

அருகிருக்குந் தொல்லமைச்சர் தமைநோக்கி வாதவூ ராளி யென்னுங், கருகிருட்டு மனக்கள்வ னம்முடைய பொருண்முழுதுங் கவர்ந்து காட்டிற், குருதிநிணக் குடர்பிடுங்கித் தின்றுதிரி நரிகளெல்லாங் குதிரை யாக்கி, வரவிடுத்தா னிவன்செய்த மாய மிது கண்டீரோ மதிநூல் வல்லீர். 40

இம்மாயஞ் செய்தானை யென்செய்வ தெனவுலகி லெமருக் கெல்லாம், வெம்மாசு படுபாவம் பழியிரண்டும் படவிழுக்கு விளைத்துத் தீய, கைம்மாறு கொன்றான்றன் பொருட்டினியா மேதுரைக்கக் கடவே மென்று, சும்மாது சிரந்தூக்கி யெதிராடா திருந்தாரச் சூழ்வல் லோர்கள். 41

அவ்வேலை மனக்கினிய பரிசெலுத்தி யரசகா ரியநன் ருக்கி, வெவ்வேலை மனக்கவலை விடுத்தனமென் றகமகிழ்ச்சி விளைவு கூர, மைவ்வேலை விடமுண்ட வானவனை நினைந்தறிவு மயமா மின்ப, மெய்வேலை யிடைவீழ்ந்தார் விளைந்ததறி யார்வந்தார் வேந்தன் மாடே. 42

38. கருத்துருத - மனத்திற்கியையாத. கடியகால்-கடுங்காற்று.
39. சமரம் - போர். திமிரம் - இருள்போலும். அனுர் - துன்பம்.
40. கருகிருட்டு - மிக்க அஞ்ஞானம். குடர் - குடல் : போலி.
41. சும்மாது - வாளாது, வாளா ; இதில் து : பகுதிப்பொருள் விகுதி. சிரந்தூக்கி - தலைகுனிந்து.
42. அறிவுமயம் - ஞானமயம். வேந்தன் மாடு - அரசனிடம். இங்கு, அரசன் அழைக்க வாதவூரர் வந்தார் என வாதவூரடிகள் புராணங்கூறும்.

வந்தவரைச் சிவந்தவிழிப் பொறிசிதறக் கடுகடுத்து மறவோ ரேனாக்கி, அந்தமிலாப் பொருள்கொடுபோய் நல்லவயப் பரிகொடு வந் தழகி தாகத், தந்தனையன் றேவரச கருமமுடித் திசைநிறுத் தத் தக்கோர் நின்போல், எந்தவுல குளரேயோ வெனவெகுண்டா னதுகேட்ட வீசன் றொண்டர். 43

குற்றமே தப்புரவிக் கெனக்கேட்டார் கோமகனுங் குற்ற மேதும், அற்றதா லரையிரவி னரியாகி யயனின்ற புரவி யெல் லாஞ், செற்றுவார் குருதியுக நிணஞ்சிதறக் குடர்பிடுங்கித் தின்று நேர்வந், துற்றபேர்க் கூற்றமிழைத் தூர்கலங்கக் காட்ட கத்தி லோடிற் றன்றே. 44

கண்ணுமிடு கவசமும்போற் காரியஞ்செய் தொழுகியதுங் காலம் பார்த்தெம், எண்ணரிய நிதியீட்டங் கவர்வதற்கோ நின் னமைச்சி னியற்கை நன்றுற், புண்ணியவே தியர்மரபிற் பிறந் தனமென் றுருபெருமை பூண்டா யேநீ, பண்ணியகா ரியம் பழுது பிறராகிற் றண்டிக்கப் படுவ ரென்றான். 45

தண்டலா ளர்களிவனைக் கொடுபோய்நம் பொருண்முழுதுந் தடுத்து மீர்த்தும், மிண்டினால் வலிசெய்தும் வாங்குமென வெகுண்டரசன் விளம்பக் கூற்று, மண்டுமேன் மறஞ்செய்யும் வலி யுடையார் கதிரையிரு ளடுத்துப் பற்றிக், கொண்டுபோ னவென் னக்கொடுபுறம்போ யறவோரைக் கொடுமை செய்வார். 46

கதிர்நோக்கிக் கனன்மூட்டுங் கடும்பகலுச் சியிலிரவிக் கடவு ளேனார்நின், றெதிர்நோக்க நிலைநிறுத்திக் கரங்களினு நுதலினுங் கல் லேற்றிச் செந்தீப், பிதிர்நோக்கத் தவரொறுப்ப வாற்றாராய்

---

43. அந்தம் இலா - அளவில்லாத. வயம் - வெற்றி.

44. புரவி : தொகுதியொருமை. ஊற்றம் - துன்பம்.

45. பிறர் ஆகில் - மற்றைய குலத்தாரானால் (என்றால்). அந்தணரை அரசன் தண்டித்தல் மனுநூல் முறை அன்று என்பார், "பிறராகில் தண்டிக்கப்படுவர் என்றான்" என்றார்.

46. தடுத்தும் - கீறிய கீற்றினின்றும் தாண்டாமல் நிறுத்தியும். மிண்டினால் - (ஆணையைக்) கடந்தால். அறவோர்-இங்கு வாதவூரடிகள்.

47. செந்தீப்பிதிர் நோக்கத்தவர்-சிவந்த நெருப்புப்பொறி பறக்கும் கண்ணினையுடைய தண்டலாளர்.

விழ்ந்திருளைப் பிளப்போன் செந்தீ, மதிநோக்கத் தனிச்சுடரை
யழைத்தழுது துதிசெய்வார் வாத வூரர். 47

நாதவோ நாத முடிவிறந்த நாடகஞ்செய்
பாதவோ பாதகனை மென்னைப் பணிகொண்ட
வேதவோ வேத முடிவின் விளைந்ததனிப்
போதவோ போத நெறிகடந்த பூரணவோ. 48

ஐயவோ வென்னுடைய வன்பவோ வன்பர்க்கு
மெய்யவோ மெய்யில் வினையேன் றலைவைத்த
கையவோ செய்யகழற் காலவோ காலனைக்காய்
செய்யவோ வேதப் பரியேறுஞ் சேவகவோ. 49

அத்தவோ கல்லாக் கடையேனை யாட்கொண்ட
பித்தவோ பொய்யுலகை மெய்யாகப் பேதிக்குஞ்
சித்தவோ சித்தந் தெளிவித் தெனைத்தந்த
முத்தவோ மோன மயமான மூர்த்தியவோ. 50

என்றேறிய புகழ்வேதிய ரிரங்குந்துதி செவியிற்
சென்றேறலும் விடையேறுசுந் தரன்மற்றிவர் செயலை

---

48. இறைவன், நாததத்துவ வடிவனாய் ஆன்மாக்களைப் பிறவியிற் செலுத்துதலாகிய ஊன நடனஞ்செய்தலின், 'நாதவோ' எனவும், பிறவியை நீக்கி முத்தியிற் செலுத்துதலாகிய ஞான நடனஞ் செய்தலின், 'நாத முடிவிறந்த நாடகஞ்செய் பாதவோ' எனவும், உலகினர்க்கும் சத்திநிபாதர்க்கும் பயன்படுமாறு முறையே வேதத்தையும் சிவாகமத்தையும் அருளிச் செய்தவரே என்பார், 'வேதவோ' எனவும், வேதாந்தம் ஆகமாந்தம் இவைகளில் உண்டாகிய ஞானப் பொருள் தேவரீரே என்பார், 'வேத முடிவிளைந்த போதவோ' எனவும் பாச ஞானம், பசு ஞானம் இவ்விரண்டிற்கும் அதீதரே என்பார், 'போத நெறிகடந்த பூரணவோ' எனவும் கூறினர்.

49. ஐயவோ-ஐயனே. தலை வைத்த கையவோ-பரிசதீட்சையின் பொருட்டுத் தலையில் வைத்த திருக்கரத்தையுடையவனே.

50. ஆன்மாக்களுக்குப் பக்குவம் வருவித்தற் பொருட்டுப் பொய்யாகிய பிரபஞ்சத்தை மெய்யாகப் போதித்து வினைக்குத்தக்கபடி யூட்டுவோனாதலின், 'பொய்யுலகை மெய்யாகப் போதிக்குஞ் சித்தவோ' எனவும், சாதாரத்திருமேனி கொண்டு எழுந்தருளி வந்து ஆன்ம தரிசனமும் ஆன்ம சுத்தியும் ஆன்ம லாபமும் ஆக்கியருளினீர் என்பார், 'சித்தந்தெளிவித் தெனைத்தந்த முத்தவோ' எனவும் கூறினர்.

மன்றேறவு முடிமேனதி மண்ணேறவு முதியாள்
அன்றேறிய தேரோடும்விண் ணடைந்தேறவு விளைந்தான். 51

கங்கைப்புனல் வடிவாகிய கவ்வைத்திரை வைகைச்
சங்கச்சரி யறலாமலர்த் தாரோதியை நோக்கா
வங்கக்கடல் பேரூழியில் வருமாறென வெவரும்
இங்கற்புத மடையப்பெரு கென்றானருள் குன்றான். 52

தும்பைச்சடை முடியானொரு சொல்லாடவு முன்னாள்
வம்பைப்பொரு முலையால்வரி வளையால்வடு வழுத்துங்
கொம்பைத்தவங் குலைப்பான்கடுங் கோபங்கொடு நடக்குங்
கம்பைப்பெரு நதியிற்கடுங் கதியால்வரும் வைகை. 53

பத்திக்குளிர் கமுகின்குலை [1]பரியக்கரை முரியக்
குத்திப்பழஞ் சிதறச்செறி கோட்டங்களை வீட்டி
முத்திக்கொடு கதலிப்புதன் முதுசாலிக ளரித்துத்
தத்திப்பல தருவேரொடுந் தள்ளிக்கடு கியதே. 54

பல்லாயிரஞ் செந்தாமரை பரப்பிக்கொடு வரலால்
நல்லாயிரங் கண்ணானெழி னயக்குங்குளிர் நளினங்

---

51. மன்றேறவும் - மன் தேறவும் - அரசன் தெரியவும்; மன்று ஏறவும் எனப்பிரித்து, சபையோர் பலரும் அறியவும் எனப்பொருள் கொள்ளலுமாம். முதியாள் - இங்குப் பிட்டு வாணிபஞ் செய்யும் முதியவளாகிய வந்தி.

52. கவ்வை - ஒலி. சங்கச் சரி - சங்காகிய வளையல். அறல் - கருமணல். வைகையாகிய ஓதி என்க. ஊழி - ஊழிக்காலம். அருள் குன்றான் - இறைவன்.

53. ஒரு சொல்லாடல் - பெருகு என்னும் ஒரு சொல்லைச்சொல்லுதல். ஆடல் - சொல்லுதல். வம்பு - முலைக்கச்சு.

54. பரிய - அற. கோட்டம் என்பதில் அம் : சாரியை; டகரம் இரட்டித்தது; கோடு - மரக்கிளை. வீட்டி - அழித்து. முத்து இக் கொடு - முத்தையுடைய கரும்போடு. கதலிப் புதல் - வாழையாகிய புல்; "புறக்கா ழனவே புல்லென மொழிப" என்பது தொல்காப்பியம் ஆதலின், வாழை மரத்தைக் 'கதலிப்புதல்' என்றார். முதுசாலி - முற்றி விளைந்த நெற்கதிர். பரிய முரியக் குத்தி, சிதற வீட்டி, அரித்துத் தத்தி, தள்ளிக் கடுகியது என்க.

பா-ம்—1 பரித்துக்கரை முரித்துக்.

கல்லாரமுங் கடிமுல்லையுங் கரும்புங்கொடு வரலால்
வில்லாயிரங் கொடுபோர்செயும் வேள்வீரனு மானும். 55

மணிமாலையு மலர்மாலையுஞ் சிதருவிறு மருங்கே
அணிகாஞ்சியு மொளிர்சங்கமு மலறப்புடை யெறியாக்
கணியாவெழின் முகதாமரை கண்ணீரொடுங் [1]கவிழாத்
தணியாமுனி வுடனூடிய தடங்கண்ணியர் போலும். 56

வரையுந்திய மதுமுல்லையி னெய்பாறயிர் மருதத்
தரையுந்திய கரும்பின்குறை சாரூடுவ ராரூ
டிரையுந்தெழு தூநீர்வைகை யிந்நன்னகர் வைகுந்
திரையுந்தெழு கடறம்மிடஞ் சென்றுலவை போலும். 57

கல்லென்றதிர் சும்மைப்புனல் கடிமாமதிற் புறம்போய்
இல்லங்களுஞ் சிறுதுச்சிலு மறித்திட்டிருங் கடல்வாய்ச்
செல்லுங்கல நாவாய்பல திமில்போற்சுமந் தேகிப்
புல்லும்புரி சையுந்தள்ளியுள் புகுகின்றதை யன்றே. 58

மறுகும்பல பொருளாவண மணிவீதியு மன்றுஞ்
சிறுகுங்கண மதமாவிரை சேருந்தெரு வும்போய்
முறுகுஞ்சின மொடுதெண்டிரை மூரிப்புன ருவிக்
குறுகும்படி கண்டஞ்சினர் கொடிமாநக ருள்ளார். 59

---

55. கல்லாரம் - செங்குவளை. வேள் வீரன் - மன்மதன். நயக்கும், மானும் - ஒக்கும் : உவமவாசகம்.

56. இச்செய்யுள் செம்மொழிச் சிலேடையணி ஆகும். நதிக்குக் கூறும்போது இரத்தின வரிசை, மலர் வரிசை, அழிந்த கரை, காஞ்சி மரம், சங்கு, அளவிடப்படாத அழகைத் தன்னிடத்துள்ள தாமரை, கள்ளாகிய நீர் என்றும், பெண்ணுக்குக் கூறும்போது முத்துமாலை, பூமாலை, முரியும் இடை, எண் கோவையாகிய காஞ்சி, சங்கு வளையல், முகமாகிய தாமரை, கண்ணீர் என்றும் பொருள் கொள்க. கணியா - அளவிடப்படாத. வைகை கவிழா வருதலினால் என ஒரு சொல் வருவித்துக் கண்ணியர்போலும் என்க.

57. வரை - குறிஞ்சி நிலம். இரையுந்து - பேரொலி செய்து.
58. சிறு துச்சில் - சிறுகுடிசை. மறித்திட்டு-மேல்கீழாகத்தள்ளி. திமில் - தோணி. புல் - இங்குக் கமுகு, தெங்கு முதலியன.

59. ஆவணம் - கடைவீதி. சிறுகுங்கண - சிறிய கண்களையுடைய ; அ : ஆறனுருபு.

பா-ம்—1 கவிழ.

சிலர்மைந்தரை யெடுப்பார்களுஞ் சிலர்மைந்தரைக் காணு
தலமந்தழு வாருஞ்சில ரங்கைத்தளிர் பற்றிக்
குலமங்கையர் தமைக்கொண்டுயப் போவார்களுங் குறுகுந்
தலமெங்கெனத் திகைப்பார்களுந் தடுமாறுகின் றாரும். 60

பொன்னுள்ளன புணியுள்ளன பொருள்பேணல்செய் வாரும்
மன்னுஞ்சில பொருள்கைக்கொள மறப்பார்களு மாடம்
மின்னுங்கொடி நெடுமாளிகை மேலேறுகின் றாரும்
இந்நன்னகர் துயர்மூழ்குதற் கேதேதுவென் பாரும். 61

நேற்றும்பரி நரியாயின நெடுமாநக ரெங்கும்
ஊற்றஞ்செய்த வென்பார்களு மொருகாலமு மிந்த
ஆற்றின்பெருக் கிலையென்றயர் வாருங்கட லரசன்
சீற்றங்கொடு முன்போல்வருஞ் செயலேகொலென் பாரும். 62

நங்கோமகன் செங்கோல்பிழைத் தனனோவென நவில்வார்
அங்கோல்வளை பங்கன்விளை யாட்டோவென வறைவார்
இங்காரிது தணிப்பாரென விசைப்பாரிது தணிப்பான்
பொங்காலமுண் டருள்சுந்தர னலதியாரெனப் புகல்வார். 63

அடுத்தாயிரங் குண்டோதர ரெதிரேற்றிருந் தகல்வாய்
மடுத்தாலுமி தடங்காதென மதிப்பாரிது தனையும்
எடுத்தாயிர முககங்கையி னிறைவன்சடை யேறக்
கொடுத்தாலல தடங்காதிதன் கொடுங்கோபம தென்பார். 64

வானாறிழி நதியாயிர முகத்தால்வரு வதுபோல்
ஆனாதெழு நீத்தந்தணி யாவாறுகண் டன்பு
தானாகிய சிவனன்பரை யொறுக்குந்தறு கண்ணர்
போனார்தம தகத்தேயுள பொருள்பேணுதல் கருதா. 65

---

60. அங்கை - அழகிய கை. குறுகும் தலம் - அடையும் இடம்.

61. பேணல்-பாதுகாத்தல். நகர்-நகரமக்கள் : இடவாகுபெயர்.

62. ஊற்றம் - இடையூறு. அரசன் - இங்கு, உக்கிர குமார பாண்டியன்மேல்.

63. அம் கோல் வளை பங்கன் - சோமசுந்தரக்கடவுள்.

64. ஆயிரங் குண்டோதரர் - இங்கு, அளவில்லாத குண்டோதரர் என்க. ஆயிரமுகம் - ஆயிரந்துறைகள்.

65. வான் ஆறு இழி நதி - ஆகாய கங்கை. அன்பு தான் ஆகிய சிவன் - அன்பே தானாக நின்ற சிவபெருமான்.

வழுதிதன் றமர்விட் டேக மதுரைநா யகன்பா லேகி
அழுதிசை பாடுந் தொண்டி லகப்படும் பாதம் போற்றித்
தொழுதுகொண் டறிவா யூறுஞ் சுகப்பெருங் கடலின் மூழ்கி
எழுதுசித் திரம்போன் மன்னி யிருந்தனர் வாதவூரர். 66

ஆகச் செய்யுள்—2,991

---

66. அறிவாய் ஊறும் சுகம் = ஐம்புலவுணர்ச்சியிற் சுரக்கும் பேரின்பம்.

# 61. மண் சுமந்த படலம்

—o—

*பண்சு மந்தமறை நாட ரும்பொருள் பதஞ்சு மந்தமுடி யார்மனம், புண்சு மந்ததுயர் தீர வந்தபரி நரிக ளாயடவி போன பின், விண்சு மந்தசுர நதியெ னப்பெருகு வித்த வைகையிது விடையவன், மண்சு மந்துதிரு மேனி மேலடி வடுச்சு மந்தகதை யோதுவாம்.* **1**

*கருங்க டற்றிரை யிடைக்கி டந்துசுழல் கலமெ னக்ககன முகடளாய், வரும்பு னற்பரவை யுட்கி டந்துநகர் மறுகி யுட்கமற வேலினுன், ஒருங்க மைச்சரை விளித்து நீர்கரை சுமந்தொ துக்கி வரு மோதநீர்ப், பொருங்க தத்தினை யடக்கு வீரென வமைச்ச ருந்தொழுது போயினர்.* **2**

*வெறித்த டக்கைமத யானை மந்திரிகள் வேறு வேறுபல குடிகளுங், குறித்தெ டுத்தெழுதி யெல்லை யிட்டளவு கோல்கி டத்திவரை கீறியே, அறுத்து விட்டுநக ரெங்க ணும்பறை யறைந்த ழைத்துவிடு மாளெலாஞ், செறித்து விட்டவ ரவர்க்க ளந்தபடி செய்மி னென்றுவரு வித்தனர்.* **3**

*மண்டொ டுங்கருவி கூடை யாளரு மரஞ்சு மந்துவரு வார்களும், விண்டொ டும்படி நிமிர்ந்து வண்டுபடு விரிபசுந் தழைப லாலமுங், கொண்ட திர்த்துவரு வாரும் வேறுபல கோடி கூடிய குழாமுநீர், மொண்ட ருந்தவரு மேக சாலமென வருபுனற் கரையின் மொய்த்தனர்.* **4**

---

**1.** பண் சுமந்த-இசையமைந்த. புண் சுமந்த துயர்-புண்படுதற்கு ஏதுவாகிய துயரம். சுரநதி - ஆகாய கங்கை.

**2.** ககன முகடு - அண்ட முகடு. புனற்பரவை - நீர்ப் பரப்பு, புனலாகிய சமுத்திரம். மறுகி - சுழன்று. கரை சுமந்து - கரைபோட்டு. கதம் - வேகம்.

**3.** வெறி - மதநாற்றம் (வீசும்). வரைகீறி - பங்கு அளந்து. செறித்து - ஒன்று சேர்த்து.

**4.** மண் தொடும் கருவி - மண் வெட்டி. பலாலம் - வைக்கோல். அதிர்த்து - ஆரவாரஞ்செய்து. சாலம் - கூட்டம்.

கட்டு வார்பரி நிறுத்து வாரரவு ருட்டு வாரடி கிடத்துவார், இட்டு வார்தழை நிரப்பு வார்விளி யெழுப்பு வார்பறை யிரட்டு வார், வெட்டு வார்மண லெடுத்து வார்செல வெருட்டு வார் கடிது துடுமெனக், கொட்டு வார்கரை பரப்பு வாருவகை கூரு வார்குரவை குழறுவார். 5

கட்டு வார்கரை [1]யுடைப்பு நீர்கடுகல் கண்டு நெஞ்சது கலங்குவார், மட்டி லாதமுனி வென்னை யன்னையினி யாறு கென்றெதிர் வணங்குவார், கொட்டு வார்மண லுடைப்ப டங்கமகிழ் கொள்ளு வார்குரவை துள்ளுவார், எட்டு மாதிரமு மெட்ட வாயொலி யெழுப்பு வார்பறையி ரட்டுவார். 6

இந்நிலை யூரி லுள்ளார் யாவர்க்குங் கூலி யாளர்
துன்னிமுன் னளந்த வெல்லைத் தொழின்முறை மூண்டு செய்வார்
அந்நிலை நகரின் றென்கீழ்த் திசையுளா ளளவி லாண்டு
மன்னிய நரைமூ தாட்டி யொருத்திபேர் வந்தி யென்பாள். 7

செவியுண வான வேத சிரப்பொரு ளுணர்ந்து செந்தீ
அவியுண வூட்டு மீச னன்பரி னுற்ற நோற்ற
தவநிறை பேறு துய்ப்பா டாயிலார்க் கன்னை யொப்பாள்
சுவையுறு பிட்டு விற்றுண் டொழிலினு டமிய ளாவாள். 8

வைகலு மவித்த செவ்விப் பிட்டினை மருங்கு நான்கு
கைகளாய் முளைத்த முக்கட் கரும்பினை யரும்பு மூரற்

---

5. பரி நிறுத்தல்-மரங்களைக் குதிரைப் பாய்ச்சலாக நிறுத்துதல். அரவுருட்டுதல் - அலைகள் அணையைக் கரைக்காத வண்ணம் பாம்பு போல் வைக்கோற் பழுதைகளை உருட்டுதல். துடும் என : ஒலிக் குறிப்பு. குரவை - குரவைப்பாட்டு.

6. கடுகல் - விரைந்து வருதல். மாதிரம் - திசை.

7. துன்னி - வந்து. முதனூல், வந்தியைப் பிராமணப் பெண் எனக் கூறுகிறது.

8. வேதசிரப்பொருள் - வேத முடிபாகிய உபநிடதம் கூறும் பரம் பொருள். தமியள் - (உறவினர் ஒருவருமில்லாத) தனியள்.

9. மருங்கு நான்கு கைகளாய் முளைத்த முக்கட்கரும்பு-பக்கத்தில் நான்கு கப்புவிட்டு எழுந்த மூன்று கணுக்களையுடைய கரும்பு; நான்கு திருக்கரங்களையுடையதாய்த் தோன்றிய மூன்று கண்களையுடைய கரும்புபோன்றவனை.

பா-ம்—1 யுடைப்ப.

செய்கதிர் முகத்தா னந்தத் தேறலை யால வாயெம்
ஐயனை யகத்தா னோக்கி யன்பினு லருத்தி விற்பாள். 9

வளைந்தமெய் யுடைய வந்த மாதவ நரைமூ தாட்டிக்
களந்தபங் கடைப்பான் கூலி யாள்கிடை யாம லாற்றத்
தளர்ந்தினி யென்னே மன்னன் றண்டிக்கி னென்செய் கேனென்
றுளந்தடு மாறிக் கூட லுடையநா யகனை யுன்னு. 10

பிட்டுவிற் றுண்டு வாழும் பேதையே னிடும்பை யென்ப
தெட்டுணை யேனு மின்றி யிரவியெங் கெழுகென் றின்னுண்
மட்டுநின் னருளா லிங்கு வைகினேற் கின்று வந்து
விட்டதோ ரிடையூ றைய மீனவ னாணை யாலே. 11

துணையின்றி மக்க ளின்றித் தமரின்றிச் சுற்ற மாகும்
பணையின்றி யேன்று கொள்வார் பிறரின்றிப் பற்றுக் கோடாம்
புணையின்றித் துன்பத் தாழ்ந்து புலம்புறு பாவி யேற்கின்
றிணையின்றி யிந்தத் துன்ப மெய்துவ தறனோ வெந்தாய். 12

தேவர்க்கு மரிய னாகுந் தேவனே யன்ப ராவார்
யாவர்க்கு மெளிய னாகு மீசனே வேந்த னாணைக்
காவற்செங் கோலார் சீற்றங் கடுகுமுன் கூலி யாளாய்
ஏவற்செய் வாரைக் காணே னேழையே னினியென் செய்கேன்.

கூலியாள் வருவ துண்டோ வென்றுதன் கொங்கை முற்றத்
தாலிபோற் கண்ணீர் சோர்வாள் குறித்துமுன் பருத்தும் பிட்டை
வேலைநீர் ஞாலங் காண மிசைந்தவ ளிடும்பை தீர்ப்பான்
பாலினேர் மொழியாள் பாக மறைத்தருட் படிவங் கொள்வார்.

---

10. வளைந்த மெய் - கூனிய உடல். என் செய்கேன் - யாது செய்வேன்.

11. இரவி எங்கு எழுக என்று - சூரியன் எங்கெழினும் எழக்கட வன் என்று; ஏனை உயிர்ச் சார்பும் பொருட் சார்பு மின்மையால் கவலை யற்றவள் என்பார், 'இரவி எங்கு எழுக' என்றார். ''எங்கெழிலென் ஞாயிறெமக்கேலோ ரெம்பாவாய்'' என்பது திருவாசகம்.

12. துணை - கணவன். சுற்றமாகும் பணை - நட்பினர் கூட்டம். ஏன்று கொள்வார் - தாமே வந்து தாங்கிக்கொள்வார். பற்றுக் கோடாம் புணை - சென்று பற்றிக்கொள்ளுந் துணையாளாகிய தெப்பம்.

13. கடுகுமுன் - (என்னை) வந்தடைதற்குமுன்.

14. முற்றத்து - இடத்தில். ஆலி - மழைத்துளி.

குறட்குநீ ரருத்தி வைகைக் குடிஞையா யொழுகுங் கங்கை
அறற்குழல் பிரிவி னாற்றா தன்பினா லவனைக் காண்பான்
மறக்கய னெடுங்க ணாளை வஞ்சித்து வடிவ மாறிப்
புறப்படு வாரைப் போலப் போதுவார் போத மூர்த்தி. 15

அழுக்கடைந்த பழந்துணியொன் றரைக்கசைத்துவிழுத்தொண்டர்
குழுக்கடந்த விண்டைநிகர் சுமையடைமேற் கூடைகவிழ்த்
தெழுக்கடந்து திசைகடந்திட் டிணைகடந்த திருத்தோண்மேன்
மழுக்கடைந்து விளங்கியவாய் மண்டொடுதிண் படையேந்தி. 16

திடங்காதல் கொண்டறவோர் திருவேள்வி தருமமுதும்
இடங்காவல் கொண்டுறைவா ளருத்தமுது மினிதுண்டும்
அடங்காத பசியினர்போ லன்னைமுலைப் பாலருந்த
மடங்காத பெருவேட்கை மகவுபோற் புறப்பட்டார். 17

ஆலுமறைச் சிரமுடியா ரடிக்கமல நிலஞ்சூடக்
கூலிகொடுத் [1]தெனைவேலை கொள்வாருண் டோவென்றென்
றோலமறைத் திருமொழிபோ லுரைபரப்பிக் கலுழ்கண்ணீர்
வேலையிடைப் படிந்தயர்வாள் வீதியிடத் தணைகின்றார். 18

தந்தைதாய் பிறரின்றி வருகின்ற தனிக்கூலி
மைந்தனார் வாய்மலருங் குரல்கேட்டு வந்தியுந்தன்
சிந்தையா குலமிழந்து நல்கூர்ந்தார் [2]செல்வமகத்
தந்தபோ தெழுமகிழ்ச்சி தலைக்கொள்ளப் புறம்போந்தாள். 19

---

15. குறள் - குண்டோதரன். குடிஞை - வைகை ஆறு. அறல் - கருமணல். போதமூர்த்தி - ஞானமூர்த்தி.

16. அரைக்கு அசைத்து - இடுப்பில் கட்டி. இண்டை - கண்ணி மாலை. சுமையடை - சும்மாடு. இணை - உவமை. மழுக்கு - மழுங்குதல்.

17. வேள்வி தரும் அமுது - யாகத்தில் அளிக்கும் அவியுணவு. வேட்கை - விருப்பம்.

18. ஆலும் - ஒலிக்கும். ஓலம் - ஒலி வடிவாகிய.

19. ஆகுலம் - கவலை. 'நல்கூர்ந்தார் - பிள்ளைப்பேறு இன்மை என்னும் வறுமையுடையார். இறைவன் ஏனைத் தேவர்கள் போல் பிறப்பு இறப்பு இல்லாதவன் ஆதலால் அவனை, 'தந்தை தாய் பிறரின்றி'' எனவும், ஒருவரும் இன்மையால், 'தனி' எனவும் கூறினார். ''தாயுமிலி தந்தையிலி தான் தனியன் காணேடி'' என்பது திருவாசகம்.

பா-ம்—1 தென் வேலை. 2 செல்வமிகத், செல்வமகம்.

அன்னையெனத் தன்பாலின் னருள்சுரந்து வருகாளை
தன்னையழைத் தெனக்களந்த கரையடைத்துத் தருவாயோ
என்னவிசைத் தனளாக வடைக்கின்றே னெனக்கன்னை
பின்னையதற் கிடுங்கூலி யாதென்றார் பெருமுதியாள். 20

பிட்டிடுவே னுனக்கென்றா ளதற்கிசைந்து பெரும்பசியாற்
சுட்டிடநான் மிகமெலிந்தேன் சுவைப்பிட்டி லுதிர்ந்தவெலாம்
இட்டிடுவா யதுமுந்தத் தின்றுநா னிளைப்பாறிக்
கட்டிடுவே னின்னுடைய கரையென்றார் கரையில்லார். 21

தெள்ளியடு சிற்றுண்டி சிக்கடைந்த பொதிநீக்கி
அள்ளியெடுத் தருந்தப்பா வென்றிட்டா ளரைக்கசைத்த
புள்ளியுடைத் துகினீத்தார் புறத்தானை விரித்தேந்தி
ஒள்ளியதென் றவளன்பு முடன்கூட்டி யமுதுசெய்வார். 22

அன்னைமுலைத் தீம்பாலி னரியசுவைத் திஃதந்தத்
தென்னவனா யுலகாண்ட திருவால வாயுடைய
மன்னர்பிரான் றனக்கேயா மென்றென்று வாய்ப்பெய்து
சென்னியசைத் தமுதுசெய்தார் தீவாய்நஞ் சமுதுசெய்தார். 23

தந்தையொடு தாயின்றித் தனிக்கூலி யாளாக
வந்தவெனக் கொருதாயா யருள்சுரந்து மாறாத
இந்தவிளைப் பொழித்தனையே யினிவேலைத் தலைச்சென்றுன்
சிந்தைகளிப் பெழவேலை செய்வேனென் றிசைத்தெழுந்தார். 24

---

20. காளை - காளைப் பருவமுடைய பெருமான். இடுங்கூலி - கொடுக்குங்கூலி.

21. கரையில்லார் - நூற்பிரமாணங்களால் அளவிடப் படாதவர், இறைவர்; கரை - அளவு.

22. சிக்கடைந்த - அழுக்கடைந்த. பொதி - பிட்டு மூடும் துணி. சிக்கு - அழுக்கு. இது பலநாளும் பிட்டினை மூடியதால் ஏற்பட்டது. சிக்கம் அடைந்த பொதி நீக்கி அள்ளி - உறிபோல் உருவமைந்த பிட்டினை நீக்கி உதிர்ந்த பிட்டினை அள்ளி எனப் பொருள் கொள்ளுதலும் ஒன்று. சிக்கம் - உறி; இஃது ஈறு தொக்கு நின்றது.

23. சுவைத்து - சுவையையுடையது. தென்னவனாய் - சௌந்தர பாண்டியனாய். தீவாய் நஞ்சு - தீயைப்போலும் வெம்மை வாய்ந்த விஷம்.

24. இளைப்பு - களைத்தல். வேலைத்தலை - வேலை செய்யும் இடம்.

தந்திவாய் மருப்பிடறி வருங்குடிளைத் தடங்கரையில்
வந்தியான் வந்தியா ளென்றேட்டில் வரைவித்துப்
புந்தியா லுரையாலூற் பொருளிறு லளப்பரிய
அந்திவான் மதிச்சடையார் கரையடைப்பா ராயினர். 25

வெட்டுவார் மண்ணைமுடி மேல்வைப்பார் பாரமெனக்
கொட்டுவார் குறைத்தெடுத்துக் கொடுபோவார் சுமடுவிழத்
தட்டுவார் சுமையிறக்கி யெடுத்ததனைத் தலைபடியக்
கட்டுவா ருடன்சுமந்து கொடுபோவார் கரைசொரிவார். 26

இவ்வண்ண மிவரொருகா லிருகான்மண் சுமந்திளைத்துக்
கைவண்ண மலர்கன்றக் கதிர்முடிமேல் வடுவழுந்த
மைவண்ண னறியாத மலரடிசெம் புனல்சுரந்து
செவ்வண்ணம் படைப்பவொரு செழுந்தருவின் மருங்கணைந்தார்.

தருமேவு மலைமகளுஞ் சலமகளு மறியாமற்
றிருமேனி முழுதுமில மகவண்டித் திளைப்பெய்தக்
குருமேவு மதிமுடியைக் கூடையணை மேற்கிடத்தி
வருமேரு வனையார்தம் வடிவுணர்ந்து துயில்கின்றார். 28

அத்தருவே யாவநெடுந் தருவாக வலைபுரட்டித்
தத்திவரும் புனலடைப்பார் சனகாதி முழுதுணர்ந்த
மெய்த்தவராய்க் கண்களிப்ப மெய்யுணர்ச்சி மோனமயச்
சுத்தவுருத் தெளிவிப்பா ரெனத்துயிலுந் துயிலுணர்ந்தார். 29

ஆடுவார் சாமமெனத் தித்திக்கு மமுதவிசை
பாடுவார் நகைசெய்வார் தொழில்செய்வார் பராக்கடையக்

---

25. தந்தி - யானை. இடறி - அலைத்துக்கொண்டு. ஏட்டில் வரைவித்து - கணக்கில் பதிவித்து.

26. சுமடு - சும்மாடு; சுமையடை என்பதன் மரூஉ. தட்டுவார் - கூடையைத் தட்டுவார். சொரிவார் - கொட்டுவார்.

27. செம்புனல் - குருதி. செழுந் தரு - கொன்றை விருட்சம்; 'திறங்கிளர் கொன்றை நீழல்' என்றார் திருவாதவூரடிகள் புராணத்தும்.

28. குருமேவும் - நிறம் பொருந்திய. உணர்ந்து - (பலரும்) உணர.

29. புனல் அடைப்பார் - வைகை நதியின் பெருக்கினை அடைப்பவர். மெய் உணர்ச்சி மோனமயம் - சச்சிதானந்த வடிவு. சுத்த உரு - நிட்கள வடிவு.

கோடுவார் மணல்குவிப்பார் குதிப்பார்தா ளுழவடிபாய்ந்
தோடுவா ருடன்மீள்வா ருன்மத்த ரெனவிருப்பார். 30

வேலையினு லறவருந்தி யிளைத்தார்போன் மெய்வேர்வை
காலமிசை மூச்செறிந்து வாயொலியாற் காற்றழைத்துச்
சாலநெடும் பசியினர்போற் றளர்ந்தடியா ளிடும்பிட்டின்
மேலடைந்த விருப்பினராய் மீண்டுமவள் பாலணைவார். 31

இடும்பைநோய் வெள்ள நீந்தி யின்பநீர் வெள்ளத்தாழ்ந்த
கொடும்புற முதியாண் முன்போய்க் கூறுவார் கோலுக்கேற
இடம்படு கரைகளெல்லா மடைபடு கின்ற வின்னங்
கடும்பசி யுடையே னன்னே பிட்டிடு கடிதி னென்றார். 32

ஆங்கவ ளப்போ தட்ட சிற்றுண வளித்தா ளையர்
வாங்கியங் கையு நாவுங் கனலெழ வாயிற் பெய்து
பாங்கிரு கொடிறு மொற்றிப் பதமுறப் பருகிக் கொண்டு
நீங்கிமுன் போலப் போந்து நெடுங்கரை யடைக்க லுற்றார். 33

பிட்டுவாய் மிதப்ப வுண்பார் பெருவலி யுடையார் போல
வெட்டுவா ரெடுத்த மண்ணைக் கொண்டுபோய் வேற்றுப் பங்கிற்
கொட்டுவா ருடைப்பு மாறுங் கொள்கைகண் டார்த்துத் தின்றோன்
தட்டுவா ரயனின் றுரைத் தழுவுவார் களிப்புத் தாங்கி. 34

எடுத்தமண் கூடை யோடு மிடறிவீழ் வார்போ லாற்றின்
மடுத்திட வீழ்வர் நீந்தி வல்லைபோய்க் கூடை தள்ளி
எடுத்தகன் கரைமே லேறி யடித்தடித் திரம் போக்கித்
தொடுத்தகட் டவிழ்ப்பர் மீளத் துன்னுவர் தொடுவர் மண்ணை. 35

கொட்டுமண் சுமந்து செல்வர் கூடையை யுடைப்பில் வீழத்
தட்டுவ ரெடுப்பார் போலத் தாவிவீழ்ந் தலையி லோட

---

30. சாமம் - சாமவேதம். கோடு - நீர்க்கரை. உன்மத்தர் - பித்தேறினவர்.

31. வேர்வை கால - வெயர்வை சிந்த. மிசை மூச்சு-மேன்மூச்சு.

32. கொடும் புறம் முதியாள் - வளைந்த முதுகினையுடைய முதியவந்தி. இதில், ஒரு வெள்ளத்தை நீந்திக்கடந்து பிறிதொரு வெள்ளத்தில் ஆழ்ந்து நலம் பெற்றாள் என்று கூறும் நயம் ஓர்க.

33. சிற்றுணவு - இங்கு, உதிர்ந்தபிட்டு. கொடிறு - கவுள். பதம் - உண்ணும் பதம்.

34. வேற்றுப் பங்கு - பிறருக்கு அளந்துவிட்ட பாகம்.

35. வல்லை - விரைந்து. துன்னுவர் - கட்டுவர்.

விட்டொரு மரத்தைப் பற்றி மிதப்பர்திண் கரையி லேற
முட்டுவர் சுழியி லாழ்வர் சேட்சென்று முளைப்பர் மீள்வர். 36

கொட்டினைக் கழலப் பார்ப்பர் கோப்பர்கோ லிடையாப் பிட்டுத்
தட்டுவ ருயிர்ப்பு வீங்கித் தள்ளரின் றிளைப்பர் கச்சிற்
பிட்டினை நுகர்வர் வேலை வினைகெடப் பிறர்க்கு மள்ளி
இட்டுமா றுச்ச நோக்கி நகைப்பர்கை யிரண்டுந் [1]தாக்கி. 37

வானத்தின் மண்ணிற் பெண்ணின் மைந்தரிற் பொருளி லாசை
தானற்றுத் தமையு நீத்துத் தத்துவ முணர்ந்த யோகர்
ஞானக்கண் கொண்டே யன்றி நாடருஞ் சோதி மண்ணோர்
ஊனக்கண் கொண்டுங் காண வுடன்விளை யாடல் செய்வார். 38

அருளினு லுலக மெல்லா மாக்கியு மளித்து நீத்தும்
பெருவிளை யாடல் செய்யும் பிறைமுடிப் பெருமா னிங்ஙன்
ஒருவிளை யாடல் செய்ய வோச்சுகோற் கைய ராகி
அருகுநின் றேவல் கொள்வா ரடைகரை நோக்கப் புக்கார். 39

நெட்டலை யொதுங்கி யோட நிவப்புற வரைபோ லிட்டுக்
கட்டிய கரைக ளெல்லாங் கண்டுகண் டொப்பு நோக்கி
அட்டமே செல்வார் திங்க ளாயிரந் தொழுதாள் பேரால்
விட்டபங் கடைப டாமை கண்டனர் வெகுளி மூண்டார். 40

---

36. கொட்டு மண் - மண்வெட்டியின் தகட்டில் ஒரு தடவை ஏறும் அளவு மண். முட்டுவர் - நெருங்குவார். ஆழ்வார் - அழுந்துவார். முளைப்பர் - மேலே எழுவார்.

37. பார்த்தல் - செய்தல். மாறு ஓச்ச-ஆளோட்டிகள் அடிக்கும்படி பிரம்பை நீட்ட ; மாறு - பிரம்பு, வளாருமாம். தாக்கி - கொட்டி.

38. தமை நீத்தல்-யான் என்னும் தற்போதம் ஒழிதல், தற்செயல் இழத்தல். (போதம், செயல் : ஆகுபெயர்.) தத்துவம் - உண்மைப் பொருள்.

39. நீத்தும் - அழித்தும். ஓச்சுகோல் கையர் - வேலைமேல் ஒழிபவரை வேலையிற் செலுத்துங்கோலை ஏந்திய கையர். புக்கார் - போயினர்.

40. அட்டம்-(வந்திக்கு அளந்துவிட்ட பங்கின்) அருகு. திங்கள் ஆயிரம் தொழுதாள் - ஆயிரம் பிறையினைக்கண்டு வணங்கிய வந்தி ; இவள் நூறு வயது உடையவள் என்பார், 'திங்கள் ஆயிரம் தொழுதாள்' என்றார். ஆயுள்வரையறை செய்யு நூலோருள் ஒரு சாரார் பத்து மாதம் ஓராயுள் என்பர்.

பா-ம்—1 தாங்கி.

வந்திக்குக் கூலி யாளாய் வந்தவன் யாரென் றோடிக்
கந்தர்ப்ப னெனநேர் நின்ற காளையை நோக்கி யேடா
அந்தப்பங் குள்ள வெல்லா மடைபட்ட தெவனீ யின்னம்
இந்தப்பங் கடையாய் வாளா திருந்தியா றம்பீ யென்றார். 41

வேறுரை யாது தம்மை யுணர்ந்தவர் வீறு தோன்ற
ஈறிலா னிறுமாப் பெய்தி யிருந்தன னாக மேலிட்
டாறுவந் தடுத்த பங்கி லடைகரை கல்லிச் செல்ல
மாறுகொண் டோச்ச வஞ்சி மயங்கினார் வலிய கோலார். 42

பித்தனோ விவன்றா னென்பா ரல்லது பேய்கோட் பட்ட
மத்தனோ விவன்றா னென்பார் வந்தியை யலைப்பான் வந்த
எத்தனோ விவன்றா னென்பா ரிந்திர சாலங் காட்டுஞ்
சித்தனோ விவன்றா னென்பா ராரென்றுந் தெளியோ மென்பார்.

பாடல்விஞ் சையனோ வென்பார் பண்ணினாற் பாணிக் கேற
ஆடல்விஞ் சையனோ வென்பா ரரும்பெறற் செல்வத் தாழ்ந்து
வாடிய மகனோ வென்பா ரிசைபட வாழ்ந்து கெட்ட
ஏடவிழ் தாரி னாருள் யார்மக னிவன்கொ லென்பார். 44

கரும்பனும் விரும்ப நின்ற கட்டழ குடைய னென்பார்
அரும்பெற லிவன்றான் கூலிக் காட்செய்த தெவனோ வென்பார்
இரும்பெருங் குரவ ரற்ற தமியனோ வென்பார் வேலை
புரிந்தவ னல்ல னென்பா ரதுமேனி புகலு மென்பார். 45

கூலியுங் கொண்டான் றானே கணக்கினுங் குறிக்கச் சொன்னான்
வேலையுஞ் செய்யா னின்சொல் விளம்பினுங் கேளான் கல்லின்

---

41. கந்தர்ப்பன் - மன்மதன். ஏடா - ஏண்டா : விளி. அடையாய் - அடைக்காமல்.

42. தம்மை உணர்ந்தவர்-தம்மை (இறைவனை) உணர்ந்த அடியவர் ; மாணிக்கவாசகர். வீறு - பெருமை.

43. பேய் கோட்பட்டமத்தனோ - பேயால் பிடிக்கப்பட்ட உன்மத்தனோ. எத்தன் - ஏமாற்றுபவன்.

44. விஞ்சையன் - கந்தருவன். பாணிக்கு ஏற - தாளத்திற்குப் பொருந்த. ஆடல் விஞ்சையன் - பரதநூற் புலவன். வாடிய - அச்செல்வங்குன்றிய.

45. கரும்பன் - மன்மதன். இரும்பெருங்குரவர் - தாய் தந்தையராகிய இருமுதுகுரவர் ; உம் : இசைநிறை.

பாலறை முளையே யாகிப் பராமுகம் பண்ணி நின்றான்
ஏலநா மிதனை வேந்தற் குணர்த்துது மென்று போனார். 46

தலைமகன் றிருமுன் றாழ்ந்து சாற்றுவா ரடிகே ளிந்த
அலைபுன னகரார் தத்தம் பங்கெலா மளந்த வாற்றான்
மலையினும் வலிய வாகச் [1]சுமந்தனர் வளைந்த சிற்றாண்
விலைநரை யாட்டி தன்பங் கடைத்திலள் வென்றி வேலோய். 47

வேளையும் வனப்பி னாலே வென்றவ னொருவன் வந்தி
ஆளென வங்கே வந்து பதிந்தன னரசர் செல்வக்
காளைபோற் களிப்பன் பாடு மாடுவன் காலம் போக்கி
நீளுவன் வேலை யொன்று நெஞ்சினு நினைதல் செய்யான். 48

ஆண்டகை வனப்பை நோக்கி யடிக்கவுங் கில்லே மஞ்சி
ஈண்டினே மென்று கூற விம்மென வமைச்ச ரோடும்
பாண்டிய னெழுந்து நாம்போய்ப் பங்கடை பட்ட வெல்லாங்
காண்டுமென் றெறிநீர் வைகைக் குடிஞையங்கரையைச் சார்ந்தான்.

எடுத்ததிண் கரைக ளெல்லா மிறைமக னுள்ளத் தோகை
மடுத்தன னோக்கிச் செல்வான் வந்திபங் கடைப்பா ரின்றி
அடுத்தநோன் கரையுங் கல்லி யழித்தெழு வெள்ள நோக்கிக்
கடுத்துநின் றெங்குற் றானிக் கரைசுமந் தடைப்பா னென்றான். 50

வள்ளறன் கோபங் கண்ட மாறுகோற் கைய ரஞ்சித்
தள்ளருஞ் சினத்த ராகித் தடக்கைதொட் டீர்த்துப் பற்றி
உள்ளொடு புறங்கீழ் மேலா யுயிர்தொறு மொளித்து நின்ற
கள்வனை யிவன்றான் வந்தி யாளெனக் காட்டி நின்றார். 51

கண்டனன் கனன்று வேந்தன் கையிற்பொற் பிரம்பு வாங்கி
அண்டமு மளவி லாத வுயிர்களு மாக மாகக்

---

46. கல்லின்பால் அறைமுளை - கல்லில் அடித்த முளையைப்போல் (சிறிதும் அசையாது).

47. சுமந்தனர் - உயர்த்தனர். சிற்றாண் - பிட்டு.

48. நீளுவன் - தாமதஞ் செய்வன். வேலைஒன்றும்-வேலை மட்டும்.

49. அடிக்கவுங்கில்லேம் - அடிக்கவும் ஆற்றகில்லேம்; கில்: எதிர்மறைப் பொருளுணர்த்தும் ஆற்றலிடைநிலை.

50. ஓகை - மகிழ்ச்சி. நோன் - வலிய. கடுத்து - கோபித்து.

51. மாறுகோல் கையர் - பிரப்பங்கோலையுடைய மேற்பார்வையாளர்.

பா-ம்—1 சுமத்தினர்.

கொண்டவன் முதுகில் வீசிப் புடைத்தனன் கூடை யோடு
மண்டனை யுடைப்பிற் கொட்டி மறைந்தன னிறைந்த சோதி. 52

பாண்டியன் முதுகிற் பட்டது செழியன் பன்னிய ருடம்பினிற் பட்ட, தாண்டகை யமைச்சர் மேனிமேற் பட்ட தரசிளங் குமரர்மேற் பட்ட, தீண்டிய கழற்கால் வீரர்மேற் பட்ட திவுளி மேற் பட்டது பருமம், பூண்டவெங் கரிமேற் பட்டதெவ் வுயிர்க் கும் போதன்மேற் பட்டவத் தழும்பு. 53

பரிதியு மதியும் பாம்புமைங் கோளும் பன்னிறம் படைத்த நாண் மீனும், இருநிலம் புனல்கா லெரிகடுங் கனல்வா னென்னு மைம் பூதமுங் காருஞ், சுருதியு மாறு சமயவா னவருஞ் சுரர்களு முனிவருந் தொண்டின், மருவிய முனிவர் கணங்களும் பட்ட மதுரைநா யகனடித் தழும்பு. 54

வானவர் மனிதர் நரகர்புள் விலங்கு மாசுணஞ் சிதலெறும் பாதி, ஆனபல் சரமு மலைமரங் கொடிபுல் லாதியா மசரமும் பட்ட, ஊனடை கருவும் பட்டன தழும்போ டுதித்தன வுயிரிலோ வியமுந், தானடி பட்ட சராசர சடங்க டமக்குயி ராயினோன் றழும்பு. 55

துண்ணென மாயோன் விழித்தனன் கமலச் சோதியும் யாதென வியந்தான், விண்ணவர் பெருமான் வெருவினன் வானோர் வேறுளார் மெய்பனிப் படைந்தார், வண்ணயா ழியக்கர் சித்தர்சா ரணர்தம் வடுப்படா வுடம்பினிற் பட்ட, புண்ணையா தென்று தத் தமிற் காட்டி மயங்கினார் புகுந்தவா றறியார். 56

---

52. கனன்று - கோபித்து. ஆகம் ஆக - திருமேனியாக. புடைத்தனன் - அடித்தனன்.

53. பன்னியர் - மனைவிமார். பருமம் - கவசம். எவ்வுயிர்க்கும் போதன் - எல்லா உயிர்கட்கும் அறிவுக்கறிவாய் உள்ளவன்.

54. பாம்பு - இராகுகேது. ஐங்கோள் - (எஞ்சிய) ஐந்து கிரகங்கள். ஆறு சமய வானவர் - சைவம், வைணவம் முதலிய கடவுட் கொள்கையுடைய ஆறு சமயத்திற்குரிய தேவர்கள்.

55. நரகர் - நரக உலகினர். சிதல் - செல் (கறையான்). ஊன் அடை கரு - கருப்பைக்குள் இருக்கும் கரு.

56. கமலச்சோதி - பிரமன். பனிப்பு - நடுக்கம். வண்ணம் யாழ் - இலக்கணம் அமைந்த வீணை ; பெருவண்ண முதலிய பாடற் றொழில் அமைந்த வீணையுமாம்.

ஏகநா யகனெவ் வுயிர்களுந் தானே யென்பது மன்பினுக்
கெளியன், ஆகிய திறனுங் காட்டுவா னடிபட் டங்கொரு கூடை
மண் கொட்டி, வேகநீர் சுருங்கக் கரையினை யுயர்த்தி மிகுத்து
டன் வேலைநீத் தொளித்துப், போகிய வாறு கண்டுகோற் கையர்
போய்நரை யாட்டியைத் தொடர்ந்தார். 57

வன்புதாழ் மனத்தோர் வலிசெய வின்ன மன்னனான் மறுக்க
முண் டேயோ, முன்புபோ கியவா ளென்செய்தா னென்னும்
முடியுமோ வினியெனத் திரங்கி, என்புபோல் வெளுத்த குழலி
னாள் கூட விறைவனை நோக்கிநின் றிரங்க, அன்புதே னாக வருத்
திய சிற்றூ ணமுதுசெய் தருளினா ரருளால். 58

கண்ணுத னந்தி கணத்தவர் விசும்பிற் கதிர்விடு திப்பிய
விமானம், மண்ணிடை யிழிச்சி யன்னைவா வென்று வல்லைவைத்
தமரர்பூ மழையும், பண்ணிறை கீத வோதையும் வேதப் பனுவ
லுந் துந்துபி யைந்தும், விண்ணிடை நிமிரச் சிவனருளடைந்தோர்
மேவிய சிவபுரத் துய்த்தார். 59

மன்றுடை யானோர் கூடைமண் கொட்டி மறைந்தது மடை
கரை நீண்ட, குன்றென வுயர்ந்த தன்மையுந் தம்மேற் கோலடி
பட்டது நோக்கி, என்றன்மேற் பட்ட தென்றன்மேற் பட்ட
திதுவென வதுவென வமைச்சர், நின்றவ ருணர்த்து நிகழ்ச்சியும்
பிறர்பா னிகழ்ச்சியு நோக்கியந் நிருபன். 60

உள்ளத்தா சங்கை பூண்டா னாகமண் ணுடைப்பிற் கொட்டிக்
கள்ளத்தா ராகிப் போனார் ககனத்தா ராகிச் சேனை
வெள்ளத்தார் பிறருங் கேட்ப மீனவற் குவகை வெள்ளங்
கொள்ளத்தா மழைத்தா காய வாணியாற் கூற லுற்றார். 61

---

57. வேகநீர் சுருங்க : நீர் வேகம் சுருங்க என மாற்றுக. வேலை நீத்து - வேலை செய்வதை விட்டு.

58. வன்பு தாழ் - வன்கண்மை தங்கிய ; வலிமை தங்கிய எனினு மாம். மறுக்கம் - துன்பம். திரங்கி - தோல் சுருங்கி.

59. கண்ணுதல் நந்தி கணத்தவர் - சிவகணத்தவர். திப்பிய - திவ்விய. இழிச்சி - இறக்கி.

60. மன்றுடையான் - வெள்ளியம்பலத்தில் நடம்புரியும் இறைவன்.

61. ஆசங்கை - சந்தேகம். ககனத்தார் ஆகி - ஆகாயத்திலே தங்கி.

மறத்தாறு கடந்த செங்கோல் வழுதிநின் பொருள்க ளெல்லாம்
அறத்தாற்றி னீட்டப் பட்ட வனையவை புனித மான
திறத்தாலே நமக்கு நம்மைச் சேர்ந்தவர் தமக்கு மார்வம்
உறத்தாவில் வாத வூர னுதவினு னுத லாலே. 62

அனையனை மறுக்கஞ் செய்தா யரும்பிணப் புலவுத் தீவாய்
வனநரித் திரளை யீட்டி வாம்பரி யாக்கித் தந்தேங்
கனையிருட் கங்குற் போதிற் கழிந்தன பின்னுந் தண்ட
வினையர்பால் விடுத்துத் துன்பம் விளைத்தனை யதுபொ றுத்தேம். 63

வருபுனல் பெருகப் பார்த்தேம் வந்திகைப் பிட்டு வாங்கிப்
பருகிவந் தாளாய் மாறு பட்டன மண்போ கட்டுப்
பொருகரை யுயரச் செய்து போகியவ் வன்னை போல்வாள்
பெருகிய விடும்பை தீர்த்தெம் பேருல கடையச் செய்தேம். 64

இத்தனை யெல்லாஞ் செய்த திவன்பொருட் டிந்த வேத
வித்தகன் றன்மை யொன்று மறிந்திலை வேட்கை யெம்பால்
வைத்துனக் கிம்மை யோடு மறுமையுந் தேடித் தந்த
உத்தமன் றுடைசந் தாதிப் புறப்பற்று மொழிந்த நீரான். 65

நிறையுடை யிவனை யிச்சை வழியினு னிறுத்தி யான்ற
மறைவழி நின்று நீதி மன்னவர்க் களந்த வாழ்நாள்
குறைபடா தானுச் செல்வ வாரியுட் குளித்து வாழ்கென்
றிறையவன் மொழிந்த மாற்ற மிருசெவி [1]நிரப்பத் தென்னன். 66

அச்சமுற் றுவகை யீர்ப்ப வதிசய வெள்ளத் தாழ்ந்து
பொச்சமி லன்ப ரெங்குற் றுரெனப் புகுந்து தேடி

---

62. மறத்து ஆறு - தீயவழிகள். தா இல் - குற்றமில்லாத.

63. பிணப் புலவு - பிணநாற்றம். கனை - செறிந்த.

64. மாறு - பிரம்படி. போகட்டு - போட்டு. எம்பேர் உலகு - எமது பெரிய சிவலோகம்.

65. வேத வித்தகன்-மறைப்பொருள் உணர்ந்த ஞானி. வேட்கை-அன்பு. புறப்பற்றும் என்ற உம்மையால் அகப்பற்றும் ஒழிந்தமை கொள்க.

66. நிறை - மனத்தை ஒருவழி நிறுத்தும் தன்மை. தென்னன் - அரிமருத்தன பாண்டியன்.

67. பொச்சம் இல் அன்பர் - மெய்யன்பர். பொச்சம் - பொய். இச்சையில் இருக்கின்றுர் - தம் விருப்பப்படி சிவத்தியானத்தில் அமர்ந்திருக்கும் திருவாதவூரர். விச்சை - ஞானநிட்டை.

பா-ம்—1 நிரப்ப.

நச்சர வசைத்த கூட லுயகன் கோயி னண்ணி
[1]விச்சையி லிருக்கின் றுரைக் கண்டுபோ யிறைஞ்சி வீழ்ந்தான். 67

தொல்லைநீ ருலக மாண்டு சுடுதுயர் நரகத் தாழ
வல்லவென் னறிவுக் கேற்ற வண்ணமே செய்தே னீரென்
எல்லைதிர் தவப்பே ருய்வந் திகபர வேது வாகி
அல்லல்வெம் பிறவி நோய்க்கு மருமருந் தானீ ரையா. 68

செறுத்துநா னும்மை யெண்ணு திழைத்தவித் தீங்கு தன்னைப்
பொறுத்துநீர் முன்போ லுங்கள் புவியெலாங் காவல் பூண்டு
மறுத்துடைத் தாள்வ தாகென் றிரந்தனன் மண்ணி லாசை
வெறுத்தவர் நகையுட் டோன்ற வேந்தனை நோக்கிச் சொல்வார்.

பாய்திரை புரளு முந்நீர்ப் படுகட லுலகுக் கெல்லாம்
ஆயிரஞ் செங்க ணுன்போ [2]லரசுவீற் றிருப்பீ ருங்கள்
நாயக னருளிச் செய்த வண்ணமே நயந்து செய்வீர்
தூயவ ரன்றோ நுங்கள் சூழல்சேர்ந் தொழுக வல்லார். 70

உம்மைநா னடுத்த நீரா லுலகியல் வேத நீதி
செம்மையா லிரண்டு நன்றாத் தெளிந்தது தெளிந்த நீரான்
மெய்ம்மையாஞ் சித்த சுத்தி விளைந்தது விளைந்த நீராற்
பொய்ம்மைவா னவரி னீந்திப் போந்தது சிவன்பாற் பத்தி. 71

வந்தவிப் பத்தி யாலே மாயையின் விருத்தியான
பந்தமாம் பவஞ்ச வாழ்க்கை விளைவினுட் பட்ட துன்பம்
வெந்தது கருணை யாகி மெய்யுணர் வின்பந் தன்னைத்
தந்தது பாதஞ் சூட்டித் தன்மய மாக்கிற் றன்றே. 72

---

68. தொல்லை - பழமையாகிய. எல்லைதீர் - அளவற்ற.

69. மறுத் துடைத்து - எனது பழியைத்தீர்த்து. உண்மை அடியார்களே உலக முழுவதற்கும் உரியர் என்ற கருத்துத் தோன்றப் பாண்டியன், 'நுங்கள்புவி' என்றான்.

70. ஆயிரஞ் செங்கண்ணுன் - இந்திரன். உங்கள் நாயகன் உங்கள் இறைவனாகிய சோமசுந்தரக் கடவுள்.

71. வேத நீதி - வேதவொழுக்கம். தருமவொழுக்கங்களை உணர்தலே சித்த சுத்தி உண்டாவதற்குக் காரணமாகும் என்க.

72. பவஞ்சம் - பிரபஞ்சம், உலகம். பவஞ்சம் மாயேய மலமாதலின், 'பந்தமாம் பவஞ்சம்' என்றார்.

பா-ம்—1 இச்சையி. 2 லரசு செய்திருப்பீ.

சச்சிதா னந்த மாமத் தனிப்பர சிவனே தன்ன
திச்சையா லகில மெல்லாம் படைத்தளித் திறு செய்யும்
விச்சைவா னவரைத் தந்த மேலவன் பிறவித் துன்பத்
தச்சமுற் றடைந்தோர்க் கானு வின்பவீ டளிக்கு மன்னோன். 73

மந்தரங் கயிலை [1]மேருப் பருப்பதம் வார ணாசி
இந்தநல் லிடங்க டோறு மிகபர போகம் யார்க்குந்
தந்தருள் செய்தெம் போல்வார் தம்மனம் புறம்போ காமற்
சிந்தனை திருத்தி ஞானத் திருவுரு வாகி மன்னும். 74

ஒப்பவர் மிக்கோர் வேறற் றொருவனு மெங்குந் தங்கும்
அப்பரஞ் சுடரே யிந்த வாலவா யுறையுஞ் சோதி
கைப்படு கனிபோன் மேனாட் கண்ணுவ னாதி யோர்க்கு
மெய்ப்பொருள் விளங்கித் தோன்று வேதத்தை விருத்தி செய்தான்.

தன்னரு ளான ஞானத் தபனிய மாகுந் தில்லைப்
பொன்னக ரிடத்தி லென்னைப் போகெனப் பணித்தா னீரும்
அன்னதற் கிசைதி ராகென் றுலவா யடிக டம்மைப்
பன்னருந் துதியா லேத்தி விடைகொடு பணிந்து போவார். 76

தன்றொடக் கறுத்த நாதன் றாட்டொடக் குண்டு போவார்
பின்றொடர்ந் தரசன் செல்லப் பெருந்தவர் நின்மி னின்மின்
என்றனர் செலவுங் கூப்பி டெல்லைசென் றணிய னாகிச்
சென்றடி பணிந்து தென்னன் விடைகொடு திரும்பி னானே. 77

துறந்தவர் போக மீண்டு தொன்னக ரடைந்து தென்னன்
அறந்தரு பங்கி னுறை யடைந்துதான் பிரம்பு நீட்டப்

---

73. இச்சை - (ஆன்மாக்களுக்கு மலபாகம் வருவித்தற்பொருட்டு வைத்த) நேயம். வானவர் - இங்குப் பிரமன், திருமால், உருத்திரன் என்போர்.

74. மந்தரம் - மந்தரமலை. பருப்பதம் - ஸ்ரீபர்வதம். வாரணாசி - காசி

75. கைப்படு கனிபோல் - உள்ளங்கை நெல்லிக்கனி போல் பொருள் விளங்கும்படி. கண்ணுவன் - ஒரு முனிவன்.

76. ஞானத் தபனியம் - ஞானவெளி (சித் அம்பரம்) ஆகும் பொன்னம்பலம். பொன் தில்லை நகர் - அழகிய தில்லைப்பதி.

77. தன் தொடக்கு - தன் பாச பந்தம். தாள் தொடக்குண்டு - திருவருளால் பிணிக்கப்பட்டு. பெருந் தவர் - திருவாதவூரடிகள்.

பா-ம்—1 மேரு.

புறந்தரு கருணை வெள்ளம் பூரிப்பத் தாழ்ந்து நெஞ்ச
நிறைந்தது வாய்கொள் ளாம னின்றெதிர் துதிப்ப தானான். 78

அடையாளம் படவொருவ னடித்தகொடுஞ் சிலைத்தழும்புந்
தொடையாக வொருதொண்டன் றொடுத்தெறிந்த கல்லும்போற்
கடையானேன் வெகுண்டடித்த கைப்பிரம்பு முலகமெல்லாம்
உடையானே பொறுத்ததோ வுன்னருமைத் திருமேனி. 79

கடியேறு மலர்மகன்மான் முதலாய கடவுளரும்
படியேழு மளவிறந்த பல்லுயிரு நீயேயோ
முடியேற மண்சுமந்தாய் முதுகிலடி வடுப்பட்ட
தடியேனும் பட்டேனின் றிருமேனி யானேனோ. 80

கைக்குமருந் தின்சுவையின் காட்டுமா றெனவினைக்கும்
பொய்க்குமருங் கலங்கி மண்ணுண்டு புலைநரகந்
துய்க்குமருந் துயர்களைவான் மாறாய்நின் றுணையடிக்கே
உய்க்குமருந் தவரிவரென் றறியாமை யொறுத்தேனே. 81

பாதியுமை யுருவான பரமேட்டி யெனக்கிம்மை
ஊதியமும் பரகதியு முறுதிபெற விளைவிக்கும்
நீதியினான் மந்திரியாய் நின்னருளே யவதரித்த
வேதியரை யறியாதே வெறுத்துநா னொறுத்தேனே. 82

மாயா விருத்தியினான் மாழாந்து மாதவரை
ஆயா தொறுத்தே னருநரகத் தாழ்ந்துநான்
வீயாம லின்றணையார் மெய்ம்மையெலாந் தேற்றியவென்
தாயானாய் தண்ணளிக்கென் றமியேன்செய் கைம்மாறே. 83

நின்னையுணர்ந் தவர்வேத நெறிவேள்வி செய்தூட்டும்
இன்னமுதிற் கழிசுவைத்தோ விவளிடும்பிட் டெவ்வுயிர்க்கும்

---

78. அறந்தரு பங்கினார் - தருமங்களை ஈன்ற உமையை இடது பாகத்தினுடைய இறைவர்.

79. அடையாளம்பட - வடுவுண்டாகும்படி. ஒருவன் - இங்கு அருச்சுனன். ஒரு தொண்டன் - சாக்கிய நாயனார்.

80. மலர்மகன் - பிரமன். படியேழும் - உலகங்கள் ஏழும்.

81. இன்சுவை - இனிய பயன். வினை - கன்ம மலம். பொய் - மாயாமலம். புலை நரகம் - புல்லிய நரகம்.

82. பரமேட்டி - இறைவ. ஒறுத்தேன் - தண்டித்தேன்.

83. மாழாந்து - மயங்கி. வீயாமல் - அழியாமல்.

மன்னவனே செந்துவர்வாய் மலர்ந்தமுது செய்தனையால்
அன்னையிலா வுனக்கிவளோ ரன்னையாய் வந்தாளோ. 84

அன்றுசிறுத் தொண்டரிடும் பிள்ளைக் கறியமுதும்
மென்று சுவைதெரிந்த வேடனிட்ட வூனும்போல்
நன்றுநரை யாட்டியிடு பிட்டு நயந்தருந்தி
என்று மடியார்க்கெளிவந்தா யெந்தாயே. 85

நரியாவும் பரியாக்கி நடத்தியுமம் பரமன்றித்
தரியாயான் றருதுகிலைத் திருமுடிமேற் றரித்துமறைக்
கரியாய்நீ யென்பாச மறுக்கவருந் திருமேனி
தெரியாதே பரியாசை திளைத்திறுமாந் திருந்தேனே. 86

விண்சுமக்கும் புள்ளாய் விலங்காய்ச் சுழன்றுமனம்
புண்சுமக்குஞ் சூழ்ச்சி வலியுடைய புத்தேளிர்
மண்சுமக்கு மள்ளராய் வந்திலரே வந்தக்காற்
பண்சுமக்குஞ் சொல்லிபங்கன் பாதமுடி காண்பாரே. 87

என்றுபல முறையாலே துதித்தடைந்தோர்க் கன்பரிவ ரிவரைத் தேறின், நன்றுமிக பரபோகம் வீடுபெற லெளிதென்று நகைத்தார் வேந்தன், அன்றுதிருப் பணிபூசை பிறவுநனி வளம்பெருக்கி யழகார் வெள்ளி, மன்றுடையா னடிக்கன்பு முயிர்க்கன்புஞ் சுரந்தொழுகி வாழு நாளில். 88

முன்புபெருந் துறையார்க்கு மடியார்க்கு மறந்தெரிந்த முறையா லீட்டுந், தன்பொருள்போ யுடன்பலவாய்த் தழைத்துவரு பயனேபோற் றலையு வாவின், நன்பனிகான் மதிகண்ட வுவரி

84. கழி சுவைத்தோ - மிகுந்த சுவையையுடையதோ.

85. சிறுத்தொண்டர் - இது சிவனடியாரிடத்து மிகவும் சிறியராய் ஒழுகினமையின் பெற்ற பெயர். இவர் இயற்பெயர் பரஞ்சோதியார் என்பது. வேடன் - இங்குக் கண்ணப்பன்.

86. அம்பரம் - திக்காடை. இறுமாந்து - செருக்குற்று.

87. புள் - அன்னம். விலங்கு - பன்றி. புத்தேளிர் - பிரமவிஷ்ணுக்கள்.

88. நன்றும் பெறல் - பெரிதும் அடைதல். இக பர போகங்கள் அனுபவித்தபின் இருவினையொப்பு வந்து பரமுத்தியடைவது ஆதலால், "இகபரபோகம் வீடு" என எண்ணினர்.

89. நன் பனிகால் - நல்ல குளிர்ச்சியான நிலவை வீசுகின்ற.

யெனப் பலசெல்வ நாளு மோங்க, இன்புறுவான் சகநாத னெனு மகப்பெற் றின்பத்து ளின்பத் தாழ்ந்தான். 89

அம்மகனை முடிசூட்டி யரசாக்கி வாதவூ ரமைச்சர் சார் பான், மெய்ம்மைநெறி விளங்கியிரு வினையொப்பி லரன்கருணை விளைந்த நோக்கான், மும்மைமலத் தொடர்நீந்திச் சிவானந்தக் கடற்படிந்து முக்கண் மூர்த்தி, செம்மலர்த்தா ணிழலடைந்தான் றிறலரிமர்த் தனனென்னுந் தென்பார் வேந்தன். 90

வழுதியால் விடுக்கப் பட்ட வாதவூர் முனிக டம்மைப்
பழுதிலாப் பாடல் கொள்வார் பதிபல பணிந்து போந்து
முழுதுணர் மறையோர் வேள்விப் புகையண்ட முடிகீண் டூழி
எழுவட வரைபோற் றோன்று மெழிற்றில்லை மூதூர் சேர்ந்தார்.

வீதிதொறும் வீழ்ந்துவீழ்ந் திறைஞ்சியா லயத்தெய்தி மெய்ம்மை யான, சோதியறி வானந்தச் சுடருருவாஞ் சிவகங்கை தோய்ந்து மேனி, பாதிபகிர்ந் தவள்காணப் பரானந்தத் தனிக் கூத்துப் பயிலா நிற்கும், ஆதியரு ளாகியவம் பலங்கண்டு காந் தநே ரயம்போற் சார்ந்தார். 92

அன்றுகுருந் தடியிலடி வைத்தாண்ட கோலமே யருளா னந்த, மன்றினிடத் தெதிர்[1]தோற்றி வாவென்பா ரெனமூரன் மணிவாய் தோற்றி, நின்றதனிப் பெருங்கூத்தர் நிலைகண்டா ரஞ்சலித்தார் நிலமேல் வீழ்ந்தார், ஒன்றரிய புலன்கரண வழி நீந்தி மெய்யன்பி னுருவ மானார். 93

வண்டுபோற் புண்டரிக மலரில்விளை சிவானந்த மதுவை வாரி, உண்டுவா சகம்பாடி யாடியழல் வெண்ணெயென வுருகுந்

---

90. மெய்ம்மை நெறி - பிறவியை நீக்கும் உண்மை நெறி. இருவினை ஒப்பு-இன்பத்தையும் துன்பத்தையும் ஒப்பநோக்கும் பக்குவநிலை. மும்மை மலம் - ஆணவம், கன்மம், மாயை என்பன.

91. ஊழி எழு - ஊழி தொறும் எழுந்தோங்கும். வடவரை - கயிலைமலை.

92. தில்லைவாழந்தணர் சிவகணநாதர் ஆதலாலும், ஸ்ரீநடராஜப் பெருமான் தில்லை வாழந்தணருள் தாமும் ஒருவர் என்று திருவாய் மலர்ந்தருளினார் ஆதலாலும் அவருடைய வீதிதோறும் வீழ்ந்து வீழ்ந்து இறைஞ்சினார் என்க. அயம் - இரும்பு.

93. ஒன்று அரிய - ஒருப்படுதலில்லாத. புலன் - ஐம்புலன்கள். [illegible]ணம் - அந்தக்கரணங்கள்.

பா-ம்—1 தோன்றி.

தொண்டர், விண்டுழா வியகுடுமி மன்றுடையான் றிருவாக்கான் மிகுந்த நேயங், கொண்டுபோய்க் குணதிசையி லருந்தவர்வாழ் தபோவனத்தைக் குறுகி யங்கண். 94

குறிகுணங்கள் கடந்ததனிக் கூத்தனுரு வெழுத்தைந்தின் கொடுவா ளோச்சிப், பொறிகரணக் காடெறிந்து வீசிமனப் புலந்திருத்திப் புனிதஞ் செய்து, நிறைசிவமாம் விதைவிதைத் துப் பசுபோதங் களைந்தருணன் னீர்கால் பாய, அறிவுருவாய் விளைந்ததனிப் பரானந்த வமுதருந்தா தருந்தி நின்றார். 95

மானிரையுங் குயவரியும் வந்தொருங்கு நின்றுரிஞ்ச மயங்கு கானத், தானிரைகன் றெனவிரங்கி மோந்துநக்க வானந்த வருட்கண் ணீரைக், கானிறைபுள் ளினம்பருகக் கருணைநெடுங் கடலிருக்குங் காட்சி போலப், பானிறவெண் ணீற்றன்ப ரசை வின்றிச் சிவயோகம் பயிலு நாளில். 96

புத்தர்சில ரிலங்கையினும் போந்துமூ வாயிரமெய்ப் போத வேத, வித்தகரோ டேழுநாள் வரையறுத்துச் சூளொட்டி விவா தஞ்செய்வார், இத்தகைய நாளேழில் யாமிவரை வேறுமெனு மெண்ணம் பூண்ட, சித்தமுடை யவராக வவர்கனவி லெழுந்த ருளித் தேவ தேவர். 97

வாதவூ ரனைவிடுத்து வாதுசெய்வீ ரெனவிழித்து மறையோ ரந்தப், போதவே தியரைவனம் புகுந்தழைத்தா ரப்போது பொதுவி லாடும், வேதநா யகன்பணித்த வழிநின்று ரெதிர்

94. புண்டரிக மலர் - இல்லவனமாகிய தாமரை மலர், புண்டரீக விடு; இதில் நடனம் புரியும் சிவம் ஆகாசம் என்க. வாசகம் - (இங்குத் திருவாசகத்திலுள்ள) 'கண்டபத்து'. துழாவிய-அளாவிய. குடுமி - உச்சி.

95. "ஆடும் படிகேணல் லம்பலத்தா னையனே, நாடுந் திருவடியி லேநகரங் - கூடு, மகர முதரம் வளர்தோள் சிகரம், பகருமுகம் வா முடியப் பார்" என்று உண்மை விளக்கத்துள் கூறப்படுதலின், 'கூத்த னுரு வெழுத்தைந்து' என்றார். பசு போதம் களைந்து - சிவ போத மாகிய களையை நீக்கி. அருந்தாதருந்தல் - தற்போதத்தால் நுகராது சிவபோதத்தால் நுகர்தல்.

96. குயவரி - கொடுவாள்போலும் வரிகளையுடைய புலி. மயங்கு- இருள்செறிந்த.

97. மெய்ப்போதம் - சிவஞானம். சூளொட்டி - வஞ்சினங்கூறி. வேறும் - வெல்வோம்.

மறுப்ப மீண்டு போந்து, காதரா குலமூழ்கி யிருந்தார்முத் தமுனி மிர்த்துக் கலியைக் காய்வார். 98

பின்னுமவர் கனவின்கண் மன்றுணடம் பிரியாத பெருமான் வந்து, முன்னவனைப் பெருந்துறையிற் குருந்தடியி லாட்கொண்ட முறையி னானும், இன்னிசைவண் டமிழ்மணிபோற் பாடுங்கா ரணத்தானும் யாமன் றிட்ட, மன்னியபேர் மாணிக்க வாசக னென் றழைமின்கள் வருவ னென்றார். 99

உறக்கமொழிந் தறவோர்சென் றவர்நாம மொழிந்தழைப்ப வுணர்ந்து நாதன், அறக்கருணை யிதுவோவென் றவரோடு மெழுந்துநக ரடைந்து மண்ணுந், துறக்கமுநீத் தருவருத்தார் மன்றுடுந் துணைக்கமலந் தொழுது மீண்டோர், நிறக்கனக மண்ட பத்திற் புக்கிருந்தா ரறிஞர்சூழா நெருங்கிச் சூழ. 100

தத்துநீர்க் கலத்திற் போந்த சீவரப் போர்வை தாங்கும்
புத்தரை வேறு வைத்துப் புகன்மினும் மிறையு நூலும்
அத்தலை நின்றோ ரெய்துங் கதியுமென் றுய்ந்த கேள்வி
மெய்த்தவ நெறிமா ணிக்க வாசகர் வினவி னாரே. 101

கனவினு நீறு காணுக் கைதவர் காட்சி யானும்
மனவனு மானத் தானும் வாசகப் பெருமான் றம்மை
வினவிய மூன்று முத்தே சாதியின் விரித்தார் வேதம்
அனையவர் கேட்டம் மூன்று மனுவாதஞ் செய்துட் கொள்ளா. 102

---

98. வேதநாயகன் பணித்த வழி - தில்லையின் கீழ்ப்பாகத்தி லுள்ள தபோவனத்தில் சென்று சிவயோகஞ் செய்திருக்க எனக் கட்டளையிட்ட நெறி. காதராகுலம் - காதர ஆகுலம் - அச்சந்தருந் துன்பம்.

99. முன் அவனை - முன்பு திருவாதவூரரை. வண் - வளம்.

100. அறக்கருணை - இது சிவபுண்ணிய வடிவாம்.

101. சீவரப் போர்வை-மருதந்தளிர் ஊறிய துவர் நீரில் தோய்த்த போர்வை; கடுக்காய் நீரில் தோய்த்த போர்வை எனினுமாம். திருநீறு இல்லாத புத்தர் முகத்தைப் பார்க்கலாகாது என இடையில் திரையிட்டதாகத் திருவாதவூரடிகள் புராணங் கூறும்; இங்கும் அப்பொருள் படப், 'புத்தரை வேறு வைத்து' என்றார்.

102. புத்தர்கட்குக் காட்சியும் அனுமானமுமே பிரமாணமாத லால், 'காட்சியானும் அனுமானத்தானும்' என்றார். கருதி யறிதலே அனுமானம் என்பார், 'மனவனு மானத்தானும்' என்றார். உத்தே சாதி - உத்தேசம், இலக்கணம், சோதனை என்பன.

இன்றிவர்க் கனுமா ஞதி யெடுப்பதென் னென்று காட்சி
ஒன்றுகொண் டவர்க டாமே யுடம்படன் மறுத்தார் காட்சி
அன்றியே தின்மை யாலே யனுமான வளவை யாலும்
நின்றவன் றுங்கோ ஞதி நிறுத்திய மூன்று மென்ருர்.　103

பொன்றுதன் முத்தி யென்பார் பூசுரர் பிரானை நோக்கி
இன்றெமைக் காட்சி யொன்ருல் வென்றனை மென்றீ ராஞல்
நன்றுநுங் கடவு டன்னை யளவையா ஞட்டி யெம்மை
வென்றிடு மென்ரு ரைந்தும் வென்றவர் முறுவல் செய்யா.　104

பிறவியந் தகர்க்கு வெய்யோன் பேரொளி காட்ட லாமோ
மறைகளா லளவை தன்ஞற் றேவரான் மனத்தால் வாக்கால்
அறிவருஞ் சோதி யெங்கோ னவன்றிரு நீற்றுத் தொண்டின்
குறிவழி யன்றிக் காணுங் கொள்கையா னல்ல னென்ருர்.　105

நேற்றமில் லாதா ருங்கள் சிவனுக்குந் திருநீற் றுக்குந்
தோற்றமெப் படித்திட் டாந்தஞ் சொல்லுமி னென்ருர் தூயோர்
வேற்றுமை யறநா மின்னே விளக்குது மதனை நீங்கள்
தோற்றபி னுமக்குத் தண்டம் யாதுகொல் சொன்மி னென்ருர்.

செக்குர விடையிட் டெம்மைத் திரிப்பது தண்ட மென்ஞ
எக்கராம் புத்தர் தாமே [1]யிசைந்தன ரெரிவாய் நாகந்
கொக்கிற கணிந்தா ரன்ப ருலர்ந்தகோ மயத்தை வாங்கிச்
செக்கரந் தழல்வாய்ப் பெய்து சிவந்திட வெதுப்பி வாங்கி.　107

இவ்வண்ண மிருக்கு மெங்க ளிறைவண்ண வடிவு மந்தச்
செவ்வண்ண மேனி பூத்த திருவெண்ணீ றதுவு மென்ஞ

---

103. அனுமானம், தன் பொருட்டனுமானம், பிறர் பொருட்டனுமானம் என இருவகைப்படும். ஆதி என்றதனல் உரையளவையாகிய தந்திர மந்திர உபதேச கலைகள் மூன்றுங் கொள்க. ஏது - இயல்பேது, காரியவேது, அநுபலத்தியேது, காரணவேது என்பன.

104. பொன்றுதல் முத்தி என்பர் - உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, அறிவு என்னும் பஞ்ச கந்தங்களும் கெடுதலே முத்தி என்பர் புத்தர். அளவை - இங்குக் காட்சியளவை.

105. அளவை - ஆகம வளவை. எம்கோன் - எமது கடவுள்.

106. தோற்றம் - இயைபு. திட்டாந்தம் - திருட்டாந்தம் - உதாரணம்.

107. எக்கர் - (வாதப்போருக்கு) எழுந்த. ஆம் : இடைச்சொல். கோமயம் - பசுவின் சாணம்.

பா-ம்—1 யிசைத்தன.

மெய்வ்வண்ண முணர்ந்த வேத வித்தக ரவைமுன் காட்ட
உய்வ்வண்ண மறியா மூட ருள்ளமு முயிருந் தோற்றார். 108

இங்கிவர் தோற்ற வண்ணங் கேட்டவ ரிறப்ப தின்பந்
தங்குவீ டென்று தேற்றுஞ் சமயத்தி லாழ்ந்த வாத்திக்
கொங்கிவர் தாரான் மூங்கைக் குயிற்பெடை யெனத்தா னீன்ற
மங்கையைக் கொண்டு தில்லை மல்லன்மா நகரில் வந்தான். 109

யாவரே யாக வின்றிங் கென்மகண் மூங்கை தீர்த்தோர்
ஆவரே வென்றோ ரென்றா னுற்றவு மானம் பூண்டு
சாவதே முத்தி யென்பார் மணிமுதன் மூன்றுந் தங்கள்
தேவரே யென்றென் றுள்கிச் செய்யவுந் தீரா தாக. 110

அந்தணர் பெருமான் முன்போ யரசன்றன் மகளைப் போகட்
டிந்தநோய் நீரே தீர்க்க வேண்டுமென் றிரந்தா னையன்
சுந்தர நாதன் மன்று ளாடிய துணைத்தா டன்னைச்
சிந்தைசெய் தருட்க ணோக்காற் றிருந்திழை யவளை நோக்கா. 111

வேறுவே றிறைவன் கீர்த்தி வினாவுரை யாகப் பாடி
ஈறிலா னன்பர் கேட்ப விறைமொழி கொடுத்து மூங்கை
மாறினாள் வளவன் கன்னி மடவரல் வளவன் கண்டு
தேறினான் சிவனே யெல்லாத் தேவர்க்குந் தேவ னென்னா. 112

பின்பர வாரம் பூண்ட பிரானருள் விளையப் பாடும்
அன்பரை முனிவர் மூவா யிரவரை யடியிற் றாழ்ந்து

---

108. வேத வித்தகர் - இங்கு வாதவூரடிகள். உள்ளம் - ஊக்கம்.

109. இறப்பது - இறத்தல்; தொழிற்பெயர். (இறத்தல் - உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானம் என்னும் பஞ்சகந்தங்களும் கெடுதல்.) கொங்கு இவர் தாரான் - மணம் விரிந்த மாலையையுடைய சோழன்.

110. மூங்கை - ஊமை. சாவதே முத்தி என்பார் - பஞ்சகந்தங்களும் கெடுதலே முத்தி என்று கூறும் புத்தர்கள். மணிமுதல் மூன்று - மணி, மந்திரம், ஔடதம் என்பன.

111. போகட்டு - போகவிட்டு. சுந்தரநாதன் - பேரழகையுடைய இறைவன்.

112. இறைமொழி – மறுமொழி, விடை. வேறுவேறிறைவன் . . . பாடி - இது திருவாசகத்திலுள்ள திருச்சாழலைக் குறிக்கும்.

113. மூவாயிரவர் - தில்லை மூவாயிரந் தீட்சதர். மூர்க்கர் - பிடித்ததைச் சாதிப்போராகிய புத்தர்கள்.

முன்பவர் சொன்ன வாறே மூர்க்கரைத் தடிந்து மன்றுள்
இன்பரை நடங்கண் டேத்தி யிறைமகன் சைவ ஞானன். 113

மாசறு மணிபோற் பன்னாள் வாசக மாலை சாத்திப்
பூசனை செய்து பன்னாட் புண்ணிய மன்று ளாடும்
ஈசன தடிக்கீ ழெய்தி யீறிலா வறிவா னந்தத்
தேசொடு கலந்து நின்றார் சிவனருள் விளக்க வந்தார். 114

ஆகச் செய்யுள்—3,105

---

114. பூசனை - ஞானபூசை. வாசகமாலை - திருவாசகம். கலந்து நின்றார் - இங்குக் கலந்து நின்ற நாள் ஒரு ஆனித்திங்கள் மக நட்சத்திரம் ஆகும். சிவன் அருள் விளக்க வந்தார் - திருவாதவூரடிகள்.

# 62. பாண்டியன் சுரந்தீர்த்த படலம்

—o—

வான லமுத மதிமுடிமேன் மதுரைப் பெருமான் மண்சுமந்து
தேன லமுத வாசகரைக் கதியில் விடுத்த திறனிதுமேற்
பானன் மணிவாய்க் கவுணியனை விடுத்துச் சமணர் படிற்றொழுகுங்
கூனல் வழுதி சுரந்தணித்தாட் கொண்ட கொள்கை கூறுவாம். 1

வாகு வலத்தான் சகநாத வழுதி வேந்தன் மகன்வீர
வாகு வவன்சேய் விக்கிரம வாகு வவன்சேய் பராக்கிரம
வாகு வனையான் மகன்[1]சுரபி மாற னனையான் றிருமைந்தன்
வாகு வலத்தான் மறங்கடிந்து மண்ணா ளுங்குங் குமத்தென்னன். 2

அன்னான் குமரன் கருப்புரபாண் டியனா மவன்சேய் காருணிய
மன்னா மவன்றன் மகன்புருடோத் தமனா மவன்றன் மகனாகும்
மின்னார் [2]மௌலிச் சத்துருசா தனபாண் டியனும் விறல்வேந்தன்
இன்னான் மகன்கூன் பாண்டியனா மிவன்றோள் வலியா லிசைமிக்கான்.

திண்டோள் வலியாற் குடநாடர் செம்ம றனையு மாரலங்கல்
வண்டோ லிடுதா ரிரவிகுல மருமான் றனையு மலைந்துபுறங்
கண்டோர் குடைக்கீழ் நிலமூன்றுங் காவல் புரிந்து கோலோச்சிப்
புண்டோய் குருதி மறக்கன்னிப் புகழ்வேல் வழுதி நிகழ்நாளில். 4

---

1. வான் அல் - வானில் இருளில் (உலவும்). பால்நல்மணிவாய் - பால்மணங் கமழும் மிகவும் அழகிய திருவாயையுடைய; வெண்மையாகிய அழகிய முத்துப்போலும் பற்கள் பொருந்திய திருவாயையுடைய எனினுமாம். கவுணியன் - கவுணியர் கோத்திரத்தில் வந்தவராகிய திருஞானசம்பந்தர். படிற்று - பொய்ந்நெறியில். கூனல் வழுதி - கூன்பாண்டியன்; நெடுமாறன்.

2. வாகுவலம் - புயவலி. சேய் - புதல்வன். மறம் - இங்குப் பகை.

3. சத்துருசாதனன் - பகைவரைக் கீழ்ப்படுத்தியவன் என்பது பொருள். விறல் - வலிமை. இசை - புகழ்.

4. குடநாடர் செம்மல் - மேற்கிலுள்ள மலைநாட்டுக்கரசனாகிய சேரன். இரவிகுல மருமான் - சோழன். மறக்கன்னி - வீரலட்சுமி. நிகழ்நாளில் - அரசுபுரிந்து வரும் நாளில்.

பா-ம்—1 சுரதமாற. 2 மோலிச்.

விண்டு மூவாவுங் கைம்மாவும் வெறுக்கைக் குவையு மணிக்குவையும்
வண்டு வீழும் தாரளக வல்லி யாய மொடுநல்கிக்
கண்டு கூடற் கோமகனைக் காலில் வீழ்ந்து தன்னோடு
பண்டு போலக் கைக்கொண்டு போனான் றேனார் பனந்தாரான். 5

சென்னிக் கோனுந் தானீன்ற திலகப் பிடியை யுலகமெலாம்
மின்னிக் கோதில் புகழொளியால் விளக்குஞ் சைவ மணிவிளக்கைக்
கன்னிக் கோல மங்கையருக் கரசி தன்னைக் கௌரியற்கு
வன்னிக் கோமுன் மணம்புணர்த்தி வாங்கி னான்றன் வளநாடு. 6

வளவர்கோன் செழியன் கற்பின் மங்கையர்க் கரசி யாருக்
களவறு நிதியுஞ் செம்பொற் கலிங்கமு மணியும் போகம்
விளைநில மனைய வாய வெள்ளமும் பிறவுந் தென்னன்
உளமகிழ் சிறப்ப வேந்தர் வரிசையா லுதவிப் பின்னர். 7

கோதறு குணத்தின் மிக்க குலச்சிறை யென்பா னங்கோர்
மேதகு கேள்வி யானை விடுத்தனன் மீண்டு தென்னன்
காதலி யோடு [1]காவற் கடவுள்செம் பதுமக் கோயின்
மாதரை மணந்து செல்வான் போல்வந்து மதுரை சேர்ந்தான். 8

மலர்மகள் மார்பன் பொன்னி மன்னவன் பயந்த தெய்வக்
குலமக ளுடனே வந்த குலச்சிறை குணனுங் கேள்வித்
தலைமையு மதியின் மிக்க தன்மையுந் தூக்கி நோக்கி
நலமலி யமைச்ச னாக்கி நானிலம் புரக்கு நாளில். 9

வல்வினை வலியான் மெய்யில் வலியகூ னடைந்தான் போலக்
கொல்வினை யிலராய் வஞ்சங் கொண்டுழன் றுடுத்த பாசம்

---

5. அளகம் - கூந்தல். வல்லி ஆயம் - பரிசனமகளிர்கூட்டம்.

6. திலகப்பிடி - மங்கையர்க்கரசியார்: இப்பொருளுவமை; அடையடுத்த ஆகுபெயருமாம். வன்னிக்கோ - தீக் கடவுள்.

7. செம்பொற் கலிங்கம் - பீதாம்பரம். போகம் - ஐம்புலநுகர்ச்சி.

8. காவற்கடவுள் - திருமால். செம்பதுமக் கோயில் மாதர் - செந்தாமரை வாழ் இலட்சுமி.

9. மலர்மகள் மார்பன் - இங்குப் பாண்டியன்; திருமால் உலக பாலர் உருவாய் நின்று உலகங்காத்தலின், 'மலர்மகள் மார்பன்' என்றார்; "திருவுடை மன்னரைக் காணிற் றிரு மாலைக் கண்டேனே" என்பது திருவாய்மொழி.

பா-ம்—1 மாயக்.

வெல்வினை யறியா [1]நக்க வேடர்சொல் வலையிற் பட்டு
நல்வினை யுதவாத் தென்ன னுன்மறை யொழுக்க நீத்தான். 10

போதவிழ் தாரா னக்கர் புன்னெறி யொழுக்கம் பூண்டோ
னுதலிற் கன்னி நாடு மமணிருண் மூழ்கிப் பூதி
சாதன நெறியாஞ் சைவ சமயமு முத்திச் செல்வ
மாதவ நெறியுங் குன்ற மறைந்தது வேத நீதி. 11

பறிபடு தலையும் பாயி னுடுக்கையும் பாசிப் பல்லும்
உறிபொதி கலனு மத்தி நாத்தியென் றுரைக்கு நாவும்
அறிவழி யுளம்போ னுணற் றழிந்தவெற் றரையுங் கொண்டு
குறிகெடு மணங்கு சூழ்ந்தாங் கமணிறை கொண்ட தெங்கும். 12

அருந்தமிழ்ப் பாண்டி வேந்தற் குறுதியா யாக்கஞ் செய்யும்
மருந்தினிற் சிறந்த கற்பின் மங்கையர்க் கரசி யாரும்
பெருந்தகை யமைச்சு நீரிற் குழைத்தன்றிப் பிறங்கப் பேறு
தருந்திரு நீறி டாராய்ச் சிவனடிச் சார்பி னின்றார். 13

பொய்யுரை பிதற்று மிந்தப் புன்சமண் களைகட் டீண்டு
மெய்யுரை வேத நீதி வியன்பயிர் தலைச்செய் தோங்கச்

---

10. அடைந்தான்; வினைமுற்று. போல - அதுபோல. பாசம் வெல்வினை - பாசத்தை வெல்லுதற்குரிய சற்கருமம். நக்கவேடர் - ஆடையணியாத வேடத்தர்; சமணர்கள். நல்வினையுதவாத் தென்னன் - சைவசமயத்தை அடைதற்கு ஏதுவாய்த் தான் செய்த புண்ணியங்கள் இப்பொழுது வந்து உதவப்பெறாத பாண்டியன்.

11. மாதவ நெறி - மகத்துவம் பொருந்திய சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் மார்க்கம். வேத நெறி - வேத சிவாகமங்களின் விதிவிலக்குகளாகிய முறைமை.

12. பாசிப்பல் - பல் விளக்காமையால் அழுக்கேறிப் பசுமை படர்ந்த பல். கலன் - கமண்டலம். அத்தி நாத்தி - உண்டு இல்லை. குறி கெடும் அணங்கு - பொலிவிழந்த மூதேவி, நல்லொழுக்கமற்ற மூதேவி.

13. நீரின் அன்றிப் பிறங்கப் பேறு தருந் திருநீறு குழைத்து இடாராய் - நீரினுல் திரிபுண்டரம் இடுதலேயன்றிக் கண்கூடாகப் பலன் தரும் விபூதியைக் குழைத்து அதனுல் திரிபுண்டரம் இடாதவராய்; விபூதி கண்கூடாகப் பலன் தருதல் பேயோட்டல், விஷந்தீர்த்தல் முதலியவற்றுல் உணர்க. 'சிவனடிச் சார்பில் நின்றார்' என்றவிடத்து, "சார்புணர்ந்து சார்புகெட வொழுகின் மற்றழித்துச், சார்தரா சார்தரு நோய்" என வரும் திருக்குறள் சிந்திக்கற்பாலது.

பா-ம்—1 நக்கன்; (நக்கன் வேடர்-அருகனது சமயவேடர்; சமணர்)

செய்யுந [1]ரெவரோ வென்று சிந்தையிற் கவலை பூண்டு
நையுந ராகிக் கூட னாதனை வணங்கப் போனார். 14

பேதுற்ற முனிவர்க் கன்று பெருமறை விளக்கஞ் செய்த
வேதத்தின் பொருளே யிந்த வெஞ்சமண் வலையிற் பட்டுப்
போதத்தை யிழந்த வேந்தன் புந்தியை மீட்டிப் போதுன்
பாதத்தி லடிமை கொள்வா யென்றடி பணியு மெல்லை. 15

வேதிய னொருவன் கண்டி வேடமும் பூண்டோன் மெய்யிற்
பூதியன் புண்ட ரீக புரத்தினும் போந்தோன் கூடல்
ஆதியைப் பணிவான் வந்தான் மங்கையர்க் கரசி யாரும்
நீதிய வமைச்ச ரேறு நேர்பட வவனை நோக்கா. 16

எங்கிருந் தந்த ணாளிர் வந்தனி ரென்றா ராய்ந்த
புங்கவன் சென்னி பொன்னி நாட்டினும் போந்தே னென்றான்
அங்கவ ரங்குண் டான புதுமையா தறைதி ரென்றார்
சங்கரற் கன்பு பூண்டோ னுண்டென்று சாற்று கின்றான். 17

ஏழிசை மறைவல் லாளர் சிவபாத விதய ரென்னக்
காழியி லொருவ ருள்ளார் காரமண் கங்குல் சீப்ப
ஆழியி லிரவி யென்ன வொருமக வளித்தி யென்னா
ஊழியி லொருவன் றாளை யுள்கிநோற் றொழுகி நின்றார். 18

ஆயமா தவர்பா லீச னருளினா லுலக முய்யச்
சேயிளங் கதிர்போல் வந்தான் செல்வனுக் கிரண்டாண் டெல்லை

---

14. புன்சமண் - அற்பத் தன்மையையுடைய சமணர். தலைச் செய்து - தலையெடுத்து.

15. முனிவர் - இங்குக் கண்ணுவர் முதலியோர். போதம் - சிவஞானம்.

16. கண்டி - உருத்திராக்கமாலை. புண்டரீகபுரம் - புலியூராகிய தில்லை. கூடல் ஆதி - நான் மாடக்கூடலாகிய மதுரையில் எழுந்தருளிய சோமசுந்தரக்கடவுள்.

17. வந்தனிர் - வந்தீர். சென்னி - சோழன். அங்கு: அசை நிலை.

18. காழி - ஒரு சிவத்தலம்: இது காளி என்னும் பாம்பு பூசித்தமையால் வந்த பெயர். ஊழியில் ஒருவன் - மகாப்பிரளய காலத்தில் சராசரப்பொருள்களைத் தன் சக்தியால் ஒடுக்கித் தாம் மட்டும் ஒடுங்காது நிற்பவன்; இறைவன்.

பா-ம்.—1 ரெவரே யென்று.

[1]போயபின் மூன்று [2]மாண்டிற் பொருகடன் மிதந்த தோணி
நாயகன் பிராட்டி யோடும் விடையின்மே னடந்து நங்கை. 19

திருமுலைப் பாலி னோடு ஞானமுந் திரட்டிச் செம்பொற்
குருமணி வள்ளத் தேந்திக் கொடுப்பவப் பாலன் வாங்கிப்
பருகியெண் ணிறந்த வேதா கமமிவை பற்றிச் சார்வாய்
விரிகலை பிறவு மோதா துணர்ந்தனன் விளைந்த ஞானம். 20

நம்பந்த மறுப்போன் ஞான நாயகன் ஞானத் தோடு
சம்பந்தஞ் [3]செய்து ஞான சம்பந்த [4]னாகி நாவில்
வம்பந்த முலைமெய்ஞ் ஞான வாணியுங் காணி கொள்ள
அம்பந்த மறைக ளெல்லா மருந்தமி ழாகக் கூறும். 21

கரும்பினிற் கோது நீத்துச் சாறடு கட்டி யேபோல்
வரம்பிலா மறையின் மாண்ட பொருளெலா மாணத் தெள்ளிச்
சுரும்பிவர் கொன்றை வேணிப் பிரானிடந் தோறும் போகி
விரும்பிய தென்சொன் மாலை சிவமணம் விளையச் சாத்தி. 22

பருமுத்த முலையாள் பங்க னருளினாற் பசும்பொற் றாளந்
திருமுத்தின் சிவிகை காளந் தெண்முத்தின் பந்த ரின்ன
நிருமித்த வகைபோற் பெற்றுப் பாலையை நெய்த லாக்கிப்
பொருமுத்த நதிசூழ் வீழிப் பொற்படிக் காசு பெற்று. 23

---

19. தோணி நாயகன் - சீகாழியில் எழுந்தருளிய தோணியப்பர்; மகாப்பிரளயகாலத்தில் சீகாழி தோணியாக மிதந்தது என்பது வரலாறு. விடையின்மேல் நடந்து - இடபத்தில் ஏறிவந்து.

20. சார்வாய விரிகலை - சிட்சை, கற்பம், வியாகரணம் முதலிய வேதாங்கங்களும், புராணம், நியாயம், மீமாஞ்சை முதலிய உபாங்கங்களும், தத்துவப்பிரகாசிகை முதலிய அட்டப்பிரகரணங்களுமாம். பிறவும் - மற்றுமுள்ள சமயசாத்திரங்களும். ஞானம் - அபரஞானம், பரஞானம்.

21. வம்பு அந்தம் முலை - கச்சை அழிக்கின்ற தனம், கச்சையணிந்த அழகிய தனம். அம் பந்தம் - அழகிய வேதத்தினுருறுப்பு.

22. மாண்ட - மாட்சிமைப்பட்ட. வேதம் கரும்பு; கருமகாண்டம் கோது; ஞானகாண்டம் சாறு; தென்சொல்மாலை கற்கண்டு என்க.

23. பாலையை நெய்தலாக்கி - பாலைநிலத்தை நெய்தல் நிலமாகச் செய்து; இது திருநனிபள்ளியில் நிகழ்ந்தது. வீழி-திருவீழிமிழலை.
பா-ம்.—1 போயின. 2 மாண்டில். 3 செய்யு. 4 னுக.

அருமறை வணங்குங் கோயிற் கதவினை யடைக்கப் பாடிப்
பரனுறை பதிக ளெங்குந் தொழுதனர் பாடிப் பாடி
வருமவர் நுங்க ணாட்டு வணங்கவும் வருவ ரென்னத்
தருமநூ லணிந்த தெய்வத் தாபதன் சாற்ற லோடும். 24

கற்பலர் கொடியன் னாருந் தென்னவன் கண்போல் வாரும்
அற்புரை யமண்பே யோட்டி யன்றுதங் கோமான் மெய்யிற்
பொற்புறு நீறு கண்டு பூதிசா தனத்தா லெய்துஞ்
சிற்பர வீடு கண்ட மகிழ்ச்சியுட் டிளைத்தோ ரானார். 25

தங்கள்பேர் தீட்டி யோலை விண்ணப்பஞ் சண்பை நாடர்
புங்கவர்க் குணர்த்த வந்தப் பூசுரன் கையிற் போக்கி
மங்கையர்க் கரசி யாரு மரசற்கு மருந்தன் னாரும்
அங்கயற் கண்ணி கோனைப் பணிந்துதம் மகத்திற் புக்கார். 26

பண்படு வேதச் செல்வன் வல்லைபோய்ப் பழன வேலிச்
சண்பையர் பிரானைக் கண்டு பறியுண்டு தலைக ளெல்லாம்
புண்படத் திரியுங் கையர் பொய்யிருள் கடந்தார் தந்த
எண்படு மோலை காட்டிப் பாசுர மெடுத்துச் சொன்னான். 27

வெங்குரு வேந்த ரடிபணிந் தடியேன் குலச்சிறை விளம்பு விண் ணப்பம், இங்கெழுந் தருளிச் சமணிரு ளொதுக்கி யெம் மிறை மகற்குநீ றளித்துப், பொங்கிரும் பணைசூழ் தென்றமிழ் நாட்டைப் பூதிசா தனவழி நிறுத்தி, எங்களைக் காக்க வென்றபா சுரங்கேட் டெழுந்தனர் கவுணியர்க் கிறைவர். 28

---

24. மறை வணங்கும் கோயில் - வேதாரணியம். தருமநூல் - புண்ணியத் தோற்றத்தை யுண்டாக்கும் உபவீதம். தரும் அந் நூல் என்றும் பிரித்துப் பொருள் கொள்ளலாம்.

25. கற்பு அலர் கொடி - கற்பைத் தோற்றுவிக்கின்ற ஒருகொடி. கொடி யன்னார்-மங்கையர்க்கரசியார். தென்னவன் கண்போல்வார் - குலச்சிறை நாயனார். சிற்பரவீடு - சிவஞானமாகிய பரமுத்தி.

26. சண்பை நாடர் புங்கவர் - திருஞானசம்பந்தர். சண்பை - சீகாழி. புங்கவர் - மேலானவர். அரசன் உடற்பிணியும் உயிர்ப் பிணியும் நீங்கி, மகிழ்ச்சியும் சிவானந்தமும் அடைதற்குக் காரணராதலின், குலச்சிறைநாயனார், 'மருந்தன்னார்' எனப்பட்டார்.

27. கண்டு - (திருமறைக்காட்டில்) தரிசித்து. கையர் - கீழ்மக்களாகிய சமணர்.

28. வெங்குரு வேந்தர் - திருஞானசம்பந்தர். வெங்குரு - சீகாழி. பணை - வயல். தென் தமிழ்நாடு - பாண்டிநாடு.

ஆதகா திதுவென் றோதுவார் நாவுக் கரையர்நீர் சிறியவ் ரவரோ, பாதக மஞ்சார் தம்மொடும் பன்னாட் பழகிய வெனை யவர் செய்த, வேதனை யளந்து கூறுவ தென்னை விடுகதில் லம் மவோ வுமக்கிப், போதுநாள் கோள்கள் வலியில வென்னப் புகலியர் வேந்தரும் புகல்வார். 29

எந்தையெம் பெருமா னருளிலார் போல வின்னண மிசைப் பதென் னவர்செய், வெந்தவே தனையி னுய்ந்தநீர் நாள்கோள் விலங்குபுள் ளவுணர்பேய் பூதம், அந்தமில் பலவு மம்மையோ டப்ப னுணையா னடப்பன வவர்நஞ், சிந்தையே கோயில் கொண் டுவீற் றிருப்பத் திங்கிழை யாவென வெழுந்தார். 30

மாமுர சொலிப்பச் சங்கங் காகளம் வாய்விட் டேங்கச்
சாமரை பனிப்ப முத்தின் பந்தரிற் றரளத் தெய்வக்
காமரு சிவிகை [1]மேற்கொண் டமணிருள் கழுவுஞ் சோதி
யாமென நெறிக்கொண் டீச னிடந்தொறு மடைந்து பாடி. 31

செம்பிய னாடு [2]நீந்தித் தென்னவ னாடு நண்ணி
வெம்பிய சுரமு முல்லைப் புறவமு மேக வில்லைத்
தும்பிகை நீட்டி வாங்கு மலைகளுந் துறந்து பாகத்
தம்பிகை யுடையான் கூட னகர்ப்பு னணுகச் செல்வார். 32

புண்ணிய நீற்றுத் தொண்டர் குழாத்தினுட் புகலி வேந்தர்
நண்ணிய சிவிகை மீது நகைவிடு தரளப் பந்தர்
கண்ணிய [3]ரோற்றந் தீம்பாற் கடல்வயி றுதித்துத் தீர்ந்து
விண்ணியன் முழுவெண் டிங்கள் விளக்கமே யொத்த தன்றே. 33

---

29. நாவுக்கரையர் - திருநாவுக்கரசர். விடுகதில், தில் : இடைச் சொல்; ஒழியிசை. அம்ம - கேண்மின். நாள் - நட்சத்திரம். கோள் - கிரகங்கள். வலியில - நலந்தரும் நிலையினவல்ல.

30. தீங்கு இழையா என - (அவை சிறிதும்) தீங்கு செய்யா என்று. எழுந்தார் - ('வேயுறு தோளிபங்கன்' என்ற திருப்பதிகம் ஓதிக்கொண்டு மதுரைமாநகர்க்கு) எழுந்தருளினார்.

31. காகளம் - திருச்சின்னம். சோதி - இளஞ் சூரியன்.

32. சுரம் - பாலைநிலம். முல்லைப்புறவம் - முல்லை நிலம். மலைகள் - குறிஞ்சி நிலம்.

33. புகலி - சீகாழி. கண்ணிய தோற்றம் - பார்த்தற்கமைந்த காட்சி. தீர்ந்து - மேற்போந்து. விளக்கம் - தோற்றம்.

பா-ம்—1 மேல் கொண். 2 நீங்கித். 3 தோற்றம்.

தேம்படு குமுதச் செவ்வாய்ச் சிரபுரச் செல்வர் முன்னம்
போம்பரி சனத்தார் தம்மிற் பொன்னெடுஞ் சின்ன மார்ப்போர்
தாம்பர சமய சிங்கஞ் சமணிருள் கிழியப் பானு
வாம்படி வந்தா னென்றென் றார்த்தெழு மோசை கேளா. 34

நின்றுண்டு திரியுங் கைய ரெதிர்வந்து நீவிர் நுங்கள்
கொன்றறஞ் சொன்ன தேவைக் கும்பிட வந்தா லிந்த
வென்றிகொள் சின்ன மென்கொல் வீறென்கொல் யாரைவென்றீர்
என்றனர் தடுத்தா ரென்று மீறிலா னடியார் தம்மை. 35

மாமத மொழுகச் செல்லுந் திண்டிறன் மத்த வேழந்
தாமரை நூலாற் கட்டத் தடைபட வற்றே கொற்றக்
காமனை முனிந்தார் மைந்தர் கயவர்தந் தடையை நீத்துக்
கோமணி மாட மூதூ ரடைந்தரன் கோயில் புக்கார். 36

கைம்மலைச் சாபந் தீர்த்த கருணையங் கடலைத் தாழ்ந்து
மும்முறை வளைந்து ஞான முகிழ்முலைப் பாலி னோடு
செம்மணி வள்ளத் தீந்த திருவொடுந் தொழுதா னந்த
மெய்ம்மய வெள்ளத் தாழ்ந்து நின்றனர் வேதச் செல்வர். 37

மறைவழி நின்று நின்னை வந்திசெய் துய்ய மாட்டா
நிறைவழி வஞ்ச நெஞ்சச் சமணரை நெறிக ளெல்லாஞ்
சிறைபட வாது செய்யத் திருவுளஞ் செய்தி கூற்றைக்
குறைபட வுதைத்தோ யென்று குறித்துரை பதிகம் பாடி. 38

வேண்டுகொண் டருளைப் பெற்று மீளுமப் போது கண்டு
மூண்டவைம் பொறியும் வென்ற வாகீச [1]முனிக ளென்ன

---

34. சிரபுரம் - சீகாழி. பரசமய சிங்கம் - பரசமயகோளரி. பானுவாம்படி - சூரியன் வந்ததுபோல.

35. கொன்றறஞ்சொன்ன தேவு - தாம் சர்வசங்காரஞ் செய்து பிறர்க்குக் கொலை தீது என்று அறஞ் சொன்ன சிவன்; யானை, பசு, நாகம், மன்மதன், யமன் முதலியோரைக்கொன்ற என்றலுமாம்: உங்கள் இறை அருளிலான் என இழித்துக் கூறியபடி.

36. காமனை முனிந்தார் மைந்தர் - சிவகுமாரராகிய திருஞான சம்பந்தர். தடையை நீத்து - தடையினின்று நீங்கி.

37. கைம்மலை - வெள்ளையானை. திரு - இங்கு உமாதேவியார். கடலை வணங்கி, வெள்ளத்தில் அழுந்தினர் என்க.

38. பதிகம் - இங்குக் 'காட்டுமாவதுரித்துரி' என்று தொடங்கும் பதிகமும், 'வேதவேள்வியை' என்று தொடங்கும் பதிகமாகும்.

பா-ம்—1 முனிவ ரென்ன.

ஆண்டுளா ரொருவர் வேண்ட வவர்திரு மடத்தி லன்பு
பூண்டெழு காத லோடும் போயினர் புகலி வேந்தர். 39

அங்கெழுந் தருளி யெல்லி னமுதுசெய் திருப்ப வற்றைக்
கங்குல்வா யமணர் செய்யுங் கருதருஞ் செயலுந் தங்கள்
மங்கல மரபின் வந்தாள் வருத்தமுங் காண வஞ்சிச்
செங்கதி ரவன்போய் மேலைச் செழுங்கடல் வெள்ளத் தாழ்ந்தான்.

மாறுகொ ளமணர் செய்யும் வஞ்சனைக் கிடனு யொத்து
வேறற நட்புச் செய்வான் வந்தென விரிந்த கங்குல்
ஈறற முளைத்த வான்மீ னினமவர் பறித்த சென்னி
ஊறுபட் டெழுந்த மொக்கு ளொத்தவக் கங்கு லெல்லை. 41

வைதி கத்தனி யிளஞ்சிறு மடங்கலே றடைந்த
செய்தி யைத்தெரிந் தயன்மலை யிடங்களிற் றிரண்ட
கைத வத்தவெண் ணுயிரங் கயவரு மொருங்கே
எய்தி முத்தமிழ் விரகர்மேற் பழித்தழ லிழைத்தார். 42

மெய்யில் சிந்தையா ரத்தழற் கடவுளை விளித்தாங்
கெய்தி யெம்பகை யாயினே ரிருக்கையை யமுது
செய்து [1]வாவெனப் பணித்தனர் சிறுவிதி மகத்துக்
கையி ழந்தவன் செல்லுமோ வஞ்சினன் கலங்கி. 43

ஈனர் தாஞ்சடத் தீயினை யெடுத்தன ரேகி
ஞான போனகர் மடத்தினிற் செருகினர் நந்தா
தான தீப்புகை யெழுவதை யடியவர் கண்டு
வான நாயகன் மைந்தருக் குணர்த்தினர் வல்லை. 44

---

39. வாகீச முனிவர் - திருநாவுக்கரசர். அவர் திருமடம் - ஒரு சிவயோகியார் திருமடம்; இச்சிவயோகியார் மீனுட்சியம்மையாரையும் சோமசுந்தரக் கடவுளையும் திரிகாலங்களிலும் தரிசனஞ் செய்துகொண்டு தியான பரராய்த் தமது திருமடத்தில் வசித்து வந்தவர்.

40. தங்கள், கள் : அசை. தம் என்றது சூரியனை. தங்கள் மங்கல மரபு - சூரியனுகிய தமது மங்களம் பொருந்திய குலம்; சோழர் குலம்.

41. பறித்த சென்னி - மயிர் பறிக்கப்பட்ட தலை. ஊறுபட்டெழுந்த மொக்குள் - புண்பட்டெழுந்த கொப்புளங்கள்.

42. கைதவம் - வஞ்சனை. பழித்தழல் - அபிசார வேள்வி.

43. சிறுவிதி - தக்கன். கையிழந்தவன் - அக்கினி.

44. சடத்தீ - பூதாக்கினி; கட்புலங்களுக்குத் தோன்றும் தீ. ஞானபோனகர் - திருஞானசம்பந்தர்.

பா-ம். – 1 வாவென விடுத்தனர்.

சிட்டர் நோக்கியத் தீயினைத் தென்றமிழ்க் கூடல்
அட்ட மூர்த்தியை யங்கிருந் தருமறைப் பதிகந்
துட்டர் பொய்யுரை மேற்கொண்டு தொன்முறை துறந்து
விட்ட வேந்தனைப் பற்றெனப் பாடினார் விடுத்தார். 45

அடுத்த தக்கணத் தரசனை வெப்புநோ யாகித்
தொடுத்த திட்டபல் கலன்களுந் துகளெழப் பனிநீர்
மடுத்த சாந்தமுங் கலவையு மாலையுங் கருகப்
படுத்த பாயலுஞ் சருகெழப் புரவலன் பதைத்தான். 46

வளவர் கோன்றிரு மடந்தையு மந்திர ரேறுந்
தளர்வ டைந்துநன் மருத்துநூல் விஞ்சையர் தமைக்கூஉய்ப்
பளகில் பன்மருந் தருத்தவும் பார்வையி னாலும்
விளைவ தேயன்றி வெஞ்சுரந் தணிவது காணார். 47

சவலை நோன்புழந் திம்மையு மறுமையுஞ் சாரா
அவல மாசரை விடுத்தன ரனைவரும் பார்த்துத்
தவவ லத்தினு மருந்தினுந் தணிந்தில தாகக்
கவலை யெய்தினா ரிருந்தனர் விடிந்தது கங்குல். 48

வட்ட வாழியொன் றுடையதேர்ப் பரிதிதன் மருமான்
பெட்ட காதல்கூர் மருகனைப் பற்றிய பிணிகேட்

---

45. அருமறைப் பதிகம் - இங்குச் "செய்யனே திருவாலவாய்" என்று தொடங்கும் பதிகம் என்க. தொன்முறை - பாண்டியர் சோம சுந்தரக்கடவுளே பதி எனவும், வேதாகமங்களே மெய்ந்நூல்கள் எனவும், சைவசமயமே மெய்ச்சமயம் எனவும் தெளிந்து தொன்றுதொட்டுப் போற்றி உய்ந்த முறைமை. பற்று - (பையச் சென்று) பற்றுக.

46. வெப்பு நோய் - சுர நோய். புரவலன் - கூன் பாண்டியன்.

47. மந்திரர் ஏறு - குலச்சிறை நாயனார். மருத்து நூல் விஞ்சையர் - ஆயுர்வேத வித்தையாளர். பளகு - குற்றம். பார்வை - மந்திரித்தல்.

48. சவலை நோன்பு உழந்து - உடல் மெலிதற்கு ஏதுவாகிய சுடு பாறையிற் கிடத்தல் முதலிய தவத்தைச் செய்து. அவல மாசர் - தவ வலியற்று அகமும் புறமும் அழுக்குடைய சமணர்கள். (அகத்து அழுக்கு - அஞ்ஞானம், அழுக்காறு, வஞ்சனை முதலியன. புறத்து அழுக்கு - மெய்யழுக்கு, சீவரப் போர்வையழுக்கு முதலியன.)

49. பரிதிதன் மருமான் - சோழன். பெட்ட - விரும்பப்பட்ட எழினி - திரை.

டிட்ட காரிரு ளொழினியை யெடுத்தெடுத் தங்கை
தொட்டு நோக்குவான் வந்தெனத் தொடுகடன் மூளைந்தான்.

வாலி தாகிய சைவவான் பயிரினை வளர்ப்பான்
வேலி யாகியோ ரிருவரும் வேந்தனை நோக்கிக்
கால பாசமுஞ் சுடுமிந்நோ யருமறைக் காழிப்
பால ராலன்றித் தீர்த்திடப் படாதெனப் பகர்ந்தார். 50

பொய்யர் சார்பினை விடாதவ னீங்குநீர் புகன்ற
சைவர் நீறிட்டுப் பார்ப்பது தகுவதோ வென்ன
ஐய நீயெனைத் திறத்தினு லாயினு நோய்தீர்ந்
துய்ய வேண்டுமே யிதனில்யா துறுதியென் றுரைத்தார். 51

அழைமி னீண்டென வரசனு மிசைந்தன னூர்வந்
தழையு மந்திரத் தலைமகன் றனிநக ரெங்கும்
விழவு தூங்கநன் மங்கல வினைகளால் விளக்கி
மழலை யின்றமிழ் விரகர்தம் மடத்தில்வந் தெய்தா. 52

அன்று கேள்வியா லருந்திய ஞானவா ரமுதை
இன்று கண்களா லுண்டுகண் பெற்றபே றெய்திச்
சென்றி றைஞ்சினு னெழுந்திருந் தீயமண் சூழ்ச்சி
வென்ற சிந்தையீ ரென்றனர் பூந்தராய் வேந்தர். 53

நன்றி ருந்தனி ரேயென நகைமலர்த் தடந்தார்
வென்றி மீனவன் கற்பினுர் தம்மையும் வினவ
என்று நும்மரு ளுடையவர்க் கெவன்குறை யென்னு
ஒன்று கேண்மைகூ ரன்பினு ரிதனையு முரைப்பார். 54

---

50. இருவர் - இங்கு மங்கையர்க்கரசியாராகிய பாண்டிமா தேவியாரும் குலச்சிறை நாயனுரும்.

51. பொய்யர் - இங்குச் சமணர். சார்பு - தொடர்பு. இதனில் - இதைக் காட்டிலும்.

52. மந்திரத்தலைமகன் - முதல் மந்திரி ; குலச்சிறை நாயனுர். விழவு தூங்க - விழா மகிழ்ச்சி கொள்ள. தமிழ் விரகர் - ஒதாமலே முத்தமிழிலும் பேரறிவுடையார் ; திருஞானசம்பந்தர்.

53. ஆர் ஞான வமுதை - சுவை நிறைந்த ஞானமிர்தத்தை. பூந்தராய் - சீகாழி.

54. நன்று இருந்தனிர் ஏ - நலமாக இருக்கின்றீரா. எவன் - யாது.

கையர் மாளவு நீற்றினாற் கவுரியன் றேயம்
உய்வ தாகவு மின்றுநும் மருளினா லொலிநீர்
வைகை நாடன்மேல் வெப்புநோய் வந்ததா லதனை
ஐய தீர்த்திடல் வேண்டுமென் றடியில்வீழ்ந் திரந்தார். 55

இரந்த வன்பருக் கன்னதா கென்றருள் சுரந்து
பரந்த நித்தில யானமேற் பனிக்கதிர் மருமான்
சுரந்த ணிப்பலென் றேகுவா னேத்துமெய்ச் சுருதி
புரந்த ளிப்பவர் பாண்டியன் கோயிலிற் புகுவார். 56

வாயி லெங்கணுந் தூபமு மங்கல விளக்குந்
தோய கும்பமுங் கொடிகளுஞ் சுண்ணமுந் [1]துவன்றச்
சேய காகள வொலிமன்னன் செவிப்புலன் சுவைப்பக்
கோயி லெய்தினா ரமணர்தங் கோளரி யனையார். 57

காவ லோன்மருங் கிட்டதோர் கதிர்மணித் தவிசின்
மேவி னாரவர் நோக்கினான் மீனவன் றெளிந்து
வாவி தாழ்செழுந் தாமரை யெனமுக மலர்ந்து
பாவி யேன்பிணி தணித்தெனைப் பணிகொண்மி னென்றான்.

புலைத்தொ ழிற்குவித் தாயினோர் கேட்டுளம் புழுங்கிக்
கலைத்த டங்கட னீந்திய காவலோ யுன்றன்
வலப்பு றத்துநோ யிவரையு மற்றைநோ யெமையுந்
தொலைத்தி டப்பணி யென்றனர் கைதவன் சொல்வான். 59

அனைய செய்திரென் [2]றிசையுமுன் சமணரு மசோகன்
றனைநி னைந்துகைப் பீலியாற் றடவியுங் கரத்துக்

---

55. நீற்றினால் - திருநீற்றுச் செல்வத்தால். கவுரியன் தேயம் - பாண்டிய நாடு.

56. நித்தில யானம் - முத்துச் சிவிகை. பனிக்கதிர் - சந்திரன். மெய்ச்சுருதி - வேத நெறி.

57. தோய கும்பம் - நீர் நிறைந்த கும்பம். சேய காகளம் - செந்நிறம் பொருந்திய திருப்பொற் சின்னம்.

58. மீனவன் தெளிந்து - கூன் பாண்டியன் சிறிது பிணி நீங்கி.

59. புலைத்தொழில் - கொல்லுதல் முதலிய இழி தொழில்கள்.

60. அசோகன் - அருகக் கடவுள். பீலி - மயிலிறகுத் தொகுதி. கரத்து - கரகத்து - கமண்டலத்தில்.

பா-ம்—1 துவன்றித். 2 றிசைத்தனு மமணரு.

கனைகொ ளாவிநீர் சிதறியு நெய்சொரி கனல்போற்
சினவி மேலிடக் கண்டனர் தீர்ந்திடக் காணார். 60

தீயர் மானமிக் குடையராய்ச் செருக்கழிந் திருப்பப்
பாய கேள்வியோர் புண்ணியப் பையுணீ றள்ளிக்
காயு நோயது தணித்திடக் கருதினா ரதனை
மாய நீறென விலக்கினார் மாயைசெய் தழிவார். 61

அண்ட நாயகன் றிருமடைப் பள்ளிநீ றள்ளிக்
கொண்டு வாருமென் றருமறைக் கவுணியர் கூறக்
கண்டு காவல னேவலர் கைக்கொடு வந்தார்
வண்டு லாவுதார் வழுதிநோய் தணிப்பவர் வாங்கி. 62

மருந்து மந்திரம் யாவையு மறையுரைப் பதுவும்
பொருந்து மின்பவீ டளிப்பதும் போகமும் பொருளுந்
திருந்து மாலவா யான்றிரு நீறெனச் சிறப்பித்
தருந்து மின்னமு தனையசொற் பதிகம தறைந்து. 63

மெய்யி லிட்டனர் வருடலும் வெஞ்சுரந் துறந்த
மையில் சிந்தையோர் வெகுளியிற் றணிந்தது வாசஞ்
செய்த தண்பனி நீர்விரைச் சந்தனந் திமிர்ந்தால்
எய்து தண்மைய தாயின திறைவலப் பாகம். 64

பொழிந்த தண்மதுத் தார்புனை பூழியர் கோனுக்
கிழிந்த செய்கையர் கைதொட வெரியிடு சுரத்தாற்

---

61. பாய கேள்வியோர் - திருஞானசம்பந்தர். புண்ணியப் பை - விபூதிப் பை. புண்ணியம் - விபூதி. மாய நீறு - பொய்யாகிய விபூதி.

62. முதனூலில் திருமடைப்பள்ளி நீறு என்று கூறியிருத்தலால் இங்கும் அவ்வாறே கூறினார் என்க.

63. தேவாரம், திருநீற்றுப்பதிகத்துள் "ஏல வுடம்பிடர் தீர்க்கு மின்பந் தருவது நீறு" என்பதனால் மருந்தும், மந்திரமாவது நீறு" என்பதனால் மந்திரமும், "வேதத்திலுள்ளது நீறு" என்பதனால் மறையுரைப்பதும், "முத்தி தருவது நீறு" என்பதனால் வீடளிப்பதும், "இருமைக்கு முள்ளது நீறு" என்பதனால் போகமும் "அருத்தமதாவது நீறு" என்பதனால் பொருளும், ஈற்றில் "ஆலவாயான் றிரு நீறே" என்பதும் அமைந்திருத்தலால் இவ்வாறு கூறினார்.

64. துறந்த மை இல் சிந்தையோர் வெகுளி விரையக் கெடுதற்கு உவமை; "குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி, கணமேயுங் காத்தல் அரிது" என்பது திருக்குறள். மை - குற்றம்.

கழிந்த துன்பமுங் கவுணியர் கைதொடச் சுரந்தீர்ந்
தொழிந்த வின்பமு மிருவினை யொத்தபோ லொத்த. 65

ஐய விச்சுர மாற்றரி தாற்றரி தென்று
வைகை நாடவன் வல்லமண் மாசுதீர்ந் தடியேன்
உய்ய வேண்டுமே லதனையு மடிகளே யொழித்தல்
செய்ய வேண்டுமென் றிரந்தனன் சிரபுரக் கோனை. 66

பிள்ளை யாரிடப் பாகமும் பண்டுபோற் பெருமான்
வெள்ளை நீறுதொட் டங்கையா னீவுமுன் மேனாள்
உள்ள கூனொடு வெப்புநோ யொழிந்துமீ னுயர்த்த
வள்ளன் மாசறக் கடைந்தவிண் மணியெனப் பொலிந்தான்.

அன்னதொரு காரணத்தாற் சவுந்தரிய பாண்டியனென் றாகி யன்ன, தென்னவர்கோன் கவுணியர்கோன் றிருநோக்காற் பரிசத்தாற் றெருட்டும் வாக்காற், பொன்னடிதாழ்ந் தைந்தெழுத்து முபதேசப் பேறடைந்த பொலிவால் வஞ்சந், துன்னமணர் நெறியிகழ்ந்து தொல்வேத நெறியடைந்து தூய னானான். 68

ஆகச் செய்யுள்—3,173

---

65. கழிந்த துன்பம் - மிகுந்த துன்பம்; கழி - மிகுதி.

66. இச்சுரம்-(இடது பாகத்திலுள்ள) இச்சுர நோய். சிரபுரம்- சீகாழி.

67. சூரியன் மயனாற் கடையப்பட்டான் என்னும் வரலாற்றை யுட்கொண்டு சூரியனைக், "கடைந்த விண்மணி" என்றார். உள்ள கூன்- இடது பாகத்திலுள்ள கூன்.

68. நோக்கு - சட்சுதீட்சை. பரிசம் - பரிசதீட்சை. வாக்கு - வாசகதீட்சை.

# 63. சமணரைக் கழுவேற்றிய படலம்

—o—

பஞ்சவ னடைந்த நோயைப் பாலரு வாயர் தீர்த்து
நஞ்சணி கண்ட னீறு நல்கிய வண்ணஞ் சொன்னோம்
அஞ்சல ராகிப் பின்னும் வாதுசெய் தடங்கத் தோற்ற
வஞ்சரைக் கழுவே றிட்ட வண்ணமுஞ் சிறிது சொல்வாம். 1

தென்னவன் றேவி யாரு மமைச்சருட் சிறந்த சிங்கம்
அன்னவன் றானுங் காழி யந்தண ரடியில் வீழ்ந்தெம்
மன்னவன் வெப்புங் கூனும் பாசமு மாற்றி னீரே
இன்னமு மடியேம் வேண்டுங் குறைசெயத் தக்க தென்றார். 2

கன்னிநா டெங்கு மிந்தக் காரமண் காடு மூடித்
துன்னின விதனை யின்னே துணித்திடல் வேண்டு மென்றார்
அன்னவ ரால வாயார் திருவுள்ள மறிவே னென்று
உன்னிய மனத்த ராகி யொய்யெனக் கோயில் புக்கார். 3

அவ்விரு [1]வோருங் கூட வடைந்துபொற் கமலம் பூத்த
திவ்விய தீர்த்தந் தோய்ந்து சேனெடுங் கண்ணி பாக
நவ்வியங் கமலச் செங்கை நாதனைத் தாழ்ந்து வேந்தன்
வெவ்விய வெப்பு நீத்தார் தொழுதிது வினவு கின்றார். 4

காயமே யொறுத்து நாளுங் கைதவம் பெருக நோற்கும்
பேயரை யிம்மை யோடு மறுமையும் பேறற் றாரை

---

1. பஞ்சவன் - பாண்டியன்; சவுந்தரிய பாண்டியன். பாலரு வாயர் - திருஞானசம்பந்தர்.

2. இனி: இன்னம் எனத்திரிந்தது. குறை - இன்றியமையாத காரியம். தக்கது - கடவது: வியங்கோள்.

3. கார் அமண் - இழிந்த சமண். கார்: இங்கு இழிவுப்பொருளில் வந்தது.

4. திவ்விய தீர்த்தம் - தெய்வத்தன்மையுடைய பொற்றாமரைத் தீர்த்தம். நவ்வி - மான்.

5. கைதவம் - இங்குப் பாவம். பேயர் - பேய்க்குணமுடைய சமணர்.

பா-ம்—1 பேருங்.

நீயுரை செய்த வேத வேள்வியை நிந்தை செய்யுந்
தீயரை யொறுத்தல் செய்யத் திருவுளஞ் செய்தி யென்றார். 5

வெம்மத வேழங் காய்ந்த விடையவர் விசும்பிற் சொல்வார்
எம்மனோ ராவீர் நுங்கட் கிசைந்ததே யெமக்கும் வேண்டுஞ்
சம்மத மதனால் வெல்லத் தக்கவ ராக நீரே
அம்மத முடையார் தோற்கத் தக்கவ ராக வென்றே. 6

எம்மொழி தேறி னீர்போ யிறைமக னவையத் [1]தெய்திச்
செம்மையி லாரை வாது செய்திர்நீ ரனையார் தோற்று
வெம்முனைக் கழுவி லேறி விளிகுவ ரென்னக் கேட்டு
மைம்மலி களத்தான் மைந்தர் தொழுதுதம் மடத்திற் போனார். 7

இருவரு மீண்டு தத்த மிருக்கையிற் போகி யற்றைப்
பருவமங் ககலப் பின்னாட் பாண்டிமா தேவி யாரும்
பெருமதி யமைச்ச ரேறும் பிள்ளையார் மடத்திற் போகி
அருகரை வெல்லுஞ் சூழ்ச்சி யாதென வளந்து தேர்வார். 8

பேரரு ணிறைந்த காழிப் பெருந்தகை யுடன்போய்த் தங்கோன்
சீரவை குறுகி யீது செப்புவார் செய்ய கோலாய்
காரமண் காடே யெங்குங் கழியவு மிடைந்த [2]வின்ன
வேரொடுங் களைந்தாற் சைவ விளைபயி ரோங்கு மென்றார். 9

அவ்வண்ணஞ் செய்வ தேயென் றரசனு மனுச்சை செய்யச்
செவ்வண்ண வெண்ணீற் றண்ண லனுச்சையுந் தெரிந்து தேயம்
உய்வ்வண்ண மிதுவென் றங்ங னுண்மகிழ்ந் திருந்தார் நீண்ட
பைவ்வண்ண வாரம் பூண்டார் புகழெங்கும் பரப்ப வல்லார். 10

அந்த வேலை யருகந்தக் கையரைக்
குந்த வேற்கட் குலமட மாதரும்

---

6. விடையவர் - சிவபெருமான். எம்மனோர்-எமது அடியார்கள்.
7. எம் மொழி-எமது வேதாகமங்கள் ; அசரீரியுமாம். விளிகுவர்-இறந்து படுவர்.
8. இருவரும் - இங்கு அரசியாரும் அமைச்சரும். அருகர் - அருகதேவனை வழிபடும் சமணர்கள்.
9 காழிப்பெருந்தகை - திருஞானசம்பந்தர்.
10. அனுச்சை - அனுமதி. செவ்வண்ணம் - செம்மேனி. பைவண்ண ஆரம் - படத்தையுடைய அழகிய பாம்பு ஆரம்,
பா-ம்—1 தேறிச். 2 தின்ன.

மைந்த ராகிய மக்களுங் கண்ணழல்
சிந்த நோக்கி யிகழ்ந்திவை செப்புவார். 11

செழியர் கோமகன் சூழ்கிய தீப்பிணி
கழிய மாற்றும் வலியின்றிக் கற்றிலா
மழலை வாயொரு மைந்தற்குத் தோற்றுவெம்
பழிவி ளைத்திர் பகவன் றமர்க்கெலாம். 12

சாம்ப ராடுஞ் சமயம் புகுந்துவெம்
பாம்ப ணிந்தவ னேபக வானென
வேம்ப னுங்கள் விரத நெறியெலாஞ்
சோம்ப லெய்தத் துறந்தா னிகழ்ந்தரோ. 13

ஏது மக்கு [1]நிலையினி யென்றவப்
போது மற்றவர் தம்மைப் புறகிட
வாது செய்தற் கெழுந்தனர் வஞ்சகர்
போது மென்னத் தடுத்தனர் பூவைமார். 14

செல்லன் மின்க ணுமக்கிது செவ்வியன்
றல்லல் கூர வருந்துன்பத் தாழநாம்
எல்லி கண்ட கனவுண் டிதனையாஞ்
[2]சொல்லு கேமின்று கேண்மெனச் சொல்லுவார். 15

இடைய ருதுநம் பாழியும் பள்ளியு மெங்குஞ்
சடையர் முஞ்சியர் [3]சாம்பலர் தாங்கிய சூலப்
படையர் திவிழிப் புலவுவாய்ப் பாய்பெரும் புலித்தோல்
உடைய ராய்ச்சிலர் வந்துவந் துலாவுதல் கண்டேம். 16

---

11. அருகந்தக் கையர் - அருகராகிய கீழ்மக்கள். குந்தவேல் கூரிய வேற்படை.

12. தீப்பிணி - வெப்பு நோய். பகவன் தமர் - அருகனடியார். பகவன் - ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்ற ஆறு குணங்களையுடையவன் : அருகதேவன்.

13. சாம்பர் - சாம்பல் : பேரவி. சாம்பல் - விபூதி.

14. நிலை - ஆதாரம். பூவைமார் - (அவரவர்) மனைவியர்கள்.

15. செவ்வி - காலம். எல்லி - இரவு.

16. பாழி - தவச்சாலை ; பள்ளி - முனிவர் இருப்பிடம். முஞ்சி - புல் விசேடம்.

பா-ம்—1 நினைவினி. 2 சொல்லுகோ மின்று. 3 சாம்பரர்.

கன்னி யிற்றுற வன்னங்கள் கணவனிற் றுறவின்
மன்னு மாரியாங் கனைகளால் வாங்குமக் குசைகள்
என்ன மூவகைப் பெண்டவப் பள்ளிக ளெல்லாஞ்
சின்ன வெண்பிறைக் கோட்டுமா சிதைக்கவுங் கண்டேம். 17

முண்டி தஞ்செய்த தலையராய் முறுக்குறி தூங்கு
குண்டி கைத்தடங் கையராய்க் கோவணம் பிணித்த
தண்டு தாங்கிய சுவலராய்ச் சடையன்[1]பேர் நாவிற்
கொண்ட சைத்தன ராயெங்குங் [2]குலாவுதல் கண்டேம். 18

காந்து வெங்கத முடையதோர் கயந்தலை வந்து
சூழ்ந்து கொண்டுநம் மடிகண்மார் கணமெலாந் துரத்தி
ஏந்து பூஞ்சினை [3]யலைந்திட விரங்கிவண் டிரியப்
பாய்ந்து பிண்டியை வேரொடும் [4]பறிக்கவுங் கண்டேம். 19

அந்த மூவிலை வேலினு மயின்முனைக் கழுவின்
பந்தி மீதுநீ ரேறவுங் கண்டுளம் பனிப்பச்
சந்த மார்பகஞ் சேப்பவந் தளிர்க்கரம் புடைத்துக்
கந்த வார்குழல் சோரவுங் கலுழவுங் கண்டேம். 20

தள்ள ருந்திற லிந்திர சாலமோ காதி
உள்ள விஞ்சையிவ் வெல்லைவந் துதவில வொன்றுங்
கள்ள ராற்பறி பட்டவோ கனலில்வெந் தனவோ
வெள்ளங் கொண்டவோ சேமத்திற் கிடப்பவோ விளம்பீர்.

---

17. கன்னிப்பருவத்தில் கலியாணமின்றி ஆசாரியனிடத்து உபதேசம் பெற்றுத் துறந்து தவம் பூணும் பெண்களுக்கு 'அம்சங்கள்' எனவும், கணவனோடு இல்லறத்திருக்குங்காலத்து உபதேசம் பெற்றுத் துறந்து தவம் பூணும் பெண்களுக்கு 'ஆரியாங்கனைகள்' எனவும், மங்கலியம் இழந்தபின் உபதேசம் பெற்றுத் துறந்து தவம்பூணும் பெண்களுக்கு 'அக்குசைகள்' எனவும் வழங்கல் சமண சமயக் கொள்கையாம்.

18. முண்டிதம் - மொட்டை. குண்டிகை - கமண்டலம். சுவல் - பிடர். குலாவுதல் - உலாவுதல்.

19. காந்து வெங்கதம் - சுடுகின்ற கடுங்கோபம். கயந்தலை - யானைக்கன்று. பிண்டி - அசோகு.

20. அயில் - கூரிய. பத்தி - வரிசை. கலுழ்தல் - அழுதல்.

21. மோகாதி விஞ்சை - மோகனம், ஆகருடணம், வசியம், அதிரிச்சியம், அஞ்சனம், தம்பனம், வாதம் என்பன. சேமம் - காவல்.

பா-ம்—1 பெயர். 2 குலாவவுங். 3 யலறிட. 4 பறிப்பவும்.

தாவு தீவளர்த் தெழுகரி தன்னையா டரவை
ஆவை யேவிமுன் னம்மனோர் பட்டது மறிந்தீர்
காவ லன்பிணி தணித்திவி ரினிச்செயுங் கருமம்
யாவ தாகுமோ வதனையு மெண்ணுமி னென்றார். 22

இற்றை வைகலுக் கேகன்மி னென்றன ரறத்தைச்
செற்ற வஞ்சகர் செல்லுவார் திரும்பவுங் கையைப்
பற்றி யீர்த்தனர் பெண்டிர்சொற் கேட்பது பழுதென்
றுற்ற தீவினை வழிச்செல்வா ரொளித்தனர் செல்வார். 23

கொங்க லர்க்குழல் சரிந்திடக் குரத்தியர் பின்னும்
எங்கள் சொற்கொளா தேகுவீர் பரிபவ மெய்தி
உங்க ளுக்கிடை யூறுவந் துறுகெனச் சபித்தார்
அங்க தற்குமஞ் சார்செல்வா ரழியுநா ளடுத்தார். 24

புட்க ளும்பல விரிச்சியும் போகலென் றெதிரே
தட்க வுங்கடந் தேகுவார் தடங்கய லுகைப்பக்
கட்க விழ்ந்தலர் கிடங்கர்சூழ் கடிநகர்ப் புறம்போய்
உட்கு நெஞ்சரா யாவரு மோரிடத் தீண்டி. 25

யாது சூழ்ச்சியென் றெண்ணுவா ரிறைவனைக் கண்டீ
தோதி நாமவ னனுமதி யுறுதிகொண் டனைய
ஏதி லாளனை வாதினால் வேறுமென் றிசைந்து
போது வார்நகர் புகுந்துவேத் தவைக்களம் புகுவார். 26

ஆய போதிளங் காலையிற் கவுணிய ரால
வாயர் சேவடி பணிந்துதம் மடத்தினிற் செல்லக்

---

22. தீ - அபிசார வேள்வி. கரி - யானை. ஆ - பசு

23. தீவினை வழிச்செல்வார் - ஊழின் வழியில் செல்லும் சமணர்.

24. குரத்தியர் - ஆசாரியர் மனைவிமார். பரிபவம் - அவமானம், துன்பம்.

25. புட்கள் - செம்போத்து முதலியன. அவை குறுக்கே போதல் தீச்சகுனமாகும். விரிச்சி-வாய்ச்சொல்; தீய சகுனமுமாம்; தீயசகுனம் பாம்பு, நரி, பூனை, கைம்பெண் முதலியன எதிர்வருதலும், பசுக்கள் கதறுதலும், கால்கள் இடறுதலும், இடக்கண், இடதுதோள் துடித்தலும் முதலியன. தட்கல் - தடை செய்தல். உட்கல் - அஞ்சுதல்.

26. வேறும் - வெல்வோம். வேந்து+அவை=வேத்தவை.

27. இளங்காலை - சூரியன் உதிக்குங்காலம். மறித்தனர் - வளைத்துக்கொண்டனர்.

காயு மாதவச் செல்வனைக் கங்குல்சூழ்ந் தாங்கு
மாய வஞ்சகர் வந்திடை வழித்தலை மறித்தார். 27

மறித்த கையர்பின் செல்லமுன் மன்னவை குறுகிக்
குறித்த வாளரித் தவிசின்மேற் கொச்சையர் பெருமான்
எறித்த சேயிளம் பரிதியி னேறிவீற் றிருந்தார்
பறித்த சித்தலைப் புலையர்கள் பொருதிவை பகர்வார். 28

மழலை யின்னமுந் [1]தெளிகிலா மைந்தகண் மணியொன்
றுழல்க ருங்கொடி யிருந்திடக் கனியுதிர்ந் தாங்குன்
சுழல்கொள் விஞ்சையி னன்மையான் மன்னனைத் தொடுத்த
தழல வித்தன மென்றுநீ தருக்குறத் தகுமோ. 29

நந்து நாகுநீர் வண்டுசென் னடைவழி யெழுத்தாய்
வந்து வீழினும் வீழுமவ் வழக்கினின் கையிற்
சிந்து சாம்பருஞ் சிறுசொலு மருந்துமந் திரம்போற்
சந்து சூழ்மலை யான்சுரந் தணித்தன கண்டாய். 30

உங்கண் மந்திர [2]மேடொன்றிற் றீட்டுக[3] வோரேட்
டெங்கண் மந்திரந் தன்னையுந் தீட்டுக விரண்டும்
அங்கி வாயிடின் வெந்தது தோற்றதவ் வங்கி
நுங்கி டாதது வென்றதென் றொட்டியே [4]நுவலா. 31

செக்க ரஞ்சடை யானுறை பதிகளிற் செய்யத்
தக்க தன்றவ னடுங்கிலை பிழைத்துநுஞ் சார்வாய்

---

28. கொச்சை - கொச்சைவயம் - சீகாழி. சித்தலை - சிப்பற்றிய தலை. புலையர்கள் - கீழ்மக்கள், சமணர்கள்.

29. சுழல் கொள் விஞ்சை - மாயங்கொள்ளுதற் கேதுவாகிய மந்திரவித்தை ; நிலையில்லாத வித்தையுமாம்.

30. செல் நடை : ஒரு பொருட்பன்மொழி. சங்கும், நத்தையும். நீர்வண்டும் சேற்றில் உழுது சென்றவழி, அவ்வுழுதல் ஒரு காலத்தில் எழுத்தாய்க் காணப்படுதல் உலக வழக்கு என்பார், "நந்து......வழக்கில்" என்றூர். சிறுசொல் - பாடல்.

31. மந்திரம்-சமயத்திற்குரிய மந்திரம். அங்கிவாய்-நெருப்பில். நுங்கிடாதது - எரியாத ஏடு. ஒட்டி - உடன்பட்டு.

32. விக்கம் - வீக்கம் - விக்கினம், கெடுதி : தொழிற்பெயர்.

பா-ம்—1 தேர்கிலா. 2 மோரேட்டிற். 3 வோரேட்டிலெங்கண். 4 நுவல்வார்.

விக்க மெம்மனோர்க் கியற்றுவான் வேறொரு தலத்திற்
புக்க மர்ந்துவா தஞ்செயப் போதுக மென்று. 32

வென்றி மாமுர சுறங்கிடா வியனகர்ப் புறம்போய்
மன்றல் வேம்பன்முன் கதமெரி மடுத்திடிற் பிழைப்ப
தொன்று வேவதொன் றீதுகொண் டுமர்களு மெமரும்
இன்று வெல்வதுந் தோற்பதுங் காண்டுமென் றெழுந்தார்.

ஈட்டுவஞ்ச நெஞ்சரே யெழீஇநகர்ப் புறம்புபோய்க்
கீட்டிசைக்க ணோரமற் கிடங்குதொட் டெழுந்துவான்
நீட்டுகோட ரங்குறைத்து நிறையவிட்டு நெட்டெரி
மூட்டினார்த மாதரார் வயிற்றுமிட்டு மூட்டினார். 34

ஞானமுண்ட முனிவர்தம்மை யெள்ளியெள்ளி நாயினும்
ஈனரங்கி யைத்தடுத் திருப்பவெண் ணிராயிரர்
ஆனதொண்ட ருடனெழுந்து சண்பைவேந்து மரசனும்
மானனொரு மந்திரக் கிழானும்வந்து வைகினார். 35

உள்ளவிழ்ந்த முலைசுரந் தொழுக்குபா லருந்தியே
துள்ளியோடு கன்றுபின் றொடர்ந்துசெல்லு மாறெனன
வெள்ளியம்ப லத்துளாடும் வேதகீதர் [1]காதல்கூர்
பிள்ளைபோன வாறுதம் பிராட்டியோடு மெய்தினார். 36

ஆறிரண் டிரண்டடுத்த வாயிரஞ் சமணரும்
வேறுவேறு தாமுயன்ற மந்திரங்கள் வேறுவே
றூறுநீர் சுரந்தவோலை யிற்பொறித் தொருங்குபோய்ச்
சீறிவா னிமிர்ந்தெழுந்த தீயின்வாய் நிரப்பினார். 37

அக்கிவாய் மடுத்தவே டனைத்துமக் கணத்தினே
இக்குவா யுலர்ந்ததோ டெனக்கரிந்து சாம்பராய்

---

33. கதம் - விரைவு. ஈதுகொண்டு - இக்காரணத்தைக்கொண்டு.

34. கிடங்கு - குழி. கோடரம் - மரக்கிளைகள்.

35. ஞானமுண்ட முனிவர்-திருஞானசம்பந்தர். எண்ணிராயிரர்-பதினாறுயிரர்.

36. உள் அவிழ்ந்த - உள்ளம் நெகிழ்வதால். வேதகீதர் - சாம வேத கீதப்பிரியராகிய சிவபெருமான்.

37. ஆறிரண்டிரண்டு அடுத்த ஆயிரம் - எண்ணாயிரம். ஊறுநீர் சுரந்தவோலை - நீர் வற்றாத பச்சோலை.

பா-ம்—1 வாய்மை கூர்.

உக்கவாறு கண்டுநீச ருட்கிடந்து பொங்கவே
திக்குளார்கள் கண்டபேர் சிரித்துளார்க ளாயினர். 38

விரிந்தவேத நாவர்தாம் விரித்தவேத மெய்ப்பொருள்
வரைந்தபுத்த கத்தைவண் கயிற்றினால் வகிர்ந்துதாம்
அருந்தஞான வமுதளித்த வம்மைபே ரகப்படத்
தெரிந்தவேடெ டுத்தடுத்த தீயின்வாயி லிட்டனர். 39

மறைபுலப் படுத்தநூல் வரைந்தவே டனந்தநாள்
அறைபுனற் கிடந்ததா மெனப்பசந்த தரசனும்
நிறையமைச்சு மரசியாரு நின்றபேரு மந்தணர்க்
கிறைவரைப் புகழ்ந்தளப்பி லின்பவெள்ள மூழ்கினர். 40

வெந்தசிந்தை யமணர்வாது வெல்வதற்கு வேறிடம்
புந்திசெய்து வந்தவப் பொதுத்தலம் பொதுக்கடிந்
தந்தணாளர் வாதுவென்ற வன்றுதொட்டு ஞானசம்
பந்தனென்ற நாமமே படைத்துயர்ந்த தின்றுமே. 41

அன்னவேடு முறையினோ டிறுக்கியந்த ணாளர்கோன்
மன்னைநோக்க வினையினோடு பாயுடுத்த மாசர்தாஞ்
சொன்னசூள் புலப்படத் துணிந்தும்வாய்மை நாணொரீஇக்
கன்னிநாட னவைசிரிக்க வாற்றலாது [1]கத்துவார். 42

ஏடநாங்க ளெழுதியிட்ட பச்சையேடெ ணாயிரம்
வீடவந்த நீவரைந்து விட்டவோலை யொன்றுமென்

---

38. அக்கி - அங்கி - நெருப்பு : வலித்தல் விகாரம். இக்குவாய் கரும்பினிடத்துள்ள. உக்கவாறு - அழிந்தமை கண்டு.

39. வேதநாவர் - வேதங்கள் வாழும் நாவினையுடையவர் ; திருஞானசம்பந்தர். வேதமெய்ப்பொருள் - தமிழ் வேதம், தேவாரம். அம்மைபே ரகப்படத் தெரிந்த வேடு - இது, "போக மார்த்த பூண் முலையாள்" என்னும் திருநள்ளாற்றின் மேலதாகிய திருப்பதிகம் எழுதிய ஏடு ஆகும்.

40. மறை புலப்படுத்த நூல் - தேவாரத்திருமுறை.

41. புந்திசெய்து - கருதி. 'ஞானசம்பந்தன்' என்ற இடம், 'சம்பந்த நத்தம்' என ஆகித் தற்போது 'சாம்ப நத்தம்' என வழங்குகிறது.

42. முறையினோடு இறுக்கி - திருமுறையிற் சேர்த்துக்கட்டி. மன் - அரசன். சொன்னசூள் - இஃது, ஏடு வெந்த சமயம் தோற்றது எனவும், வேகாதது வென்றது எனவும் கூறியதாகும். ஒரீஇ - நீங்கி.

பா-ம்—1 கதறுவார்.

வாடலின்றி நீரிலிட்ட வண்ணமான தாலிதுன்
பாடவஞ்செய் விஞ்சைகொண்டு பாவகற் பிணித்ததே. 43

உங்களோடு மெங்களோடு மும்பர்வா னளாய்விரைஇப்
பொங்கியோடும் வைகைநீரி லிடுகவிட்ட போதுதான்
அங்குநீரெ திர்க்குமோலை வெல்லுமோலை யன்றியே
துங்கவேலை செல்லுமோலை தோற்குமோலை யாவதே. 44

வென்றுவீ றடைந்தவர்க்கு வீறழிந்து தோற்றபேர்
என்றுமேவ லடிமையாவ தென்றிசைந்து கைதவக்
குன்றுபோலு நின்றகுண்டர் கூறலோடு மீறிலா
மன்றுளாடு மடிகண்மைந்தர் வாய்மலர்ந்து பேசுவார். 45

அடியார் பதினா றுயிரவ ருள்ளார் சிவனை யவமதித்த
கொடியார் நீவி ருமக்கேற்ற தண்ட மிதுவோ கொன்றைமதி
முடியா ரருளா லுங்களைநாம் வென்றே மாயின் மூவிலைவேல்
[1]வடிவா ணிரைத்த கழுமுனையி லிடுவே மதுவே வழக்கென்றார்.

ஊழின் வலியா லமணரதற் குடன்பட் டார்க ளஃதறிந்து
சூழி யானைக் குலச்சிறையுந் தச்சர் பலரைத் தொகுவித்துக்
காழி னெடிய [2]பழுமரத்திற் சூல வடிவாய்க் கழுநிறுவிப்
பாழி நெடிய தோள்வேந்தன் முன்னே கொடுபோய்ப் பரப்பினார்.

தேற லாதார் தமைக்காழிச் செம்ம லேக்கி யினிவம்மின்
நீறு பூசிக் கண்டிகையும் பூண்டு நிருத்த ரெழுத்தைந்தும்
ஊற வோதிப் பாசமொழித் துய்மி னென்னா வறநோக்கிக்
கூறி னார்மற் றதுகேட்டுக் குண்ட ரெரியிற் கொதித்துரைப்பார்.

---

43. பாடவஞ்செய் விஞ்சை-மகிழ்ச்சியை உண்டாக்கும் அக்கினித் தம்பனவித்தை. பாவகன் - அக்கினி.

44. ஓலை - ஏடு ; இங்கு ஏட்டையுடையவர் சமயம்.

45. வீறு - பெருமை. கைதவக் குன்று-வஞ்சக மலை. குண்டர்-கீழ்மக்கள்.

46. தண்டம் - தண்டனை. நாம் - நாங்கள்.

47. சூழி - முகபடாம். காழின் நெடிய பழுமரம் - வயிரமுடைய நெடிய முதிர்ந்த மரங்கள். பழுமரம் - ஆலமரமுமாம்.

48. தேறலாதார் - இங்குச் சமணர்கள். எரியில் - நெருப்பைப் போல.

பா-ம்—1 வடிவா ணிரைத்த. 2 பசுமரத்திற்.

முன்பு தீயில் வென்றனமே நீரில் யாதாய் முடியுமென
அன்பு பேசி யெமையிணக்கி யகல நினைந்தா யல்லதைநீ
பின்பு வாது செயத்துணியும் பெற்றி யுரைத்தா யல்லைபுலால்
என்பு பூணி யடியடைந்த வேழாய் போதி யெனமறுத்தார். 49

ஊகந் தவழும் பழுமரத்தை யுதைத்துக் கரைமா றிடவொதுக்கிப்
பூகந் தடவி வேர்கீண்டு பொருப்பைப் பறித்துப் புடைபரப்பி
மாகந் துழாவிக் கடுகிவரும் வைகைப் புனலை மந்திரத்தால்
வேகந் தணிவித் தேடெழுதி விடுத்தார் முன்போல் வெள்காதார்.

சிறையேய் புனல்சூழ் வேணுபுரச் செல்வர் யாருந் தெளிவெய்த
மறையே வாய்மை யுரையாகின்மறைகண் முழுதுந் துணிபொருடான்
பிறையேய் வேணிப் பிரானுகிற் பெருநீ ரெதிரே செல்கவென
முறையே பதிக மெடுத்தெழுதி விட்டார் முழங்கி வருபுனலில்.51

தேசம் பரவுங் கவுணியர்கோன் விடுத்த வேடு செழுமதுரை
ஈச னருளாங் கயிறுபிணித் தீர்ப்ப நதியி லெதிரேற
நாசஞ் செய்யும் [1]பொறிவழியே நடக்கு முள்ள மெனச்சென்று
நீச ரேடெண் ணுயிரமு நீத்த வழியே யொழுகியவால். 52

சிங்க மனையா ரெழுதுமுறை யெதிராற் றேறத் தெரிந்தமார், அங்க ணறும்பூ மழைபொழிந்தா ரறவோர் துகில்விண் ணெறிந் தார்த்தார், கங்கை யணிந்தார் திருத்தொண்டர் கண்ணீர்க் கடலி லமிழ்ந்தினார், வெங்க ணமணர் நடுங்கியுடல் வெயர்வைக் கடலி லமிழ்ந்தினார். 53

வேமே யென்ப தறியாதே வெல்வே மென்றே சூளொட்டி
காமே யிட்ட வேடெரியில் வேவக் கண்டு நதிக்கெதிரே

49. ஏழாய் - அறிவில்லாதவனே. போதி - (நீ) போவாய்.
50. ஊகம் - கருங்குரங்கு. பூகம் - பாக்கு மரம். மாகம் - ஆகாயம். எழுதி - அத்தி நாத்தி என்று எழுதி. வெள்காதார் - வெட்கமில்லாதவராகிய சமணர்கள்.
51. பதிகம் - இது தேவாரத்திருமுறையிலுள்ள "வாழ்க வந் தணர்" என்று தொடங்கும் திருப்பதிகம்.
52. தேசம் - உலக மக்கள். நதியில் - வைகை நதியில். உள்ளம் என - மனம்போல.
53. அறவோர் - சிவபுண்ணியத்தையுடைய அடியார்கள்.
54. புகுமே என்பது போமே என்றாயது. புணரி - கடல்.
பா-ம்—1 பொறி வழிபோய்.

போமே யின்னம் வெல்வேமென் றிட்ட வேடும் புணரிபுகத்
தாமே தம்மைச் சுடநாணி யின்று ரமணர் தலைதூக்கி. 54

பொருப்பே சிலையாய்ப் புரங்கடந்த புனித னேயெத் தேவர்க்கும்
விருப்பேய் போகம் வீடுதரு மேலாங் கடவு ளெனநான்கு
மருப்பேய் களிற்றுன்முடிதகர்த்தான் மருமா னறியக் குருமொழிபோல்
நெருப்பே யன்றி வேகவதி நீரும் பின்னர்த் தேற்றியதால். 55

பொய்யின் மறையின் புறத்தமணர் புத்தர்க் கன்றி வாய்மையுரை
செய்யு மறைநூல் பலதெரிந்துஞ் சிவனே பரமென் றறியாதே
கையில் விளக்கி னொடுங்கிடங்கில் வீழ்வார் போலக் கலங்கி[1]மனம்
ஐய மடைந்த பேதையர்க்கு மறிவித் [2]தனவே யவையன்றே. 56

கண்டு கூடற் [3]கோமகனுங் கற்பு நிறைந்த பொற்புடைய
வண்டு கூடுந் தாரளக வளவன் மகளு மந்திரியுந்
தொண்டு கூடு மடியாருங் காழிக் கரசைத் [4]தொழுதுதுதி
விண்டு [5]கூடற் கரியமகிழ் வெள்ளத் தழுந்தி வியந்தனரால். 57

நன்றி தேரூர் பின்புள்ள மான மிழந்து நாணழிந்து
குன்று போலுந் தோணிபுரக் கோமா னெதிரே யாங்களுமக்
கின்று தோற்றே மெமையீண்டு நீரே வென்றீ ரெனநேர்ந்து
நின்று கூறக் கவுணியர்கோ னனையா ருய்யு நெறிநோக்கா. 58

இன்ன மறத்தா றிசைக்கின்றே நீரேன் வாளா விறக்கின்றீர்
அன்னை யனையா னெம்மிறைவ னவனுக் காளா யுய்மின்கள்

---

55. நான்கு மருப்பு ஏய் களிற்றுன் முடி தகர்த்தான் மருமான் - ஐராவதத்தையுடைய இந்திரன் முடியினைத் தகர்த்த உக்கிர குமார பாண்டியன் மரபில் வந்த சவுந்தரிய பாண்டியன்; கூன்பாண்டியன்.

56. மறையின் புறத்து அமணர் புத்தர் - வேதத்திற்குப் புறம்பாக ஒழுகும் புறப்புறச் சமயிகளாகிய சமணர் புத்தர்கள். கிடங்கு-குழி.

57. வளவன் மகள் - பாண்டி மாதேவியார். தொண்டுகூடும் - திருத்தொண்டு பூண்ட.

58. குன்று போலும் தோணிபுரம் - மலைபோல் உயர்ந்தோங்கி விளங்கும் தோணிபுரம்; மலைபோல எல்லாராலும் அறியப்பட்ட தோணிபுரமுமாம்; சீகாழி. தோணிபுரக் கோமான் - தோணியப்பர். நேர்ந்து நின்று கூற - முன்வந்து நின்று சொல்ல, உடன்பட்டுச் சொல்ல.

பா-ம்—1 மனத்-தைய. 2 தஃதே யதுவன்றே. 3 கோமானும். 4 துதித்திறைஞ்சி. 5 கூறற்.

என்ன வேட சிறியாய்நீ யெவ்வா றெங்கட் கடாதமொழி
சொன்ன தென்று மானமுளார் கழுவி லேறத் தொடங்கினர். 59

மதத்தினின் மான மிக்கார் தாங்களே வலிய வேறிப்
பதைத்திட விருந்தா ரேனைப் பறிதலை யவரைச் சைவ
விதத்தினு லொழுக்கம் பூண்ட வேடத்தார் பற்றிப் பற்றிச்
சிதைத்திடர் செய்தே றிட்டார் திரிதலைக் கழுக்கோ றன்னில். 60

வழிவழி வருமா னுக்கர் சாதற்கு வருந்தி நெஞ்சம்
அழிபவர் திருநீ றிட்டா ரதுகிட்டா தயர்வா ராவின்
இழிவில்கோ மயத்தை யள்ளிப் பூசினு ரிதுவுங் கிட்டா
தொழிபவ ராவின் கன்றைத் தோளிலிட் டுயிரைப் பெற்றார். 61

கூறிட்ட மூன்றுங் கிட்டா தயர்பவர் குற்றந் தீர
நீறிட்டார் நெற்றி யோடு நிருமல கோம யத்தின்
சேறிட்டார் நெற்றி யோடு நெற்றியைச் செறியத் தாக்கி
மாறிட்ட பாசந் தன்னை மறித்திட்டுப் பிறப்பை வெல்வார். 62

மற்றிவர் தம்மை யூற்றஞ் செய்திலர் மடிந்தோர் யாருஞ்
சுற்றிய சேனங் காக நரிகளுந் தொடர்ந்து கௌவிப்
பற்றினின் றீர்த்துத் தின்னக் கிடந்தனர் பரும யானை
வெற்றிகொள் வேந்தன் காழி வேந்தரைத் தொழுது நோக்கா.

இன்றுநீ றிட்ட வேடங் கியாவருங் காண நேரே
சென்றதே யெங்கே யென்று னதனையாஞ் செம்பொற் கூடன்
மன்றவ ரருளா லின்னே வருவிப்ப மென்று வாது
வென்றவர் நதியின் மாடே மேற்றிசை நோக்கிச் செல்வார். 64

---

59. ஏட - ஏடா: முன்னிலைப்பெயர். மானம் உள்ளார் - அருக சமயாபிமானமுள்ள சமணர்கள்.

60. ஏனைப்பறி தலையவர் - சமயாபிமானமில்லாத சமணர்கள். சிதைத்து - அலைத்து. கழுக்கோல் - கழுமரம்.

61. கன்று ஈன்று பத்து நாட் சூதக முடையதும், கன்று ஈனுத கிடாரியும், வியாதியையுடையதும், கன்று சாவப் பெற்றதும், மூப்புடையதும், மலடும், மலத்தைத் தின்னுதலுமுடைய பசுக்களின் சாணம் குற்றமுடையதாதலின், 'இழிவில் கோமயம்' என்றார்.

62. கூறிட்ட மூன்று - விபூதி, கோமயம் (பசுஞ்சாணம்), பசுங் கன்று என்பன.

63. ஊற்றம் - இடையூறு. சேனம் - பருந்து. பருமம் - கவசம்.

64. கூடல் மன்றவர் - சோமசுந்தரக்கடவுள்.

செல்லுநர் காண வோலை காவதஞ் செல்வ தப்பால்
ஒல்லையங் கொளித்த லோடும் வியந்தவ ணுருங்கு கூடிக்
கொல்லையான் மேய்த்து நின்றார் சிலர்தமைக் குறித்து நீரிவ்
[1]வெல்லையுள் விசேட முண்டோ விவண்கண்ட திசையி னென்றார்.

அவ்விடைச் சிறார்கள் யாங்க ளொன்றையு மறியே மென்ன
இவ்விடை விசேடங் காணல் வேண்டுமெத் திறத்து மென்னாத்
தெவ்விடை வாது செய்யத் திருவுளக் கருணை செய்த
வெவ்விடைக் கொடியி னாரைப் பாடினார் வேத நாவார். 66

பாட்டின்மேற் கருணை வைத்தார் சயம்புவாய்ப் பரூரை வில்லக்
காட்டினு ளிருப்ப நேரே கண்டுதாழ்ந் தெழுந்து சண்பை
நாட்டினார் வலங்கொண் டேத்தி யெதிர்நின்றார் நகைத்தா ரிம்பத்
தோட்டினா னதுகேட் டங்கே தோன்றினன் றானை யோடும். 67

அந்தமா விலிங்கத் தீச னாயிர மதியங் கண்ட
மூந்தைவே தியராய்த் தோன்றி முத்தமிழ்க் கரசை நீயென்
மைந்தனு மிளையோ னொப்பாய் வருகென நீறு சாத்திச்
சிந்தைநீ ளார்வங் கூரத் திருவருள் சுரந்து நின்றார். 68

நின்றவந் தணரை யன்று நிருமல ஞான மீந்தார்
என்றுகண் டிறைஞ்சி யைய நீரில்யா னிட்ட வேடு
சென்றதிங் கெடுத்தீர் நீரே யஃதுநுஞ் செல்வர்க் கேற்ற
தன்றதைத் தருதி ரென்றா ரறுமுகச் செம்ம லன்னார். 69

இன்னமும் பன்னா ளெம்மை யிடந்தொறும் பாடி யெஞ்சும்
புன்னெறி யொழுகு வாரை வென்றுநம் புனித வீடு

---

65. காவதம் - காததூரம். கொல்லை - முல்லை நிலம்.

66. பாடினார் - "வன்னியு மத்தமு மதிபொதி சடையினன்" என்று தொடங்கும் திருப்பதிகத்தைப் பாடினார்.

67. சயம்பு - சுயம்பு மூர்த்தி. பரூரை - பருத்த தூர். வில்லக் காடு - வில்வக்காடு.

68. ஆயிரமதியம் கண்ட - நூறு வருடம் சென்ற. மூந்தை-முதுமை. திருஞானசம்பந்தர் முருகக்கடவுள் அம்சம் ஆதலால், "மைந்தனும் இளையோன் ஒப்பாய்" என்றார்.

69. அன்று - குழந்தைப் பருவத்தில். நும் செல்வர்க்கு - உமது புதல்வர்களுக்கு.

பா-ம்—1 வெல்லையீர்.

பின்னர்நீ பெறுதி யென்று வேடுதந் தாசி பேசி
மின்னென மறைந்து நின்றார் வேதிய ராய வேடர். 70

தாதையார் கவர்ந்து மீளத் தந்தவே டதனை வாங்கிப்
போதையார் ஞான முண்டார் புரிசடைப் பிரானார் வெளவி
ஈதையா மிரந்து வேண்டத் தந்தன ரென்று கூறிக்
கோதையார் வேலி னாற்குக் காட்டவக் கொற்கை வேந்தன். 71

கச்சான வரவ மார்த்த கருணையங் கடலிற் றோன்றும்
விச்சான ஞான முண்டீ ராற்றலின் விளைவு தேறா
தச்சான வலியா னும்மை யளந்தன னடியே னிந்தத்
துச்சான பிழைதீர்த் தாள்கென் றிறைஞ்சினான் றுணர்த்தார்வேம்பன்.

அந்நெடு மேரு வாகு மாடகச் சிலையி னார்க்குப்
பொன்னெடுஞ் சிகரக் கோயின் மண்டபம் புயலைக் கீண்டு
மின்னெடு மதியஞ் சூடுங் கோபுர மேகந் தாவுங்
கன்னெடும் புரிசை வீதி யாவையுங் களிப்பக் கண்டான். 73

அற்றைநா ளாதி யாக வேடக மென்னு நாமம்
பெற்றதா லேட கத்தின் மேவிய பிரானைப் பாண்டிக்
கொற்றவன் சமண ரோடுங் கூடிய பாவ மெல்லாம்
பற்றறப் பூசை செய்து பாசமுங் கழியப் [1]பெற்றான். 74

நறைகெழு துழாயி னானுங் கலுழனு நாகர் வேந்தும்
முறையினா லுகங்கண் மூன்றும் பூசித்து முடியா வின்ப

---

70. புனித வீடு - புனித முத்தி. இஃது ஆன்மாக்களுக்குத் திருவருள் ஞானங் கடைக்கணித்து மும்மலங்களையும் நீக்கித் தனது திருவடியில் கூட்டுதலாம். மற்றைய முத்திகளெல்லாம் புனித மில்லாதவையே யாம்.

71. போதையார்-ஞான வடிவினராகிய உமாதேவியார். கோதையார் வேலினாற்கு - பாண்டியனுக்கு.

72. விச்சு - வித்து: வீட்டிற்குக் காரணமானது. விச்சானம் - விஞ்ஞானம் - மிக்க ஞானம்; சிவஞானம். அச்சு ஆன வலி - தற்போதத்தாலாகிய வலி. துச்சான - இழிவாகிய.

73. மண்டபம் - அர்த்த மண்டபம், மகா மண்டபம் முதலியன.

74. ஏடகம் - திருப்பாசுர ஏடு தங்கிய தானம். பாசமும் என்ற உம்மையால் பிறப்பும் கழிய எனக் கொள்க.

பா-ம்—1 பட்டான்.

னிறையருள் பெற்று ரன்ன னிராமய விலிங்கந் தன்னை
இறுதியா முகத்திற் பாண்டி யிறைமகன் பூசை செய்தான். 75

அங்கண்மா நகர்கண் டாங்கோ ராண்டுறை கொண்டு காழிப்
புங்கவ ரோடும் பின்னாட் பூழியர் பெருமான் மீண்டு
மங்கல மதுரை சேர்ந்து வைகுநா ணீற்றுச் செல்வம்
எங்கணும் விளங்கச் சின்னா ளிருந்துபின் ஞானச் செல்வர். 76

வடபுலத் துள்ள வீசன் பதிகளும் வணங்கிப் பாடக்
கடவமென் றெழுந்து கூடற் கண்ணுதற் பெருமான் றன்னை
இடனுறை கயற்க ணாளை யிறைஞ்சிப்பல் வரனும் பெற்று
விடைகொடு தமிழ்நா டெங்கும் பணிந்தனர் மீண்டு போவார். 77

தன்பெருங் கற்பி னாளு மமைச்சனுந் தமிழ்நர் கோனும்
பின்புமு னந்தண் காழிப் பிரானடி பிரிவாற் றாராய்
அன்புதந் தவர்பா னட்ட வன்றுதொட் டாறுக் கேண்மை
இன்பமுந் துன்ப மாகி விளைந்துமுன் னீர்ப்பப் போனார். 78

சண்பையர் தலைவர் தாமு மனையராய்த் தம்பின் செல்லும்
நண்புடை யவரை நோக்கி நம்மிடத் தன்பு நீங்காப்
பண்பின ராகி நீறு பாதுகாத் தீசன் கீர்த்தி
மண்பட வாழ்மி னீது மறுக்கன்மி னின்மி னென்றார். 79

ஆளுடைப் புகலி வேந்த ரருண்மொழி மறுக்க வஞ்சித்
தாளுடைப் பதுமச் செந்தா டலையுறப் பணிந்து மீண்டு

---

75. கனுழன் - கருடன். நாகர் வேந்து - ஆதிசேடன். உகங்கள் மூன்றும் - திரேதாயுகம் முதலிய மூன்றிலும். முடியா - அழியாத. நிராமய விலிங்கம் - குற்றமில்லாத சிவலிங்கம். இறுதி ஆம் உகம் - கலியுகம்.

76. நீற்றுச் செல்வம் - விபூதிச் செல்வம். எங்கணும் - பாண்டிய நாடு முழுவதும்; தமிழ்நாடு முழுவதுமாம்.

77. வடபுலம் - வடநாடு. பணிந்தனர் - (திருஞானசம்பந்தர்) வணங்கி : முற்றெச்சம்.

78. தமிழ்நர் கோன் - சவுந்தரிய பாண்டியன். ஆறு - நீங்காத.

79. நீறு பாதுகாத்து - விபூதி நெறியைக் கடைப்பிடித்து. மண்பட - நிலவுலகமெங்கும் பரவுமாறு.

80. தாள் - தாமரைத் தண்டு. கஞ்சத் தோளுடைச் சிங்கம் - தாமரைப் பூ மாலை யணிந்த தோள்களையுடைய சிங்கம்; இல்பொருளுவமை யணி. சிங்கமன்னார் - திருஞானசம்பந்தர்.

வாளுடைத் தானைத் தென்னன் மதுரையில் வந்தான் கஞ்சத்
தோளுடைச் சிங்க மன்னர் சோழர்கோ னொடு புக்கார். 80

ஞானமா மதநீர் சோர ஞானசம் பந்த ரென்னும்
மானமா யானை வந்து கடம்பமா வனத்திற் றுன்னும்
ஊனமாஞ் சமண ரென்னுந் தருக்களை யொடித்து வெண்ணீ
றூனமாப் பூழி யள்ளித் தூற்றிய தவனி யெங்கும். 81

ஆதி யாலயத் தடலைகொண் டாழிசூழ் காழிச்
சோதி வேதியர் பாண்டியன் சுரந்தணித் துடலிற்
பேதி யாதகூ னிமிர்த்தலாற் பிறங்குகற் பாதிப்
பூதி யாவினுஞ் சிறந்ததவ் வட்டில்வாய்ப் பூதி. 82

ஆகச் செய்யுள்—3,255

---

81. ஞானம் - சிவஞானம். மாப்புழுதி - பெரிய புழுதி. இச்செய் செய்யுள் உருவக வணி ஆகும்.

82. ஆலயம் - மதுரைச் சிவாலயம். ஆடல் - சாம்பல். பேதியாத - மாறுபடாத. கற்ப + ஆதி = கற்பாதி; ஆதி என்றதனால் அனுகற்பம், உபகற்பம், அகற்பங்களுங் கொள்க; இவற்றின் வரலாற்றைச் சைவ சமய நெறியில் பரக்கக் காண்க.

# 64. வன்னியுங் கிணறும் இலிங்கமு மழைத்த படலம்

—o—

*சென்னிவெண் டிங்கண் மிலைச்சிய மதுரைச் சிவனரு ளடைந்
தசம் பந்தர், துன்னிருஞ் சமணைக் கழுமுனை யேற்றித் துணித்
தவா றிசைத்தனம் வணிகக், கன்னிதன் மன்றற் கரியினை மாற்
றுள் காணவக் கண்ணுத லருளால், வன்னியுங் கிணறு மிலிங்
கமு மாங்கு வந்தவா றெடுத்தினி [1]யுரைப்பாம்.* 1

*பொன்மலர்க் கைதை வேலிசூழ் வேலைப் புறத்தொரு பட்டி
னத் துள்ளான், மின்மணிக் கொடும்பூ ணொருகுல வணிகன்
வேறுவே றும்பல செல்வத், தன்மையிற் சிறந்தோன் மகவில
னாகித் தன்மனக் கினியதோர் காட்சி, நன்மனைக் கொடியோ
டறம்பல புரிந்தோர் நகைமதிக் கொம்பையீன் றெடுத்தான்.* 2

*அத்தன வணிகற் குரியநன் மருக னவன்முதற் கடிமண
முடித்தோன், முத்தமிழ் மதுரைப் பதியுளா னவற்கே முறையினு
னேற்றுநான் பயந்த, வித்தக மயிலைக் கொடுப்பலென் றனைய
வியற்குல வணிகர்கோன் றன்னே, டொத்தபல் கிளைஞர் யாவரு
மறிய வுணர்த்தினன் சிலபக லொழிய.* 3

*ஊழ்வினை வலியா லாருயி ரிழந்தா னுயிர்க்குடம் பனையதன்
கற்பின், சூழ்கதிர் மணிப்பூண் மனைவியு மிறப்பத் துணிந்தன
ளவரிரு வோர்க்கும், ஆழ்கடற் கிளைஞர் செயத்தகு கடன்க ளாற்*

---

1. மன்றல் - திருமணம். கரி-சாட்சி. கண்ணுதல் - சிவபெருமான்.

2. பொன் - பொன்னிறமுள்ள. வேலைப் புறத்தொரு பட்டினம் - காவிரிப்பூம் பட்டினம். நகை மதிக் கொம்பு - ஒளி பொருந்திய முகமாகிய மதியை ஏந்திய பூங்கொம்பு போன்ற ஒரு பெண்; இல்பொருளுவமை யணி.

3. மருகன் - சகோதரி (தங்கையின்) யின் மகன். முதல் - இங்கு முன்பே. வியன் - சிறப்பு வாய்ந்த. பகல் - நாள்.

4. இறப்பத்துணிந்தனள் - சககமனஞ் செய்தாள். செயத்தகு கடன்கள் - பிரேத தகன முதலிய அபரக் கிரியைகள். வாழ்தரு வாழ்தலையுடைய.

பா-ம்—1 துரைப்பாம்.

றியச் செய்தியை மதுரை, வாழ்தரு மருகற் குணர்த்துவா னோலை விடுத்தனர் மருமகன் வாங்கா. 4

தன்னருண் மாமன் றுஞ்சினன் கூடத் தாரமுந் துஞ்சிய திப்பால், அன்னவற் களவின் ருகிய தனமுண் டவனனி நாண்மக வின்றிப், பின்னொரு பெண்ணைப் பெற்றன னவளைத் தனக்கென பேசின னனைய, கன்னியை மணந்து செல்கென முடங்கற் கழறிய பாசுரந் தெரியா. 5

வீழ்ந்தனன் றரைமேற் புரண்டன னுயிர்ப்பு வீங்கினன் விழிப்புனல் வெள்ளத், தாழ்ந்தனன் விம்முற் றம்மவோ வென் றென் றரற்றினன் கிளைஞர்நட் படைந்து, வாழ்ந்தவர் தழுவத் தழீஇத்தழீஇக் கரைந்தான் மற்றவர் தேற்றிடத் தெளிந்து, சூழ்ந்தவெந் துயர்நீத் தொருதலை மாமன் ருன்னகர்க் கேகுவான் றுணிந்தான். 6

அங்குள கிளைஞர் சிலரொடுங் கூடி யருங்கடி மதுரைநீத் தேகிப், பொங்கிருங் கழிசூழ் பட்டினங் குறுகிப் புகுதுவான் வரவறிந் தங்குத், தங்குதங் கிளைஞர் வினவநேர் வாரைத் தழீஇத்தழீஇச் செலவிடுத் தேகிக், கொங்கிவர் தளவத் தாரினன் மாமன் கோயில்புக் கிருந்தன னாக. 7

நாள்சில கழிந்த பின்னர் நாய்கரே றனையா னன்ன
வாள்புரை கண்ணி னளை மதுரையிற் கொடுபோ யங்கென்
கேளிர்முன் வேட்ப லென்று கிளந்துதன் மாம னீட்டு
நீள்பெரும் பொருள்கண் மற்றுங் கைக்கொண்டு நெறியிற் செல்வான்.

வழிவிட வருவார் தம்மை நிறுத்திப்பின் மதுரை மூதூர்க்
கெழுதரு சுற்றத் தாரை முன்சென்மி னென்று போக்கித்

---

5. தன் - நின். துஞ்சினன் - இறந்தான். நனி நாள் - நெடுநாள். முடங்கல் - கடிதம்.

6. உயிர்ப்பு வீங்கினன் - பெரு மூச்செறிந்து. கரைந்தான் - அழுது. ஒருதலை - உறுதியாக. தழீஇ - தழுவி.

7. கழி - உப்பங்கழி. பட்டினம் - காவிரிப்பூம் பட்டினம். தவளம் - முல்லை. மாமன் கோயில் - மாமன் வீடு.

8. நாய்கர் - வணிகர். வேட்பல் - மணஞ்செய்வேன்; முன்பே ஒருத்தியை மணஞ் செய்திருப்பதனால் யாரும் ஐயுறாமைப் பொருட்டு இவ்வாறு கூறினன்.

தொழுபரி சனமுந் தானுந் தோகையும் வைக லொன்றிற்
கழிவழி யரைமேற் பெய்த காவத மாகப் போவான். 9

வெங்கதிர் வேலை செல்லும் வேலைவந் தணையு முன்னம்
இங்கிருந் தொழிக மென்னாப் புறம்பய மூதா ரெய்தி
அங்கிறை கோயின் முன்னிக் கூவனீ ராடி யங்குத்
தங்கிய வன்னி மாடே போனகஞ் சமைத்துண் டெல்வாய். 10

மலைவைத்த சிலையான் கோயின் மருங்கொரு படியி னும்பர்த்
தலைவைத்துத் துயிலு மெல்லை விதிவழிச் சார வந்தோர்
கொலைவைத்த விடவாய் நாகங் கடித்தது கொதித்து நீண்ட
விலைவைத்த கொடும்பூ ணாய்கன் விடந்தலைக் கொண்டு மாய்ந்தான்.

அங்குள பரிச னங்க ளாவலித் திரங்கிச் சூழக்
கொங்கைகள் புடைத்துச் சேடிக் குற்றிடை மகளி ரேங்கச்
சிங்கவே றனையா னாகந் தீண்டிடா தொதுங்கிப் போந்த
பங்கய மலர்க்கொம் பன்னாள் பாவைபோற் புறம்பு நின்றாள். 12

ஆளியே றன்னவ னரவின்வாய்ப் பட்டது மவிந்ததும்
மீளிவே லுண்கணார் கைகுலைத் தழுவதும் விழுவதுங்
கேளிர்சூழ்ந் தயர்வதுஞ் சோர்வதுங் கண்டிளங் கிளியனாள்
வாளியே றுண்டதோர் மயிலின்வீழ்ந் துயங்கினாண் மயங்கினாள்.

வடிக்கணாட் செருகின [1]வருகின வுயிர்ப்பழல் வாய்ப்படுந்
தொடுத்தபூங் கோதைபோற் சோர்ந்ததா கங்கரஞ் சோர்ந்தன

---

9. போக்கி - அனுப்பி. தொழுபரிசனமும் - தன்னைத் தொழுகின்ற ஏவலாளரும். அரைமேற் பெய்த காவதம் - ஒன்றரைக் காவதம்; காவதம் - பத்துக்கல் தொலைவு என்பர்.

10. வேலை - (மேலைக்) கடல். இருந்து ஒழிகம்-தங்கிச் செல்வேம். புறம்பயம் - திருப்புறம்பயம்; இது கும்பகோணத்திற்கு மேற்கில் உள்ளது. கூவல் - சர்வ தீர்த்த சொரூபக் கிணறு. வன்னி - சர்வதேவ சொரூப வன்னி மரம். போனகம் - உணவு. எல் - இரவு.

11. மருங்கு ஒரு படியின் உம்பர் - பக்க மண்டபக் கற்படியின் மேல். சார வந்து - பொருந்த வந்து.

12. பரிசனம் - ஏவலாளர். ஆவலித்து - வாய்விட்டுக் கதறி. பங்கய மலர்க் கொம்பு அன்னாள் - வணிககுலக் கன்னி.

13. ஆளி ஏறு - ஆண் சிங்கம். மீளி - பெரிய. இளியன்னாள் இங்கு, அவன் மாமன் மகள்.

பா-ம்—1 வருகிய துயிர்ப்பழல்.

அடித்தளிர் சோர்ந்தன கன்னியன் னப்பெடை யன்னவள்
இடிக்கெதிர்ப் பட்டுவீழ்ந் தாளெனக் கிடந்தன ளென்செய்வாள்.

சாயும்பூங் கொம்பரிற் சூழ்ந்திறந் தான்புறஞ் சார்ந்தழூஉம்
ஆயமென் மகளிர்மீண் டன்பனோ டெங்கைதன் னுவியும்
போயதே கொல்லென மடியுறக் கொடுங்கையாற் புறந்தழீஇத்
தூயதூ செறிந்திளைப் பாற்றினர் சிறிதுயிர் தோற்றவே. 15

மெய்கழிந் தின்னுயிர் மீண்டுதன் யாக்கையின் மெல்லவே
கைகலந் தாங்கிரு காலியங் குற்றன கண்களும்
பொய்கைநீ லஞ்சிறி தவிழ்ந்தெதன வலர்ந்தன பூவையை
மைகழி நாண்முத னான்குநால் வேலியாய் வளைந்தவே. 16

கையெறி யுங்குழற் கற்றைசோ ருந்திரி காறுளி
நெய்யெனக் கண்புனல் கொங்கைமுற் றத்துக நெஞ்சுகும்
பையவாய் விடும்புறம் பார்க்குநா ணெடுந்தளைப் படுஞ்சிறு
தெய்வந்தொட் டாளெனத் தேம்பிவிம் மாந்தொளி தேயுமால்.

வணங்கில்செல் வந்தழீஇப் பிறந்தநா டொட்டொரு வைகலும்
அணங்கெனக் கனவிலுங் கண்டிலா ளன்பன்மே லன்பெனும்
இணங்குதன் னுருவமாய் நிறைவரம் பிற்றென விருந்தொர்பெண்
அணங்குவாய் விட்டழு தாலெனப் புலம்பலுற் றுளரோ. 18

என்னு யகனேயோ வென்னிருகண் மணியேயோ வென்னை
யீன்றான், றன்னுவி யன்னதனி மருகாவோ முருகாவோ தாரார்

---

14. வடிக்கண் - மாவடு போன்ற கண்கள். உயிர்ப்பு அருகின - மூச்சுக் குறைந்தன.

15. சாயும் - வளையும். கொம்பரின் - கொம்புகளைப்போல. ஆய மென் மகளிர் - தோழிப் பெண்கள். எங்கை தன் - எம் தங்கையினது. கொடுங் கை - வளைந்த கை. தூசு எறிந்து - புடைவையால் விசி.

16. நீலம் - நீல மலர். பூவை - இங்கு வணிக குலக் கன்னி : ஆகு பெயர். நாண் முதல் நான்கு - நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்பன.

17. இரிகால் - இரியினின்றுஞ் சிந்துகின்ற. நாண் நெடுந்தளை - நாணமாகிய பெரிய விலங்கு. சிறு தெய்வம் - காட்டேரி முதலிய துஷ்ட தேவதை. விம்மாந்து - விம்மி.

18. வணங்கு இல் - குறைதலில்லாத. அணங்கு என - வருத்த மென்று. இணங்கு - பொருந்திய. நிறை வரம்பிற்று - நிறைந்த அளவினை யுடையது.

முல்லை, மன்றுவோ வணிகர்குல மணியேயோ விடவரவின் வாய்ப் பட் டாயோ, உன்னுக நிழலான வென்னைவிடுத் தெவ்வண்ண மொளிப்ப தேயோ. 19

பொன்னாட்டின் மடவாரைப் புணர்வதற்கோ நம்மளகா புரத்து வேந்தன், நன்னாட்டின் மடவாரை மணப்பதற்கோ வுனைக்கடித்த நாகர் வேந்தன், றன்னாட்டின் மடவாரைத் தழுவு தற்கோ வென்னுவித் தலைவா வென்னை, இந்நாட்டி லிருத்தி யென்னை வஞ்சித்துப் போயினவா றென்னே யென்னே. 20

தென்னுலகிற் புகுந்தனையோ பணிந்தனையோ மாதுலனைத் தேவியோடுந், தன்னிருதோ ளுறவாரத் தழுவினறோ நானு முடன் சார்ந்தே னுகில், என்னுரிய குரவரையுங் கண்ணுரக் காணேனு வெனையீங் [1]கிட்டாய், பின்னுரிய பரிசனமுங் [2]கை விட்டாய் [3]தனிபோயென் பெற்று மையா. 21

வரிசைமரு மகனரவால் விளிந்ததுநா னறைபோய மனத்தோ டிங்குப், பரிவுறலு மெனைப்பயந்தார் நோற்றபய னன்றுகப் பலித்த தேயோ, பெரிதவரிக் [4]கட்கலக்கங் காணுமு னிறந்தன்றே பிழைத்தா ரந்தோ, அரியதிலு மரியபய னிதுவன்றே வெவர் பெற்று ரவர்போ லம்மா. 22

உன்காதன் மாமனெனைப் பயந்தவன்றே யுறவறிய வுனக்கே பேசிப், பின்காதன் மனைவியொடு முயிரிழந்தான் யானுமந்தப் பெற்றி யாலே, என்காத லுயிர்போக வெற்றுடம்போ விருக்கு

---

19. தன் தந்தையால் அவனே தன் கணவனுக நிச்சயிக்கப்பட்ட வன் ஆதலால், 'என் நாயகனே' என்றுள். முருகாவோ - இளமைப் பருவ முடையவனே. முருகு - இளமை. ஆர் - அணிந்த.

20. அளகாபுரத்து வேந்தன் - குபேரன். என்னே - யாது காரணம்.

21. தென் உலகு - பிதிர் உலகம்; அழகிய மேலுலகுமாம். ஆர - நிறைவாக. இட்டாய் - விட்டனை.

22. வரிசை - பாராட்டிற்குரிய. அறை போய மனம் - அறிவு முழுது மற்றுப்போதலால் ஒட்டைமிக்க மனம். போதல் - மிகுதல்.

23. காதல் - அன்புள்ள. பேசி - மணம்பேசி. அந்தப்பெற்றி யாலே - அக்காரண இயல்பினுலே.

பா-ம்—1 இட்டுப். 2 கைவிட்டுத். (கை: தமிழ் உபசர்க்கம்.) 3 தனிப்போயென். 4 கண் கலக்கங்.

முட னிறப்பே னென்றுத், தன்காதற் றுணையிழந்த வன்றிலென
விருந்தழுதா டமிய ளானாள். 23

நன்னக ருறக்க நீங்கி நடுக்கமுற் றழுங்கக் காழித்
தென்னகர் ஞானச் செல்வர் சிவனகர் தொறும்போய்ப் பாடி
அந்நக ரடைந்தா ரங்கோ ரணிமடத் திருந்தார் கேட்டீ
தென்னென வாள்விட் டாய்ந்து கோயிலி னிடைவந் தெய்தி. 24

கன்னிநீ யாரை யுற்ற தென்னெனக் கன்னி தாழ்ந்து
தன்னரு மரபு மீன்றார் [1]தம்மையு மருகற் கென்றே
உன்னினர் மன்றல் பேசி யிறந்தது முயிரன் னானே
டிந்நெறி யடைந்தீங் குற்ற நிகழ்ச்சியு மெடுத்துச் சொன்னாள்.25

தந்தையுந் தாயு மன்னார் தமியளா யிரங்கும் பேதைப்
பைந்தொடி பாவி காப்பான் பாம்புகோட் பட்டான் மாடே
வந்தவ னாக மெல்லா மருந்துரு வாகும் வண்ணஞ்
சிந்தைசெய் தருட்கண் வைத்தார் குதித்தது தீவாய் நஞ்சம். 26

எழுந்தன னுறங்கி னான்போ லிறந்தவன் யாருங் கண்டு
தொழுந்தகை ஞான வேந்தைத் தொழுதனர் துதிசெய் தார்வத்
தழுந்தினர் கன்னி யன்ன மனையவ ளின்பத் தீந்தேன்
பொழிந்தொரு புறத்தே கஞ்சம் பூத்ததோர் கொம்பி னின்றாள்.

தலைவனை யிறந்த போதுந் தனியுயிர் பெற்ற போதுஞ்
சிலைநுதல் காதன் மாமன் செல்வியா யிருந்துந் தீண்டா

---

24. அழுங்க - வருந்த. ஞானச்செல்வர் - சிவஞானச் செல்வரான திருஞானசம்பந்தர். ஆள்விட்டு - ஏவலாளை அனுப்பி.

25. கன்னி : அண்மைவிளி. யாரை, ஐ : முன்னிலை யசை. உற்றது என் - நேர்ந்தது யாது.

26. தாயும் தந்தையும் அன்னார் - இங்கு, திருஞானசம்பந்தர். மருந்துருவாகும் வண்ணம் - அமிர்த மயமாகும்படி. அருட்கண் வைத்தார் - ஞானக்கண் நோக்கம் வைத்தார். அருள்-பரையுருவாகிய திருநீற்றை; கண் வைத்தார் - (வணிகன்மீது) இட்டார் எனினுமாம். குதித்தது - விரைந்து இறங்கிற்று.

27. எழுந்தனன் - சிரித்துக்கொண்டெழுந்தான். ஆர்வத் தழுந்தினர் - ஆசைக் கடலுள் அமிழ்ந்தனர். வணிகப்பெண், மணமாகாத கன்னியாதலின் தொடாமல் ஒரு புறத்தே நின்றாள் என்க.

பா-ம்—1 தன்னையு.

நிலைமையு மன்புங் கற்பி னீர்மையும் வியந்து நோக்கி
மலைமகண் ஞான முண்டார் வணிகனை நோக்கிச் சொல்வார். 28

வருதிநின் மரபுக் கெல்லா மணியனு யுன்றன் மாமன்
றருதிரு வனையா ளின்பஞ் சாருநா டுன்பம் வந்து
பெருகுநா ளன்றி யென்றுன் மெய்தொடப் பெறுவ ளீண்டே
திருமண முடித்துக் கொண்டு போகெனச் செப்ப லோடும். 29

செங்கணே றனையா னையன் றிருமொழி தலைமேற் கொண்டு
பங்கயன் படைத்த சாதி நான்கையும் பாது காப்பீர்
எங்குல வணிக ரின்றிக் கிளைஞரு மின்றி யீங்கே
மங்கல முடிக்கும் வண்ணம் யாதென வணங்கிச் சொன்னான். 30

கன்னியை யீன்ற ஞான்றே யுனக்கென்றுன் காதன் மாமன்
உன்னிய துறவி னுள்ளா ரறிவரே யுனக்கீ தன்றி
வன்னியுங் கிணறு மிந்த விலிங்கமுஞ் சாரிகண் மைந்தா
இந்நிலை வதுவை செய்தி யெம்முறை கடவா தென்றார். 31

மாசறு மனத்தான் காழி வள்ளலைப் பணிந்து நீரே
தேசிகர் குரவர் நட்டோர் தெய்வமுங் கிளையு மென்னாப்

---

28. மாமன் மகள் இன்பதுன்பங்கள் நிகழும் இரண்டு காலங்களிலும் தீண்டுதற்கு உரியவளாயிருந்தும் அது செய்யாமைக்குக் காரணம் இதுவென்று உணர்ந்தார் என்பார், "தீண்டா நிலைமையும்" என்றார்.

29. மணி - சிரோரத்தினம். செப்பலோடும் - சொல்லிய வளவில்.

30. ஐயன் - தலைவன்: திருஞானசம்பந்தர். சாதி நான்கு - அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்பன. கரிகள் - சான்றுகள்.

31. உன்னியது - கருதி உறுதிகொண்ட செய்தி. ஈது அன்றி - இவ்வுண்மையு மல்லாமல். சிவசந்நிதியில் மங்கள கருமம் முடித்தவன் நீண்ட ஆயுளையும், நோயின்மையையும் செல்வத்தையும் அடைவான் ஆதலால், அவற்றை நீ அடையும் பொருட்டுக் கால விசேடத்தோடு கூடிய இவ்விசேட தலத்தில் திருமணம் செய்தல் வேண்டுமென்பார், 'இந்நிலை வதுவை செய்தி' என்றார். நிலை - இடம், காலம்.

32. குரவர் - பெற்றோர். திருமண நிகழ்ச்சிக்கு ஐம்பெருங் குரவரும் வேண்டுமாதலின், திருஞானசம்பந்தரையே அவ்வைவராகக் கூறினார். பேசியவாறே - திருஞானசம்பந்தர் சொன்னபடியே. என்னாப் பேசி அவ்வாறே எனப் பிரித்தலுமாம். வேள்வி - திருமணம். நிறீஇ - முறைமையால் முடித்து. வேட்ட - மணந்த. பரவி - துதித்து.

பேசிய வாறே வேள்வி பெற்றியா னிறீஇத்தான் வேட்ட
பாசிழை யோடு தாழ்ந்து விடைகொடு பரவிப் போனான். 32

ஏவல்செய் யாயத் தாரு மடியரு மீண்ட வீண்டிக்
காவல்செய் மதுரை மூதூர் குறுகித்தன் காதன் மாமன்
பூவையை மணந்த வண்ணங் கேட்டங்குப் புடைசூழ் சுற்றம்
யாவரு முவப்ப வின்புற் றிருந்தன னிளங்கோ மன்னன். 33

தன்பெருந் தனமு மாம னீட்டிய தனமு மீட்டி
மன்பெரு நிதிக்கோ னென்ன வாணிகம் பெருக்கி நாய்கன்
இன்புறு காத லார்க ளிருவரு மீன்ற காதல்
நன்பொருண் மகிழ்ச்சி செய்ய நலம்பெற வாழு நாளில். 34

மூத்தவள் சிறுவர் சால மூர்க்கரா யுள்ளா ரேனை
மாத்தளி ரியலி னுட்கோர் மைந்தனுண் டிவனு மன்ன
தீத்தொழி லுக மன்ன சிறார்களு மல்லற் செல்வம்
பூத்தநீ ணியமத் தூடு யோய்விளை யாடல் செய்வார். 35

மூந்திய மனைட்டி மைந்தர் முகிழ்முலை யிளைய பாவை
மைந்தனை யொருநாட் சீறி யடித்தனர் வருந்தி யீன்ற
சந்தணி முலையாண் மாற்று டனையரை வைதா ளீன்ற
பைந்தொடி தானுஞ் சீறி யிளையளைப் பழித்து வைவாள். 36

எந்தவூ ரெந்தச் சாதி யார்மகள் யாவர் காணச்
செந்தழல் சான்று வெங்கோன் கடிமணஞ் செய்து வந்த
கொந்தவிழ் கோதை நீயென் கொழுநனுக் காசைப் பட்டு
வந்தவ ளான காமக் கிழத்திக்கேன் வாயும் வீறும். 37

---

33. ஈண்ட - தன்னோடு திரண்டுவர. பூவையை - திருமகளனைய பெண்ணை. மன்னர்களுக்கு அடுத்தபடி செல்வமுள்ளவர் வணிகர் ஆதலின், 'இளங்கோ மன்னன்' என்றார்.

34. நிதிக்கோன் - குபேரன். பொருள் - பிள்ளை: "தம்பொரு ளென்பதம் மக்கள்" என்பது திருக்குறள்.

35. மல்லல் - வளம். நியமம் - வீதி. விளையாடல்-புழுதி விளையாட்டு.

36. மூந்திய மனைட்டி-மூத்த மனைவி. வைதாள் – அழியக்கடவர் என்று திட்டினாள்.

37. பெண் என்பதற்குக் 'கொந்து அவிழ்கோதை' எனப்பட்டது. காமக்கிழத்தி - வேசி. வாயும் வீறும் - பேச்சும் பெருமிதமும்.

உரியவன் நீமுன் னாக வுன்னைவேட் டதற்கு வேறு
கரியுள தாகிற் கூறிக் காட்டெனக் கழற லோடும்
எரிசுட வாடிச் சாய்ந்த வினர்மலர்க் கொம்பிற் சாம்பித்
தெரியிழை நாணஞ் சாய்ப்ப நின்றிது செப்பு கின்றாள். 38

அரவின்வாய்ப் பட்ட வைக லாருயி ரளித்த ஞானப்
புரவல ரருளா லெங்கோன் புறம்பய நாதன் வன்னித்
தருவொடு கிணறு காணச் செய்தனன் [1]சாறம் மூன்று
கரிகளு முள்ள வென்றாள் கற்பினா லொப்பி லாதாள். 39

மாற்றவ ளகைத்து நன்று நன்றுநின் மன்றல் வேள்விக்
கேற்றன கரியே சொன்னா யிங்குமக் கரிகண் மூன்றுந்
தோற்றுமே லதுவு மெய்யே யென்றன டோகை யோடும்
வேற்றுமை யிலாத சாய லிளையவள் விழுமங் கூரா. 40

வெவ்வுயிர்ப் பெறிய வில்போய் மெல்விர னெறிக்குங் கையால்
அவ்வயி றதுக்கும் வீழுங் கண்புனல் வெள்ளத் தாழுங்
கொவ்வைவாய் துடிக்கு நாணந் தலைக்கொளுங் கூசு மன்னோ
தெய்வமே யாவா வென்னு மென்செய்கேன் சிறியே னென்னும்.

தாதைதா யிறந்த வன்றே தமியளா யிங்குப் போந்த
பேதையேற் காருண் டைய பேதுறும் வணிகற் கன்று
மாதுல னாகி ஞாதி வழக்கறுத் துரிமை யீந்த
நாதனே யேதி லாள்வாய் [2]நகையினிற் காத்தி யென்னா. 42

அன்றிர வுண்டி யின்றித் துயிலின்றி யழுங்கிப் பின்னாட்
பொன்றிணி கமல வாவிப் புண்ணியப் புனறோய்ந் தண்ட

---

38. காட்டு - மெய்ப்பிப்பாய். கழறலோடும்-(மூத்தாள்) பழித்த வளவில். சாம்பி - வாடி. சாய்ப்ப - தளர.

39. ஞானப்புரவலர் - திருஞானசம்பந்தர். புறம்பயநாதன் - திருப்புறம் பயத்திலுள்ள சிவலிங்கம். சாறு - விழா, மணவிழா.

40. மாற்றவன் - மாற்றாள், சக்களத்தி. விழுமம் கூரா - துன்பம் மிகுந்து.

41. இல் - உள்ளே. அவ்வயிறு - அழகிய வயிறு. அதுக்கும் - பிசைவாள். அன்னோ, ஆ ஆ : அதிசய இரக்கத்தில் வந்த இடைச் சொற்கள்.

42. பேதுறும் - துன்புற்ற. ஞாதி - தாயாதி. ஏதிலாள் வாய் நகை - மாற்றாள் வாயிலிருந்து பிறக்கும் இகழ்ச்சியுரைகள்.

பா-ம்—1 சான்றம் மூன்றும். 2 நவையினிற். (நவை-பழிமொழி.)

நின்றிழி விமானக் கோயி னிரம்பிய வழகர் முன்னாச்
சென்றிரு தாளில் வீழ்ந்து தன்குறை செப்பி வேண்டும். 43

அன்றெனைக் கணவன் வேட்ட விடத்தினி லதற்குச் சான்றாய்
நின்றனைப் தருவு நீயுங் கிணறுமங் கிலையே யிங்கும்
இன்றுவந் தேதி லாள்வாய் நகைதுடைத் தெனைக்கா வாயேற்
பொன்றுவ லென்றாள் கற்பின் புகழினை நிறுத்த வந்தாள். 44

அல்லலுற் றழுங்கி நின்றாள் பரிவுகண் டந்தண் கூடல்
எல்லையில் கருணை மூர்த்தி யருளினா லெவருங் காணத்
தொல்லையின் படியே யன்னாள் சொல்லிய கரிகண் மூன்றும்
ஒல்லைவந் திறுத்த கோயி லுத்தர குணபா லெல்லை. 45

அன்னபோ திளையாண் மூத்தாட் கொண்டுபோ யால வாயெம்
முன்னவன் றிருமுன் றாழ்ந்து காட்டுவாண் முகிறோய் சென்னி
வன்னியீ திலிங்க மீது கிணறிதென் மன்றற் சான்றாய்த்
துன்னிய வென்றாள் கண்டாண் முடித்தலை தூக்கி நின்றாள். 46

அவ்விடைத் தருவு நீரு மன்றுபோ லின்றுஞ் சான்றாய்
இவ்விடைப் பட்ட வென்ன வதிசய மெவர்க்குந் தேறாத்
தெய்வமு மெளிவந் தங்கைக் கனியினித் திருவி னன்னாள்
கைவசப் பட்ட தென்றாற் கற்பினுக் கரிதே தம்மா. 47

மங்கைதன் கற்பு மீச னிடத்தவள் வைத்த வன்பும்
அங்கண னவட்குச் செய்த வருளையும் வியந்து நோக்கி

---

43. பின் நாள் - மறுநாள். "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யு மழை" என்னும் திருக்குறளுக்கு இலக்கியமா யுள்ளாள் ஆதலால், கணவன் அனுமதி பெற்றுச் சென்று, 'தோய்ந்து வீழ்ந்து குறை செப்பி வேண்டும்" என்க. அழகர் - சோமசுந்தரக்கடவுள்.

44. பை - பசுமையான. துடைத்து - போக்கி. பொன்றுவல் : இறந்துபடுவேன்.

45. பரிவு - துன்பம். கூடல் - மதுரை. இறுத்த - தங்கின. உத்தர குணபால் எல்லை - வட கீழ்த்திசையிடத்தில்.

46. ஆலவாய் - மதுரை. திருமுன் - சந்நிதி. கண்டாள் - கண்ட மூத்தாள். தலை தூக்கி - தன் தலையைக் கீழிறக்கிட்டு ; நாணி என்பது கருத்து.

47. அவ்விடை - அவ்விடத்து. நீர் - கிணறு : தானியாகுபெயர். அரிது எது - ஆகாதது எது. இச்செய்யுள் கவிக்கூற்று.

மங்கல நகரா ரெல்லா மகிழ்ச்சியு ளாழ்ந்தார் முல்லைத்
தொங்கலான் முதும ணாட்டி யொருத்தியுந் துன்பத் தாழ்ந்தாள்.

மேதகு வணிகர் மூத்த வினைக்கொடி யாளைப் பொல்லாப்
பாதகி யிவளா மென்று பழித்தனர் படிறு பேசிக்
கோதறு குணத்தி னாளைக் குடிப்பழு துரைத்தாய் நீயென்
காதலி யாகா யென்று கணவனுந் தள்ளி விட்டான். 49

அந்நிலை யிளையாள் கேள்வ னடியில்வீழ்ந் திரப்பா ளைய
என்னது கற்பை யின்று நிறுத்தினா ளிவண்மாற் றாளன்
றன்னையி லாதேற் கன்னை யாயினா ளிவளும் யானும்
இன்னுயி ருடல்போல் வாழ்வோ மெனத்தழீஇத் தம்மி னட்டார்.

உடம்பினா லிரண்டே யன்றி யுயிர்ப்பொரு ளிரண்டற் றுள்ளம்
மடம்படு மழுக்கா றற்று மைந்தரு மனைய ராக
விடம்படு மைவாய் நாகம் விழுங்கிரை யொத்துத் தம்மில்
இடம்படு மன்புற் றின்புற் றிருவரு மிருந்தார் மன்னோ. 51

அருந்ததி யனையாள் கேள்வற் காயுளு மாறாச் செல்வப்
பெருந்தன நிறைவுஞ் சீரு மொழுக்கமும் பீடும் பேறு
தருந்தவ நெறியுங் குன்றாத் தருமமும் புகழும் பல்க
இருந்தனள் கமலச் செல்வி யென்னவீற் றிருந்து மன்னோ. 52

பொன்னவிர் கமலம் பூத்த பொய்கைசூ ழால வாயெம்
முன்னவன் விளையாட் டெல்லை கண்டியார் மொழிய வல்லார்

---

48. அங்கணன் - இறைவன். முல்லைத்தொங்கலான் - வணிகன். முது மணாட்டி - மூத்த மனைவி.

49. மேதகு - சிறந்த. குணத்தினாள் - இங்கு இளையாள். படிறு - வஞ்சம். குடிப்பழுது - குடிக்குற்றம்.

50. என்னது - எனது. தழீஇ - மனங்கலந்து. நட்டார்-நட்புப் பூண்டார்.

51. அழுக்காறு - பொறாமை. இடம் படும் அன்பு - மிகுந்த அன்பு, உள்ளத்தின்கண் உண்டாகின்ற அன்புமாம்.

52. ஆறா - குறையாத. சீர் - சிறப்பு. பீடு - பெருமை. பல்க - மேன்மேல் அதிகரிக்க. இருந்தனள் - வாழ்ந்திருந்தனள்.

53. குருநாதசாமி - குருமூர்த்தியாகிய சோமசுந்தரக் கடவுள் ; சிவகுருவாகிய முருகக் கடவுளுமாம். எண்ணெண் காதை - அறுபத்து நான்கு திருவிளையாடல். காதை - நடந்த வரலாறு.

இன்னமு மளவின் றென்ப வெங்குரு நாத சாமி
சொன்னவா றுங்கட் கெண்ணெண் காதையுஞ் சொன்னே னம்ம.

என்றுதென் மலைமே லிருந்தமா தவத்தோ னின்னருட் குரு பரன் றனையும், அன்றவன் றிருவாய் மலர்ந்தவா சகமு மருள் கனிந் தொழுகவுள் ளடக்கித், தென்றமி ழால வாய்த்தனிப் பதியைச் சென்னிமேற் பன்னிரண் டும்பர், ஒன்றவைத் திமையா வங்கயற் கண்ணி யுடனுறை யொருவனை நினைந்தான். 54

பரவச மடைந்து வழிகவர்ந் துண்ணும் பழிப்புல வேடர்போ யொளிப்ப, இருள்வெளி கடந்து திருவருள் வழிச்சென் றெண்ணிலாச் சராசர மனைத்தும், புரையற நிறைந்து காட்சிகண் காண்பான் புதைபடத் தனித்தபூ ரணமாய், உரையுணர் விறந்த வுண்மையா னந்த வுணர்வினை யுணர்வற வுணர்ந்தான். 55

ஆகச் செய்யுள்—3,310

---

54. அவன் திருவாய் மலர்ந்த வாசகம்-திருவிளையாடற் புராணம்; குருமொழியுமாம். சென்னி - பிரமரந்திரம். பன்னிரண்டு - பன்னிரண்டு விரல்கள் ; துவாத சாந்தத் தானம்.

55. பரவசமடைந்து - பசுகரணங்கெட்டுச் சிவகரண முற்று. புலம் - பஞ்சேந்திரியம். இருள்வெளி - கேவல சகலம். உரை-சொற்பிரபஞ்சமாகிய பாசஞானம். உணர்வு - பசு ஞானம் : கருதலளவையுமாம்.

# அருச்சனைப் படலம்

—o—

கன்னிதன் வதுவைக் கரிகளா யிலிங்கக் கடவுளுங் கவைக் கருங் கோட்டு, வன்னியும் படுநீர்க் கூவலும் வந்த வழியிது மதுரைநா யகனைச், சென்னியில் வைத்த முனிவனைப் பூசை செய் துமா தவரொருங் கெய்திப், பன்னிற மலர்தூஉ [1]யாலவா யானைப் பரவிய பரிசது பகர்வாம். 1

போதவா னந்தத் தனிக்கடல் பருகும் புயல்புரை முனிவனை வசிட்ட, மாதவ னாதி முனிவரு முலோபா முத்திரை தன்னொடும் வரித்துப், போதொடு சாந்த மான்மதந் தீபம் புகைமுதற் கரு விகைக் கொண்டு, மேதகு சிறப்பா லருச்சனை செய்து பின்னு மோர் வினவுரை செய்வார். 2

கோட்டஞ் சிலைகுனித்த கூடற் பிரானுடல்
கேட்டஞ் செவிபடைத்த பேறடைந்தேங் கேட்டபடி
நாட்டங் களிப்ப நறுமலர் தூஉய்க் கண்டிறைஞ்ச
வேட்டங்கள் யாங்களென வோதினார் மெய்த்தவரே. 3

என்ற வறவோ ரெதிரே முகமலர்ந்து
குன்ற மடக்குங் குறுமுனிவன் கூறுவான்
நன்றுமுனி காளிதனை நானுள்ளத் தெண்ணியாங்
கொன்றமொழிந் தீரென்றான் பின்னும்வியந் தோதுவான். 4

---

1. கவைக் கருங்கோடு - ஒவ்வொன்றிலும் சிறு கிளைகள் பலவுள்ள பெரிய கொம்புகள். கருமை - பெருமை. நீர் படுகூவல் என்க. படுதல் - ஊறுதல். சென்னியில் வைத்த - துவாத சாந்தத்தில் நிறுத்தித் தியானித்த.

2. போத வானந்தத் தனிக்கடல் பருகும் புயல்: இல்பொருளுவமை. வரித்து - அழைத்து; இங்கு, இருத்தி. வினவுரை செய்தல் - கேள்வி கேட்டல்.

3. கோடு - சிமயம்; இங்கு, மேருமலை. கேட்டு அம் செவி எனப் பிரிக்க. வேட்டங்கள் - விரும்பினோம்.

4. அறவோர் - வசிட்டர் முதலிய முனிவர்கள். குன்றம் - இங்கு, விந்தமலை. வியந்தோதுதல் - முனிவர்கள் வியக்கும்படி சொல்லுதல்; புகழ்ந்து சொல்லுதலுமாம்.

பா-ம்—1 யாலவா யரனைப்.

[illegible]ண்ணான் மறைமுடியுந் தேறாப் பரசிவனை
எண்ணா லளவிறந்த வெக்கலையாற் கண்டுமுளக்
கண்ணா லறியாதார் வீட்டின்பங் காண்பரோ
மண்ணாதி யாறாறு நீத்ததனி மாதவரே. 5

அஞ்செவியி லூறுபடக் கேட்டபடி யாலவாய்ப்
பஞ்சமுகச் சோதிப் பரனைப்போ யர்ச்சித்து
நெஞ்சநெகக் கண்டு நினையா வழிநினைந்து
வஞ்சவினை வேர்களைவான் வம்மின்க ளென்றானே. 6

மங்கல வோரை வருதினத்தில் வானிழிந்த
கங்கை படிந்துலக நாயகனைக் கைதொழுது
புங்கவர்முன் சங்கற்பஞ் செய்தனுச்சை பூண்டொழுகி
அங்கவர்வா யாசி மொழிகேட் டகமகிழ்ந்தே. 7

ஐம்புலனுங் கூடற் பெருமா னடியொதுக்கி
நம்பனுரு வெழுத்தைந்து நாவாடக் கைகூப்பித்
தம்புனித சைவத் தவத்தெய்வத் தேர்[1]மேற்கொண்
டும்பர் வழிநடக்க லுற்றார்க ணற்றவரே. 8

---

5. எண் - தருக்கம். எக்கலையால்-எந்த ஆகமங்களாலும். கலை - நூல்; இங்கு ஆகமம். கண்டும் - அனுபவித்து. மண்ணாதியாறாறு - பிருதிவி முதலிய முப்பத்தாறு தத்துவங்கள்.

6. ஊறுபட - அழுந்த. பஞ்சமுகம் - ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம். நினையா வழி - முன்னொரு காலத்தும் நினையாத திருவருள் மார்க்கம். வஞ்ச வினைவேர் - வஞ்சித்துப் பிறவியில் செலுத்தும் இருவினைகட்கும் மூலமாகிய ஆணவம். வஞ்சம் - மாயையும், வினை - கன்மமும், வேர்-இவற்றிற்கு மூலமாகிய ஆணவமுமாம்.

7. ஓரை - இலக்கினம். உலக நாயகன் - (காசி) விசுவநாதர். புங்கவர் - வசிட்டர் முதலியோர். சங்கற்பம் - இது, ஸ்நானத்தின் பொருட்டும், யாத்திரையின் பொருட்டும் செய்யப்படுவன. வாய்ஆசி மொழி - சிறந்த வாழ்த்துரை. அனுச்சை பூண்டு - அனுமதி பெற்று. அங்கு - அவ்விடம்; அசையுமாம். அவர் - வம்மின்கள் என்று கூறிய அகத்திய முனிவர்.

8. ஐம்புலன் - ஐம்பொறி. ஆடல் - செபித்தல். சைவத் தவத் தெய்வத் தேர் - சிவசம்பந்தமாகச் செய்த தவத்தாற் பெற்ற தேவ விமானம்; தவ விமானமுமாம்.

பா-ம்—1 மேல் கொண்.

செய்ய சடையர் திருநீறு சண்ணித்த
மெய்யர்தவ நோற்றிளைத்த மேனியின ருட்புறம்புந்
தூய்யரணி கண்டிகையர் தோலு மருங்குடையர்
ஐயர் தவத்துக் கணிகலம்போற் போதுவார். 9

புண்ணியந் தழைக்குந் தெய்வத் தலங்களும் புலன்கள் வென்றோர்
நண்ணிய வனமுந் தீர்த்த நதிகளுந் தவத்தோர் நோற்கும்
வண்ணமு நோக்கி நோக்கி மலயமா முனிவன் காட்டக்
கண்ணிணை களிப்ப நோக்கிக் கைதொழு திறைஞ்சிச் செல்வார்.

சீறுகொ ளிலங்கை வேந்தைச் செகுத்திட விராமன் பூசித்
தாறணி விரூபக் கண்ண னருள்பெறு தலமீ தும்பர்
ஏறிவீழ்ந் திறந்தோர் முன்ன மெண்ணிய வெண்ணி யாங்கே
மாறிய பிறப்பி னல்கு மலையிது காண்மின் காண்மின். 11

சுரபிநீள் செவியி லிங்கச் சுடருரு வாயி னுன்றன்
இரவினிற் றிருத்தேர் மன்றல் நடக்குமூ ரிவ்வூர் மேலை
உரவுநீர்க் கரைத்தேண் மாதத் துயர்ந்தகார்த் திகையிற் றேரூர்ந்
தரவுநீர்ச் சடையான் வேள்வி நடக்குமூ [1]ரவ்வூர் காண்மின். 12

---

9. சண்ணித்த - தரித்த. தவநோற்று - மிக்க தவஞ்செய்து. தவ - மிகுதி. தவம் நோற்று எனப் பிரிக்கின், தவஞ்செய்து என்றலுமாம். "புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை, வாய்மையாற் காணப் படும்" என்பதற்கு இலக்கியமாக, 'உட்புறம்புந்துய்யர்' என்றார். துய்யர் - பரிசுத்த முடையவர்.

10. வனம் - தபோவனம். தீர்த்தம் - வாவி, ஓடை, கூபமுதலிய வடிவுடையன. நதி - கங்கை முதலிய ஆறுகள். மலயமா முனிவன் - அகத்தியன்.

11. சீறுகொள் - மிகக்கோபங்கொண்ட. விரூபக்கண்ணன் - ஏனைக்கண்களின் வேறுபட மேனோக்கிய அக்கினிக் கண்ணனாகிய சிவபெருமான். அருள் பெறு தலம் - விருபாக்ஷம்; இதனை ஏம கூடம் எனவும் வழங்குவர். உம்பர் - இங்கு, மலையின் மேலிடம். மாறிய பிறப்பு - மறு பிறப்பு. நல்குமலை - ஸ்ரீ சைலம்; இது திருப்பருப்பதம் எனவும், மல்லிகார்ச்சுனம் எனவும் பெயர்பெறும்.

12 சுரபி நீள் செவி - கோகர்ணம். சுடர் உருவாயினுன்றன் இரவு - சிவராத்திரி. தேர்மன்றல் - இரதோற்சவம். தேன் மாதம் - கார்த்திகை மாதம். வேள்வி நடக்கும் ஊர் - திருவஞ்சைக்களம்; சோமநாதமுமாம்.

பா-ம்—1 ரிவ்வூர்.

விற்பயி றடக்கை வேடன் மென்றலூன் பாகம் பார்த்தோன்
பொற்புறு கிரியீ தண்டம் புழைபட விடத்தா ணீட்டி
அற்புதன் காளி தோற்க வாடிய திதுமா நீழற்
கற்புடை யொருத்தி நோற்கும் பிலமீது காண்மின் காண்மின். 13

திருமறு மார்பன் காவற் செயல்பெற வரனைப் பூசித்
திருகர முகிழ்த்து நேர்நின் றேத்திட மிதுவா மோத்தின்
உரைவரம் பகன்ற முக்க ணுத்தமன் சந்தை கூட்டி
அருமறை யறவோர்க் கோது வித்திட மதனைக் காண்மின். 14

அடிமுடி விலங்கும் புள்ளு மளந்திடா தண்டங் கீண்டு
நெடுகிய நெருப்பு நின்ற நிலையிது முள்வாய்க் கங்க
வடிவெடுத் திருவர் நோற்கு மலையிது பல்வே றூழி
இடையுற முன்னும் பின்னு [1]மிருக்குமிக் குன்றைக் காண்மின். 15

அவுணரிற் கள்வ னான வந்தகற் காய்ந்து மூன்று
புவனமுங் கவலை தீர்த்த புண்ணியன் புரமீ தாகும்

---

13. வேடன் - இங்குக் கண்ணப்பன். பாகம் - சுவை. பொற்புறு கிரி - திருக்காளத்திமலை. பொற்பு - பொலிவு, அழகு. காளி தோற்க ஆடியது - இது காளி தோல்வியடைய ஆடியருளிய திருவாலங்காடு. கற்புடையொருத்தி - காமாட்சி. பிலம் - பிலத்துவாரமாகிய காஞ்சிபுரம்.

14. ஏத்திடம் இது - துதித்த திருமாற்பேறு என்னும் தலம் இது. இத்தலம் காஞ்சி எல்லையுள் உள்ளது. ஓத்து - வேதம். சந்தை - சந்தசுகள். அறவோர் - பிரமன், விண்டுசன்மா என்னும் அந்தணன் புதல்வன் முதலியோர். ஓதுவித்திடம் - திருவோத்தூர்.

15. விலங்கு - விஷ்ணுவாகிய பன்றி. புள் - பிரமனாகிய அன்னம். நெடுகிய நெருப்பு - நீண்ட அக்கினி வடிவையுடைய சிவபெருமான். நெருப்பு நின்ற நிலை - திருவண்ணாமலை. நிலை - இடம். கங்கம் - கழுகு. இருவர் - நான்குயுகங்களுக்கும் முறையே சண்டன் பிரசண்டன், சம்பாதி சடாயு, சம்பு குத்தன், மாகுத்தன் பூடா விருத்தா, என்பவர். நோற்கு மலை - திருக்கழுக்குன்றம். முன்னும் பின்னும் இருக்குங் குன்று - திருமுதுகுன்றம், விருத்தாசலம்.

16. அவுணரில் கள்வனான அந்தகன் - திருநந்தி தேவர்முன் எதிர்த்துப் போர்புரிய முடியாமல் தோற்று ஓடியொளித்த கள்வனாகிய அந்தகாசுரன். புண்ணியன் புரன் - திருக்கோவலூர் வீரட்டானம். மூவர் - திரிபுரர். அன்பிற்பட்டவன் பதி - திருவதிகை வீரட்டானம்.

பா-ம்—1 மிருக்குமீக் குன்றைக். (மீக்குன்று - ஏனைய மலைகட்கு மேலாகிய மலை.)

தவலரும் புரங்கண் மூன்றுந் தழனுதற் றிருக்கண் சாத்திப்
பவமறு மூவ ரன்பிற் பட்டவன் பதியைக் காண்மின். 16

சத்திய ஞான னந்த தத்துவ மசைவற் றுடும்
நித்திய பரமா னந்த நிறையருண் மன்ற மீது
முத்தியங் குதித்தோ ரெய்தும் பதியது முதனூ னான்கும்
பத்தியிற் பூசித் தேத்தும் பதியிது வாகும் பார்மின். 17

பிரமன்மான் முதலாந் தேவர் பிரளயத் திறவா வண்ணம்
பரமனூர் தோணி யேற்றும் பன்னிரு நாமம் பெற்ற
புரமிது சடாயு சம்பா திகள்பெரும் பூசை செய்ய
வரமளித் திருனோய் தீர்க்கு மருந்துறை பதியீ தாகும். 18

மதிநுத லிமயச் செல்வி மஞ்ஞையாய் வழிபட் டேத்தும்
இதுதுலாப் பொன்னித் தான மெம்மனோர் மூன்று கோடி
மதிபெறு முனிவர் வந்து வழிபடு மூதா ரீதிப்
பதியறக் கடவுள் பூசை பண்ணிய தானங் காண்மின். 19

கோடுநான் குடைய வேழந் [1]தானவன் குறைத்த கோட்டைப்
பாடற நோற்றுப் பெற்ற பதியிது மாலை சாத்துங்

---

17. சத்திய ஞானனந்த தத்துவம் - சச்சிதானந்த உண்மைப் பொருளாகிய ஸ்ரீ நடராசப்பெருமான். அருள் மன்றம் - சிதம்பரம். அங்கு உதித்தோர் முத்தி எய்தும் பதி-திருவாரூர். இது பிறக்க முத்தி தரும்தலம் என்பதாம். முதனூல் நான்கு - இருக்கு முதலிய வேதங்கள். ஏத்தும் பதி - வேதாரணியம்.

18. பன்னிருநாமம் பெற்றபுரம் - சீகாழி. பன்னிருநாமம்-பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, காழி, கொச்சை, கழுமலம் என்பன. இருள் நோய் - ஆணவப்பிணி. மருந்துறை பதி - வைத்தீசுரன் கோயில். மருந்து- உயிர்ப்பிணி, உடற்பிணி இரண்டிற்கும் உரிய மருந்து.

19. மஞ்ஞை - மயில். துலாப்பொன்னி - துலாரவியில் (ஐப்பசி மாதத்தில்) மூழ்குவோர்க்கு முத்தியளிக்கும் காவிரி. பொன்னித்தானம்- மாயூரம், கௌரி மாயூரமுமாம். எம்மனோர் - எம்மையொத்த அகத்தியர்கள். வழிபடும் மூதூர் - திரிகோடிகா. அறக்கடவுள் பூசை பண்ணிய தானம் - திருவாவடுதுறை; தருமபுரமுமாம்.

20. வேழம் - ஐராவதம். தானவன் - பானுகோபன். இவன் சூரபன்மன் புதல்வன். நோற்றுப்பெற்றபதி - திருவெண்காடு. தாட

பா-ம்—1 தாருகன், தாபதன். (தாபதன் - சிவப்பிரிய முனிவன்.)

தாடகை மானங் காப்பான் ருழ்ந்துபூங் கச்சிட் டூர்க்கும்
பீடுறு கலய னன்பி னிமிர்ந்தவெம் பிரானூ ரீதால். 20

கரிமுகத் தவுணற் காய்ந்து கரிமுகத் தண்ணல் பூசை
புரிசிவ நகர மீது தாரகற் பொருது செவ்வேள்
அரணையர்ச் சித்த தார்க்கீழ் மணற்குறி யான்பா லாட்டிப்
பரன்முடி மாலை சூடுஞ் சேய்வளம் பதியீ தாகும். 21

கறுவிவீழ் காலன் மார்பிற் சேவடிக் கமலஞ் சாத்திச்
சிறுவனுக் காயு ளீந்த சேவகப் பெருமான் மேய
அறைபுனற் பழன மூதூ ரதுவிது வானை தந்த
குறையுடற் போர்வை போர்த்த கொற்றவன் கோயில் காண்மின்.

பங்கயக் கடவு ளீந்த பரிகலம் வாங்கிக் கொண்ட
அங்கண னிடமீ தாட லனங்கனை யமுது செய்த
செங்கணு னிருக்கை யீது மேழகச் சென்னி தன்னை
மங்கல மாமற் கீந்த மருகனு ரிருக்கை காண்மின். 23

திண்டிற லவுணன் றன்னைப் பெருவிரற் றீட்டு நேமி
உண்டிட விருந்தாக் கொண்டோ னுறையதா மொருத்தி மன்றல்

---

கை-புத்திரப்பேறு கருதிச் சடையப்பரைப் பூசித்த ஓரிராக்கதப்பெண். கச்சு - கயிறு. கலயன் - குங்கிலியக்கலய நாயனார். எம்பிரானூர் - தாடகையீச்சுரம் என்ற திருப்பனந்தாள்.

21. கரிமுகத்தவுணன் - கயமுகாசுரன். கரிமுகத்தண்ணல் - விநாயகக் கடவுள். சிவநகரம் - திருச்செங்காட்டங்குடி. செவ்வேள் - முருகன். மணற் குறி - மணலிலிங்கம். சேய்வளம்பதி - சண்டேசர் திருவவதாரஞ்செய்த திருச்சேயஞலூர்.

22. கறுவி - கோபித்து. சாத்தி - உதைத்து. சிறுவன் - மார்க்கண்டேய முனிவன். சேவகம் - வீரம். பழனமூதூர் - திருக்கடவூர் வீரட்டானம். கொற்றவன் கோயில் - திருவழுவூர் வீரட்டானம்.

23. பரிகலம் - இங்குத் தலையோடு. அங்கணன் இடம் திருக்கண்டியூர் வீரட்டானம். ஆடல் - வெற்றி. அமுது செய்த நீருக்கிய. செங்கணுன் இருக்கை - திருக்குறுக்கை வீரட்டானம். மேழகச்சென்னி - ஆட்டுத்தலை. மாமன் - தக்கன். மருகனூர் இருக்கை - திருப்பறியலூர் வீரட்டானம். மருகனூர் - இங்குச் சிவன்.

24. அவுணன் - இங்குச் சலந்தரன். பெருவிரல் தீட்டும் நேமி - பெருவிரலால் நிலத்தில் கீறிய சக்கரம். விருந்து - புதுமை. விருந்தாக் கொண்டோன் உறை - திருவிற்குடி வீரட்டானம். ஒருத்தி -

கண்டிடு கரியாய்க் கூவல் கண்ணுத லிலிங்கம் வன்னி
எண்டிசை யறியக் காட்ட நின்றிட மிதனைக் காண்மின். 24

சாமகண் டத்தன் றன்னைத் தானருச் சித்த தென்னர்
கோமகன் [1]பிரம சாயை குறைத்ததிப் பதியாங் கங்கை
மாமகந் தோறும் வந்து வந்துதற் படிந்தோர் விட்டுப்
போமகம் போக மூழ்கும் புனிதநீர்ப் பதியைக் காண்மின். 25

குருமொழி தந்தைக் கீந்தெங் குருவுறை மலையீ தெங்கோன்
கருமுகில் வண்ணத் தண்ணல் கண்ணிடந் தடியிற் சாத்தப்
பொருவிற லாழி யீந்த புரமிது நந்தி யெந்தை
திருவுரு வடைய நோற்ற தலமிது தெரிந்து காண்மின். 26

மூடங்குகாற் சிலந்தி யானை மலைமகண் முளரி நாட்டத்
தடங்கடல் வண்ண னேற்ற தவநக ரிதுமுச் சென்னி
மடங்கலே றனையா னாம வரையிது குடைந்தோர் பாவம்
அடங்கலும் பருகும் பொன்னி யாறிது காண்மின் காண்மின். 27

இந்நதி வெண்முத் தார மெனக்கிடந் திலங்குஞ் சென்னி
மன்னவ னூடீ தென்ப தமிழறி வைகைப் பேர்யா

---

காவிரிப்பூம்பட்டினத்து வணிகப்பெண். கரி - சாட்சி. காட்ட நின்றிடம் - திருப்புறம் பயம்.

25. சாம கண்டத்தன் - சாமவேத முழங்கும் கழுத்தையுடைய சிவன். தென்னர் கோமகன் - வரகுண பாண்டியன். பிரமசாயை - பிரமகத்தி. குறைத்ததிப் பதி - திருவிடை மருதூர். அகம் - பாவம். புனிதநீர் - மாமாங்கக்குளம் என்பர் புனிதநீர்ப்பதி - கும்பகோணம்.

26. குருமொழி - உபதேசம். குருவுறைமலை - சுவாமிமலை. ஆழி ஈந்த புரம் - திருவீழிமிழலை. எந்தை-சிவபெருமான். நோற்ற தலம் - திருவையாறு.

27. தவநகர்-திருவானைக்கா. முச்சென்னி மடங்கலேறனையான் - திரிசிரன். நாமவரை - திரிசிராமலை; திரிசிராப்பள்ளி; திருச்சிராப் பள்ளி. குடைந்தோர் - மூழ்கியோர். பருகும் - போக்கும். பொன்னி - காவிரி நதி.

28. சென்னி மன்னவன்-சோழ மன்னவன். தமிழ் அறி வைகை - தமிழ் வேதமாகிய தேவாரத்திலுள்ள 'வாழ்க வந்தணர்' என்ற திருப் பதிகத்தின் சுவையையறிந்த வைகை நதி. துறக்கம் - சுவர்க்க லோகம். சேய்த்து - தூரம்.

பா-ம்—1 பிரமச்சாயை.

றந்நதி துறக்க மண்மேல் வழுக்கிவீழ்ந் தாங்குத் தோற்றித்
தென்னவ னுடு சேய்த்தாத் தெரிவதே காண்மி னென்றான். 28

பொங்கர்மென் புதல்க ளென்னப் பொருநதி சிறுகா லென்னக்
கொங்கலர் தடஞ்சிற் றாறற் குழியெனப் பழனஞ் சில்லி
தங்குமென் பாத்தி யென்னத் தாழைதாழ் சிறுபுல் லென்னப்
பைங்குலைக் கதலி மஞ்சட் பாத்திபோற் றோற்றக் கண்டார். 29

பன்னிற மாட மாலை யுபரிகைப் பந்தி செய்குன்
றன்னம்வெண் குருகு செம்போத் தளகுபைங் கிள்ளை மஞ்ஞை
இன்னபுள் வேறு வேறா யொழுங்குபட் டிருப்ப தொப்ப
மின்னுபூங் கொடியப் புட்கள் சிறகென விதிர்ப்பக் கண்டார். 30

கண்டு நாட்டு நகர்வளங்க ணடந்து நடந்து கண்கள்விருந்
துண்டு மீள வகல்விசும்பா றெழுகி வலமா வருமுனிவர்
விண்டு மூாவுங் கொடுங்குன்றுந் தளிப்புத் தூரும் விரிபொழில்வாய்
வண்டு பாட மயிலாடல் பயிலா டானை வளநகரும். 31

சரத வேதம் பரவுபுன வாயி னகருந் தவசித்தர்
இரத வாதஞ் செய்துசிவ னுருவங் கண்ட வெழினகரும்
வரத னாகி யரனுறையுங் கானப் பேரு மலைமகளை
விரத யோக நெறிநின்று மணந்தார் சுழியல் வியனகரும். 32

மறவா ளிலங்கை யிறைமகனை வதைத்த பழியான் மருண்டரியன், றறவா ணேமி யளித்தவனை யர்ச்சித் தகன்ற [1]வணிநகரும், சிறவாண் முத்தும் வயிடூய நிறையும் பொன்னும் விளை

---

29. பொங்கர் - சோலை. புதல் - சிறுசெடி. சிற்றாறற் குழி - சிறிய ஊற்று நீரையுடைய கிடங்கு. சில்லி - சிறு கீரை.

30. மாலை - வரிசை. உபரிகை - மேன்மாடம். வெண்குருகு - வெண்ணாரை. விதிர்த்தல் - அசைதல்.

31. கொடுங்குன்று - பிரான்மலை. தளி - திருத்தளி என்னும் தீர்த்தம்; கோயிலுமாம். புத்தூர் - திருப்புத்தூர். ஆடானை - திருவாடானை.

32. சரதம் - சத்தியம் தவசித்தர் - எல்லாம்வல்ல சித்தர்; இறைவர். எழில் நகர் - திருப்பூவணம். கானப்பேர் - காளையார் கோவில். சுழியல் - திருச்சுழியல்.

33. இலங்கை இறைமகன் - இராவணன். அணி நகர் - இராமேச்சரம். வேய் வயிற்றிற் பிறந்த தொன்னகர் - திருநெல்வேலி.

பா-ம்—1 வருநகரும்.

பொருனைத், துறைவாய்ப் பிறவாக் கடவுள்வேய் வயிற்றிற் பிறந்த தொன்னகரும். 33

துளபக் குன்றைக் கொன்றைமுடிக் குன்ற மாக்குந் தொன்னகரும், அளகைப் பொறித்த கொடியிளையோன் மானேர் நோக்கி ஞானமகள், புளகக் குன்றை மணந்துமுத லிருந்த பொருப்பும் போர்விசயன், வளைவிற் றுக்க வடுக்கிடந்த முடியோன் மேய வளநகரும். 34

கொண்டல் படியுந் திருவாப்ப னூருந் தொழுது குளிர் திரைக்கை, வண்டு படியுங் [1]கமலமுக வைகைப் பிராட்டி யெதிர் வணங்கிக், கண்டு பணிந்து திசையெட்டும் விழுங்கி யண்டங் கடந்துலகம், உண்ட நெடியோ னெனவுயர்கோ புரமுன் னிறைஞ்சி [2]யுள்புகுதா. 35

மறுகு தோறும் பணிந்தெழுந்து வளைந்து வளைந்து பொற் கோயில், குறுகி விதியாற் பொற்கமலங் குடைந்து செய்யுங் குறைநிறுவி, உறுதி பெறவைந் தெழுத்தெண்ணி யூற்று மதத்து நாற்றடந்தோட், சிறுகு கண்ண வைங்கரத்துச் சித்தி யானை யடிவணங்கா. 36

மும்மை யுலகு நான்மறையு முறையா லீன்ற வங்கயற்கண், அம்மை யடிகண் முடியுறத்தாழ்ந் தன்பு கொடுத்தின் னருள் வாங்கி, வெம்மை யொளிகான் மணிக்கனக விமானத் தமர்ந்த

---

34. துளபக்குன்று - திருமால். கொன்றை முடிக்குன்று - சிவன். தொன்னகர் - திருக்குற்றாலம். அளகு - சேவற்கோழி. பொறித்தல் - எழுதல். புளகக்குன்று - தனம். முதல் இருந்த பொருப்பு - திருப் பரங்குன்றம். வளநகர் - திருவேடகம்.

35 ஆப்பன் - ஆப்பே சிவலிங்கமாக முளைத்தவன். வண்டு - கைக்கு வளையல்; திரைக்குச் சங்கு. உலகமுண்ட நெடியோன் - திரி விக்கிரமாவதாரங்கொண்ட திருமால். உட்புகுதா - நகரத்துட்சென்று,

36. மறுகு - வீதி. மறுகுதோறும் பணிந்து எனவே ஏழாம் பிராகார மருங்கிலுள்ள வடதிருவாலவாயிலையும் வணங்கி, ஆறும் பிராகாரத்து எழுகடற்றீர்த்தத்திலும் ஸ்நானஞ்செய்து, பொற் கோயில்குறுகினர் என்க. குறை நிறுவி - சந்தியா வந்தனம் முதலிய இன்றியமையாக் கருமங்களைச் செய்து.

பா-ம்—1 கமலமுகை (தாமரையரும்புகளாகிய தனங்கள்.) 2 உள் புகுந்தார்.

தனிச்சுடரின், செம்மை யடித்தா மரைவேணிச் சிரமேன் மலரப் பணிந்தேத்தா. 37

அன்றிரு போது முண்டி துறந்திரா வறுக்குந் தீவாள்
என்றெழு முன்னி ராடி நியதிக ளியற்றி யைந்தும்
வென்றுளத் தன்பு பாய வினைமுழு முதலைப் பார்மேல்
நின்றிரண் டென்ன நின்ற விமானமீ திருப்பக் கண்டார். 38

வாசமஞ் சனந்தேன் கன்னல் பைங்கனி மறுவி லானைந்
தாசறு மமுத மைந்து தென்மலை யாரம் வாசம்
வீசுதண் பனிநீர் வெள்ள மான்மதம் விரைமென் போது
தூசணி மணிப்பூ ணல்ல சுவையமு தின்ன தாங்கா. 39

சதவுருத் திரத்தா லாட்டி மட்டித்துச் சாத்திப் பூட்டிப்
பதமுற மனுவா லட்ட பாலமு தருத்திப் பஞ்ச
விதமுறு வாசம் பாகு வெள்ளிலை யளித்துப் போகம்
உதவுறு தூப தீபா திகள்பல வுவப்ப நல்கா. 40

ஐம்முகச் சைவச் செந்தீ யகத்தினுந் துடுவை யார
நெய்ம்முகந் தருத்திப் பூசை நிரப்பினால் வேதஞ் சொன்ன

---

37. தனிச்சுடர் - சொக்கலிங்கமூர்த்தி. ஏத்தா - ஏத்தி.

38. இரா - இரவு ஆகிய மரம். தீவாள் என்று - கொடிய வாளை யுடைய சூரியன். ஐந்து - ஐம்பொறி. முழுமுதல்-சிவமாகிய வித்து; பேரிறைவன். முதல் - வித்து, சிவம்.

39. மஞ்சனம் - ஸ்நானம். கன்னல் - கருப்பஞ்சாறு. அமுதம் ஐந்து - பஞ்சாமிர்தம். தென்மலை ஆரம்-பொதிய மலையில் தோன்றிய சந்தனம். மான்மதம் - கஸ்தூரி. போது - மலர். தூசு - ஆடை. சுவை அமுது - நைவேத்தியம்.

40. சதவுருத்திரம்-யசுர்வேத மந்திர விசேடம்; அஃது உருத்திர கணங்களைச் சங்காரக்கிரமத்தில் வைத்துத் துரிய சிவபரியந்தம் வரைப்படுத்திக் கூறுதல். பதமுறமனுவால் அட்ட-மந்திர பூர்வமாகப் பதமுறச்சமைத்த. பால்அமுதம் - சித்திரான்ன வகைகள். பஞ்ச வித முறுவாசம் - ஏலம், இலவங்கம், பச்சைக்கருப்பூரம், சாதிக்காய், தக்கோலம் இவைகளின் பொடியைப் பனி நீரோடு கூட்டிச்செய்த குளிகை. பாகு - பாக்கு.

41. ஐம்முகம் - சிவத்தை விசேடித்தது. துடுவை-நெய்த்துடுப்பு. மெய்ம்மனு நூற்றுப்பத்து - சிவசகஸ்ர நாமம். மூவிலை வில்லம் - மூன்று தளங்களையுடைய வில்வம். நீலம் - நீலோற்பலம்.

மெய்ம்மனு நூற்றுப் பத்தான் மூவிலை வில்ல நீலங்
கைம்மல ரேந்திச் சாத்திக் கடவுளை யுவப்பச் செய்து. 41

வாசமஞ் சனநீ ரோடு மந்திர மலர்கைக் கொண்டு
பூசையின் பயனை முக்கட் புண்ணியன் கையி னல்கி
நேசநெஞ் சூறக் கண்க ணிறையநீ ரூறிச் சோர
ஈசனை யிறைஞ்சி யாரு மஞ்சலித் தேத்தல் செய்வார். 42

பழியொடு பாச மாறு கெடவாச வன்செய் பணிகொண்ட வண்ட சரணம், வழிபடு தொண்டர் கொண்ட நிலைகண்டு வெள்ளி மணிமன்று ளாடி சரணஞ், செழியன்வி ளிந்தி டாத படிமாறி யாட றெளிவித்த சோதி சரணம், எழுகடல் கூவி மாமி யுடன்மாம னுட விசைவித்த வாதி சரணம். 43

வெங்கரி யாவி சோர நரசிங்க வாளி விடுவேட ரேறு சரணம், புங்கவர் தேற வாதி மறையுட் கிடந்த பொருளோது போத சரணம், வங்கம தேறி வேலை மகரம் பிடித்த வலையாண் மணாள சரணங், கங்கண நாகம் வீசி நகரெல்லை கண்ட கறை கொண்ட கண்ட சரணம். 44

மைந்தனி லாழி மேரு மகவா னகந்தை மடிவித்த நித்த சரணஞ், சுந்தர நாம வாளி பணிகொண்டு கிள்ளி தொகை வென்ற வீர சரணம், வெந்திறன் மாறன் முன்க னுருவானை கன்னன் மிசைவித்த சித்த சரணம், முந்திய கல்லின் மாதர் பெறவட்ட சித்தி முயல்வித்த யோகி சரணம். 45

---

42. மந்திர மலர் - மந்திர அட்ட புஷ்பம். நல்குதல்-அர்ப்பணஞ் செய்தல்.

43. பழி - விருத்திராசுரனைக்கொன்ற பிரமகத்தி. பாசம் - ஆணவம், மாயை, கன்மம், திரோதானம், மாயேயம் என்ற ஐந்து. பழியொடு பாசமாறு கெட-பழியும் பாசமுமாகிய பகைகெட என்றலுமாம். தொண்டர் - பதஞ்சலியும் வியாக்கிர பாதரும். நிலை - திருநடனந் தரிசித்தன்றி உண்ணேம் என்னும் உறுதி. செழியன் - இராசசேகர பாண்டியன்.

44. கரி - சமணர் விடுத்த யானை. புங்கவர்-கண்ணுவர் முதலிய முனிவர். கறை - நஞ்சு; கருமை.

45. மைந்தன் - இங்கு உக்கிர குமார பாண்டியன். கிள்ளி - விக்கிரமச் சோழன். தொகை - சேனைக்கூட்டம். மாறன் - இங்கு அபிடேக பாண்டியன். முந்திய கல்லின் மாதர் - பட்டமங்கையில் பாறையான இயக்கிமார் அறுவர்.

திருமணி மைந்தன் மைந்தன் முடிசூட விற்ற திருமல்கு செல்வ சரணம், மருமக னென்று மாம னுருவாய் வழக்கு வினி பேசு மைந்த சரணம், குருமொழி தந்து நாரை குருவிக்கு வீடு குடிதந்த வெந்தை சரணம், வருபழி யஞ்சி வேட மகனுக் கிரங்கு மதுராபு ரேச சரணம். 46

விருத்தகு மார பால வருண்மேனி கொண்டு விளையாடு மண்ணல் சரணங், குரத்தியை நச்சு பாவி யுயிருண்டு சோரி குடைவாகை வேல சரணங், கருத்திசை பாண னுளி னிசைபாடி மாறு களைவேத கீத சரணம், நரித்திரண் மாவை மீள நகரங் கலங்க நரிசெய்த நம்ப சரணம். 47

முற்பக லாறி ரண்டு சிறுபன்றி யுண்ண முலைதந்த வன்னை சரணம், பொற்புறு மாய வாவை யடலேறு கொண்டு பொருது தட்ட சிட்ட சரணம், பற்பல ஞால மெங்கு மடையப் பிரம்பு படுமட்ட மூர்த்தி சரணங், கற்பினொ ருத்தி மன்ற லறிவிக்க மூன்று கரிதந்த வள்ளல் சரணம். 48

அளவைக ளாலும் வேத முதனூல்க ளாலு மயன்மாய னாலு [1]மளவாக், களவையு னக்கு நாம குணசின்ன சாதி கதிசெய்தி யில்லை யவையும், உளவென யாம றிந்து துதிசெய்ய வேகொ ளுலகஞ்செ யன்பி னெளிதாய், விளையருண் மேனி கொண் டிவ் வறுபத்து நாலு விளையாடல் செய்த படியே. 49

எனத்துதித்த வசிட்டாதி யிருடிகளைக் குறுமுனியை யெறிதேன் நீப, வனத்துறையுஞ் சிவபெருமா னிலிங்கத்தின் மூர்த்தியாய் வந்து நோக்கிச், சினத்தினைவென் றகந்தெளிந்தீர்

---

46. மைத்தன் மைந்தன் - வீரபாண்டியன் புதல்வனான அபிடேக பாண்டியன். மைந்த - சர்வவல்லமையையுடையவரே.

47. குரத்தியை நச்சுபாவி - குருமனைவியை விரும்பிய சித்தன். சோரி - இரத்தம். சோரிகுடைவேல், வாகைவேல் என்க. மாறு - பகை. அஃது ஏமநாதன் பகை ஆகும்.

48. கற்பின் ஒருத்தி - வைசியப்பெண். மூன்று கரி - வன்னி, கிணறு, சிவலிங்கமாகிய மூன்று சாட்சிகள்.

49. அளவை - காட்சி முதலிய பிரமாணங்கள். வேத முதனூல்கள் - வேதங்களாகிய முதனூல்கள். சின்னம் - குறி.

50. குறுமுனி - அகத்தியர். நீபம் - கடம்பு.

பா-ம்—1 மறியாக் - களவையு. (களவை-மறைவையுடையை.)

நீர்செய்த பூசைதுதி தெய்வத் தானம், அனைத்தினுக்கு மெனைத் துயிர்க்கு நிரைந்துநமக் கானந்த மாயிற் றென்றே. 50

சிறந்தவருள் சுரந்துகுறு முனியைவரு கென்றுகரஞ் சிர மேல் வைத்துப், புறந்தடவி யெமையொப்பாய் நீயேநின் கற்பு டைய பொலங்கொம் பன்னாள், அறந்தழைய முமையொப்பா ளாதலினு லுமையொப்பா ரகிலத் தியாரே, நிறைந்ததவம் புரிந் தோனுந் தவத்துறுதி பெற்றேனு நீயே யன்றோ. 51

உனக்கரிய வரமினியாந் தருவதெவ னுனக்கரிதா வொன் றுங் காணேம், எனக்கருணை செய்திலிங்கத் திடையிச்சை வடி வாய்ச்சென் றிருந்தா னாகத், தனக்கரிய வரநல்குஞ் சிவலிங்கந் தன்பெயராற் றாபித் தான்றன், இனக்கருணை வசிட்டாதி முனி வர்களுந் தம்பெயரா லிலிங்கங் கண்டார். 52

எத்தியருச் சனைசெய்து நினைவிலரி தாயன்பி லெளிய வட்ட, மூர்த்தியையங் கயற்கண்ணி யன்பனைமுப் போதும்போய் முடிதாழ்ந் தின்பம், பூத்தமனத் தினராகிக் கருவித்தேன் பொதிந் தசிறு புட்போ லந்த, மாத்தலனில் வசிட்டாதி முனிவர்தபோ வனஞ்செய்து வதிந்தார் மன்னோ. 53

ஆகச் செய்யுள்—3,363

## திருவாலவாய்க் காண்டம்

முற்றிற்று

---

## திருவிளையாடற் புராணம் முற்றுப்பெற்றது

திருச்சிற்றம்பலம்

---

51. சிறந்த வருள் - இவ்வுலகத்து அனுபவிக்கும் போகமும் பின் னர்ப் பர முத்தியுமாம்.

52. எவன் என்னும் வினைப் பெயர் இங்கு இன்மை குறித்து நின்றது. இச்சை வடிவு - அடியார் விரும்பியவற்றைக் கொடுக்கும் சூக்கும வடிவு; இயல்பாகவே பாசத்தினின்று நீங்கிய சுதந்திர வடிவு மாம். இனம் - முனிவராஞ் சுற்றம். கூட்டமுமாம்.

53. நினைவு - மனம். கருவி - கூட்டம்; இங்கு மிகுதியின் மேற்று. தேன் - தேனடை. சிறுபுள் - தேனீ.

உ

செந்திலாண்டவன் துணை

**பரஞ்சோதி முனிவர்**

அருளிச் செய்த

## மதுரை யறுபத்துநான்கு திருவிளையாடற்

# போற்றிக் கலிவெண்பா

---

காப்பு

நாற்றிக்கும் போற்று நதிமதுரைச் சொக்கரையாம்
போற்றிக் கலிவெண்பாப் போற்றிசெயச்—சீற்றமதன்
றைக்குஞ் சரமுகத்தான் சாயவிழித் தோனுதவு
கைக்குஞ் சரமுகத்தான் காப்பு.

---

நூல்

1. பூமேவு கற்பகநா டாளும் புரந்தரனுர்
தீமை விருத்திரனைச் செற்றபழி—போமாறு
2. பொற்கமலந் தோய்ந்து விமானமிசைப் பூசிக்க
நற்கருணை செய்த நலம்போற்றி ;—நற்றவத்தோர்
3. ஈசனுர் சாத்து மெழின்மலரைக் கால்சிதைத்த
வாசவனுர் வெள்ளானை மண்ணிழிந்து—பூசனைசெய்
4. தல்லற் படுசாபந் தீர வருள்சுரந்த
மல்லற் கருணை வளம்போற்றி ;—நல்வணிகன்
5. கண்டுவந்து கூறக் கனவினருட் சித்துருவங்
கொண்டுவந்து காடெறிந்து கோநகரங்—கண்டிடெனக்
6. கொத்தரு நிம்பக் குலசே கரனையெதிர்
சித்தரா யாட்கொண்ட சீர்போற்றி ;—பத்தி
7. மலையத் துவசன் மகந்தன்னின் மூன்று
முலையுத் தமியாய் முளைத்துக்—கலைமுழுதுங்

8. கற்றுமுடி சூடிக் கயற்கண்ணி வெங்கலியைச்
செற்றுலகை யாண்டிருந்த சீர்போற்றி ;—கொற்றமணித்
9. தேரேறி யெட்டுத் திசைவென்று நந்திகணப்
போரேறி வென்றெதிர்க்கும் போதிலொரு—வாரேறு
10. கொங்கை மறைந்தமதிக் கொம்பைமணஞ் செய்துமுடி
மங்கலஞ் செய்த வளம்போற்றி ;—அங்கனக
11. மன்றுடல் வேட்டவிரு மாதவர்க்கு வெள்ளிமன்றுள்
நின்றாடிக் காட்டு நிலைபோற்றி ;—குன்றமென
12. முன்ன மலைபசித்தீ மூளுங் குறள்வீரற்
கன்னமலை யீந்த வருள்போற்றி ; —பின்னுமவன்
13. வெய்யபசிக் கன்னக் குழியுநீர் வேட்கைக்கு
வையையுந் தந்த வரம்போற்றி ;—ஐயைதனை
14. ஈன்றாள் கடலாட வேண்ட வெழுகடலுஞ்
சான்று வரநிறுத்துந் தாள்போற்றி ;—வான்றாழ
15. வாழுமலை யத்துவச மன்னனைக்கூஉய்த் தேவியொடும்
ஆழிபடி வித்த வருள்போற்றி ;—வேள்விவரு
16. வில்வளைக்கை நங்கை விறலுக் கிரகுமரச்
செல்வனைப் பெற்ற திறம்போற்றி ;—செல்வனுக்கு
17. மன்றன் முடித்து வளைசெண்டு வேல்கொடுத்து
வென்றிமுடி சூட்டும் விறல்போற்றி ;—வன்றிறல்வேல்
18. வேலை சுவற விடுத்துக் கிரகுமரன்
ஞாலம் புரந்த நலம்போற்றி ;—வேல்வலக்கைச்
19. சேயனைய வுக்ரன் றிகிரியெறிந் திந்திரன்போர்
சாயமுடி சிந்து சயம்போற்றி ;—ஆயவரி
20. வண்டலம்பு தார்க்குமரன் மேரு மணிமுடிமேற்
செண்டெறிந்து வைப்பெடுத்த சீர்போற்றி ;—பண்டொருநாள்
21. ஆறறிய வந்தணருக் காதிமறைப் பொருளைத்
தேற விரித்த திறம்போற்றி ;—ஈறடைந்த
22. தென்னன் குமரன் றிருமுடிக்கு வாணிபராய்
நன்மணிகள் விற்ற நலம்போற்றி ;—நன்னகர்மேல்
23. வென்றி வருணன் விடுத்த கடல்பருகத்
துன்றுமுகி லென்கேவுஞ் சூள்போற்றி ;—கன்றியவன்
24. வான்மாரி யேழும் விடுப்பமழை நான்கும்போய்
நான்மாட மான நலம்போற்றி ;—தேனிதழி

25. வைத்த முடிமறைத்து மாடநக ரெங்கெங்குஞ்
சித்தரா யாடியருள் சீர்போற்றி ;—சித்தராய்
26. மன்னவன் கைக்கரும்பை வாங்கிக்கல் யானைக்குத்
தின்ன வளித்த திறம்போற்றி ;—தென்னவன்மேல்
27. வெங்க ணமணர் விடுத்த களிற்றைநர
சிங்கசரந் தொட்டெய்த சீர்போற்றி ;—தொங்குதிரை
28. மூப்பிளைய காளை முலையுண் குழவியெனக்
கோப்பருவங் கொண்ட குணம்போற்றி ;—மாப்பெரியோர்
29. தேறுநடந் தன்னையொரு தென்னன் றனக்கிரங்கி
மாறிநடஞ் செய்த மலர்போற்றி ;—ஆறடைந்தோர்
30. வஞ்சி யுயிரிழப்ப நாடு மறப்பழியை
அஞ்சி வெளிசெய்த வறம்போற்றி ;—வஞ்சமனத்
31. தாயைப் புணர்ந்தமகன் றந்தை தனைவதைத்த
தீயபழி தீர்த்தவருட் சீர்போற்றி ;—தாயனைய
32. ஆசான் மனைவிதன்மே லாசைவைத்த மாணவனைக்
கூசாமற் கொன்ற கொலைபோற்றி ;—மாசமணர்
33. வல்வித்தை செய்துவிடு வன்னஞ்ச வாளரவைக்
கொல்வித்த நல்ல குணம்போற்றி ;—வல்லமணர்
34. கூரியகோட் டாவை வரவிடுப்பக் கொல்லேற்றால்
வீரியஞ் சாய்த்த விறல்போற்றி ;—தாரணியில்
35. வெந்திறல்வேன் மீனவன்முன் மெய்க்காட்டிட் டன்புடைய
மந்திரியைக் காத்த வளம்போற்றி ;—நொந்திரந்த
36. கொற்கையர்கோ வேந்தன் குறையிரப்பச் சித்தராய்ப்
பொற்குவை தந்த புகழ்போற்றி ;—நற்குவளை
37. மையேற்ற வாட்கண் வணிகமட வார்க்குவளை
கையேற்றி மாலேற்றுங் கைபோற்றி ;—மைதீரப்
38. பட்டமங்கைப் பாறையுரு நீத்தாறு பைந்தொடியார்க்
கட்டசித்தி யீந்த வருள்போற்றி ;—கட்டவிழார்த்
39. தாராற் கரையிரவிற் றாழ்திறந்து காப்படைத்துச்
சீரார் விடைபொறித்த சீர்போற்றி ;—ஆரானை
40. மூண்டுபொருந் தென்னன் முனைப்போர்க்குத் தண்ணீர்தந்
தாண்ட கருணை யறம்போற்றி ;—ஈண்டயன்மால்
41. வன்மனத்துக் கெட்டான் வடிவெடுத்துப் பொன்னனையாள்
நன்மனையிற் சென்ற நடைபோற்றி ;—தென்னனெதிர்

42. ஆயிர வாம்பரிக்கோ ராடவனை யோடையினில்
வீய வலந்திரித்த வேல்போற்றி ;—தூயவளம்

43. ஒல்கு மடியாற் குலவாத் தனிக்கோட்டை
நல்குங் கருணை நலம்போற்றி ;—நல்வணிகன்

44. மாமனென வந்து வழக்குரைத்து ஞாதியர்பாற்
சேமநிதி வாங்கியருள் சீர்போற்றி ;—கோமகனை

45. ஆட்டிய வன்பழிதீர்த் தாண்டச் சிவலோகங்
காட்டி யருள்கருணைக் கண்போற்றி ;—பாட்டிசைக்குப்

46. பாண னடிமையெனப் பாடி விறகெடுத்த
நாண மிலாத நடைபோற்றி ;—பாணனுக்குச்

47. செந்தமிழாற் றீட்டுந் திருமுகத்தைச் சேரனிடைத்
தந்தருளிச் செய்த தனம்போற்றி ;—வந்திறைஞ்சி

48. அற்பொழியு மாரிவெள்ளத் தாழ்ந்திசைக்கும் பாணனுக்குப்
பொற்பலகை யிட்ட புகழ்போற்றி ;—கற்பதனுன்

49. மாட்சிபெறு பாடினியை வாதுக்குத் தோற்றுடன்
ரேட்சுமையாத் தாங்குவித்த சூள்போற்றி ;—காட்சிபெற

50. மாயாமல் வெஞ்சுரத்து வல்லேனக் குட்டிகட்குத்
தாயாய் முலைகொடுத்த தாய்போற்றி ;—வீயாத

51. ஏனமிரண் டாறனையு மீரா று மந்திரியா
மீனவனுக் கீந்த விறல்போற்றி ;—மானவலி

52. எய்த்தெளிய ஞன விரும்புட் குபதேசம்
வைத்துவலி தந்த வரம்போற்றி ;—சித்தநெகிழ்

53. பத்தியினுற் சூழ்ந்துவழி பாடுசெய்யு நாரைக்கு
முத்தி கொடுத்த முறைபோற்றி ;—சித்தரணி

54. கோளரவு நான்மாடக் கூடலை யாலவாய்
வாளகிரி போல்வளைந்த மாண்போற்றி ;—கோளமரிற்

55. சுந்தரப்பே ரம்பெய்து சோழன் கட்டுசேனைக்
கந்தரநா டீந்த வருள்போற்றி ;—செந்தமிழ்நூல்

56. ஆய்ந்தவர் கல்வி யளந்தறியும் பொற்பலகை
ஈந்த கருணை யிசைபோற்றி ;—வேந்தனிடைச்

57. சொற்சுவையாற் பாட ஞெருடுத்துத் தருமிக்குப்
பொற்கிழி தந்த புகழ்போற்றி ;—நக்கீரன்

58. மெய்வெந் தழற்கண்ணுல் வெந்தோடை வீழ்ந்தோனைக்
கைதந்தே றிட்ட கரைபோற்றி ;—மைதவிர

59. ஏதமுறுங் கீரற் கியற்றமிழைத் தென்மலய
மாதவனாற் றேற்றுவித்த மாண்போற்றி ;—போதணிந்த
60. மங்கல மண்டபத்து வந்தூமன் சங்கத்தார்
சங்கையறத் தேற்றுந் தமிழ்போற்றி ;—சங்கையாய்ப்
61. போனவிடைக் காடன்பின் போய்ப்பாடல் கேட்டரசன்
மானநிதி நல்குவிக்கு மாண்போற்றி ;—மீன்மகனாய்ச்
62. செங்கையொரு நான்குடைய திண்மீன் பிடித்துவலை
மங்கையை வேட்ட மணம்போற்றி ;— துங்கமறை
63. ஆன்றதிரு வாதவூ ரந்தணருக் கைந்தெழுத்தின்
மூன்றுபொரு டேற்று முறைபோற்றி ;—தேன்றதும்பும்
64. வேம்புநறுந் தாரான்முன் வெவ்வாய் நரித்திரளை
வாம்பரியாத் தந்த வரம்போற்றி ;—வாம்பரிகள்
65. நின்ற பரிக ணிணம்பிடுங்கி யூளையிட்டுத்
தின்றுநரி யாகுஞ் செயல்போற்றி ;—அன்றொருத்திக்
66. காளாய் முதுகி லடிபட்டு மண்சுமந்து
தாளாண்மை செய்த சயம்போற்றி ;—கோளமணர்
67. வீறுகெடக் கூனிமிர்த்து வெப்பொழித்துப் பாண்டியனை
நீறுபுனை வித்த நிலைபோற்றி ;—சீறமணர்
68. அங்கனலும் வேகவதி யாறுந் தமிழறிய
வெங்கழுவி லேற்றும் விறல்போற்றி ;—அங்கொருத்தி
69. மன்றற்குச் சான்றாக வன்னி கிணறிலிங்கம்
அன்றழைத்துக் காட்டு மருள்போற்றி ;—அன்றிறைவன்
70. ஆற்றிய ஆடல் அறுபத்து நான்கனையுஞ்
சாற்றிய தென்முனிவன் றாள்போற்றி ;—சாற்றிய
71. வண்ணங்கேட் டர்ச்சித்த மாமுனிவர் தாள்போற்றி ;
தண்ணங் கயற்கண்ணி தாள்போற்றி ;—அண்ணலருள்
72. போற்றி ; மதுரைநகர் விண்ணிழிந்த பொற்கோயில்
போற்றி கருணைமுகப் போது.

திருவிளையாடற் போற்றிக் கலிவெண்பா

முற்றிற்று

உ

செந்திலாண்டவன் துணை

திருச்சிற்றம்பலம்

# திருவாலவாய்த் தேவாரம்

—o—

## திருஞானசம்பந்த சுவாமிகள்

---

### திருவிருக்குக்குறள்

**பண்-குறிஞ்சி** [1-ஆம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நீல மாமிடற், றால வாயிலான்
பால தாயினார், ஞாலம் ஆள்வரே. 1

ஞாலம் ஏழுமாம், ஆல வாயிலார்
சீல மேசொலீர், காலன் வீடவே. 2

ஆல நீழலார், ஆல வாயிலார்
கால காலனார், பால தாமினே. 3

அந்த மில்புகழ், எந்தை யாலவாய்
பந்தி யார்கழல், சிந்தை செய்ம்மினே. 4

ஆட லேற்றினான், கூட லாலவாய்
பாடி யேமனம், நாடி வாழ்மினே. 5

அண்ணல் ஆலவாய், நண்ணி னான்றனை
எண்ணி யேதொழத், திண்ணம் இன்பமே. 6

அம்பொன் ஆலவாய், நம்ப னார்கழல்
நம்பி வாழ்பவர், துன்பம் வீடுமே. 7

அரக்க னார்வலி, நெருக்கன் ஆலவாய்
உரைக்கு முள்ளத்தார்க், கிரக்கம் உண்மையே. 8

அருவன் ஆலவாய், மருவி னான்றனை
இருவ ரேத்தநின், றுருவம் ஓங்குமே. 9

ஆரம் நாகமாம், சீரன் ஆலவாய்த்
தேர மண்செற்ற, வீர னென்பரே. 10

அடிகள் ஆலவாய்ப், படிகொள் சம்பந்தன்
முடிவி லின்தமிழ், செடிகள் நீக்குமே. 11

திருச்சிற்றம்பலம்

---

## திருநீற்றுப்பதிகம்

**பண்-காந்தாரம்*** *[2-ஆம் திருமுறை]*

திருச்சிற்றம்பலம்

மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருஆல வாயான் திருநீறே. 1

வேதத்தி லுள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு
போதந் தருவது நீறு புன்மை தவிர்ப்பது நீறு
ஓதத் தகுவது நீறு உண்மையி லுள்ளது நீறு
சீதப் புனல்வயல் சூழ்ந்த திருஆல வாயான் திருநீறே. 2

முத்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு
சத்திய மாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
பத்தி தருவது நீறு பரவ இனியது நீறு
சித்தி தருவது நீறு திருஆல வாயான் திருநீறே. 3

காண இனியது நீறு கவினைத் தருவது நீறு
பேணி அணிபவர்க் கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு
மாணந் தகைவது நீறு மதியைத் தருவது நீறு
சேணந் தருவது நீறு திருஆல வாயான் திருநீறே. 4

பூச இனியது நீறு புண்ணிய மாவது நீறு
பேச இனியது நீறு பெருந்தவத் தோர்களுக் கெல்லாம்
ஆசை கெடுப்பது நீறு அந்தம தாவது நீறு
தேசம் புகழ்வது நீறு திருஆல வாயான் திருநீறே. 5

அருத்தம தாவது நீறு அவலம் அறுப்பது நீறு
வருத்தந் தணிப்பது நீறு வானம் அளிப்பது நீறு

பொருத்தம தாவது நீறு புண்ணியர் பூசும்வெண் ணீறு
திருத்தகு மாளிகை சூழ்ந்த திருஆல வாயான் திருநீறே. 6

எயிலது அட்டது நீறு இருமைக்கும் உள்ளது நீறு
பயிலப் படுவது நீறு பாக்கிய மாவது நீறு
துயிலைத் தடுப்பது நீறு சுத்தம தாவது நீறு
அயிலைப் பொலிதரு சூலத் தால வாயான் திருநீறே. 7

இராவணன் மேலது நீறு எண்ணத் தகுவது நீறு
பராவண மாவது நீறு பாவம் அறுப்பது நீறு
தராவண மாவது நீறு தத்துவ மாவது நீறு
அராவணங் குந்திரு மேனி ஆல வாயான் திருநீறே. 8

மாலொ டயனறி யாத வண்ணமு முள்ளது நீறு
மேலுறை தேவர்கள் தங்கள் மெய்யது வெண்பொடி நீறு
ஏல உடம்பிடர் தீர்க்கும் இன்பந் தருவது நீறு
ஆலம துண்ட மிடற்றெம் ஆல வாயான் திருநீறே. 9

குண்டிகைக் கையர்க ளோடு சாக்கியர் கூட்டமுங் கூடக்
கண்டிகைப் பிப்பது நீறு கருத இனியது நீறு
எண்டிசைப் பட்ட பொருளார் ஏத்துந் தகையது நீறு
அண்டத் தவர்பணிந் தேத்தும் ஆல வாயான் திருநீறே. 10

ஆற்றல் அடல்விடை யேறும் ஆலவா யான்திரு நீற்றைப்
போற்றிப் புகலி நிலாவும் பூசுரன் ஞானசம் பந்தன்
தேற்றித் தென்ன னுடலுற்ற தீப்பிணி யாயின தீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண்-கொல்லி [3-ஆம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மானினேர்விழி மாதராய்வழு திக்குமாபெருந் தேவிகேள்
பானல்வாயொரு பாலன்ஈங்கிவன் என்றுநீபரி வெய்திடேல்
ஆனைமாமலை யாதியாய இடங்களிற்பல அல்லல்சேர்
ஈனர்கட்கெளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே. 1

ஆகமத்தொடு மந்திரங்க ளமைந்தசங்கத பங்கமாப்
பாகதத்தொ டிரைத்துரைத்த சனங்கள்வெட்குறு பக்கமா
மாகதக்கரி போல்திரிந்து புரிந்துநின் றுணு மாசுசேர்
ஆகதர்க்கெளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே. 2

அத்தகுபொருள் உண்டுமில்லையு மென்றுநின்வர்க் கச்சமா
ஒத்தொவ்வாமை மொழிந்துவாதி லழிந்தெழுந்த கவிப்பெயர்ச்
சத்திரத்தின் மடிந்தொடிந்து சனங்கள்வெட்குற நக்கமே
சித்திரர்க்கெளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே. 3

சந்துசேனனும் இந்துசேனனுந் தருமசேனனுங் கருமைசேர்
கந்துசேனனுங் கனகசேனனும் முதலதாகிய பெயர்கொளா
மந்திபோல்திரிந் தாரியத்தொடு செந்தமிழ்ப்பயன் அறிகிலா
அந்தகர்க்கெளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே. 4

கூட்டினார்கிளி யின்விருத்தம் உரைத்ததோரொலி யின்தொழிற்
பாட்டுமெய்சொலிப் பக்கமேசெலும் எக்கர்தங்களைப் பல்லறம்
காட்டியேவரு மாடெலாங்கவர் கையரைக்கசி வொன்றிலாச்
சேட்டைகட்கெளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே. 5

கனகநந்தியும் புட்பநந்தியும் பவணநந்தியுங் குமணமா
சுனகநந்தியுங் குனகநந்தியுந் திவணநந்தியும் மொழிகொளா
அனகநந்தியர் மதுவொழிந்தவ மேதவம்புரி வோமெனும்
சினகருக்கெளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே. 6

பந்தணம்மவை யொன்றிலம்பரி வொன்றிலம்மென வாசக
மந்தணம்பல பேசிமாசறு சீர்மையின்றிய நாயமே
அந்தணம்மரு கந்தணம்மது புத்தணம்மது சித்தணச்
சிந்தணர்க்கெளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே. 7

மேலெனக்கெதி ரில்லையென்ற அரக்கனார்மிகை செற்றதீப்
போலியைப்பணி யக்கிலாதொருபொய்த்தவங்கொடு குண்டிகை
பீலிகைக்கொடு பாயிடுக்கி நடுக்கியேபிறர் பின்செலும்
சீலிகட்கெளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே. 8

பூமகற்கும் அரிக்குமோர்வரு புண்ணியன்அடி போற்றிலார்
சாமவத்தையி னார்கள்போல்தலை யைப்பறித்தொருபொய்த்தவம்
வேமவத்தைசெ லுத்திமெய்ப்பொடி யட்டிவாய்சக திக்குநேர்
ஆமவர்க்கெளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே. 9

தங்களுக்குமச் சாக்கியர்க்குந் தரிப்பொணுதநற் சேவடி
எங்கள்நாயகன் ஏத்தொழிந்திடுக் கேமடுத்தொரு பொய்த்தவம்
பொங்குநூல்வழி யன்றியேபுல வோர்களைப்பழிக் கும்பொலா
அங்கதர்க்கெளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே. 10

எக்கராம்அமண் கையருக்கெளி யேனலேன்திரு ஆலவாய்ச்
சொக்கனென்னு ளிருக்கவேதுளங் கும்முடித்தென்னன்முன்னிலை
தக்கசீர்ப்புக லிக்குமன்தமிழ் நாதன்ஞானசம் பந்தன்வாய்
ஒக்கவேயுரை செய்தபத்தும் உரைப்பவர்க்கிடர் இல்லையே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண்-கௌசிகம் [3-ஆம் திருமுறை]
திருச்சிற்றம்பலம்

காட்டு மாவ துரித்துரி போர்த்துடல்
நாட்ட மூன்றுடை யாயுரை செய்வனுன்
வேட்டு வேள்விசெய் யாஅமண் கையரை
ஓட்டி வாதுசெ யத்திரு வுள்ளமே. 1

மத்த யானையின் ஈருரி மூடிய
அத்த னேயணி ஆலவா யாய்பணி
பொய்த்த வன்தவ வேடத்த ராஞ்சமண்
சித்த ரையழிக் கத்திரு வுள்ளமே. 2

மண்ண கத்திலும் வானிலும் எங்குமாம்
திண்ண கத்திரு ஆலவா யாயருள்
பெண்ண கத்தெழிற் சாக்கியப் பேயமண்
தெண்ணர் கற்பழிக் கத்திரு வுள்ளமே. 3

ஓதி யோத்தறி யாஅமண் ஆதரை
வாதில் வென்றழிக் கத்திரு வுள்ளமே
ஆதி யேதிரு ஆலவா யண்ணலே
நீதி யாக நினைந்தருள் செய்திடே. 4

வைய மார்புக ழாயடி யார்தொழும்
செய்கை யார்திரு ஆலவா யாய்செப்பாய்
கையி லுண்டுழ லும்அமண் கையரைப்
பைய வாதுசெ யத்திரு வுள்ளமே. 5

நாறு சேர்வயல் தண்டலை மிண்டிய
தேற லார்திரு ஆலவா யாய்செப்பாய்
வீறி லாத்தவ மோட்டமண் வேடரைச்
சீறி வாதுசெ யத்திரு வுள்ளமே. 6

பண்ட டித்தவத் தார்பயில் வாற்றெழும்
தொண்ட ருக்கெளி யாய்திரு ஆலவாய்
அண்ட னேயமண் கையரை வாதினில்
செண்ட டித்துள றத்திரு வுள்ளமே. 7

அரக்கன் றன்கிரி யேற்றவன் தன்முடிச்
செருக்கி னைத்தவிர்த் தாய்திரு ஆலவாய்ப்
பரக்கு மாண்புடை யாயமண் பாவரைக்
கரக்க வாதுசெ யத்திரு வுள்ளமே. 8

மாலும் நான்முக னும்அறி யாநெறி
ஆல வாயுறை யும்அண்ண லேபணி
மேலை வீடுண ராவெற்ற ரையரைச்
சால வாதுசெ யத்திரு வுள்ளமே. 9

கழிக்க ரைப்படு மீன்கவர் வாரமண்
அழிப்ப ரையழிக் கத்திரு வுள்ளமே
தெழிக்கும் பூம்புனல் சூழ்திரு ஆலவாய்
மழுப்ப டையுடை மைந்தனே நல்கிடே. 10

செந்தெ ணாமுழ வுந்திரு ஆலவாய்
மைந்த னேயென்று வல்லம ணாசறச்
சந்த மார்தமிழ் கேட்டமெய்ஞ் ஞானசம்
பந்தன் சொற்பக ரும்பழி நீங்கவே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண்-கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

செய்ய னேதிரு ஆலவாய் மேவிய
ஐய னேஅஞ்ச லென்றருள் செய்யெனைப்
பொய்ய ராம்அம ணர்கொளு வுஞ்சுடர்
பைய வேசென்று பாண்டியற் காகவே. 1

சித்த னேதிரு ஆலவாய் மேவிய
அத்த னேயஞ்ச லென்றருள் செய்யெனை
எத்த ராம்அம ணர்கொளு வுஞ்சுடர்
பத்திமன் தென்னன் பாண்டியற் காகவே. 2

தக்கன் வேள்வி தகர்த்தருள் ஆலவாய்ச்
சொக்க னேயஞ்ச லென்றருள் செய்யெனை
எக்க ராம்அம ணர்கொளு வுஞ்சுடர்
பக்க மேசென்று பாண்டியற் காகவே. 3

சிட்ட னேதிரு ஆலவாய் மேவிய
அட்ட மூர்த்திய னேயஞ்ச லென்றருள்
துட்ட ராம்அம ணர்கொளு வுஞ்சுடர்
பட்டி மன்தென்னன் பாண்டியற் காகவே. 4

நண்ண லார்புரம் மூன்றெரி ஆலவாய்
அண்ண லேயஞ்ச லென்றருள் செய்யெனை
எண்ணி லாஅம ணர்கொளு வுஞ்சுடர்
பண்ணி யல்தமிழ்ப் பாண்டியற் காகவே. 5

தஞ்ச மென்றுன் சரண்புகுந் தேனையும்
அஞ்ச லென்றருள் ஆலவா யண்ணலே
வஞ்சஞ் செய்தம ணர்கொளு வுஞ்சுடர்
பஞ்ச வன்தென்னன் பாண்டியற் காகவே. 6

செங்கண் வெள்விடை யாய்திரு ஆலவாய்
அங்க ணாஅஞ்ச லென்றருள் செய்யெனைக்
கங்கு லார்அமண் கைய ரிடுங்கனல்
பங்கமில் தென்னன் பாண்டியற் காகவே. 7

தூர்த்தன் வீரந் தொலைத்தருள் ஆலவாய்
ஆத்த னேஅஞ்ச லென்றருள் செய்யெனை
ஏத்தி லாஅம ணர்கொளு வுஞ்சுடர்
பார்த்தி வன்தென்னன் பாண்டியற் காகவே. 8

தாவி னான்அயன் தானறி யாவகை
மேவி னாய்திரு ஆலவா யாயருள்
தூவி லாஅம ணர்கொளு வுஞ்சுடர்
பாவி னான்தென்னன் பாண்டியற் காகவே. 9

எண்டிசைக்கெழில் ஆலவாய் மேவிய
அண்ட னேயஞ்ச லென்றருள் செய்யெனைக்
குண்ட ராம்அம ணர்கொளு வுஞ்சுடர்
பண்டிமன் தென்னன் பாண்டியற் காகவே. 10

அப்பன் ஆலவா யாதி யருளினால்
வெப்பந் தென்னவன் மேலுற மேதினிக்
கொப்ப ஞானசம் பந்தன் உரைபத்தும்
செப்ப வல்லவர் தீதிலாச் செல்வரே. 11

திருச்சிற்றம்பலம்

---

## திருவிராகம்—பண்-கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

வீடலால வாயிலாய் விழுமியார்கள் நின்கழல்
பாடலால வாயிலாய் பரவநின்ற பண்பனே
காடலால வாயிலாய் கபாலிநீள்க டிம்மதில்
கூடலால வாயிலாய் குலாயதென்ன கொள்கையே. 1

பட்டிசைந்த அல்குலாள் பாவையாளோர் பாகமா
ஓட்டிசைந்த தன்றியும் உச்சியாளொ ருத்தியாக்
கொட்டிசைந்த ஆடலாய் கூடல்ஆல வாயிலாய்
எட்டிசைந்த மூர்த்தியா யிருந்தவாறி தென்னையே. 2

குற்றம்நீ குணங்கள்நீ கூடல்ஆல வாயிலாய்
சுற்றம்நீ பிரானும்நீ தொடர்ந்திலங்கு சோதிநீ
கற்றநூற் கருத்தும்நீ அருத்தமின்ப மென்றிவை
முற்றும்நீ புகழ்ந்துமுன் உரைப்பதென்மு கம்மனே. 3

முதிருநீர்ச் சடைமுடி முதல்வன்நீ முழங்கழல்
அதிரவீசி யாடுவாய் அழகன்நீ புயங்கன்நீ

---

3. 'குற்றம் நீ குணங்கள் நீ'— "அவையே தானே யாயிரு வினையின்......ஆணையின் நீக்கமின்றி நிற்கும்" (சிவஞானபோதம்) என்பார் இவ்வாறு கூறினார். 'சுற்றம் நீ...சோதி நீ'— சுற்றம் இறைவன் உலகெலாமாய் அவையேயாய் இருக்கும் நிலையினையும், பிரான் - அவற்றின் வேறாய்த் தானேயாய் இருக்கும் நிலையினையும், தொடர்ந்திலங்கும் சோதி - அவற்றோடு உடனாகி நிற்கின்ற நிலையினையும் உணர்த்தின.

மதுரன்நீ மணாளன்நீ மதுரையால வாயிலாய்
சதுரன்நீ சதுர்முகன் கபாலமேந்து சம்புவே. 4

கோலமாய நீள்மதிற் கூடல்ஆல வாயிலாய்
பாலனாய தொண்டுசெய்து பண்டுமின்றும் உன்னையே
நீலமாய கண்டனே நின்னையன்றி நித்தலும்
சீலமாய சிந்தையில் தேர்வதில்லை தேவரே. 5

பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய் பிஞ்ஞகா பிறப்பிலீ
கொன்றையம் முடியினாய் கூடல்ஆல வாயிலாய்
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. 6

ஆதியந்த மாயினாய் ஆலவாயில் அண்ணலே
சோதியந்த மாயினாய் சோதியுள்ளொர் சோதியாய்
கீதம்வந்த வாய்மையால் கிளர்தருக்கி னார்க்கலால்
ஓதிவந்த வாய்மையால் உணர்ந்துரைக்க லாகுமே. 7

கறையிலங்கு கண்டனே கருத்திலாக் கருங்கடல்
துறையிலங்கை மன்னனைத் தோளடர வூன்றினாய்
மறையிலங்கு பாடலாய் மதுரையால வாயிலாய்
நிறையிலங்கு நெஞ்சினால் நினைப்பதே நியமமே. 8

தாவணவ் விடையினாய் தலைமையாக நாடொறும்
கோவணவ் வுடையினாய் கூடல்ஆல வாயிலாய்
தீவணம் மலர்மிசைத் திசைமுகனும் மாலும்நின்
தூவணம் மளக்கிலார் துளக்கமெய்து வார்களே. 9

தேற்றமில் வினைத்தொழில் தேரருஞ் சமணரும்
போற்றிசைத்து நின்கழற் புகழ்ந்துபுண் ணியங்கொளார்
கூற்றுதைத்த தாளினாய் கூடல்ஆல வாயிலாய்
நாற்றிசைக்கும் மூர்த்தியாகி நின்றதென்ன நன்மையே. 10

போயநீர் வளங்கொளும் பொருபுனற் புகலியான்
பாயகேள்வி ஞானசம் பந்தன்நல்ல பண்பினால்
ஆயசொல்லின் மாலைகொண் டாலவாயில் அண்ணலைத்
தீய்திர எண்ணுவார்கள் சிந்தையாவர் தேவரே. 11

திருச்சிற்றம்பலம்

**பண்–பழம்பஞ்சுரம் [3-ஆம் திருமுறை]**

**நாலடி மேல்வைப்பு**

திருச்சிற்றம்பலம்

வேத வேள்வியை நிந்தனை செய்துழல்
ஆத மில்லி அமணொடு தேரரை
வாதில் வென்றழிக் கத்திரு வுள்ளமே
பாதி மாதுட னாய பரமனே
ஞாலம் நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே. 1

வைதி கத்தின் வழியொழு காதஅக்
கைத வம்முடைக் காரமண் தேரரை
எய்தி வாதுசெ யத்திரு வுள்ளமே
மைதி கழ்தரு மாமணி கண்டனே
ஞாலம் நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே. 2

மறைவ ழக்கமி லாதமா பாவிகள்
பறித லைக்கையர் பாயுடுப் பார்களை
முறிய வாதுசெ யத்திரு வுள்ளமே
மறியு லாங்கையில் மாமழு வாளனே
ஞாலம் நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே. 3

அறுத்த வங்கமா றாயின நீர்மையைக்
கறுத்த வாழமண் கையர்கள் தம்மொடும்
செறுத்து வாதுசெ யத்திரு வுள்ளமே
முறித்த வாண்மதிக் கண்ணி முதல்வனே
ஞாலம் நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே. 4

அந்த ணாளர் புரியும் அருமறை
சிந்தை செய்யா அருகர் திறங்களைச்
சிந்த வாதுசெ யத்திரு வுள்ளமே
வெந்த நீற தணியும் விகிர்தனே

ஞாலம் நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே. 5

வேட்டு வேள்விசெ யும்பொரு ளைவிளி
மூட்டு சிந்தை முருட்டமண் குண்டரை
ஓட்டி வாதுசெ யத்திரு வுள்ளமே
காட்டி லானை உரித்தஎங் கள்வனே
ஞாலம் நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே. 6

அழல தோம்பும் அருமறை யோர்திறம்
விழல தென்னும் அருகர் திறத்திறம்
கழல வாதுசெ யத்திரு வுள்ளமே
தழல்இ லங்கு திருவுருச் சைவனே
ஞாலம் நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே. 7

நீற்று மேனிய ராயினர் மேலுற்ற
காற்றுக் கொள்ளவும் நில்லா அமணரைத்
தேற்றி வாதுசெ யத்திரு வுள்ளமே
ஆற்ற வாள ரக்கற்கும் அருளினாய்
ஞாலம் நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே. 8

நீல மேனி அமணர் திறத்துநின்
சீலம் வாதுசெ யத்திரு வுள்ளமே
மாலும் நான்முக னுங்காண் பரியதோர்
கோல மேனிய தாகிய குன்றமே
ஞாலம் நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே. 9

அன்று முப்புரஞ் செற்ற அழகநின்
துன்று பொற்கழல் பேணா அருகரைத்
தென்ற வாதுசெ யத்திரு வுள்ளமே
கன்று சாக்கியர் காணாத் தலைவனே
ஞாலம் நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே. 10

கூடல் ஆலவாய்க் கோனை விடைகொண்டு
வாடல் மேனி அமணரை வாட்டிட
மாடக் காழிச்சம் பந்தன் மதித்தஇப்
பாடல் வல்லவர் பாக்கிய வாளரே. 11

திருச்சிற்றம்பலம்

---

**திருவியமகம்**
**பண்-பழம்பஞ்சுரம்*** *[3-ஆம் திருமுறை]*
திருச்சிற்றம்பலம்

ஆலநீழ லுகந்ததி ருக்கையே யானபாட லுகந்ததி ருக்கையே, பாலின்நேர்மொழி யாளொரு பங்கனே பாதமோதலர் சேர்புர பங்கனே, கோலநீறணி மேதகு பூதனே கோதிலார் மனம் மேவிய பூதனே, ஆலநஞ்சமு துண்டக ளத்தனே ஆலவாயுறை அண்டர்கள் அத்தனே. 1

பாதியாயுடன் கொண்டது மாலையே பாம்புதார்மலர்க் கொன்றைநன் மாலையே, கோதில் நீறது பூசிடு மாகனே கொண்டநற்கையின் மானிட மாகனே, நாதன்நாடொறும் ஆடுவ தானையே நாடியன்றுரி செய்ததும் ஆனையே, வேதநூல் பயில் கின்றது வாயிலே விகிர்தனூர்திரு ஆலநல் வாயிலே. 2

காடுநீட துறப்பல கத்தனே காதலால்நினை வார்தம் அகத்தனே, பாடுபேயொடு பூதம சிக்கவே பல்பிணத்தசை நாடிய சிக்கவே, நீடுமாநட மாடவி ருப்பனே நின்னடித்தொழ நாளும் இருப்பனே, ஆடல்நீள்சடை மேவிய அப்பனே ஆலவாயினின் மேவிய அப்பனே. 3

பண்டயன்தலை யொன்றும் அறுத்தியே பாதமோதினர் பாவம் அறுத்தியே, துண்டவெண்பிறை சென்னியி ருத்தியே தூயவெள்ளெரு தேறியி ருத்தியே, கண்டுகாமனை வேவவி ழித்தியே காதலில்லவர் தம்மையி ழித்தியே, அண்டநாயக னேமிகு கண்டனே ஆலவாயினின் மேவிய கண்டனே. 4

சென்றுதாதை யுகுத்தனன் பாலையே சீறியன்பு செகுத்தனன் பாலையே, வென்றிசேர்மழுக் கொண்டுமுன் காலையே

வீடவெட்டிடக் கண்டுமுன் காலேயே, நின்றமாணியை யோடின கங்கையால் நிலவமல்கி யுதித்தன கங்கையால், அன்றுநின்னுரு வாகத் தடவியே ஆலவாயர னுகத்த டவியே. 5

நக்கமேகுவர் நாடுமோர் ஊருமே நாதன்மேனியின் மாசுணம் ஊருமே, தக்கபூமனைச் சுற்றக்க ருளொடே தாரமுய்த்தது பாணற்க ருளொடே மிக்கதென்னவன் தேவிக்க ணியையே மெல்லநல்கிய தொண்டர்க்க ணியையே, அக்கினுரமு துண்கல னேடுமே ஆலவாயர னுருமை யோடுமே. 6

வெய்யவன்பல் உகுத்தது குட்டியே வெங்கண்மாசுணங் கையது குட்டியே, ஐயனேயன லாடிய மெய்யனே அன்பினுல்நினை வார்க்கருள் மெய்யனே, வையமுய்ய அன்றுண்டது காளமே வள்ளல்கையது மே வு க ங் கா ள மே, ஐயமேற்பது ரைப்பது வீணையே ஆலவாயரன் கையது வீணையே. 7

தோள்கள்பத்தொடு பத்தும ய க் கி யே தொக்கதேவர் செருக்கை மயக்கியே, வாளரக்கன் நிலத்துக்க ளித்துமே வந்து மால்வரை கண்டு களித்துமே, நீள்பொருப்பை யெடுத்தவுன் மத்தனே நின்விரற்றலே யான்மத மத்தனே, ஆளுமாதி முறித்தது மெய்கொலோ ஆலவாயர னுய்த்தது மெய்கொலோ. 8

பங்கயத்துள நான்முகன் மாலொடே பாதநீண்முடி நேடிட மாலொடே, துங்கநற்றமி ழின்உரு வாயுமே தூயபாடல் பயின்றது வாயுமே, செங்கயற்கணி னரிடு பிச்சையே சென்று கொண்டுரை செய்வது பிச்சையே, அங்கியைத்திகழ் விப்பதி டக் கையே ஆலவாயர னுரதி டக்கையே. 9

தேரரோடம ணர்க்குநல் கானேயே தேவர்நா டொறுஞ் சேர்வது கானேயே, கோரமட்டது புண்ட ரிகத்தையே கொண்ட நீள்கழல் புண்டரி கத்தையே, நேரிலூர்கள் அழித்தது நாகமே நீள்சடைத்திகழ் கின்றது நாகமே, ஆரமாக வுகந்தது மென்பதே ஆலவாயர னுரிட மென்பதே. 10

ஈனஞானிகள் தம்மொடு விரகனே யேறுபல்பொருள் முத்தமிழ் விரகனே, ஆனகாழியுள் ஞானசம் பந்தனே ஆலவாயி னின் மேயசம் பந்தனே, ஆனவானவர் வாயினுள் அத்தனே

அன்பரானவர் வாயினுள் அத்தனே, நானுரைத்தன செந்தமிழ் பத்துமே வல்லவர்க்கிவை நற்றமிழ் பத்துமே. 11

திருச்சிற்றம்பலம்

---

**பண்-புறநீர்மை** *[3-ஆம் திருமுறை]*

திருச்சிற்றம்பலம்

மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை வரிவளைக் கைம்மடமானி, பங்கயச் செல்வி பாண்டிமா தேவி பணிசெய்து நாள்தொறும் பரவப், பொங்கழ லுருவன் பூதநா யகனால் வேதமும் பொருள்களும் அருளி, அங்கயற் கண்ணி தன்னொடும் அமர்ந்த ஆலவா யாவதும் இதுவே. 1

வெற்றவே அடியார் அடிமிசை வீழும் விருப்பினன் வெள்ளைநீ றணியும், கொற்றவன் தனக்கு மந்திரி யாய குலச்சிறை குலாவினின் றேத்தும், ஒற்றைவெள் விடையன் உம்பரார் தலைவன் உலகினில் இயற்கையை யொழிந்திட், டற்றவர்க் கற்ற சிவனுறை கின்ற ஆலவா யாவதும் இதுவே. 2

செந்துவர் வாயாள் சேலன கண்ணாள் சிவன்திரு நீற்றினை வளர்க்கும், பந்தணை விரலாள் பாண்டிமா தேவி பணிசெயப் பாரிடை நிலவும், சந்தமார் தரளம் பாம்புநீர் மத்தந் தண்ணெருக் கம்மலர் வன்னி, அந்திவான் மதிசேர் சடைமுடி யண்ணல் ஆலவா யாவதும் இதுவே. 3

கணங்களாய் வரினுந் தமியராய் வரினும் அடியவர் தங்களைக் கண்டால், குணங்கொடு பணியுங் குலச்சிறை குலாவுங் கோபுரஞ் சூழ்மணிக் கோயில், மணங்கமழ் கொன்றை வாளரா மதியம் வன்னிவண் கூவிள மாலை, அணங்குவீற் றிருந்த சடைமுடி யண்ணல் ஆலவா யாவதும் இதுவே. 4

செய்யதா மரைமேல் அன்னமே யனைய சேயிழை திருநுதற் செல்வி, பையர வல்குற் பாண்டிமா தேவி நாள்தொறும் பணிந்தினி தேத்த, வெய்யவேற் சூலம் பாசம்அங் குசமான் விரிகதிர் மழுவுடன் தரித்த, ஐயனார் உமையோ டின்புறு கின்றஆலவா யாவதும் இதுவே. 5

நலமில ராக நலமதுண் டாக நாடவர் நாடறி கின்ற, குலமில ராகக் குலமதுண் டாகத் தவம்பணி குலச்சிறை பரவும், கலைமலி கரத்தன் மூவிலை வேலன் கரியுரி மூடிய கண்டன், அலைமலி புனல்சேர் சடைமுடி யண்ணல் ஆலவா யாவதும் இதுவே. 6

முத்தின்தாழ் வடமுஞ் சந்தனக் குழம்பும் நீறுந்தன் மார்பினின் முயங்கப், பத்தியார் கின்ற பாண்டிமா தேவி பாங்கொடு பணிசெய நின்ற, சுத்தமார் பளிங்கின் பெருமலை யுடனே சுடர் மர கதம்அடுத் தாற்போல், அத்தனூர் உமையோ டின்புறு கின்ற ஆலவா யாவதும் இதுவே. 7

நாவணங் கியல்பாம் அஞ்செழுத் தோதி நல்லராய் நல்வியல் பாகும், கோவணம் பூதி சாதனங் கண்டால் தொழுதெழு குலச்சிறை போற்ற, ஏவணங் கியல்பாம் இராவணன் திண்டோள் இருபதும் நெரிதர வூன்றி, ஆவணங் கொண்ட சடைமுடி யண்ணல் ஆலவா யாவதும் இதுவே. 8

மண்ணெலாம் நிகழ மன்னனாய் மன்னும் மணிமுடிச் சோழன்றன் மகளாம், பண்ணினேர் மொழியாள் பாண்டிமா தேவி பாங்கினாற் பணிசெய்து பரவ, விண்ணுளார் இருவர் கீழொடு மேலும் அளப்பரி தாம்வகை நின்ற, அண்ணலார் உமையோ டின்புறு கின்ற ஆலவா யாவதும் இதுவே. 9

தொண்டரா யுள்ளார் திசைதிசை தோறுந் தொழுதுதன் குணத்தினைக் குலாவக், கண்டு நாள்தோறும் இன்புறு கின்ற குலச்சிறை கருதிநின் றேத்தக், குண்டரா யுள்ளார் சாக்கியர் தங்கள் குறியின்கண் நெறியிடை வாரா, அண்டநா யகன்றான் அமர்ந்து வீற் றிருந்த ஆலவா யாவதும் இதுவே. 10

பன்னலம் புணரும் பாண்டிமா தேவி குலச்சிறை யெனுமிவர் பணியும், அந்நலம் பெறுசீர் ஆலவா யீசன் திருவடி யாங்கவை போற்றிக், கன்னலம் பெரிய காழியுள் ஞான சம்பந்தன் செந்தமி ழிவைகொண், டின்னலம் பாட வல்லவர் இமையோர் ஏத்தவீற் றிருப்பவர் இனிதே. 11

திருச்சிற்றம்பலம்

---

## திருநாவுக்கரசு சுவாமிகள்

---

### திருநேரிசை [4-ஆம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வேதியா வேத கீதா விண்ணவர் அண்ணா என்றென்(று)
ஓதியே மலர்கள் தூவி ஒருங்கிநின் கழல்கள் காணப்
பாதியோர் பெண்ணை வைத்தாய் படர்சடை மதியஞ் சூடும்
ஆதியே ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. 1

நம்பனே நான்மு கத்தாய் நாதனே ஞான மூர்த்தி
என்பொனே ஈசா என்றென் றேத்திநான் ஏசற் றென்றும்
பின்பினே திரிந்து நாயேன் பேர்த்தினிப் பிறவா வண்ணம்
அன்பனே ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. 2

ஒருமருந் தாகி யுள்ளாய் உம்பரோ டுலகுக் கெல்லாம்
பெருமருந் தாகி நின்றாய் பேரமு தின்சு வையாய்க்
கருமருந் தாகி யுள்ளாய் ஆளும்வல் வினைகள் தீர்க்கும்
அருமருந் தால வாயில் அப்பனே அருள்செ யாயே. 3

செய்யநின் கமல பாதஞ் சேருமா தேவர் தேவே
மையணி கண்டத் தானே மான்மறி மழுவொன் றேந்துஞ்
சைவனே சால ஞானங் கற்றறி விலாத நாயேன்
ஐயனே ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. 4

வெண்டலை கையில் ஏந்தி மிகவுமூர் பலிகொண் டென்றும்
உண்டது மில்லை சொல்லில் உண்டது நஞ்சு தன்னைப்
பண்டுனை நினைய மாட்டாப் பளகனேன் உளம தார
அண்டனே ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. 5

எஞ்சலில் புகலி தென்றென் றேத்திநான் ஏசற் றென்றும்
வஞ்சக மொன்று மின்றி மலரடி காணும் வண்ணம்
நஞ்சினை மிடற்றில் வைத்த நற்பொருட் பதமே நாயேற்(கு)
அஞ்சலென் றால வாயில் அப்பனே அருள்செ யாயே. 6

வழுவிலா துன்னை வாழ்த்தி வழிபடுந் தொண்ட னேன்உன்
செழுமலர்ப் பாதங் காணத் தெண்டிரை நஞ்ச முண்ட

குழகனே கோல வில்லீ கூத்தனே மாத்தா யுள்ள
அழகனே ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. 7

நறுமலர் நீருங் கொண்டு நாடொறும் ஏத்தி வாழ்த்திச்
செறிவன சித்தம் வைத்துத் திருவடி சேரும் வண்ணம்
மறிகடல் வண்ணன் பாகா மாமறை யங்க மாறும்
அறிவனே ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. 8

நலந்திகழ் வாயின் நூலாற் சருகிலைப் பந்தர் செய்த
சிலந்தியை அரச தாள அருளினாய் என்று திண்ணங்
கலந்துடன் வந்து நின்தாள் கருதிநான் காண்ப தாக
அலந்தனன் ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. 9

பொடிக்கொடு பூசிப் பொல்லாக் குரம்பையிற் புந்தி யொன்றிப்
பிடித்துநின் தாள்க ளென்றும் பிதற்றிநா னிருக்க மாட்டேன்
எடுப்பனென் றிலங்கைக் கோன்வந் தெடுத்தலும் இருபதுதோள்
அடர்த்தனே ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம் [6-ஆம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

முளைத்தானை எல்லார்க்கும் முன்னே தோன்றி முதிருஞ் சடைமுடிமேல் முகிழ்வெண் திங்கள், வளைத்தானை வல்லசுரர் புரங்கள் மூன்றும் வரைசிலையா வாசுகிமா நாணுக் கோத்துத், துளைத்தானைச் சுடுசரத்தால் துவள நீறாத் தூமுத்த வெண்முறுவல் உமையோ டாடித், திளைத்தானைத் தென்கூடல் திருவாலவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 1

விண்ணுலகின் மேலார்கள் மேலான் தன்னை மேலாடு புரமூன்றும் பொடிசெய் தானைப், பண்ணிலவு பைம்பொழில்சூழ் பழனத் தானைப் பசும்பொன்னின் நிறத்தனைப் பால்நீற் றானை, உண்ணிலவு சடைக்கற்றைக் கங்கை யாளைக் கரந்து மையோ டுடனாகி இருந்தான் தன்னைத், தெண்ணிலவு தென்கூடல் திருவாலவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 2

நீர்த்திரளை நீள்சடைமேல் நிறைவித் தானை நிலமருவி நீரோ டக் கண்டான் தன்னைப், பாற்றிரளைப் பயின்றாட வல்லான் தன்னைப் பகைத்தெழுந்த வெங்கூற்றைப் பாய்ந்தான் தன்னைக், காற்றிரளாய் மேகத்தி னுள்ளே நின்று கடுங்குரலாய் இடிப்பா னைக் கண்ணோர் நெற்றித், தீத்திரளைத் தென்கூடல் திருவா லவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 3

வானமிது வெல்லா முடையான் தன்னை வரியரவக் கச்சானை வன்பேய் சூழக், கானமதில் நடமாட வல்லான் தன்னைக் கடைக் கண்ணால் மங்கையுமை நோக்கா வென்மேல், ஊனமது வெல்லா மொழித்தான் தன்னை உணர்வாகி யடியேன துள்ளே நின்ற, தேனமுதைத் தென்கூடல் திருவா லவாய்ச் சிவனடியே சிந்திக் கப் பெற்றேன் நானே. 4

ஊரானை யுலகேழாய் நின்றான் தன்னை ஒற்றைவெண் பிறையானை உமையோ டென்றும், பேரானைப் பிறர்க்கென்று மரியான் தன்னைப் பிணக்காட்டில் நடமாடல் பேயோ டென்றும் ஆரானை அமரர்களுக் கமுதீந் தானை அருமறையால் நான்முகனும் மாலும் போற்றும், சீரானைத் தென்கூடல் திருவா லவாய்ச் சிவ னடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 5

மூவனை மூர்த்தியை மூவா மேனி யுடையானை மூவுலகுந் தானே யெங்கும், பாவனைப் பாவ மறுப்பான் தன்னைப் படி யெழுத லாகாத மங்கை யோடு, மேவனை விண்ணோர் நடுங்கக் கண்டு விரிகடலின் நஞ்சுண் டமுத மீந்த, தேவனைத் தென்கூடல் திருவா லவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 6

துறந்தார்க்குத் தூநெறியாய் நின்றான் தன்னைத் துன்பந் துடைத்தாள வல்லான் தன்னை, இறந்தார்க ளென்பே அணிந் தான் தன்னை எல்லி நடமாட வல்லான் தன்னை, மறந்தார் மதில் மூன்றும் மாய்த்தான் தன்னை மற்றொருபற் றில்லா அடியேற் கென்றும், சிறந்தானைத் தென்கூடல் திருவா லவாய்ச் சிவனடி யே சிந்திக்கப் பெற்றேன் நானே. 7

வாயானை மனத்தானை மனத்துள் நின்ற கருத்தானைக் கருத் தறிந்து முடிப்பான் தன்னைத், தூயானைத் தூவெள்ளை யேற்றான் தன்னைச் சுடர் திங்கட் சடையானைத் தொடர்ந்து நின்றென்,

தாயானைத் தவமாய தன்மை யானைத் தலையாய தேவாதி தேவர்க்கென்றும், சேயானைத் தென்கூடல் திருவா லவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 8

பகைச்சுடரய்ப் பாவ மறுப்பான் தன்னைப் பழியிலியாய் நஞ்சுண் டமுதீந் தானை, வகைச்சுடராய் வல்லசுரர் புரமட் டானை வளைவிலியா யெல்லார்க்கும் அருள்செய் வானை, மிகைச் சுடரை விண்ணவர்கண் மேலப் பாலை மேலாய தேவாதி தேவர்க் கென்றும், திகைச்சுடரைத் தென்கூடல் திருவா லவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 9

மலையானை மாமேரு மன்னி னானை வளர்புன் சடையானை வானோர் தங்கள், தலையானை யென்தலையி னுச்சி யென்றுந் தாபித் திருந்தானைத் தானே யெங்கும், துலையாக வொருவரையு மில்லா தானைத் தோன்றாதார் மதில்மூன்றுந் துவள எய்த, சிலை யானைத் தென்கூடல் திருவா லவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 10

தூர்த்தனைத் தோள்முடிபத் திறுத்தான் தன்னைத் தொன்னரம்பின் இன்னிசைகேட் டருள்செய் தானைப், பார்த் தனைப் பணிகண்டு பரிந்தான் தன்னைப் புரிந்தவற்குப் பாசு பதம் ஈந்தான் தன்னை, ஆத்தனை அடியேனுக் கன்பன் தன்னை அளவிலாப் பல்லூழி கண்டு நின்ற, தீர்த்தனைத் தென்கூடல் திருவா லவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 11

திருச்சிற்றம்பலம்

---

## திருவாலவாய்த் தேவாரம்

முற்றிற்று

---

உ

செந்திலாண்டவன் துணை

திருச்சிற்றம்பலம்

# பாட்டு முதற்குறிப்பகராதி

# பிழை திருத்தம்

| பக்கம் | பாட்டு | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 16 | 43 | நலமிகுங் | நவ மிகுங் |
| 40 | 2 | மரந்தவான் | பரந்தவான் |
| ,, | 3 | பரம்பிஞைசை | நரம்பிஞைசை |
| 46 | குறிப்பு-24 | எண்ணென் | எண்ணெண் |
| 51 | கு - 22 | சுவனப்புண்டரீகம் | சுவணபுண்டரிகம் |
| 53 | கு - 8 | ஆணமலம் | ஆணவமலம் |
| 61 | 12 | கருதியேத்த | சுருதியேத்த |
| 73 | கு - 21 | இத்திராணி | இந்திராணி |
| 102 | கு - 2 | இகத்தோன் | இகந்தோன் |
| 110 | கு - 47 | காளாஞ்சி | காளஞ்சி |
| 111 | 53 | றெனித்தும் | றெளிந்தும் |
| 115 | 75 | பெல்லாம் | பொல்லாம் |
| 118 | கு - 2 | பரிதி புத்தேள் | பரிதிப்புத்தேள் |
| 119 | 8 | ஓங்கிய | ஓங்கிய |
| 122 | பாடம் | திசைக்காலவர் | திசைக்காவலர் |
| 126 | கு - 45 | தாள் | நாள் |
| 129 | 64 | தடாகக் | தாடகக் |
| 138 | 104 | சிங்களா | சிரங்களா |
| 140 | 117 | காந்தள | காந்தள் |
| 143 | 127 | ஒட்டிய | ஒட்டியே |
| ,, | 132 | கருத்ததே | கறுத்ததே |
| 148 | 161 | உருமமுத் | உருவமுத் |
| 152 | 181 | வொன்றுத் | வென்றுத் |
| 158 | 185 | சுடங்கு | சடங்கு |
| 163 | கு - 1 | உதிராக்கினி | உதராக்கினி |

| பக்கம் | பாட்டு | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 166 | கு - 16 | சுரவம் | சுருவம் |
| ,, | ,, | கொமையுற்று | கொடுமையுற்று |
| 186 | கு - 16 | அவர்தலை | அலர்த்தலை |
| 189 | கு - 28 | ஆறங்க | ஆறங்கம் |
| 198 | பா - ம் | தழைந்துக் | தழைத்துக் |
| 200 | கு - 37 | வன்உகிர் | வள்உகிர் |
| 200 | பா - ம் | கங்கமாஞ் | சங்கமாஞ் |
| 202 | கு - 47 | தலியமுவற்றின் | முதலியவற்றின் |
| 205 | 65 | தன்னருட | தன்னருட் |
| 222 | 5 | பிசியுழந்து | பசியுழந்து |
| 223 | 8 | செல்வி | செவ்வி |
| ,, | ,, | இறக்கமில் | இரக்கமில் |
| 232 | கு - 5 | திருப்பாசனம் | தருப்பாசனம் |
| ,, | கு - 7 | படுபொருன் | படுபொருள் |
| 234 | கு - 15 | மத்திரம் | மந்திரம் |
| 236 | கு - 25 | வளி | விளி |
| ,, | ,, | விளை | வளை |
| 245 | 31 | சாலைபுரத்து | சாலைப்புரத்து |
| 247 | 40 | தகுதோ | தகுகோ |
| ,, | 42 | குருலிந்த | குருவிந்த |
| 248 | 44 | வருத்த | வகுத்த |
| 249 | கு - | முத்துத்தலசமாம் | முத்துத்தலசமரம் |
| 250 | 56 | தாளம் | தரளம் |
| ,, | கு - 55 | மழைி | மழை |
| 251 | கு - 63 | கருடனிள் | கருடனின் |
| 252 | கு - 66 | சம்பந்துள்ளது | சம்பந்தமுள்ளது |
| 255 | கு - 77 | பரியாத் | பாரியாத் |
| 256 | 82 | மணிக்கை | மணிகை |

| பக்கம் | பாட்டு | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 284 | 8 | நூண்போல் | தூண் போல் |
| 272 | கு - 17 | வயப்படுதல் | வயப்படுத்தல் |
| ,, | கு - 21 | தோற்மாய் | தோற்றமாய் |
| 283 | பா - ம் | வழிபட் டொரு | வழிப் பட்டொரு |
| 295 | 29 | வாய்விட்டுப் | வாய்விட்டுக் |
| 305 | 8 | கொப்புண்டு | கோப்புண்டு |
| 328 | 8 | பிழைந்த | பிழைத்த |
| 334 | கு - 5 | ஆஸ்தி | ஆஸ்திகம் |
| ,, | ,, | நாஸ்தி | நாஸ்திகம் |
| 347 | 28 | செம்போ | செம்பொ |
| 362 | கு - 33 | ஆயின் | ஆயின |
| 370 | 5 | சுவைதருந் | சுவைத்தருந் |
| 380 | பா - ம் | கல்லிடை சேர் | கல்லிடை நிழல்சேர் |
| 383 | ,, | பயங்குறா உங் | பயக்குறா உங் |
| 385 | கு - 13 | அமுதனுணை | அமுதனுளை |
| ,, | ,, | பொன்னனையானை | பொன்னனையாளை |
| 398 | கு - 17 | அளாபதிபன் | அளகாதிபன் |
| 401 | கு - 13 | கேட்டேன் | கெட்டேன் |
| 402 | கு - 18 | வனைந்து | வளைந்து |
| 403 | கு - 24 | தானை | தாளை |
| ,, | பா - ம் | நைவார் | நைவாள் |
| 407 | கு - 2 | சலிலம் - கா | சலிலம் - நீர் |
| 411 | 17 | மீனவனுஞ்டிற் | மீனவனுட்டிற் |
| 415 | கு - 38 | விணை | விளை |
| 416 | கு - 41 | திரவிசுத்தி | திரவியசுத்தி |
| 449 | கு - 1 | கற்புடையர் | கற்புடையாள் |
| 465 | 41 | முரித்தாரான் | மூரித்தாரான் |
| 468 | கு - 57 | விடுகின்றன | வீடுகின்றன |

# பிழை திருத்தம்

| பக்கம் | பாட்டு | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 479 | கு - 2 | என்னும் | என்றும் |
| 502 | கு - 12 | புனைந்ந | புனைந்த |
| 511 | கு - 17 | மகிழமாம் | மகிழ மரம் |
| 513 | பா - ம் | ——— | 2. அழுந்துவாள் |
| 523 | ,, | வாசமோர்ந்து | வாசமோர்ந் |
| 532 | 14 | யசைய | யிசைய |
| 559 | பா - ம் | சாய | சாயத் |
| 560 | 39 | முன்னுறைப் | முன்னுறப் |
| 562 | 50 | டேருத தனி | டேருத் தனி |
| 574 | அ-கு - 40 | கேணிர் | கேளிர் |
| 576 | கு - 49 | சிவசொருபம் | சிவசொரூபம் |
| 577 | 53 | தொண்டடைக் | தொண்டரைக் |
| 586 | கு - 6 | அறிதி செய்து | அறுதி செய்து |
| 595 | கு - 54 | அழிந்த | அழித்த |
| 605 | பா - ம் | குரிர்ச்சரம் | குர்ச்சரம் |
| 607 | 115 | மைவண்ணப் | மைவவண்ணப் |
| 614 | 18 | வீரராம் | வீரராய் |
| 617 | கு - 34 | அவிறந்த | அளவிறந்த |
| 644 | கு - 102 | அலுமானம் | அனுமானம் |
| 654 | 32 | னகர்புனனுகச் | னகர்புறனனுகச் |
| 654 | கு - 38 | பதிகமாகும் | பதிகமுமாகும் |
| 677 | கு - 82 | ஆடல் | அடல் |
| 681 | கு - 17 | விம்பி | விம்பி |
| 683 | 26 | பாவி | யாவி |
| 685 | 35 | யோய் வினை | போய்வினை |
| 702 | 50 | நிரைந்து | நிறைந்து |
| 711 | 3 | நின்வர்க் | நின்றவர்க் |
| 725 | 8 | சுடர் | சுடர்த் |
| 726 | 9 | சுடரய்ப் | சுடராய்ப் |

———

உ

செந்திலாண்டவன் துணை

திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்துத் தலைவராக எழுந்தருளியிருக்கும்

## ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

***தமிழ்க்கல்வி, சைவசித்தாந்தம், தேவாரத் திருமுறைகள், இசைத்தமிழ், அன்னதானம், வைத்தியம் இவற்றின் அபிவிருத்திக்காகவும் பொது மக்களின் அனுகூலத்துக்காகவும் மனமுவந்து அமைத்திருக்கும் பேரறக் கட்டளைகள்.***

| தொடர் எண் | தரும விவரம் | மூலதனம் |
|---|---|---|
| | | ரூபாய் |
| 1. | சிவஞானசித்தியார் உபன்னியாசக் கட்டளை அண்ணாமலைப் பல்கலைக் கழகம் ... | 15,000 |
| 2. | கொட்டையூரில் நடுத்தரக் கல்விச்சாலை ஏற்படுத்த | 11,500 |
| 3. | திருவாங்கூர் மகாராஜா தேவாரப் பரிசு ... | 5,000 |
| 4. | சேரமான் பெருமாள் தேவாரப் பரிசு ... | 5,000 |
| 5. | மூவர் தேவாரப் பரிசு ; சீகாழி, திருவாரூர், திருவையாறு, திருப்பனந்தாள் ... | 10,000 |
| 6. | ஸ்ரீகாசிப் பல்கலைக் கழகத்தில் சைவ சித்தாந்தப் போதகாசிரியர் நியமிக்க ... | 60,000 |
| 7. | அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் சைவ சித்தாந்த உபகாரச் சம்பளம் அளிக்க ... | 30,000 |
| 8. | திருப்பனந்தாளில் தமிழ்க் கல்லூரி நிறுவ ... | 1,50,000 |
| 9. | இசைத் தமிழ்க் கல்விக்கு ... | 1,00,000 |
| 10. | திருப்பனந்தாளில் கால்நடை வைத்தியசாலை ஏற்படுத்தவும், குடந்தைக் கல்லூரியில் உபகாரச் சம்பளமளிக்கவும் ... | 20,000 |

11. ஸ்ரீ காசியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு நாள் அன்னதானம் ... 10,000

12. இராமேசுவரத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு நாள் அன்னதானம் ... 10,000

13. திருநள்ளாற்றில் ஆவணி மூல அன்னதானம் ... 3,000

14. ஸ்ரீ காசியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு மார்கழி மாத அன்னதானம் ... 17,000

15. திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி மாணவர்கள் உணவு நிதி ...1,00,000

16. திருப்பனந்தாளில் ஜன வைத்தியசாலை நிறுவ நிலப் பெறுமானம் ... 66,000

17. திருப்பனந்தாள் மண்ணியாற்றங்கரையில் கேதார கட்டம் ... 2,900

18. திருப்பனந்தாள் மண்ணியாற்றங்கரையில் அரிச்சந்திர கட்டம் ... 3,300

19. கும்பகோணத்தில் மணிக்கூண்டு ... 25,000

20. தஞ்சையில் காச நோய் வைத்தியசாலை ... 21,000

21. ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபரர் நினைவு நாள் அன்னதானம் ... 9,000

22. மைசூர் மகாராஜா தேவாரப் பரிசு ... 5,000

23. தருமை ஸ்ரீகுருஞானசம்பந்த சுவாமிகள் நினைவு தேவாரப் பரிசு, மாயூரம் ... 5,000

24. சென்னை விவேகாநந்தா கல்லூரியில் ராஜாஜி சைவ சித்தாந்தக் கட்டளை ... 10,000

25. ஸ்ரீ காசிப் பல்கலைக் கழகத்தில் சர். எஸ். ராதா கிருஷ்ண சைவ சித்தாந்தக் கட்டளை ... 20,000

26. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுத் தேவாரப் பரிசு, ஸ்ரீ வைகுண்டம் ... 5,000

27. மதுரைத் திருமலை நாயக்கர் தேவாரப் பரிசு ... 10,000

28. ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் - ஸ்ரீ வைகுண்டம், திருச்செந்தூர், திருநெல்வேலி மாணவிகட்கு ...1,00,000

29. ஸ்ரீ காசியில் மகாத்மா காந்தியடிகள் நினைவு அன்னதானம் ... 5,000

30. ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் - ஸ்ரீ காசி, மதுரை, குடந்தை மாணவிகட்கு ...1,50,000

31. டாக்டர் சுவாமிநாத ஐயர் நினைவுத் திருக்குறட் பரிசு, சென்னை, ... 3,500

32. குடந்தையில் காந்தியடிகள் பசுப் பரிசு ... 1,000

33. காந்தியடிகள் நினைவு அரியநாயகிபுரத்தில் ஹரிஜன மாணவ உபகார நிதி ... 3,000

34. ஸ்ரீ வைகுண்டத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நித்திய மகேசுவர பூசை ... 10,000

35. திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவர சுவாமிக்கு வெள்ளிக் கவசம் ... 4,000

36. விஷ்ணுபுரத்தில் ஹைஸ்கூல் படிப்பக நிதி ... 1,000

37. குடந்தையில் ராஜாஜி அபிராமி அந்தாதிப் பரிசு... 3,500

38. திருநெல்வேலியில் ஸ்ரீ அரியநாயக முதலியார் நினைவு அபிராமி அந்தாதிப் பரிசு ... 3,500

39. திருப்பனந்தாளில் அப்பூதி அடிகள் நினைவு தண்ணீர்ப் பந்தல் தருமம் ... 3,500

40. ஸ்ரீ வைகுண்டத்தில் படிப்பக நிதி ... 3,500

41. சிதம்பரம் உயர்தரப் பாடசாலை மாணவர்களுக்கு உணவு நிதி ... 35,000

42. சிதம்பரத்தில் மார்கழித் திருவாதிரை, ஆனி உத்தர நாட்களில் அன்னதானம் ... 12,000

43. இராமேசுவரத்தில் ஆடி, தை அமாவாசைகளில் அன்னதானம் ... 3,500

44. ஸ்ரீ வைகுண்டத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நூல் நிலையக் கட்டிடம் ... 17,825

45. பஞ்சாப் அகதிகளுக்கு நன்கொடை ... 5,000

46. அரியநாயகிபுரத்தில் நூல் நிலைய நிதி ... 3,500

47. ஸ்ரீகாசி கேதாரீசுவரர் கோயிலில் ஸ்ரீ குமாரசாமி அன்னதானம் ... 5,000

48. ஸ்ரீ வில்லிபுத்தூரில் தேவாரப் பரிசு ... 3,500

49. திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவர சுவாமி கோயிலில் மின்சார தீபம்போட ... 7,500

50. காஞ்சியில் மூவர் தேவாரப் பரிசு ... 5,000

51. திருவஞ்சைக்களத்தில் சேரமான் பெருமாள் நினைவு அன்னதானம் ... 7,000

52. 28-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் - ஸ்ரீவைகுண்டம் உதவி நிதி ... 13,500

53. 30-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் - ஸ்ரீ காசிப் பல்கலைக் கழகத்திற்கு முதல் இரண்டு ஆண்டு மூலதனம் ... 14,000

54. 28-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் - திருச்செந்தூர் முதல் ஆண்டு உதவி மூலதனம்... 8,500

55. ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் படிப்பகப் பராமரிப்புக்காகக் கட்டிடமும் நிலமும் ... 15,000

56. மாளவியாஜீ பெயரால் கல்கத்தா, டெல்லி, அலகபாத், லக்னோ, ஆக்ரா, அலிகார் முதலிய பல்கலைக் கழகங்களில் சைவ சித்தாந்த உபன்னியாசக் கட்டளை ... 5,000

57. ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம்-சிதம்பரம், மதுரை, திருச்செந்தூர் ... 60,000

58. திருப்பனந்தாள் மண்ணியாற்றங்கரையில் சோமேசர் ஸ்நான கட்டம் நிறுவ ... 2,275

59. ஸ்ரீ வைகுண்டத்தில் பெண்கள் உயர்நிலைப்பள்ளி நிறுவ ... 45,000

60. ஸ்ரீ வைகுண்டம் தேவார மாணவர்கள் காசி யாத்திரை நிதி ... 5,000

61. பனசைக் கல்லூரியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுப் பரிசு ... 5,000

62. (6) ஸ்ரீகாசிப் பல்கலைக் கழகத்தில் சைவசித்தாந்த நிதிக்கு அதிகப்படியாக அளித்தது ... 16,000

63. 30-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் - மதுரை முதலாண்டு உதவி மூலதனம் ... 7,000

64. ஸ்ரீ வைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பெண்கள் உயர்நிலைப்பள்ளி மாணவிகள் ஹாஸ்டல் ஏற்படுத்த நன்செய் நிலக்கிரயம் ... 7,500

65. 28-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் - ஸ்ரீவைகுண்டம் வகையரா-திருநெல்வேலி முதலாண்டு உதவி மூலதனம் ... 5,000

66. 30-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் - ஸ்ரீ காசி வகையரா-கும்பகோணம் முதலாண்டு உதவி மூலதனம் ... 7,000

67. ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப் பள்ளிக்கு நன்கொடை ... 10,000

68. ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடத்திற்கு அச்சகம் வாங்க நன்கொடை, கட்டிடம் உள்பட ... 27,975

69. ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் பெண்கள் உயர்நிலைப்பள்ளி மாணவிகளுக்கு உபகாரச் சம்பளமளிக்க நெல்லை ஜில்லா போர்டாரிடம்... 10,000

70. ஸ்ரீ வைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப் பள்ளிக்கு விளையாட்டு இடம் வாங்க நன்கொடை ... 3,000

71. ஸ்ரீ காசியில் இந்தியக் குடியரசு தின அன்ன தானம் ... 10,000

72. ஸ்ரீ வைகுண்டத்தில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு மாணவர்கள் உணவு நிதி ரூ.1,50,000

73. ஸ்ரீ வைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடத்திற்குப் பன்னிரு திருமுறைகள் அச்சிட நிலப் பெருமானம் ... 50,000

74. சண்டிகேசுவர நாயனார் நினைவு தண்ணீர்ப்பந்தல் தருமம் திருவாய்ப்பாடி ... 3,500

75. காஞ்சிபுரத்தில் ஸ்ரீ மாணிக்க வாசக சுவாமிகள் நினைவு உபகாரச் சம்பள நிதி ... 7,000

76. திருச்செந்தூரில் ஸ்ரீசெந்திலாண்டவன் தேவாரப் பரிசு நிதி ... 5,000

77. சென்னையில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு திருக்குறள் பதிப்பு நிதி ... 35,000

78. ஸ்ரீவைகுண்டத்தில் மங்கையர்க்கரசியார் நினைவு பரிசு நிதி ... 3,500

79. கும்பகோணம் தாலூகா மேலச் சூரியமூலை கண்டியன் பழவாற்றின்மீது பாலம் கட்ட ... 6,920

80. ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவுத் தண்ணீர்ப்பந்தல் தருமநிதி ... 3,500

81. பழுத்த தமிழ்ப் புலவர் காசியாத்திரை நிதி ... 5,000

82. திருச்செங்காட்டாங்குடியில் சிறுத்தொண்டர் நினைவு அன்னதானம் ... 7,000

83. திருவஞ்சைக்களத்தில் ஸ்ரீ சேரமான், சுந்தரமூர்த்தி நாயனார் நினைவு வாசகசாலை நிறுவ ... 5,000

84. திருநாரையூரில் ஸ்ரீ நம்பியாண்டார் நம்பிகள் நினைவு திருமுறை நிதி ... 35,000

85. இராமநாதபுரத்தில் ஸ்ரீ தாயுமானவர் சன்மார்க்க சங்க நூல் நிலைய நிதி ... 5,000

---

திருச்சிறுப்பள்ளி யுனைடெட் பிரிண்டர்ஸ் லிட்., திருச்சிராப்பள்ளி.

86. லால்குடியில் ஸ்ரீ காரைக்கால் அம்மையார் நினைவு மாணவிகள் உபகாரச்சம்பள நிதி ... ரூ. 15,000

உ

சிவ சிவ

# பொன்மொழி

" தில்லைவனம் காசி திருவாரூர் மாயூரம்
முல்லைவனம் **கூடல்** முதுகுன்றம்—நெல்லைகளர்
காஞ்சிகழுக் குன்றமறைக் கா(டு)அருணை காளத்தி
வாஞ்சியம்என் முத்தி வரும்."

— சிவபோகசாரம்.

" மூர்த்திதலம் தீர்த்தம்
முறையாய்த் தொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும்
வாய்க்கும் பராபரமே."

— தாயுமானவர்.

திருச்சினப்பள்ளி யுனைடெட் பிரிண்டர்ஸ் லிமிடெட், திருச்சி.